# பொன்னர் சங்கர்

## (அண்ணன்மார் வரலாறு)

கலைஞர்
மு.கருணாநிதி



21, ஆலிவர் ரோடு, மயிலாப்பூர்
சென்னை - 600 004

# நுழைவாயில்

குங்குமத்தில் மீண்டுமொரு வரலாற்றுத் தொடர்கதை எழுத வேண்டுமென்று தம்பி முரசொலி மாறன் துளைத்தெடுத்தார். ஆயிரம் அலுவல்களுக்கிடையே அதற்கொரு நேரம் ஒதுக்க வேண்டுமே எனத் தயக்கம் காட்டினேன். மதுரை, முகவை மாவட்டங்களின் சுற்றுப் பயணத்தின்போது தொடர்கதை பற்றிய பேச்சு வந்தது. என்னுடன் பயணம் செய்த திரு. தென்னரசு 'குன்றுடையாக் கவுண்டர் கதையைத் தொடர்ந்து எழுதலாமே என்றார். இருபது ஆண்டுகளுக்கு முன்பு நான் கோவை சிங்கநல்லூரில் வாழ்ந்த போது குன்றுடையான் என் றும் அண்ணன்மார் சாமி என்றும் பொன்னர் சங்கர் என்றும் பெயர்களைப் பலர் உச்சரிக்கக் கேட்டிருக்கிறேன். இந்த மூன்று பெயர்களுக்கும் தொடர்புடைய ஒரு உணர்ச்சிமயமானதும் உருக்கமானதுமான வரலாறு பற்றிய செவி வழிச் செய்திகளை நான் அப்போது கேட்டறிந்திருந்தது இப்போது என் நெஞ்சில் நிழலாடிற்று.

''பொன்னழகர் எனும் கள்ளழகர் அம்மானை''; திரு. அ. பழனிசாமி அவர்கள் தொகுத்த ''வரகுண்ணாப் பெருங்குடிக் கூட்டம் பொன்னர் - சங்கர் வரலாற்று நூல்''; புலவர் பிச்சை அவர்களின் ஓலைச் சுவடியை ஒட்டி கவிஞர் சக்திக்கனல் அவர்கள் தொகுத்த ''அண்ணன்மார் சுவாமி கதை'' - இவற்றை யெல்லாம் ஆழமாகப் படிக்கத் தொடங்கினேன். தமிழ் வளர்ச்சி இயக்க இயக்குநர் திரு. சிலம்பொலி செல்லப்பன் அவர்க ளிடம் கலந்துரையாடினேன். நண்பர் தியாகராசன் (சின்னக் குத்தூசி), குங்குமம் பாவைச்சந்திரன் இருவரையும் இந்த வர லாற்றுக் கதை நடந்த பகுதிகளுக்குச் சென்று விபரங்கள் அறிந்து வருமாறு கேட்டுக் கொண்டேன். எனக்கே நேரில் சென்றிட விருப்பம். மக்கள் சூழ்ந்து கொள்வர். எதிர்பார்த்த பயன் கிட்டாது. நண்பர்கள் பாவைச்சந்திரன், தியாகராசன் இருவருக்கும் மிக உதவியாக இருந்து அந்தச் சரித்திரப் புகழ் பெற்ற இடங்களுக்கு அழைத்துச் சென்று மேலும் சில தகவல்

களைத் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்கள் திரட்டித் தந்தார். (பின்னர் எழுதத் தொடங்கி இரண்டொரு வாரங் களுக்குப் பிறகு அந்த இடங்களையெல்லாம் நேரில் சென்று பார்த்து வந்தேன்) அண்ணன்மார் வரலாற்றுக் கதையை கோவை வானொலியில் உடுக்கடிப் பாட்டாகப் பாடியதையும் நாடாப் பதிவு செய்து கேட்கும் வாய்ப்பும் ஏற்பட்டது.

பலரும் ஆய்வு செய்திருப்பதாலும், செவி வழிச் செய்தி களாகப் பல சொல்லப்படுவதாலும், தமிழகத்தின் வரலாற்றுப் பகுதிகள் எதுவுமே முழுமையாகக் கிடைப்பது என்பது அரிதான காரணத்தாலும் ஏறத்தாழ முன்னூறு அல்லது நானூறு ஆண்டு களுக்கு முற்பட்ட கால கட்டத்தில் நடந்த நிகழ்ச்சிகள் என்பதா லும் காலப்போக்கில் அந்த நிகழ்ச்சிகள் வெவ்வேறு விதமாக வெளியிடப்பட்டதாலும் - தெளிந்த நீரோடையில் ஒரு சிறு கல் விழுந்தது போன்ற குழப்பம் ஏற்படுகிறது எனினும் - நீரோடை யின் தெளிவுத் தன்மையில் மாறுபாடான எண்ணம் எதுவும் ஏற்பட்டு விடவில்லை.

நான் எழுதத் தொடங்கும் பொன்னர் சங்கர் வரலாற்று அடிப்படையிலான கற்பனைத் தொடர்கதையில் அடித்தளத் திற்கேற்ற கட்டிடம் உருவாக்கப்படுவது போன்ற முயற்சிதான் இருக்குமே தவிர, அடித்தளத்திற்கும் கட்டிடத்திற்கும் சம்பந் தமே இல்லாத முரண்பாடு நிச்சயமாக இருக்காது.

இந்த வரலாறு குறித்து வெளிவந்துள்ள நூல்கள், ஓலைச் சுவடி பற்றிய குறிப்புகள், செப்பேட்டுப் பட்டயம் போன்ற வைகள்கூட ஒன்றுக்கொன்று மாறுபட்ட செய்திகளைக் கூறு கின்றன என்பதை ஆய்வு செய்த சான்றோர்கள் மறுத்திட வில்லை.

இந்த வீர வரலாற்றுக்குரிய மூதாதையர் சோழ நாட்டுக் குரிய திருவாலூர் (திருவாரூர்) பகுதியிலிருந்து வந்து கொங்குச் சீமையை உருவாக்கினர் என்றவொரு குறிப்பு உள்ளது.

இதற்குச் சான்றாக - நாமக்கல் வட்டம், வகுராம்பட்டி பெருங்குடிக் கூட்டத்தார் குல தெய்வமான கொண்டிசெட்டிப் பட்டிக்கு அருகில் உள்ள காளியம்மன் ஊஞ்சல் பாட்டின் பின்வரும் வரிகள் விளங்குகின்றன.

"காவிரி நதியால் சூழ்ந்த சோழநாட்டில்
கனமிகுந்த ஆதி திருவாலூரெனும் பதியைவிட்டு
தங்கமெனுஞ் சேரசோழ னுடனே கூட

சேர மண்டலத்தில் வந்து தோன்றபேற்கு
கங்கைகுலப் பெருங்குடியார் குலதெய்வமான
கம்பீர மதுக்கரைச் செல்லி சகோதரியான காளியம்மன்
தவமிருந்த குலத்தவர்கள் வேளாளர் வாழ்த்த
பாலையெனும் பொன்காளியம்மன் ஆடீரூஞ்சல்''

இஃதன்னியில் சோழநாட்டுத் திருப்பாதூரிலிருந்து வந்தோர் என மற்றொரு குறிப்பும் மானாமதுரைப் பகுதியிலிருந்து வந்தோர் என இன்னொரு குறிப்பும் - கர்நாடக மாநிலக் கோலார் பகுதியிலிருந்து குடிபெயர்ந்தோர் எனப் பிறிதொரு குறிப்பும் - நெல்லைச் சீமையிலிருந்து வந்தோர் என வேறொரு குறிப்பும் - ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஓலைச்சுவடிகள், பழம்பாடல்கள் வாயிலாக நமக்குக் கிடைக்கின்றன.

இன்று திருச்சி, சேலம், கோவை, பெரியார், தர்மபுரி, போன்ற பல்வேறு மாவட்டங்களில் பரவியுள்ள வேளாண்குடி மக்களெனப்படும் கொங்கு வேளாளர் சமுதாயம்; தமிழ் நாட்டுக்குள்ளேயே ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குக் குடியேறியுள்ளனர் என்பதையும், அன்றைய தமிழ்நாடு இன்றுள்ள எல்லையைக் காட்டிலும் பெரும் பரப்புடையதாக அமைந்திருந்தது என்பதையும் சிந்தித்திடும்பொழுது தமிழ்க்குல மாந்தர்களில் ஒரு பிரிவினரே அவர்கள் என்பதும் - பாய் கட்டிய படகு காற்று வீசுவதற்கேற்பக் கடலில் செலுத்தப்படுவதைப் போல, அக்காலத்தில் எழுந்த சூழ்நிலைகளுக்கேற்ப வாழுமிடங்களை அவர்கள் மாற்றிக் கொள்ள வேண்டியிருந்தது என்பதும் புலனாகிறது.

பரந்துபட்ட நெடிய நிலப்பரப்பில் தமிழ் வேந்தர்களான முடியுடை மூவேந்தர்களாம் சேர சோழ பாண்டியர் ஆட்சி விரிவடைந்திருந்த காலம் மாறி அவர்கள் ஆங்காங்கு குறுநில மன்னர்களாக சோழர், பாண்டியர், சேரர் எனும் தமது குலப் பெயரைப் பூண்டு குறுகிய நிலப்பரப்புகளைத் தமது ஆதிக்கத்தில் வைத்திருந்த கால கட்டத்தில்தான் இந்த வரலாற்றுக்குரிய நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன. சோழன் என்ற பெயரில் அரசர்கள் சிலர்; அவ்வாறே பாண்டியன், சேரன் என்ற பெயர்களில் அரசர்கள் சிலர்; சிதறுண்ட பெருநாடுகளின் துண்டு துணுக்குப் பகுதிகளை ஆட்சி புரிந்து வந்தனர்.

அந்தக் காலமும் மெல்ல மெல்லத் தேய்ந்து, ஆங்கிலேயர், போர்த்துகீசியர், டச்சுக்காரர் போன்றோர் வாணிபச் சந்தையாக நமது நிலத்தை வளைத்துப் போடத் தொடங்கிய காலம் தோன்றிற்று.

வெளிநாட்டார் காலடி எடுத்து வைப்பதற்கு முன்பு - உள் நாட்டார் சின்னஞ்சிறு அரசுகளை நிறுவி ஆட்சி செலுத்தி அவற்றையும் பெருமளவு இழந்து நின்ற நிலையில்தான் இருண்டு கிடந்த தமிழகத்தின் ஒரு பகுதியில் ஒளிக்கீற்றாக இந்த வீர வரலாறு நிகழ்கிறது.

வேளாளக் கவுண்டர், வேட்டுவக் கவுண்டர், முதலியார், செட்டியார், வன்னியர், சாம்புவர் எனப் பல்வேறு சாதிப் பிரிவுகளாக வாழ்ந்த கொங்குச் சீமைப் பகுதி மக்களுக்கிடையே ஒரு வகுப்பாருக்கும் மற்றொரு வகுப்பாருக் குமிடையே ஏற்பட்ட பகையுணர்ச்சியே இந்த வீர வரலாற்றில் கரு என்பதற்கு எந்த ஆதாரமுமில்லை. மாறாக - வேளாளப் பெருங்குடியொன்றில் விளைந்த பங்காளிக் காய்ச்சலே இந்த வரலாற்றின் மைய இழையாக விளங்குகிறது. வேளாளர் வேட்டுவரிடையே எழுந்த மோதல் எனில் இந்த வரலாற்றில் அக்காலத்திலும் இக்காலத்திலுமுள்ள வகுப்பினர் இருசாரா ரின் அணியிலும் இடம் பெற்றிருக்க முடியாதல்லவா?

ஒன்றல்ல; இரண்டல்ல - மூன்று தலைமுறை வரையில் ஒரு பெருங்குடும்பத்தில் மூண்ட பங்காளிப் பகை, பல்வேறு வடி வங் கொண்டு இறுதியில் உருக்கமிகு வரலாற்றுக் காவியமாக முடிவு பெறுகிறது.

கள்ளங் கபடமில்லாமல், வெளுத்ததெல்லாம் பால் எனக் கருதுகிற குன்றுடையான் எனும் பாத்திரம் இந்த வரலாற்றின் தொடக்க காலக் கதாநாயகன் என்பதால் ''குன்றுடையான் கதை'' என்று இதைக் கூறுவோரும் உண்டு. குன்றுடையானின் மூத்த மகன் பொன்னரை வைத்துப் பொன்னழகர் எனும் கள்ளழகர் அம்மானை எனப் பாடியதும் உண்டு. மூத்தோன் பொன்னரையும் இளையோன் சங்கரையும் அந்த இருவருக்கும் இளையவளான தங்கை அருக்காணி என்ற தங்கம்; 'அண் ணன்மார்' என அன்பொழுக அழைத்ததால் 'அண்ணன்மார் சாமி கதை' என உடுக்கடிப்பாட்டு ஒலித்ததும் உண்டு.

இவற்றில் எல்லாம் இழையோடுகின்ற பண்பாடு - பாச உணர்வு - மன உறுதி - வீரம் - காதல் - கள்ளங்கபடமற்ற உள்ளங்களின் குளிர்ந்த தன்மை - அந்த உள்ளங்களை வருந் தச் செய்வதையே பொழுதுபோக்காகக் கொண்ட ஒரு சிலரது இதயங்களின் வெம்மை - அனைத்தையும் உணர்ந்து, அவற்றுக் கேற்ப உருவான கதாபாத்திரங்களின் சிறப்பை பட்டை தீட் டிய வைரமாக ஜொலிக்கச் செய்யும் ஆசையுடன் எழுதப்படு

வதே ''பொன்னர் - சங்கர்'' எனும் தலைப்பைக் கொண்ட இந்தத் தொடர்கதையாகும்.

வரலாற்றைப் பின்னணியாகக் கொண்ட தொடர்கதைகள், நூல்கள், புதினங்கள், பலவற்றைத் தமிழகத்து எழுத்தாளர்கள் பலரும் படைத்துள்ளனர். கரிகால் பெருவளத்தான் காலத்து சோழ, பாண்டிய நாடுகள் வரலாற்றையும், பாண்டிய நாட்டுத் தூதர் ரோமாபுரியில் அகஸ்டஸ் சீசர் காலத்தில் பொறுப் பேற்றிருந்த செய்தியையும் பின்னணியாகக் கொண்டு ''ரோமா புரிப் பாண்டியன்'' எனும் வரலாற்றுக் கற்பனை ஓவியத்தை யும், பாகனேரி பட்டமங்கலமெனும் பகுதிகளில் சிறப்புற்று விளங்கிய மாவீரர்களின் வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டு ''தென் பாண்டிச் சிங்கம்'' எனும் வீர காவியத்தையும், நான் எழுதியுள்ளதை வாசகர்கள் நன்கறிவர்.

தொன்மைப் பெருமை - இலக்கிய வளம் - கலைச் செழிப்பு - வீர உணர்வு - மானங்காக்கும் மாண்பு - போன்ற பல்வேறு சிறப்புகளுக்குரிய தமிழகத்தில் ''ஒற்றுமையின்மை'' எனும் ஒரு பெருந்தீமையே சங்க காலத்திலிருந்து தீராத நோயாக இருந்து வருகிறது.

வரலாறுகளைப் பின்னணியாகக் கொண்டு நான் இயற்றும் இத்தகைய தொடரோவியங்கள், அந்தத் தீராத நோயைத் தீர்த் துக் கட்டி; நலம் பெற்ற தமிழ் நிலத்தைக் காணும் வாய்ப்பை வருங்காலத்திலாவது வழங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

பொன்னரும் சங்கரும் அண்ணன்மார்சாமி எனப் போற்றப் பட்டு அவர்களுக்கென கொங்குச் சீமையில் கோயில்களும் எழுப்பப்பட்டுள்ளன. அந்தக் கோயில்களில் அவர்களின் குல தெய்வங்கள் எனப்படும் பெரிய காண்டியம்மன், செல்லாண்டி யம்மன் சிலைகளும் வழிபாட்டுக்குரியவைகளாக அமைக்கப் பட்டுள்ளன.

வல்லமையும், வணங்கத்தக்க நற்பண்பும், வைராக்கிய நெஞ் சும் கொண்ட பொன்னர் சங்கர் எனும் உடன்பிறப்புகளின் உடன்பிறப்பாம் தங்கம் எனும் அருக்காணியாம் கற்பரசியும் - முதலில் குறிப்பிட்டுள்ள பல்வேறு மாவட்டங்களில் வாழும் கொங்கு வேளாளக் கவுண்டர், வேட்டுவக் கவுண்டர் மாத்திர மன்றி வேறு பல வகுப்பினராலும் தெய்வங்களாகச் சிறப்பிக் கப்படுகின்றனர். சகோதரர்களுக்கு உற்ற தோழனாகவும் விசு வாசமுள்ள துணைவனாகவும் திகழ்ந்த வீரபாகு சாம்புவனுக்

கும் அந்தப் பகுதி மக்கள் மேற்கண்ட கோயில்கள் சிலவற்றில் சிலை வைத்து வணங்கி வழிபடுவதைக் காண முடிகிறது.

சாதாரண மனிதரினும் வேறுபட்டு அசாதாரண நிகழ்ச்சிகளைத் தமது ஆற்றலால் விளைவிப்போரைத் தெய்வத்திற்குக் கூறப்படும் தன்மைகளுடன் ஒப்பிட்டுப் புகழ்வது அக்காலந் தொட்டு வழக்கில் இருந்து வரும் ஒன்றாகும்.

வள்ளுவரே கூட இறை அல்லது இறைவன் அல்லது தெய்வம் என்பனவற்றுக்குச் சொல்லப்படும் இலக்கணங்களைப் புறக்கணிக்காமல்; அந்த இலக்கணங்களின் வடிவமாக, மாந்தர் திகழ வேண்டுமென விரும்பினார்.

'வாலறிவன்' என்றால் தூய்மையான அறிவு வடிவாக விளங்கக் கூடியவன் எனக் கூறி, அவன் திருவடிகளைத் தொழாவிட்டால் கற்றும் பயனில்லை என்று சுட்டிக் காட்டினார்.

'வேண்டுதல் வேண்டாமை இலான்' - அதாவது விருப்பு வெறுப்பு இல்லாதவனுடைய நிழலை நாடுபவர்க்குத் துன்பம் இல்லையென்று குறிப்பிட்டார்.

''தனக்குவமை இல்லாதான்''

''அறவாழி அந்தணன்''

இவ்வாறெல்லாம் கடவுள் எனப்படும் சொல்லுக்கு இலக்கணம் வகுத்தார்.

இறைவனுக்குரிய இத்தனை பெருமையும் கொண்டு ஒருவன் வையத்தில் வாழ வேண்டுமென்று கருதினார்.

அதனால்தான்; ''தெய்வத்துக்கென எத்தனையோ அருங் குணங்கள் சொல்லப்படுகின்றன. உலகில் வாழ வேண்டிய அற நெறியில் நின்று வாழ்கிறவன் வானத்தில் வாழ்வதாகச் சொல்லப்படும் தெய்வத்துக்கு இணையாக வைத்து மதிக்கப் படுவான்'' எனும் கருத்தமைந்த

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்.''
என்ற குறள் வாயிலாகத் தெளிவு படுத்துகிறார்.

அப்படி மதிக்கப்பட்டவர்கள்தான் ''அண்ணன்மார் சாமி'' என அழைக்கப்படும் பொன்னர் - சங்கர் ஆவார்கள் என்பது எனது கணிப்பு.

கனடாவில் பிரிட்டிஷ் கொலம்பியா பல்கலைக்கழகத்தின் துணைப் பேராசிரியர் பிருந்தா இ.எப். பெக் எனும் அம்மை யார் கனடா நாட்டைச் சேர்ந்தவர். அவர் காங்கயம் அருகில் உள்ள ஓலப்பாளையம் எனும் ஊரில் வந்து தங்கி கொங்கு மக்களைப் பற்றிய ஆய்வு நூலை வெளியிட்டவர். அவர் அண்ணன்மார் கதை பற்றிய கிராமியப் பாடல்களையும் ஆராய்ந்து ஒரு ஆய்வு நூலையும் வெளியிட்டிருக்கிறார் என்ப திலிருந்து அண்ணன்மார் வரலாற்றுப் பின்னணியின் சிறப்பு தெளிவாகும்.

கவிஞர் சக்திக்கனல் அவர்களும், திரு. அ. பழனிசாமி அவர்களும் வெளியிட்டுள்ள நூல்களில் பொன்னர் - சங்கர் ஆட்சி நடத்திய பகுதி குறித்த வரைபடமொன்று காணப்படு கிறது. அந்தப் படத்தையும் இந்த என் முன்னுரையில் இணைத் துள்ளேன்.

அந்நாளில் அவர்கள் ஆட்சி நடத்திய பகுதிகளிலிருந்து கொங்கு நாட்டு மக்கள்; தாங்கள் வாழும் நிலப்பரப்பை மேலும் விரிவுபடுத்திக் கொண்டுள்ளனர் என்பது இந்தப் படத்தைப் பார்த்தாலே நன்கு புரியும்.

எத்தனை சாதிகள் என்று வியப்புறும் வண்ணமும் - வேத னையுறும் வண்ணமும் பிரிந்து கிடப்பினும் ''ஒரே தமிழ்ச் சாதி'' என்று பாடிய பாரதியின் கவிதை வரிகள் கனவாகவே இன்றி நனவாகும் நாளை எதிர்பார்ப்போரில் நானும் ஒருவன்

அந்த உளமார்ந்த உணர்வுடனேயே தமிழ்ப் பெருங்குடி மக் கள் அனைவரின் ஆதரவும் கிட்டும் என்ற நம்பிக்கையுடன் இந்த வரலாற்றுத் தொடர்கதையைத் தொடங்குகிறேன்.



அரவக்குருச்சி
நாலுகாணி மேடு
பாளையம்
மயிலம் பட்டி
உப்பிடமங்கலம்
கடவூர்
பால விடுதி
மண்பத்தை மேடு
கடையூர்
நதி
ஆதிசெட்டிபாளையம்
காங்கயம்
கரூர்
வாங்கல்
புலியூர்
மேலப் பாளையம்
மாயனூர்
மதுக்கரை
காவேரி நதி
அனியாப்பூர்
வீரப்பூர்
வெண்முடி
வீரமலை
தவசு கம்பம்
சூவுண்ணாம்பள்ளம்
நெல்லியம்மன்
கோவில்
பெரிய காண்டி
அண்ணமார்
கோவில்
படுகளம்
கொதூர்
சங்கரன்
மலை
செல்லாண்டியம்மன்
கோவில்
தங்கை
நந்தவனம்
வளநாடு
வளநாட்டு
கோட்டை
மணப்பாறை
கொட்டாம்பட்டி
தோகை மலை
ஐயர் மலை
திருக்காம்புலியூர்
குளித்தலை
போதாவூர்
வெள்ளாங்குளம்
ராச்சாண்டார் மலை
ஆரிச்சம்பட்டி
முசிறி
தொட்டியம்
வேலூர்
மோகனூர்
கொ.செ.
பட்டி
வகுரம்பட்டி
நாமக்கல்
பள்ளி
கொல்லி மலை
வாழ வந்தி நாடு
முருங்கை
காட்டுப் புத்தூர்
பீடர் மங்கலம்
தலைமலை
வாழவந்தி
தூதூர்
கரைபோட்டான் ஆறு
மே
தெ
வ
கி



# மணவிழாவில் மச்சான்

1

ஆரிச்சம்பட்டி என்றும் மணியங்குரிச்சி என்றும் அழைக் கப்படும் அந்த ஊர் திருவிழாக்கோலம் கொண்டிருந்தது. காவிரிப் பெருக்கினால் ஏற்கனவே வளம் பெற்றுத் திகழும் கழனிகள் - அந்தக் கழனிகளில் மெல்லத் தலையசைத்து ஆடும் பயிர்கள் - ஓங்கி உயர்ந்து குலைகுலையாகக் காய்த்து நிற்கும் செழுமை பொருந்திய தென்னை மரங்கள் நிறைந்த தோப்பு கள் - நீர் வளத்திற்குச் சிறிதும் குறைவற்ற நிலவளம் - அந்தப் பகுதியில் ஆரிச்சம்பட்டியெனும் மணியங்குரிச்சியில் மூன்று நாள் திருவிழாக் காட்சியில் முதல் இரண்டு நாட்களை மிஞ் சிடும் வகையில் மூன்றாவது நாள் நிகழ்ச்சி அமைய வேண்டு மென்பதில் அவ்வூர்ப் பெருங்காணியாளர் மலைக்கொழுந்தாக் கவுண்டரின் ஆட்கள் மிகுந்த ஆர்வங் காட்டிப் பணியாற்றிக் கொண்டிருந்தனர். ஊர் முழுவதும் தெருக்களில் தென்னங் கீற்றுத் தோரணங்கள். மாவிலைத் தோரணங்கள். தெருமுனை களில் உயர்ந்த வலுவான மூங்கில்களை நட்டு அவற்றில் தார் தள்ளிய வாழைகளைக் கட்டி வைத்தனர்.

ஊருக்குள் மட்டுமின்றி ஊருக்கு வரும் வழியிலே கூட வாழை மரங்கள் மூங்கில் மரங்களை அணைத்துத் தழுவிக் கொண்டு, தாங்கள் வெட்டுண்டதையும் பொருட்படுத்தாமல் விரிந்து நீண்ட இலைகளால் காற்றுடன் விளையாடிக்கொண்டிருந்தன. வண்ண வண்ணத்தாள்களில் விதவிதமாகச் செய்யப்பட்ட கூண்டுகள் வீதிகளின் மையத்தில் பல இடங்களில் எழிலாகத் தொங்க விடப்பட்டிருந்தன. பெரிய காணியாளர் மலைக் கொழுந்தாக் கவுண்டரின் மகன் சின்னமலைக் கொழுந்தும், அவ னது தாயாரும் மலைக் கொழுந்தாக் கவுண்டரின் இல்லத்தரசியு மான பெருமாயி அம்மாளும்; ஊரே அலங்காரமாகத் தோன்று வதைக் கண்டு உள்ளம் பூரித்துப் போயினர். சின்னமலைக் கொழுந்து ஊருக்குள் எல்லா இடங்களிலும் சுற்றிச் சுழன்று மூன்றாம் நாள் விழாவுக்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டுள்ள பணி யாட்களை உற்சாகமாக முடுக்கி விட்டுக் கொண்டிருந்தான்.

தலைதூக்கி அண்ணாந்து பார்க்கிற அளவுக்கு சுண்ணாம்புச் சாந்து குழைத்து கட்டப்பட்டிருந்த ஒரு சிறு மாளிகை போன்ற மலைக்கொழுந்தாக் கவுண்டர் வீட்டு வாசலில் பிரம்மாண்ட மான கொட்டகைப் பந்தல் ஒன்று போடப்பட்டிருந்தது. அந் தப் பந்தலை அழகுபடுத்தும் வேலையில் ஐம்பதுக்கு மேற்பட்ட ஆட்கள் பம்பரம் போலச் சுழன்று கொண்டிருந்தனர். பரபரப் புடன் நடைபெறும் அந்தப் பணிகளை வீட்டு முகப்பில் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு மலைக்கொழுந்தாக் கவுண்டர் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் காலடியில் அமர்ந்து பெருமாயி அம்மாள், வெற்றிலை மடித்துக் கணவருக்கும் கொடுத்து, தானும் தாம்பூலத்தைக் குதப்பியவாறு, மறுநாள் நடைபெற இருக்கும் நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்து மகிழ்ச்சி யால் முகத்தை நிரப்பிக் கொண்டிருந்தாள்.

அந்த வீட்டுக்கு அருகாமையில் - குளக்கரையையொட்டி ஒரு நீண்ட பந்தல்; அந்தப் பந்தலில் மேள ஒலி கேட்டுக் கொண் டிருந்தது. பந்தலின் கொடுங்கைகளையொட்டிப் பனையோலைக் கூந்தல்கள் மிகநெருக்கமாகப் பின்னித் தொங்க விடப்பட்டி ருந்தன. பந்தல் கால் ஒவ்வொன்றிலும் ஈச்சங்குலைகள், மாங் கொத்துகள். பந்தல் நீளத்துக்கு ஒரு பெருங் கூட்டம் ஒவ் வொருவராக வரிசையாக நின்று கொண்டிருந்தனர். அவர் களின் எண்ணிக்கை ஆயிரம் பேருக்குக் குறையாமல் இருக்கும். அனைவருமே அழுக்கான அல்லது கிழிந்து நைந்து போன ஆடையுடுத்திய ஆண்கள், பெண்கள் ஏழை எளியோர்!

அவர்களது கண்களிலே ஒரு ஆவல் - பந்தலின் நடுவே சற்று உயரமாகப் போடப்பட்டிருந்த மேடையையே அந்தக் கண்கள் மொய்த்தன. காரணம்; அந்த மேடையிலேதான் அவர்களுக்கு அளிக்கப்பட இருக்கும் உணவு தானியங்கள் பெரிய பெரிய கூடைகளில் கொட்டி வைக்கப்பட்டிருந்தன.

அந்த உணவு தானியங்கள் அரிசியாக - வரகாக - கம்பாக - சோள்மாக - இப்படிப் பலவகையாக அந்த மேடையில் குவிந்திருப்பதும்; அவற்றைத் தங்களுக்கு இனாமாக அள்ளி வழங்க இருப்பதும் - தரித்திரநாராயணர்களுக்குத் தாங்கொணாத மகிழ்ச்சியைத் தரக் கூடிய விஷயம்தானே!

மூன்று நாள் விழா - அதிலே இப்போது நடப்பது இரண் டாம் நாள் விழா - நாளைக்கு மூன்றாவது நாள் விழாதான் இந்த விழா நிகழ்ச்சிக்கே முத்தாய்ப்பு வைக்கும் விழாவாக

அமையும் - அதையொட்டியே ஊர் அலங்காரம் - உணவு தானியம் வழங்கும் ஏற்பாடு - அப்படியென்றால் அது என்ன விழா?

இதோ; சோழன் தோட்டி ஊர்ப் பொது இடத்தில் அம்மன் கோயில் நிழலில் நின்று முரசு கொட்டுகிறான்; அது என்ன செய்தி என்று காது கொடுத்துக் கேட்டால் எல்லா விபரமும் புரிந்து விடும்.

''இதனால் ஊர் மக்கள் அனைவருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் - மணியங்குரிச்சியெனும் ஆரிச்சம்பட்டி பெரிய காணியாளர் மலைக் கொழுந்தாக் கவுண்டர் மகள் தாமரை நாச்சியாருக்கும் நெல்லி வளநாட்டு எல்லைக்காவல் ஆட்சித் தலைவர் செல்லாத்தாக் கவுண்டர் மகன் மாந்தியப்ப கவுண்டருக்கும் நாளைக் காலையில் நடக்க இருக்கும் திருமண விழாவை முன்னிட்டு இன்றைக்கு மணமகள் தாமரை நாச்சி யார் கைகளால் ஏழைகளுக்கு இலவசமாக உணவு தானியம் வழங்கப்படுகிறது. அனைவரும் வந்து பெற்றுக் கொள்ளும் படியும், மணமக்களை ஆசீர்வதிக்கும்படியும் .பெரிய காணி யாளர் வேண்டிக் கொள்கிறார்.''

''டம, டம'' என்ற முரசு முழக்கத்துக்கிடையே சோழன் தோட்டி இதை மூன்று முறை சொல்லி முடித்து அங்கிருந்து அடுத்த ஊருக்குப் புறப்பட்டு விடவே, சூழ்ந்து நின்று செய்தி கேட்ட ஏழை எளியோர் உணவு தானியம் வழங்கும் பந்தலை நோக்கிப் படையெடுத்தனர்.

ஆதி திராவிட சமுதாயத்தில் பிறந்து - ஐம்பது வயதைத் தாண்டிய சோழன் தோட்டியுடன் சுமார் ஆறு அல்லது ஏழு வயதுள்ள ஒரு இளைஞனும் வேகமாக நடந்து கொண்டிருந் தான். அவர்கள் முரசுடன் செல்வதைப் பார்த்து, தெரு நாய் ஒன்று குரைத்துக் கொண்டே துரத்தி வந்தது. சிறுவனுக்குப் பொல்லாத கோபம். தெருவில் கிடந்த ஒரு கல்லை எடுத்து நாயின்மீது வீசக் கையை ஓங்கினான். ''டேடே... வீரமலை! பாவம், நாயை அடிக்கக் கூடாது. வாயில்லா ஜீவன் - அது ஏதோ பயந்து போய்க் குரைக்கிறது; நீ வா என்னோடு!'' என்று சொல்லிக் கொண்டே, சிறுவனின் கையில் இருந்த கல்லைப் பிடுங்கி எறிந்து விட்டு சோழன் தோட்டி நடக்கத் தொடங்கவே, ''அப்பா! அப்பா! மெதுவா நடப்பா! என் னால உன் கூட நடக்க முடியிலே!'' என்றான் சிறுவன் வீரமலை!

''பெயர்மட்டும் வீரமலை! வேகமா நடக்க முடியலியா?'' சோழன் தோட்டியின் கேலிச் சிரிப்பும் அதைத் தொடர்ந்து சிறுவனின் முதுகிலே செல்லமாக ஒரு தட்டுதலும்!

சோழன்தோட்டி பல ஊர்களில் முரசடித்து அறிவித்ததை யொட்டி ஆயிரம் இரண்டாயிரம் என்று ஏழை எளியோர் உணவு தானியங்களைப் பெறுவதற்கும், மலைக்கொழுந்தாக் கவுண்டர் மகள் தாமரை நாச்சியாரின் திருமணவிழாவைக் காண்பதற்கும் ஆரிச்சம்பட்டி யெனும் மணியங்குரிச்சியில் குழுமிடத் தொடங்கினர்.

உணவு தானியம் வழங்கும் பந்தலில் கூடியிருந்தோர் குதூ கலிக்க குமரிகளின் கூட்ட மொன்று மேடையை நோக்கி வந்தது. விண் மீன்களுக்கு நடுவே ஒரு வெண்ணிலவு போல் தாமரை நாச்சி; தங்கரதமெனக் குலுங்கி - ரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்ட மேடையேறி நின்றாள். ஜொலிக்கும் அவளது அழகைக் கண்டு பந்தலில் வரிசையாக நின்றிருந்த பாட்டி மார்கள், ''அடியென் தங்கம்! ரதி மாதிரி இருக்கியே கண்ணு! என்று ஏற்கனவே ரதியைப் பார்த்தவர்களைப் போலத் தங் கள் பொக்கைவாய் திறந்து பாராட்டி வாழ்த்தினார்கள். வயதான ஆடவர்கள் கூட வாழ்க்கையில் சலிப்புற்ற தங்களது பருவத்தையும் மறந்து தாமரை நாச்சியை நோக்கி, வாயில் ஈ நுழைவது தெரியாமல் மரம் போல் நின்று விட்டார்கள். இளம் உள்ளங்களுக்குக் கேட்க வேண்டுமா? ''ஏழையாக இருப்பதிலும். ஒரு நல்ல வாய்ப்புதான் - இல்லாவிட்டால் இன்றைக்கு இந்தப்பேரழகி கையினால் உணவு தானியம் பெற முடியுமா? வாங்குகிற சாக்கில் இவளைச் சிறிது நேரம் வைத்த விழி வாங்காமல் பார்த்தால் பிறகு வைகுந்த பதவி, சிவலோக பதவியெல்லாம் எதற்கு?'' என்று அந்த வரிசையில் நின்ற வாலிபர்களில் பலர் எண்ணிப் பெருமூச்சு விட்டனர்.

உணவு தானியம் வழங்கும் நிகழ்ச்சி ஆரம்பமாகிவிட்டது. ஒவ்வொருவராக மேடையருகே வந்தனர். கம்பா? வரகா? சோளமா? அரிசியா? என்று தாமரை நாச்சியின் தோழிகளில் ஒருத்தி கேட்பாள். அவரவரும் தங்கள் விருப்பத்தைச் சொல் வார்கள். அதனை எடுத்து ஒரு தோழி, தாமரையின் கையில் கொடுப்பாள். தாமரை அதை வழங்குவாள். ''அம்மா, நீ மகராசியா இரு!'' என்று மூதாட்டிகள் மொழிந்தனர். ''பதி னாறும் பெற்று பெருவாழ்வு வாழு!'' என முதிய பெரியவர் கள் அவள் தலையைத் தொட்டு வாழ்த்து பொழிந்தனர். அவ ளது உடல்தான் அந்தப் பந்தல் மேடையில் இருந்ததே தவிர, அவள் உள்ளம் வேறெங்கோ அலைந்து திரிந்து கொண்டி

ருந்தது என்பதை அவளது முகம்; மறைக்காமலேயே தெளிவாகக் காட்டிற்று. வெண்சங்கொத்த கண்களிலே கரு வண்டுகளென இருவிழிகளும் பறக்கச் சிறகின்றிப் பரபரத்துக் கொண்டிருந்தன.

ஊருக்குள் குதிரை பூட்டிய சாரட்டு வண்டிகள் பல ஒரே நேரத்தில் வரும் ஒலி கேட்டது. அந்த ஒலி முழக்கத்தை தாமரை நாச்சியும் உணவு தானியம் வழங்கிக் கொண்டே உற்றுக் கவனித்தாள்.

வண்டிகள் அனைத்தும் பளபளக்கும் பட்டுத் திரைகளால் மூடப்பட்டிருந்தன. சுமார் நூறு வண்டிகளுக்குக் குறைவில் லாமல் இருக்கும். அந்த வண்டிகளில்தான் நெல்லி வளநாட்டு செல்லாத்தாக் கவுண்டரும் அவரது உற்றார் உறவினரும் திரு மண விழாவுக்கு வருகின்றனர். மணமகன் மாந்தியப்பன் வரும் வண்டி மட்டும் கிட்டத்தட்ட ஒரு தேர் போல சிங்காரிக்கப்பட்டு நான்கு குதிரைகள் பூட்டப்பட்டு வந்து கொண்டிருந்தது. தங்க ஜரிகைத் தலைப்பாகை கட்டி, தலைப்பாகை ஓரத்திலே வைர மிழைத்ததும் முத்துக்களும், பவளங்களும் பதித்ததுமான ஆர மொன்று அழகுற அமைக்கப்பட்டு விலை மதிக்க முடியாத அணிமணிகளை உடலிலே வாரிப் போட்டுக் கொண்டு அந்த ரத வண்டியிலே மணமகன் மாந்தியப்பன், மறுநாள் நடைபெற இருக்கும் திருமணத்தை எண்ணி கம்பீரமாகப் புன்னகை புரிந்து கொண்டிருந்தான்.

அந்த அலங்கார வண்டிகள் அனைத்தும், ஊருக்குள் நுழை யும் இடத்தில் பேரிகைகள், முரசுகள், சங்குகள், எக்காள வாத்தியங்கள், மேளங்கள் முழங்கிட மலைக்கொழுந்தாக் கவுண்டர் சார்பில் அவர் மகன் சின்ன மலைக் கொழுந்து ஒரு ஆடம்பரமான வரவேற்பு அளித்தான். செல்லாத்தாக் கவுண்டர் தன் மகன் மாந்தியப்பனை சின்ன மலைக் கொழுந் துக்கு அறிமுகம் செய்து வைத்திடவே இருவரும் அன்புடன் கட்டித் தழுவிக் கொண்டார்கள். பின்னர் அந்த வண்டிகள் ஊர்வலமாகவே மணியங்குரிச்சித் தெருக்களில் நகர்ந்தன.

கண்கொள்ளாக் காட்சியாக திருமண வைபவம் களைகட்டி விட்டதைக் கண்டு அந்த ஊரே உற்சாகத்தில் மிதந்து கொண் டிருந்தது.

தாமரை நாச்சியார் உணவு தானியம் வழங்கும் பந்தலில் அநேகமாக முக்கால் பகுதிக் கூட்டம் குறைந்து விட்டது என்றே கூறலாம். அவளும் மிகவும் களைத்துச் சோர்ந்து போயிருந்தாள்.

''என்னடி தாமரை! இன்னைக்கே ரொம்ப களைச்சுப் போய்ட்டே? நாளைக்குக் கல்யாணம் முடிஞ்சு அப்புறம் எல்லாம் இருக்கு; மாப்பிள்ளை மகா முரடராம்; அப்ப என்னடி செய்யப் போறே?''

என்று ஒரு குறும்புக்காரத் தோழி கேட்டாள் மெல்லிய குரலில்!

தாமரைக்கு இருந்த தவிப்பில் தோழியின் கேலியைச் சுவைக்க முடியவில்லை; ''சுள்'' என்று எரிந்து விழுந்தாள், சும்மா கிடடி!'' எனக் குதித்து!

முதியோர்களான ஆடவர்க்கும் மூதாட்டிகளுக்குமிடையே ஒவ்வொரு வாலிபரும் தாமரையிடம் தானியம் வாங்க வந்து கொண்டிருந்தனர். அவர்கள் அந்த இடத்தை விட்டு விரைவில் நகராத காரணத்தால் தானியம் வழங்கும் நிகழ்ச்சி தாமதமாகவே நடைபெற்றுக் கொண்டிருந்தது.

''இந்த வாலிப வயதில் கூட இவர்கள் வறுமையில் வாடுகிறார்களே?'' என்று மெதுவாக ஒரு தோழியிடம் தாமரை சொன்னாள்.

''உழைக்க சோம்பேறித்தனப் பட்டால் இப்படித்தான் வாடணும்!'' என்று முணுமுணுத்துக் கொண்டாள் அந்தத் தோழி!

அப்போது, சாக்கடையில் தோய்த்து எடுத்தது போன்ற கந்தலாக அதுவும் கிழிந்த ஆடையொன்றை அணிந்து, பரட்டைத் தலையுடனும், தாடியுடனும் - நடக்கக் கூடச் சக்தியில்லாமல் ஒருவன் தானியம் வாங்க நடந்து வந்தான். நடக்க முடியவில்லை என்பதால் அவன் கிழவனல்ல. நோயாளியாகவும் தெரியவில்லை. பல நாள் பட்டினி கிடந்தவனைப் போலத் தோற்றமளித்த அந்த வாலிபனைத் தாமரை நாச்சியார் மெத்தப் .பரிதாபத்துடன் நோக்கினாள். அவனும் அவளை உற்றுப் பார்த்தான்.

அப்போது, ''என்னம்மா தாமரை, இன்னும் முடியவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே அங்கு தாமரை நாச்சியின் தாயார் பெருமாயி அம்மாள் வந்து சேர்ந்தாள். வந்தவளின் கண்ணில் அந்தப் பட்டினிப் பிச்சைக்காரன் பட்டான்.

''என்னப்பா - உனக்கு என்ன வேணும்; அரிசியா?

கம்பா? வரகா?'' என்று பெருமாயி அம்மாளே அவனைப் பார்த்துக் கேட்டாள். அந்தப் பரம ஏழையான வாலிபனோ யாரும் எதிர்பார்க்காத ஒரு பதிலை மின்னல் வேகத்தில் அங்கு பாடிக் காட்டினான்.

''கம்பு சோளம் வரகு வாங்க வரவில்லை - அத்தை
கணவனாக உன் மகள் கழுத்தில்
தாலிகட்ட வந்தேன் அத்தை!''

இந்தத் திடுக்கிடும் பதிலைக் கேட்டுத் தீமிதித்தவள் போல ஆகி விட்ட பெருமாயி அம்மாள்;

''அடே, என்ன சொன்னே?'' என்று ஆர்ப்பரித்து அவன் எதிரில் செல்வதற்குள் அந்த வாலிபன் தனது பரட்டைத் தலையையும், தாடியையும் அகற்றி மாறுவேடம் கலைந்து விட்டு அவர்களைப் பார்த்து;

''என்னை ஒண்ணும் தெரியாத மசச்சாமின்னு
கிண்டல் பண்ணுவிங்களே; இப்ப எப்படி
இந்த மசக்கவுண்டன் வேலை?

- என்று அசட்டுத்தனமாகச் சிரித்தான். தன் தாயார் இருப்பதையும், தோழிகள் சூழ இருப்பதையும் தானியம் வாங்க வந்தோர் கூடி நிற்பதையும் பொருட்படுத்தாமல் தாமரை நாச்சியார், ''அத்தான்!'' என்று உரக்கக் கூவிக் கொண்டே அவனைத் தழுவிக் கொண்டாள்.

தாமரையின் தழுவலிலே வாழ்க்கையில் என்றுமே உணராத சுகத்தை முதன் முதலில் அனுபவித்துக் கொண்டிருந்த அந்த வாலிபனின் முதுகில் 'சுளீர் சுளீர்' என சவுக்கடிகள் விழுந்தன. ''அப்பா! அவரை விட்டு விடுங்கள்!'' என்று தாமரை கதறிக் கொண்டே தடுக்க முனைந்தாள். ஆனால் அவளால் முடியவில்லை. ''டேய்! நெல்லியங்கோடா? என் குடும்பத்தைக் கெடுக்க குறுக்கு வழியிலா வந்திருக்கே? உன் குடலை உருவி மாலை போடலேனா என் பேரு மலைக்கொழுந்தாக் கவுண்டன் இல்லை'' என்று சீறிப் பாய்ந்து அந்த வாலிபனைச் சவுக்கால் புரட்டியெடுத்தார் மணியங்குரிச்சி பெரிய காணியாளர். தாமரை அதைக் காணச் சகிக்காமல் மயங்கி விழுந்தாள் ''அத்தான் அத்தான்'', என்று அலறியபடி! வதங்கிப்போன அல்லித்தண்டுபோல தரையில் கிடந்த அந்த வாலிபனைக் கொண்டு போய் கரையானும் செல்லும் கடிக்கக்

கூடிய ஒரு கொட்டகையில் போட்டுப் பூட்டுமாறு உத்தரவிட்டார் மலைக்கொழுந்தாக் கவுண்டர். மயக்கத்திலிருந்த அவனை நாலுபேர் தூக்கிக் கொண்டுபோய் அந்தப் பயங்கரக் கொட்டடியில் அடைத்தனர்.

''செல்லாத்தாக் கவுண்டருக்கு இந்தச் சேதியெல்லாம் தெரிய வேண்டாம். தாமரையை உடனே தூக்கிக் கொண்டு போய் சிகிச்சை செய்'' என்று மனைவியிடம் கூறிவிட்டு மலைக் கொழுந்தாக் கவுண்டர் வேகமாக வெளியேறினார்.



# விருந்தினர் விருதியும் வேதனைக் கொட்டடியும்

## 2

*நடந்தது எதுவும் தெரியாமல் செல்லாத்தாக் கவுண்டரும்; மணமகனாக வந்த மாந்தியப்பனும் மற்றும் அவர்களுடன் வந்த உறவினர்களும் மாப்பிள்ளை வீட்டாருக்கென ஒதுக்கப்பட் டிருந்த விருந்து மாளிகையில் உணவருந்தி மகிழ்ந்து, உறக்கத் தில் ஆழ்ந்தனர். தூக்கம் பிடிக்காத சிலர் சொக்கட்டான் ஆடத் தொடங்கினர். மாந்தியப்பனைச் சூழ்ந்து கொண்டு அவனது நண்பர்கள் மறுநாள் காலையில் அவனுக்கும் தாமரை நாச்சியாருக்கும் நடக்க இருக்கும் திருமணம் குறித்து கேலியும் கிண்டலும் செய்து சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தனர்.*

*''இன்றிரவு எங்களோடு; நாளைக்கு இரவு எங்கள் நினை வெல்லாம் வரப் போகிறதா என்ன?''*

*''புதிதாக வருகிற ஒருத்திக்காகப் பழைய நண்பர்களை யெல்லாம் மறந்து விடுவேனா என்ன?''*

*''நீ மறக்க மாட்டாய் மாந்தியப்பா! ஆனால் வருகிறவள் மறக்க அடித்து விடுவாள். அதுவும் மலைக்கொழுந்தாக் கவுண்டர் மகள் மகாரூபவதி! அவள் மடியில் நீ தலை வைத்துப்படுத் திருக்கும்போது உலகம் என்று ஒன்று இருப்பதாகவே உனக் குத் தோன்றாது!*

*''உங்கள் அனுபவத்தை யெல்லாம் எனக்குச் சொல்கிறீர் களா?''*

*''அப்படித் தான் வைத்துக் கொள்ளேன்!''*

*''நான் தாமரையை மணக்க வந்திருப்பது அவளது அழகுக் காகவும் வாழ்க்கையில் புதிய இன்பம் பெறுவதற்காகவும் என்பது என்னைப் பொருத்தவரையில் உண்மையாக இருந்*

தாலும் - இதில் என் தகப்பனார் செல்லாத்தாக் கவுண்டரின் ராஜதந்திர சிறப்பும் அடங்கியிருக்கிறது என்று உங்களுக்கெல்லாம் தெரியாது.''

''ராஜ தந்திரமா? என்னாப்பா அது?''

''என் பெரியப்பா கோளாத்தாக் கவுண்டரைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியுமா?''

''கேள்விப்பட்டிருக்கிறோம். சோழ மன்னன் கொடுத்த எழுபது வள்ளம் பூமியில் பல சீர்திருத்தங்களைச் செய்து வளப்படுத்தி பல குடும்பங்களுக்கு வாழ்வளித்தார் என்றும் சிற்றாலைப் பட்டணத்தை தலைமை ஊராக வைத்துத் தனது ஆதிக்கத்தில் இருந்த பகுதிக்கு நெல்லி வள நாடு என்று பெயர் சூட்டினார் என்றும் வளநாடு என்று ஒரு புதிய கிராமத்தையே உண்டு பண்ணினார் என்றும் வெள்ளாங்குளம் போன்ற பல ஏரிகளை அமைத்தார் என்றும் அவரைக் குடி மக்கள் எல்லாம் ''மணியம்'' என்று மரியாதையுடன் அழைத்துப் பாராட்டினார்கள் என்றும் - கோளாத்தாக் கவுண்டருக்கும் அவரது மனைவி பவளாத்தாளுக்கும் பிறந்தவன் நெல்லியங்கோடன் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம்.''

நண்பர்களில் ஒருவன் மாந்தியப்பனின் பெரியப்பாவைப் பற்றி இவ்வளவு விபரங்களைச் சுருக்கமாகச் சொன்னதும்; மாந்தியப்பன் சிரித்துக் கொண்டே.

''நெல்லியங்கோடன் பிறந்ததினால்தான் என் தந்தைக்கும் எனக்கும் அதிர்ஷ்டமே அடித்தது'' என்றான்.

''என்னாப்பா அதிர்ஷ்டம்? சொல்லு! சொல்லு! இன்றிரவு உனக்குத் தூக்கம் வரப் போவதில்லை. அந்த அதிர்ஷ்டம் வந்த கதையையாவது சொல்லு!''

''நெல்லியம்மன் அருளால் பிறந்த மகன் என்று நெல்லியங்கோடன் எனப் பெயர் சூட்டினார்கள். நெல்லியங்கோடன் பிறந்த கவலையில் என் பெரியப்பா கோளாத்தாக் கவுண்டருக்கும் பெரியம்மா பவளாத்தாளுக்கும் ஆயுளும் குறைந்து விட்டது.''

''என்னப்பா இது; பிள்ளை பிறந்தால் சந்தோஷமாக இருப்பதற்குப் பதில் கவலை எதற்காக ஏற்பட்டது?''

''விளையும் பயிர் முளையிலேன்னு கேள்விப்பட்டதில்லையா? நெல்லியங்கோடன் நாலைந்து வயது வரையில் பேசவே இல்லை. ஊமைக் கோட்டான் - ஊதாத சங்கு - இப்படியெல்லாம் ஊரில் அவனைக் கேலி செய்தார்கள். பிறகு பேச ஆரம்பித்தான். பேச ஆரம்பித்தும் கூட பெற்றோருக்குக் கவலை ஓயவில்லை! அவன் நல்லது கெட்டது தெரியாமல் சுபடு சூது அறியாமல் வெளுத்ததெல்லாம் பால் என்று சொல்லக்கூடிய ''மசச்சாமி''யாக இருந்தான். அவன் இப்படி அசடு போல இருக்கிறானே; எப்படி எல்லாப் பொறுப்புக்களையும் கட்டிக் காத்து உயரப் போகிறான் என்று பெரியப்பாவும் பெரியம்மாவும் சோகமே உருவானார்கள். அதனால் இருவரும் நோயில் விழுந்தார்கள். பிறகு அவர்கள் எழவே இல்லை. மரணப் படுக்கையில் என் தந்தையாரை அழைத்து நெல்லியங்கோடனை அவர் கையில் ஒப்படைத்து அவனுக்குத் துணையாக இருந்து, அந்தப் பகுதி ஆளுகையையும் கவனித்துக் கொண்டு, அவன் பெரியவனானதும் அவனிடம் பொறுப்புக்களை வழங்குவதோடு, அவனுக்கு முறைப்பெண்ணான தாமரை நாச்சியையும் திருமணம் செய்து வைக்குமாறு கேட்டுக் கொண்டார். என் தந்தையும் அப்படியே செய்வதாக வாக்குறுதி கொடுத்து சத்தியம் செய்தார்.''

''இப்போது அந்த வாக்குறுதி என்ன ஆயிற்று?''

''என் தந்தையின் ராஜதந்திரம் என்றேனே; அதில் அந்த வாக்குறுதி பறந்து போய் விட்டது. மசச்சாமியாக இருந்த நெல்லியங்கோடன் மனநலமில்லாமல் சிற்றாலைப் பட்டணத்தில் முடங்கிக் கிடந்தவன், திடீரென்று எங்கேயோ போய்விட்டான். தேடித் தேடிப் பார்த்தார் என் தந்தை; அவன் ஆளே அகப்படவில்லை. அவனுக்கு மணமுடிக்க இருந்த தாமரை நாச்சியை எனக்கு மணமுடித்து விட்டால் மணியங்குரிச்சியார் பலமும் என் தந்தையைச் சேர்ந்துவிடும். நெல்லியங்கோடனுக்குள்ள நிலப்பகுதி ஆட்சிப் பொறுப்பு அனைத்தையும் என் தந்தையே அடைந்து விடலாம். மசச்சாமியாகி விட்ட நெல்லியங்கோடனுக்கும் தாமரைக்கும் ஒருவேளை திருமணமாகி விட்டால் அது தனது ஆதிக்க விஸ்தரிப்பை பாதிக்குமென்று தான் அவசர அவசரமாக எனக்கும் தாமரைக்கும் திருமணத்தை நடத்துகிறார் என் தந்தை!''

''ஏ; அப்பா! உன் தந்தை பெரிய சகுனிதானப்பா! யார் வீட்டு சொத்துக்கோ அதிபதியாகி விட்டார்; யாருடைய ஆட்சி

உரிமையையோ தனதாக்கிக் கொண்டார் - தன் செயல்களுக்கு முத்திரை வைப்பது போல மணியங்குரிச்சிக்கும் சம்பந்தியாகி தன் வலிமையைப் பெருக்கிக் கொள்கிறார்!''

''இந்தக் காலத்திலே சகுனியாக இருந்து சூழ்ச்சி பண்ணனும்; விபீஷணனாக இருந்து துரோகம் பண்ணனும்? - அதெல்லாம் அநியாயமாயிற்றே பாபச் செயலாயிற்றே என்று தயங்கினால் - பதவி, பவிசு, பத்து தலைமுறைக்குப் போது மான ஆஸ்திபாஸ்தி, ஆதிக்கம், அதிகாரம் இதெல்லாம் ஒன்றும் நம்மை எட்டிக் கூடப் பார்க்காது! ஒருத்தரோட அழிவிலேயோ அல்லது துன்பத்திலேயோ தான் இன்னொருத்தரின் செழிப்பும் செல்வாக்கும் இருக்கிறது என்றால் அதற்கேற்றபடி காரியம் செய்வது தான் ராஜதந்திரம்.''

மாந்தியப்பனின் கொள்கையை மறுத்துரைக்க அந்த நண்பர்களில் யாரும் முன்வரவில்லை. காரணம்; மாந்தியப்பனுக்குக் கிடைத்த வாழ்வின் சுகத்தை அவனைச் சுற்றியிருந்தே அனுபவிக்கும் கூட்டம் அது! செல்லாத்தாக் கவுண்டரின் செயல்பாடுகளோ - அல்லது மாந்தியப்பனின் நடவடிக்கைகளோ - அந்த நண்பர்களுக்குப் பிடிக்கிறதோ இல்லையோ; கூடவே இருந்து கிடைத்தவரையில் ஆதாயமென்று வாழ்க்கையை சுவைத்துக் கொண்டிருப்பவர்கள் என்பதால் மாந்தியப்பன் உரைத்த ராஜதந்திரக் கோட்பாட்டைத் தலையசைத்துப் புன்னகை புரிந்து ஆமோதித்து ஆரவாரம் செய்தனர்.

''என்னடா ஒரே கூத்தும் கும்மாளமும்? காலையிலே மண விழா! நல்லாத் தூங்கி எழுந்திருந்தால்தானே உடம்பு கலகலப்பாக இருக்கும்! போய்ப் படுங்க போங்க! என்று முரட்டுக் குரலில் செல்லாத்தாக் கவுண்டர் கூச்சல் போட்டுக் கொண்டு வரவே, மாந்தியப்பனும் நண்பர்களும் அடங்கி ஒடுங்கி அவரவர்களின் படுக்கையில் சுருண்டு கொண்டார்கள்.

தாமரை நாச்சியாரின் அறையில் அவளது மயக்கம் தெளிவிக்க சிகிச்சைகள் விரைந்து நடைபெற்றன. தாயார் பெருமாயி அம்மாள் சோகம் கப்பிய முகத்துடன் மகளின் படுக்கையருகே அமர்ந்திருந்தாள். அவள் நெஞ்சில் கடந்தகால நிகழ்ச்சிகள் நிழலாடிக் கொண்டிருந்தன. தனது சகோதரன் கோளாத்தாக் கவுண்டரும், அவர் மனைவி பவளாத்தாளும் காலமான போது அவர்கள் அருகில் இருந்து கவனித்தவள்தான் பெருமாயி! பல நாட்கள் குழந்தையில்லாமலிருந்து பிறகு பிறந்த குழந்தை சுறுசுறுப்பும். விறுவிறுப்புமின்றி மசமசவென இருப்

பது கண்டு பெற்றோர் பட்ட துன்பத்தையெல்லாம் பெரு மாயி அம்மாள் அறிவாள். யாருக்கும் ஒரு கெடுதியும் விளை விக்காமல் - எத்தகைய இன்னல்கள் வந்தாலும் அமைதியாக ஏற்றுக் கொண்டு - கள்ளங்கபடமற்ற நிலையில்; இரண்டுங் கெட்டான், பிள்ளை என்ற பெயர் எடுத்துக் கொண்டிருந்த நெல்லியங்கோடன் மீது பெருமாயிக்கு ஒரு அனுதாபம் எப் போதும் உண்டு. ''மணியங்குரிச்சி மலைக்கொழுந்தாக் கவுண் டர் வீட்டில் பிறந்துள்ள பெண் குழந்தையைத்தான் என் மகன் நெல்லியங்கோடனுக்குக் கட்டி வைக்க வேண்டும்'' என்று கடைசியாகக் கண்களை மூடும் நேரத்தில் செல்லாத்தாக் கவுண்டரிடம் கோளாத்தாக் கவுண்டர் சொன்னது இப்போது கூட பெருமாயி அம்மாளின் செவிகளில் ஒலித்துக் கொண்டி ருந்தது.

ஆனால் என்ன செய்ய முடியும்? நெல்லியங்கோடனோ சொத்து சுகம், ஆதிக்கத்திலிருந்த நெல்லி வளநாடு, தலைநகரம் சிற்றாலைப் பட்டணம் அனைத்தையும் இழந்து நாடோடியாக அலைந்து திரிந்துவிட்டு வந்திருக்கிறான். அவனையும் பிடித்து மலைக்கொழுந்தாக் கவுண்டர் கடுமையான தண்டனை கொடுக்கு மளவுக்கு கரையானும் செல்லும் இழைகிற கொட்டடியில் போட்டு அடைத்திருக்கிறார். அவனுக்குத் தாமரையைக் கல்யாணம் செய்து வைக்க முடியாவிட்டாலும் அந்தக் கொட்டடியிலிருந்து அவனை விடுவித்து வெளியே அனுப்பி விட்டால் போதும்; அதற்கு என்ன செய்வது என்று தெரியாமல் பெருமாயி அம் மாள் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள்.

சிகிச்சை மெல்ல மெல்லப் பலனளிக்கவே தாமரையாள் கண்களை மெதுவாகத் திறந்து பார்த்தாள். மகள் நலம் பெற்று விட்டதைக் கண்ட பெருமாயி. ''தாமரை!'' எனக்கூவி அவ ளைத் தழுவிக் கொண்டாள். இருவர் விழிகளிலும் நீர் பெருக் கெடுத்து வழிந்தது.

கொட்டடியில் அடைக்கப்பட்ட நெல்லியங்கோடன், கரையானும் செல்லுப் பூச்சியுமில்லாத ஒரு கால் வைத்து நிற் கும் இடம் கூடக் கிடைக்காமல் துடித்துத் துவண்டான். ஒரு பூங்காவில் உள்ள மலர்களை யெல்லாம் பறித்து அவற்றிலிருந்து சேகரித்துக் குவித்த மகரந்தத்துகள்களையெல்லாம் ஒருவனின் தலை முதல் கால்வரையில் உடல் முழுதும் கொட்டியது போல நெல்லியங்கோடனின் மேனி முழுவதும் கரையானும் செல்லும் இழைந்தன. ஊர்ந்தன. கடித்தன. பார்வைக்கு மக ரந்த அபிஷேகம் போல் இருந்தாலும் அந்தப் பாழும் பூச்சி

களின் தாக்குதலால் நெல்லியங்கோடன் நெளிந்து வளைந்து தவியாய்த்தவித்தான். நிற்க முடியவில்லை. உட்கார முடிய வில்லை. படுக்க முடியவில்லை. கொட்டடியை அண்ணாந்து பார்த்தான். கெட்டியான உத்திரமொன்று குறுக்கே போடப் பட்டிருந்தது. அதைப் பிடித்துக் கொண்டு தொங்கிக் கொண் டேயிருக்கலாம்; கரையானும் செல்லுப்பூச்சியும் படையெடுக் காது என்று கருதி, உயர எழும்பிக் குதித்து அந்த உத்திரத்தை இரு கரங்களாலும் கோத்துப் பிடித்துக் கொண்டு தொங்கி னான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கைகளில் மொசமொசவென்று கரையானும் செல்லும் மொய்த்து விட்டன. உத்திரத்தை விட் டுக் கீழே குதித்தான்.

அந்த லட்சக்கணக்கான பூச்சிகளின் தாக்குதலில் இருந்து தப்புவதற்கு என்ன வழி என்று தீவிரமாக யோசித்தான்.

பிணங்களை எத்தனையோ புழுக்களும் பூச்சிகளும் மொய்த் துக் கொண்டு சாப்பிடுகின்றன. கழுகு, வல்லூறு, காக்கை போன்ற பறவைகள் பிணங்களைக் கொத்துகின்றன. நாய், நரி, ஓநாய்கள் கூட பிணங்களைக் கிழித்து இரையாக்கிக் கொள் கின்றன. அதனால்; தானும் பிணமாகி விட்டால் இந்த அற் பக் கரையான்களும் செல்லுப் பூச்சிகளும் என்னதான் கடித்தா லும் தனக்கு எந்தத் தொல்லையும் இருக்கப் போவதில்லை! அதுவே சரியான வழி என்ற முடிவுக்கு வந்தான்.

வேட்டியை அவிழ்த்துப் பாதியை நெடுக்காகக் கிழித்தான். பாதியை இடையில் கட்டிக் கொண்டான். இன்னொரு பாதி யைக் கழுத்தை இறுக்கக் கூடிய சுருக்காகப் போட்டு முடிந்து, ஒரு பகுதியை உத்திரத்தில் கட்டினான்.

பழுது பட்ட உரல் ஒன்று கிடந்தது. அதில் ஏறி, உத்திரத் தில் சுருக்கிட்டுக் கொண்டு பிணமாகத் தீர்மானித்து, உரலை உருட்டிக் கொணர்ந்து போட்டு அதன் மீது ஏறி நின்றான். சுருக்குப் போட்ட பகுதியைக் கழுத்தில் மாட்டிக் கொண்டான். கால்களால் உரலை உருட்டித் தள்ளி விட்டால் உத்திரத்தில் பிணமாகத் தொங்கிவிடுவான். உரலை உருட்டி விடக் கால் களையும் ஓங்கி விட்டான்.

அப்போது யாரோ ஓடிவந்து அவனை இறுகப் பிடித்துக் கொண்டதை உணர்ந்து திகைத்துப் போனான். ''அத்தான்!

என்ன வேலை செய்தீர்கள்?'' என்று கதறி அழுது கொண்டே தாமரை அவன் உடலில் மொய்த்திருந்த கரையானையும், செல்லையும் தனது முந்தானையால், தட்டி விட்டுக் கொண்டே அவனை அழைத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

தாமரையின் அறையில் பெருமாயி அம்மாள் மட்டுமே இருந்தாள். தாமரை, நெல்லியங்கோடனை அழைத்து வந்ததைப் பார்த்து அவசரமாக ஓடிப் போய் அறைக் கதவைச் சாத்தி உள் தாழ்ப்பாளைப் போட்டு விட்டு, பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த விளக்கையும் மங்கலாக எரியும்படி செய்தாள்.

தாமரையுடன் சேர்ந்து தனது அத்தை பெருமாயி அம்மாளும் தன் பக்கமிருப்பதை அறிந்த நெல்லியங் கோடனுக்கு ஒரு புத்துணர்ச்சியும் நம்பிக்கையும் ஏற்பட்டது.

''நெல்லியங்கோடா! நீ இவ்வளவு நாளும் எங்கேயப்பா போயிருந்தாய்? மனநலமில்லாமல் எங்கேயோ ஓடி விட்டாய் என்று சொல்லியல்லவா உன் சித்தப்பா அவர் மகனுக்குத் தாமரையைத் திருமணம் பேசி முடித்து விட்டார்!''

என்று பெருமாயி, கண் கலங்கக் கூறினாள்.

''அத்தை! நடந்த கதை முழுவதும் உங்களுக்குத் தெரியாது! சித்தப்பா செல்லாத்தாக் கவுண்டரின் சித்ரவதை பொறுக்க மாட்டாமல் நான் வளநாட்டை விட்டே ஓடி விட்டேன். எனக்குப் பரிந்து பேசிக் கொண்டிருந்த சோழன்தோட்டியையும் சித்தப்பா ஊரைவிட்டே துரத்திவிட்டார். சோழன்தோட்டியும் என்னைப் பல இடங்களில் தேடிப்பார்த்தும் நான் கிடைக்காததால் உங்களிடம் வந்து வேலைக்குச் சேர்ந்து விட்ட விபரம் பிறகு தான் எனக்குத் தெரிய வந்தது. நிலம், அதிகாரம், உடைமைகள் அனைத்தையும் இழந்து நிர்க்கதியாக விடப்பட்ட நான், மாளிகையில் வாழ்ந்த நிலைமாறி ஆடுமாடு மேய்க்கும் ஆளாகச் சிறிது நாள் காலம் கடத்தினேன். கரூருக்கு அடுத்த ஆதிசெட்டிப்பாளையத்தில் ஒரு செட்டியார் வீட்டில் எடுபிடி வேலைகள் செய்பவனாகவும் இருந்தேன். நான் உயிரோடு இருப்பது தெரிந்தால் சித்தப்பா என்னைக் கொலையே செய்து விடுவார் என்று பயந்தே ஆதிசெட்டிப் பாளையத்தில் வாழ்க்கையை வறியவனாக ஓட்டிக் கொண்டிருந்தேன். உங்கள் மணியங்குரிச்சியில் பணி செய்து கொண்டிருந்த சோழன் தோட்டிக்கு, தாமரைக்கும் மாந்தியப்பனுக்கும்

திருமணம் நடத்த சதி செய்யப்படுகிறது என்று தகவல் தெரிந்ததும் என்னை அரும்பாடுபட்டுக் கண்டு பிடித்துச் சேதியைச் சொல்லவே - நான் ஒருக்கணமும் தாமதிக்காமல் புறப்பட்டு வந்து விட்டேன். சோழன் தோட்டி எனக்கு சொல்லிக் கொடுத்த யோசனைப்படிதான் பிச்சைக்காரவேடத்தில் வந்து தாமரையைச் சந்தித்தேன்.''

நெல்லியங்கோடன் இந்த விபரங்களைச் சொல்லி விட்டுத் தொடர்ந்து, ''என்ன இருந்தாலும் சோழன்தோட்டிக்கு என் தந்தையிடமும் என்னிடமும் உள்ள அன்பும் நன்றி உணர்வும் பாசமும் அளவிடவே முடியாதது அத்தை! அதில் ஒரு கடுகளவு பாசம் கூட என் சித்தப்பாவுக்கு என் மீது இல்லை. அய்யோ, எத்தனை முறை என்னைக் கட்டி வைத்து கருவேல முள் கொப்புகளால் அடித்துத் துவைத்திருக்கிறார் தெரியுமா? எல்லாமே எனக்கும் என் மகன் மாந்தியப்பனுக்கும்தான் வேண்டுமடா என்று அவர் கேட்டிருந்தால் எழுதியே கொடுத்துவிட்டு வந்திருப்பேன்! அத்தை; என் தந்தை விட்டுப்போன நாடு, நிலம், எதுவும் வேண்டாம் எனக்கு! என் தாமரை மட்டும் எனக்குத் கிடைத்தால் போதும்'' என்று கண்களைக் குளமாக்கிக் கொண்டு பேசினான்.

''முதலில் சாப்பிடு கண்ணா?'' என்று பெருமாயி பரிவுடன் கூறினாள்.

''அம்மா! அவர் உடம்பெல்லாம் பூச்சிக் கடி! தடித்துக் கிடக்கிறது! முதலில் அவர் வெந்நீரில் குளிக்கட்டும் அம்மா! வாங்க அத்தான்!'' எனக் குழைந்து அழைத்தாள் தாமரையாள்! அவனும், பூரிப்புடன் குளிப்பதற்கு எழுந்தான். அந்த நேரத்தில் படபடவென கதவு தட்டும் ஒலி!

பெருமாயி அம்மாளும் தாமரையும் திடுக்கிட்டுத் திகைத்தனர்.

ஓங்கி உதைக்கப்பட்டதால் கதவு உடைந்து விழுந்தது. கதவை உடைத்துக் கொண்டு கோபங் கொண்ட புலி போல மலைக் கொழுந்தாக் கவுண்டர் அவர்கள் எதிரே வந்து நின்றார்.

•

# 3 மகிழ்ச்சியும் மருட்சியும்

''எங்கே அந்த மசச்சாமி?''

மலைக்கொழுந்தாக் கவுண்டரின் இடி முழக்கம் போன்ற அந்தக் கேள்விக்கு எந்த பதிலும் சொல்லாமல் பெருமாயி அம்மாளும் தாமரைநாச்சியும் வாயடைத்துப் போய் நின்றனர்.

''இதோ இருக்கிறேன் மாமா!'' என்றவாறு; அங்கு தொங்கிக் கொண்டிருந்த பட்டுத் திரையின் பின்னாலிருந்து நெல்லியங்கோடன் வெளியே வந்தான். அவன் முகத்தில் அச்சம் இல்லை. அத்தையும், அன்புக்குரிய தாமரையாளும் அருகேயிருக்கிறார்கள் என்ற அசட்டுத் துணிச்சல் போலும்!

''உன்னைக் கொட்டடியில் போட்டது மட்டும் போதாது! கொலையே செய்திருக்க வேண்டும். வீட்டில் நல்ல காரியம் நடக்கிறதே என்பதற்காக இந்த அளவோடு விட்டது என் தவறாகப் போயிற்று!'' எனச் சீறிப் பாய்ந்து அவன் தலை முடியைப் பிடித்து உலுக்கினார்.

''விடுங்கள் அவனை!'' என்று அவரது கையைப் பிடித்து இழுத்துத் தள்ளினாள் பெருமாயி அம்மாள். ''அப்பா! முதலில் என்னைக்கொன்று விட்டு பிறகு அவரைக் கொல்லுங்கள்!'' என்று கத்திக் கொண்டே குறுக்கே வந்து நின்றாள் தாமரையாள்!

''இந்த வீட்டில் பெண்கள் ராஜ்யம் நடத்துகிறீர்களா? உங்கள் இருவரின் செய்கையால் நாளைக்கு இந்த ஊர் மட்டுமல்ல; பக்கத்து நாடுகள் எல்லாம் கூட என்னைக் காறித் துப்பும்'' என்று கோபாவேசமாகக் குதித்தார் மலைக்கொழுந்தாக் கவுண்டர்.

''நாங்கள் என்ன செய்து விட்டோம்? நீங்கள்தான் செல்லாத்தாக் கவுண்டர் பேச்சைக் கேட்டுக் கொண்டு; இவன் எங்கேயோ போய் செத்துத் தொலைந்தான் என்று முடிவு கட்டி தாமரைக்குத் திருமணம் நிச்சயம் செய்தீர்கள். இப்போது இவன் உயிரோடு இருக்கிறான். இவனுடைய உடைமைகளையெல்லாம் தன்னுடையதாக்கிக் கொண்டு இவனை அடித்தும் உதைத்தும் ஆடுமாடு மேய்க்க வைத்தும்; இனிமேல் இருந்தால் உயிருக்கே ஆபத்து வருமென்று பயந்து ஓடிப்போய், இப்போதுதான் பிள்ளையாண்டான் வந்திருக்கிறான். இவன் மீது பாய்ந்து விழுகிறீர்களே; இது நியாயமா? நீங்களே சொல்லுங்கள்!'' என்று பெருமாயி அம்மாள் கண்களில் நீர்வழியக் கேட்கவே; ஒருகணம் மலைக்கொழுந்தாக் கவுண்டர் அசைவற்று நின்றார். பிறகு பேசத் தொடங்கினார்.

''வந்துவிட்டான் சரி; ஆனால் மனநிலை சரியில்லாத பித்தனாக அல்லவா வந்து தொலைந்திருக்கிறான்.''

இதைக் கேட்ட நெல்லியங்கோடன் மெல்லப் புன்னகை புரிந்தவாறு ''மாமா!'' என்று பாசம் பொழிய அழைத்து;

''சூதுவாது கள்ளம் கபடம் தெரியாதவன் என்றால் அவன் பைத்தியமா? கொத்த வரும் பாம்பைக்கூடத் தடியெடுத்து அடிக்க நினைக்காமல் கையெடுத்துக் கும்பிட்டுப் போய்வா; என்னை ஒன்றும் செய்யாதே! என்று கேட்டுக் கொள்வேன். கொத்தியே தீருவேன் என்று அந்தப் பாம்பு வந்தால் சரியென்று அதையும் தாங்கிக் கொள்வேன். இதற்குப் பெயர் பைத்தியமா மாமா?'' என்று உருக்கமுடன் கேட்டான்.

''பார்த்தீர்களா? எவ்வளவு நல்ல மனசு பார்த்தீர்களா? இவனைப்போய் கொட்டடியில் அடைத்துக் கொடுமைப்படுத்தியது அக்கிரமம் அல்லவா?''

பெருமாயி அம்மாள், கணவனின் கால்களைப் பிடித்துக் கொண்டு மெழுகாக உருகினாள்.

''சரி; நடந்தது நடந்துவிட்டது. இனி என்ன செய்யமுடியும்? காலையில் திருமணத்திற்கு ஆக வேண்டிய காரியங்களைக் கவனிக்கலாம்'' என்ற மலைக்கொழுந்தாக் கவுண்டரிடம் மீண்டும் கெஞ்சிடும் குரலில் பெருமாயி கேட்டாள், ''இவனுக்கும் நமது பெண்ணுக்கும்தானே?'' என்று!

ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு; அவர், தனது மனைவியின் தோளை உலுக்கியபடி, ''தாமரையைத் தவிர இன்னொரு பெண் நமக்குப் பிறக்கவில்லையே!'' எனக் கேலியாகக் கேட்டார்.

''அப்பா! சிறுவயதிலேயே என்னை அத்தானுக்கென்று நிச்சயித்து விட்டீர்கள். நானும் அவரை என் இதயத்தில் வைத்து வணங்கிக் கொண்டிருக்கிறேன். மாந்தியப்பனுக்கு என்னை மணமுடிக்க நீங்கள் தீர்மானித்திருந்தபோதிலும்கூட, என் அத்தான் எப்படியும் வந்துவிடுவார் என்றே எதிர் பார்த்திருந்தேன். -நான் நினைத்தபடி வந்துவிட்டார். இனியும் மறுப்பு சொல்லாமல் எங்களுக்கு மணவிழாவை நடத்திவையுங்கள் அப்பா!'' தாமரையாளின் பேச்சில் தவிப்பு இருந்தது.

''மாமா! நீங்கள் கொடுமைப்படுத்தியதையெல்லாம் மறந்துவிட்டு நானும் இவளைக் கட்டிக் கொள்கிறேன்!'' என்று, மறப்போம் மன்னிப்போம் என்ற பாணியில் நெல்லியங்கோடன் பேசினான்.

''ஓகோ! போனால் போகிறது என்று தயை புரிந்து என் மகளைக் கட்டிக் கொள்ள சம்மதம் தருகிறாயா?'' என்று உறுமினார் மணியங்குரிச்சிக் கவுண்டர்.

''எப்போதுமே உங்கள் மருமகன் இப்படி விளையாட்டாகத்தானே பேசுவான். இதையொரு பொருட்டாக எடுத்துக் கொள்கிறீர்களே! சரி; அதை விடுங்கள்! காலையில் தாமரை நாச்சி விருப்பம்போல் திருமணத்தை நடத்த சம்மதம் கொடுத்தேன் என்று சொல்லுங்கள்!'' கெஞ்சினாள் பெருமாயி அம்மாள்!

''ஆமாம் மாமா! இப்போது நீங்கள் அத்தை சொன்னது மாதிரி சொல்லிவிட்டீர்களேயானால் நானும் தாமரையும் -தனித்தனி அறையிலே தனித்தனி கட்டில்களிலே படுத்துக் கொண்டு இன்று இரவெல்லாம் இன்பக் கனவுகள் காண்போம்! அந்தக் கனவில் வானத்தில் உள்ள மேகங்கள் எல்லாம் தோணிகளாக மிதக்கும்! வானவில் இருக்கிறதே அது ஒரு அலங்காரப் படகாக வரும். அந்தப் படகில் நட்சத்திரங்களையெல்லாம் கோத்து நகைகளாக மாட்டிக்கொண்டு தாமரையாள் ஒய்யாரமாக சாய்ந்து கொண்டிருப்பாள். சந்திரமண்டலத்து இளவரசனான நான்; அங்கிருந்து திடீரென்று அந்த அலங்காரப் படகில் குதிப்பேன். என்னைப் பார்த்ததும் தாமரை ஓடிவந்து... ஓடிவந்து....

நெல்லியங்கோடனின் முழு வர்ணனையும் முடிவதற்குள் அவன் அத்தை குறுக்கிட்டு; இதெல்லாம் கலியாணம் முடிந்த பிறகு தாமரையிடம் பேசிக் கொள்ளலாம் என்று சாதுர்ய மாகத் தடுத்துவிட்டாள்.

கதவை உடைத்துக் கொண்டு கனல் கக்கும் எரிமலையாக உள்ளே நுழைந்த மலைக்கொழுந்தாக் கவுண்டர்; பெருமாயி அம்மாள் நெல்லியங்கோடனிடம் கொண்டுள்ள உறவின்பாச உணர்வையும், அவனையே மணப்பதற்குக் காத்திருந்ததாகக் கூறிய தாமரைநாச்சியின் காதல் நெஞ்சத்தையும் புரிந்து கொண்டு - அவர்களின் மனத்தை மாற்றுவதற்கு வேறுவகை யான உத்தியைக் கையாள முயன்றார்.

''செல்லாத்தாக் கவுண்டர் நம்மை விடப் பலமடங்கு சிறப் பும் செழிப்பும் உள்ளவர். ஒரு சிற்றரசுக்குச் சமமான செல் வாக்கும் ஆள் அம்பும் உடையவர். அவரைப்போய் விரோ தித்துக் கொள்வது நமக்கு நல்லதா?''

இப்படியொரு கேள்வியை எழுப்பியவுடன்; நெல்லியங் கோடன், தனது முகத்தை சோகமாக வைத்துக் கொண்டு - ''மாமா சொல்வதும் சரிதான்! செல்லாத்தாக் கவுண்டர் எமன் என்றால் அவர் மகன் மாந்தியப்பன் இருக்கிறானே; அவன் எமகிங்கரன்! இருவரின் பகையைத் தேடிக் கொண்டால் பிறகு மணியங்குரிச்சிக்கு ஆபத்து வந்தாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை. எதற்கும் யோசித்து முடிவு செய்யுங்கள்'' என்றான். தனது அத்தானின் பேச்சு அசட்டுத்தனமாகப் போவதை எண்ணி வருந்திய தாமரை ''அப்பா! அத்தான் எவ்வளவு நல்லவர் என்பது இப்போதாவது புரிகிறதா? இப்படியொரு உத்த மருக்கு நான் எப்படியப்பா துரோகம் செய்ய முடியும்?'' என்று விம்மியழத் தொடங்கி விட்டாள்.

''எல்லாம் சரியம்மா; நம்முடைய மணியங்குரிச்சியின் மானப் பிரச்சினையும் இதில் அடங்கியிருக்கிறது என்பதை மறந்து விடாதே!''

''மகளின் வாழ்க்கைப் பிரச்சினையை உங்கள் கௌரவப் பிரச்சினைக்காக அலட்சியப்படுத்துவது நியாயந்தானா அப்பா?''

இப்போது அமைதியாகப் பெருமாயி அம்மை தலையிட் டாள்.

''செல்லாத்தாக் கவுண்டரிடம் உண்மையான விபரத்தைச் சொல்லி அவரை சமாதானப்படுத்தி, அவரையும் இருந்து இந்தக் கலியாணத்தை நடத்தச் சொல்லக் கூடாதா?''

மனைவியின் இந்தக் கருத்தைக் கேட்டதும் மலைக்கொழுந் தாக் கவுண்டர் சிடுசிடுவென முகத்தை மாற்றிக் கொண்டு ஏதோ முணுமுணுத்தவர்; அறைக்குள் அங்குமிங்கும் உலவிக் கொண்டேயிருந்து விட்டுப் பிறகு மனைவியையும் மகளையும் பார்த்து தனக்குற்ற சங்கடமான நிலையை விளக்க ஆரம் பித்தார்.

''இதோ பாருங்கள் பெருமாயி! தாமரை! மாந்தியப்பன் தான் மாப்பிள்ளையென்று நிச்சயதார்த்தம் செய்யப்பட்டு சுமங்கலிப் பெண்களிடம் அருமைப்பெரியோர் சீர்த்தட்டங் களை நீர் சுற்றிக் கொடுத்தாயிற்று! முப்புரித்தாலிக்கான பொன்னும் வழங்கி பொற்கொல்லரும் அதனைத் தயாரித்து அனுப்பி வைத்துவிட்டார். நெல் வேகவைத்து உலர்த்தும் சடங்கும் மணவீட்டில் நடந்துவிட்டது. பாலுள்ள மரத்துக்குப் பால்விட்டுப் பூஜை செய்து ஒரு கிளையை வெட்டி மூன்று கட்டுக்கட்டி மணவிழா மண்டபக் கூரையின்மீது காயப் போட் டாகி விட்டது. இரு வீட்டாரும் இருகூடை உப்பு மாற்றியாகி விட்டது. மணவறையில் மேடையிட்டுப் பூசி மெழுகப் புற்று மண்ணும் சம்பிரதாயப்படி எடுத்தாயிற்று. இருபத்தி நாலு நாட்டில் உள்ள பெரியவர்களையும் வாழ்த்து வழங்க வரு மாறு அழைத்து அவர்களும் பெரும்பாலோர் வந்திறங்கிவிட் டார்கள். மாப்பிள்ளை தலையில் தொங்கவிட்டுக் கட்டிச் சிங்காரிக்க உருமாலையும், வால்கோவணம் போட்டு உடுத் திட பட்டு வேட்டியும், மாலையணிவித்து அழைத்துவர வாட்ட சாட்டமான குதிரையும் மாப்பிள்ளையின் மைத்துனன்; அதா வது நமது மகன் சின்னமலைக்கொழுந்து தயாரித்துவிட்டான். திருமணச் செய்தி; சோழன்தோட்டி மூலமாக எல்லா ஊர் களுக்கும் முரசு ஒலியால், ''குப்பாரிகொட்டித்'' தெரிவிக்கப் பட்டாகிவிட்டது. மாப்பிள்ளை வீட்டார் நமது வீட்டுக்கு மர புப்படி நாழியரிசிக் கூடை அனுப்பி வைத்தது மட்டுமல்ல; ''பொன் பூட்டிக் குலம் ஓதுதல்'' என்ற சடங்கு செய்யவும் மணமகனின் உறவுப் பெண்கள் வந்துவிட்டார்கள். அவர்களுக் குப் ''புதுக்கலத்துண்ணல்'' என்ற விருந்தும் நம் வீட்டில் நடைபெற்றாகி விட்டது. இத்தனைக்கும் பிறகு; செல்லாத்தாக் கவுண்டரிடம் இந்தத் திருமணம் நின்றுவிட்டது என்று எப்படி முகம் பார்த்துச் சொல்ல முடியும்? வளநாட்டிலிருந்து வந் திருக்கும் மாப்பிள்ளை வீட்டார் மட்டுமல்ல; பிற நாட்டி

லிருந்து வந்து குழுமியிருக்கும் கொங்கு மக்கள் எல்லோரும் நமது முடிவைக் கேட்டால் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கமாட்டார்களா? பெருமாயி! உன்னை மணந்த குற்றத்திற்காகவும் - தாமரை! உன்னை மகளாகப் பெற்ற குற்றத்திற்காகவும் இந்த மணியங்குரிச்சி மலைக்கொழுந்தானின் மானம் கப்பலேற வேண்டுமென்று சொல்வீர்களேயானால் அது எனக்கு சம்மதம் தான்!''

இப்படிப் பேசிக் கொண்டிருந்தவருக்கு; மேலும் பேச நா எழவில்லை. தோளில் புரண்ட பட்டுப் பீதாம்பரத்தையெடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டார். அவரது நிலை கண்டு பதறிப்போன நெல்லியங்கோடன் அவரது கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு; ''மாமா! எனக்குக் கல்யாணமே வேண்டாம். நான் பிரமச்சாரியாகவே இருந்துவிடுகிறேன். என்னால் உங்கள் குடும்பப் பெருமைக்குக் குந்தகம் வரவேண்டாம்!'' என்று உணர்ச்சி பொங்கக் கூவினான். அவனது செயலை அணுவளவுகூட ஒப்புக்கொள்ள மனமில்லாத தாமரைநாச்சி தன்னையும் மறந்து ஆவேசமாகக் கத்தினாள்!

''அப்பா! அம்மா! அத்தான்! நீங்கள் மூவரும் சேர்ந்து ஏதோ ஒரு முடிவுக்கு வாருங்கள். ஆனால் அதே நேரத்தில் என் முடிவையும் கேட்டுக் கொள்ளுங்கள். மணந்தால் என் அத்தான் நெல்லியங்கோடனைத்தான் மணப்பேன். இல்லையென்றால்; உங்கள் விருப்பப்படியே மலரும் காலைப்பொழுதில் இந்தத் தாமரைநாச்சியின் பிணத்துக்கு மாந்தியப்பனைவிட்டு மங்கலநாண் பூட்டச் சொல்லுங்கள்!''

தாமரையின் கண்களில் பறந்த தீப்பொறியையும் அவள் நெஞ்சில் நிறைந்த வைராக்கியத்தையும் உணர்ந்த மலைக்கொழுந்தாக் கவுண்டர் தூணோடு தூணாக அசைவற்று நின்றுவிட்டார்.

''தாமரை!'' என்று அவளது பேச்சைத் தடுத்திடக் குறுக்கிட்டான் நெல்லியங்கோடன்!

''சும்மா இருங்களத்தான்!'' என்று அவனை ஒருமுறை தாமரை முறைத்துப் பார்த்ததும் அவன் எதுவும் பேசாமல் நின்றுவிட்டான். தாமரைநாச்சி அவன்மீது கொண்டுள்ள அன்பின் ஆழம் அவனுக்குப் புரிந்ததால் அப்படியே நெகிழ்ந்து போய்விட்டான்.

புயலுக்குப்பின் ஏற்பட்ட அமைதியென அந்த அறையில் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது.

தூணாக நின்ற மலைக்கொழுந்தாக் கவுண்டர் ஒரு துளி அசைந்தார். பெருமாயியையும், தாமரையையும் தனது ஒளிமங்கிய விழிகளால் உற்று நோக்கினார்.

''உங்கள் இஷ்டப்படியே காலையில் நெல்லியங்கோடன் தாமரை நாச்சி திருமணம் நடக்கும். நான் இப்போதே சென்று செல்லாத்தாக் கவுண்டரை சமாதானம் செய்கிறேன்.''

இதைச்சொல்லி அவர் வாய் மூடுவதற்குள் தாயும் மகளும் மகிழ்ச்சிப் பெருக்கில் அவர் காலில் விழுந்து வணங்கினார்கள். நெல்லியங்கோடன் மட்டும் தலையைச் சொரிந்தவாறு நின்று கொண்டிருந்தான். காலில் விழுந்து வணங்கியவர்களைத் தூக்கி நிறுத்தி அவர்களின் விழியில் கொட்டிய ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துவிட்டு, ''வாழ்க! வாழ்க!'' என்றுரைத்தவாறு மலைக்கொழுந்தாக் கவுண்டர் அந்த அறையிலிருந்து வெளியேறினார். தாமரை, தன் தாயைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அவள் கன்னங்களில் முத்தங்களைப் பொழிந்து தள்ளி விட்டாள். அதையே பார்த்துக் கொண்டிருந்த நெல்லியங்கோடன்; தனது உடலெல்லாம் புல்லரிக்கத் தனது கன்னத்தை மெல்லத் தடவிக் கொண்டான். அதை கவனித்துவிட்ட தாமரையின் கன்னங்கள் சிவந்தன. நாணம்; அவள் கழுத்தைப் பிடித்துத் தள்ள தலையைக் குனிந்து கொண்டு மானைப்போலத் துள்ளி தனது மஞ்சத்தில் விழுந்து தலையணையில் முகம் புதைத்துக் கொண்டாள்.

நெல்லியங்கோடன் தாமரை நாச்சியார் திருமணத்தை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லையென்றுணர்ந்த மலைக்கொழுந்தாக் கவுண்டர், மணமகன் வீட்டார் தங்கியிருக்கும் விருந்தினர் விடுதியில் மனமொடிந்தவராக நுழைந்தார். நல்ல தூக்கத்தில் இருந்த செல்லாத்தாக் கவுண்டரை அவரது பணியாட்கள் சென்று எழுப்பினார்கள். கட்டிலில் எழுந்து அமர்ந்த செல்லாத்தாக் கவுண்டர், மலைக்கொழுந்தாக் கவுண்டரை உள்ளே அழைத்து வருமாறு ஆணையிட்டார். மிக்க மரியாதையுடன் உள்ளே நுழைந்த மணியங்குரிச்சியார்; செல்லாத்தாக் கவுண்டரின் தலையசைப்பின் குறிப்பையறிந்து அங்குள்ள இருக்கையில் அமர்ந்தார்.

''என்ன விசேஷம் இந்நேரத்தில்?'' செல்லாத்தாக் கவுண்டரின் கனத்த கம்பீரமான குரல் இப்படி ஒலித்தது.

''ஒன்றுமில்லை. உங்களிடம் மன்னிப்புக் கேட்டு கொள்ள வந்தேன்.''

''ஏன்? என்ன தவறு செய்து விட்டீர்? நமது கொங்குப் பெருமக்கள் கடைப்பிடிக்க வேண்டிய திருமண முறைகள் அனைத்தையும் வெகு சிறப்பாகச் செய்துள்ளீர்கள்; பிறகு எதற்காக மன்னிப்புக் கேட்கிறீர்கள்?''

''அதில் எல்லாம் நான் எந்தக் குறையும் வைக்கவில்லை!''

''பிறகென்னதான் குறை? மனம் விட்டுச் சொல்லும்!''

''எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை; என் அழைப்பை யேற்று எல்லா நாட்டுப் பெருமக்களும் மணவிழாவுக்கு வந்து விட்டனர். இன்னும் சிலர் வந்து கொண்டுமிருக்கின்றனர்!''

''ஆமாம்! ஆமாம்! ஓ; ஒன்று உம்மிடம் சொல்ல மறந்து விட்டேனே! நமது மேனாட்டு சிற்றரசர் தலையூர்க்காளியும் கூட என் அழைப்பின் பேரில் வருகிறார்! அதில் ஒன்றும் ஆட்சேபணையில்லையே உமக்கு?''

''ம்...வந்து...வந்து...''

''ஓகோ - தலையூரார் வருவதில் உமக்கு இஷ்டமில்லை போலும். அதைச் சொல்ல முடியாமல்தான் இப்படி மென்று விழுங்குகிறீர்! மணியங்குரிச்சியாரே; ஒன்றை மறந்து விடக் கூடாது! வளநாட்டுக்கும் இளஞ்சிங்கம் தலையூர்க் காளிக்கும் என் காலத்தில் ஏற்பட்டுள்ள உறவு மிகவும் அழுத்தமானது. மிக நல்ல இளம் நண்பர். சில நேரங்களில் என் கருத்து அவ ருக்குப் பிடிக்காவிட்டாலுங்கூட என்னிடம் கொண்டுள்ள நட் புக்காக என்னை விட்டுக் கொடுக்கமாட்டார். எனக்காக எதை யும் செய்யக்கூடிய உத்தம நண்பர். அவர் இல்லாமல் என் மகனின் திருமணம் நடப்பது நல்லதல்ல என்பதால்தான் அவரை அழைத்திருக்கிறேன். வந்து சேருவதாக அவரிடமிருந் தும் ஓலை வந்துவிட்டது. அவர் தங்குவதற்கு ஏற்ற இடம் ஒன்றை ஏற்பாடு செய்யத் தவறிவிடாதீர்!''

''எனக்கு அவரைப்பற்றித் தெரியாதா என்ன? குறுநில வேந் தர் மட்டுமல்ல; குன்றுகளைப் பந்தாடும் குன்றாத வீரம் படைத்த இளைஞர் - நன்றி மறவாத நண்பர் - தங்களுக்கும் அவருக்குமுள்ள நட்பு யாராலும் அசைக்க முடியாதது! எல் லாம் எனக்குத் தெரியும். அவர் திருமணத்திற்கு வருவது

எனக்கும் பெருமைதான். ஆனால் நான் இந்த நேரத்தில் தங்களைக் காணவந்த காரணம் வேறு!''

எள் முனையளவு சலனமடைந்தவராகச் செல்லாத்தாக் கவுண்டர் உடலை குலுக்கிக் கொண்டு, மீசையை வருடியவாறு ஆவலை முகத்தில் தேக்கி;

''வேறென்ன காரணம்?'' என்றார் கடுமையான குரலில்!

மலைக்கொழுந்தாக் கவுண்டருக்கு நாக்கு உலர்ந்துவிட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு நிலைமையை விளக்கிவிட வேண்டுமென்பதில் உறுதியாக இருந்தார்.

''மன்னித்துக் கொள்ளுங்கள்!''

''விஷயத்தை சொல்லாமலேயே மன்னித்துக் கொள்ளுங்கள் என்றால் எதற்காக மன்னிப்பது? ஏன் மன்னிப்பது?''

சலித்தவாறும் சிலிர்த்தவாறும் செல்லாத்தாக் கவுண்டர் இந்தக் கேள்வியைக் கேட்டபோது;

''அப்பா! நான் சொல்லுகிறேன்'' என்று தணலை மிதித்தவன் போல மாந்தியப்பன்; தனது நண்பர்களுடன் அங்கே நுழைந்தான்.

''ஒன்றுமில்லையப்பா! காரணம் இதுதான்! எங்கிருந்தோ நெல்லியங்கோடன் வந்துவிட்டான். இவர் மகளை அவனுக்குக் கட்டி வைக்கத் தீர்மானித்துவிட்டார்.''

மாந்தியப்பனின் வாயிலிருந்து இந்தச் சொற்கள் தீயிடை வீழ்ந்து ஆழ்ந்து வெளிப்பட்ட இரும்புத்துகள்களின் கனலோடு புறப்பட்ட அந்தக் கணமே; ''ஆ! என்ன?'' என்று புலி போல எழுந்து; தனது படுக்கையருகேயிருந்த வாளையெடுத்து மலைக்கொழுந்தாக் கவுண்டரை நோக்கி ஓங்கினார் செல்லாத்தாக் கவுண்டர்.

மின்னல் போலப் பாய்ந்து ஒருகரம் செல்லாத்தாக் கவுண்டரின் வாளின் பிடியைத் தடுத்து நிறுத்தியது. எல்லோரும் ஆச்சரியத்துடன், பதட்டத்துடன் பார்த்தார்கள். தடுத்து நிறுத்தியது தலையூர்க்காளி என்பதைக் கண்டு மகிழ்ச்சி - மருட்சி - இவற்றுக்கிடையே அசைவின்றி அனைவரும் நின்றார்கள்.

# 4

# இனிய சூழலும் புதிய சோகமும்

''யார்? தலையூர்த் தம்பியா?''

செல்லாத்தாக் கவுண்டர் வியப்பு நிறைந்த வினாவை எழுப்பிய அதே சமயத்தில் மணியங்குரிச்சியில் தனக்கு ஏற்பட்ட அவமானத்தை எண்ணியவராய்த் தலைகுனிந்து நின்றார்.

தேக்குமரத் தேகம் - தேளின் கொடுக்கு போன்ற மீசை - தீட்டிய வாளின் ஒளி உமிழும் கண்கள் - உயரமான தோற்றம் - உயர்ந்த நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட பட்டுத் துணியால் ஆன தலைப்பாகை போன்ற மகுடம் - இருபது அல்லது இருபத்தி ஐந்து வயது மட்டுமே மதிக்கத் தகுந்த இளமைத் துடிப்பு - இத்தனைக்கு மிடையே எதையும் நிதானத் தன்மையுடன் ஆராய்ந்து சிந்தித்து முடிவெடுக்கக் கூடிய உள்ளம் படைத்தவன் என்பதற்கான முக பாவம் - இவ்வளவுக்கும் சொந்தக்காரனான மேனாட்டுச் சிற்றரசன் தலையூர்க்காளி; மெல்லத் தனது கையைச் செல்லாத்தாக் கவுண்டரின் தோளில் வைத்து;

''பெண் கொடுக்கும் சம்பந்தியையே பிணமாக்கத் துணியுமளவுக்கு அப்படி என்ன நடந்து விட்டது?'' என்று கேட்டான். பஞ்சு போன்ற மிருதுவான நெஞ்சம் படைத்த நெல்லியங்கோடனையே - தனது வஞ்சக மூளையின் பலத்தால் வளநாட்டை விட்டுத் துரத்தி விட்ட செல்லாத்தாக் கவுண்டர்; தலையூர்க்காளியை இந்தச் சூழ்நிலையில் முழுமையாகத் தன் பக்கம் இழுத்துக் கொண்டு - மலைக் கொழுந்தாக் கவுண்டரை மிரட்டிப் பணிய வைப்பதற்காக, வடிகட்டிய பொய்யை வாரியிறைக்கத் தொடங்கினார்.

''மேனாட்டுச் சிற்றரசர் தலையூர்க்காளிக்கு அழைப்பு அனுப்பியுள்ளேன். அவரும் மணவிழாவுக்கு வருகிறார்; என்று சொன்னேன். உடனே மணியங்குரிச்சியார் மலைக்கும் மடுவுக்கும்

குதிக்க ஆரம்பித்து விட்டார். யாரைக் கேட்டுக் கொண்டு அழைப்பு அனுப்பினீர் என்று ஆத்திரப்பட்டார். என் இனிய நண்பர் - அவரை என் மகன் திருமணத்துக்கு அழைக்க எவரையும் கேட்கத் தேவையில்லையென்றேன். தலையூர்க்காளி; திருமணத்துக்கு வருவதாக இருந்தால் என் மகள் தாமரையை மாந்தியப்பனுக்கு மணமுடிக்க இயலாது; இப்பொழுதே எல்லோரும் திரும்பிப் போய்விடலாமென்று கேவலமாகப் பேசி விட்டார்! தலையூர்த் தம்பீ; என்னை இவர் இழித்துப் பேசியிருந்தாலும் பரவாயில்லை - வளநாட்டுக்கு உற்ற நண்பராகத் திகழும் மேனாட்டுச் சிற்றரசையல்லவா என் முன்னால் தாழ்த்திப் பேசிவிட்டார். பிறகு இவர் தலை இருக்கலாமா? அதனால்தான் வாளை வீசினேன்! உயிர், கெட்டி இவருக்கு - உங்கள் குறுக்கீட்டால் தப்பி விட்டார்!''

செல்லாத்தாக் கவுண்டரின் இந்தப் பதில் செவியில் விழுந்த மாத்திரமே; தலையூர்க்காளி, தனது வாலிபமிடுக்கின் காரணமாகத் துள்ளிக் குதிப்பான் என்று அங்கிருந்தோர் எதிர்பார்த்ததற்கு மாறாக - அவன் ஓசைப்படாமல் நகைத்துக் கொண்டான்.

''மணியங்குரிச்சி பெரிய காணியாளருக்கு நான் இந்த விழாவுக்கு வருவது சாதாரணமாகப் பட்டிருக்கலாம். நான் வருவதால் அவரது பெருமைக்கு இழுக்கு ஏற்படுமென்று கருதியிருக்கலாம். அல்லது என்னைப் போன்ற ஒரு சிற்றரசனை அழைப்பதால் - இந்த ஊரில் தங்க வைக்கவோ, வசதிகள் செய்து கொடுக்கவோ தன்னால் இயலாதே என்று அவர் கருதியிருக்கலாம். இப்படி யொரு சிறிய விஷயத்தைத் தாங்கள் பூதாகாரப்படுத்திக் கொண்டு மங்கல விழா நடைபெறுகிற இடத்தை அமங்கலமாக்கிட முன் வரலாமா?''

தலையூர்க்காளியின் நிதானமிகுந்த இந்தப் பேச்சில் ராஜ கம்பீரம் முதலிடம் பெற்றிருந்தது.

சூதுவலை பின்னி விட்டார் செல்லாத்தாக் கவுண்டர் என்பதையுணர்ந்து பதைத்துப் போன மலைக்கொழுந்தாக் கவுண்டர், தலையூர்க்காளியிடம் நெருங்கி வந்து நின்று; ''இதை நீங்கள் நம்புகிறீர்களா?'' என்று தழுதழுத்த குரலில் கேட்டார்.

''செல்லாத்தாக் கவுண்டர் எது சொன்னாலும் அதை நம்புவதையே என் ஜென்மம் எடுத்த பயனாகக் கருதக் கூடியவன் நான்! அவருக்கு உம்மீது இவ்வளவு ஆத்திரம் ஏற்பட்டுக்

கொடுவாளை ஓங்கியிருக்கிறார் என்றால்; அதற்குக் காரணம் அவருக்கு என்மீதுள்ள அளவற்ற அன்பும் மரியாதையும்தான் என்பதை நான் அறிவேன். மணியங்குரிச்சியார் அவர்களே! ஆனால் ஒன்று; நீங்கள் என்னை அழைக்காதது பற்றியோ - அல்லது ஏன் அழைத்தீர் என்று செல்லாத்தாக் கவுண்டரைக் கேட்டது பற்றியோ எனக்குத் துளியும் வருத்தமில்லை. கோப மில்லை. எனக்குள்ள மனச் சங்கடமெல்லாம் என்னை மைய மாக வைத்து உங்களுக்குள் தகராறு ஏற்பட்டு, அதனால் மாந் தியப்பன் - தாமரை மணவிழாவே தடைப்பட்டுப் போகிறதே என்பதுதான்.''

அமைதியாக விளக்கமளித்த தலையூர்க் காளியின் கரங் களைப் பற்றிக் கொண்டு மணியங்குரிச்சியார், ''நான் சொல் வதைக் கொஞ்சம் கேளுங்கள். நெல்லியங்கோடன் என் மரு மகன் என்பது உங்களுக்குத் தெரியும். தாமரை அவனுக்கு முறைப் பெண். திடீரென்று எங்கிருந்தோ வந்து விட்டான். மணந்தால் அவனைத்தான் மணப்பேன் என்று என் மகள் பிடிவாதம் பிடிக்கிறாள். அதைச் சொல்லிச் சமாதானப்படுத் தவே செல்லாத்தாக் கவுண்டரிடம் வந்தேன். அவர் தங்களிடம் கதையையே மாற்றிச் சொல்லுகிறார்'' என்று உண்மையை எடுத்துரைத்தார்.

பொய்களாம் நெருஞ்சில் முட்கள் படர்ந்து கிடக்கும் மேடையில் - உண்மையின் நடன அரங்கேற்றத்தை நடத்துவது இயலுமோ?

அப்படியொன்று தப்பித் தவறி நடந்து விடக்கூடாது என் பதிலே கண்ணுங் கருத்துமாயிருந்த செல்லாத்தாக் கவுண்டர், தூபமிடுங்கலையிலும் தூண்டி விடும் தொழிலிலும் தனக்கிருந்த பயிற்சியை அணுவும் பிசகாமல் பயன்படுத்திக் கொண்டார்.

''மணியங்குரிச்சியாரே! இப்பொழுதும் கேட்கிறேன். கடை சியாகக் கேட்கிறேன். எனது தோழரும் எனது வளநாட்டுக்கு வலிமை மிக்க துணைவருமான தலையூர்ப் பெருமகன் காளி யின் வருகையினால் நீர் மனத்தாங்கல் கொள்ளவில்லை; மாறாக மகிழ்ச்சியில் திளைத்திருக்கிறீர் என்பது உண்மையானால் - நிச் சயிக்கப்பட்ட திருமணத்தை நிச்சயிக்கப்பட்டது போல நடத்து வதற்குத் தயாராக இருக்கிறீரா?''

இந்தக் கேள்விக்கு - அல்ல! அல்ல! அறைகூவலுக்குப் பதி லுரைக்க முடியாமல் மலைக்கொழுந்தாக் கவுண்டர் திணறினார்.

மலையொன்று மனித உருவெடுத்தாற் போன்று விளங்கிடும் மணியங்குரிச்சியின் பெரிய காணியாளர், தனது முகத்தில் அடர்ந்து பரவியிருந்த மீசையைத் தடவிக் கொண்டே; ''அந்த முடிவு இப்போது என் கையில் இல்லை'' என்று சொன்ன போது கூனிக் குறுகினார்.

''முடிவெடுக்கத் துணிவும் தெம்பும் இல்லாத நீங்கள் - முதலில் மணமகளின் விருப்பத்தைத் தெரிந்து கொள்ளாமலே இவ்வளவு பெரிய இடத்தில் பெண் கொடுக்க ஒப்புதல் தரு வானேன்? இப்போது ஏற்பட்டுள்ள நிலையை அப்படியே தலைகீழாகக் கற்பனை செய்து பாருங்கள்! மாந்தியப்பனைத் தன் மணவாளனாக மனதில் நினைத்துக் கொண்டிருந்து விட்டு; காலைத் திருமண விழாவுக்காக உங்கள் மகள் காத்திருக்கும் போது - மாந்தியப்பன், தனது மனத்தை மாற்றிக் கொண்டு, வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளப் போவ தாகக் கூறிவிட்டால் உங்கள் உள்ளம் எப்படிக் கொதித்துப் போயிருக்கும்? அதனால் நீங்கள், என் வருகையின் காரணமாக ஆத்திரப்பட்டு அவசரப்பட்டு எடுத்த முடிவினைப் பரிசீலனை செய்யுங்கள். நான் வேண்டுமானால் இப்பொழுதே கூட திரும் பிப் போய் விடுகிறேன். மேனாட்டில் தலையூரின் மாளிகையில் இருந்தபடி மணமக்களை வாழ்த்துகிறேன். அதில் கூட உங்கள் கௌரவம் குறைந்து விடுமென்றால் வாழ்த்தாமலே கூட வாய் மூடிக் கிடந்து விடுகிறேன். என்பொருட்டு ஒரு நல்ல காரியத்தைக் கெடுத்து விடாதீர்கள்''

தலையூர்க்காளி மணியங்குரிச்சியாரிடம் இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும்பொழுது ''அய்யோ! இது என்ன அநியாயம்? எனக்காக நீங்கள் இவ்வளவு இறங்கிப் போய் முறையீடு செய் வதா? வேண்டவே வேண்டாம்! இனி இந்த வீட்டில் சம்பந்தம் என்ற பேச்சுக்கே இடமில்லை! தலையூர்த் தம்பி; இந்தத் திடீர் முடிவில் ஏதோ ஒரு பயங்கர சூழ்ச்சி மறைந்து கிடக்கிறது என்பது மட்டும் நிச்சயமான உண்மை! அது போகப் போகத் தெரியும். அதைப் பிறகு தங்களிடம் சொல்லத்தான் போகி றேன். இல்லாவிட்டால் உங்களையே எதிர்க்கிற தைரியத்தை இந்த மணியங்குரிச்சி மலைக்கொழுந்தாக் கவுண்டர் பெற்றி ருக்க மாட்டார்'' என்று செல்லாத்தாக் கவுண்டர் தலையூர்க் காளியின் தோளைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டு சொன்ன வுடன்; அதுவரையில் குமுறிக் கொண்டிருந்த எரிமலை வெடித்து விட்டது போல மாந்தியப்பன் வெகுண்டெழுந்து சீறினான்.

''இவ்வளவு தொலைவு ஆகிவிட்ட பிறகு இனி இந்த வீட்

டில் நின்று கொண்டிருப்பது கூட நமது பெருமைக்கு இழுக்கு! தலையூர் சிற்றரசுக்கு ஒரு கடுகளவு எதிர்ப்பு காட்டப்பட்டா லும் அந்த எதிரியை சம்பந்தியாக ஏற்றுக் கொள்வதற்கு எனது இருதயம் இடம் தராது! மணியங்குரிச்சியாரின் பெண் என்ன; பெரிய ரம்பை ஊர்வசியாகவே இருந்தாலும் - இனி அவளே வந்து என் காலில் விழுந்தாலும் நான் அவளை என் மனைவியாக வரிக்க மாட்டேன். ஆனால் ஒன்று; இன்று ஏற் பட்ட இந்த அவமானத்துக்கு மணியங்குரிச்சி வெகு விரைவில் பதில் சொல்ல வேண்டியிருக்கும். இதன் பயனை வெகு விரைவில் பயங்கரமாக அனுபவிக்க வேண்டியிருக்கும்.''

இப்படி படபடத்துக் கொண்டே, ''வாருங்கள் அப்பா; வள நாடு திரும்பலாம்!'' என்று கர்ச்சனை செய்தான்.

''விதியென ஒன்றிருக்கும் பொழுது அதை மாற்றி எழுதிட முடியுமா?'' என்று, விருந்து மண்டபத்தின் மேற்கூரையை அண்ணாந்து பார்த்தவாறு முணுமுணுத்த தலையூர்க்காளி செல்லாத்தாக் கவுண்டரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப் படுவதற்கு முன் சற்று கேலியான தோரணையில் மனத்தில் உள்ள புழுக்கத்தின் சாயலை சிறிதளவு வெளிப்படுத்தும் வகையில் மணியங்குரிச்சியாரை நோக்கி, ''இவ்வளவு நேரம் உங்களூரில் நான் தங்கியிருந்ததை பொறுத்துக் கொண்டதற்கு நன்றி'' என்றான்.

மாந்தியப்பனைத் தழுவியவாறு, ''நீ எடுத்துள்ள முடிவு, தவிர்க்க முடியாத முடிவு. வரவேற்கிறேன். வேறு வழியில்லை. உறவினர்களுடன் உடனே திரும்புவதற்கான ஏற்பாடுகளைச் செய்க. காலையில் சுப காரியம் நடக்கப் போகிற வீடு. அத னால் அசம்பாவிதம் எதுவுமின்றி அமைதியாக நடந்து கொள்ள வேண்டும். இது வளநாட்டுடன் நட்பு கொண்டுள்ள மேனாட் டுக் கோரிக்கை. என்ன சரிதானா?'' என்று கூறிவிட்டு அங் கிருந்து வெளியேறினான்; காளி!

செல்லாத்தாக் கவுண்டருடன் விருந்தினர் மாளிகையில் தங் கியிருந்தோர் அனைவருமே பயணத்திற்குத் தயாராயினர். அந் தக் கும்பலிலும், அது; பயணத்துக்குத் தயாரான சலசலப்பி லும் அவர்கள் ஒருவரோடொருவர் மணியங்குரிச்சியாரைப் பற்றி கேலியாகவும், கிண்டலாகவும், எதிர்ப்புக் குரலிலும், ஏகடியத்தொனியிலும் பேசிக் கொண்டது எதுவும் அங்கே அசைவற்று நின்று கொண்டிருந்த மலைக்கொழுந்தாக் கவுண் டரின் காதுகளில் தெளிவாக விழவில்லை. விடிவதற்குள்ளாக

வளநாட்டுக்காரர்கள் அனைவரும் மணியங்குரிச்சியை விட்டுப் புறப்பட்டுச் சென்று விட்டனர்.

சூரிய உதயத்திற்கு முன்பாக இந்தச் செய்தி அந்தப்பகுதி முழுவதும் பரவி விட்டது. வைகறைப் பொழுதில் இந்த விப ரங்கள் அனைத்தையும் தெரிந்த கொண்ட சின்னமலைக் கொழுந்து தனது தந்தையிடம் சென்று தாமரையின் இஷ்டப் படி நடந்து கொண்டதால் ஏற்படப் போகும் விளைவுகள் மிக விபரீதமாக இருக்குமென்று எச்சரித்தான். ''போயும் போயும் ஒரு பைத்தியக்காரனைப் போய்க் கட்டிக் கொண்டு நீ அழியப் போவதுமில்லாமல் மணியங்குரிச்சியின் எதிர்காலத்தையும் இருளாக்கிவிட்டாய்'' என்று தங்கை தாமரையிடம் அனலைக் கொட்டினான். சீற்றம் தணியாதவனாக அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்த சின்னமலைக் கொழுந்துக்கு எந்த பதிலும் சொல்லாமலே தாயும் தந்தையும் திருமண வேலைகளில் ஈடு பட்டிருந்தனர். தந்தையின் முகத்தில் மகிழ்ச்சியின் அடையாளமே இல்லை. தாயின் முகம் மகளின் மணவிழாவையெண்ணிப் பூரித்துப் போயிருந்தது எனினும் வைடூரியக் கல்லில் ஓடும் ஒரு கோடு போல ஏதோ ஒரு உணர்வு நெஞ்சில் அசைந் தாடுவது அந்த முகத்தில் தெரியத்தான் செய்தது.

என்ன ஆனாலும் சரி; எண்ணியபடி அத்தான் நெல்லியங் கோடனையே மணக்கப் போகிறோம் என்பதில் ஏற்பட்ட புள காங்கிதத்தில் தாமரை நாச்சியார் தண்புனலில் மலர்ந்து விரிந்த தாமரையின் முகமுடையவளாகவே காட்சி தந்தாள்.

நெல்லியங்கோடனின் முகம், மல்லிகை மொட்டுப்போல் குவிந்து சோகமாக இருந்தாலும், அந்த மொட்டுக்குள் இருக் கும் மணம் போல இதயத்தில் இன்பம் நிறைந்திருந்தது.

மணவிழாவில் ஏற்பட்ட திடீர் மாற்றத்தை சோழன்தோட்டி கொங்குப் பெருமக்களின் வழக்கப்படி குப்பாரி கொட்டி முழுப் பொழுதும் விடிவதற்குள்ளாக முடிந்த வரையில் எல் லாப் பகுதிகளுக்கும் தெரிவித்த போது மக்கள் கூட்டம் கூடி ஆங்காங்கு இந்தத் திருமணத்தைப் பற்றியே கருத்துப் பரிமாற் றங்கள் செய்து கொள்வதில் மெத்தப் பரபரப்பு காட்டினர்.

குப்பாரி கொட்டி அறிவிப்பதில் சோழன் தோட்டிக்கு ஒரு தனி உற்சாகம். காரணம்; சோழன்தோட்டியின் யோசனைப்படிதான் நெல்லியங்கோடன் மணியங்குரிச்சிக் குள் மாறு வேடத்தில் நுழைய முடிந்தது. தன் மனதுக்குகந்த

வளை மணக்கவும் ஏற்பாடுகள் நடந்தன. அதனால் சோழன் தோட்டி புதுக்களையுடன் சோர்வகற்றிப் பம்பரம் போலச் சுழன்றபோது - எவ்வளவு விசுவாச மிக்க ஒரு நெஞ்சம் என்று நெல்லியங்கோடன் ஆனந்தப் பெருமூச்சு விட்டுக் கொண்டான்.

கொங்குப் பெருமக்களின் மணவிழா கம்பர் பாடியதாகக் கூறப்படும் மங்கல வாழ்த்து முறைப்படி நடைபெறுவதற்கு ஏற்றவகையில் மணமகன் வீட்டார் - மணமகள் வீட்டார் - அவுர்களது உறவினர் என்று பலர் இருந்திட வேண்டியது அவசியம் எனினும் - இப்போது இந்தத் திருமணத்தில் சோழன் தோட்டியே மணமகன் வீட்டார் சார்பில் செயல்பட்டு மணமக னுக்குரிய மணவிழாச் சடங்குகளில் பங்கு பெற உறவினர் களைத் திரட்ட வேண்டியதாயிற்று. வளநாட்டிலிருந்து திரு மணத்திற்கு வந்திருந்தவர்களில் பெரும்பகுதியினர் செல்லாத் தாக் கவுண்டர் புறப்பட்டவுடன் அவருடன் சேர்ந்து கிளம்பி விட்டனர் என்றாலும், நெல்லியங்கோடனுக்கு நெருங்கிய உற வினர்கள் சிலர், அண்ணன் தம்பி முறையுடையோர், அக்காள் தங்கை முறையுடையோர் இப்படிப் பல்வேறு உறவுமுறையுடை யோர் ஒரு அனுதாபத்தின் அடிப்படையில்; ''பாவம் - ஆதிக் கம் செலுத்தி வாழ்ந்த குடும்பத்துப் பிள்ளையாண்டான்! அவ னுடைய அப்பா கோளாத்தாக் கவுண்டரோ அம்மை பவளாத் தாளோ இருந்திருந்தால் எவ்வளவு சிறப்பாக இந்தத் திரு மணம் நடந்திருக்கும்!'' என்று ஆதங்கப்பட்டவர்களாக மணி யங்குரிச்சியில் தங்கிவிட்டிருந்தனர். அவர்களை அணுகி ஒப்பு தல் பெற்று மங்கல விழாச் சடங்குகளில் பங்கு பெற வைப் பதற்குச் சோழன்தோட்டி அந்த அவசர நேரத்தில் எடுத்துக் கொண்ட முயற்சிகளை பங்கு பெறச் சம்மதித்த உறவினர் களே பாராட்டத் தவறவில்லை.

எப்படியோ குறித்த நேரத்தில் மணவிழா நிகழ்ச்சிகள் களை கட்டத் தொடங்கிவிட்டன. இரு வீட்டைச் சார்ந்த உறவினர் களும் பந்தலில் கூடியவுடன் முதல் சீர் எனப்படும் முகூர்த்தக் கால் நாட்டப்பட்டது. மஞ்சளில் நனைக்கப்பட்ட துணியில் நவதானியங்களை முடிந்து, அரச மரக்கிளையொன்றால் அமைந்த முகூர்த்தக்காலில் கட்டி அருமைக்காரர் பால் வார்த்து அதற்குரிய பூசைகளை நிறைவேற்றி வைத்தார். மணமகன் நெல்லியங்கோடனை மணவறையில் அமர்த்தி பிரமசரிய விர தம் கழிக்கப்பட்டது. வெற்றிலை கட்டுதல் என்னும் முறைப்படி வெற்றிலை, பாக்கு, தேங்காய், வாழைப்பழம், கண்ணாடி, சீப்பு, விரலி மஞ்சள், எலுமிச்சம்பழம், பூ, சந்தனம், கூரைச்

சேலை, ரவிக்கைத்துணி முதலியவற்றை ஒரு வேட்டியில் மூட்டை யாகக் கட்டி, அதற்கு அருமைக்காரர் பூசை செய்து பின்னர் அதனை மேளதாளத்துடன் பிள்ளையார் கோயிலுக்கு எடுத்துச் சென்று அங்கிருந்து கொண்டு வந்து மணவறையில் வைத்து அதற்கு நீர் சுற்றி அவிழ்த்து மணப்பெண் தாமரைநாச்சிக்கு கொடுக்கச் செய்து அவளும் முறைப்படி அந்த வெற்றிலைக் கூரைச்சேலையை அணிந்து பெரியவர்கள் மூவரை வணங்கி எழுந்தாள். நெல்லியங்கோடனை ஒரு முக்காலியின் மீது உட்கார வைத்து செஞ்சோற்றை சுற்றிப் போட்டு தண்ணீர் வார்த்து திருஷ்டிப் பரிகாரம் செய்யப்பட்டது. கணுவேயில்லாத விரலி மஞ்சளை மஞ்சள் தடவப் பெற்ற நூலில் கட்டி அதற்குத் தூப தீபம் காட்டி அருமைப் பெரியோர் எனப்படும் அருமைக்காரர் மணமக்கள் இருவரின் வலது கரங்களிலும் கட்டி விட்டார். சுற்றத் தார் சூழ்ந்து வர மணமகன் குதிரை மீது அமர்த்தப்பட்டு மேள தாளங்கள் முழங்கிட பிள்ளையார் கோயிலுக்குச் சென்று தேங் காய் உடைத்து வணங்கி வந்தான். பெண் வீட்டார், நாட்டார் சபையெனப்படும் கொங்குப் பெருமக்கள் கூடியிருக்கும் இடத் துக்கு வந்து, ''வாருங்கள் எல்லோரும்'' என முறைப்படி அழைத்திடும் சடங்கும் இனிது நிறைவேறியது. மணமகளுக்கு மாமன் முறையுள்ளோர் அனைவரையும் அழைத்து புதுவேட்டி வழங்கி, சந்தனம் பூசி, பால் பழம் அருந்துமாறு செய்யப்பட் டது. நிறை நாளி சுற்றப்பட்டு ஐந்து செஞ்சோற்று அடை களையும் அகற்றி மணமகளுக்கும் அருமைக்காரப் பெண்மணி திருஷ்டி கழித்து முடித்தாள்.

மணவறை மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வாழை கமுகு மரங்கள் கட்டப்பட்ட மணவறையின் நடுவில் இரண்டு கரகங்கள் வைக்கப்பட்டு, அவற்றில் ஒன்றில் நிறைய நெல்லும் மற்றொன்றில் நிறைய நீரும் நிரப்பப்பட்டன. கரகங்களுக்கு முன்னால் மஞ்சளில் பிள்ளையாரும், ஆயிரப்பெருந்திரியும், பூதக்கலச் சாதமும், வெற்றிலை பாக்கு மற்றும் அச்சு வெல் லக் குவியலும் காட்சி தந்தன.

குதிரை மீது அமர்த்தி அழைத்து வரப்பெற்ற மணமகன் நெல்லியங்கோடன் மணவறைக்கு வந்து சேர்ந்ததும் மங்கல நாண்சூட்டும் நிகழ்ச்சி ஆரம்பிக்கப்பட்டது. குடிமகன் எனப் படுவோன் ''கம்பர் மங்கல விழா வாழ்த்து'' எனும் பாடலை அழுத்தமான குரலில் சொற் சுத்தம் கெடாமல் பாடிய போது அந்தப் பந்தலே உணர்ச்சிமயமாக இருந்தது. முறைப்படி எல்லா சடங்குகளும் நடத்தப்பட வேண்டுமென்ற அக்கறையு டன் பெருமாயி அம்மாளும், அந்த அம்மைக்குத் துணையாக

மலைக்கொழுந்தாக் கவுண்டரும் ஈடுபட்டிருந்த போதிலும் - அவசரத்தில் ஒன்றிரண்டு வழக்கமான சடங்குகள் முன்னும் பின்னுமாகவே நடந்தேற வேண்டியிருந்தது. அதற்கு முக்கிய காரணம் திருமணத்தில் ஏற்பட்ட திடீர்த் திருப்பந்தான் என் பதை விழா காண வந்திருந்தோர் அனைவரும் உணர்ந்தே யிருந்தனர்.

அருமைக்காரர் மணமகள் தாமரை நாச்சியை கிழக்கு முக மாகவும், அவளை நோக்கிய நிலையில் மணமகன் நெல்லியங்கோடனை மேற்கு முகமாகவும் நிறுத்தி வைத்து மாலை மாற்றிக் கொள்ளச் செய்தனர். கங்கணம் அகற்றிய பிறகு, அருமைப்பெரியோர் கொடுத்த மங்கல நாணை மிகுந்த பவ்யத்துடன் வாங்கி, மங்கல ஒலி முழங்கிடும் பந்தலில் தாமரை நாச்சியின் கழுத்தில் நெல்லியங்கோடன் கட்டினான்.

குடிமகன் என்போன் பாடத் தொடங்கிய மங்கல வாழ்த்துப் பாடல் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தது.

மணமக்கள் மகிழ்ச்சியில் திளைத்தவராக மலைக்கொழுந் தாக் கவுண்டரிடமும், பெருமாயி அம்மாளிடமும் காலில் விழுந்து வணங்கி வாழ்த்துப் பெற்றார்கள். பெருமாயி அம் மையின் கன்னங்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத் தோடிக் கொண்டிருந்தது. மலைக்கொழுந்தாக் கவுண்டரின் உள்ளத்தில் எத்தகைய எண்ண அலைகள் மோதுகின்றன என் பதை அறிவிக்க இயலாத ரசம் போன கண்ணாடியாக அவரது முகம் தோற்றமளித்தது. தாய் தந்தையர் காலில் விழுந்து வணங்கிய தாமரையாள், தன் சகோதரன் சின்னமலைக்கொழுந்தின் காலில் விழுவதற்கு அவனருகே சென்ற போது - அதுவரை யில் அரைகுறை மனத்துடன் அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண் டிருந்த சின்னமலைக் கொழுந்து பலநூறுபேர் பந்துமித்திரர் கள் குழுமியிருக்கிற பந்தலில் இருக்கிறோம் என்பதையும் நினைத்துப் பார்க்க இயலாதவனாக - ஆத்திரம் தொண் டையை அடைக்க; ''சீ! அடங்காப்பிடாரி!'' என உரக்கக் கத்தி விட்டு புயலைப் போன்ற வேகத்தில் வெளியேறினான். இனிய சூழலில் இருந்த அந்த மணவிழாப் பந்தலை ஒரு பயங் கர சோகம் கப்பிக் கொண்டு விட்டது; சின்னமலைக்கொழுந் துவின் அந்தச் சீற்றம் எங்கு போய் முடியுமோ என்ற கவலை யில் பெருமாயி அம்மாள், ''பெரியகாண்டியம்மா நீ தான் துணை!'' என்று வாய்விட்டுக் கதறிவிட்டாள்.

# தாமரை நாச்சியின் சபதம்

## 5

அண்ணன் சின்னமலைக் கொழுந்து சென்ற திசையையே வைத்த விழியெடுக்காமல் பார்த்துக் கொண்டு நின்றாள் தாமரைநாச்சியார். மணவிழாவையொட்டிய விருந்தில்கூட உறவினர்கள் பெரும்பாலோர் கலந்து கொள்ள மனமின்றிச் செல்வதுபோல பந்தலிலிருந்து கலைந்து சென்று கொண் டிருந்தனர் ''மொய்க்களரி'' யெனும் சம்பிரதாயத்திற்கு மதிப் பளிக்கும் எண்ணமுடன் ஒரு சில உறவினர்கள் மட்டும் மொய் வைத்து முடித்த கையுடன் விடைபெற்றுப் புறப்படலாயினர். மணமகனின் மைத்துனன் மணவிழாவின் எல்லா நிகழ்ச்சி களும் நிறைவடையும் வரையில் இருந்து அருமைக்காரர்கள் ''அருகுமணம்'' எடுத்து ஆசீர்வாதம் புரியும் வரையில் அரு கிருக்க வேண்டியவன். ஆனால் நெல்லியங்கோடனின் மைத் துனன் சின்னமலைக்கொழுந்தோ; அதைப்பற்றியெல்லாம் கவ லைப்படாமல் தனது தங்கை தாமரையின் நெஞ்சில் சம்மட்டி கொண்டு அடித்ததுபோல சொற்களை வீசிப் போய்விட்ட பிறகு; உற்றார் உறவினர்களுக்கு மட்டும் என்ன வந்தது? ஏதோ அனுதாபப்பட்டவர்கள், மணியங்குரிச்சியாருக்குச் சிறிது ஆறுதலாக இருக்கட்டுமென்று உடனே சொல்லிக் கொண்டு புறப்படாமலிருந்தார்கள். திடீரென்று மணவிழா வில் மணமகன் மாற்றப்பட்டதிலேயே சலிப்பு கொண்டவர் கள் மேலும் முகத்தை அதிகமாகச் சுளித்துக் கொண்டு ஒரு வரோடொருவர் விமர்சனங்களில் ஈடுபட்டவாறு தங்கள் தங் கள் வசதிக்கேற்ப கொண்டு வந்திருந்த வாகனங்களில் ஏறி ஊர் திரும்புவதில் அவசரம் காட்டினர். அற்ற குளத்தில் அறு நீர்ப் பறவைபோல் தாமும் நடந்துகொண்டு ஒருவர்க்குத் துன் பம் வரும்போது அவரை விட்டு ஓடிவிடுவது மனிதத் தன் மையே ஆகாது எனும் நினைப்புள்ளவர்கள் ஒரு சிலர் மட் டுமே மணவீட்டில் தங்கி ''உறவு'' என்ற சொல்லுக்குரிய உயர்வை நிலைநாட்டிக் கொண்டிருந்தார்கள்.

மணமக்கள், தங்களது தாய் தந்தையரின் பாதங்களில் நீர் ஊற்றிக் கழுவி, மலர்களைத்தூவி வணங்கிட வேண்டும் என்பது ஒரு முக்கியமான நிகழ்ச்சி! மணமகள் தாமரையாள், தனது தந்தை மலைக்கொழுந்தாக் கவுண்டருக்கும் - தாயார் பெருமாயி அம்மாளுக்கும் பாதபூசை செய்து எழுந்தாள். நெல்லியங்கோடன் கண்களில் நீர் அருவியெனக் கொட்டிற்று. தன் தந்தை கோளாத்தாக் கவுண்டரும், தாய் பவளாத்தாளும் இல்லையே; இருந்து வாழ்த்தவில்லையே; அவர்களுக்குப் பாத பூசை செய்யும் பாக்கியத்தைத் தன்னால் பெற முடியவில்லையே என்ற ஏக்கம் - துக்கம் - கணைகளென அவன் உள்ளத்தைத் துளைத்தெடுத்தன!

நெல்லிவள நாட்டைச் செழுமை கொழிக்கும் பூமியாக மாற்றித் தனது செல்வாக்கைப் பரவலாக்கிக் கொடி கட்டி வாழ்ந்த கோளாத்தாக் கவுண்டரின் பிள்ளை; இப்போது நகைப்புக்கிடமான சூழ்நிலையில் நலிந்தும் மெலிந்தும் - அதனை வெளிக்காட்டிக் கொள்ள முடியாமல் வெட்கத்தால் தளர்ந்தும் நிற்பதைச் சிந்தித்துப் பார்க்கும்போது; அவன் கண்கள் நீர்வீழ்ச்சிகளாக மாறியதில் வியப்பிருக்க முடியாதல்லவா?

மலைக்கொழுந்தாக் கவுண்டரையும், பெருமாயி அம்மாளையும் கையெடுத்துக் கும்பிட்டு, "தாய் தந்தையை இழந்துவிட்ட எனக்கு இனிமேல் நீங்கள்தான் தாயும் தந்தையும்!" என்று தழுதழுத்த குரலில் நெல்லியங்கோடன் கூறினான். மாமனாரும் அத்தையும் மனங் கலங்கினர். பெருமாயி, எதுவும் பேச முடியாமல் இதயக்குமுறலை அடக்க முனைந்தது புரிந்தது. ஆனால்; தன்னைமீறி எல்லாம் நடந்துவிட்டதே என்ற உளைச்சலில் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தார் மலைக்கொழுந்தாக் கவுண்டர் என்பதும் தெரிந்தது. மௌனமாகப் பெருமூச்சு விட்டபடியே பெருமாயி அம்மாள்; தனது மகள் தாமரையைக் கட்டித் தழுவிக் கொண்டு அவளது கன்னங்களில்; காலைப் புல்லின் நுனிமீது சுருக்கொண்டிருக்கும் பனித்துளிகளைப் போல உருண்டு வழிந்துகொண்டிருக்கும் கண்ணீர்த் துளிகளைத் துடைத்துவிட்டாள். ஆனால் அதுவோ ஊற்றுப் பெருக்காயிற்று!

அந்த நிலையிலுங்கூட மணவிழாவையொட்டிய சில சடங்குகளை உறவுப் பெண்டிரும், பெரியோரும் தங்குதடை வராமல் நடத்திக் கொண்டிருந்தனர்.

•

மணமக்களுக்கென புதிதாகத் தயாரிக்கப்பட்ட காலணி

களைத் கொண்டுவந்து வீதிவாசலில் போடப்பட்டிருந்த முக்காலியில் வைத்து, மணமக்களை மங்கல இசை முழங்க அழைத்துச்சென்று அந்தக் காலணிகளை அணியச்செய்தனர். இரும்பினால் ஆக்கப்பட்ட சட்டுவத்தை மணமகள் தாமரையின் கையில் தந்து தட்டில் உள்ள சோற்றுக்குவியலை அந்த சட்டுவத்தால் மணமகன் நெல்லியங் கோடனுக்குத் தள்ளுமாறு செய்து சுற்றிலும் நின்றுகொண்டு உறவுமுறைப் பெண்கள் கேலியும் கிண்டலும் செய்து மகிழ்ந்தனர். அந்த உற்சாகமான நிகழ்ச்சிகளில் இதயத்துள்ளலுடன் மணமக்களோ அல்லது மணியங்குரிச்சியாரோ அவரது மனைவியோ கலந்து கொள்ள முடியவில்லை எனினும் ஒப்புக்காக அவற்றையெல்லாம் நடத்தி முடித்தனர்.

இத்தனைக்கும் பிறகு பந்தலில் இருந்து மணமக்களை வீட்டுக்குள் அழைத்துச் சென்று அமரவைத்தனர்.

ஒரே மகளுக்கு மணவிழா நடைபெற்றதைப் பெருமையுடன் எண்ணிக்களிக்க முடியாமல் பெருமாயி அம்மாள் தவித்தாள். தனது மகன் சின்னமலைக்கொழுந்து மணப்பந்தலில் இவ்வளவு அநாகரிகமாக நடந்து கொள்வான் என்று அந்தத் தாய் எதிர்பார்க்கவேயில்லை. சுளீர் சுளீர் என சவுக்கடிகள் விழும் போது, ''அய்யோ அம்மா!'' என்று வாய்விட்டு அலறுவதும் குற்றமாகக் கருதப்பட்ட காலத்தில் அடி வாங்குபவன் வலியைப் பொறுத்துக் கொண்டு உடலை மட்டும் நெளிப்பது போல பெருமாயி அம்மாள் நெளிந்தும் நெகிழ்ந்தும் மணவிழாத் தொடர்பான காரியங்களில் ஈடுபட்டிருந்தாள். மணமக்களை வீட்டுக்குள் அழைத்துச் சென்று அமர வைத்தபோது அவளும் அவர்களுடன்தானிருந்தாள். அப்போது அங்கே மலைக்கொழுந்தாக் கவுண்டர் இல்லை. பெருமாயி அம்மாளின் கண்கள், ''கணவர் எங்கே?'' என்று சுற்றிலும் சுழன்று கொண்டிருந்தன.

அப்போதுதான் மலைக்கொழுந்தாக் கவுண்டர், ''அவசரம்'' என்று தலைப்பிட்டு; தனக்குவந்த மடல் ஒன்றைப் பரபரப்புடன் பந்தலில் மணவறைக்குப் பக்கத்தில் நின்று படித்துக் கொண்டிருந்தார். அவரது முகத்தில் பயத்தின் சாயல் படிந்திருந்தது. அவரையும் ஓலையையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு, சின்னமலைக் கொழுந்து அருகில் நின்ற காரணத்தால் - அவன்தான் அந்த மடலை அவரிடம் கொண்டுவந்து கொடுத்திருக்க வேண்டுமென்பது உறுதியான ஒன்று!

தலையூர்க்காளியிடமிருந்து வந்த மடல் அது! அந்த மடலைப் படிக்கும் மலைக்கொழுந்தாக் கவுண்டரின் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன!

''மதிப்புக்குரிய மணியங்குரிச்சியாருக்கு, மேனாட்டுச் சிற்றரசு தலையூர்க்காளி எழுதுவது; தங்களூரில் தங்களால் நான் அவமானப்படுத்தப்பட்டதில் எனக்கொன்றும் மனவருத்தமில்லை. நான் அதைப் பொருட்படுத்துபவனுமல்ல. ஆனால் எனக்காக எனது நாட்டின் நண்பரும் தனிப்பட்ட முறையில் எனது புரவலருமான வளநாட்டுச் செல்லாத்தாக் கவுண்டர் தான் பெரிதும் புண்பட்டுப் போயிருக்கிறார். எனக்கும் அவருக்குமுள்ள தோழமையையும் எனது நாட்டுக்கு அவரது ஆளுகையின் கீழுள்ள பகுதியின் உதவி எந்த அளவுக்குத் தேவைப்படுகிறது என்பதையும் தாங்கள் முழுமையாக அறியமாட்டீர்கள். காட்டுவளங் கொண்டது என் ஆட்சியில் உள்ள பகுதி. நிலவளம் நிறைந்தது செல்லாத்தாக் கவுண்டரின் ஆதிக்கத்தில் உள்ள வளநாட்டுப் பகுதி! என் பகுதி மக்களைப் போர்க்குணம் கொண்டவர்களாகவே பயிற்றுவித்துள்ளோம். அவர்களுக்குத் தேவையானதுபோக மீதமுள்ள போர்க்கருவிகளை வளநாட்டுக்கும் வழங்குகிறோம். அதற்குப் பதிலாக வளநாட்டிலிருந்து எங்கள் மேனாட்டுக்குத் தேவையான உணவுதானியங்களைப் பெற்றுக் கொள்கிறோம். இப்படியொரு உறவு எங்கள் இரு நாடுகளுக்குமிடையே இருந்து வருகிறது. என் தந்தை பெரியகாளி மன்னர் இறந்துபோகும்போது நான் மிக இளைஞன். அவர் உயிருடனிருந்த போதே என்னை வளர்த்து ஆளாக்கும் பொறுப்பை செல்லாத்தாக் கவுண்டரிடம்தான் விட்டிருந்தார். சிறு வயது முதலே செல்லாத்தாக் கவுண்டரிடம் வளர்ந்து, அவரது அரவணைப்பில் பற்பல ராஜீய அனுபவங்களைக் கற்றுக் கொண்டவன் என்ற முறையில் அவரை எனது புரவலராகவே ஏற்றுக் கொண்டிருக்கிறேன். கோளாத்தாக் கவுண்டரின் ஆதிக்கத்திலிருந்த நிலப்பரப்பையும், அங்கு வாழும் குடிமக்களையும் அவருக்குப் பிறகு கட்டிக் காத்திடக் கூடிய வலிமையும், ஆற்றலும், அறிவும், தெளிவும் ஒரு சிறிது கூட நெல்லியங்கோடனுக்கு இல்லாமற் போனதால் தான் அவனிடமிருந்து அந்தப்பகுதியை செல்லாத்தாக் கவுண்டருக்கு உரிமையாக்க நான் பெரிதும் உதவினேன். தனக்கேயுரிய ராஜதந்திரத்தாலும் - அறிவுச் செழிப்பாலும் இன்றைக்கு வளநாட்டைச் செல்லாத்தாக் கவுண்டர் பரிபாலித்து வருகிறார். தங்கள் மகள் தாமரைக்கும் செல்லாத்தாக் கவுண்டர் மகன் மாந்தியப்பனுக்கும் நடக்க இருந்த திருமணத்தினால்
தங்களுக்கும் செல்லாத்தாக் கவுண்டருக்கும் மட்டுமல்லாமல் எனக்

கும் தங்களுக்குமிடையேகூட புதிய நட்புறவு ஏற்பட்டிருக்கக்கூடும்! ஏதோ விதிப்பயன் காரணமாக அது நடைபெற முடியாமல் போய் விட்டது! இப்போது எனக்கும் செல்லாத்தாக் கவுண்டருக்கும் உருவாகியிருக்கக்கூடிய சந்தேகம் அலட்சியப்படுத்தப்படக் கூடியதல்ல! நெல்லியங்கோடனைத் தங்களின் மருமகனாக ஆக்கிக் கொள்வதில் பெரும் சூதும் சூழ்ச்சியும் அடங்கியிருப்ப தாகவே நாங்கள் கருதுகிறோம். அதாவது செல்லாத்தாக் கவுண்டர் என்ன கருதுகிறாரோ; அதையே நானும் கருதுவ தாக அர்த்தம்! சுருக்கமாகக் கூறவேண்டுமானால்; உங்கள் மரு மகன் நெல்லியங்கோடனுக்குப் பெண்ணை மட்டும் கொடுக்க வில்லை தாங்கள்! அவன் இழந்த மண்ணையும் மீட்டுக் கொடுக் கத் துணை நிற்கப்போகிறீர்கள்! அப்போதுதானே உங்களின் செல்வி தாமரைநாச்சியார் ஒரு அரசிபோல வாழமுடியும்! தாமரைநாச்சியார் அப்படித் திகழ வேண்டுமானால்; நெல்லி யங்கோடன் நெல்லிவளநாட்டைச் செல்லாத்தாக் கவுண்டரிட மிருந்து மீட்டு அந்த பகுதியின் குறுநில மன்னனாக ஆக வேண்டாமா? அதற்குத்தான் திட்டமிட்டு திடீரெனத் திருமணத் தில் மணமகனை மாற்றிவிட்டீர்கள் என்பது எங்களின் முடி வான கணிப்பு! இந்த கருத்தை நீங்கள் மறுக்கக்கூடும்! அப்படி மறுப்பது உண்மையானால் அதைத் தாங்கள் செயல்மூலம் காட்ட வேண்டும்! இல்லையேல்; தாங்கள் நெல்லியங்கோட னுக்கு ஆதரவாக வளநாட்டுச் செல்லாத்தாக் கவுண்டரிடம் மோதத் திட்டமிட்டிருக்கிறீர்கள் என்றுதான் நான் எடுத்துக் கொள்ள வேண்டும்; எனது புரவலருக்கு அப்படியொரு எதிர்ப்பு தோன்றுமேயானால் தலையூர்க்காளியின் படைகள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்க முடியாது! வந்தபின் காப் போம் என்பதைவிட வருமுன் காப்போம் என்பதற்கேற்ப நான் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியிருக்கும். அந்த நட வடிக்கையின் முதற்கட்டம் தலையூர்க்காளியின் படை மணியங் குரிச்சியை முற்றுகையிட்டு அதனைக் கைப்பற்றுவதாகத்தா னிருக்கும்! அப்படியொரு இக்கட்டான நிலைமையைத் தாங் கள் தவிர்க்க வேண்டுமேயானால்; நெல்லியங்கோடனுக்கும் தாமரைக்கும் மணமுடித்ததோடு சரி; இனி எந்த ஆதரவும் தர மாட்டீர்கள் என்பதைச் செயலில் காட்ட முன்வர வேண்டும்! இந்த மடலை; வேண்டுகோளாகவோ அல்லது எச்சரிக்கையா கவோ எடுத்துக் கொள்வது தங்கள் விருப்பத்தைப் பொறுத் தது'' — இங்ஙனம் தலையூர்க்காளி;'' என்று கையொப்பமிட்டு, மேனாட்டுச் சிற்றரசின் முத்திரையும் பொறிக்கப்பட்டு எழுதப் பட்ட நீண்ட மடலைப் படித்துவிட்டு மணியங்குரிச்சியார் நெருப்பில் நிற்க வைத்ததுபோல் தவித்தார்.

''சின்னமலைக்கொழுந்து! நீ சொன்னது சரியாகிவிட்டது! மணியங்குரிச்சிக்கே ஆபத்து வந்துவிட்டது'' என்று அதிர்ச்சியுடன் தனது மகனின் தோளைப் பிடித்துக்கொண்டு கூறினார்.

''அப்பா! என் பேச்சை அலட்சியப் படுத்தினீர்கள்! அம்மாவும் பெண்ணும் சொன்னதைக் கேட்டுக்கொண்டு; மணியங்குரிச்சியின் எதிர்காலத்தையே மண்ணாக்கிவிட்டீர்கள்! தலையூர்க்காளி மேனாட்டுச் சிற்றரசன்! செல்லாத்தாக் கவுண்டர் கிழித்த கோட்டைத் தாண்டாதவன்! அவனையும், வளநாட்டுக் கவுண்டரையும் விரோதித்துக் கொண்டு நாம் எப்படி வாழ்வது?'' என்றான் சின்னமலைக் கொழுந்து!

''வா; வா! என்னோடு!'' என்று அவன் தோளைத் தழுவி அழைத்துக் கொண்டு வீட்டுக்குள்ளே சென்றார் மலைக்கொழுந்தாக் கவுண்டர்.

அவர்களிருவரையும் கண்ட தாமரை; உறவுப் பெண்களுக்கு நடுவே ''நலங்கிடுதல்'' நிகழ்ச்சிக்காக மணமகன் நெல்லியங்கோடனுக்குப் பக்கத்தில் உட்கார வைக்கப்பட்டுள்ளதையும் மறந்துவிட்டு; ''அண்ணா! அப்பா!'' என்று மகிழ்ச்சியுடன் துள்ளிக் கொண்டு ஓடினாள். அண்ணன் சின்னமலைக்கொழுந்து வாய்திறப்பதற்குள்ளேயே தாமரையே மளமளவெனப் பேசத் தொடங்கிவிட்டாள்.

''என்னண்ணா; என்மீது உனக்கு அவ்வளவு கோபம்? அத்தனை பேருக்கு மத்தியில் அப்படிப் பேசிவிட்டுப் போய் விட்டாய்? என் வாழ்க்கையைப்பற்றி ஒரு நல்ல முடிவு செய்து கொள்ளக்கூடிய உரிமைகூட எனக்கு கிடையாதா அண்ணா? காலமெல்லாம் யாரைக் கணவனாக என் மனத்தில் வரித்துக் கொண்டிருந்தேனோ; அவரை மணந்ததில் என்ன அண்ணா தவறு? ஏன் என்னை மணவிழாப் பந்தலில் அப்படி அவமானப்படுத்தினாய் அண்ணா?''

தாமரைநாச்சியாள் கதறியழுதாள். விம்மினாள். அவன் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தேம்பினாள். அவளைத் தூக்கி நிறுத்தி அழுகையை நிறுத்தச் சொல்லி தாயார் பெருமாயி அம்மாள் ஆறுதல் சொன்னாள்.

''என்னம்மா தாமரை; அண்ணன்தானே கோபித்துக் கொண்டான் - அதனால் என்ன? நீர் இடித்து நீர் விலகிவிடுமா? ஏதோ இந்தக் கல்யாணம் அவனுக்குப் பிடிக்கவில்லை; அதற்

காகத் தங்கச்சியை விட்டுக் கொடுத்துவிடுவானா? நீ பிறந்தது முதல் எவ்வளவு பிரியத்தோடு உன் அண்ணன் உன்னை வளர்த்திருக்கிறான் தெரியுமா?'' பெருமாயி; தாமரைக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்கும் போதே சின்னமலைக்கொழுந்து குறுக்கிட்டு, ''அம்மா! அந்தப் பழைய கதையெல்லாம் எதற்கு? இதோ அப்பா, புதிய கதை சொல்லப்போகிறார்; அதைக் கேளுங்கள்!'' என்று சினம் கொப்பளிக்கக் கூச்சலிட்டான். அதுவரையில் நலங்கு நிகழ்ச்சிக்காக மனையொன்றில் அமர்ந்திருந்த நெல்லியங்கோடன், திடுக்கிட்டு எழுந்து நின்றான்.

''நான் ஒன்றும் சொல்லவில்லை! சின்னமலைக்கொழுந்து! நீயே எல்லாவற்றையும் சொல்லு!'' என்று அந்தச் சுமையைத் தூக்கி மகனின் தலைமீது வைத்தார் மணியங்குரிச்சியார். அதனைப் பெரும் பாரமாகக் கருதாத அளவுக்கு இருதயத்தை இரும்பாக்கிக் கொண்ட சின்னமலைக்கொழுந்து; தாமரையிடம் நெருங்கி வந்து அழுத்தம் திருத்தமாகவும், திட்டவட்டமாகவும் சில செய்திகளைச் சொன்னான்.

''வெள்ளித் தொட்டிலில் போட்டு கையில் தங்கக் கிலுகிலுப்பை கொடுத்து சீரோடும் சிறப்போடும் உன்னை வளர்த்தோம். இப்போது நீ இந்த வீட்டைவிட்டுப் போகப்போகிறாய்? எங்கே போகிறாய்? அதுதான் வேதனை! வீடு வாசலே இல்லாத ஒரு நாடோடியுடன் எங்கேயோ போகிறாய்! பரவாயில்லை; நீயாகத் தேடிக்கொண்ட சொர்க்கம் அது! உனக்காகச் சீர்வரிசை என்ற பெயரால் என்னென்ன தர வேண்டுமோ; அவற்றையெல்லாம் வாசலில் அடுக்கி வைத்திருக்கிறோம்! தங்கத் தட்டுகள், வெள்ளிக்குடங்கள், உனக்குக் குழந்தை பிறந்தால் பயன்படுத்த வைரப்பிடி போட்ட தங்கப் பாலாடை, தந்தத்தால் ஆன கட்டில், நவரத்தினமிழைத்த நாற்காலிகள், பட்டுமெத்தை - இப்படி எல்லாச் சீர்வரிசையும் குவிக்கப்பட்டிருக்கிறது. அவைகளை எடுத்துக்கொண்டு, நீயும் உன் கணவனும் இந்தக் கணமே இந்த வீட்டை விட்டுப் புறப்படவேண்டும். ஆனால் ஒன்று; அந்தச் சீர்வரிசைகளை ஏற்றிச் செல்ல வண்டி வாகனங்களை நீங்களேதான் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்! இன்னொரு முக்கியமான சிக்கல்; இந்த விலை உயர்ந்த சீர்வரிசைப் பொருள்களையெல்லாம் கொண்டு போய் வைத்து அழகுபார்க்க உங்களுக்கென்று ஒரு இடம் கிடையாது! பாவம்; பரிதாபப்படுகிறேன்! பரவாயில்லை! அப்பாவின் சார்பில் சொல்லுகிறேன் - இப்போதே இங்கிருந்து நீயும் உன் கணவனும் புறப்படுகிறீர்கள்!''

அவன் பேசிக்கொண்டிருக்கும் போதே பெருமாயி அம்மாள், ''தம்பீ! என்னப்பா சொல்லுகிறாய்? என்னங்க; உங்களுக்கும் இது சம்மதமா?'' என்று தனது கணவனின் காலில் விழுந்து கேட்டாள்.

''என் சம்மதத்தோடுதான் என் மகன் பேசுகிறான்'' என்றார் மலைக்கொழுந்தாக் கவுண்டர்!

''அப்பா'' என்று அலறினாள் தாமரை!

''இனி இந்த வீட்டில் உனக்கும் உன் கணவனுக்கும் வேலையில்லை! உனக்கும் எங்களுக்குமுள்ள பந்த பாசமெல்லாம் எரிந்து சாம்பலாகிவிட்டது!'' என்று கத்தினான் சின்னமலைக் கொழுந்து!

வெறிபிடித்தவளைப்போல ஆனாள் தாமரைநாச்சியார்!

''அண்ணே இன்று எங்களை வெளியேற்றி விடலாம் - பரவாயில்லை; நீங்கள் பரந்த மனப்பான்மையுடன் கொடுத்துள்ள சீர்வரிசைகளையெல்லாம் இங்கேயே வைத்துக்கொள்ளுங்கள்; ஏனென்றால்; அவைகளை வைக்கத்தான் எங்களுக்கு வீடு வாசல் இல்லையே! ஆனால் ஒன்று அண்ணா; என் சகோதரனான உன் முன்னால்; என்னைப் பெற்றெடுத்த என் தாயின் மேல் ஆணையாக - தந்தைமேல் ஆணையாகச் சொல்லுகிறேன். பந்தபாசம் இன்றோடு முடிந்து விட்டது என்றாயே; நிச்சயம் முடியாது! முடியவே முடியாது! சீர்வரிசையை வைக்க வீடு வாசல் கிடையாது என்று கிண்டல் செய்த என் அண்ணனே; நானும் என் அத்தானும் மாட மாளிகையில் இருப்பதை நீ பார்க்கத்தான் போகிறாய்! பந்தபாசம் எரிந்துவிட்டது என்ற என் அருமைச் சகோதரனே; நான் பெற்றெடுக்கிற சிங்கக் குட்டி மகனுக்கு - உன் பெண்ணைக் கட்டி வைக்க நீ வந்து என்னைக் கெஞ்சத்தான் போகிறாய்!'' என்று உரத்த குரலில் சபதம் செய்த தாமரையைப் பார்த்து:

''பெறுவதுதான் பெறுகிறாய்; இரண்டு சிங்கக்குட்டிகளாகப் பெற்றுப்போடு! இரண்டையும் கொண்டு வந்து என் வீட்டு வாசலில் நாய்களைப் போல் காவலுக்குக் கட்டிவைக்கிறேன்.''

இப்படிக் கேலிபுரிந்தான் சின்னமலைக்கொழுந்து!

''பெறுகிறேன் அண்ணே; பெறுகிறேன்! நீயும் இரண்டு

பெண்களைப் பெற்றுக்கொண்டு அந்தச் சிங்கங்களைத் தேடிக் கொண்டு வரப்போகிற காட்சியை நான் கண்டுகளிக்கத்தான் போகிறேன்'' என்று மீண்டும் சூளுரைத்த தாமரை, ''வாருங் கள் அத்தான், போகலாம்!'' என்று நெல்லியங்கோடனின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டே வெளியேறினாள்.

அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு மலைக்கொழுந் தாக் கவுண்டரும் அவர் மகன் சின்னமலைக்கொழுந்தும் நின் றார்கள்.

பெருமாயி அம்மாள், மயக்கமுற்றுக் கீழே கிடந்த பாயில் சாய்ந்ததை இருவருமே கவனிக்கவில்லை.

வாயிற்புறத்தைத் தாண்டி தாமரையும் நெல்லியங்கோடனும் கால் நடையாகவே மணியங்குரிச்சிப் பெரியகாணியாளரின் வீட்டைவிட்டு வெகு தொலைவு சென்று விட்டனர்.

தாமரைக்கு; அளிக்கப்பட்ட தங்கத்தாலும், வெள்ளியாலும், தந்தத்தாலும் ஆன சீர்வரிசைப் பொருள்கள்; மணியக்குரிச்சி யார் வீட்டுவாசலில் கேட்பாரற்றுக் கிடந்தன.



# 6 பெயர் சொல்லாப் பட்டணம்

காரிருளைத் தன் கதிர்க் கரங்களால் ஒதுக்கித் துரத்திவிட்டுக் கீழ்த்திசையில் ஆதவன் உதயமானான். பொன்னிறமாக ஒளி விட்ட வானத்தின் வனப்போடு, கரை புரண்டோடும் அமராவதி ஆற்றின் அழகும் சேர்ந்து கொண்டு - இயற்கையின் திருப்பள்ளி எழுச்சியை இனிய காட்சியாக்கிக் கொண்டிருந்தது. காவிரியைக் கண்டு மகிழவும், கலந்து மகிழவும் அமராவதி துடிப்போடு இருக்கிறாள் என்பது ஓடும் வேகத்திலேயே தெரிந்தது. அமராவதி ஆற்றின் கரையோரத்தில் நீண்டுயர்ந்த தென்னை மரங்களின் கீற்றுக்கள் காலை இளங்காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்தன. ஆற்றோரம் செழித்த பயிர்களின் பச்சைநிறம் கொழிக்கும் வளமான கழனிகளில் சின்னஞ்சிறு மீன்குஞ்சுகள் வாய்க்கால் மடைகளிலிருந்து வந்து துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தன. ஆற்றில் வலைகளை வீசி சிறுவர்களின் துணையோடு பெரியவர்கள் மீன் பிடித்துக் கொண்டிருந்தனர். வலையில் வீழ்ந்த மீன்களைத் தாங்கள் கொண்டு வந்திருந்த கூடைகளில் பெண்கள் நிரப்பிக் கொண்டிருந்தனர். வலை வீசும் இடங்களுக்கு அப்பால் நட்டாற்றிலும், அடுத்த கரையிலும் பளபளப்பான கெண்டை மீன்கள் துள்ளும்போது சூரிய ஒளிபட்டு வெள்ளித் தகடுகள் போல் காணப்பட்ட காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாக இருந்தது. கழனிகளில் தங்கள் பணிகளைக் கவனிக்க மண்வெட்டி போன்ற கருவிகளுடன் உழவர்கள் வரப்புக்களில் நடமாடிக் கொண்டிருந்தனர். அமராவதி வெள்ளத்தின் ஓசையும், மீன் பிடிப்போர், உழவர்கள் - தங்கள் கடமைகளை ஆற்றிடும் பொழுது கிளம்பும் தென்பாங்குப் பாட்டின் ஒலியும் உதயத்திற்கு வரவேற்பு கீதம் இசைப்பது போல இருந்தது.

ஆற்றின் வடகரையில் மேற்குத் திசையிலிருந்து குதிரையொன்று வரும் சப்தம்; தொலைவில் கேட்டது. உழவர்களும், மீன் பிடிப்போரும் அந்தத் திசையைத் திரும்பிப் பார்த்து.

விட்டு, மீண்டும் தங்கள் கடமைகளில் ஆழ்ந்து விட்டதை கவ னித்தால் அடிக்கடி அந்தக் கரையோரத்தில் குதிரைகளில் யாரும் போவார்கள் என்பதும்; எனவே குதிரை வரும் சப் தத்தை அவ்வளவாக எவரும் பொருட்படுத்தவில்லை என் பதும் தெளிவாகப் புரிந்தது.

கரையோரத்து மரங்களில் இருந்து உதிர்ந்த பூக்களை அள் ளிக் கொண்டு காவிரி அன்னையின் மீது பொழிவதற்காக அவசரம் காட்டும் அமராவதி நதியையும் - கரையோரத்தில் உயர்ந்து நிற்கும் தென்னை மரங்களில் குலை தள்ளியிருக்கும் காய்களின் வளத்தையும் - விழிகளுக்கு விருந்தாக்கிக் கொண்டு ஒரு மனிதர் அந்தக் குதிரையின் மீது அமர்ந்திருந்தார். குடுகுடு கிழவனுமல்ல - அதனால் குமரனுமல்ல! ஐம்பத்தி ஐந்து முதல் அறுபதுக்குள்ளாக வயதிருக்கும். வெண்மையும் கருமையும் கலந்த மீசை தாடி அவரது முகத்திற்கு ஒரு அருட்பொலிவை வழங்கிக் கொண்டிருந்தது. தூய வெள்ளை அங்கி அணிந் திருந்தார் எனினும் குதிரை சவாரிக்கேற்ற காலுறை போன் றவை இல்லாமலில்லை. நீண்டு வளைந்த எடுப்பான மூக்கு. கூர்மையான விழிகள். தலைமுடி வளர்ந்து பிடரிக்கும் கீழே சற்று இறங்கி, தோள்பட்டைகளைத் தொட்டுக் கொண்டிருந் தது. கட்டுக் கோப்பான உடல்வாகு கொண்டவராகவே இருந் தார். அமராவதியாற்றுடன் போட்டி போட்டுக் கொண்டு குதி ரையை அவர் ஓட்டவில்லை. வேகத்தைப் பொருத்தவரையில் குதிரையின் விருப்பத்திற்கே விட்டு விட்டார் போலும்! ஆனால் போய்ச் சேர வேண்டிய இடத்தை அவர் தானே தீர்மானிக்க வேண்டும். அப்படியொரு தீர்மானத்துடன் வருவதால்தான் அவரது பார்வை ஆற்றோரத்தில் வயல்களில் வேலை செய் வோர் - ஆற்றில் மீன் பிடிப்போர் பக்கமே சுழன்று கொண் டிருந்தது.

'ஆற்றோரமுள்ள ஒத்தமாந்துறையெனும் ஊருக்கருகே வந்த போது, அவர் குதிரையை இழுத்துப்பிடித்து நிறுத்தினார்.

''அடேடே... மாயவர் அய்யாவா? என்னய்யா இந்த நேரத் திலே?'' என்று ஆவலோடு கேட்டுக் கொண்டே கழனியி லிருந்து கரையோரம் வந்தாள் ஒரு பெருமாட்டி! குதிரையில் வந்த மாயவரை அவளுக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. முதிர்ச்சியின் காரணமாக அந்த உழவர் பெருமாட்டிக்கு முன் வாய்ப்பல் ஒன்றிரண்டு இல்லாவிட்டாலும் சொல் மட்டும் அழுத்தம் திருத்தமாகத்தானிருந்தது.

''ஓ, வாங்கலாயியா? சௌக்கியமா?'' என்று மாயவரும் கேட்டுக் கொண்டே, குதிரையை விட்டுக் கீழே இறங்கினார்.

திருக்காம்புலியூரில் செல்வாக்குள்ள தலைமையேற்று - பின்னர் கரூர், வாங்கல் பகுதியிலும் தனது ஆதிக்கத்தைப் பரப்பிய கோளாத்தாக் கவுண்டர் வாங்கலில் இருந்த அம்மன் கோயிலைப் புதுப்பித்துக் குடமுழுக்கு விழாவையும் சிறப்பாகச் செய்ததையொட்டியும் - வாங்கல் பகுதியை தனது பெருங்குடிக் கூட்டத்தாருக்கு காணி உரிமையாக ஆக்கித் தந்ததையொட்டியும் அவரை வாங்கலான் என்ற அடைமொழியுடன் மக்கள் அழைக்கத் தொடங்கினர். ''வாங்கலான்'' எனும் நினைவாக ''வாங்கிலி'' என்றும், ''வாங்கலாயி'' என்றும் முறையே ஆண்களுக்கும் பெண்களுக்கும் பெயர்கள் சூட்டப்பட்டன. அப்படிச் சூட்டிய பெயருக்குரிய ஒரு பெருமாட்டி தான் மாயவரைக் குதிரையிலே கண்டு விசாரிப்பதற்காக விரைந்து வந்த வாங்கலாயி!

''காலையிலே சூடாக் கஞ்சி சாப்பிடுகிறீர்களா? என்னாலே முடிந்தது அவ்வளவுதான்! நீங்கள் அரண்மனையிலேயிருந்து வருகிறீர்கள் - சாப்பிடுவீர்களோ என்னவோ?''

வாஞ்சையுடன் வாங்கலாயி கேட்டது மட்டுமல்ல; கையில் வைத்திருந்த கஞ்சிக் கலயத்தையும் அவரிடம் நீட்டினாள்.

''குளிர் மதமதப்பிலே கொஞ்சம் உற்சாகமாக இருக்க என்ன கிடைக்குமென்று யோசித்துக் கொண்டே வந்தேன். சரியான சமயத்தில் சரியான உணவு. எங்கே கொடு! அடேடே... கலயமே நன்றாகக் கொதிக்கிறதே! கஞ்சியும் சூடாகத்தானிருக்கும்!''

மாயவர், கஞ்சி முழுவதையும் குடித்து விட்டுக் கலயத்தை வாங்கலாயியிடம் கொடுத்தார். ஒருவருடைய பசியைத் தீர்க்க ஒரு கலயம் கஞ்சி கொடுத்து உதவியதால் ஏற்பட்ட பூரிப்பு அவளுடைய முகத்தில் பூத்துக் குலுங்கியது.

''மாளிகையிலேயிருந்து வருகிறாரே மாயவர்; இந்த மண் குடிசை தருகிற கஞ்சியைக் குடிப்பாரா, என்றுதானே சந்தேகப்பட்டாய் - இப்போதாவது இந்த மாயவர் குணம் புரிகிறதா?''

என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

''உங்கள் குணம் தங்கக் குணம் என்று உலகத்துக்கே தெரியுமே! இனிமேல் நான் புதிதாகவா தெரிந்து கொள்ளப் போகிறேன்?'' என்று வாங்கலாயி பதில் அளித்தாள்.

''சரி... சரி... வாங்கலாயி! நான் வந்த விஷயமே வேறு! மாரிக் கவுண்டன்பாளையத்துக்கு எந்தப் பக்கமாகப் போக வேண்டும்?''

''மாயவருக்குத் தெரியாத ஊர்களா? என்னைப் போய்க் கேட்கிறீர்களே; கேலிதானே இது?''

''இல்லையம்மா! அந்தப் பக்கமெல்லாம் போய் எத்தனையோ வருஷங்களாயிற்று; அதனால் தான் கேட்கிறேன். மாரிக்கவுண்டன்பாளையத்தில் எனக்கு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது!''

''வடக்குத் திக்கிலே போய் காவேரிக்கரைக்கு முன்னாடியே வாங்கலுக்குக் கொஞ்சம் தென்மேற்காகத் திரும்பிப் போனால் மாரிக்கவுண்டன் பாளையம்!''

''சரிம்மா; நான் புறப்படுகிறேன். சூடாகவும் சுவையாகவும் - அதையெல்லாம் விட உங்கள் கொங்கு வேளாளர் குலத்துக்கேற்ற கள்ளமில்லா உள்ளத்தோடும் கொடுத்த காலை ஆகாரத்திற்காக உனக்கு மிகவும் நன்றி!'' என்றவாறு குதிரையில் ஏறினார் மாயவர்!

மகிழ்ச்சிப் பெருக்கில் - அந்த வயதிலும் நாண உணர்ச்சியை முகத்தில் வெளிப்படுத்தி வாங்கலாயி, சற்றுத் தலையைத் தாழ்த்தியவாறு மாயவரை நோக்கி, உங்கள் வேட்டுவர் குலத்திலே மட்டும் கள்ளமில்லா உள்ளம் இல்லையா? தும்பைப்பூ மாதிரி வெள்ளை மனதுக்கு நீங்கள் ஒருவரே உதாரணமாக இருக்கிறீர்களே!'' என்றாள்.

''அம்மா! வாங்கலாயி! நீ சொல்லும்பொழுதுதான் நான் வேட்டுவர் குலத்தில் பிறந்தவன் என்பதே எனக்கு நினைவுக்கு வருகிறது. ஏதோ அவரவர்கள் வாழுகிற இடம், செய்கிற தொழில் கடைப்பிடிக்கிற பண்பாடு இவைகளில் உள்ள வேறுபாடுகளின் அடிப்படையில் மனிதரில் பல பிரிவுகள் உருவாயின. காலப்போக்கில் அந்தப் பிரிவுகள் பிறப்பின் காரணமாக அமைந்தவை என்ற ஒரு தவறான கருத்து ஏற்பட்டு விட்டது. அதனால் என்னை வேட்டுவகுலம் என்றும் உன்னை

வேளாளகுலம் என்றும் சொல்லி அடையாளம் காட்ட வேண்டியிருக்கிறது. என்னைப் பொறுத்த வரையில் எல்லோரும் ஓர் குலம் தான்! வருகிறேனம்மா!''

மாயவர், குதிரையைத் தட்டி விட, அது மாரிக்கவுண்டன் பாளையத்தை நோக்கி விரைந்தோட ஆரம்பித்தது. ஒத்தமாந்துறை விட்டு, இடைக்காடு போன்ற பகுதிகளைக் கடந்து அமராவதி ஆற்றங்கரையிலிருந்து ஏறத்தாழ ஏழெட்டு கல் தொலைவிலிருக்கக் கூடிய மாரிக்கவுண்டன் பாளையத்து எல்லையை அடைந்திட மாயவருக்கு அதிக நேரம் பிடிக்க வில்லை. எல்லையில் குதிரையை நிறுத்தி விட்டு சுற்று முற்றும் பார்த்தார். திடீரென அவர் தன் கண்ணெதிரே கண்ட காட்சியை நம்ப முடியாமல் அப்படியே திகைத்துப் போய் விட்டார்.

இருபதுக்கு மேற்பட்ட முரட்டுப் பன்றிகளின் கூட்டம். அந்தக் கூட்டத்திற்கு மத்தியில் மூன்று எடுப்பான தோற்றமுடைய வாலிபர்கள். அவர்களுடைய கைகளில் கட்டாரிகள் மட்டுமே இருக்கின்றன. கச்சையை வரிந்து கட்டிய நிலையில் மூவரும் கட்டாரியை ஓங்கியபடி அந்தப் பன்றிகளின் தாக்குதலைச் சமாளித்துக் கொண்டிருக்கிறார்கள். சாதாரணமாகத் தெருக்களில் அலையும் பன்றிகளைப் போல அல்லாமல் ஒவ்வொன்றும் காண்டா மிருகத்தைப் போன்ற உடலமைப்புடனும் அதே போன்ற வலிமையுடனும் மூர்க்கத்தனமாக அந்த மூன்று வாலிபர்களையும் சூழ்ந்து கொண்டு அவர்களை மோதி வீழ்த்தப் பாய்ந்தவாறு இருந்தன. வாலிபர்கள் மூவரும் சளைக்க வில்லை. அச்சம் என்பதே அவர்கள் முகத்தில் தென்படவும் இல்லை. மாயவர், குதிரையை அங்கிருந்து நகர்த்தவும் இல்லை. காட்டுப் பன்றிகளின் கோரமான தாக்குதலை மூன்றே வாலிபர்கள் எதிர்த்துப் போராடுகிற நிகழ்ச்சி அவரைப் புல்லரிக்கச் செய்தது.

பன்றிதானே எனக் கேவலமாக எண்ணுவது எவ்வளவு தவறு என்பதை அந்தக் காட்டுப் பன்றிகளின் வெறிபிடித்த தாக்குதலைப் பார்த்த போது மாயவரால் நன்கு உணர முடிந்தது போலும்; அதனால் திறந்த விழிகள் மூடாமல் ஆவல் ததும்பப் பார்த்துக் கொண்டிருந்தார். கட்டாரிகளைக் காட்டிக் குத்திக் கொல்வது போல போக்கு காட்டியே அந்தப் பன்றிகளைக் களைப்படைய வைத்திடும் முயற்சியில் அந்த வாலிபர்கள் ஈடுபட்டிருப்பதை மாயவர் புரிந்து கொண்டார். அவ்வளவு எளிதில் அந்தப் பன்றிகள் களைப்படைவதாகத் தெரியவில்லை. அந்தப் பயங்கரப் போராட்டம் நீண்ட நேரத்திற்குப்

பிறகு ஒரு முடிவுக்கு வந்தது. அந்த வாலிபர்களின் கட்டாரி சில பன்றிகளின் வயிற்றில் பாய்ந்தன! சில பன்றிகளின் கழுத்தில் பாய்ந்தன! சில பன்றிகளை அவர்கள் கரும்பாறை களைத் தூக்குவது போலத் தூக்கி தரையில் ஓங்கி அடித்து, அவற்றின் உடல்களை வீசியெறிந்தனர்!

ஒன்றிரண்டு பன்றிகள் தப்பித்தோம் பிழைத்தோமென்று தலைதெறிக்க ஓடி விடவே, வாலிபர்கள் மூவரும் ஒருவர் தோளைப் பிடித்து ஒருவர் குலுக்கிப் பாராட்டு தெரிவித்துக் கொண்டு; உடலில் படிந்துள்ள மண்ணைக் கழுவுவதற்காக; அங்கு, சற்று தொலைவிலிருந்த பெரிய கிணற்றை நோக்கி நடந்து கொண்டிருந்தனர்.

மாயவர், குதிரையை அவர்கள் நடந்து செல்லும் திசையில் முடுக்கி விட்டார். குதிரையில் யாரோ வருவது கண்டு வாலி பர்கள் மூவரும் நின்றனர். அவர்களைப் பார்த்து மாயவர், ''தம்பிகளா! இந்த ஊரில் ''ராக்கியண்ணன் பயிற்சிப்பாசறை'' எங்கே இருக்கிறது?'' என்று கேட்கவே - வாலிபர்கள் மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். விழிகளை அகல விரித்தனர். மூவரில் ஒருவன் மட்டும் முன்வந்து; ''இதோ இந்தப்பக்கம் நேராகப்போனால்... அந்தப் பாசறை போய்ச் சேரலாம்!'' என்றான்.

''மிகவும் நன்றி தம்பி! பன்றிகளோடு நீங்கள் நடத்திய யுத் தத்தைக் கண்டு களித்தேன். உங்கள் வீரத்தைப் பாராட்டு கிறேன்.''

என்று மாயவர் புன்னகை இழையோடக் கூறினார். அவரை ஒரு முறை ஏற இறங்கப்பார்த்து விட்டு மூன்று வாலிபர்களும் ஒருவருக்கொருவர் ஏதோ கண் ஜாடை காட்டிக் கொண்டனர். பின்னர், அவரிடம் சொல்லிக் கொள்ளாமலே கிணற்றை நோக்கி மீண்டும் நடந்தனர். மாயவர், அவர்களைப் பாசமிகு பார்வையால் ரசித்துக்கொண்டே, ''அடடா! இந்த வீர வாலி பர்களின் பெயர்களைத் தெரிந்து கொள்ளாமல் விட்டு விட் டோமே!'' என்றெண்ணியவராக அந்த வாலிபர்கள் நடக்கும் திசை நோக்கியே குதிரையில் சென்றார். ''தம்பிகளே! உங்கள் பெயர்கள் என்னவென்று தெரிந்து கொள்ளலாமா?'' மாய வரின் இந்தக் கேள்விக்கு மூன்று வாலிபர்களும் விடையளிக் காமல் நின்றார்கள். ''சொல்லமாட்டீர்களா?'' மாயவர் மீண் டும் கேட்டார். மூவரும் மீண்டும் ஒருவரையொருவர் பார்த் துக் கொண்டனர்!

போகவேண்டுமென நினைத்த பெரிய கிணற்றுக்குப் போகாமல், வாலிபர்கள் சட்டென வேறு திசையில் திரும்பி கல்லும் முட்செடிகளும் நிரம்பிய ஒரு ஒற்றையடிக் குறுக்குப் பாதை வழியாக வேகமாகச் சென்றார்கள். மாயவருக்கு பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டது போன்ற நிலைமை! குதிரையிலிருந்தவாறே அவர்கள் மூவரும் போவதை அவர்களின் உருவங்கள் மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்தார். வாலிபர்களில் ஒருவன் குறிப்பிட்ட வழியில் குதிரையைச் செலுத்தினார்.

மாரிகவுண்டன் பாளையத்தின் மற்றோர் எல்லையில் ஒதுக்குப்புறமாக மரங்கள் மிக அடர்ந்த ஒரு பெரிய தோப்புக்குள்ளே மாயவர் குதிரையில் நுழைந்தார். ஒரு புறத்தில் மாமரங்கள் கொத்துக் கொத்தாகக் காய்த்திருந்தன. பிறிதோர் புறத்தில் இலந்தை மரங்கள் நிறைந்திருந்தன. மற்றொரு புறத்தில் கொய்யா மரங்களில் கனிகளைத் தின்ன அணில்கள் குதித்தோடிக் கொண்டிருந்தன. தோப்பைச் சுற்றி உயரமாக முள்வேலி அமைக்கப்பட்டிருந்தது. தோப்புக்குள்ளே நுழைந்த மாயவரை ஒரு குரல் அதட்டி நிறுத்தியது. ''யாரய்யா நீங்கள்? அனுமதியில்லாமல் எங்கே நுழைகிறீர்கள்?'' என்று கேட்ட அந்தக் குரலுக்குச் சொந்தக்காரனாக ஒரு இளைஞன் அவருக்கு முன்னால் கம்பீரமாக நின்றான். ''ராக்கியண்ணனைப் பார்க்க வேண்டும்'' என்றார் மாயவர்; அவருக்கே உரியதாகக் காணப்பட்ட நிதானத்துடன்! ''அவரைப் பார்ப்பது இருக்கட்டும்!; முதலில் நீங்கள் யார் என்று சொன்னால் தானே அவரிடம் சொல்லி, உங்களை அனுமதிக்கலாமா என்று நான் அவரிடம் உத்தரவு பெற முடியும்?'' என்று சிறிது குறும்பாகப் பேசினான் அந்த இளைஞன்! சிரித்துக் கொண்டே அவர், அந்த இளைஞனைப் பார்த்து; ''தம்பீ, மாயவர் வந்திருப்பதாகச் சொல்!'' என்றார். ''இந்த ஒரு வார்த்தை சொன்னால் போதுமா?'' என்று இளைஞன் திருப்பிக் கேட்டான். ''எல்லாம் அதிலேயே அடங்கியிருக்கிறது - இதைச் சொன்னாலே ராக்கியண்ணன் என்னை வரவேற்க எழுந்தோடி வருவார்!'' என்றார் மாயவர்! இளைஞனது முகத்தில் கோபத்தின் சாயல் திடுமெனப் படர்ந்தது, ''ஏனய்யா - எங்கள் பாசறை ஆசான் ராக்கியண்ணன் அவர்களை என்னவென்று நினைத்துக் கொண்டீர்? அவர் கொங்கு வேளாளர் குலத்துச் சிங்கம் என்பது உமக்குத் தெரியுமா? அந்தச் சிங்கம் உம்மை எதிர்கொண்டழைக்க எழுந்தோடி வருமா?'' என்று சூடாகப் பேசிய இளைஞனை, மாயவர்; புன்சிரிப்புடன் உற்று நோக்கி - ''தம்பீ! ராக்கியண்ணன் கொங்குச் சிங்கம் என்பதில் சந்தேகமில்லை. நீ சிறு பிள்ளை. எனக்கும் ராக்கியண்ணனுக்கும் இடையே

உள்ள அன்புப் பிணைப்பை நீ அறிய மாட்டாய்! போ; போய்ச் சொல்; மாயவர் வந்திருக்கிறார் என்று!'' எனப் பரிவுடன் கூறினார். உடனடியாகச் செல்லாமல் அந்த இளைஞன்; தயங்கித் தயங்கி அங்கிருந்து உள்ளே சென்றான்.

இளைஞன் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் வேங்கை போல் உருக்கொண்ட ஒருவர் மாயவரை நோக்கி ஓடோடி வந்தார். அவரைப் பார்த்தவுடன் மாயவர், குதிரையிலிருந்து குதித்தோடி தழுவிக் கொண்டார்.

''ராக்கியண்ணா, சுகம்தானா?''

''நான் நன்றாக இருக்கிறேன்; நீங்கள்?''

''நானும் நன்றாகத் தானிருக்கிறேன்''

''மாயவரே! உங்களைப் பார்த்து எவ்வளவு காலமாகிறது... ஆகா... எப்படிப்பட்ட அரிய சந்திப்பு இது... வாருங்கள்; பாசறைக்குள் போகலாம்.''

இருவரும் ஒருவர் தோளில் ஒருவர் கை போட்டுக் கொண்டு - மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தியவாறு பாசறைக்குள் வந்தனர். மாயவரை, தந்தம் பதித்த ஒரு நாற்காலியில் அமர வைத்து விட்டு - ராக்கியண்ணன்; தானும் அவர் எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். மாயவரின் கண்கள் பாசறையை வட்டமிட்டன. வில்லம்பு, வேல், வாள், குத்துக் கட்டை, சிலம்பம், கட்டாரிகள், கேடயங்கள்; இப்படிப் படைக் கலன்கள் நிறைந்து காணப்பட்ட அந்தப் பாசறையை மாயவர் பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கும்போதே, இரண்டு இளநீர் களைக் கையில் எடுத்துக் கொண்டு அந்த இளைஞன் விரைந்து வந்து இருவர் கைகளிலும் கொடுத்தான். அவனைக் குறுநகையுடன் மாயவர் உற்று நோக்கவே; அவன் நெளிந்தான்.

''மாயவரே! இந்தச் சிறுவன் உங்களிடம் கண்டிப்பாக நடந்து கொண்டதற்கு மன்னித்து விடுங்கள்'' என்றார் ராக்கியண்ணன்!

''எதற்காக மன்னிப்பு? அவனுக்கிட்ட பணியை அவன் கடமை உணர்வோடு செய்கிறான். அதற்காக அவனைப் பாராட்டத் தானே வேண்டும்!''

என்று இளைஞனின் முதுகில் மாயவர் தட்டிக் கொடுத்தார்.

இருவரும் இளநீர் குடித்து முடித்தனர். இளைஞன், அந்தக் காய்களை இரண்டாக வெட்டி அவற்றிற்குள்ளிருந்த வழுக் கைத்தேங்காயை வழித்தெடுத்து, இரண்டு தட்டுகளில் வைத்துக் கொடுத்தான். மாயவரும் ராக்கியண்ணனும் அதைச் சுவைத் துச் சாப்பிட்டனர்.

''தம்பீ! நீ ஒரு இளநீர் சாப்பிடுவது தானே?'' என்று மாய வர் கேட்க, அந்த இளைஞன் வேண்டாமென்பது போலத் தலையசைத்து - அவர் அப்படிக் கேட்டதற்காக கண்ணசை வின் மூலம் நன்றி தெரிவித்துக் கொண்டான். மாயவர் அவனை அன்பு ததும்பப் பார்த்து, ''தம்பீ, உன் பெயர் என்ன?'' என்று கேட்டார். இளைஞன் அவரை உற்று நோக்கினான். பிறகு ராக்கியண்ணனையும் நோக்கினான். மாயவருக்குப் பதில் சொல்லாமலே அங்கிருந்து மெல்ல நகர்ந்து விட்டான்.

''என்னங்க ராக்கியண்ணன்! இந்த ஊருக்கு ''பெயர் சொல் லாப் பட்டணம்'' என்றே பெயர் வைத்து விடலாம் போலி ருக்கிறதே'' என்றார் மாயவர்!

''ஏன்?'' என்றார் ராக்கியண்ணன்!

''யாரைக் கேட்டாலும் பெயர் சொல்ல மாட்டேன் என் கிறார்கள்! நல்ல வேளை தங்கள் பெயர் எனக்குத் தெரிந்த தால் தங்கள் பெயரைச் சொல்லி விசாரித்துக் கொண்டு இங்கேவர முடிந்தது'' என்றார் மாயவர்!

அந்தப் பதிலைக் கேட்டு ராக்கியண்ணன் அந்தப் பாச றையே அதிர்ந்து போவது போல வெடிச் சிரிப்பு ,சிரித்தார்.






என்னங்க ராக்கியண்ணன்; என் கேள்விக்கு உங்கள் வெடிச் சிரிப்புதான் பதிலா?'' என மாயவர் மடக்கினார்.

''அப்படியொன்றுமில்லை. என்னிடம் போர்ப்பயிற்சி பெறுகிற மாணவர்கள் பெயரை நானும் யாரிடமும் வெளியிடுவதில்லை. யார் கேட்டாலும் அந்த மாணவர்களையும் தங்கள் பெயரைச் சொல்லக் கூடாது என்று கண்டிப்பான கட்டளை பிறப்பித்திருக்கிறேன்.'' அழுத்தம் திருத்தமாகப் பதில் அளித்தார் ராக்கியண்ணன்.

மாயவர் விடுவதாக இல்லை. ''இந்தப் பாசறையில் பயிலும் மாணவர்களுக்கு அப்படியொரு ஆணை முன்பெல்லாம் இருந்ததில்லையே! உங்களிடம் தலையூர் இளவரசன் காளி மாணவனாக இருந்து போர்ப்பயிற்சிகளைப் பெற்றபோது இங்குள்ள மாணவர்கள் யாருடைய பெயரும் மர்மமாக வைக்கப்பட்டதில்லையே?'' என வியப்பு தெரிவித்தார்.

பெருங் கனைப்பொன்றைக் கனைத்துக் கொண்டு ராக்கியண்ணன் நாற்காலியை விட்டு எழுந்து அந்தப் பாசறையில் வேங்கை போலக் கம்பீரமாக உலவிக் கொண்டே; ''மாயவரே! நீங்கள் சொல்வது முப்பது வருஷத்துக்கு முன்பிருந்த சமாச்சாரம் - தலையூர் மன்னன் பெரிய காளியின் மகன் இளவரசன் காளியை அறியாதார் யாருமிருக்க முடியாது. இளம்பருவத்தில் அவன் இங்கே மாணவனாக இருந்து, வில் வித்தை, வாள்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம் போன்ற போர் முறைகளைக் கற்ற போது; அவன் பெயரை மறைக்கத் தேவையில்லாமல் இருந்தது. மறைக்கவும் முடியாமல் இருந்தது. இப்போது நிலைமை அப்படியில்லை. என்னிடமுள்ள மாணவமணிகள் ஒரு சிலருடைய பெயரை வெளியில் சொல்வது அவர்களுக்கே நல்லதல்ல; என்பதற்காக - எந்த மாண

வனுமே தங்களுடைய பெயரை யார் கேட்டாலும் சொல்லக் கூடாது என்று இந்தப் பாசறையில் சில ஆண்டுகளாகப் புது விதி செய்யப்பட்டிருக்கிறது'' என விளக்கமளித்து விட்டு, மாயவரைப் பார்த்து புதிய கேள்வியொன்றைத் தொடுத்தார்.

''ஆமாம் - சுமார் இருபது அல்லது இருபத்தைந்து வருஷத் துக்கு முன்பு தலையூர் அரண்மனையை விட்டு துறவியாகப் போவதாக அறிவித்து விட்டுச் சென்ற தாங்கள் இரண்டொரு வருஷங்களுக்கு முன்பு திரும்பவும் தலையூர் வந்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன். ஒருமுறை அமராவதிக் கரையில் குதிரை யில் தாங்கள் வேகமாகச் சென்று கொண்டிருந்ததைக் கூட, ஆற்றில் நீச்சலடித்துக் கொண்டே பார்த்தேன். கூப்பிடலாமா என்று கூட நினைத்தேன். ஆனால் தாங்கள் சென்ற வேகத் தில் என் கூச்சல் காதில் விழாது என்பதால் பேசாதிருந்து விட்டேன். அனைத்தையும் துறந்து எங்கெல்லாமோ சென்று விட்டு; பிறகு துறவறத்தைத் துறந்து விட்டுத் திரும்பிய கார ணம் என்னவோ?''

இந்தக் கேள்விக்கு மாயவர் சிரித்துக்கொண்டே விடையளித் தார்.

''நான் துறவறம் பூண்டால் அல்லவா; அதைத் துறப்பதற்கு? தலையூர் ஆட்சியில் பெரிய காளி மன்னருக்குப் பிறகு இள வரசன் காளி; பதவிப் பொறுப்பேற்கும்போது, நானே தான் அமைச்சராக நியமிக்கப் பெற்று ஆட்சிக்குரிய அனைத்துப் பணிகளையும் கவனித்து வந்தேன். என் அறிவுரையை மீறி எந்தக் காரியமும் தலையூரில் நடைபெற்றதில்லை. ஆனால் அந்த நிலை நீண்ட காலம் நீடிக்கவில்லை. என் வார்த்தைகள் தலையூர்க்காளியின் முன்னால் மதிப்பற்றுப் போகிற ஒரு சூழல் தோன்றுவதை உணர்ந்தேன். நடைபெறும் தவறுகளுக்கு நானும் பொறுப்பாக இருக்க வேண்டுமா? என்று என் மனச் சாட்சி குடைய ஆரம்பித்தது. அந்தச் சங்கடத்தில் பதவியில் நீடிக்க விருப்பமின்றி; காளியிடமே கூறிவிட்டு - அரண் மனையை விட்டு வெளியேறினேன். சோழநாடு, சேரநாடு, பாண்டியநாடு என பல பகுதிகளில் பத்தாண்டு காலத்திற்கு மேலாகப் பயணம் செய்தேன். பின்னர் வடபுலத்தில் காசிமா நகர் வரையிலே சென்றேன். கங்கை, யமுனையெனும் நதிக் கரைகளில் உள்ள நகரங்கள், சிற்றூர்களில் எல்லாம் அலைந்து திரிந்தேன். புத்தவிகார்கள், சமணப்பள்ளிகள் அங்கெல்லாம் பல ஆண்டு காலம் தங்கிப் பெருநூல்கள் பலவற்றைக் கற் றேன். இப்படியே இருபது இருபத்தி ஐந்து வருஷங்கள் கழிந்

தன என்றாலும்; என்னுடைய எண்ணமெல்லாம் தமிழ்நாட்டையே சுற்றிக் கொண்டிருந்தது. அதிலும் தலையூர்க்காளியைப் பற்றியே எனக்கு மிகக் கவலை. அவனைத் தனியே விடுத்து இருபத்தி ஐந்து வருஷம் கழித்து விட்டோமே; அவன் தந்தை இறந்தபோது நம் கையில்தானே அவனை ஒப்படைத்து விட்டுத் துணையாக இருக்குமாறு சொல்லிவிட்டுப் போனார் - அந்தப் பொறுப்பைத் தட்டிக் கழித்து விட்டோமே என்ற கவலை வேறு என்னைக் கப்பிக் கொண்டது. சுருக்கமாகச் சொன்னால் பிறந்த மண்ணின் மீதுள்ள பற்று என்னைப் பற்றிக் கொண்டு திரும்ப இழுத்து வந்து விட்டது.''

மாயவரின் பதில், ராக்கியண்ணன் மனத்தில் மிக உருக்கமாகப் பதிந்தது.

''அவ்வளவு பற்றும் பாசமும் கொண்ட தலையூர் மண்ணைப் பிரிந்து செல்ல வேண்டிய அளவுக்குத் தங்கள் நெஞ்சில் ஏற்பட்ட புண்தான் என்னவோ? காலத்தால் அந்தப் புண் ஆறியிருக்குமென்று கருதுகிறேன். சரியென்று பட்டால் நானும் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பை நீங்கள் எனக்கு அளிக்கலாம் அல்லவா?''

''உற்ற தோழரான உம்மிடம் உரைக்காமல் கூட அன்றைக்கு ஊரை விட்டுப் போய் விட்டேன். அதற்குப் பிராயச்சித்தமாக அந்தக் காரணத்தை இப்போது உம்மிடம் சொல்வதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை.''

''என்னிடம் விடைபெற்றுச் செல்ல அப்போது வந்திருந்தால் ஒரு வேளை நான் தடை செய்து விடுவேன் எனத் தயங்கியிருப்பீர்கள். எப்படியோ நடந்தது நடந்து விட்டது - இனிமேல் நடப்பவைகளாவது நல்லவைகளாக நடக்கத் தங்களின் அறிவும் ஆற்றலும் தூய்மையான இதயமும் பயன்படட்டும்.''

''ராக்கியண்ணரே! தாங்கள் நல்லதை நினைக்கிறீர்கள். ஆனால் இன்னமும் எனக்குத் தலையூர் மாளிகையில் அந்த நம்பிக்கை பிறக்கவில்லை!''

''அப்படியா? ஏன் மாயவரே; எதனால் இவ்வாறு சொல்லுகிறீர்கள்?''

''இப்போதும் தலையூர்க்காளிக்கு அவனது அருமைப் புரவலர் செல்லாத்தாக் கவுண்டரின் முகஸ்துதிப் பேச்சில் தானே

மோகம் இருக்கிறது! செல்லாத்தாக் கவுண்டர் பின்னுகிற சிலந்திவலை தானே தலையூர்க்காளியைச் சிக்க வைக்கிறது! ராக்கியண்ணரே! மன்னர் பெரிய காளியைத் தனது வாய்த் திறனால் தன் வயப்படுத்திக் கொண்டு, சிறுவனாக இருந்த இளவரசனை வளநாட்டுக்கே அழைத்துப் போய் வளர்த்தார் செல்லாத்தாக் கவுண்டர். அந்த நன்றிக் கடனைத் தீர்க்கத்தான் செல்லாத்தாக் கவுண்டருக்குப் பெரிய காளி பலவகையிலும் உதவினார். வாழவந்திச் சீமையை விட்டுத் திருக்காம்புலியூரில் குடியேறி வாங்கலில் உள்ள அம்மன் கோயிலுக்குத் திருப்பணி செய்து குடமுழக்கு விழா நடத்தியவர் கோளாத்தாக் கவுண் டர். இந்த மாரிக்கவுண்டன்பாளையம் மற்றும் பசுபதிபாளை யம்,குப்பச்சி பாளையம், பஞ்சமாதேவி, கருப்பம் பாளையம், கடம்பங்குரிச்சி, வாங்கல் போன்ற ஊர்களடங்கிய பகுதிக்கும் கோளாத்தாக் கவுண்டர் சிற்றரசனாக விளங்கியதைத் தாங் களும் சிறு பிராயத்தில் அறிவீர்கள். சிற்றாலைப் பட்டணத் தைத் தலைமைநகராகக் கொண்டு நெல்லிவளநாடு எனும் பகு தியில் அவர் ஆட்சி செலுத்தினார். அவர் அமைத்த ஏரிகளில் ஒன்று வெள்ளாங்குளம் ஏரி. வேளாண்மைக்கு முன்னுரிமை கொடுத்து அவர் ஆட்சி நடத்தியதால் ''நெல்லிவளநாடு நெற் சூழ்ந்த கோனாடு,'' என்று பாராட்டப் பெற்றது. நீண்ட நாட் களாக அவர்களுக்கிருந்த கவலையைப் போக்கப் பிறந்தவனே நெல்லியங்கோடன். ஆசை தணிக்கப் பிறந்த அந்த ஆண் பிள்ளையோ பெற்றோருக்குப் பெருங்கவலை ஏற்படுத்துபவ னாகவே இருந்தான். உலகத்தைப் புரிந்து கொள்ளாமல் வளர்ந்தான், 'மசை' என்ற அடைமொழிக்குரியவனாக ஆனான். சுறுசுறுப்பு,விறுவிறுப்பு என்றால் என்ன விலை என்று கேட் பவன். கள்ளங்கபடமற்றவன். அவன் எப்படி நெல்லிவளநாட் டைப் பரிபாலிக்கப் போகிறான் என்ற கவலையில் கோளாத் தாக் கவுண்டர்; தனது சகோதரன் செல்லாத்தாக் கவுண்டரி டம் அவனை விடுத்து அவரது பாதுகாப்பில் வளர்க்குமாறு கூறிவிட்டு உயிர்துறந்தார். தந்தை கோளாத்தாக் கவுண்டரைப் பின்பற்றித் தாயார் பவளாத்தாளும் உயிர் விட்ட பிறகு நெல் லியங்கோடன் அனாதையானான். அவனுக்குரிய வளநாட்டு ஆதிக்கம் முழுமையும் கைப்பற்றிக் கொள்ள செல்லாத்தாக் கவுண்டர் திட்டம் போட்டார். ''மசச்சாமி''யாகத் திகழும் நெல்லியங்கோடன் பொறுப்பில் வளநாடு வருமேயானால் வலிமை பொருந்திய பகுதியாக இருக்காது. தலையூர் ஆட்சிக் குத் துணை நிற்கும் பலம் பொருந்திய ஆட்சியொன்று நெல்லி வளநாட்டில் அமைய வேண்டுமேயானால் அதற்கு செல்லாத் தாக் கவுண்டரின் சூழ்ச்சி நிறைந்த மூளையே ஏற்றது என்று தலையூர் மன்னர் பெரிய காளி முடிவு செய்தார். அந்த முடி

வைச் செயல்படுத்த, செல்லாத்தாக் கவுண்டர், பெரிய காளி யிடம் திட்டங்களை எடுத்துரைத்தார். செல்லாத்தாக் கவுண் டரின் யோசனைப்படி, நெல்லியங்கோடன் இளம்பருவத்தி லேயே வளநாட்டிலிருந்து துரத்தப்பட்டான். அவன் திரும்பி வந்து, தனது நிலப்பரப்பை தன்னிடம் ஒப்படைக்க வேண்டு மெனச் செல்லாத்தாக் கவுண்டரிடம் வாதிட்ட போதெல்லாம் பெரும் சித்திரவதைக்கே ஆளாகியிருக்கிறான். அதற்கெல்லாம் செல்லாத்தாக்கவுண்டரால் தலையூரின் உதவியைப் பெற முடிந்தது. பெரிய காளி மரணப்படுக்கையில் இருந்த போது அவர் அருகே நானும், செல்லாத்தாக் கவுண்டரும், இளவரசன் காளியும், இன்னும் சில அரசப் பிரதானியர்களும் இருந்தோம். இளவரசன் காளிக்குத் துணையாக இருந்து ராஜ்ய பாரத்தைக் கவனிக்க என்னை அமைச்சர் பொறுப்பில் நியமிப்பதாகக் கூறிய மன்னர் பெரிய காளி; செல்லாத்தாக் கவுண்டர் கையில் இளவரசன் காளியின் கையைப் பிடித்துக் கொடுத்து; ''கவுண் டர் அவர்களே! என் மகன் காளிக்கு இனிமேல் நீர்தான் தாயும் தந்தையும்'' என்றுரைத்ததோடு; இளவரசனைப் பார்த்து; ''தம்பி காளி! உனக்கு செல்லாத்தாக் கவுண்டர் தான் புரவலர் - அவரது வளநாட்டுக்கும் நமது மேனாட்டுக்குமுள்ள உறவு என்றைக்கும் தொடர வேண்டிய உறவு! அவர் வார்த்தைக்கு மறுவார்த்தை கூறுமல் - அவர் சொல்லை என் சொல்லாகக் கொண்டு நடந்து கொள்!'' என்று கூறிவிட்டு உயிர்விட்டார்.

மாயவர் இந்த விபரங்களைச் சொல்லி முடிப்பதற்குள் ராக் கியண்ணன் குறுக்கிட்டு; ''அடப்பாவி; அவ்வளவு நாள் பழகி யும் செல்லாத்தாக் கவுண்டரின் குணநலன்களைப் புரிந்து கொள்ளவில்லையா?'' என்று தனது ஆதங்கத்தை வெளிப் படுத்தினார்.

மாயவர் தொடர்ந்தார் மேற்கொண்டும் விபரங்களை!

''அனாதையாக்கப்பட்ட நெல்லியங்கோடன் ஓரிரு முறை ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சிக்குப் போய் ரகசியமாகத் தாமரை நாச்சியை சந்தித்து அவள் மூலம் சில உதவிகளைப்பெற்று எப்படியோ காலந்தள்ளிக் கொண்டிருந்தான். அவர்களுக் குள்ளே அன்பு ஏற்பட்டு விட்டது என்பதைத் தெரிந்து கொண்ட மணியங்குரிச்சியார்; அந்த அன்பு முற்றிப் பழுத்துவிடக் கூடா தேயென்று - அவனை அந்தப் பக்கம் வராமலே துரத்தியடித்து விட்டார். விஷயம் செல்லாத்தாக் கவுண்டருக்குத் தெரிந்தது. மணியங்குரிச்சி மலைக்கொழுந்தாக் கவுண்டருக்கும் நெல்லி யங்கோடனுக்கும் உள்ள நெருங்கிய சொந்தபந்தத்தை அவர் அறியாதவரா என்ன? அதனால் அப்படியொரு சம்பந்தம்

வலுப்பெற்று விடக் கூடாது என்பதற்காகவும் - ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சி பெரிய காணியாளரின் பலமும் தன்னுடன் சேரவேண்டுமென்பதற்காகவும் - தனது மகன் மாந்தியப்ப னுக்கு தாமரைநாச்சியைத் தாரமாக்கத்திட்டமிட்டு அந்தப் பேச்சு வார்த்தையில் வெற்றியும் பெற்றார்.

இடைமறித்த ராக்கியண்ணன்; ''மாயவரே! அந்தத் திரு மணம்தான் செல்லாத்தாக் கவுண்டர் விரும்பியபடி நடக்கவில் லையே! தாமரைநாச்சியாரின் விருப்பம்போல் அல்லவா நடை பெற்றது!'' என்றார் புன்னகையை நெளிய விட்டுக் கொண்டு!

''அதற்குப் பிறகு ஏற்பட்ட விபரீதங்கள் பிடிக்காமல்தான் நான் தலையூரை விட்டு வெளியேற நேர்ந்தது'' என்றார் மாய வர்!

''இன்னமும் தாங்கள்; இருபது இருபத்தி ஐந்து ஆண்டு களுக்கு முன் தலையூர்க்காளியிடம் கோபங்கொண்டு வெளி யூர்களுக்குக் கிளம்பிய அந்தக் காரணத்தைக் கூறுகிற கட்டத் திற்கே வரவில்லை!'' என்றார் ராக்கியண்ணன் கிண்டலாக!

''வந்துவிட்டேன்! நான் இப்போது தலையூருக்குத் திரும்பி வந்தும் விட்டேன். தாங்கள் அறிய விரும்புகிற காரணத்தின் பக்கமும் வந்துவிட்டேன்'' என மாயவர் தனது தாடியைத் தட விக்கொண்டே குளிர்ந்த ஒரு பார்வையை ராக்கியண்ணன்மீது வீசினார்.

''தாமரைநாச்சி - மாந்தியப்பன் திருமணம் நின்று போன தும்; தலையூர்க்காளி மறுநாள் மாளிகைக்குத் திரும்பினான். நான் அவனைச் சந்தித்துப் பாராட்டினேன். செல்லாத்தாக் கவுண்டர் கிழித்த கோட்டைத் தாண்டாமல் அவருக்குத் துணை நிற்பதில் முதல் ஆளாகச் செயல்படும் நீ; இந்த ஒரு விஷயத் தில் ஒரு பெண்ணின் வாழ்வில் மண் விழாமல் காப்பாற்றி விட்டாய் என்று அவனை மிகவும் புகழ்ந்தேன். அவனும் என் னைத் தனக்குத் கீழே பணியாற்றும் ஒரு அமைச்சர் நிலை யிலே எண்ணாமல்; அவனை விட வயதில் மூத்தோன் என்ற நிலையில் என் காலைத் தொட்டுத் தொழுது; பாராட்டுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டான். எப்போதுமே தலையூர்க் காளி; என்னிடம் அத்தகைய மரியாதையும் மதிப்பும் கொண் டிருப்பவன்தான். செல்லாத்தாக் கவுண்டரின் சிலந்தி வலையி லிருந்து சிறிது சிறிதாக மீளுகிறான் பிள்ளை - என்று எண்ணி நான் மகிழ்ச்சி கொண்டிருந்தேன். ஆனால் அந்த மகிழ்ச்சி நீடிக்கவில்லை!''

இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற அச்சம்பவம் இப்போது கூட மாயவரின் மனத்தைக் கலக்கியதால் அவர் கண்கள் சற்றுக் கலங்கிக் காணப்பட்டன போலும்!

''ஏன் அந்த மகிழ்ச்சி நீடிக்க வில்லை?'' என்றார் மிகுந்த ஆவலுடன் ராக்கியண்ணன்!

''மணியங்குரிச்சியிலிருந்து திரும்புவதற்குள்ளாகவே செல்லாத்தாக் கவுண்டரின் தூண்டுதலின் பேரில் தலையூர்க்காளி மலைக்கொழுந்தாக் கவுண்டருக்கு ஒரு மிரட்டல் கடிதம் எழுதியிருக்கிறான். அந்தக் கடிதத்தின் விளைவு; நெல்லியங்கோடனும் - தாமரைநாச்சியும் உடனடியாக மணியங்குரிச்சி மாளிகையை விட்டு விரட்டப்பட்டார்கள். திருமணமான தினம் - மங்கல விழாவைத் தொடர்ந்து நடைபெற வேண்டிய சடங்குகள் கூட முறையாக நடைபெற்று முற்றுப்பெறவில்லை. தங்கத்தால், வெள்ளியாலான சீர்வரிசைகளையெல்லாம் தாமரை நாச்சியாருக்குக் கொடுத்து; அறுசுவை உணவில் அணுவளவு தான் விஷம் கலந்திருக்கிறேன் - ஆனந்தமாக அருந்திடுக; என்று உபசரிப்பதுபோல்; இனி உனக்கும் உன் கணவனுக்கும் இந்த வீட்டுப் படியேற உத்திரவில்லையென்று தங்கத் தாமரையாளைப் பொங்கும் கண்ணீரோடு துரத்தியடித்து விட்டார்கள். நெல்லியங்கோடனுக்கோ ஒன்றும் புரியவில்லை. எப்படி வாழ்வது என்ற கவலையில் மூழ்கினான். குடிப்பெருமை - பண்பாடு - இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் தாமரையாள்; தன் கணவனும் தானும் வாழ்ந்தே தீர வேண்டுமென்ற உறுதியும் - அதற்காகப் போராடுகிற உரிமை உணர்வும் கொண்ட பெண்மணி என்பதால் செல்லாத்தாக் கவுண்டரிடம் சென்று தனது கணவனுக்குரிய ஆட்சியை ஒப்படைக்க மனமில்லையென்றாலும் அந்த நிலப்பரப்பில் ஒரு பகுதியைத் தருக என்று வாதிடப் புறப்பட்டாள் கணவனுடன்! செல்லாத்தாக் கவுண்டர் மாளிகையில் என்ன நடந்தது தெரியுமா?''

மாயவரின் விழிகளில் நீர்த்துளிகள் தொங்கலிட்டன!

சிறிது நேரம் அமைதி! இப்போது அந்தப் பாசறைக்குள் இருவருமே உலவிக் கொண்டிருந்தனர். ராக்கியண்ணன் மனக் கலக்கத்தை அவ்வளவாக வெளிப்படுத்திக் கொள்ளவில்லை எனினும் என்ன நடந்தது என்பதை அறிவதில் ஆர்வம் காட்டினார்.

''வந்தவர்களை உபசரிப்பதுபோல செல்லாத்தாக் கவுண்

டரும், மாந்தியப்பனும் நன்றாகவே நடித்தனர். தாமரை மாளிகையிலிருக்கட்டுமென்றும் — நெல்லியங்கோடனை அழைத்துச் சென்று அவனுக்குத் தேவைப்படுகிற நிலப்பகுதியின் எல்லைக்கோட்டை நிர்ணயிப்பதென்றும் - ஏமாற்றி அவனை மட்டும் செல்லாத்தாக் கவுண்டர் சாரட்டு வண்டியில் ஏற்றிச் சென்றார்!''

''பிறகு? பிறகு?'' மாயவரின் நாவசைவை எதிர்பார்த்து ராக்கியண்ணன் துடித்தார்.

''பிறகென்ன? ஒரு வயலோரம் நெல்லியங்கோடனை இழுத்துச் சென்று ஒரு மரத்தில் தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டு, கருவேல மிளார் கொண்டு அவன் உடலெல்லாம் ரணமாக அடித்து வதை செய்தனர். மாளிகையிலிருந்த தாமரையிடமும் மாந்தியப்பன்குறும்புத்தனம் செய்யத் துணிந்திருக்கிறான்.''

மாயவர் சொல்லி முடிக்கவில்லை; ராக்கியண்ணன் ''அய்யய்யோ!'' என அலறிவிட்டார்.

''தாமரைநாச்சி கற்பரசி மட்டுமல்ல; கண்ணகி தேவி போலத் துணிச்சலும் உறுதியும் கொண்டவள்! மாந்தியப்பனைக் காலால் உதைத்துக் கீழே தள்ளியிருக்கிறாள்! மண்ணைக் கவ்விய மாந்தியப்பன்; கொடுஞ்சீற்றங் கொண்டு வாளையெடுத்து அவள் கூந்தலை அறுக்க முனைந்திருக்கிறான்.''

''என்ன?'' என்று கேட்ட ராக்கியண்ணனுக்கு மீசை துடித்தது!

''ஆனால் தாமரை; அவன் கையிலிருந்த வாளைப் பிடுங்கிக் கொண்டு - கணவனைத் தேடி ஓடினாள். கருவேலமிளாரினால் அவனை அடித்துக் கொண்டிருந்த கயவர்கள் மீது வாளை வீசினாள். அந்தப் பொல்லாதவர்கள் தப்பித்தோம் பிழைத்தோம் என்று அங்கிருந்து ஓட்டம் பிடித்தார்கள். தாமரையாளோ; வாளை ஓங்கிய கையுடன் மற்றொரு கையால்; புண்ணாகிப்போன கணவனின் பொன்மேனியைத் தழுவியவாறு வளநாட்டைவிட்டுப் புறப்பட்டாள்! இந்தச் செய்தியை இரண்டு நாட்களுக்குப் பிறகு கேள்விப்பட்ட நான் உடனடியாகக் காளியைச் சந்தித்து இப்படியெல்லாம் செல்லாத்தாக் கவுண்டர் நடத்தும் அக்கிரமங்களுக்கு நீயும் துணையிருக்கலாமா? என்று வேதனையுடன் கேட்டேன். தனக்கு எதுவுமே தெரியாது என்று கூறிய காளி; அப்படியொரு நிகழ்ச்சி நடை

பெற்றிருந்தால் அது கண்டிக்கப்படவேண்டியதே என்றும் என்னிடத்தில் கூறினான். என்னிடம் சொல்லுவதோடு இருக்கக் கூடாது, செல்லாத்தாக் கவுண்டருக்கும் அவர் மகன் மாந்தியப் பனுக்கும் உனது கண்டனத்தைத் தெரியப்படுத்த வேண்டுமென்றேன். சரியென்பது போல் தலையசைத்தான். கண்டித்துச் செய்தி அனுப்பினானோ இல்லையோ தெரியாது; ஆனால் சிறிது காலத்திற்கெல்லாம் செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் நெல்லியங்கோடனுக்கு இழைத்த மற்றொரு அநீதிக்கு தலையூர்க்காளி தனது ஆட்களை அனுப்பித் தனது புரவலரின் புன்னகையைப் பரிசாகப் பெற்றான்.''

''அது என்ன அடுத்த அநீதி?'' ராக்கியண்ணனின் கேள்விக்கு மாயவர் தனது பதிலை மீண்டும் தொடர்ந்தார்.

''நெல்லியங்கோடனும் தாமரை நாச்சியும் உறையூர்ச்சோழ அரசனிடம் சென்று; சோழ மன்னனின் கீழ் கோளாத்தாக் கவுண்டர் வளநாட்டுக் காவல் ஆட்சியாளராக இருந்ததையும் அவர் மகன்தான் நெல்லியங்கோடன் என்பதையும் நினைவு படுத்தி உதவி கேட்டனர். தலையூர்க்காளியின் துணையோடு செல்லாத்தாக் கவுண்டர் தங்களின் உரிமைகளைப் பறித்துக் கொண்டதையும் விவரித்தனர். சோழனும் அவர்களது சோகக் கதையைக் கேட்டு மனமுருகினான். ஆனால் அவர்களுக்காக வளநாட்டின் மீது படையெடுப்பதையோ - அதன் காரண மாகத் தலையூர்க்காளியின் பகையைத் தேடிக் கொள்வதையோ அவன் விரும்பவில்லை. இருந்தபோதிலும் அவர்களுக்கு உதவி செய்வது கோளாத்தாக் கவுண்டருக்காகத் தான் காட்டும் நன்றியெனக் கொண்டு - ஏராளமான தரிசு நிலங்களையும், உழவு மாடுகளையும், உழவுக் கருவிகளையும் அவர்களுக்கு அளித்தான்.''

''வாழ்க சோழன்!'' என்று ராக்கியண்ணனின் உதடுகள் உச்சரித்தன! மாயவரும்; ''ஆமாம்! வாழ்க! வாழ்க!'' என்றார். அடுத்து அவர் என்ன சொல்லப்போகிறார் என்பதை ராக்கியண்ணன் உன்னிப்பாகக் கவனித்தார்.

''கோல் பிடித்து ஆதிக்கம் செலுத்த வேண்டிய நெல்லியங்கோடன் ஏர் பிடித்து வேளாண்மை செய்யத் தொடங்கினான். தேவையான ஆட்களை வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டு நன்செய், புன்செய் நிலங்களில் கணவனும் மனைவியும் கடும் உழைப்பை வழங்கினர். உழைப்பு உயர்வு தரும் என்பதற்கொப்ப அவர்களிட்ட பயிர் தழைத்துக் குலுங்கியது. பச்சைக்

கம்பளம் விரித்தது போல் கண்ணுக்கு விருந்தாகக் காட்சி யளித்த தங்கள் நிலப்பகுதியை தாமரையும் நெல்லியங்கோட னும் பார்த்துக் களித்தனர். இச்செய்தி கேள்வியுற்று செல்லாத் தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் முகம் சுளித்தனர். உடனே ஓலை பறந்தது தலையூர்க்காளிக்கு! அந்த ஓலை வந்த போது நான் தலையூர்க் காளிக்குப் பக்கத்தில்தான் இருந்தேன்!''

'என்ன ஓலை மாயவரே அது?'' ராக்கியண்ணனின் ஆவல் அதிகரித்தது.

''தலையூர்க்காளியின் படைவீரர்கள் நூற்றுக்கணக்கில் உடனே வர வேண்டும். அவர்கள் காட்டுப் பன்றிகளை விரட்டிக் கொண்டு வந்து நெல்லியங்கோடன் பயிரிட்டுள்ள நிலங்களை யெல்லாம் பாழ்படுத்த வேண்டும். இப்படி ஓலையனுப்பியிருந் தார் செல்லாத்தாக் கவுண்டர்! இது தகாது; வேண்டாம் என்று நான் தடுத்துப் பார்த்தேன். தலையூர்க்காளியும் முதலில் தயங் கினான். செல்லாத்தாக் கவுண்டரின் வேண்டுகோளை எப் படிப் புறக்கணிக்க முடியும்? என்று குழப்பமடைந்தான்! நான் பிடிவாதமாக மறுத்தேன். அவன் கேட்கவில்லை; என் தந்தை சாகும்போது செல்லாத்தாக் கவுண்டரின் விருப்பப்படி நடக்கச் சொல்லியிருக்கிறார்; அதனால் அவர் பேச்சைத் தட்ட முடி யாது - என்று காளி கூறினான். வீரர்களையும், பயிர்களை வீணாக்கப் பன்றிக் கூட்டத்தையும் அனுப்பினான். உயிர்கள் பறிக்கப்படுவதைக் கூட வேளாண் பெரு மக்கள் பொறுத்துக் கொள்வார்கள்; பயிர்கள் பாழாக்கப்படுவதை எங்ஙனம் பொறுத் துக் கொள்வார்கள்; அன்றைக்கு என்னால் சகிக்க முடியவில்லை. தலையூரை விட்டுப் புறப்பட்டு விட்டேன். என் இதயத்தின் ரணம் ஆறுவதற்கு இருபத்தி ஐந்து வருஷங்களாயிற்று'' என்று பெருமூச்சு விட்ட மாயவர்; ராக்கியண்ணனைப் பார்த்து, ''ஆமாம்! இப்பொழுது நெல்லியங்கோடனும் அவன் மனைவி தாமரையும் எங்கேயிருக்கிறார்கள்? அமராவதியின் தென்கரை யில் குடையூரில் இருக்கிறார்கள் எனக் கேள்விப்பட்டேன்; உண்மைதானா? உயிரோடு இருக்கிறார்களா?'' என்று கேட்டார்.

''உயிரோடு மட்டுமல்ல; உயர்வோடும் இருக்கிறார்கள்! நெல் லியங்கோடனும், தாமரையும் உழைத்துச் சேர்த்த உடமைகள் பெருகி - குன்று சூழ் நிலப்பகுதிகள் பலவற்றுக்கும் நெல்லியங் கோடன் உரிமை படைத்தவனாகி; இப்போது குன்றுடையான் என்னும் பட்டப்பெயருடன் விளங்குகிறான்'' என்றார் ராக் கியண்ணன்.

''அதைக்கூடச் சொன்னார்கள்; மகிழ்ச்சி! ஆனால் ஒன்று; தாமரை நாச்சியார் தன் சகோதரனிடம் சபதம் போட்டதற்கேற்ப - ஆண் பிள்ளைகள் எதுவுமே இல்லையாமே! ஒரே ஒரு பெண் தான் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்; சரிதானா நான் சொல்வது?'' என்றார் மாயவர்!

இப்போது ராக்கியண்ணன் சிரித்தார். மாயவரை உற்றுப் பார்த்தார்.

''உண்மையான நண்பர் - நல்லவர் - என்பது மட்டுமல்ல; உண்மைகள் வெளிவர வேண்டிய காலமும் மலர்ந்து விட்ட படியால் தங்களிடம் இப்போது சொல்கிறேன்; குன்றுடையானுக்கும் தாமரைக்கும் பிறந்த பொன்னர் - சங்கர் எனும் ஆண்மக்கள் இருவரும் இந்தப் பாசறையில்தான் என்னிடம் போர்ப் பயிற்சி பெறுகிறார்கள்!''

''அப்படியா?''

''நீங்கள் வரும் வழியில் சில பன்றிகளை அடித்து வீழ்த்திய வீர வாலிபர்களைப் பார்த்திருப்பீர்களே?''

''மூன்று வாலிபர்களையல்லவா பார்த்தேன்!''

''மூவரில் மூத்தவன் சோழன் தோட்டியின் மகன் வீரமலைச் சாம்புவன் - மற்ற இருவரில் மூத்தவன் பொன்னர்! இளையவன் சங்கர்!''

# கரகம் விடும் திருவிழா

8

பெயர் என்னவென்று திரும்பத் திரும்பக் கேட்ட மாய வரைத் திகைக்க வைத்து விட்டு பொன்னர், சங்கர், வீரமலைச் சாம்புவன் ஆகிய மூன்று வாலிபர்களும் குறுக்குப்பாதை யிலேயே சிங்கக் குட்டிகளைப்போல நடந்து சென்று காவிரி யின் தென்கரையில் உள்ள வாங்கலம்மன் கோயிலை அடைந் தனர். காவிரியில் வெள்ளம் இரு கரைகளையும் தழுவிச் சென்று கொண்டிருந்தது. கரையோரத்து மரங்களில் இருந்து காற்றின் கரங்களால் பறிக்கப்பட்ட மலர்களையும், செடிகொடி களில் பூத்துக் குலுங்கிய மலர்களையும் தனது அலைக்கரங்களில் ஏந்தி நொங்கும் நுரையுமாக ஒலியெழுப்பிக் கொண்டு வரும் காவிரி மங்கையின் காட்சியையும் - மிதந்து செல்லும் பூக்களைப் பின்தொடர்ந்து பறந்து கொண்டிருக்கும் வண்டினம் எழுப்பும் இசையின் மாட்சியையும் கண்ட மூன்று வாலிபர் களுக்கும் தங்களின் ஆசான் ராக்கியண்ணன் பயிற்றுவித்த சிலப்பதிகாரப் பாடல் நினைவுக்கு வரவே காவிரியைக் கண் கொட்டாமல் பார்த்து நின்றனர்.

''மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி''

என்ற பாடலை அவர்கள் இசையுடன் முணுமுணுத்து உற் சாகத்தை வெளிப்படுத்தினர்.

வாங்கலம்மன் கோயிலை உற்றுப் பார்த்து நின்ற வீரமலைச் சாம்புவன்; இந்தக் கோயில் கோளாத்தாக் கவுண்டர் ஆட்சி யிலே கட்டப்பட்டதாகத் தனது ஆசான் ராக்கியண்ணன் ஒரு முறை சொன்னதை நினைவுகூர்ந்தான். கோளாத்தாக் கவுண் டர்; பொன்னர் சங்கருக்குப் பாட்டனார்தான் என்பது அவர் களுக்கும் தெரியவில்லை வீரமலைச் சாம்புவனுக்கும் தெரிய

வில்லை என்பது அவர்கள் அந்தக் கோயிலைப் பற்றிப் பேசிய திலிருந்தே நன்கு புரிந்தது.

''ஏ, அப்பா - இந்தக் கோயிலில் உள்ள அம்மனை எத்தனை ஊர்க்காரர்கள் வழிபாடு செய்கிறார்கள் தெரியுமா? ஆற்றின் இக்கரையில் மட்டுமல்ல; அக்கரையிலும் கூட; மருதம்பட்டி, நாமக்கல், வகுரம்பட்டி, வசந்தபுரம், பெரியபட்டி, வேட்டாம் பாடி, முத்துக்காப்பட்டி, சாளைப்பாளையம், பழயபாளையம், நெய்காரப்பட்டி, நல்லயக் கவுண்டன்புதூர், எருமப்பட்டி, மரூர்பட்டி முதலிய பல ஊர்களில் வாழும் பெருங்குடி மக்கள் வாங்கலம்மனுக்கு வழிபாடு நடத்தாமல் இருப்பதில்லை!''

— என்று அந்தக் கோயிலுக்குரிய பெருமையை வீரமலைச் சாம்புவன் விரித்துரைத்தான். பொன்னர்-சங்கர் இருவரையும் விட ஏழெட்டு வயது மூத்தவன் என்ற முறையில் வீரமலைச் சாம்புவனுக்கு இந்த விவரமெல்லாம் தெரிந்திருந்தது.

சேரன் செங்குட்டுவன் வடபுலத்து மன்னர்களான கனகனும் விசயனும் தமிழர் வீரம் குறித்து வாயடக்கமின்றிப் பேசிய தாகக் கேள்வியுற்று; அங்ஙனமாயின் அவர்கள் தலையிலேயே கண்ணகி சிலைக்கான கல்லை ஏற்றி வருவதாகச் சூளுரைத்து - அப்படிக் கொண்டு வந்த கல்லில் சிலை வடித்து விழா எடுத் ததையொட்டித் தமிழகத்தில் பல இடங்களில் கண்ணகி கோயில்கள் எழுப்பப்பட்டதாகவும் - அவற்றில் ஒன்றுதான் வாங்கலில் உள்ள அம்மன் கோயிலென்று பெரியவர்கள் சொல்வதாகவும் ராக்கியண்ணன்; தனது பயிற்சிக் கூடத்தில் மாணவர்களிடம் உரைத்ததும் மூவருக்கும் ஞாபகத்திற்கு வரத் தவறவில்லை.

''அண்ணா! வாங்கலம்மன் கோயிலுக்கு வரலாற்று அடிப் படையில் இப்படியொரு சிறப்பு இருக்கிறது; இதே காவிரிக் கரையில் உள்ள மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயிலுக்கு புராண ரீதியான கதையொன்று இருக்கிறதாமே; அது தங் களுக்குத் தெரியுமா?'' என்று பொன்னரைப் பார்த்து சங்கர்; மிகுந்த ஆவலுடன் கேட்டான்.

''தம்பி! அப்படியொரு கதையிருந்தால் நமது ஆசான் நமக் குச் சொல்லியிருப்பாரே!'' என்று பொன்னர் பதில் அளித் தான்.

அப்போது ஒரு குரல்; ''அந்தக்கதை ஒரு பெரிய கதை!

அதை நான் சொல்லுகிறேன்'' என்று ஒலிக்கவே - மூவரும் குரல் வந்த திக்கினை வியப்புடன் நோக்கினர். காவிரியாற்றுக் கரையோரத்தில் மிதந்து கொண்டிருந்த ஓடத்திலிருந்தபடியே ஓடக்காரன் பேசிய குரல்தான் அது!

''நீ என்னப்பா சொல்கிறுய்?'' என்று வீரமலைச் சாம்புவன் ஓடக்காரனின் பக்கத்தில் சென்றுன்.

''மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயிலிலே இன்றைக்கு ஆற்றில் கரகம் விடும் திருவிழா - ஒவ்வொரு வருஷமும் பதி னெட்டாம் பெருக்கையொட்டி அந்தத் திருவிழா தவறாமல் நடக்கும். ஆசையிருந்தால் வந்து பாருங்களேன். என் ஓடத் திலேயே போகலாம்'' என்று சற்று பல் இளித்தவாறு அவர் களைப் பார்த்து ஓடக்காரன் கூறினான்.

''அது என்னப்பா கரகம் விடும் திருவிழா?'' என்று பொன் னர் ஆர்வத்துடன் கேட்டான்.

''எல்லாம் உங்களைக் கரையிலே நிறுத்திக் கொண்டே சொல்லிவிட முடியுமா? காசை எடுங்கள்!'' என்றான் ஓடக் காரன், கண்டிப்பான தொனியில்!

''காசு கொடுத்தால்தான் கதை சொல்லுவாயா?'' என்று கொஞ்சம் கோபம் காட்டினான் வீரமலைச் சாம்புவன்!

''இன்றைக்கு எல்லா ஊர்களில் இருந்தும் ஆண்கள் பெண் கள் நூற்றுக் கணக்கில் மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயி லுக்கு வருவார்கள், வண்டி கட்டிக் கொண்டு வருபவர்கள், கால் நடையாகவே கட்டு சாத மூட்டையுடன் வருபவர்கள், இதுமாதிரி ஓடங்களிலே ஏறி வருபவர்கள் - ஒரே கூத்தும் கும் மாளமும் - செல்லாண்டியம்மன் கோயில் பக்கத்திலே இந்தக் காவேரி நதியே அமர்க்களப்படுமே! நீங்களும் என் ஓடத்தி லேறி செல்லாண்டியம்மன் கோயிலுக்கு வந்தால், ஓடத்தை விட்டுக் கொண்டே அந்தக் கதையைச் சொல்லிக் கொண்டு வருவேன். இஷ்டமிருந்தால் காசை எடுங்கள்!'' என்றபடி, ஓடத்தை மெதுவாக நகர்த்தத் தொடங்கினான் அந்த ஓடக் காரன்.

சங்கருக்கு, கரகம் விடும் திருவிழாவைப் பற்றியும், செல் லாண்டியம்மன் கோயிலைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பு ஏற்பட்டது. அதனால் பொன்னரைப்

பார்த்து, ''அண்ணா! ஆசான்தான் இன்று நமக்கு விடுமுறை வழங்கியிருக்கிறாரே; ஓடத்தில் போய் வருவோமே?'' என்று கேட்டான். ஆசானுக்கு அறிவிக்காமல் அவ்வளவு தொலைவு ஆற்றில் ஓடத்தில் போய் வருவது பொன்னருக்கு உகந்ததாகப் படவில்லை. தயங்கினான்.

''வேண்டாம் தம்பி! செல்லாண்டியம்மன் கோயிலைப் பற்றி நமது ஆசானிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அவரிடம் ஒப்புதல் பெறாமல் அடுத்த ஊர் செல்வது முறையல்ல!'' என்று தடுத்தான்.

வீரமலைச் சாம்புவன் குறுக்கிட்டு; ''ஆசான் ஒன்றும் கோபித்துக் கொள்ள மாட்டார். அப்படியே அவர் ஏதாவது சொன்னாலும் நான் அவரைச் சமாதானப்படுத்துகிறேன். ஓடத்தில் ஏறுவோம் இப்போது!'' என்றான். ''அண்ணனுக்கு என்னைவிட வயதுதான் அதிகம்! ஆனால் என் தம்பியைவிட துடிப்பும் அவசரமும் அதிகம்! சரி; சரி - உங்கள் இருவர் பிடிவாதத்துக்கே வெற்றி! நானும் வருகிறேன்; போவோம்!'' என்று பொன்னர், முதலில் போய் ஓடத்தில் ஏறிக்கொள்ளவே சங்கரும் வீரமலையும் புன்னகையரும்பிட அவனைத் தொடர்ந்து சென்று ஓடத்தில் அமர்ந்தனர். பொன்னர், தனது இடையில் சொருகியிருந்த சுருக்குப் பையிலிருந்து காசுகளைப் பொறுக்கியெடுத்து ஓடக்காரன் கையில் கொடுக்கவே ஓடம் வாங்கல் கரைப்பகுதியிலிருந்து மதுக்கரைப்பகுதி நோக்கிப் புறப்பட்டது காவிரியாற்றுப் பெருக்கில்!

''கரகம் விடுகிற விழா கதையைச் சொல்லய்யா!'' என்றான் சங்கர்!

ஓடக்காரன் ''இதோ!'' என்று தலையை அசைத்துக்கொண்டு ராகம் போட்டுப் பாடவே ஆரம்பித்து விட்டான்!

''முந்தி முந்தி விநாயகனே
முக்கண்ணர் தன் மகனே
சக்திக் கணபதியே
தையல் நல்லாள் புத்திரனே
ஆனை முகத்தோனே
அரனார் திருமகனே''

பாட்டொலி கேட்டதும்; சங்கர் ஓடக்காரனை தொட்டிழுத்து, ''அய்யா! நீ கணபதி ஸ்தோத்திரத்திலேயிருந்து கதையை ஆரம்

பிச்சா பொழுது விடிந்து விடும். சுருக்கமாக கரகம் விடுகிற விழாக் கதையைச் சொல்லு!'' என்றான்.

''அப்படியா? சரி சரி... சொல்லுகிறேன் கேளுங்கள், கைலாசத்திலே, நாகமலையென்று ஒரு மலை இருக்கிறது. அங்கே ஒரு நாகப்பாம்பு, தனக்குக் குழந்தையில்லாமல் பரமசிவனை நோக்கித் தவம் செய்தது. அந்த நாகப்பாம்புக்கு அஞ்சு தலை. அதன் தவத்தைக் கண்டு மனம் இளகிய பரமசிவன், பார்வதியை அழைத்து, ''நீ போய் அந்தப் பாம்புக்குக் குழந்தையாகப் பிற!'' என்று கட்டளையிட்டார். பார்வதியும் அப்படியே அந்த நாகப் பாம்புக்குப் பெண் குழந்தையாகப் பிறந்தாள். அந்தக் குழந்தைக்குப் பெரிய காண்டியென்று அந்த நாகப் பாம்பு பெயர் சூட்டி வளர்த்தது. எப்படி வளர்த்தது தெரியுமா?'' என்று ஓடக்காரன் மீண்டும் பாட ஆரம்பித்தான்:

''ஐந்து படம் விரித்து நாகம் அரவக் குடை பிடிக்க
நாகம் குடை பிடிக்க அம்பாளுக்கு நற்சங்கு தாலாட்ட
நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாய்
சங்குநாதம் தாலாட்ட தாயார் தானே வளருகிறாள்''

அவனே பாட்டை நிறுத்திவிட்டுக் கதையைத் தொடர்ந்தான்:

''இப்படியாகத் தானே வளர்ந்த பெரிய காண்டியம்மன், கொல்லிமலை விட்டு வீரமலைக் காட்டுக்குச் செல்வதற்காக காடுமலை வனவனாந்திரமெல்லாம் தாண்டி, தொட்டியம் வழியாக வந்து காவேரிக் கரையைக் கடக்கும்போது மண்ணுடையானிடம் தகராறு ஏற்பட்டுக் கடைசியாக அவன் பெரிய காண்டி அம்மனுக்கு மண் கரகம் செய்து கொடுத்து மன்னிப்புக் கேட்கிறான். மண் கரகத்தோடு வரும் பெரிய காண்டியை மதுக்கரை செல்லாண்டியம்மன் பார்த்து விடுகிறாள்., பார்வதி தேவிதான் பாம்பு வயிற்றிலே பெண்ணாகப் பிறந்து பெரிய காண்டியாக மண் கரகம் எடுத்து வருகிறாள் என்று செல்லாண்டியம்மனுக்குத் தெரியாது. செல்லாண்டியம்மன் கரகம் பொன் கரகம். அதனாலே அந்த அம்மன் பெரியகாண்டியம்மனைப் பார்த்து;

''பொன் கரகம் தலையில் வைத்து நான்
பூமிபதி ஆண்டிருக்க; இவள்
மண் கரகம் தலையில் வைத்து
வாரவள்தான் ஆருமினி?
இவள் நம்மில் பெரியவளா?

நலம் மிகுந்த வல்லவளா?
இப்படி வழியை மறித்துமே தான் செல்லாண்டி
வழக்குரைத்து நின்றாளே''

ஆக; பெரியகாண்டியம்மனுக்கும் செல்லாண்டியம்மனுக்கும் பெரிய போட்டியே வந்து விட்டது. இரண்டு பேரும் ஒரு பந்தயம் கட்டினார்கள்''. ஓடக்காரன் மீசை படபடக்க உரத்த குரலில் பேசினான்.

''என்ன பந்தயம்?'' என்ற வினாக்குறி - மூன்று வாலிபர்களின் விழிகளிலும் தென்பட்டது.

''பொன் கரகத்தையும் ஆற்றில் மிதக்க விடுவது - மண் கரகத்தையும் ஆற்றில் மிதக்க விடுவது - இரண்டில் எந்தக் கரகம் திருப்பாற்கடல் வரையில் சென்று தீர்த்தமாடி திரும்ப வருகிறதோ; அந்தக் கரகத்துக்குரியவள் தான் பெரியவள் - என்று பந்தயம்! அதன்படி பெரியகாண்டியம்மன் மண்கரகத்தை விட்டாள். செல்லாண்டியம்மன் பொன் கரகத்தை விட்டாள். என்ன ஆயிற்று தெரியுமா? பொன் கரகம் ஆற்றுக்குள் போய் விட்டது. மண் கரகம் திருப்பாற்கடலுக்குப் போய் தீர்த்தமாடி விட்டுத் திரும்பி வந்தது. உடனே செல்லாண்டியம்மன் பெரிய காண்டியம்மன்தான் பெரியவள் - என்று ஒப்புக்கொண்டு தனது பொன் கரகத்தை வரவழைத்துத் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். பெரியகாண்டி அப்படியே பொன் கரகத்தை வரவழைத்துக் கொடுத்தாள். செல்லாண்டியம்மனும் பெரியகாண்டியுடன் வீரமலைக் காட்டுக்கு வருவதாகச் சொன்னாள். 'வேண்டாம்; நீ இங்கேயே இருந்து மக்களுக்கு அருள் புரிந்து கொண்டிரு - நான் காட்டுக்குச் சென்று தவம் செய்து மீண்டும் கைலாசம் செல்ல வேண்டும்' எனக் கூறிவிட்டு பெரிய காண்டியம்மன் போய் விட்டாள். அந்தக் கரகம் விடுகிற விழாவைத்தான் இப்போதும் வருஷாவருஷம் காவேரியில் கொண்டாடுகிறார்கள்'' என்று ஓடக்காரன் கதையை முடித்தான்.

''சாமிகளுக்குள்ளேயே எவ்வளவு போட்டி பார்த்தீர்களா?'' என்றான் சங்கர்.

''போட்டி - பந்தயம் இதெல்லாம் இருக்கட்டும் ஆனால் இந்தக் கதையில் ஒரு தத்துவம் இருக்கிறது; அதை கவனிக்க மறந்துவிடக் கூடாது!'' என்றான் பொன்னர்!

என்ன சொல்லப் போகிறான் என்று ஓடக்காரனுட்பட மூவ ரும் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

''மண் கரகம் வென்றது;! பொன் கரகம் தோற்று விட்டது! எளிமையாக இருந்தாலும் அடக்கமான இயல்பு என்றைக்கும் வெற்றி பெறும்! ஆனால் ஆடம்பரமும் அதனால் ஏற்படும் கர் வமும் என்றாவது ஒருநாள் தோல்வியடைந்தே தீரும்! என்ற தத் துவத்தைத்தான் இந்தக் கதை விளக்குவதாக நான் நினைக்கி றேன்'' என்றான் பொன்னர்.

அவனது நுட்பமான கருத்தைக் கேட்டு சங்கரும் வீரமலைச் சாம்புவனும் புளகாங்கிதம் அடைந்தனர் என்பதை அவர் களின் விழிகளில் தோன்றிய தகத்தகாயமான அந்த ஒளி எடுத் துக்காட்டியது. ஓடக்காரன் அந்தத் தத்துவத்தைப் பற்றிக் கவ லைப்படவில்லை. அன்றைய சம்பாத்தியம் எவ்வளவு என்பதை மடியைத் திறந்து கணக்கிட்டுக்கொண்டே ஓடத்தையும் செலுத் திக் கொண்டிருந்தான். ஓடம் செல்லாண்டியம்மன் கோயில் திருவிழாவை நெருங்கி விட்டது என்பதற்கான அறிகுறிகள் ஏராளமாகத் தெரிந்தன! பூக்களைக் கம்புகளில் சுற்றி ஆற்றங் கரையோரத்தில் உயர உயரமாக நட்டிருந்தார்கள். அந்தக் கோயிலைச் சுற்றி ஆற்றில் மிதந்து கொண்டிருந்த ஓடங்கள் எல் லாம் அலங்கரிக்கப்பட்டு கரையோரம் நின்றிருந்தன. அவற் றில் ஆடவர் பெண்டிர் அமர்ந்து திருவிழா வேடிக்கை பார்த் துக் கொண்டிருந்தனர். கரையில் பொய்க் குதிரையாட்டம் - சிலம்பாட்டம் - போன்ற ஆட்டங்களும் கூத்துக்களும்! பம்பை, உடுக்கு, போன்ற வாத்தியங்கள் செவிகள் செவிடுபட முழங்கிக் கொண்டிருந்தன. நாயனங்கள் தவில்கள் எண்ணற்றவை செல் லாண்டியம்மன் திருவிழாப் பந்தலில் ஒலித்துக் கொண்டிருந்தன.

ஓடக்காரனைப் பார்த்து சங்கர் கேட்டான்; ''ஏனய்யா; கரகம் விடுகிற திருவிழாவை எப்படி நடத்துவார்கள்?'' என்று!

''வருஷா வருஷம் புதுசு புதுசா இரண்டு பெண்கள் - முக் கியமாக குடும்பப் பெண்கள் - அதிலும் கன்னி கழியாத பெண் கள் - ஒருத்தி பெரிய காண்டி அம்மனாகவும், இன்னொருத்தி செல்லாண்டி அம்மனாகவும் அலங்காரம் செய்து கொண்டு ஆற்றில் இறங்கி, மண் கரகத்தையும் பொன் கரகத்தையும் போட்டிக்கு விடுவார்கள்'' என்று ஓடக்காரன் சொன்னதும்;

''அப்படியா? இவ்வளவு ஆழமான ஆற்றில் பெண்கள்

இறங்கி கரகம் விடுவதா?'' என்று வீரமலைச் சாம்புவன் வியப்பு தெரிவித்தான்.

''இல்லை - இல்லை - அவர்கள் தண்ணீரில் இறங்கமாட்டார் கள். சும்மா இறங்குவதுபோல் ஒரு பாவனை! ஆளுக்கு ஒரு ஓடத்தில் ஏறிக்கொள்வார்கள். அந்த ஓடங்களில் ஓடக்காரர் கள் இருக்கக் கூடாது. ஏன் என்றால் இப்போது அவர்கள் அம் பாளின் அருள் வந்தவர்கள் அல்லவா; அதனால் தனித்தனியே ஒவ்வொருவரும் ஒரு ஓடத்தில் கரகத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். போட்டி ஆரம்பமானதும் மண் கரகத் தையும் பொன் கரகத்தையும் இரண்டு பெண்களும் ஆற்றில் போடுவார்கள். அப்போது ஆற்றுக்குள் யாருக்கும் தெரியாமல் ஆண்கள் மூழ்கி மண்கரகத்தை மட்டும் வெளியே எடுத்துக் கொண்டு வருவார்கள்'' என்றான் ஓடக்காரன்!

''அப்படியானால், பொன் கரகம் ஆற்றுக்குள் கிடக்கும். அதை யார் வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போய் விடலாமா?'' என்றான் வீரமலைச் சாம்புவன்!

''ஓ! அய்யாவுக்கு ஆசைதான்! அதுதான் முடியாது! கதைப் படி செல்லாண்டியம்மன் வேண்டிக் கொண்டதும் பெரிய காண்டியம்மன், அந்தப் பொன் கரகத்தை வெளியே எடுத்துக் கொடுக்க வேண்டுமே!'' என்று கூறி கலகலவென சிரித்தான் ஓடக்காரன்! அவர்கள் வந்த ஓடம், திருவிழா நடக்கும் இடத் துக்கு வந்து விட்டது.

விழா தொடங்குவதற்கான இசை முழக்கம் - வாத்திய ஒலிகள் - வாணவெடிகள் - ''அம்பிகே! அம்பிகே!'' என்று பக்தர் களின் கோஷங்கள். இவற்றுக்கிடையே இரண்டு ஓடங்களில்; கைகளில் ஒருத்தி மண் கரகத்தையும், இன்னொருத்தி பொன் கரகத்தையும் தாங்கியபடி ஆற்றில் அன்னங்களைப்போல் அசைந்து வந்தனர். பெரியகாண்டியம்மன் போலவும் செல் லாண்டி அம்மன் போலவும் இருவரும் அலங்கரித்து வந்த காட்சி கண்டு, ஆற்றின் இருபுறம் குழுமியிருந்த விழாக் காண வந்திருந்த மக்கள் வாய் திறந்தவாறு அசைவற்றுப் போயினர். எத்தனையோ ஆண்டு இந்தத் திருவிழா பார்க்க வந்திருக்கிறோம்; எந்த ஆண்டிலும் இப்படிப்பட்ட பேரழகிகள் பெரிய காண்டி யாகவும், செல்லாண்டியாகவும் சிங்காரித்துக் கொண்டு வந்த தேயில்லை என்று பேசிய மக்கள் கூட்டத்தில்; ''ஆமாம், யார் இந்த தேவதைகள்?'' என்ற கேள்வியும் எழுந்தது.

அதே கேள்வியை வீரமலைச் சாம்புவனும் ஓடக்காரனைப் பார்த்துக் கேட்டான். ஓடக்காரன் கொஞ்சம் யோசித்து; பிறகு திடீரென நினைவு வந்தவனாகப் பதில் சொன்னான்.

''மணியங்குரிச்சி மலைக்கொழுந்தாக் கவுண்டருடைய பேத்திகள். அவர்தான் இப்போது உயிரோடு இல்லையே; இந்தப் பெண்கள் இருவரும் சின்னமலைக்கொழுந்தாக் கவுண்டரின் மகள்கள்,''

ஓடக்காரன் இந்தப் பதிலை சொல்லி முடிப்பதற்குள் அந்தப் பகுதியிலுள்ள மரங்களையெல்லாம் பெயர்த்தெடுத்துக் கொண்டு போவதற்காக ஆவேச தாண்டவமாடிக் கொண்டு வந்தது போல ஒரு சூறைக் காற்று வீசியது!

திருவிழாக் கூட்டத்தில் குய்யோ முறையோ எனப் பேரிரைச்சல்! ஆற்றோரம் மிதந்து கொண்டிருந்த ஓடங்கள் பல கவிழ்ந்து - அவற்றில் இருந்தோர் ஆற்றில் விழுந்து தவித்தனர்! பொன்னர் - சங்கர் வந்த ஓடமும் பெருஞ்சுழலில் தத்தளித்தது. தத்தளித்த வேகத்தில் அதனைத் தடுத்துத் தூக்கிப் பிடிக்காவிட்டால் கவிழ்ந்து விடுமென்பதற்காக, சட்டென்று தண்ணீரில் குதித்து வீரமலைச் சாம்புவன் ஓடத்தை நியிர்த்தி நிறுத்தினான். அந்தப் பரபரப்பில் ஓடக்காரன் ஆற்றுக்குள் விழுந்து, நீச்சலடித்துக் கொண்டிருந்தான்.

பொன்னர்-சங்கர் மட்டுமே ஓடத்தில் இருந்தனர். அவர்கள் கண்ணெதிரே ஒரு பயங்கரம். பெரியகாண்டி அம்மனாகவும், செல்லாண்டி அம்மனாகவும் அமர்ந்திருந்த அந்தப் பெண்களின் ஓடங்கள் இரண்டும் காற்றடித்த வேகத்தில் நிலை தடுமாறி ஆற்றோடு போய்க் கொண்டிருந்தன. அந்த ஓடங்களை நோக்கிப் பொன்னர் - சங்கர் தங்கள் ஓடத்தை வேகமாகச் செலுத்தினர்.



# மணியங்குறிச்சி நோக்கி மாவீரர்கள்

9

''முத்தாயி! பவளாயி!'' என்று அலறியடித்துக் கொண்டு நடுத்தர வயதுப் பெண்மணியொருத்தி காவிரிக் கரையில் அந்த சூறைக் காற்றையும் பொருட்படுத்தாமல் ஓடிக் கொண் டிருந்தாள். அவளைத் தொடர்ந்து கூச்சலிட்டுக் கொண்டு கரையோரமாக சின்னமலைக்கொழுந்து ஓடிக்கொண்டிருந் தார். அவர்களிருவரின் பரபரப்பையும், கதறலையும் காண் போர்; ஓடத்துடன் நதியில் அடித்துச் செல்லப்படுபவர்கள் முத்தாயி, பவளாயி என்ற பெயருடையோர் என்பதையும் அவர்களின் தாய் தந்தையரே சின்ன மலைக்கொழுந்தும் அவ ருக்கு முன் பறந்தோடி வரும் அந்தப் பெண்மணி சிலம்பாயி. என்பதையும் - எளிதாகவே புரிந்து கொள்வர்.

கரை புரண்டோடும் வெள்ளம் - அத்துடன் சூறாவளிக் காற்றும் சேர்ந்து கொண்டதால் முத்தாயி, பவளாயி இருவரு மிருந்த ஓடங்கள் வெகுவேகமாகக் காவிரியில் கிழக்கு நோக் கிப் போய்க் கொண்டிருந்தன. பெரிய காண்டியம்மனாகவும் - செல்லாண்டியம்மனாகவும் அலங்கரித்துக் கொண்டிருந்த கார ணத்தாலோ என்னவோ; அந்தப் பெண்மணிகள் பதட்டமடை யாமல், நடப்பது நடக்கட்டும் என்ற நினைவுடன் அமைதியாக, அசைவற்று ஓடங்களில் உட்கார்ந்திருந்தனர். மண் கரகத்தை யும் பொன்கரகத்தையும் ஏந்தி; பக்திப் பிரவாகமுடன் ஓடத் தில் ஏறியமர்ந்தது போலவே; சூறாவளியில் ஓடங்கள் அடித் துச் செல்லப்படும் போதும் அவர்கள் விழிகளை மூடியவாறு வீற்றிருந்தனர்.

பொன்னரும் சங்கரும் தாங்கள் இருந்த ஓடத்தைத் தங்கள் கைகளைத் துடுப்பாக்கி செலுத்திக் கொண்டு; தங்களுக்கு முன்னால் சுழன்று சுழன்று செல்லும் முத்தாயி - பவளாயி ஓடங்களைப் பிடிக்க மிக வேகமாக முயன்று பார்த்தனர்.

ஒரு சமயத்தில் முத்தாயி பவளாயி இருவரின் ஓடங்களும் காற்றின் வேகத்தில் ஆற்றின் கரையொதுங்குவது போல் சென்றன. அப்போது அந்தக் கரையருகே வந்துவிட்ட அவர்களின் பெற்றோர்; கரையில் ஒரு கால் ஆற்று நீரில் ஒரு கால் வைத்தவாறு, ''அய்யோ! மகளே! மகளே!'' என்று கூவியழுது கொண்டு ஓடங்களை நெருங்கினர். ஆனால் கண் மூடிக் கண் திறப்பதற்குள் கரையோரத்திலிருந்த ஒரு பெரிய மரத்தை சூறைக்காற்று பெயர்த்துக் கீழே தள்ளியது. பலத்த ஒலியுடன் முறிந்து விழுந்த அந்த மரம் பெற்றோர்களுக்கும் முத்தாயி - பவளாயி இருந்த ஓடங்களுக்கும் நடுவிலே சாய்ந்து விட்டது. ஒரு நூலிழை தவறியிருந்தால் ஓடங்கள் இரண்டும் சிதறிப் போய், அந்த அழகிய இளம்பெண்களும் ஆற்றில் பிணமாக மிதந்திருப்பர். மரம் விழுந்த வேகத்தில் ஆற்றுத் தண்ணீர் மேலெழுந்து ஓடங்கள் இரண்டும் தத்தளித்து மீண்டும் நட்டாற்றில்; காப்பாற்றுவதற்கு யாருமின்றி சுழன்றோடத் தொடங்கின.

தங்களின் செல்வங்களை காற்றுக்கும் காவிரிக்கும் பலி கொடுத்து விட்டதாகவே கருதி சின்னமலைக் கொழுந்தும் அவரது மனைவியும் தலையில் அடித்துக் கொண்டு அழுதார்கள். கரையோரத்தில் தாய் தந்தையர் தவியாய்த் தவிப்பதையும் அவர்களைச் சுற்றி பெருங்கூட்டம் கூடியிருப்பதையும் பார்த்த முத்தாயியும், பவளாயியும் தங்கள் கைகளை அசைத்து அவர்களைப் பதட்டமில்லாமல் இருக்குமாறு கேட்டுக் கொண்டனர். தங்களை நோக்கி ஒரு ஓடத்தில் இரண்டு வாலிபர்கள் வேகமாக விரைந்து வருவதையும் அவர்கள் கண்டனர்.

கொந்தளிக்கும் கடலையும் மிஞ்சி காவிரியின் அலைகள் மேலே உயர்ந்து எல்லாப் படகுகளையும் எங்கேயோ தூக்கி யெறிந்து மோதி உடைப்பதற்குத் தயாராகி விட்டதைப் போல் காற்றின் சுழற்சி மூர்க்கத்தனமாக ஆட்டம் போட்ட அந்தச் சூழலில் பொன்னர் - சங்கர் ஏறி வந்த படகு, எதிர்நீச்சல் போட்டு அந்தச் சூறையோடு போராடி முத்தாயி - பவளாயியின் படகுகளைத் தடுத்து நிறுத்த வலப்புறம், இடப்புறம், எதிர்ப்புறமென அலைந்து பார்த்து அலுத்துப் போய் விட்டது. தங்கள் படகுகளைப் பின் தொடர்ந்தும் சுற்றி வளைத்தும் வருகிற அந்தப் படகில் இருப்போர் இருவரும் தங்களுக்கு மேலும் ஏதாவது ஆபத்து விளைவிக்க வருகிறார்களோ என்ற ஐயப்பாடும் அச்சமும் கொண்டவர்களாக முத்தாயி - பவளாயி காணப்பட்டனர்.

அவர்கள் அவ்வாறு எண்ணி பயந்து போய்விடக் கூடாது

எனக் கருதியவர்களாகப் பொன்னரும் சங்கரும் அவர்களைப் பார்த்து, ''பயப்படாதீர்கள்! பயப்படாதீர்கள்! என்று உரக்கக் கத்தினார்கள். சூறைக் காற்றின் ஆவேச மூச்சின் பேரிரைச்ச லில் அவர்களது கூச்சல் அந்தப் பெண்மணிகளின் காதிலே விழுந்த காரணத்தால் அவர்கள் தாங்களிருந்த படகுகளை இன்னும் கொஞ்சம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அவற்றி லிருந்து ஆற்றில் விழுந்து விடாமல் பார்த்துக் கொண்டனர்.

ஓடத்தில் சென்று அந்தப் பெண்களைக் காப்பாற்ற முடி யாது என்ற முடிவுக்கு வந்து விட்ட பொன்னர் - சங்கர் இரு வரும் - ஓடத்திலிருந்து குதித்து நீச்சலடித்தனர். நீந்திச் சென்றே அந்த ஓடங்களை இருவரும் பிடித்து நிறுத்தி அந்தப் பெண் களைக் காப்பாற்றலாமென நினைத்தனர். என்னதான் கஷ்டப் பட்டு இருவரும் நீந்தினாலும் கூட; அந்த ஓடங்களை மறித்து நிறுத்துவது அவ்வளவு எளிதான செயலாகத் தோன்றவில்லை!

அதற்காக அவர்கள் பின்வாங்கிடப் போவதில்லை! வீரத் திற்கு மட்டுமல்லாமல் ஈரத்திற்கும் நிரம்ப இடமுடைய நெஞ் சங்களுக்குத் தாங்கள் சொந்தக்காரர்கள் என்பதை நிரூபிப்பது போலப் பொன்னரும் சங்கரும் நீந்திக் கொண்டிருந்தார்கள்.

''அந்த வாலிபர்கள் தங்கள் பெண்களிருவரையும் காப் பாற்றி விடுவார்களா?'' என்ற துடிப்போடு வைத்த விழி வாங்காமல் சின்ன மலைக்கொழுந்தும் சிலம்பாயியும் கரை யோரம் ஓடிக் கொண்டேயிருந்தனர். இதற்கிடையே வீரமலைச் சாம்புவன் நீந்திக் கரையேறி அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டு ஆற்றில் நடக்கும் அல்லோலகல்லோலத்தைப் பார்த் துக் கொண்டே ஓடிக் கொண்டிருந்தான்.

திருவிழா காண வந்திருந்த மாந்தியப்பன் வழக்கம்போல் கையிலே ஒரு வேலுடன் களம் புகும் வீரனைப் போல் போர் உடைகளை அணிந்து கொண்டு அந்தப் பரபரப்பான இடத் திற்கு வந்து சேர்ந்தான்.

தாமரைநாச்சியாரை மணக்க வந்து ஏமாற்றத்துடன் திரும் பிய அவனுக்கு - இப்போது தாமரைநாச்சியாரின் பிள்ளை களான பொன்னர் சங்கர் இருவரும்; தாமரைநாச்சியின் அண் ணனின் பெண்களைக் காப்பாற்றத் துடிக்கிறார்கள் என்பதே தெரியாது! ஏன்; பொன்னர் - சங்கருக்கே கூட; தாங்கள் தாமரைநாச்சியின் மக்கள் என்பதும் அதன் தொடர்பான விவரம் எதுவும் தெரியாது!

தாமரைநாச்சியை மணக்க, மணக் கோலத்துடன் வந்தபோது மாந்தியப்பனிடம் காணப்பட்ட இளமை குறுகுறுப்பு இப்போது இல்லாவிட்டாலும் - நல்ல முறுக்கேறிய கட்டுக்கோப்பான உடலுடனும், அடர்த்தியான மீசையுடனும், கம்பீரமான தோற்றத்துடனும் அவன் விளங்கினான்.

நெல்லி வளநாட்டு எல்லைக் காவல் ஆட்சித் தலைவர் செல்லாத்தாக் கவுண்டரின் மகன் இளவரசன் மாந்தியப்பன் அந்த இடத்துக்கு வந்ததுமே; அவனுக்கு வழிவிட்டுக் கூட்டத்தினர் ஒதுங்கி நின்றனர்.

மாந்தியப்பனைக் கண்டதும் சின்னமலைக்கொழுந்து கண் கலங்கினார். என் பெண்களைக் காப்பாற்றுங்கள் என்பது போல அவரது உதடுகள் நடுங்கின! தன் தங்கை தாமரை நாச்சியாரை மாந்தியப்பனுக்கு மணம் செய்து வைக்காத கோபம் இன்னமும் அவனுக்கு இருக்குமோ என்ற சந்தேகமும் சின்ன மலைக்கொழுந்துக்கு இல்லாமல் இல்லை.

மலைக்கொழுந்தாக் கவுண்டருக்குப் பிறகு பெருமாயி அம்மாளும் காலமாகி விடவே மணியங்குரிச்சியின் காணியாளர் பொறுப்பை சின்னமலைக்கொழுந்து ஏற்றுக் கொண்டு ஆரிச்சம்பட்டியெனும் மணியங்குரிச்சிப் பகுதியில் தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்தியிருந்தார். தாய் தந்தையர் - உயிருடனிருக்கும் போதே சின்னமலைக்கொழுந்துக்கும் சிலம்பாயிக்கும் திருமணமாகி விட்டது. மணவிழா முடிந்த நாலைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே முத்தாயி, பவளாயி என்ற பெண் குழந்தைகளுக்கும், வையம்பெருமான் என்ற ஆண் மகவுக்கும் சின்னமலைக் கொழுந்தும் சிலம்பாயியும் தாய் தந்தையாயினர். பின்னர் சின்ன மலைக்கொழுந்தின் பெற்றோர் ஒருவர் பின் ஒருவராக மரணத்தைத் தழுவினர்.

ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சியில் நடைபெற்ற நல்லவை கெட்டவை எதற்குமே தாமரைநாச்சியோ அல்லது அவளது கணவனோ அழைக்கப்படவில்லை. மதியாதார் தலைவாசல் மிதியாமை கோடி பெறும் என்ற மொழிக்கொப்ப தாமரையும்; தான் பிறந்த வீட்டைத் திரும்பிப் பார்க்கவில்லை!

ஆனால் இப்போது காவிரியாற்றில் ஓடங்களில் தவித்துக் கொண்டிருக்கும் தனது அண்ணன் பெண்களைக் காப்பாற்றத் தனது மக்கள் இருவரும்தான் முயற்சி செய்கிறார்கள் என்பதும் தாமரைக்குத் தெரியாது! தாமரையாள் ஈன்றெடுத்த தவப்

புதல்வர்கள்தான் தாங்கள் என்பதும் பொன்னர் சங்கருக்குத் தெரியாது.

காவிரியாற்றில் உயிர்ச் சிலைகள் இரண்டு மூழ்கிச் செத்து விடக்கூடாதேயென்ற ஆதங்கத்திற்கு ஆட்பட்டு அந்த வீரர்கள் இருவரும் காற்றுடனும் - காவிரிப் பெருக்குடனும் போரிட்டுக் கொண்டே முத்தாயி - பவளாயியின் ஓடங்களை நோக்கி முன்னேறினர்.

''பொடிப்பயல்கள்! இவர்களால் என்ன முடியும்?'' என்று அவர்களை யாரென்றே அறியாமல் மாந்தியப்பன் அசட்டுச் சிரிப்பொன்றை அவிழ்த்தான்.

மாந்தியப்பன் அப்படிச் சொல்லி வாய் மூடுவதற்குள் பொன்னர், முத்தாயி அமர்ந்திருந்த ஓடத்திற்கு முன் சென்று அதைத் தடுத்து நிறுத்தி விட்டான். அண்ணனைப் பின்பற்றி சங்கரும் நீச்சலடித்துப் பெரும் சுழல் ஒன்றில் சிக்கி மீண்டு; பவளாயி அமர்ந்திருந்த ஓடத்திற்கு முன் சென்று அதையும் தடுத்து நிறுத்தி விட்டான்.

ஓடத்திலிருப்பவர்கள் பெண்கள் என்பதால் இரு வாலிபர்களும் ஓடத்திலேறுவது முறையல்ல எனக் கருதி; நீந்திக் கொண்டே ஓடங்களைக் கரைப் பக்கமாக மெதுவாகத் தள்ளி வந்தனர்.

பொன்னர் தள்ளி வந்த முத்தாயியின் ஓடம், கரையோரம் வந்தபோது ஆற்றங்கரையில் வேர்விட்டு ஆற்றை நோக்கிக் கிளைகளைப் பரப்பிக் கொண்டிருந்த ஆலமரம் ஒன்றில் விழுதுகளோடு விழுதாய் தொங்கிக் கொண்டிருந்த மலைப்பாம்பு ஒன்று பொன்னர் உடலைச் சுற்றி வளைத்துக் கொண்டது. பொன்னரோ ஓடத்தையும் விட்டு விட முடியாது. அதைக் கொண்டு வந்து கரை சேர்க்க நீந்தியாக வேண்டும். இதற்கிடையே மலைப்பாம்புடனும் போரிட்டாக வேண்டும். பொன்னர் சளைக்கவில்லை. ஒரு கையால் ஓடத்தைப் பிடித்துக் கொண்டான். ஒரு கையால் மலைப்பாம்புடன் சண்டை போட்டான். கால்களோ நீச்சலடித்துக் கொண்டிருந்தன. மலைப்பாம்பு, பொன்னரின் மேனி முழுவதையும் சுற்றி வளைத்துக் கொண்டது. முத்தாயி அது கண்டு அஞ்சி நடுங்கினாள்.

நீண்டு கொழுத்த அந்தப் பாம்பு தனது அகன்ற வாய்க்குள் பொன்னரைத் தள்ளிக் கொள்ள உடல் முழுவதையும் வளைத்து,

அவனைச் சுற்றிக் கொண்டு வாயைப் பிளந்து வைத்தவாறு போராடியது. பொன்னரோ அந்தப் பாம்பின் தலைப்புறம் தனது தலைக்கருகே வராமல் தடுத்துக் கொள்வதிலும் - அதே சமயம் அதன் வழுவழுப்பான - ஆனால் வலுவான உடலால், தனது உடல் வளைக்கப்பட்டு விடக் கூடாது என்பதிலும் மிகக் கவனமாக இருந்து எதிர்ப் போராட்டம் நடத்தினான். முத் தாயி அமர்ந்திருந்த ஓடமும் ஆற்றில் நிலை குலைந்து போய் விடாமல் பாதுகாத்துக் கொண்டு என்னதான் முழு சக்தியை யும் அவன் பயன்படுத்தினாலும் அந்த மலைப்பாம்பின் அழுத்த மானதும் இறுக்கமானதுமான பிடியிலிருந்து அவனால் விடு வித்துக் கொள்ள முடியவில்லை. ஒரு கட்டத்தில் மலைப் பாம்பு அவனது கழுத்தையும் சேர்த்து வளைத்துக் கொண்டு வாயைப் பெருங்குகைபோலத் திறந்து கொண்டு அவனது முகத்தை விழுங்க எத்தனித்த போது - அதைக் கண்டு முத் தாயி; அலறியவண்ணம் ஓடத்துக்குள்ளேயே மயங்கி விழுந்து விட்டாள். அந்த நேரம் கரையில் நின்ற வீரமலைச் சாம்புவன் தனது கையிலிருந்த கட்டாரியை மலைப்பாம்பின் தலைக்குக் குறிபார்த்து எறிந்தான். கட்டாரியின் கூர்மையும், அது வந்த வேகமும் - மலைப்பாம்பை படபடக்கச் செய்து; அதன் வலிய பிடியிலிருந்து பொன்னரை விடுவிக்கச் செய்தது. பொன்னர், முத்தாயியின் ஓடத்தைக் கரை சேர்க்க மறுபடியும் நீந்த ஆரம்பித்த போது மற்றொரு ஆபத்து சங்கருக்கு காத் திருந்தது.

பவளாயியின் ஓடத்தைத் தள்ளியவாறு நீந்தி வந்த சங்க ரின் கால்களிரண்டையும் ஒரு அகன்ற வாய் கவ்வியது! சங்கர் தனது கால்களை உதறினான். விடுபட்ட கால்களிலிருந்து பீறிட்ட ரத்தம், காவிரி நதியைச் சிவப்பாக்கியது. முதலை யொன்றின் பிடியில் சங்கர் சிக்கி விட்டான். அந்தக் காட்சி யைக் கண்ட பவளாயியும் மயக்கமுற்றவளாக ஓடத்தில் சாய்ந் தாள். சங்கர், ஓடத்தை விடவில்லை. கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். முதலையுடன் போரிட்டான். நீருக்குள் இருக்கும் முதலை அதிகாரப் பதவியிலிருக்கும் மூர்க்கனைப் போல வெறியுடன் எதிர்க்கக் கூடியது அல்லவா? அதனால் சங்கரின் உயிருக்கு ஆபத்து நெருங்கி விட்டதைப் போலவே இருந்தது.

ஓடத்தை, சங்கர் ஒருகணம் விட்டு விட்டு அந்தக் கண நேர இடைவேளையில் முதலையை ஓங்கி அதன் வயிற்றுப் பாகத்தில் குத்துவதும் - முதலை, உடனே தண்ணீரில் ஒரு தரம் புரண்டெழுந்து மீண்டும் அவன் மீது பாய்ந்து தாக்குவது மான வெறியுணர்வுடன் போரிட்டது. ஆற்றின் நடுவே செங்

முத்தாகக் காணப்பட்ட ஒரு பாறையின் இடுக்கில் பவளாயி யின் ஓடம் சிக்கிக் கொண்ட போது, சங்கர் - சற்று நேரம் அந்த ஓடம் பாதுகாப்பாக இருக்கட்டுமென விட்டு விட்டு முதலையுடன் நீரில் கட்டிப் புரண்டு சண்டையிட்டான். அப் போது கொட்டிக் கொண்டிருந்த அவனது குருதியின் செந் நிறம் காவிரியின் ஒரு பகுதியை ஆக்ரமித்துக் கொண்டது. பாறையில் பாதுகாப்பாக சிக்கிய அந்த ஓடம், ஓரிரு விநாடி களில் காற்றின் வேகத்தில் விடுபட்டு அலைகளில் மோதித் தத்தளிக்கவே, சங்கர், முதலையை விட்டு விட்டு ஓடத்தைப் போய்ப் பிடித்துக் கொண்டான். சங்கரின் தாக்குதலால் சோர்ந்து போன முதலை, இதுதான் சமயமென அவன் மீது பாய்ந்து தனது கால்களால் அவனைப் பற்றிக் கொள்ளத் தயாரானது. அப்படியே பற்றியும் விட்டது. அடுத்ததாக முத லையின் வாய்க்குள் சங்கரின் உடல் சிக்கிக் கொள்ளப் போகும் போது, சங்கர் அதைத் தவிர்த்து விட்டு முதலையுடன் கடுமை யாகப் போரிட்டான்.

சிறிது நேரத்தில் அந்தச் சண்டை முடிந்து விடக் கூடும்; சங்கர் பிணமாக மிதக்கக் கூடும் என்ற பயங்கரமான சூழலில் வீரமலைச் சாம்புவன் மின்னல் போலப் பாய்ந்து, மாந்தி யப்பன் கையிலேயிருந்த வேலைப் பிடுங்கி முதலையைக் குறி பார்த்து வீசினான்.

வேல்பட்ட முதலை, சங்கருடன் மோதும் ஆற்றலை இழந்து சுருண்டு விட்டது. சங்கர் பவளாயியைக் கொண்டு வந்து கரை சேர்த்தான்.

சின்னமலைக்கொழுந்து பொன்னரையும் சங்கரையும் கட் டித் தழுவிக் கொண்டு, ''தம்பிகளே! நீங்கள் இல்லாவிட்டால் என் செல்வங்களை இழந்திருப்பேன்'' என்று ஆனந்தக் கண் ணீர் வடித்தார். அவரது மனைவி சிலம்பாயியும் மகன் வையம் பெருமானும் முத்தாயி, பவளாயி இருவரையும் மயக்க நிலை யிலிருந்து மீட்டு அருகில் உள்ள ஒரு சிறிய மண்டபத்திற்குக் கொண்டு சென்றனர். சின்னமலைக்கொழுந்து பொன்னர் - சங்கர் இருவரையும் பாராட்டியதோடு, வீரமலைச் சாம்பு வனையும் பெரிதும் புகழ்ந்தார்.

''தம்பி! நீங்கள் மட்டும் மலைப்பாம்பையும் முதலையையும் கொல்லாவிட்டால் என்ன ஆகியிருக்கும்?'' என்று வியப் படைந்தார். வீரமலைச் சாம்புவனைத் தட்டிக் கொடுத்தார்.

மாந்தியப்பனுக்கு ஆத்திரம் கொப்பளித்தது.

''யார் யாரையோ பாராட்டுகிறீர்கள்? என் கையில் இருந்த வேலைப் பிடுங்கித்தானே இவன் முதலையைக் கொன்றான்! அந்த வேல் மட்டும் இல்லாவிட்டால் முதலை செத்திருக்குமா? என்னால்தான் இந்தப் பொடியன் பிழைத்தான்!'' என்று மீசையை முறுக்கிக் காட்டினான் மாந்தியப்பன்.

''விர்''ரென்று அடித்துக் கொண்டிருந்த சூறைக்காற்று மெல்ல மெல்ல நின்றது. சின்னமலைக்கொழுந்து; பொன்னர், சங்கர், வீரமலைச் சாம்புவன் மூவரையும் பார்த்து, ''தம்பிகளே! உங்கள் பெயர் என்ன? நீங்கள் யார்?'' என்று அன்பொழுகக் கேட்டார். மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். சங்கரின் கால்களில் முதலையின் கடியினால் ஏற்பட்ட காயத்துக்கு சிகிச்சை செய்ய வேண்டுமென்று பறந்தான் பொன்னர்! அவனைப் போலவே வீரமலைச் சாம்புவனும் பறந்தான்!

''கவலையே வேண்டாம். எங்கள் ஆரிச்சம்பட்டி மணியங் குரிச்சியில் அற்புதமான மருத்துவர் இருக்கிறார். அங்கே போய் சிகிச்சை செய்து கொள்ளலாம்'' என்றார் சின்ன மலைக்கொழுந்து!

''பிரார்த்தனை செய்து கொண்டபடி கரகம் விடும் திரு விழாவை நடத்தி விட வேண்டாமா? பிறகு அம்பாள் கோபத் துக்கு ஆளாக நேரும்!'' என்று கலங்கினாள் சின்னமலைக் கொழுந்தின் மனைவி சிலம்பாயி.

''நீயும் வையம்பெருமானும்; முத்தாயி - பவளாயியை அழைத்துப் போய் ஆற்றங்கரையில் நின்றபடி கரகங்களை விட்டு விட்டு அம்பாளை வணங்கி வாருங்கள். நான் இவர் களை நமது ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சி மாளிகைக்கு அழைத்துப் போகிறேன்'' என்றார் சின்னமலைக் கொழுந்து.

சங்கரைக் கைத்தாங்கலாகப் பொன்னர் அழைத்துக் கொண்டு கிளம்பினான். வீரமலைச் சாம்புவனும் அவர்களுடன் புறப் பட்டான். சின்னமலைக்கொழுந்து; தனது ஆட்களைக் கூப் பிட்டு ரத வண்டியைச் சீக்கிரம் கொண்டு வாருங்கள் என்று கட்டளையிட்டார். வண்டிகள் வந்து நின்றன. சின்னமலைக் கொழுந்து அந்த மூன்று வாலிபர்களையும் ஒரு வண்டியில் ஏற்றி விட்டு, அவர் இன்னொரு வண்டியில் ஏறப் போகும்

போது மாந்தியப்பனின் அருகில் சென்று மரியாதையுடன் வணக்கம் தெரிவித்தார். அவனோ மமதையின் வடிவமாக அவருக்கு விடை கொடுத்தனுப்பினான்.

தாயாருடனும் தனயனுடனும் செல்லாண்டியம்மன் கோயிலுக்குப் புறப்பட்ட முத்தாயி, பவளாயி இருவரும் பொன்னர் - சங்கர் ஏறிச் சென்ற வண்டியைப் பார்த்தனர்.

செல்லாண்டியம்மன் கோயிலுக்குத் திரும்பிக் கொண்டிருந்த அந்தப் பெண்களின் பின்னழகைக் கண்டு மயங்கிய நிலையில் தன்னை மறந்த மாந்தியப்பன் ஒருக்கணம் அசைவற்றுப் போனான்.

பின்னர் அசைந்தான்! அந்த அசைவு அந்த அழகு மயில்களைப் பின் தொடர்வதற்கான நடையின் அசைவாக இருந்தது! தொடர்ந்தான்!

தாயாருடனும் தனயனுடனும் ரத வண்டியில் செல்லாண்டி கோயிலுக்கு வந்த முத்தாயி பவளாயியை அங்கே குழுமியிருந்த - பெரியோர்களும் பெருமாட்டிகளும் உச்சிமோந்து வாழ்த்தி திருஷ்டி கழித்தனர்.

''சாஸ்திரத்துக்கு கரகம் விட்டால் போதும் அம்மா! ஆற்றில் மறுபடியும் ஓடத்தில் போக வேண்டாம். அம்மன் சன்னதிக்கு நேராக ஆற்றங்கரையில் நின்றபடி கரகம் விடுங்கள்'' என்று கோயில் பூசாரியாரும் கூட அறிவுரை கூறினார்.

அவர்களும் அவ்வாறே செய்தனர். அம்பாளுக்கு தீபாராதனை முடிந்து அனைவருக்கும் குங்குமம் வழங்கப்பட்டது. முத்தாயி, பவளாயி இருவரும் தங்களின் அம்மன் அலங்காரங்களைக் களைந்தனர்.

அலங்காரம் அதிகமில்லாமலும் அவர்கள் அழகின் பிம்பங்களாக இருப்பதை ஒரு தூணின் மறைவிலிருந்து ரசித்துக் கொண்டிருந்தான் மாந்தியப்பன்.

# 10

# அர்ச்சனை யார் பெயருக்கு?

கரகம் விடும் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காகக் காலையிலிருந்து பட்டினி விரதம் கண்டப்பிடித்த முத்தாயி, பவளாயி இருவரும்; சூறைக்காற்றின் கொடுமையால் ஆற்றில் அனுபவித்த துன்பமும் சேர்ந்து கொள்ளவே மிகவும் துவண்டு போயிருந்தனர்.

அருமை மகள்கள் இருவரும் தப்பிப் பிழைத்தது அம்மனின் கருணையால்தான் என்று முழுமையாக நம்பிய சிலம்பாயி, செல்லாண்டியம்மன் கர்ப்பக்கிரகத்தைச் சுற்றி வந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்க விழுந்து கும்பிட்டாள்.

செல்ல மகள் இருவருக்கும் இனிமையானதும் வளமானதுமான வாழ்க்கை அமைய வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொள்ள கரகம் விடும் விழாவுக்கு வந்ததில்; தன் மகள்களுக்கு இருந்த பயங்கரமான கண்டம் விலகிவிட்டது என்றும் சிலம்பாயி பூரித்துப் போனாள்.

மாவிளக்கு ஏற்றிவைத்து சிலம்பாயி, முத்தாயி, பவளாயி மூவரும் கண்களை மூடியவண்ணம் செல்லாண்டியம்மனின் மூல விக்ரகத்துக்கு எதிரே நின்றனர்.

புயலுக்குப் பின் ஏற்பட்ட அமைதி காவிரிக்கரையிலே மட்டுமல்ல; அவர்களின் உள்ளத்திலும் குடிகொண்டிருந்தது. அந்த அமைதி தந்த மென்மையான சுகத்துடன் அம்மனை வழிபட்டது அவர்களின் இதயங்களுக்கு இதமாக இருந்தது.

விழாக் காண வந்திருந்த பலரும் குடும்பம் குடும்பமாகக் கூடி ஆங்காங்கு மாவிளக்குகளை ஏற்றி வைத்து அம்மன் சன்னதியில் மெய்மறந்து கும்பிட்டு வழிபாடு நடத்திக் கொண்டிருந்தனர்.

ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சியார் வீட்டுப் பெண்மணிகள் என்பதால் கோயில் பூசாரியார் மெத்த மரியாதையுடன் அருகே வந்து சிலம்பாயியைப் பார்த்து வணக்கம் தெரிவித்து விட்டு, ''அம்மணி! அம்பாளுக்கு ஏதும் அர்ச்சனை பண்ண வேண்டு மென்றால் அடியேன் தயாராயிருக்கிறேன்'' என்றார்.

''அர்ச்சனைக்கான எல்லா சாமான்களும் கொண்டு வந் திருக்கிறோம்'' என்று புன்னகை ததும்ப விடையளித்த சிலம் பாயி, பக்கத்திலிருந்த வெள்ளிக்கூடையொன்றைக் காட்டினாள்.

''அப்படியா?'' என்று மேலும் வணக்கத்துடன் கேட்டுக் கொண்டே பூசாரியார் அந்த வெள்ளிக்கூடையைக் கையில் எடுத்தார். அதில் நாலைந்து தேங்காய்கள், நிறைய வெற் றிலை, பாக்கு, பூச்சரங்கள், பழங்கள் இருந்தன.

''அம்மணி! யார் பேருக்கு அர்ச்சனை?'' என்று பூசாரி, பவ்யமாகக் கேட்கவே; சிலம்பாயி ''முத்தாயி, பவளாயி இரண்டு பெண் பேருக்கும் - வையம்பெருமான்; அதாவது என்பிள்ளை பேருக்கும் பண்ணுங்கள்'' என்றாள்.

அப்போது வையம்பெருமான் அங்கில்லை. அவன் ரதவண் டியின் அருகேயிருந்து குதிரைகளுக்குத் தீனி போடச் சொல்லி, அவற்றைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

தன் மகள்கள் பெயருக்கும் மகன் பெயருக்கும் அர்ச்சனை செய்யுங்கள் என சிலம்பாயி சொல்லி முடிப்பதற்குள்ளாக முத்தாயி குறுக்கிட்டு;

''ஏம்மா, என்னைக்காப்பாற்றினாரே ஒருவர்; அவர் பெய ருக்கு அம்மனுக்கு ஓர் அர்ச்சனை பண்ணலாமே! என்றாள்.

சிலம்பாயியின் முகத்தில ஆச்சரியக்குறி மின்னலிட்டு எழுந் தது. இருந்தாலும் அவள் தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டு; தன் மகள் ஒன்றும் தவறாக அப்படிச் சொல்லி யிருக்க மாட்டாள் என்ற உறுதியோடு; அந்த வாலிபனுக்கு நன்றி காட்டுவது முறைதானே என்ற எண்ணமுடன் பவளாயி யைப் பார்த்து, ''உன் அக்காள் சொல்வதைப் பார்த்தாயா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள். அதையே தானும் சொல்ல நினைத்திருந்த பவளாயி, ''ஆமாம் அம்மா! நான் கூட சொல்ல வேண்டுமென்று நினைத்திருந்தேன். என் ஓடம் கவிழாமல் காப்பாற்றி, எனக்காக முதலையிடமும் கடிபட்டாரே;

அவர் பெயருக்குக் கூட ஒரு அர்ச்சனை செய்ய வேண்டும் அம்மா!'' என்றாள்.

சிலம்பாயியின் விழிகள் அவளது இமைகளுக்கு வெளியே பிதுங்கி, கூட்டுக்குள்ளிருந்தவாறு தாய்ப்பறவையின் வரவு பார்க்கும் குருவிகளின் தலைகளைப் போல அங்குமிங்கும் சுழன்று அலைந்தன. அதற்காக அவளது முகமொன்றும் சிவந்து விடவில்லை. பற்களால் உதடுகளை அழுத்திக்கொண்டு சிலம் பாயி, மகள்களிருவரையும் பார்த்தாள் என்றாலும்கூட, அந் தப் பார்வையில் கோபத்தின் வீச்சு இல்லை.

தான் பெற்றெடுத்த தங்கங்கள் இருவருமே நன்றியுணர் வோடுதான் அந்த வாலிபர்கள் பெயரால் அம்மனுக்கு அர்ச் சனை செய்யச் சொல்லுகிறார்கள் என ஏன் கருதக் கூடாது என்ற நினைவலைகளும் சிலம்பாயியின் நெஞ்சத்தை வருடிக் கொண்டிருந்ததால்;

''அடடே! அந்தப் பிள்ளையாண்டான்கள் பெயர் தெரிய வில்லையே!'' என்று, தன் மகள்களைப் பார்த்துச் சொன் னாள். ''அப்பாவோ யாரோ அவர்களைக் கேட்டார்கள்... அவர்கள் என்ன சொன்னார்கள் என்று தெரியவில்லை'' என்று இருவருமே ஏக காலத்தில் பதிலளித்தனர். ''அதைச் சரியாகக் கவனித்து அவர்கள் பெயர் என்னவென்று தெரிந்து கொண்டிருக்கக் கூடாதா? அவ்வளவு அக்கறை கூட இல் லையா உங்களுக்கு?'' என்று சிலம்பாயி செல்லமாகக் கடிந்து கொண்டாள். ''ஏம்மா; அண்ணன் அங்கே இருந்தாரே அப் போது - அவரைக் கேட்டால் தெரியுமே!'' என்று பரபரப் புடன் யோசனை கூறினாள் முத்தாயி!

அதற்குள் பவளாயி; ரத வண்டிக்கு சற்று தொலைவில் ஓடி வந்து நின்று கொண்டு, ''அண்ணா! உன்னை அம்மா அவசர மாகக் கூப்பிடுகிறார்கள்'' என்று குரலுயர்த்தினாள்.

குதிரைகளைத் தட்டிக் கொடுத்துப் பயணத்துக்குத் தயார் படுத்திக் கொண்டிருந்த வையம்பெருமான்; தாயார் அழைக் கிறாள் என்று தங்கை கூப்பிட்டதும் வேகவேகமாகக் கோயி லுக்குள் ஓடிவந்தான்.

''என்னம்மா? எதற்காகக் கூப்பிட்டீர்கள்?''

''ஒன்றுமில்லை! உன் தங்கைகளை ஆபத்திலிருந்து காப்

பாற்றிய அந்தப் பிள்ளையாண்டான்கள் நன்றாக இருக்க வேண்டுமென்பதற்காக அவர்கள் பெயரால் அம்பாளுக்கு அர்ச்சனை பண்ண வேண்டுமென்று ஆசைப்பட்டேன்.''

தாயார்; மகனிடம் இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே முத்தாயியின் கண்களும் பவளாயியின் கண்களும் சிறகு முளைத்த வண்டுகளாகி ஒன்றையொன்று தழுவி ரீங் காரமிட்டன. பெற்ற பாசத்தின் அன்புப் பிணைப்பு எப்படித் தனது செல்வங்களைப் பாதுகாக்கிறது பார்த்தாயா என்று அந்த விழிகள் ஒன்றையொன்று கட்டியணைத்துக் கொண்டன. அந்த உணர்ச்சியில் அவர்களின் கன்னங்கள் மாங்கனிச் சிகப்பு வண்ணங்களாயின. பெருமூச்சாக வெளிப்பட்ட இன்ப மூச்சு இந்த இளஞ்சிலைகளின் மார்பகத்தை விம்மியெழச் செய்து காவிரிக்கரையிலோர் கவர்ச்சிப் போட்டியை நடத்தின.

மறைந்து மறைந்து அவர்களறியா வண்ணம் அந்த உயி ரோவியங்களின் கொள்ளையழகைக் கண்டு போதையேறித் தடுமாறிக் கொண்டிருந்தான் மாந்தியப்பன். அந்த எழிலரசிகள் தங்களின் ''இஷ்ட தெய்வங்கள்'' ஏற்றுக் கொள்ள வேண்டுமே யென்ற கவலையுடன் தங்களையே ''நைவேத்யம்'' எனப் படைக்கத் தயாராயிருக்கும்போது; கோயிலுக்காகப் பூத்த மலர் களைக் கோவேறு கழுதை, துவைத்துக் கசக்கி மென்று தின் னத் துடிப்பது போல அவன் துடித்து நெளிந்தான்.

''தம்பி; அந்தப் பிள்ளையாண்டான்கள் பெயர் உனக்குத் தெரியுமா?''

''தெரியாதேயம்மா!''

''உன் தங்கைகளை அவர்கள் காப்பாற்றியபோது கரை யோரத்தில் யாரோ அவர்களைப் பெயர் கேட்டார்கள். அவர் கள் என்ன சொன்னார்கள் என்று நானும் கவனிக்கவில்லை. இவர்களும் கவனிக்கவில்லை. நீயும் கவனிக்கவில்லையா?''

''இல்லையம்மா!''

''பிறகு எப்படி அந்தப் பிள்ளையாண்டான்கள் பெயருக்கு அம்பாளுக்கு அர்ச்சனை செய்வது?''

''பிள்ளையாண்டான்கள் என்றே அர்ச்சனை செய்தால் போகிறது!'' என்று சிரித்துக் கொண்டே வையம் பெருமான் சொன்னான்.

''அது எப்படியப்பா முடியும்?'' என்று தாயார் தயங்கி னாள்.

''இரண்டு பிள்ளையாண்டான்கள்! மூத்தவனை பெரியாண் டான் என்றும் இளையவனை சின்னாண்டான் என்றும் நாமே நினைத்துக் கொள்வது! அப்படியே அர்ச்சனை செய்வது!''

''என்னடா தம்பி நீ சொல்வது? நாமே எப்படி ஒரு பெயரை நினைத்துக் கொள்வது? அவர்கள் அப்பா அம்மா வைத்த பெயர்தானே நிலைக்கும்!''

''அந்தப் பெயர் தெரியாததற்கு என்னம்மா செய்ய முடி யும்? ஒன்று; நான் சொன்ன பெயருக்கே அர்ச்சனை செய்வது — அல்லது அர்ச்சனை செய்யாமலே விட்டு விடுவது!''

இப்படியொரு முடிவை வையம் பெருமான் சொன்னபோது முத்தாயி, பவளாயி முகங்கள் மாறிப் போயின. பவளாயி மட்டும் சமாளித்துக் கொண்டு, ''அண்ணா! அம்மா ஆசைப் பட்டுவிட்டார்கள். அதனால் அர்ச்சனை செய்வதற்கு ஏதாவது வழி சொல்வாயா? அதை விட்டு விட்டு அர்ச்சனையே வேண்டா மென்றால் அம்மாவுக்கு எவ்வளவு வருத்தமாக இருக்கும்?'' என்றவாறு பவளாயி தாயின் முகத்தைக் கடைக்கண்ணால் நோக்கினாள்.

தன் பெண்களின் உள்ளத்தை நன்றாகவே புரிந்துகொள்ள இப்போது நல்ல வாய்ப்பு சிலம்பாயிக்குக் கிடைத்து விட்டது. இருந்தாலும் தனக்குப் புரிந்துவிட்ட அந்த உண்மையை இலை மறை காயாகவே வைத்துக் கொண்டு பவளாயியைக் குறும் பாகப் பார்த்தாள்.

''எனக்கொன்றும் வருத்தமில்லை. பெயர் தெரியாவிட்டால் என்ன செய்ய முடியும்? சரி; பூசாரியாரே! என் பெண்கள் பெயருக்கும் பிள்ளை பெயருக்குமே அர்ச்சனையை செய்து முடியுங்கள்'' என்றாள் சிலம்பாயி. ஆனால் வையம்பெரு மான் அதற்கு இணங்கவில்லை.

''கொஞ்சம் இருங்கள் அம்மா... அதோ ஆதிசெட்டிப் பாளையம் தனக்கோடி செட்டியாரும் அவரோடு குன்றுடை யார் குடும்பத்தாரும் அம்மனுக்கு மாவிளக்கு போட்டுக் கொண் டிருக்கிறார்கள். அவர்களிடம் போய் அந்தப் பிள்ளையாண் டான்களின் பெயர் தெரியுமா என்று கேட்டு வருகிறேன்''

என்று கூறியவாறு புறப்பட்டான். அதற்குள் பதறிப்போன சிலம்பாயி அவனைப் பிடித்து நிறுத்தி, ''இரு! இரு!'' என்று கூச்சலிட்டு விட்டாள்.

''ஏன்; என்னம்மா?'' என்று அதிர்ந்து போனான் வையம் பெருமான். சிலம்பாயி, தனது பதட்டத்துக்கு விளக்கமளித் தாள்.

''குன்றுடையார் குடும்பத்தார் என்று சாதாரணமாகச் சொல்லி விட்டாயே!''

''இல்லையம்மா! அவரும் ஒரு பெரிய காணியாளர் என்று எனக்குத் தெரியும். அந்தச் சிறப்புக்களோடுதான் இந்த விழா வுக்குக் கூட வந்திருக்கிறார். நான் ஒன்றும் அவரைச் சாதா ரணமானவராக மதித்துப் பேசவில்லை.''

''அதுவல்ல நான் சொல்வது! குன்றுடையார் குடும்பம் என்பது மாத்திரமே உனக்குத் தெரியும். அந்தக் குன்றுடையார் யார் என்று உனக்குத் தெரியாதல்லவா?''

''யாரம்மா?''

''உனது அத்தை தாமரைநாச்சியாரின் கணவர் நெல்லியங் கோடரை உனக்குத் தெரியுமா?''

''கேள்விப்பட்டிருக்கிறேன். அத்தையையும், அந்த மாமா வையும் நமது வீட்டை விட்டே துரத்திய அந்தக் கதையெல் லாம் கேள்விப்பட்டிருக்கிறேன் அ;ம்மா!''

''கேள்விப்பட்டிருக்கிறாய்! அவர்களை நீ பார்த்திருக்கிறாயா?''

''அவர்களுக்கும் நமக்கும்தான்; செத்தால் வாழ்ந்தால் கூட உறவு இல்லையென்று ஆகிவிட்டதாக அப்பா அடிக்கடி சொல்வாரே, அப்படியிருக்கும் போது எப்படியம்மா பார்த் திருக்க முடியும்?''

''இப்போதுதான் பார்த்திருக்கிறாயே!''

''என்னம்மா சொல்கிறீர்கள்?''

''உன் மாமா நெல்லியங்கோடர்தான் இப்போது குன்றுடை

யார். குன்றுடையாருக்குப் பக்கத்தில் இருக்கிற குலவிளக்குத் தான் .உன் அத்தை தாமரைநாச்சியார்.''

இதைக் கேட்டதும் வையம்பெருமான் மட்டுமின்றி முத்தாயி, பவளாயியும் கூட ஆச்சரியத்தில் ஆழ்ந்து விட்டனர்.

''நெருங்கிய சொந்தம் என்பார்களே; அதுபோல விலகிய சொந்தம் இப்போது நெருங்கிவிட்டது அம்மா!'' என்று முகத்தில் மகிழ்ச்சி மலர தாயையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''தம்பி! நீ போய் அவர்களிடம் வேண்டுமானால் அந்தப் பிள்ளையாண்டான்களின் பெயர்களை விசாரிப்பது போல் அவர்களைப் பார்த்து விட்டு வா! தயவுசெய்து சொந்த பந்தம் பற்றி சொல்லி உன் தந்தையின் கோபத்துக்கு ஆளாகிவிடாதே! உன்னை மட்டுமல்ல; என்னையும் வெறுப்பார் உன் தந்தை! நம் குடும்பத்துக்கே பெரிய துன்பம் வந்து சேரும்!'' இவ்வாறு எச்சரித்தாள் சிலம்பாயி!

''சரியம்மா! என் அத்தை மாமா இருவரின் முகத்தை மட்டும் பார்க்கிற பாக்கியத்தைப் பெற்று வருகிறேன்! தங்கைகளும் என்னுடன் வரட்டும் அம்மா! அவர்களும் அவர்களைப் பார்க்க ஆசைப்படுவார்கள் என்று நினைக்கிறேன்!'' என்ற வையம்பெருமான், முத்தாயி பவளாயி இருவரையும் நோக்கினான்.

''சரியம்மா! நீங்களும் அண்ணனுடன் போய்விட்டு உடனே திரும்புங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பினாள் சிலம்பாயி!

கோயில் சன்னதியில் அமைக்கப்பட்டிருந்த விழாப் பந்தலில் தனது ஆளம்புகளுடன் குன்றுடையானும் தாமரைநாச்சியும் அம்மனுக்கு மாவிளக்கேற்றும் காரியத்தில் மனமொன்றி ஈடுபட்டிருந்தனர்.

சற்று முதிர்ந்த தோற்றம் குன்றுடையானுக்கென்றாலும் முகத்தில் இருந்த பொலிவு மாறவே இல்லை. கணவனுடன் இணைந்து விவசாயப் பணிகளில் ஓய்வின்றி ஈடுபட்டு உழைத்ததின் அடையாளமாக தாமரையின் மாநிற மேனி கருத்திருந்தது எனினும் அந்தக் களைபொருந்திய முகம் அப்படியே இருந்தது. இருவரும் சுறுசுறுப்பாகக் காணப்பட்டனர். அவர்களுக் கருகே பொன்சரடுகளைக் கழுத்திலும் - கடகங்களைக் கை

களிலும் மாட்டிக் கொண்டு பத்து விரல்களிலும் கணையாழி கள் ஒளிவிட ஒருவர் இருந்தார். அவர்தான் ஆதிசெட்டிப் பாளையம் தனக்கோடி செட்டியார். அவரும் பயபக்தியுடன் அம்மனை வழிபட்டுக் கொண்டிருந்தார்.

அவர்களை நெருங்கி வையம்பெருமான், முத்தாயி, பவ ளாயி மூவரும் வந்து நின்றனர். ''வணக்கம்'' என்ற குரல் கேட்டுக் குன்றுடையானும் தாமரைநாச்சியும் திரும்பிப் பார்த் தனர். அவர்களைப் பார்த்த உடனே தாமரைநாச்சியின் இத யம் படபடவென அடித்துக் கொண்டது. கண்கள் கலங்கின. கைவிரல்கள் நடுங்கின. உடலே ஆடிற்று.

அவளுக்குத் தெரிந்து விட்டது; தனது அண்ணன் சின்ன மலைக் கொழுந்தின் மக்கள்தான் என்று!

கரகம் விடும் திருவிழாவுக்கு வந்த ஊரார் அனைவரும் கேள்விப்பட்டது போல அவளும் கேள்விப்பட்டதில் வியப்பிருக்க முடியாதல்லவா?

சின்னமலைக்கொழுந்தின் பெண்கள் கரகம் விடும்போது காவேரியாற்றில் சிக்கிக் கொண்டதையும் - அவர்களை இரண்டு வீர வாலிபர்கள் காப்பாற்றிக் கரை சேர்த்ததையும் - அந்தத் திருவிழாக் கூட்டத்தில் அவர்கள் தெரிந்து கொள்ளாமல் இல்லை. இருப்பினும் இரு குடும்பங்களுக்கிடையே இருபது இருபத்தைந்து ஆண்டுகால பகை வளர்ந்து வேர்விட்டுத் தழைத்துப் போயிருப்பதால் தாமரைநாச்சியார்; அதனை ஒரு செய்தியாகக் கேட்டு திடுக்கிட்டுப் பிறகு ஆறுதலடைந்தாளே தவிர - எந்தவிதத் தவிப்பும் கொள்ளவில்லை.

ஆனால் இப்போது தனது அண்ணன் மக்கள் எதிரில் நிற்கிறார்கள். பகையுணர்வையெல்லாம் தாண்டியும் மிதித்தும் கொண்டு பந்தபாச உணர்வு தலைதூக்கி வந்து அவளை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டது.

திருமண நாளன்று தன்னையும் தன் கணவரையும் வெளியே விரட்டி வேடிக்கை பார்த்தான் அண்ணன் - அந்த வேதனை எரிமலையின் நெருப்புக் குழம்பைக் கூட அணைத்து விட்டு; பாசமெனும் பனிக்கட்டி மழை பொழிகிறதே இப்போது!

தாமரைநாச்சியாரின் நிலைகண்டு குன்றுடையான்; அவள் தோளைக் குலுக்கி -

''உணர்ச்சி வசப்படாதே தாமரை! உனக்கு ஏற்கெனவே நெஞ்சு வலி! இரண்டு நாளைக்கு முன்பு கூடக் கஷ்டப்பட் டாய்! அதை மறந்து விடாதே! எதையும் சாதாரணமாக எடுத் துக்கொள்!'' என்றான்.

தாமரைநாச்சியோ, தன்னை மறந்து முத்தாயி பவளாயியை யும் வையம்பெருமானையும் தழுவிக் கொண்டு உச்சிமோந்து முத்தமீந்தாள்.

அவள் கண்களில் பெருமழை கொட்டியது! அவ்வாறே அந் தப் பெண்களும், வையம்பெருமானும் இதயம் கனத்துப் போய்த் தள்ளாடினர். பாச உணர்ச்சியின் ஆனந்தக் கூத்தில் பல ஆண்டுக்கால வாழ்க்கை வரலாற்று ஏடு புரண்டு கொண் டிருந்தது. வாய் பேசாமலே நெஞ்சங்கள் ஒன்றையொன்று நலம் விசாரித்துக் கொண்டன. குன்றுடையான் வையம்பெரு மானைக் கட்டியணைத்துக் கொண்டு முத்தாயி, பவளாயி இரு வரின் உச்சந்தலையில் முத்தமீந்தான். பிறகு தன்னருகே அசை வற்று நின்று அனைத்தையும் வேடிக்கை பார்த்துக் கொண்டி ருந்த தனக்கோடி செட்டியாரைப் பார்த்து; ''செட்டியார் அய்யா! இவர்கள் சின்னமலைக் கொழுந்தின் செல்வங்கள்! என் மருமகப்பெண்களும், மருமகப்பிள்ளையும்!'' என்றான்.

''ஓ! அப்படியா?... உங்கள் பிள்ளைகள் மட்டும் உயிரோடு இருந்தால் இந்தப் பெண்களுக்குத் தாலி கட்டி, தாமரைநாச்சி யம்மையின் சபதத்தை நிறைவேற்றியிருப்பார்கள்'' என்று வேதனை கலந்த கேலியாகச் சொன்னார் தனக்கோடி செட்டி யார்.

''அதையெல்லாம் இப்போது பேசாதீர்கள். எல்லாம் நாம் நினைத்தபடியா நடக்கிறது?'' என்று அங்கலாய்த்துக் கொண்டு பெருமூச்சு விட்டான் குன்றுடையான்.

தாமரைநாச்சியார் மீண்டும் தனது கண்கள் அருவியாவதை இயன்றவரை தடுத்துக் கொண்டு,

வையம்பெருமானையும், முத்தாயி, பவளாயி இருவரையும் பார்த்து, ''சரி - நீங்கள் போய் வாருங்கள். உங்கள் தாய் தந்தையர் பார்த்தால் வீண் வம்பு'' என்றாள்.

''போகிறோம் அத்தை! உங்களிடம் ஒன்று தெரிந்து கொள்ள வந்தோம். உங்களுக்கோ, மாமாவுக்கோ, செட்டியாருக்கோ

தெரிந்தால் சொல்லுங்கள்!'' என்றான் வையம்பெருமான்.

''என்ன?'' என்று குன்றுடையான் இடைமறித்தான்.

''என் தங்கைகளைக் காப்பாற்றினார்களே; அந்த வாலிபர்கள், அவர்கள் நலமோடு வாழ அம்மனுக்கு ஒரு அர்ச்சனை செய்ய அம்மா விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் பெயர்கள் தெரியவில்லை. உங்களுக்குத் தெரியுமா என்று கேட்கத்தான் வந்தோம்'' என்று பதிலளித்தான் வையம்பெருமான்.

''நாங்கள் கூட விசாரித்தோம்; யார் அந்தப் பிள்ளையாண்டான்கள் என்று! யாருக்குமே தெரியவில்லை!'' என்றான் குன்றுடையான்.

# ஆற்றில் அருக்காணித் தங்கம்

## 11

ஆரிச்சம்பட்டியை நோக்கிப் புறப்பட்ட ரத வண்டி; செல் லாண்டியம்மன் கோயில் திருவிழாப் பந்தலை விட்டு வேக மாகக் கிளம்பியது. அந்த வண்டியில் முன்னிருக்கையில் வையம் பெருமான் அமர்ந்திருந்தான். அடுத்த வரிசையில் சிலம்பாயி யும் அவளுக்கு இருபுறமும் முத்தாயி பவளாயியும் வீற்றிருந்த னர். காவிரிக்கரையோரமுள்ள கரடுமுரடான சாலையில் குளித்தலை வழியாக வந்து தென் கிழக்குத் திசையில்தான் ஆரிச்சம்பட்டியெனும் மணியங்குரிச்சிக்குச் செல்லவேண்டும்.

தனது அண்ணன் மக்களை அருகே வந்து வழியனுப்ப இயலாவிடினும் விழாப் பந்தலுக்குள்ளிருந்தவாறு தாமரை நாச்சியார் உள்ளத்தால் வாழ்த்திக் கொண்டு, ரத வண்டி போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஓவியங்கள் உயிர் பெற்றது போன்று அழகுக் காவியங்களாய்த் திகழும் முத்தாயி, பவளாயி இருவரும் தாமரைநாச்சியாரின் கண்களை விட்டு அகலவில்லை. பந்தலை விட்டு அந்த ரத வண்டி தொலை தூரம் சென்ற பிறகும் அந்த இளங்கிளிகளின் முகம் தாமரை நாச்சியின் முன்னால் தோன்றி கொத்துப்புன்னகையை - கொற்கை முத்துப்புன்னகை என உதிர்ப்பது போல் இருந்தது.

தாமரையின் மனத்திரைக் காட்சி, அவளது முகப்பொலிவை மெருகூட்டிக் காட்டியது என்றாலும் திடீர் மின்னலாக ஒரு வேதனை ரேகை அந்தப் பொலிவைக் கிழித்துக் கொண்டு கிளம்பியது. நெல்லியங்கோடனை மணந்தபோது ஆரிச்சம் பட்டியில் தனக்கும் தனது அண்ணனுக்கும் நடைபெற்ற சூடான உரையாடல் அவளது நினைவு அலைகளில் மிதந்து குலுங் கியது.

'அண்ணா! என் சகோதரனான உன் முன்னால் என்னைப் பெற்றெடுத்த என் தாயின்மேல் ஆணையாக - தந்தை மேல் ஆணையாகச் சொல்கிறேன் - பந்தபாசம் இன்றுடன் முடிந்து

விட்டது என்றாயே, நிச்சயம் முடியாது! முடியவே முடியாது! சீர்வரிசையை வைக்க வீடு வாசல் கிடையாது என்று கிண்டல் செய்த அண்ணனே! நானும் என் அத்தானும் மாடமாளிகையில் இருப்பதை நீ பார்க்கத்தான் போகிறாய்! பந்தபாசம் எரிந்துவிட்டது என்ற என் அருமைச் சகோதரனே, நான் பெற்றெடுக்கிற சிங்கக்குட்டி மகனுக்கு - உன் பெண்ணைக் கட்டிவைக்க நீ வ்ந்து என்னைச் கெஞ்சத்தான் போகிறாய்!'

இப்படித் தாமரை முழக்கமிட்டவுடன்,

'பெறுவதுதான் பெறுகிறாய், இரண்டு சிங்கக்குட்டிகளாகப் பெற்றுப் போடு! இரண்டையும் கொண்டு வந்து என் வீட்டு வாசலில் நாய்களைப் போல் காவலுக்குக் கட்டி வைக்கிறேன்' என்று சின்னமலைக் கொழுந்து ஏளனமாகப் பதில் அளித்ததும்!

'பெறுகிறேன் அண்ணா; பெறுகிறேன்! நீயும் இரண்டு பெண்களைப் பெற்றுக்கொண்டு அந்தச் சிங்கங்களைத் தேடிக் கொண்டு வரப்போகிற காட்சியை நான் கண்டு களிக்கத்தான் போகிறேன்!' என்று தாமரைநாச்சியார் சூளுரைத்ததும்; ஏதோ இப்போதுதான் நிகழ்வது போல் இருந்தது அவளுக்கு!

அந்த உணர்வில் அவள் சோக பிம்பமாக நின்றாள். அன்று கூறிய சூளுரைப்படி அவளும் இரண்டு சிங்கக்குட்டிகளைப் பெற்றாள். ஆனால் அந்த சிங்கக்குட்டிகள் பிறந்து வளர்ந்த இரண்டு ஆண்டுகளுக்குள்ளே எங்கு போயின என்றே தெரியாமல் அவளும் அவள் அன்புக்கணவன் குன்றுடையானும் வேண்டாத தெய்வமில்லை - கும்பிடாத கோயில் இல்லை - ஆடாத தீர்த்தமில்லை!

அண்ணன் சின்னமலைக்கொழுந்தின் பெண்களிருவரையும் பார்த்தது முதல் - தாமரைநாச்சியின் ஏக்கம் பெரிதாயிற்று.

''அன்று சொன்னபடி அண்ணனுக்கும் இரு பெண்கள் பிறந்து விட்டனர். ஆனால் அவர்களை மணந்து கொள்ளுமாறு அண்ணன் வந்து மன்றாடிக் கேட்பதற்கு நான் பெற்ற மக்கள் இல்லையே! அம்மா தாயே! உனக்கு எத்தனை வருஷமாக பிரார்த்தனை செய்கிறோம்; உன் மனம் இரங்கவில்லையா?'' என்று வாய்விட்டுக் கதறியவாறு தாமரையாள், செல்லாண்டியம்மனைத் தொழுது நின்றாள்.

மனைவியின் இதயத்திலிருந்து பீறிட்டுப் பொங்கிய அந்த வார்த்தைகள் குன்றுடையானைக் கலக்கவே அவன் தனது கண்களில் எட்டிப் பார்த்த நீர்த்துளிகளை அவளுக்குத் தெரியாமல் துடைத்துக் கொண்டே; அவள் தோளில் கைவைத்து, ''என்ன தாமரை! சொன்னால் கேட்க மாட்டேன் என்கிறாய்? உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதேயென்று எத்தனை முறை சொல்வது?'' என்று கெஞ்சுகிற தோரணையில் செல்லமாகப் பேசினான்.

''நாச்சியாரம்மா! உங்கள் நல்ல மனசுக்கும் உங்கள் கணவரின் வெள்ளை மனசுக்கும் ஒரு குறையும் வராது. கவலைப்படாமல் இருங்கள். இரவும் பகலும் மாறி மாறி வருவது போல கெட்டதும் நல்லதும் மாறி மாறி வரும். அதுதான் வாழ்க்கை. இரவு இருந்தால்தானே பகலுக்குப் பெருமை. அது மாதிரி கெட்டது இருப்பதால்தான் நல்லதுக்குப் பெருமை. இப்போது உங்கள் வாழ்க்கையில் இருள் - இது பகலாக நிச்சயம் மாறும் பாருங்கள்!'' என்று திடமான தொனியில் அருகிலிருந்த தனக்கோடி செட்டியார் ஆறுதல் அளித்தார்.

அப்போதும் குன்றுடையான்; தனது வெள்ளை உள்ளத்தை எடுத்துக்காட்டும் வண்ணம் - செட்டியாரைப் பார்த்து; ''அடேடே, ஆதிசெட்டிப் பாளையத்தாருக்கு ஆரூடம் கூடத் தெரியுமா?'' என்று கேலியாகக் கேட்டான்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. அதில் எனக்கு நம்பிக்கையுமில்லை. என் சொத்தை ஆள்வதற்கு பத்து குழந்தை பிறக்குமென்றான் ஒரு ஆரூடக்காரன். இதுவரை ஒரு சொத்தைக் குழந்தை கூடப் பிறக்கவில்லை. அதனால் நான் இப்போது சொல்வது ஆரூடமல்ல. பொதுவாக வாழ்க்கையைப் பற்றிய ஒரு கணிப்பு; அவ்வளவுதான்!'' என்றார் செட்டியார்.

அவர்கள் உரையாடலைத் திசை திருப்பும் வகையில் குதிரையொன்று வேகமாக வரும் குளம்படி ஓசை அந்தக் கோயிலுக்கருகே கேட்டது.

''திடீரென்று குதிரையில் யார் வருவது? நமது குடையூர் அரண்மனையிலிருந்து யாராவது வருகிறார்களா? அல்லது நெல்லிவளநாட்டிலிருந்து மாந்தியப்பன் வந்திருந்தானே; அவனுக்கு ஏதாவது அவசரச் செய்தி கொண்டு வருகிறார்களா?'' என்று தனக்குத் தானேயும் தாமரைநாச்சியையும், தனக்கோடி செட்டியாரையும் பார்த்துக் கேட்டுக் கொண்டும், குன்றுடை-

யான்; குளம்படியோசை நெருங்கி வருவதை உணர்ந்து இரண்டடி முன் சென்று பந்தலுக்குள்ளிருந்தவாறு உற்றுப் பார்த்தான்.

விழாப் பந்தலின் முகப்பில் குதிரை வந்து நின்றுவிட்டது என்பதற்கு அடையாளமாக குளம்படி ஓசைகள் மெல்ல மெல்லக் குறைந்து தேய்ந்தன!

குதிரையிலிருந்து இறங்குவது யார் என்று விழாப் பந்தலில் இருந்தோர் அனைவரும் கவனித்தனர் எனினும், குன்றுடையான் மட்டும்தான் அப்படியிறங்கியவரை ஆச்சரியத்தோடு பார்த்தான்.

தூய வெள்ளை அங்கி அணிந்து, கருமை கலந்த வெண்தாடி அசைய - இயற்கையான கம்பீரத் தோற்றத்துடன், கனிவு ததும்பும் பார்வையைப் பந்தல் பக்கம் செலுத்தியவாறு குதிரையிலிருந்து மாயவர் இறங்கினார். மின்னலெனும் ஒரு திகைப்பால் தாக்குண்டான் எனினும் உடனே தன்னை சமாளித்துக் கொண்டு குதிரையில் வந்தது மாயவர்தான் என்பதைக் குன்றுடையான் புரிந்து கொண்டான். தாமரைநாச்சியாரையும் தனக்கோடி செட்டியாரையும் ஆவலுடன் நோக்கி, ''தலையூர்க் காளியின் அமைச்சர் வருகிறார். அமைச்சர் பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் மிகப் பெரிய மனிதர். உயர்ந்த மனிதர்'' என்று குன்றுடையான் கூறிவிட்டு, மாயவர் வரும் திக்கு நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

ஒரு அடி இடைவெளி கூட இல்லாத தொலைவில் இருவரும் எதிர் எதிரே நின்றனர். ஒருவரையொருவர் பார்த்தவாறு அசைவற்று நின்றனர். அந்த நிலை நீண்ட நேரம் நீடிக்கவில்லை. ''வணக்கம்'' என்று கூறிக்கொண்டே குன்றுடையான் மாயவர் முன் தலைதாழ்த்திக் குனிந்தான். அவனது தோள்பட்டைகளை இரு கரங்களாலும் பற்றித் தூக்கியவாறு, ''என்ன; நெல்லியங்கோடா! நலமா?'' என்று மாயவர் அன்பொழுகக் கேட்டார்.

''தலையூர் அமைச்சர் தாங்கள்! கோயில் திருவிழாவுக்கு வரும்போது அந்தப் பதவிக்குரிய சிறப்புக்கள் எதுவுமின்றி வந்துள்ளீர்களே?'' என்று குன்றுடையான் எழுப்பிய வினாவுக்கு முதலில் மாயவர் ஒரு இளநகையைப் பதிலாகத் தந்தார் என்றாலும் அதைத் தொடர்ந்து அவனிடம் சிரித்துக் கொண்டே பேசவும் செய்தார்.

''அமைச்சர் வருவதென்றால் எப்படி வரவேண்டுமென்கிறாய்? ஆனைப்படை குதிரைப்படை முன்னால் வரவும் - காலாட்படை அணி வகுத்துப் பின்னால் வரவும் - அதன் நடுவே அமைச்சர் ஆடம்பரமாக வரவேண்டுமோ? நானாவது அமைச்சர்; நீயோ பல குன்றுகளைக் கட்டியாளும் எல்லைக் காவலன்! நீயும் இங்கு ஆடம்பரமாக விஜயம் செய்திருப்பதாகத் தெரியவில்லையே!''

மாயவரின் கூற்றுக்கு, குன்றுடையான், தனக்கே இயல்பாக அமைந்த அடக்கத்துடன் பதிலளித்தான்.

''நானும் என்னைப்போன்ற சிலரும் வெறும் எல்லைக் காவல் ஆட்சி புரிபவர்கள். தாங்கள் அப்படியல்லவே! தலையூர்ச் சிற்றரசின் மந்திரியார் அல்லவா? மந்திரி மட்டுமா? மகாமேதையுங்கூட! தங்களின் பதவிப் பெருமைக்குத் தகுந்தவாறு சுற்றுச் சூழல், பாதுகாப்பு ஏற்பாடு - எல்லாமே இருக்க வேண்டுமே என்றுதான் கேட்டேன்.''

''என்னைப்பற்றித்தான் உனக்குத் தெரியுமே! எளிமையான வாழ்வுதான் எனக்குப் பிடிக்கும். என் போன்ற அமைச்சர்கள் வெளியில் போகும்போதெல்லாம்; ஏதோ யுத்தத்திற்குப் போவது போல ஆனை சேனைகளை அணிவகுக்கச் சொல்லிப் போக முடியுமா? நீ நினைக்கிறபடி இப்போது கூட நான் கோயில் திருவிழாவை முன்னிட்டு வரவில்லை. முக்கியமாக உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்!'

''அப்படியா? என்னையா? உண்மையாகவா?'' என்று வியப்பு மேலிடக் கேட்டான் குன்றுடையான்.

''ஆமாம்! ஏன் இவ்வளவு ஆச்சரியம்? உன்னைப் பார்க்க வரக்கூடாதா? விளைந்த கதிர் அறுத்துக் குவித்து, யானைகளைக் கட்டித் தாம்படித்து பொதி அளக்கும் கொங்குவேளாளப் பெருங்குடி மகன் நீ! உழைத்திடும் உழவர்களுக்கு அவர்களுக்கு வேண்டிய மட்டும் தானியத்தை ஊதியமாக வழங்கிடும் உத்தமன் நீ! வரகுண்ணாப் பெருங்குடி வேளாளர் மரபின் பெருமையை உயர்த்த வந்தவன் நீ! எதிர்ப்பு நெருப்பிலே கூட இனிய இதயத்தால் நீந்திக் கரையேறியவன் நீ! உன்னையும் உன் மனைவி தாமரைநாச்சியார்; அதாவது தமிழ் பெண்களின் குலத் தலைவியாகத் திகழும் இந்தத் தாய் - இவர்களையும் பார்க்கத்தான் வந்தேன். உங்களைத் தேடி, குடையூர் மாளிகைக்குப் போனேன். அங்கில்லை; இங்கு வந்து விட்டீர்

கள் எனக் கேள்விப்பட்டதும்; காடுமேடு நிறைந்த கஷ்டமான வழியென்றாலும் கவலையில்லையென்று வந்துவிட்டேன்.''

மாயவர், குன்றுடையானைப் புகழ்ந்து பேசும்போது உச்சி குளிர்ந்து உடம்பெல்லாம் இன்பத் தேனாறு பெருக்கெடுக்க அருகேயிருந்த தாமரைநாச்சியார்; மாயவர் தன்னைப் பற்றியும் சில நல்ல வார்த்தைகள் சொன்னதும்; தன்னையறியாமல் அவரைக் கையெடுத்துக் கும்பிட்டு, மெத்தவும் மரியாதையுடன் பந்தல் கால் ஓரமாக ஒதுங்கி நின்றாள்.

''எத்தனை வருஷமாகிறது உங்களைப் பார்த்து!'' என்று குன்றுடையான் பெருமூச்சு கலந்து கூறிவிட்டு; மாயவருக்கு - தனக்கோடி செட்டியாரை அறிமுகப்படுத்தி வைத்தான்.

மாயவரின் தோற்றம் - அவரது தாடி - உடை - அசைவு - உரையாடிய இனிமை - எல்லாமே தனக்கோடி செட்டியாரை மெய்மறக்கச் செய்திருந்தது.

''எல்லோரும் எங்களைக் கைவிட்டு விட்ட நேரத்தில் இந்தச் செட்டியார்தான் எங்களுக்குத் தங்க இடமே கொடுத்தார். இவருடைய ஆதரவும் உதவியும் பெற்றுத்தான் உழவுத் தொழிலை வளர்த்து - அதன் வாயிலாகப் பல வளமும் பெற்றது எங்கள் குடும்பம். இவரை நாங்கள் மறக்கவே முடியாது'' என்று தனக்கோடி செட்டியாரைப் பற்றிப் பரவசத்தோடு குன்றுடையான், மாயவரிடம் பாராட்டினான்.

அந்தப் பாராட்டுக்கு உரியவர் தானல்ல என்பதை தனது கூச்சத்தால் வெளிப்படுத்திய செட்டியார்; ''என்னை ஏன் வீணாகப் புகழுகிறீர்கள்? இதோ நிற்கிறாரே; இந்தப் பெரியவர் மாயவர்; உங்களுக்காக தலையூர் மன்னனிடம் கோபித்துக் கொண்டே போய் விடவில்லையா? சுகமான பதவியைத் துறந்து இருபது வருஷங்களுக்கு மேலாக இவர் கஷ்டப்பட்டு அலைந்து திரிந்தார் என்றால்; அது உங்களுக்காகத்தானே! நன்மையல்லாத காரியம் ஒரு கடுகளவு நடந்தாலும் அதை எதிர்த்து வாதாடுகிற பெரும் உள்ளம் யாருக்கு வரும்? அந்த நல்லெண்ணத்துக்குச் சொந்தக்காரரான மாயவரின் சிறப்போடு ஒப்பிட்டால் என் சிறப்பு அவரது கால் தூசுக்குக்கூட சமமாகாது!'' என்றார்! அப்போது அவர் கண்கள் கலங்கின.

''நிற்க வைத்தே பேசிக் கொண்டிருக்கிறீர்களே; அதோ அந்த மண்டபத்தில் உட்கார்ந்தாவது பேசலாமே!'' என்று

கொங்குச் சீமையின் பண்பு விளங்க தாமரைநாச்சியார், தனது கணவனைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே சொன்னாள்.

''ஆமாம் - அதுதான் நல்லது. வாருங்கள்'' என்று மாயவரைக் குன்றுடையான் அழைக்கவே அவரும் அந்த மண்டபத்துக்குச் சென்றார்; செல்லாண்டியம்மனைப் பற்றியும் பெரியகாண்டி அம்மனைப் பற்றியும் சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த மண்டபமாக அது இருந்தது. கரகம் விடும் விழாவைப் பற்றி ஓடக்காரன், பொன்னர் - சங்கருக்குச் சொன்ன கதை முழுதும் சித்திரங்களாக அந்த மண்டபத்தில் தீட்டப்பட்டிருந்தன.

கைலாசமலையில் நாகமலையென்ற பகுதி சித்திரத்தில் கோடிட்டுக் காட்டப்பட்டிருந்தது. அடுத்த ஓவியமாக ஒரு ஐந்து தலைப் பாம்பு சிவனை நினைத்து கடுந்தவம் செய்து கொண்டிருப்பது போல் எழுதப்பட்டிருந்தது. பிள்ளை வரம் கேட்டு அந்த நாகம் தவம் செய்தது. அடுத்த படத்தில் பரமசிவனும் பார்வதியும் இருந்தார்கள். ஐந்து தலை நாகத்திற்குப் பிள்ளையாகப் பிறக்க பார்வதி ஒப்புக் கொண்டு புறப்படுவது போல ஒரு சித்திரம் இருந்தது. பார்வதியைப் பரமசிவன் விடையளித்து அனுப்புகிற காட்சி ஒரு படத்தில் இடம் பெற்றிருந்தது. அடுத்த ஓவியம், ஐந்து தலை நாகம்; ஒரு குழந்தையைப் பெற்றெடுப்பது போல! அடுத்த ஓவியத்தில் அந்தக் குழந்தை பெரியகாண்டி அம்மனாக வளர்ந்து காட்சி தருவது போல! அடுத்ததாக பெரியகாண்டி தனது வியர்வையை விரலால் வழித்தெறிய அதிலிருந்து ஏழு கன்னியர்கள் தோன்றுவதாக ஒரு ஓவியம்! பெரியகாண்டியம்மன் வாழவந்திச் சீமைக்கு வருவதாக ஒரு காட்சி! பிறகு தொட்டியம் வழியாக காவேரியைக் கடக்க பெரியகாண்டி பூஜை செய்ய முடிவு செய்வதாகவும் அதற்கு கரகம் வேண்டுமென்றும் கன்னியர்களை அனுப்புகிற படம்! ஒரு மண்ணுடையான் கன்னியரிடம் கரகம் இல்லையென்று பொய் சொல்லுகிற ஓவியம்! பொய் சொன்ன மண்ணுடையான் வீட்டில் உள்ள எல்லாக் கரகங்களிலும் பாம்பு நெளியுமாறு பெரியகாண்டி சபிப்பது போல ஒரு பெரிய ஓவியம்! மண்ணுடையான் பெரியகாண்டியிடம் மன்னிப்புக் கேட்டு மண் கரகம் ஒன்று கொடுக்கும் ஓவியம்! ஓடக்காரன் ஒருவன் ஏழு கன்னியரைக் கேலி செய்வது போல ஒரு படம்! அது கண்டு பெரியகாண்டி அவன் ஓடத்தைத் தீப்பற்றி எரியச் செய்யும் ஒரு படம்! பிறகு பெரியகாண்டியும் செல்லாண்டியம்மனும் பந்தயம் போட்டுக் கொண்டு மண் கரகம் பொன் கரகம் விடுகிற படம்! இரு அம்மன்களும் சமாதானமாகிற

படம்! செல்லாண்டியம்மனின் பெருமையைப் பெரியகாண்டி அம்மன் விளக்குகிற படம்!

இப்படியொரு புராதனச் சித்திரக் கூடமாக அந்த மண்டபம் இருந்ததை மாயவர் வைத்த விழி வாங்காமல் பார்த்தார். பிறகு, குன்றுடையான் காட்டிய இருக்கையில் அமர்ந்து தன் னருகே குன்றுடையானையும் அமரச் செய்தார். தனக்கோடி செட்டியாரும் தாமரைநாச்சியாரும் மண்டபத்துக்கு வராமல் பந்தலிலேயே இருந்தனர். தாமரைநாச்சியார், அம்மனுக்குப் படைத்த மாவிளக்கு மாவை ஒரு சிறிய வெள்ளித்தட்டில் வைத்து ஒரு குவளையில் மோரை மொண்டு கொண்டு; அதை மாயவருக்குக் கொடுத்தனுப்ப அங்குமிங்கும் பார்த்துக் கொண் டிருந்தாள்.

''ஏனம்மா! இங்கே கொடு நான் கொண்டு போகிறேன்'' என்று கையை நீட்டினார் செட்டியார். தாமரை தயங்கினாள். என்ன இருந்தாலும், செட்டியாரைப் போய் அந்த வேலைக்குப் பயன்படுத்துவதா? என்றுதான் அவள் தயங்கினாள். மண்டபத் திலிருந்த மாயவர்; சற்று உரத்த குரலில் - ''தனக்கோடி செட்டியார் அங்கே இருக்கட்டும். தாமரைநாச்சியார் மட்டும் இங்கே வரலாம். நானும் குன்றுடையானும் குடும்ப விஷயம் பேசப் போகிறோம்'' என்றார். கையில் எடுத்த தட்டு குவளை யுடன் தாமரைநாச்சியார் மண்டபத்துக்கு வந்தாள். தன் எதிரே வெள்ளித் தட்டில் இருந்த மாவிளக்குமா, மிகவும் சுவையாக இருக்கிறது என்று சொல்லிக் கொண்டே முழுவதையும் தீர்த்து விட்டார் மாயவர்.

கணவனுக்குப் பின்புறமாக மண்டபத்தில் தாமரை உட்கார்ந்து கொண்டாள். மாயவர், தாமரையைக் குளிர்ந்த விழிகளால் உற்றுப் பார்த்தார். அவர் முகத்தில் ஒரு பெருமிதம். அவர் உதட்டிலிருந்து உதிர்ந்த வார்த்தைகள் ஆலங்கட்டி மழை போல அழுத்தம் திருத்தமாக இருந்தன.

''இந்தக் குணவதியிடம் போய் அந்த மாந்தியப்பன் தவறாக நடந்து கொள்ள எப்படித்தான் துணிந்தானோ?''

மாயவர்; வேதனையுடன் இந்தக் கேள்வியை எழுப்பிய போது; தாமரைக்குப் பழைய நினைவு நெஞ்சில் அலை பாய்ந்தது.

செல்லாத்தாக் கவுண்டரிடம் தங்கள் உரிய உடைமைகளைக்

கேட்டுத் தாமரையும் அவள் கணவனும் சென்ற போது மாந்தியப்பன் ஒரு மிருகத்தைப் போலத் தன்னிடம் நடந்துகொள்ள முயற்சித்ததை நினைக்கவே இப்போது பயமாக இருந்தது தாமரைக்கு!

குன்றுடையான்; மாயவரிடம் அமைதியாகக் கேட்டான் - மாந்தியப்பன் இப்போது நல்லவனாக மாறியிருப்பான் அல்லவா? முன்பு இளைஞன்! இப்போது பொறுப்பு அதிகம்! இளவரசனாக இருந்தாலும் ஆட்சி நிர்வாகம் முழுதும் அவன் தானே கவனிக்கிறான். அதனால் திருந்தியிருப்பான் இல்லையா?''

மாயவர் சிரித்துக் கொண்டே பதில் சொன்னார்; ''பொறுப்பு வந்தால் எல்லோரும் திருந்திவிடுவார்களா என்ன? கோழியின் காலில் சலங்கையைக் கட்டினால் அது நடனமா ஆடும்? குப்பையைக் கிளறத்தானே போகும்? அப்படித்தான் மாந்தியப்பனும்!''

'எவ்வளவு அறிவும் நேர்மையும் கொண்ட அமைச்சர் மாயவர்' இப்படி எண்ணிக்கொண்டு பெருமூச்சு விட்டாள் தாமரை நாச்சியார்!

'ஏன் வந்துள்ளார் மாயவர்? என்ற பேச்சை எப்படி ஆரம்பிப்பது?' என்று தனக்குள் எண்ணித் தவித்துக் கொண்டிருந்த குன்றுடையான்;. மனத்தை திடப்படுத்திக் கொண்டு அவரிடம் பேசினான்.

''மன்னிக்க வேண்டும். வந்தவரை எங்கே வந்தீர்கள் என்று கேட்க கூடாது! இருந்தாலும் தாங்கள் வந்த வேலையைக் கவனிக்காமல் நான் வீணாகக் காலம் கடத்துகிறேனோ என்ற சந்தேகத்தில் கேட்கிறேன்; என்னிடம் ஆக வேண்டிய காரியங்கள் ஏதேனும் உள்ளதா?''

குன்றுடையான் இவ்வாறு கேட்டதும், மாயவர் அவனை ஏற இறங்கப் பார்த்தார்.

''வந்த காரியத்தைச் சொல்லாமலா போய்விடுவேன்?'' என்று சிரித்தவர், கையிலிருந்த குவளையை வாயில் கவிழ்த்து மோர் குடித்துத் தாக சாந்தி செய்து கொண்டார்.

அப்போது, ''அய்யோ! ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்!'' என்று தனக்கோடி செட்டியார் அலறும் குரல் கேட்டு குன்

றுடையானும், தாமரையும் மண்டபத்திலிருந்து வெளியே வேக மாக விரைந்து வந்தனர்.

மாலை மயங்கும் நேரமாக இருந்ததால் உருவங்கள் தெளி வாக தெரியவில்லை. சிலர், காவிரி ஆற்றை நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர். தாமரையும், குன்றுடையானும் செட்டி யாரைப் பார்த்து, ''என்ன? என்ன?'' என்று கேட்டனர். ''அருக்காணித் தங்கம் ஆற்றிலே வீழ்ந்து விட்டாள்'' என்று செட்டியார் கத்திக் கொண்டே, மீண்டும் ஆற்றை நோக்கி ஓடி னார். அதற்குள் விரைந்து ஓடி வந்த மாயவர், ''என்ன நடந் தது? யார் வீழ்ந்தது ஆற்றில்?'' என்று பரபரப்புடன் கேட் டார்.

''எங்கள் மகள் அருக்காணித் தங்கம்தான்'' என்று தாமரை யும் குன்றுடையானும் ஒரே குரலில் சொல்லிக் கொண்டே ஆற்றை நோக்கி ஓடினர். மாயவர் ஒரு கணம்கூடத் தாமதிக் காமல் ஓடிச்சென்று ஆற்றில் குதித்தார். அப்போது குதிரை யொன்று அந்தப் பகுதியிலேயிருந்து விர்ரென்று புறப்பட்டு காற்றைக் கிழித்துக் கொண்டு ஓடியது.

# பகையின் போர்க்கோலம்

## 12

மாயவர் ஆற்றில் குதிக்கும் அந்த மின்னல் வேகத்திலும் கூட, ஆற்றோரமிருந்து குதிரையில் தாவி ஏறிச் சென்றவன் யார் என்பதைப் பார்க்கத் தவறவில்லை. மாந்தியப்பன்தான் அவன். பொழுது சாய்ந்து கொண்டிருந்த அந்த வேளையிலும் அவரால் அவனைப் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் அதைப்பற்றிச் சிந்திக்க முடியாமல்; பகலில் சிறகடித்து வானில் பறக்கும் கருடனின் நிழல் பூமியில் பட்டுச் செல்வது போல் அந்த நினைவு அகன்று விட; அவர் ஆற்றில் நீச்சல் அடித் தார்.

கரையின் அருகாமையிலேயே ஆற்றின் சுழலில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த அந்த இளம் பெண்ணின் தலை, தண்ணீருக்குள் மூழ்குவதும் வெளியில் சற்றுத் தெரிவதுமாக இருந்தது. அது தன் மகள் அருக்காணித் தங்கம் தான் என் பதை உணர்ந்த தாமரைநாச்சியார், ''தங்கம்! தங்கம்!'' என்று ஓலமிட்டு கதறியழுதாள். அவளைச் சமாதானப்படுத்திக் கொண்டே குன்றுடையான் ஆற்றில் குதிப்பதற்கு கரைமுனைக் குத் தாவினான். அந்தச் சுழலில் நீந்திச் சமாளிக்க முடியாமல் தன் கணவன் சிக்கிக் கொள்ளக்கூடும் என அஞ்சிய தாமரை; பதட்டமிகுந்த அந்தச் சூழலிலும் கணவன் மீது கொண்ட பாசத்தால் நிதானத்துடன் ஓடிச்சென்று அவனை ஆற்றில் குதிக்காமல் தடுத்து நிறுத்தினாள். குன்றுடையானுடன் வந்தி ருந்த ஆட்கள், காவலர்கள் மளமளவென ஆற்றில் குதித்து அருக்காணித் தங்கம் தவித்துக் கொண்டிருக்கும் இடம் நோக்கி விரைந்து நீந்தினர்.

அனைவரையும் முந்திக் கொண்டு மாயவர்; அவளைத் தூக் கிக் கொண்டு கரை நோக்கி நீந்தி வந்தார். இளமை கடந்து, நடுத்தர வயதையும் தாண்டி விட்ட அந்த முதியவர்; இப் போதும் எவ்வளவு வலிமையுடனும் துணிவுடனும் விளங்கு

கிறார் என்பதை, கரையோரம் கூடியிருந்தோர் அனைவரும் கண்டு ஆச்சரியத்தில் அமிழ்ந்து போயினர். செல்லாண்டியம்மன் கோயிலுக்கு எதிரில் இருந்த மண்டபத்தில் அருக்காணித் தங்கத்துக்கு முதலுதவி சிகிச்சைகள் அளிக்கப்பட்டன. நிரம்ப நீர் குடித்து மயங்கியிருக்கிறாள் என்பதை உணர்ந்து அவளைக் குப்புறப் படுக்க வைத்து முதுகையும் தோள் பட்டையையும் பலமாக அழுத்தினாள் தாமரைநாச்சியார். மூச்சுத் திணறுகிற அளவுக்கு உட்புகுந்திருந்த தண்ணீர். வாய் வழியாக வெளிப்பட்ட பிறகு; அருக்காணித் தங்கம் மெல்லக் கண் விழித்தாள். அவளைத் தன் மடியில் கிடத்திக் கொண்டு, ''தங்கம்! தங்கம்!'' என்று ஆவலுடன் விம்மி விம்மித் தாமரைநாச்சியார் அழத்தொடங்கினாள். ''அழாதேம்மா! நான் நன்றாக இருக்கிறேன்'' என்று தனது மலர்க்கொடி போன்ற கையால் தாயாரின் கன்னத்தில் உருண்டு கொண்டிருக்கும் கண்ணீர்த்துளிகளைத் துடைத்து விட்டாள் அருக்காணி!

''கூட்டம் போடாதீர்கள். எல்லோரும் போய் விடுங்கள். நல்ல காற்று வரட்டும்'' என்று மாயவர், அந்த மண்டபத்துக்குள் குழுமியிருந்தவர்களை வெளியில் போகச் செய்தார். அவரும் குன்றுடையானும் தாமரையும் மட்டுமே அருக்காணியின் அருகில் இருந்தனர்.

''உனக்குத்தான் நீந்தத் தெரியாதே அம்மா - பின் எதற்காக இந்த வேலே செய்தாய்! அதுவும் ஆற்றுச் சுழலில் போய் யாராவது நீந்துவார்களா? ஏ, அப்பா! எவ்வளவு பெரிய மடு அது!'' என்று குன்றுடையான், தனது மகளைப் பார்த்து உருக்கத்துடன் கேட்டார்.

''மசைச்சாமி என்பது சரியாக இருக்கிறது பார்! நீந்துவதற்கா அவள் ஆற்றில் குதித்தாள்?'' என்று மாயவர், தனக்குத்தானே கேட்டுக் கொண்டு குன்றுடையானின் வெள்ளை மனத்தை எண்ணி உள்ளூரச் சிரித்துக் கொண்டார்.

''அருக்காணி! என்னம்மா நடந்தது? யார் உன்னைத் துரத்தியது?''

மாயவர், மிகுந்த கனிவுடன் அவளைப் பார்த்துக் கேட்ட பொழுது; அவள் பதில் ஏதும் சொல்லாமல் கண்ணீர் வடித்தாள். நீர் வடிந்தது கண்களில் என்றாலும் கூடவே நெருப்புப் பொறியும் பறந்தது. அதை மாயவர் கவனிக்காமல் இல்லை. தான் பார்த்ததை அவள் பார்க்காதது போல மறைத்துக்

கொண்டு; ''அழாமல் சொல்லம்மா! உன்னைத் துரத்தி வந்த அந்த துஷ்டன் குதிரையில் ஏறி வேகமாகப் போனதை என் கண்களால் கண்டு விட்டுத்தான் கேட்கிறேன்; என்ன நடந்தது சொல்!'' என்று மாயவர், அருக்காணியை வலியுறுத்திக் கேட்டார். சற்று நேரத்துக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி அருக்காணியின் அகக்கண்களில் நிழலாடிற்று.

அம்மன் விழாவுக்குத் தாய் தந்தையருடன் வந்திருந்த அருக்காணித் தங்கம் திருவிழாவையொட்டி வைக்கப்பட்டிருந்த கடைகளை. வேடிக்கை பார்த்துக் கொண்டு உல்லாசமாக நடந்து கொண்டே கோயில் பிரகாரத்தைச் சுற்றி வந்தாள். பிரகாரத்தின் பல பகுதிகளில் சுவரில் செதுக்கப்பட்டும் - தனியாக அழகிய பீடங்களில் வைக்கப்பட்டுமிருந்த சிலைகளின் கவர்ச்சியில் மனத்தைப் பறி கொடுத்து சிற்ப வேலைப்பாடுகளை வியந்தவாறு களிப்பு பொங்க வந்து கொண்டிருந்தாள். சிவபார்வதி நடனச்சிலைகளைக் கண்டபோது அந்தச் சிலைகளைப் போலத் தானும் அபிநயம் பிடித்து அசைந்தாடி மகிழ்ந்தாள். ஒவ்வொரு சிலையாக உற்றுக் கவனித்து முன் மண்டபத்தூண்களின் பக்கம் வந்தபோது, ஒரு தூணில் அற்புதமாக அமைக்கப்பட்டிருந்த கல்மணியைக் கைகளால். தட்டிப் பார்த்தாள். அந்தக் கல்மணியோ வெங்கலமணியின் ஓசை தந்தது. அதைக் கேட்டதும் அவளுக்கு உற்சாகம் தாங்கவில்லை. செங்காந்தள் மலர்களை விரல்களாகச் சொருகி தாமரை இதழ்களால் உருவாக்கப்பட்டது போன்ற அவளது கைகள் மீண்டும் மீண்டும் அந்தக் கல்மணியைத் தட்டின. அதன் ஓசையின்பம் அந்த இளநங்கையைக் கிளுகிளுக்க வைத்தது.

அப்போது அடுத்துள்ள தூண்ம்றைவிலிருந்து முத்தாயி பவளாயி இருவரையும் கவனித்துக் கொண்டிருந்த மாந்தியப்பன்; அருக்காணியைப் பார்த்துவிட்டான். தூண்மறைவிலிருந்தவாறே அவள் அழகைக் கண்களால் உண்டு மகிழ்ந்தான்.

கோயில் பிரகாரத்திலும் சரி, மண்டபங்களிலும் சரி; எத்தனையோ வாளிப்பான உடல் கொண்ட சுந்தரிகளின் சிலைகள் இருக்கத்தான் செய்கின்றன. அந்தச் சிலைகளில் ஒவ்வொன்றிலும் ஒரு சிறந்த அழகை எடுத்து அனைத்தையும் மொத்தமாகத் தொகுத்த அழகாக அவள் விளங்குவதை உணர்ந்து, உடல்தகிக்க நின்றான். ஏற்கனவே• முத்தாயி, பவளாயி இருவரையும் வட்டமிட்டுக் கொண்டிருந்த அவன் - அவர்கள் தங்கள் தாய்தந்தையருடனேயே இருந்தமையால் சற்று சலிப்புற்று; அந்தக் கிளிகளைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்ற

நினைவுடனோ என்னவோ; கையருகில் தனியாக வந்துவிட்ட வெண்புறாவை விடக்கூடாதென்று; வறண்டு போன தொண் டையை உமிழ்நீர் கூட்டி நனைத்துக் கொண்டு காத்திருந்தான்.

கல்மணியைத் தட்டிவிட்டு, அந்த மணி அமைக்கப்பட்டுள்ள கல்தூணில் காதை வைத்துக் கேட்கும்போது ஒரு இனிய சங் கீதநாதமே எழுவது கண்டு அவள் ஆனந்தத்தில் மெய்மறந்து போனாள். அந்தச் செவிக்குச் சுவையும் சிந்தைக்குத் தெம்பும் ஊட்டும் நாதத்தை விட்டு வர அவளுக்கு மனமில்லை. அந்தத் தூண் மீதே காதை வைத்து ஒய்யாரமாகச் சாய்ந்து கொண் டாள். சற்று தொலைவில் நின்று பார்த்தால் அந்தப் பெருந் தூணில் ஒரு எழில்மிகு சிலை வடித்திருப்பது போலவே தோன்றியது.

உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் இளமையின் பூரிப்பு செழித்துக் குலுங்கிடும் வண்ணமயிலாள் தூணில் சாய்ந்து நிற் கும் கோணமும் - அவள் காட்டும் எழிற்கோலமும் - முற்றும் துறந்த முனிவரைக் கூடச் சற்று சலனப்படுத்துமென்றால்; உரலுக்கு ஒரு சேலை கட்டியிருந்தால் கூட அதனை எச்சில் ஒழுகிட உற்றுப் பார்க்கும் இயல்பு கொண்டவனான மாந்தி யப்பனால் காமக்கனலில் இருந்து மீள முடியுமா?

கல்மணித் தூணை விட்டு அகலாமல் மணியோசையை அனுப வித்துக் கொண்டிருந்த அருக்காணித் தங்கத்தின் கண்ணில் மாந்தியப்பன் மறைந்திருந்த தூண் பட்டது. ஆனால் அவள் கண்களில் மாந்தியப்பன் படவில்லை. அந்தத் தூணிலும் மணிச்சிற்பம் ஒன்றிருப்பதைப் பார்த்து விட்ட அருக்காணி, அந்தச் சிற்பத்தின் சிறப்பையும் தெரிந்து கொள்ளவும் அந்தக் கல்மணியின் நாதம் வித்தியாசமாக உள்ளதா என்பதை அறிந்து கொள்ளவும் விரும்பி அந்தத் தூணுக்குத் தாவினாள்.

தாவிய வேகத்தில் தன்னருகே மாந்தியப்பன் நின்றதை அவள் கவனிக்கவில்லை.

''மெல்ல! மெல்ல! பார்த்து! பார்த்து!'' என்ற ஆணின் குரல் கேட்டுத் திடுக்கிட்டவள்; அவனை நோக்கி, ''யார் நீங் கள்?'' என்று குரலை உயர்த்திக் கடுமையாகக் கேட்டாள்.

''நான் நிற்குமிடத்துக்கு வந்துள்ள உன்னைப் பார்த்து நான் கேட்க வேண்டிய கேள்வியை நீ என்னைப் பார்த்துக் கேட் கிறாய்! பரவாயில்லை; ஒரு பாவை கேட்கும்போது அதற்கு

பதில் சொல்லாமல் இருப்பது தர்மமில்லை. நான்தான் மாந்தியப்பன்! நெல்லிவளநாட்டுக் காவல் ஆட்சியாளரும், தலையூர்க்காளியின் புரவலருமான செல்லாத்தாக் கவுண்டரின் அருந்தவப்புதல்வன் இளவரசன் மாந்தியப்பன்!'' என்று ஆர்ப்பாட்டமாக விடையளித்து விட்டு, அவளையே விழுங்கி விடத் தீர்மானித்தவன் போல நெருங்கினான்.

நெல்லிவளநாடு - செல்லாத்தாக் கவுண்டர் - மாந்தியப்பன் ஆகிய பெயர்கள், தனது தாய் தந்தையர்களால் மட்டுமல்ல; உற்றார் உறவினர் மற்றும் குடையூர் மக்களால் பலமுறை உச்சரிக்கப்பட்டு - அவை வெறுப்புக்குரிய பெயர்களாக அருக்காணியின் உள்ளத்தில் ஏற்கனவே ஆழப்பதிந்திருந்த காரணத்தால் அந்த இடத்தில் ஒருக்கணமும் நிற்க அவள் விரும்பாமல் முகக்குறிப்பால் அகக்குறிப்பை வெளிப்படுத்திவிட்டு விருட்டென்று அங்கிருந்து அவள் நடக்கத் தொடங்கினாள். இளமானைப் போலிருந்த அவளது தோற்றம் திடீரெனப் புலியின் தோற்றங் கொண்டது. அவளைப் போக விடாமல் மாந்தியப்பன் குறுக்கே பாய்ந்து ஒரு சுவர்போல இரு கைகளையும் விரித்தவாறு நின்று கொண்டு, ''ஏனிப்படித் துடித்துப் போகிறாய்? நான் என்ன; உன்னைக் கடித்தா தின்று விடுவேன்?'' என்று கேலிச்சிரிப்பைக் கொட்டினான். அந்தச் சிரிப்பில் விரகதாப நெருப்பும் எரிந்துகொண்டிருந்தது. ஆத்திரத்தால் பதறிய அருக்காணியின் அங்கங்களும் - பெருமூச்சால் உப்பித் தணிந்து மீண்டும் உப்பிய சுவாசப்பையின் மாறுதல் உருவாக்கிய அவளது மேனியின் மாற்றமும் - மாந்தியப்பனின் உடலை மேலும் சூடு பண்ணியதால்;

''நீ என்னம்மா தேவலோகத்திலிருந்து திருவிழா காண வந்தவளா? ஊர்வசியா? ரம்பையா? திலோத்தமையா? வழி தெரியாமல் தவிக்கிறாய் என்று நினைக்கிறேன். என் தோளில் தொத்திக் கொண்டால் தொல்லையில்லாமல் உனக்கு வழி காட்டுவேன். சாதாரண வழியல்ல! இன்ப லோகத்துக்கு வழி!'' என்றபடி தனது முரட்டுக்கரத்தால் அவளது கரத்தைப் பற்றினான்.

ஒரு பெண்; தன்னுயிரைப் பாதுகாத்துக் கொள்ள எதிர்த்துப் போராடும்போதே தனிப்பலம் பெறுவாள் என்கிறபோது - உயிரைவிட மேலான கற்பைக் காத்துக் கொள்ள அதைவிட அதிக பலத்துடன் தானே எதிர்ப்பைக் காட்டுவாள்!

அவனது இரும்புப் பிடியிலிருந்து அருக்காணி தனது கையை ஒரு முறுக்கு முறுக்கி விடுவித்துக் கொண்டாள். அப்போது

அவளது முன் கையும் விரல்களும் இரத்தச்சிவப்பாகி, பச்சை நரம்புகள் எல்லாம் வெளியே தெரிந்தன.

''நீயெல்லாம் ஒரு மனிதனா? சீ!'' என்று சப்தம் போட்டுக் கத்தினாள் அருக்காணி!

''என்னைப் பார்த்தால் மனிதனாகத் தெரியவில்லையா?'' இப்படிக் கேட்டுக் கொண்டே மீண்டும் நெருங்கினான் மாந்தியப்பன்.

''இல்லை! நீ மனிதனே இல்லை! எவனோ ஒருவன் கூடு விட்டுக் கூடு பாய்கிற வித்தை தெரிந்தவன் மனித உடலை விட்டு விட்டு வேறு பிராணியின் உடலில் புகுந்த நேரம் பார்த்து அந்த மனித உடலைத் தூக்கிப் போட்டுக் கொண்டு வந்துள்ள மிருகம்தான் நீ!'' என்று ஆங்காரமாகப் பதிலுரைத்து விட்டுத் திரும்பினாள் அருக்காணி!

''மரியாதையாகப் பேசு! நான் யார் தெரியுமா?'' என்று அதட்டினான் மாந்தியப்பன்.

''அதுதான் சொன்னேனே மிருகமென்று! இன்னுமா தெரிய வேண்டும் உன்னைப்பற்றி? முட்டாளே! நான் யார் தெரியுமா உனக்கு? குன்றுடையான் தாமரைநாச்சியார் பெற்ற குலக் கொடி அருக்காணித் தங்கம்! இதை அறிந்து கொண்ட பிற காவது இங்கிருந்து அகன்று விடு!''

''அடடே - அப்படியா? இதை நீ சொன்ன பிறகு தான் எனக்கு ஆசையே அதிகமாகிறது! தாயார் தாமரை தான் கிடைக்கவில்லை - அவள் மகள் இந்த அல்லியாவது கிடைக் கட்டுமே!''

''சே! உன்னை மிருகம் என்று சொல்வது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது பார்த்தாயா? பண்பாட்டுப் பெருமை கொண்ட கொங்கு வேளாளர் குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக்காம்பு தான் நீ என்பதை நிரூபித்து விட்டாய்! உம்; விலகி வழிவிடு!''

கனல் தெறிக்க அருக்காணி சொற்களை வாரியிறைத்து விட்டு - அவனை மீறி அங்கிருந்து போக முனைந்த போது,

''முடியாது; உன்னைப் போக விட முடியாது! அதோ நிற்

கிறது என் குதிரை! உன்னைத் தூக்கி வைத்துக் கொண்டு அதில் போகப் போகிறேன். வா!" என்று மூர்க்கத்தனமாகக் கூறிக்கொண்டே, கடல் நண்டின் கால்களைப் போல் நீண்டிருந்த தன் கைகளால் அவளை இறுகத் தழுவினான்.

அவள், அவன் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டு நழுவிக் கொண்டு ஓடினாள். அவன் விடவில்லை. ஓடிய வேகத்தில் அருக்காணி, விழாப் பந்தலுக்கு மேல்புறத்தில் மண்டிக்கிடந்த புதர்களுக்கு மத்தியில் மறைந்து கொண்டாள். எனினும் மாந்தியப்பன் அவளை விடவில்லை. தொடர்ந்து துரத்தினான். புதர் மறைவுக்குள் புகுந்து புகுந்து அங்குமிங்கும் ஓடியவளை அவனும் முன்னும்பின்னுமாக ஓடித் தத்தளிக்கச் செய்தான்.

ஓடிக் கொண்டிருந்த அருக்காணி, அங்கு நின்றிருந்த மாந்தியப்பனின் குதிரையருகே போய்க் கீழே விழுந்தாள். எழுந்தாள். பார்த்தாள். அந்தக் குதிரையின் பக்கத்திலிருந்து அவளை வாரியணைத்துத் தூக்க மாந்தியப்பன் குனிந்தான். கொஞ்சம் ஏமாந்தாலும் காரியம் கெட்டு விடும் என்றுணர்ந்த அருக்காணி, தனது உயிருக்கும் மேலாக மதித்த கற்புச் செல்வத்தைக் காப்பாற்றிக் கொள்ள எழுந்து ஆற்றோரம் ஓடினாள்.

கால் தரையில் படுவது கூடத் தெரியாமல் மிக வேகமாக ஓடக் கூடியது மான் எனினும் குறுக்கே ஓடி அதன் குரல் வளையைப் பிடித்துக் குதறக் கூடிய திறமை வேங்கைப் புலிக்கு உண்டல்லவா; அதுபோலத்தான் ஆற்றோரம் ஓடிக் கொண்டிருந்த அருக்காணியைப் பிடித்து அனுபவிக்க மாந்தியப்பன் குறுக்கே ஓடினான். இனித் தப்பித்துக் கொள்ள வழியில்லையென்று கண்ட அருக்காணி, ஆற்றில் குதித்து விட்டாள்.

ஒரு பெண் பதறிப் போய் ஓடி ஆற்றில் விழுந்ததை ஆற்றோரம் நின்ற சிலர் பார்த்துத் துடித்தனர். பழி தன்னைச் சேராமல் பாதுகாத்துக் கொள்ள மாந்தியப்பன் குதிரையிலேறிப் பறந்து விட்டான்.

பெரிய ஆபத்திலிருந்தும், விபத்திலிருந்தும் அருக்காணித் தங்கம் தப்பித்துக் கொண்டாள் என்ற மகிழ்ச்சியொருபுறம் தாமரைக்கும் குன்றுடையானுக்கும் இருந்தாலும்கூட செல்லாத் தாக் கவுண்டர் குடும்பத்தினர் தங்கள் குடும்பத்தைப் பழி வாங்குவதிலும் - சீரழிப்பதிலும் இன்னமும் கண்ணுங்கருத்துமாகச் செயல்படுகிறார்களே என்ற வேதனை அதிகரிக்க ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

அப்போது மாயவர் குன்றுடையானைத் தட்டிக்கொடுத்து, ''நெல்லியங்கோடா! உணர்ச்சி வயப்படாதே! தலையூர்காளி தன் பக்கமிருக்கிற தைரியத்தில் செல்லாத்தாக் கவுண்டரும் அவர் மகனும் ஆடாத ஆட்டமெல்லாம் ஆடுகிறார்கள். அந்த ஆட்டத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வரவும், தலையூர்க் காளியையும் நல்லது எது கெட்டது எது என்பதைப் புரிந்து கொள்ளவைக்கவும் முடியுமென்ற நம்பிக்கையுடன் தான் நான் திரும்பியே வந்து தலையூரில் பொறுப்பை ஒப்புக் கொண்டிருக் கிறேன்'' என்று கூறினார்.

தாமரைநாச்சியாரின் கண்களில் தாரை தாரையாக நீர் வழிந்தது. தங்களுக்குரிய நில புலம் முதலிய சொத்துக்களை யும் ஆட்சி உரிமையையும் திரும்பக் கேட்கத் தானும் தன் கண வனும் செல்லாத்தாக் கவுண்டர் மாளிகைக்குச் சென்றிருந்த போது தனது கணவனின் உயிருக்கும் தனது கற்புக்கும் தகப் பனும் மகனும் ஏற்படுத்த இருந்த ஆபத்தை நினைவுக்குக் கொண்டு வந்த தாமரைநாச்சியாருக்கு இருதயமே இப்போது வெடித்து விடும் போலிருந்தது. மாயவரைப் பார்த்து அவள் அழுதவாறு சொன்னாள் என்றாலும் - அவள் நெஞ்சில் தீப் பொறிகள் பறந்து கொண்டிருப்பதை மாயவரால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

''அய்யா! நாங்கள் பெற்ற பிள்ளைகளில் இவள் ஒருத்தி தான் மிச்சமிருக்கிறாள்; இவளையும் பறி கொடுத்து விட்டு நாங்கள் என்ன செய்வோம்! எப்படி உயிரோடு வாழ்வோம்!''

மாயவர் அருக்காணித் தங்கத்தை அன்பு பொங்கப் பார்த் தார். தாமரை வெளியிட்ட சோகம் அவரைக் கலக்க மடையச் செய்யவில்லை. காரணம்; தாமரைக்கும் குன்றுடையானுக்கும் பிறந்த பிள்ளைகளில் அருக்காணி மட்டுமே மிச்சமிருக்கிறாள் என்பது தவறான கணக்கு என்பதை அவர் தெரிந்து கொண்டி ருந்தார். அவர்களின் பிள்ளைகளான ஆண் மக்கள் பொன் னர் சங்கர் இருவரும் உயிரோடு இருக்கிறார்கள் என்ற விப ரத்தை மாரிக்கவுண்டன் பாளையத்தில் ராக்கியண்ணன் மாய வரிடம் கூறியிருந்ததால் மாயவருக்கு தாமரையின் சோகத்தில் பங்கு கொள்ளக் கூடிய அக்கறை ஏற்படவில்லை.

ஆனால் ஒன்று; தாங்கள் பெற்ற பொன்னரையும் சங்க ரையும் குழந்தைப் பருவத்திலேயே இழந்துவிட்டதை மட்டுமே அறிந்து சோகத்தில் மூழ்கியிருக்கிறார்களேயல்லாமல் எப்படி அந்தக் குழந்தைகளை இழக்க நேரிட்டது என்பதையோ அல்

லது யாரால் அந்த இழப்பு நேரிட்டது என்பதையோ தாம ரையும், குன்றுடையானும் அறியாதவர்களாகவே இருக்கிறார் கள் என்பதை மாயவர் தெளிவாகவே புரிந்து கொள்ள முடிந் தது.

தாயின் மடியில் படுத்துக் கொண்டும் பின்னர் அவள் தோளில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டும், ஓரளவு தன்னிலை யைச் சரிப்படுத்திக் கொண்ட அருக்காணி தங்கம் களைப்பு நீங்க மெல்ல எழுந்து நின்றாள்.

அழுது கொண்டிருக்கும் தாயாரையும், அவளைப் பார்த்துக் கண்கள் கலங்கிட அமர்ந்திருக்கும் தந்தையையும் நோக்கி வீரா வேசமாகப் பேசினாள்.

''அண்ணன்மார்கள் இருவரை நான் இழந்து விட்டேன். நீங் களும் ஆண் பிள்ளைகள் இருவரை இழந்து விட்டீர்கள். அம்மா! அப்பா! நான் ஒருத்தி மிச்சமிருக்கிறேன்! இழந்து விட்ட அண்ணன்மார்கள் இருவரின் வலிமையையும், துணி வையும், நான் ஒருத்தி ஏன் பெறக் கூடாது? நம்மைப் பழி வாங்குவதையே குறிக்கோளாகக் கொண்டு அலையும் செல் லாத்தாக் கவுண்டர் குடும்பத்தையும் அவர்களுக்குத் துணை நிற்கும் தலையூர் ஆட்சியையும் இனி நானே எதிர்த்துப் போராட எனக்கு அனுமதி கொடுங்கள்! இன்று நடந்துவிட்ட இந்த அக்கிரமமான நிகழ்ச்சிக்குப் பிறகும் பொறுமையாக இருப்பது கோழைத்தனம். அநியாயத்தை எதிர்த்து நாம் நடத் தப்போகும் தர்மயுத்தத்தில் நமது குடும்பமே பூண்டற்றுப் போனாலும் சரி; ஒரு புனித காரியத்துக்காக அழிந்து போனோம் என்று எதிர்கால வரலாறு நமக்காக ஒரு புதிய அத்தியாயத் தைச் சேர்க்கட்டும். அனுமதி கொடுங்கள்!''

சீற்றம் பொங்கப் பேசிக் கொண்டிருந்த அவளது தலையைக் கோதி விட்டவாறு மாயவர், ''அம்மா; அருக்காணி! அவசரப் படாதே! பொன்னரும் சங்கரும் இல்லையென்பது உறுதிப்பட் டால்தானே; நீ போர்க்கோலம் பூண வேண்டும்!'' என்றார் புன்னகை மலர்ந்த முகத்துடன்!

''என்ன சொல்கிறீர்கள்? பொன்னரும் சங்கரும் இருக்கிறார் களா? நான் பெற்ற செல்வங்கள் உயிரோடு இருக்கிறார்களா?'' என்று ஆவலின் முகட்டுக்கே சென்று தாமரைநாச்சியார், மாயவரைப் பார்த்துக் கேட்டாள்.

# 13 வழியில் வந்த விபரீதம்



''பொன்னரும் - சங்கரும் உயிரோடிருக்கிறார்களா?'' என்று தாமரை நாச்சியார் மாயவரைப் பார்த்துக் கேட்டபோது, ''ஆம்'' என்றும் சொல்லாமல் ''இல்லை'' என்றும் சொல்லா மல் அவர் ஒரு புன்னகையை இதழோரத்தில் நெளியவிட்டார். அந்தப் புன்னகை கூட; நீண்டு, அடர்ந்து வளர்ந்திருந்த அவ ரது தாடி மீசைக்கிடையே ஒளிந்து கொண்டுதான் கருமேகம் கிழித்து வரும் கவின் நிலவு போல வெளிப்பட்டது.

''நான் உங்களோடு குடையூருக்கு உங்கள் மாளிகைக்கு வருவதாக இருக்கிறேன். பொன்னர் - சங்கர் பற்றி இந்த மண்டபத்தில் பேசுவதை விட அந்த மாளிகையில் பேசுவது சிலாக்கியமெனக் கருதுகிறேன். நான் வரலாமல்லவா?'' என்று மாயவர், குன்றுடையானைப் பார்த்துக் கேட்டார்.

''தாராளமாக வாருங்கள். இப்போதே புறப்படலாம்'' என்று மகிழ்ச்சி பொங்கக் குன்றுடையான் பதிலளித்தான்.

பொன்னரும் சங்கரும் ஆரிச்சம்பட்டி மணியங்குரிச்சியில் சின்ன மலைக்கொழுந்துவின் இனிய உபசாரத்தில் மகிழ்ந்து இருக்கிறார்கள் என்பது செல்லாண்டி அம்மன் கோயில் மண்ட பத்திலிருக்கும் தாமரைக்கோ அல்லது குன்றுடையானுக்கோ எப்படித் தெரிய முடியும்? அவர்களைப்பற்றி தேன் துளி போன்ற ஒரு செய்தியைச் சொன்ன மாயவருக்கே கூட அவர் கள் மணியங்குரிச்சி மாளிகையில் இருப்பது தெரியாதுதானே!

தனது பெண்கள் முத்தாயி, பவளாயி இருவரையும் பேரா பத்திலிருந்து காப்பாற்றிய பொன்னர் - சங்கரையும் அவர் களது உற்ற நண்பன் வீரமலைச் சாம்புவனையும் சின்ன மலைக்கொழுந்து மிக்க நன்றியுணர்வோடு வரவேற்றது மட்டு மல்ல; சங்கரின் காயத்திற்கு மருத்துவர்களைக் கொண்டு நல்ல

மூலிகைச் சாறுகளைத் தடவி குணப்படுத்துவதிலும் அக்கறை காட்டினார்.

வலியையும்,எரிச்சலையும் போக்கி, ரத்தக் கசிவை உடனடியாக நிறுத்தக் கூடிய பச்சிலைச்சாறு என்ற காரணத்தால் சங்கர் நன்றாக எழுந்து நின்று வழக்கம்போல் கம்பீரமாக கண்ணொளி சிந்திப் பொன்னரைப் பார்த்தபோது; பொன்னர் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான். அவர்களது பாச உணர்வைக் கண்ட சின்ன மலைக்கொழுந்து அவருக்குத் தெரிந்த புராண கதாபாத்திரங்கள் நினைவுக்கு வரவே;

''ஏ அப்பா! ராம லட்சுமணர் மாதிரி சகோதர பாசத்தோடு இருக்கிறீர்களே?'' என்று மூக்கின் மீது விரலை வைத்துக் கொண்டார். உடனே வீரமலைச் சாம்புவன் அவரைப் பார்த்து சிரித்துக் கொண்டே,

''ஆமாம்! நான்தான் இந்த ராம லட்சுமணருக்கு அனுமார்!'' என்றான்! மாளிகைக் கூடத்திலிருந்த எல்லோருமே கலகலவெனச் சிரித்து விட்டனர்.

''வால்தான் பாக்கி!'' என்றான் சங்கர்; குறும்புப் புன்னகையுடன்!

''இத்தோடு நிறுத்துங்கள் ராமாயணத்தை! இதற்கு மேல் வனவாசம் - அசோகவனம் - இலங்காதகனம் - யுத்த காண்டம் என்றெல்லாம் போய்விடாதீர்கள்'' என்று பொன்னர் கூறியபோது, அந்தப் பேச்சில் இருந்த நிதானத்தையும் அடக்கத்தையும் சின்ன மலைக்கொழுந்து கவனிக்கத் தவறவில்லை.

அவர்களின் உரையாடலின் நடுவே சமையல்காரன் நுழைந்து; ''எஜமான்! உணவு தயார்! என்று மெத்த மரியாதையுடன் குனிந்து நின்றவாறு சொன்னான். கைகளைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வெள்ளிச் செம்புகளில் தண்ணீர் கொண்டு வந்து தரப்பட்டது.

''உம்! வாருங்கள்; சாப்பிடலாம்!'' என்று சின்னமலைக் கொழுந்து இன்முகத்துடன் அழைத்தார்.

எந்தத் தாமரைநாச்சியாரும் அவள் கணவனும் இனி வீட்டுக்குள் இருக்கக் கூடாது என விரட்டியடிக்கப்பட்டார்களோ; அந்தத் தாமரைநாச்சியின் செல்வப்புதல்வர்கள் பொன்னர் -

சங்கர் இருவரும் அதே வீட்டில் ராஜ உபசாரத்துடன் நடத்தப் படுகிறார்கள்!

இந்த உண்மை சின்னமலைக்கொழுந்துக்கும் தெரியாது; பொன்னர் - சங்கருக்கும் தெரியாது; அவர்களின் பெற்றோருக்கும் தெரியாது

பொன்னருக்கும் சங்கருக்கும் நடுவிலே உட்கார்ந்து கொண்டு, பரிமாறுகிறவனின் பாத்திரத்திலேயுள்ள பண்டங்களைத் தானே தனது கைகளால் எடுத்து அவர்களது இலைகளில் வைத்து; ''உம்! நிறைய சாப்பிடுங்கள்! மணியங்குரிச்சியில் கிழங்கு வறுவல் மிக நன்றாக இருக்கும்! இங்கே போடுகிற வடவத்துக்கே ஒரு தனி ருசிதான்! மிளகுச்சாறு காரமில்லாமல் இருக்கும்! ஜீரணத்துக்கு மிகவும் நல்லது! பொதுவாகக் கொங்கு நாட்டில் கட்டித் தயிருக்குக் கேட்க வேண்டியதில்லை - அதிலும் மணியங்குரிச்சி தயிருக்கு ஒரு அலாதி மகிமை உண்டு!'' என்று சின்னமலைக்கொழுந்து அடுக்கிக் கொண்டே போனார்.

''சாப்பிடுவதைக் காட்டிலும்; நீங்கள் சொல்வதைக் கேட்பது மிகவும் சுவையாக இருக்கிறது! என்றான் சங்கர்! தம்பியின் கேலியை வெகுவாக ரசித்து மகிழ்ந்தான் பொன்னர்!

''ஆமாம்; நீங்கள் வந்து எவ்வளவு நேரமாகிறது! காவிரிக் கரையில் கேட்ட போதும் சொல்லவில்லை; வழியில் பயணத்தின் போதும் சொல்லவில்லை; இப்போதாவது உங்கள் பெயர்களைச் சொல்லக்கூடாதா?'' என்று சின்னமலைக்கொழுந்து ஆவல் ததும்பிட அவர்களைப் பார்த்துக் கேட்டார்.

சிரிப்பு தழைக்க உணவருந்திக் கொண்டிருந்த அவர்கள் மௌனமாகிவிட்டனர். ''ஓ! வாயில் சோறு இருக்கிறதோ?'' என்று சின்னமலைக்கொழுந்து யதார்த்தமாகக் கேட்பது போலக் கேட்டார்.

எல்லோரும் பொன்னர் - சங்கர் வாயசைவை உற்று நோக்கிக் கொண்டு உணவருந்துவதைக் கூட மறந்திருந்தனர். ஆனால் அவர்களிடமிருந்து எதிர்பார்த்த பதில் கிடைக்கவில்லை. ஒரு வழியாக சாப்பாட்டு நிகழ்ச்சி முடிவுற்று, அனைவரும் எழுந்து வந்து கைகழுவிக் கொண்டு, மாளிகையின் முன்கட்டில் பட்டு மெத்தை தைக்கப்பட்ட நாற்காலிகளில் அமர்ந்தனர்.

வெள்ளித் தட்டுகளில் தாம்பூலம் கொண்டு வந்து வைக்கப்

பட்டது. பொன்னர் - சங்கர் இருவரும் தாம்பூலத்தட்டுகளையே பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது வீரமலைச் சாம்பு வன் அருகே வந்து, தாம்பூலத்தை எடுத்து அவர்களுக்கு மடித் துக் கொடுத்தான். இருவரும் அதனைப்பெற்றுக் கொள்ளத் தயங்கினர். ''தாம்பூலம் போடும் பழக்கம் கிடையாதா?'' என் றார் சின்னமலைக்கொழுந்து!

''பழக்கம் இல்லாவிட்டாலும் இப்போது போட்டாக வேண் டும். அப்போதுதான் உங்கள் கேள்விக்கு பதில் சொல்லாமல் வாயைக் குதப்பிக் கொண்டிருக்க முடியும்!'' என்றான் வீர மலைச்சாம்புவன்.

''பயப்படத் தேவையில்லை! நான் இனிமேல் பெயர் கேட் டுத் தொல்லை கொடுக்கமாட்டேன்! ஓய்வெடுக்க வசதியான அறைகள் இருக்கின்றன! உண்ட மயக்கம் தொண்டருக்கும் உண்டு என்பார்கள்'' சற்றுப்படுத்துக்களைப்பாறுங்கள்'' என்று சின்னமலைக்கொழுந்து வேண்டிக் கொண்டார்.

பொன்னரும் சங்கரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு - வீரமலைச்சாம்புவனையும் பார்த்தனர். அவர்கள் முன்னால் ராக்கியண்ணன் நிற்பது போல் தோன்றியது. எதிர்பாராமல் இவ்வளவு தொலைவு வந்து விட்டோம்; ஆசானுக்கும் எந்தத் தகவலும் அனுப்பவில்லை; அதனால் உடனே திரும்புவது தான் நல்லது என்ற முடிவுடன் மணியங்குரிச்சியாரைப் பார்த்து, ''தயவு செய்து எங்களுக்கு விடை கொடுங்கள்! நாங்கள் புறப்படுகிறோம்'' என்றனர்.

உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த மணியங்குரிச்சிக் கவுண் டர் திடீரென எழுந்தவாறு; ''நல்ல காரியம் செய்தீர்கள்! என் மனைவி சிலம்பாயியும், மகன் வையம்பெருமானும் உங்களால் காப்பாற்றப்பட்ட என் பெண்களும் இந்நேரம் பாதி வழியைத் தாண்டியிருப்பார்கள். அவர்கள் வந்து நீங்கள் எங்கேயென்று கேட்டால் என்ன பதில் சொல்வது? உங்களைப் பார்க்கவும் பரிந்து உபசாரம் செய்யவும் அவர்களுக்கு எவ்வளவு ஆசை இருக்கும் தெரியுமா?'' என்று ஒரு சிறிய சொற்பொழிவே நிகழ்த்திவிட்டார்.

''எங்களை மன்னித்துக் கொள்ளுங்கள். எங்கள் ஆசானைப் பிரிந்து இவ்வளவு தொலைவு வந்ததும் - இவ்வளவு நேரம் இருந்ததும் கூட எங்கள் பாசறை வாழ்க்கையில் புதுமையான ஒன்று! எங்களைப் பற்றி அவர் என்ன நினைத்துக் கொண்டி

ருக்கிறாரோ? எப்படிக் கவலைப்படுகிறாரோ? எங்கெல்லாம் தேடுகிறாரோ? அதனால் விரைவில் நாங்கள் மாரிக்கவுண்டன் பாளையம் போய்ச் சேர வேண்டும்'' என்று தம்பியையும் அணைத்தவாறு எழுந்து கொண்டான் பொன்னன்.

''உங்கள் ஆசான் ராக்கியண்ணனைப் பற்றி எனக்குத் தெரியாதா என்ன? இளமைக்காலத்தில் அவர் எப்படிப்பட்டவர் என்பதையும், எவ்வளவு முரட்டு சுபாவம் உடையவர் என்பதையும், அப்போதெல்லாம் அவருக்குக் கோபம் மூக்கிலேயே நிற்கும் என்பதையும் நான் நன்றாக அறிவேன். நான்கூட அவரிடத்தில் சில காலம் போர்ப்பயிற்சி பெற்றவன்தான். அப்போதுதான் அப்படி எரிமலையாகவே இருப்பார். இப்போது ஒரு நீரோடை போல நிதானங் கொண்டவராக ஆகி விட்டார். எங்கே போனீர்கள் என்று அவர் கடிந்து கொண்டால் கூட; மணியங்குரிச்சி சின்னமலைக்கொழுந்து மாளிகைக்கு என்று தெரிவிப்பீர்களேயானால் மெத்தவும் மகிழ்ச்சி அடைவார். தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். செல்லாண்டியம்மன் கோயிலில் இருந்து திரும்பி வருகிற என் குடும்பத்தார் வந்ததும் - அவர்களைப் பார்த்து விட்டு உடனே நீங்கள் புறப்பட எந்தத் தடையும் சொல்லமாட்டேன்'' எனப் பொரிந்து தள்ளிய மணியங்குரிச்சியாரின் பேச்சுக்கும் சற்று மதிப்புக் கொடுத்து உட்காரலாமா என்று பொன்னரும் சங்கரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

அவர்களுக்குப் போகவும் வேண்டுமென்ற அவசரம் - அதே சமயத்தில் அந்தப் பெண்கள் முத்தாயி, பவளாயி இருவரும் திரும்பி வந்ததும் ஒருமுறை பார்க்க வேண்டுமென்ற இனமறியாத உணர்வு ஒரு புறம் - இந்த ரகசியத்தை அங்கிருந்தவர்களில் சரியாகப் புரிந்து கொண்டவன் வீரமலைச்சாம்புவன் மட்டுமே!

சுழன்றடித்த சூறாவளிக்கும் சுற்றி வளைத்த மலைப்பாம்புக்கும், முதலைக்கும் ஈடுகொடுத்துத் தங்களை மீட்டுக் கரையேற்றிய இணையற்ற வாலிபர்களை இருவிழி கொட்டாமல் அந்த மலர்க்கொடி மகளிர் பார்த்த காட்சியை வீரமலைச் சாம்புவன் காணத்தவறவில்லை. முரட்டுத்தனமான வீரமும் ஆண்மையும் மாத்திரமே குடிகொண்டிருந்த பொன்னர் - சங்கர் இருவரின் முகங்களிலும் பாசமும் அன்புப் பிரவாகமும் ஒரு பாறையின் மீது படர்ந்த பனிப்படலம் போல் கெட்டியாகப் படர்ந்ததையும் வீரமலைச்சாம்புவன் கண்டான்; கணக்கிட்டுக் கொண்டான். அதனால்; போக வேண்டுமென்று இரு

வரும் துடித்தாலும் கூட - இன்னும் கொஞ்சம் அழுத்தமாக வற்புறுத்தி அந்த மயில்கள் வரும் வரையில் தங்கச் செய்து விடமாட்டார்களா என்ற ஆவலும் அந்த வாலிப இதயங்களில் வண்ணக் கோலமிட்டிருப்பதை வீரமலையினால் புரிந்து கொள்ள முடிந்தது. அதனால் அவன் தனது நண்பர்களுக் காகப் பேச முனைந்து; சின்னமலைக்கொழுந்துக் கவுண்டருக் காகப் பரிந்து பேசுவது போல நன்றாக நடித்தான்;

"நடந்த விஷயங்களையெல்லாம் நமது ஆசானிடம் விவர மாக எடுத்துச் சொன்னால் அவர் ஒன்றும் கோபித்துக் கொள்ள மாட்டார். நான் அவரிடம் சொல்ல வேண்டிய முறையில் சொல்லி சமாதானப்படுத்துகிறேன். மணியங்குரிச் சியார், பேச்சைத் தட்ட வேண்டாம். இன்னும் சிறிது நேரம் தாமதிக்கலாம் என்று வீரமலை கூறியவுடன்; அது பிடிக்காத வர்கள் போல பொன்னரும் சங்கரும் அலுத்துக் கொண்டார் கள் என்றாலும் மனதுக்குள் "நண்பன் என்றால் இவன்தான் நண்பன்" என்று பாராட்டியதோடு அவனுக்கு இதயமார வாழ்த்தும் தெரிவித்துக் கொண்டார்கள்.

செக்கச் சிவந்த செந்தூரப் பொடி வெண்மையான ஆடை யில் பட்டு விட்டால் என்னதான் ஓங்கியடித்துத் தட்டினாலும் அது அந்த ஆடையை விட்டு அகலாது! துடைக்கத் துடைக்கப் பலமாகப் பிடித்துக் கொண்டு விடும்! அதுபோல பொன்னர் மனத்தில் முத்தாயியின் உருவமும், சங்கர் மனத்தில் பவளாயி யின் உருவமும் படிந்து விட்டன என்றே கூற வேண்டும்.

இவர்களுக்கு என்ன நிலையோ; அதே நிலைதான் மணியங் குரிச்சி நோக்கி ரத வண்டியில் வந்து கொண்டிருக்கும் முத் தாயி பவளாயி நிலையும்!

அரும்பாடுபட்டு விசாரித்தும் அர்ச்சனை செய்வதற்கு அவர் கள்பெயர் தெரியாமலே போய்விட்டதால்; வேறு வழியின்றி - விளையாட்டாக வையம்பெருமான் சொன்னது போல; பெரியாண்டான், சின்னாண்டான் என்ற பெயர்களுக்கே அம் மனுக்கு அர்ச்சனை செய்து முடிக்கப்பட்டது. அம்மனின் ஆயி ரம் நாமங்களை உச்சரித்துப் பூசாரியார் அர்ச்சனை முடித்துத் தூப தீபங்களைக் காட்டும் போதும்- தட்டில் குங்குமம் வைத்து எடுத்து வந்து கொடுத்தபோதும் - அம்மனுக்கு சாத்தியிருந்த பூச்சரத்தைக் கிள்ளி வழங்கிய போதும் - சிலம்பாயியின் மனம்; "அந்தப் பிள்ளையாண்டான்கள் நன்றாக இருக்க

வேண்டும் தாயே!'' தீர்க்காயுளுடன் வாழவேண்டும் தாயே!'' என்று பிரார்த்தனை செய்த அதே வேளையில்; முத்தாயி - பவளாயி இருவரின் இதயத்து உதடுகள்; ''அந்த அடலேறு களுக்கு வாழ்க்கைப்பட அம்மன் அருள் புரிவாளா? என்று தான் உச்சரித்துக் கொண்டிருந்தன. காதல் உச்சரிப்பு அல் லவா? அதனால் யார் காதிலும் அது விழவில்லை!

வழியில் வண்டியில் வரும்போது அதே நினைப்புத்தான் அவர்களுக்கு! ரத வண்டியின் முன்னும் பின்னும் பாதுகாப் புக்கான வீரர்கள் பலர் குதிரைகளில் சென்று கொண்டிருந்த னர். இருள் மெல்லத் தனது ஆதிக்கத்தைச் செலுத்தத் தொடங்கி விட்டதால் பயணம் மெதுவாகவே நடை பெற்றுக் கொண்டி ருந்தது.

தன் மகள்கள் இருவரும் தாமரை நாச்சியாரையும் அவள் கணவன் குன்றுடையானையும் பார்க்கும் வாய்ப்பு ஏற்பட்டதை எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்த சிலம்பாயி; பயணத்தில் சிறிது தூரம் வரையில் அதைப்பற்றியே பேசிக் கொண்டு வந்தாள்.

சிலம்பாயி, மணியங்குரிச்சி மாளிகைக்கு மருமகளாக வரு வதற்கு முன்பே தாமரைநாச்சியின் திருமணத்தகராறு நடந்து முடிந்து விட்டபடியால் - அந்த புயலைப்பற்றி அதிகம் தெரி யாதவளாகவும்; நேரடியான பாதிப்புக்கு ஆளாகாதவளாகவும் இருந்தாள். தனக்கு பிறக்கும் பிள்ளைகளுக்குத் தனது சகோ தரன் பெண்களை மணமுடிப்பேன் என்று தாமரையாள் சப தம் செய்திருந்ததை அவள் கேள்விப்பட்டிருந்தாள். தாமரை யாளுக்கு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்த சேதியும் - மிகக் குறுகிய காலத்தில் அந்தக் குழந்தைகள் காணாமற் போய் விட்ட சேதியும் சிலம்பாயியின் செவிகளிலும் விழுந்திருந்தன! அந்தக் குழந்தைகளின் மூலம் மீண்டும் குன்றுடையான் குடும் பத்துக்கும் மணியங்குரிச்சிக்கும் உறவு மலரக் கூடும் என்ற கனவும் பொய்த்து விட்டது. தாமரைநாச்சியாருக்கு ஒரு பெண் இருப்பதாக சிலம்பாயிக்குத் தெரியும். அந்தப் பெண்ணைத் தனது மகன் வையம்பெருமானுக்கு மணமுடித்து வைத்தால் பழையபடி சொந்த பந்தம் உயிர்பெற வழியுண்டு.

அப்படியொரு ஏற்பாட்டுக்குத் தனது கணவன் ஒப்புதல் தருவாரா? அவரே ஒப்புக் கொண்டாலும் தாமரைநாச்சியார் சம்மதிப்பாளா? நாச்சியாரின் பிள்ளைகளுக்கு மணியங்குரிச் சிப் பெண்களைக் கட்டுவதுதானே அவளது குறிக்கோளாகவும்,

சபதமாகவும் இருந்தது; அது நிறைவேறாத நிலைமையில் தனது ஆசையை நிறைவேற்ற தாமரைக்கு எப்படி அக்கறை வரப்போகிறது?

இப்படியெல்லாம் பல்வேறு சிந்தனைகளுடன் சிலம்பாயி வண்டியில் அமர்ந்திருந்தாள்

பொன்னரின் வாட்டசாட்டமான உருவம் - பொலிவு நிறைந்த முகம் - வீரத்தை முரசு கொட்டி அறிவிக்கும் மீசை - யானை மத்தகத்தைப் பிளந்து இருபுறமும் வைத்தது போன்ற தோள்கள் - உற்றுப் பார்த்தால் சிங்கம் - உயரத் தலையைத் தூக்கினால் வேங்கை; நினைத்து நினைத்து நெஞ்சை இனிப் பாக்கிக் கொண்டிருந்தாள் முத்தாயி!

என்னே எஃகு போன்ற உறுதியான உள்ளம்! இதழ்களுக்கு மேலே ஈட்டியின் முனைகள் இரண்டை வைத்தது போல் மீசை! தேர்த்தட்டோ? மார்போ? எனத் திகைக்க வைக்கும் தேகக்கட்டு! அர்ச்சுணன் - அபிமன்யு - இந்திரஜித்தன் - என்று புராணவீரர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்; அவர்களில் ஒருவரை நேரிலே காணும் பாக்கியமல்லவா இன்று எனக்கு கிடைத்தது! இப்படியெண்ணிப் பெருமூச்சு விட்ட பவளாயின் நெஞ்சகம் விம்மிப்புடைத்தது!

கறுப்புக் கோடுகளால் நெருக்கிப் பின்னும் இரவின் நெசவுக்கிடையே அவர்களின் ரத வண்டி, காவிரியின் தென்கரையில் குளித்தலை வரையில் கிழக்கு நோக்கி மெதுவாகவே சென்று; குளித்தலையிலிருந்து தெற்கு நோக்கி சற்று வேகமாகப் போகத் தொடங்கியது. ஆற்றோரச் சாலையைக் கடந்து விட்டபடியால் ஆரிச்சம்பட்டிப் பாதை அகலமாக இருந்ததாலும் - மேடு பள்ளங்கள் அதிகமில்லாததாலும் குதிரைகள் சிரமமின்றி ஓடுவதற்கு வசதியாக இருந்தது.

நல்ல பாதையானாலுங்கூட இடையிடையே அடர்த்தியான பெரும் புதர்களை கடக்க வேண்டியிருந்தது. புதர்கள் இருபுறமும் வரும் போதெல்லாம் ரத வண்டிக்கு முன்னால் பாதுகாப்புக்குச் சென்ற குதிரை வீரர்கள் உரக்கச் சத்தமிட்டு, ''வேல்! வேல்! வீரவேல்!'' என்று கூறிக் கொண்டு போனார்கள். அந்தப் பெரும் ஒலி கேட்டு, புதர்களில் பதுங்கியிருந்த நரிக்குட்டிகள், காட்டு முயல்கள், ஒரு புதரிலிருந்து மற்றொரு புதருக்குச் சல சலப்பு காட்டி ஓடிக் கொண்டிருந்தன. நடுச் சாலையில் ஓடிய வேகத்தில் கீரிப்பிள்ளைகள் சிலவும், முயல்

கள் சிலவும் குதிரைகளின் குளம்படிகளுக்கும் பலியாயின.

எல்லாப் புதர் அடர்ந்த வழிகளையும் கடந்தாயிற்று - மிச்சம் ஒரே ஒரு இடந்தான்! மிகமிக அடர்த்தியாகவும் நீளமாகவும் புதர் மண்டிய பகுதி - அந்த இடத்தை ரத வண்டி கடந்த போது, ''வேல்! வேல்! வீரவேல்!'' என்று சத்தம் கேட்டது. அந்த சப்தம் பாதுகாப்புக்குச் சென்ற குதிரை வீரர்களின் சப்தம் மட்டுமல்ல; மேலும் ஏராளமான குதிரை வீரர்கள் சூழ்ந்து கொண்டு எழுப்பிய சப்தமாக இருந்தது.

அந்த ஒலியுடன் வாட்கள் ஒன்றோடொன்று மோதிய ஒலிகளும் எழுந்தன! ''ஆ! அய்யோ!'' என்று கூவிக்கொண்டு அடங்கிப் போகும் மரண ஒலிகளும் அதில் கலந்திருந்தன.

''நிறுத்தாதே! வண்டியை வேகமாக ஒட்டு!'' என்று வையம் பெருமான் கத்தினான். அவன். உத்திரவுப்படி ரத வண்டி வேகமாக ஒட்டப்பட்டது. ஆனால் முடியவில்லை! ஏராளமான குதிரை வீரர்கள் வண்டிக்கு முன்னால் நின்று வண்டியைப் போக விடாமல் தடுத்து விட்டனர்!

தடுத்துச் சூழ்ந்த அந்த வீரர்கள் மீது மணியங்குரிச்சியின் பாதுகாப்பு வீரர்கள், தங்கள் உயிரைப்பற்றிக் கவலைப்படாமல் பாய்ந்தனர். பயனில்லை. உயிரிழந்து கீழே சாய்ந்தனர்!

வேல்கள், கேடயங்களில் மோதிய ஒலியும் - வாட்கள் ஒன்றோடொன்று உரசி எழுந்த ஒலியும் அந்தப் பகுதி முழுதும் எதிரொலித்தது. பகல் முழுதும் இரைதேடிப் பறந்து திரிந்து மரப்பொந்துகளிலும் கிளைகளிலும் புதர்களிலும் அடங்கிக் கிடந்த பல்வேறு பறவைகளும் அந்தப் பயங்கர ஒலியின் அதிர்ச்சியால் வெளிக் கிளம்பிச் சிறகடித்து வேறிடம் நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

காவலுக்கு வந்த வீரர்கள் தாக்குப் பிடிக்க முடியாத அளவுக்குப் பிணமாயினர் சிலர்! குற்றுயிரும் குலை உயிருமாக உருண்டு புரண்டனர் சிலர்! செத்தோமோ பிழைத்தோமோ எனத் தெரியாமல் சிதறிப் போயினர் சிலர்!

ரத வண்டியைச் சுற்றி முற்றுகை பலமாயிற்று! முற்றுகையிட்டவர்கள் யாரென்று வண்டியிலிருப்பவர்களுக்குத் தெரியவில்லை. புதர்களில் இருந்து வளைத்துக் கொண்டு தாக்கி சூழ்ந்து நிற்கும் அந்த வீரர்களில் ஒருவன் கூட வாய் திறந்து

எதுவும் பேசவில்லை! வண்டியிலிருந்த வையம்பெருமான் தனது வாளை உருவிக்கொண்டு கீழே பாய முனைந்தான்.

தன் தாயாரையும், சகோதரிகளையும் காப்பாற்ற வேண்டும்; அல்லது அந்த முயற்சியில் செத்து மடிய வேண்டும் என்ற ஒரே உறுதியுடன் சிங்கக் குட்டி போல் சீறிய அவனைச் சிலம்பாயி தடுத்து வண்டிக்குள் தள்ளத் தன் பலம் முழுவதையும் உபயோகித்தாள்; அவனோ அன்னையை மீறிக் கொண்டு வண்டியிலிருந்து இறங்கி விட்டான். ''வேண்டாம் அண்ணா! வேண்டாம்!'' என்று அலறியவாறு அவன் தங்கைகள் இருவரும் அவன் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். அவர்களை உதறி விட்டு அவன் தங்கள் மீது பாய்ந்திடக் கூடும் என எதிர்பார்த்து; குதிரையில் இருந்த வீரர்கள் அனைவரும் தங்கள் கைகளில் இருந்த வேல்களையும், வாட்களையும் ஓங்கியவாறு அந்த வண்டியை மேலும் நெருக்கமாகச் சுற்றி வளைத்தனர்.



# ராக்சாண்பார் மலைநோக்கி...

## 14

வண்டியை வளைத்துக் கொண்டு நெருங்கிய அந்த வீரர்கள் எதிர்பார்த்தபடியே வையம்பெருமான்; தன்னைத் தடுத்து நிறுத்திட முற்பட்ட தங்கைகளை உதறிவிட்டுப் புயலெனப் பாய்ந்தான் வாளைச் சுழற்றிக் கொண்டு! பகைவர்களோ பல ராக இருந்தனர்! அவனோ ஒருவன்! அவனை மோதியவர் களும் பல்வேறு படைக்கலன்களைத் தங்கள் கைகளில் ஏந்தி யிருந்தனர். வையம்பெருமான், தன் கையிலுள்ள வாளை மட் டும் நம்பவில்லை - அதை விடப் பலம்வாய்ந்த ஆயுதமாகத் தனது நெஞ்சுறுதியை நம்பினான். அதனால் மூர்க்கத்தன மாகத் தாக்கிய எதிரிகள் சிலர் அவனது வாள் வீச்சில் மூளை சிதறிச் சாய்ந்தனர். 'இரண்டொருவர் கை கால்களை இழந்து குதிரைகளின் மேலிருந்து குப்புற வீழ்ந்தனர்.

ஒருவர் முகம் ஒருவருக்குச் சரியாகத் தெரியாத அந்த இருட் டில் பல பேர் சூழ்ந்து கொண்டு தாக்கும்போது கொஞ்சமும் அஞ்சிடாமல் வையம் பெருமான் எதிர்த்துப் போரிட்டதற்குக் காரணம்; உயிரை விட மேலான தனது குடும்பத்து மானத் தைக் காப்பாற்ற வேண்டுமென்பதற்காகவே! அதனால் அவன் மீது குத்துண்டவேல்கள் உண்டாக்கிய காயங்களைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அவனது கைவாளை மீறிக் கொண்டு அவன் விலாப்புறத்திலும் நெஞ்சகத்திலும் பட்ட எதிரிகளின் வாள்முனைகளால் ஏற்பட்ட வலியை அவன் பொருட்படுத்தவில்லை.

எதிர்த்துப் போர்புரிந்து அந்த வாலிப வீரனை வீழ்த்த முடியாது எனத் தெரிந்து கொண்ட அந்த முரட்டுக் கூட்டம் ஏதாவது தந்திரம் செய்தே வெற்றி பெற வேண்டுமென முடிவு கட்டிக் கொண்டு செயல்பட்டது.

ரத வண்டி தடுத்து நிறுத்தப்பட்டிருந்த புதர்களடர்ந்த அந் தச் சாலையின் மேடு பள்ளங்களையொட்டி பெரும்பாறை

யொன்று! அந்தப் பாறையை ஒட்டினாற் போல ஓர் ஆழ மான குழிப்பள்ளம் - அந்தப் பள்ளம் தெரியாத அளவுக்கு புதரின் இலைதழைகள் மறைத்துக் கொண்டிருப்பதை - அந்தப் பாறைக்கருகே இருந்து வையம்பெருமானைத் தாக்கிக் கொண் டிருந்த எதிரிகள் பார்த்து விட்டனர். அந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொள்ளத் திட்டமிட்டு வையம்பெருமானுடன் சண்டை யிட்டுக் கொண்டே பின் வாங்குவது போல மெல்ல மெல்ல அவர்கள் நகர்ந்தனர். ஆவேசத்திலும் ஆத்திரத்திலும் பாய்ந்து பாய்ந்து அவர்களைத் தாக்கிக் கொண்டிருந்த வையம்பெரு மான் தனக்கு முன்னேயிருந்த குழிப்பள்ளத்தை அந்த வேகத் தில் கவனிக்காமல் இரண்டு கால்களையும் அதில் வைத்து விட்டான்.

அடுத்த கணம்; குழிப் பள்ளத்தில் சிறைப்பட்டவனைப் போலச் சிக்கிக் கொண்டான். கையிலிருந்த வாளுடன் மேலே தாவினான்; முடியவில்லை! அதற்குள் அவனிடமிருந்த வாளை அந்த முரட்டு வீரர்கள் பறித்துக் கொண்டனர். அது மட்டுமா? அவனது இரு கரங்களையும் அழுத்தமாகப் பிடித்து அவனைக் குழிப்பள்ளத்திலிருந்து வெளியே கொண்டு வந்தனர்.

''அய்யோ! அவனைக் கொன்று விடாதீர்கள்!'' என்று கத்திக் கொண்டே சிலம்பாயி அருகே ஓடி வந்தாள்.

''உங்கள் மகனுக்கு மட்டுமல்ல; உங்களில் யாருடைய உயி ருக்கும் எங்களால் ஆபத்து வராதம்மா!'' என்று ஒரு கம்பீர மான குரல் கேட்டது. குரல் வந்த திசையை வையம்பெரு மானும் சிலம்பாயியும் கூர்ந்து நோக்கினர். தன் பக்கமிருந்த வீரர்களை விலக்கிக் கொண்டு மாமிசமலை போலிருந்த ஒரு மொட்டைத் தலை மனிதன் நெருங்கி வந்தான். அவன் கையில் ரத்தம் தோய்ந்த வாள் இருந்தது. ரதவண்டியின் இருபுறங்களி லும் மாட்டப்பட்டிருந்த தீவட்டிகளின் வெளிச்சத்தில் அவ னைப் பார்க்கவே பயந்து முத்தாயி, பவளாயி இருவரும் முகத்தைத் திருப்பிக் கொண்டனர்.

அந்த மாமிச மலை; தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டான்.

''என்னைத் தெரியவில்லையா? நான்தான் திருமலை! ராச் சாண்டார் திருமலையின் காவலன்! தலையூர் மன்னர் காளி யின் தளகர்த்தர்களில் ஒருவன்! ராச்சாண்டார் திருமலை எனது பொறுப்பில் இருப்பதால் தலையூர் மன்னர் என் பெய

ரையும் திருமலை என்றே அழைப்பது வழக்கம்!''

இவ்வளவு விபரமும் அவன் சொல்லாமலே அவனைப் பற்றி வையம் பெருமான் அறிந்து கொண்டிருக்கிறான் என்பது அவனது முகபாவத்திலேயே தெரிந்தது.

திருமலை என்ற அந்த மாமிச மலை தொடர்ந்து பேசினான்.

''தலையூர் மன்னர் காளியின் உத்திரவை நிறைவேற்றுவதே என் கடமை! செல்லாண்டியம்மன் திருவிழா முடிந்து ஆரிச்சம் பட்டி அரண்மனைக்குத் திரும்பும் வழியில் சின்னமலைக்கொழுந் துக் கவுண்டரின் அழகான பெண்கள் இருவரையும் அவர்களுடன் துணைக்கு வருபவர்களையும் கூண்டோடு கைது செய்து ராச் சாண்டார்மலையில் உள்ள தலையூர் மாளிகையில் அடைத்து வைக்க வேண்டும் என ஆணையிடப்பட்டது. அதை நான் செயல்படுத்தவே வந்துள்ளேன்.''

பூதாகாரமான உடல் கொண்ட அந்த மனிதனின் பேச்சில் இப்பொழுது கடுமை குறைந்து விட்டது. மேலிடத்தின் கட்ட ளையை நடைமுறைப்படுத்துவதில் அவனுக்கிருந்த அளவு கடந்த அக்கறை மட்டுமே வெளிப்பட்டது.

வீரர்களின் கரத்தில் சிக்குண்டிருந்த நிலையிலும் வையம் பெருமான் அச்சமென்பது எள் முனையளவுமின்றி, தன் னெதிரே நிற்கும் திருமலையைப் பார்த்து நிமிர்ந்த தலை குனியாமல் கேட்டான்; ''எங்களை எதற்காகக் கைது செய்து, ராச்சாண்டார் மலைக்குக் கொண்டு செல்ல வேண்டும்? உங் கள் தலையூர்க்காளி; பெண்களுடனும் விளையாட ஆரம்பித்து விட்டாரா?'' என்று!

வையம்பெருமானின் கேள்விக்குத் திருமலை சிரித்துக் கொண்டே பதில் அளித்தான்.

''தம்பி; அவர் விளையாடுவதற்காக இந்தக் காரியம் செய்ய வில்லை! தலையூர் ஆட்சியின் புரவலரும், நெல்லிவளநாட்டு எல்லைக்காவல் ஆட்சியாளருமான செல்லாத்தாக் கவுண்ட ருக்கு செய்து கொடுத்த சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காகவே இந்த முயற்சி!

திருமலையின் விளக்கம் கேட்டு வெகுண்ட வையம்பெரு மான் பல்லை நறநறவென்று கடித்துக் கொண்டு உரக்கக் கத்தினான்.

''என்ன சத்தியம்? அதிசயமான சத்தியம்? செல்லாத்தாக் கவுண்டருக்கு சத்தியம் செய்து கொடுத்தால் அதற்குத் திருடர் களைப் போல இரவு நேரத்தில் வழி மறித்துத் தாக்குவது தான் வீரமோ? ஆண்மையுள்ளவர்கள் என்றால் படையெடுத்து வருகிறோம் என அறிவித்துவிட்டு பட்டப்பகலில் அல்லவா மோதியிருக்க வேண்டும்?''

''தம்பி; இளம் ரத்தம் மிகவும் சூடேறிக் கொதிக்கிறது! தலையூர்க்காளியின் படையில் ஒரு பகுதி புறப்பட்டு வந்தாலே, உங்கள் ஆரிச்சம்பட்டி அரண்மனை புழுதி மேடாகி விடும்! படையெடுத்து உங்கள் ஆட்சியைத் தலையூரின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வர வேண்டுமென்பது எங்கள் மன்னர் காளி யின் நோக்கமல்ல! அவரது எண்ணமெல்லாம் தனது புரவல ராகவும் நண்பராகவும் திகழும் செல்லாத்தாக் கவுண்டருக்கு விசுவாசமுடன் நடப்பதுதான்!''

உங்கள் மன்னர் தலையூர்க்காளி; யாருக்கு வேண்டுமானா லும் விசுவாசமாக நடக்கட்டும்! எங்கள் வழியில் குறுக்கிட வேண்டிய அவசியம் என்ன வந்தது?''

''அவசியமின்றி எமது அரசர் எதிலும் தலையிட மாட்டார்! செல்லாத்தாக் கவுண்டர் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு உங்கள் ஆரிச்சம்பட்டியில் தலையூர் மன்னர் காளிக்கு முன் பாகவே அவமானப்படுத்தப்பட்டிருக்கிறார்! என்ன தம்பி; புரியவில்லையா? உன் தந்தை சின்னமலைக்கொழுந்துவுக்கு இந்த விபரம் நன்றாகத் தெரியும்! அவருடைய தங்கை தாமரை நாச்சிக்கும் செல்லாத்தாக் கவுண்டரின் மகன் மாந்தியப்பனுக் கும் நடக்க இருந்த திருமணத்தை உன் தாத்தா மணியங்குரிச் சிக் காணியாளர் மலைக்கொழுந்துக் கவுண்டர் நடுவிலேயே நிறுத்தி விட்டார். அன்று ஏற்பட்ட அவமானத்தினால் மாந்தி யப்பன் இதுவரையில் திருமணமே செய்து கொள்ளவில்லை. தங்கையைத்தான் மாந்தியப்பனுக்குக் கொடுக்கவில்லை; தான் பெற்ற பெண்களையாவது கொடுப்பதற்குத் தடை சொல்லா மல் இருந்திருக்கலாம் அல்லவா? செல்லாத்தாக் கவுண்டர் பல முறை பெண் கேட்டு அனுப்பியும் உன் வீட்டார் அலட்சியப் படுத்தி விட்டார்கள் என்ற கோபத்தில்தான் தலையூர் மன்னர் துணையோடு உங்களைக் கைது செய்யும் திட்டத்தை வகுத்து; உங்களை ராச்சாண்டார் மலைக்கு அழைத்துச் செல்லவும் எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளது.''

''ராச்சாண்டார் மலைக்கு எங்களை அழைத்துச் சென்று -

மாந்தியப்பனுக்குப் பெண் கொடுக்க ஒப்புதல் வாங்கப் போகிறீர்களா?''

''பெண் கொடுக்க - என்று ஒருமையில் சொல்லாதே தம்பி; பெண்களைக் கொடுக்க - என்று பன்மையில் சொல்லு! உன் சகோதரிகள் முத்தாயி பவளாயி இருவரையுமே மாந்தியப்பனுக்கு மணமுடித்தாக வேண்டும்! சுமார் இருபது ஆண்டுக்கால வஞ்சம் - பழி வாங்க வேண்டுமென்ற சபதம் - நெல்லிவளநாட்டுக்கு இருக்கிறது! அந்தச் சூளுரையை முடிப்பதற்கு ஆரிச்சம்பட்டி அரண்மனைக்காரர்களாகிய நீங்களே முன் வந்து உதவலாம்! முடியாதென்று மறுப்பீர்களேயானால் எப்படியும் ராச்சாண்டர் மலையில் மாந்தியப்பன்; முத்தாயி பவளாயி இருவரையும் மணக்கத்தான் போகிறான்.''

வையம்பெருமானைப் பார்த்து, திருமலை அழுத்தம்திருத்தமாகவும் திட்டவட்டமாகவும் இப்படிச் சொன்னதும்; அதுவரையில் கண்ணீர் வழியக் கேட்டுக் கொண்டிருந்த சிலம்பாயி; திடீரெனத் தீயை மிதித்தவளைப் போல அதிர்ச்சியுற்று, ''அதுதான் நடக்காது! ராச்சாண்டர் மலையில் எங்கள் பிணங்களை வேண்டுமானால் பார்க்கலாமே தவிர, உங்கள் இஷ்டத்துக்கு மணவிழா நடத்துவதை ஒருக்காலும் அனுமதிக்கமாட்டோம்!'' என்று உரக்கக் கத்தி விட்டாள்.

சிலம்பாயின் கூச்சல் கேட்டு திருமலை அசைந்து கொடுக்கவில்லை. கலகலவெனச் சிரித்தான். அந்தச் சிரிப்பினூடே அவனுடன் வந்த வீரர்களின் வளையம் முன்னிலும் குறுகி நெருங்கி ரத வண்டியையும் வையம் பெருமான் மற்றும் அந்த மகளிரையும் சூழ்ந்து கொண்டது. திருமலை, சிரிப்பை நிறுத்திக் கொண்டு முடிவாக அவர்களைப் பார்த்துச் சொன்னான்.

''நீங்கள் பெண்கள் என்பதற்காகப் பரிதாபப்படுகிறேன். ஆனால் உங்கள் தலையில் எழுதியதை மாற்றி எழுத முடியாது. அந்தத் தலையெழுத்து கூட நல்ல எழுத்தாக இருக்கும் போது எதற்காக மறுக்க வேண்டும்? உடனடியாக இப்போதே உங்களை வற்புறுத்திச் சம்மதம் வாங்குவதாக யாருக்கும் உத்தேசமில்லை. நீங்கள் முரண்டு பிடிக்காமல் எங்களுடன் ராச்சாண்டார் மலைக்கு வருகிறீர்கள். அங்கு தலையூர் அரசுக்குச் சொந்தமான அழகான மாளிகை ஒன்றிருக்கிறது. அந்த மாளிகையில் நீங்கள் சிறை வைக்கப்படுகிறீர்கள். நாளைய தினம் சின்னமலைக்கொழுந்து கவுண்டருக்குச் செய்தி அனுப்பப்படும். அவர் திருமணத்துக்குச் சம்மதித்தால் எல்லாப்

பிரச்சினைகளும் தீர்ந்து விடும். இல்லாவிட்டால், இடக்கு செய்தால், ஆரிச்சம்பட்டியின் மீது நெல்லிவளநாடு படையெடுக்கத் தலையூர்க்காளியின் துணை கிடைக்கும். ஆரிச்சம் பட்டிக்கவுண்டரும் - அவர் மகன் நீயும் அடிமையாவீர்கள்! முத்தாயி பவளாயி இருவரும் மாந்தியப்பன் மனைவியாவார்கள்!''

திருமலை பேசி முடிப்பதற்குள்ளாக முத்தாயியும் பவளாயியும் ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு, ''அது நடக்காது! நடக்கவே நடக்காது!'' எனக் கண்களில் கனல் தெறிக்கக் கத்திக் கொண்டே ஆளுக்கொரு கட்டாரியைத் தங்கள் கரங்களில் எடுத்து, அவற்றைத் தமது நெஞ்சுக்கு நேராகக்குறி பார்த்து ஓங்கினர். இமைகொட்டும் நேரம் அனுமதித்திருந்தால் கூட இரண்டு குயில்களின் பாட்டு ஓய்ந்து போயிருக்கும். அதற்குள் அந்த மாமிசமலையாம் திருமலை தனது துதிக்கைகள் போன்ற கைகளை விரைவாக நீட்டி கட்டாரிகள் இரண்டையும் பறித்துக் கொண்டான்.

தாய் கலங்கி நிற்கிறாள் - தங்கையர் இருவர் தவித்துத் துடிக்கின்றனர் - அவனோ அசைய முடியாமல் முரடர்கள் வசம் பிடிபட்டிருக்கிறான்; அப்போது இடி முழக்கம் போலத் திருமலையின் ஆணை பிறந்தது!

''உம்! வீரர்களே! ராச்சாண்டார் மலைக்குப் புறப்படுங்கள். பெண்கள் ரதத்தில் ஏறிக் கொள்ளலாம். ரத வண்டியைச் சுற்றி வேலி வைத்தாற் போல வீரர்கள் அணி வகுத்திடுங்கள்!''

என்று முழக்கிய திருமலை; வையம் பெருமானைப் பார்த்து.

''தம்பி! நீ வீரர்களால் பிணைக்கப்பட்ட நிலையில் இனி ஏதும் செய்ய இயலாது. உங்கள் அனைவரையும் மிகுந்த கவுரவத்துடன் நடத்த வேண்டுமென்பதே எனக்களிக்கப்பட்டுள்ள உத்திரவு! ஆனால் சங்கிலியால் உன்னைக் கட்டி ரத வண்டியில் கொண்டு போக வேண்டியுள்ளது. ராச்சாண்டார் மலைக்குப் போய்ச் சேரும் வரையில் பொறுத்துக் கொள்'' என்றான்.

அவன் பேசிக் கொண்டிருக்கும் போதே சில வீரர்கள் சிலம்பாயியையும் முத்தாயி பவளாயியையும் மிக்க மரியாதையுடன் நெருக்கமாக வந்து சுற்றி வளைத்தனர். அதற்குள் அவர்களாகவே ரத வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டனர். தங்களை அந்த முரட்டு வீரர்கள் எதுவும் செய்து விட முடியாது என்ற

தைரியம் அந்தப் பெண்களின் முகத்தில் ஒளி விட்டது. உயிரை விடுத்து மானத்தைக் காத்துக் கொள்வது என்ற முடிவுக்கு வந்து விட்ட எவருக்கும் ஏற்படக் கூடிய நெஞ்சத் துணிவே அவர்களுக்கும் ஏற்பட்டிருந்தது. வையம்பெருமானின் கைகால் களிலும் இரும்பு வளையங்கள் பூட்டப்பட்டன. அதுவும் போதாதென்று சங்கிலியால் பிணைக்கப்பட்டு ரத வண்டியில் ஏற்றப்பட்டான்.

செல்லாண்டியம்மன் கோயிலில் இருந்து குளித்தலைப் பாதையாக ஆரிச்சம்பட்டிக்குச் செல்வதற்கு நங்கவரம், பணை யூர் ஆகிய ஊர்களைக் கடக்க வேண்டும். ஆரிச்சம்பட்டியி லிருந்து ராச்சாண்டார் திருமலை என்கின்ற அந்த ஊர் சில கல் தொலைவுதான் என்றாலுங்கூட தலையூர்க்காளியின் தள கர்த்தனான திருமலை ஆரிச்சம்பட்டியைக் கடந்து ராச்சாண் டார் மலைக்குச் செல்ல விரும்பவில்லை. தொலைவு அதிக மானாலுங்கூட குளித்தலைப் பாதையிலிருந்து வேறு வழியா கத் தோகைமலை சென்று அங்கிருந்து ஆரிச்சம்பட்டி செல்லா மலே ராச்சாண்டார்மலைக்கு அவர்களைக் கொண்டு போகவே திட்டம் போட்டிருந்தான். ஆரிச்சம்பட்டியைக் கடப்பதாக இருந்தால் சின்னமலைக் கொழுந்துவின் படை பலத்தை அங்கே சமாளிக்க வேண்டியிருக்கும். அதனால் அவர்கள் கண்ணில் படாமலேயே ராச்சாண்டார்மலைக்குப் போய் விடுவதென முன்கூட்டியே செய்த ஏற்பாட்டை செயல்படுத்தத் திருமலை கட்டளையிட்டான். ரதவண்டியை ஓட்டுவற்குத் திருமலை வேறு ஒரு ஆளைப் பணித்தான். திட்டமிட்டபடியே எல்லாம் நடந்தது. ரத வண்டியும், அதைச் சுற்றி வீரர்களும் தோகை மலைப்பாதையில் புறப்பட, அதற்குத் தலைமைவகித்து ஒரு குதிரையில் அமர்ந்து முன்னே சென்று கொண்டிருந்தான் தளகர்த்தன் திருமலை!

இருதரப்பிலும் காயமுற்றவர்கள்; பெரும்பாலும் ஆரிச்சம் பட்டி வீரர்கள் குற்றுயிரும் குலை உயிருமாக அந்தப் பாதை யோரத்திலும் - பாறை அருகிலும் முனகிக் கொண்டு புரண்ட படி இருந்தனர். உயிரற்று அசைவற்றுப் போன உடல்களும் சிதறிக்கிடந்தன. இருளில் அந்தச் சாலையில் உருண்டு கொண டிருந்த வீரர்களில் ஒருவன், தனது விலாப்புறத்தில் ரத்தம் கொட்டிக் கொண்டிருப்பதையும் - ஒரு கட்டாரி ஆழமாகக் குத்திக் கொண்டிருப்பதையும் பற்றிக் கவலை கொள்ளாமல் மெல்ல ஊர்ந்து ஊர்ந்து பாறையின் ஓரத்தில் களைப்புற்று நின்று கொண்டிருந்த ஒரு குதிரையின் அருகே வந்து கொண் டிருந்தான். அவன் ஆரிச்சம்பட்டியைச் சேர்ந்த வீரன்தான் -

அந்தக் குதிரையும் அவன் ஏறி வந்த குதிரை தான்! அதனால் தான் அந்தக் குதிரை; அவனை நோக்கி நடந்து வந்தது. அவனால் ஊர்ந்து வரக் கூட முடியவில்லை என்பதை உணர்ந்தது போல அவனிடம் வந்து நின்றது. அந்த வீரன் தட்டுத் தடுமாறி அந்தக் குதிரையின் மீது ஏற முயற்சி செய்தான். முடியவில்லை. குதிரையோ அவனை மிக்க அனுதாபத்துடன் பார்த்தது. பிறகு அது, சற்று உயர்ந்த ஒரு பாறையின் பக்கம் போய் நின்று கொண்டு அவனைப் பார்த்துத் தலையை ஆட்டியது. சாலையில் ஊர்ந்து கொண்டிருந்த ஆரிச்சம்பட்டி வீரன், மேலும் ஊர்ந்து அந்தப் பாறை வரையிலும் சென்று - அந்தப் பாறையிலும் ஊர்ந்து குதிரையின் மட்டத்திற்கு ஏறி; அதிலிருந்தவாறு குதிரையின் மீது தொத்திக் கொண்டான். அப்போதும் அந்த வீரனால் குதிரையின் மேல் நிமிர்ந்து உட்கார முடியவில்லை. அதன் முதுகில் குப்புறப்படுத்துக் கொண்டு, தலைப் பகுதியை இரு கரங்களாலும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

அவன், தனது முதுகில் பத்திரமாக இருக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்ட அந்தக் குதிரை, ஆரிச்சம்பட்டியை நோக்கி மெல்ல ஓடத் தொடங்கியது.

குதிரையொன்றில் ஆரிச்சம்பட்டி வீரன் குற்றுயிரும் குலை உயிருமாக அரண்மனை நோக்கி வருகிறான் எனக் கேள்வியுற்ற சின்னமலைக் கொழுந்து அதிர்ந்து போனார். பொன்னர் - சங்கர் வீரமலைச் சாம்புவன் ஆகிய மூவருடனும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த அவர் வேகமாக எழுந்து மாளிகையின் வாயிற்பக்கம் விரைந்து சென்றார்.

தங்களை அன்புடன் அழைத்து வந்து விருந்து வைத்த அவருக்குத் திடுமென ஏற்பட்ட அதிர்ச்சி பற்றி அறிந்து கொள்ளவும் - அவருக்கு விளைந்த துன்பத்தில் பங்கு கொள்ளவும் - பொன்னரும் சங்கரும் வீரமலைச் சாம்புவனும் அவரைப் பின் தொடர்ந்து மாளிகையின் வாசலுக்கு வந்தனர்.

குதிரையின் மீது ரத்த வெள்ளத்தில் இருந்த அந்த வீரனை, சின்னமலைக்கொழுந்து - ஓடிச் சென்று கைத்தாங்கலாகத் தூக்கினார். அவனால் இன்னும் ஓரிரு விநாடிகள்கூட உயிர் பிழைத்திருக்க முடியாது. அதற்குள் அவருக்குத் தகவல் சொல்லி விட வேண்டுமென்று அந்த வீரன் துடித்தான். வாயைத் திறந்தால் நா எழவில்லை. குழறிற்று. கண்களோ ஒளியிழந்து கொண்டிருந்தன.

''ஏய், தண்ணீர் கொண்டுவா!'' என்று சின்னமலைக்கொழுந்து கத்தினார். ஒரு வீரன் தண்ணீர்க் குவளையுடன் ஓடி வந்தான். சின்னமலைக்கொழுந்து காயம்பட்ட அந்த வீரனைத் தன் மடியில் படுக்க வைத்துக் கொண்டு, அவன் முகத்தில் தண் ணீர் தெளித்து, வாயிலும் சிறிது ஊற்றினார்.

''என்னப்பா நடந்தது? வையம் பெருமான் எங்கே? சிலம் பாயி முத்தாயி பவளாயி என்ன ஆனார்கள்? வந்து கொண்டி ருக்கிறார்களா?'' என்று அவனைப் பார்த்துப் பரபரப்புடன் கேட்டார். அவனோ, இல்லையென்பது போல தலையசைத்து விட்டு; கண்ணீர் சிந்தினான்.

''என்ன தான் நடந்தது சொல்லு!'' எனக் கேட்ட சின்ன மலைக்கொழுந்தின் குரல் தழுதழுத்தது.

அந்த வீரன் வாயிலிருந்து உடைந்தும் நொறுங்கியும் வார்த் தைகள் சிதறின.

''தலையூர்க்காளி... அவன் தளகர்த்தன் திருமலை... வையம் பெருமானைக் கைது செய்து... எல்லோரையும் ராச்சாண்டார் மலைக்கு... மாந்தியப்பனுக்கு இரண்டு பெண்களையும் திரு மணம் செய்ய...''

இந்த வார்த்தைகளுடன் அந்த விசுவாசமுள்ள வீரனின் உயிர் முடிந்தது போயிற்று!

''என்ன?'' என்று ஆர்ப்பரித்தவாறு எழுந்தார் சின்னமலைக் கொழுந்து!

# பறிபட்டது போர்ப்படை 15

சின்னமலைக்கொழுந்தின் ஆர்ப்பரிப்பைத் தொடர்ந்து ஆரிச்சம்பட்டிக் கோட்டையின் முகப்பு முரசம் முழங்கிற்று. அந்த முரசம் ஒலித்தாலே அரண்மனையின் அவசர அழைப்பு என்று தெரியுமாதலால் பாசறைகளில் ஓய்வு கொண்டிருந்த வீரர்களும், போர் நேரங்களில் மற்றும் படையில் இணைந்து பணியாற்றும் அந்தப் பகுதியின் வீர வாலிபர்களும் கச்சை கட்டிக் கொண்டு படைக்கலன்களை ஏந்தியவாறு கோட்டை வாசலில் குழுமிவிட்டனர்.

அணிவகுத்து நிற்கும் அவர்கள் அனைவரும் காணத்தக்க வகையில் அந்த முகப்பின் முன்னே கருங்கற்களால் கட்டப்பட்டிருந்த உயர்ந்ததோர் பீடத்தில் சின்னமலைக்கொழுந்து ஆவேச உருவமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தார். வரிசையாக எரிந்து கொண்டிருந்த தீப்பந்தங்களின் வெளிச்சத்தில் வீரர்கள்ஏந்தியிருந்த ஈட்டிகளின் முனைகளும், வாட்களின் கூர்மையும், கேடயங்களின் முன் பகுதிகளும் பளபளவென மின்னிக் கொண்டிருந்தன! சின்னமலைக் கொழுந்து, அகன்று நீண்டதோர் கனமான வாளைத் தனது வலது கையில் ஓங்கிப் பிடித்தவாறு சூழ்ந்து நிற்கும் படையினரைப் பார்த்துப் பேசத் தொடங்கினார்.

சினம் பொங்கும் எரிமலையாக மட்டுமல்லாமல் - தனது மனைவி மக்களுக்கு ஏற்பட்டு விட்ட பேராபத்தின் காரணமாகவும்; ஆரிச்சம்பட்டிக்கு விடுக்கப்பட்ட அறைகூவலின் காரணமாகவும்; நொறுங்கிப் போயிருந்த அவரது நெஞ்சிலிருந்து புறப்பட்ட வார்த்தைகள், தணலாகவும் - தழுதழுத்த நிலையிலும் வந்து விழுந்தன!

''நெல்லிவளநாட்டுச் செல்லாத்தாக் கவுண்டர் ஆரிச்சம்பட்டியுடன் மோதுவதென்று தீர்மானித்து விட்டார். தலையூர்க்

காளியின் துணையிருப்பதால் மிகச் சிறிய பூபாகம் தானே ஆரிச்சம்பட்டியென்ற அலட்சிய மனப்பான்மையில் நமக்கு அறைகூவல் விடுத்துவிட்டார்! நெல்லி வளநாடு நம்மோடு ஒப்பிடும்போது பெரிய நாடு - நம்மை விடப் பரந்த நிலப் பரப்பை ஆளுகின்றவர்கள் அவர்கள் - நம்மைப் போலப் பல மடங்கு படை பலமும் அவர்களிடம் உண்டு - அதனால்தான் இத்தனை நாளும் அவர்களுடன் ஒத்துப்போகும் நிலையெடுத்து உறவு முறிவு ஏற்படாமல் பார்த்துக் கொண்டோம். அவர்களோ தாமரைநாச்சியார் திருமணம் தடைபட்டதை மனத்தில் வைத்துக் கொண்டு நம்மீது பாய்வதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்களை உருவாக்கிப் பார்த்தனர். கடைசியாக அவர்கள் ராச்சாண்டார் மலை வளநாட்டுக்குத் தான் சொந்தமென்று ஏதோ பழைய ஆவணங்களையெல்லாம் சான்றாகக் காட்டி வாதிட்டனர். அந்த ஆவணங்கள் முழுமையாக நம்ப முடியாதவைகள் என்று நமக்குத் தோன்றியபோதிலும் கூட - அதைப் பெரிதுபடுத்தாமல்; வீணாக ஒரு போர் வேண்டாமென்ற நினைப்பில் ராச்சாண்டார் மலையை அவர்களுக்கே விட்டுக் கொடுத்து யுத்தத்தைத் தவிர்த்துக் கொண்டோம். இரண்டு ஆண்டுக் காலமாக செல்லாத்தாக் கவுண்டர், தன் மகன் மாந்தியப்பனுக்கு முத்தாயி, பவளாயி இருவரையுமே பெண் கேட்டுப் பல தூதுக்களை அனுப்பினார். என் தங்கை தாமரை நாச்சியை அவனுக்குத் திருமணம் முடிக்காத காரணத்தால் அவன் திருமணமே செய்து கொள்ளாமல் இருப்பதாகவும் - ஆரிச்சம்பட்டியில் அவர்களுக்கு ஏற்பட்ட அவமானத்துக்குப் பரிகாரமாக என் மகள்கள் இருவரையும் மாந்தியப்பனுக்குத் தாரைவார்க்க வேண்டுமென்றும் - வளநாட்டுக்காரர் தொடர்ந்து வற்புறுத்தினார். இரண்டு பெண்களையும் ஒருவருக்குக் கட்டி வைப்பதென்கிற பேச்சுக்கே இடமில்லையெனக் கூறி அவரது கோரிக்கையை திட்டவட்டமாக மறுத்து விட்டேன். இருவரில் ஒரு பெண்ணையாவது மாந்தியப்பனுக்குக் கொடுக்கலாமா என நான் எண்ணியபோது, அவனைப் பற்றி வந்த செய்திகள் மிகப் மிகப்பயங்கரமாக இருந்தன! இப்போதும் அவனைப் பற்றி அப்படித்தான் செய்திகள் வருகின்றன! எப்போதும் மதுக் கிண்ணமும் கையுமாக இருக்கின்றானாம். அந்த மயக்கத்தில் எந்தப் பெண்ணைக் கண்டாலும் அவள் தனது மஞ்சத்திற்கு உடனே வந்தாக வேண்டுமென்று நினைக்கிறானாம். அவன் கண்ணிற்படவே பெண்கள் அஞ்சி நடுங்குகிறார்களாம். அப்படிப்பட்ட ஒரு மனித மிருகத்துக்கு என் மகளைக் கொடுக்க நான் எப்படி சம்மதிக்க முடியும்? அதனால்தான் இரண்டு பெண்ணல்ல - ஒரு பெண்ணைக் கூடத் தர முடியாது என மறுத்து விட்டேன். எனது மறுப்பை மனதிலேயே வைத்துக்

கொண்டு வஞ்சம் தீர்ப்பதற்கு சமயம் பார்த்திருக்கிறார் செல் லாத்தாக் கவுண்டர் என்பது எனக்குத் தெரியாமலே போய் விட்டது! தெரிந்திருந்தால் செல்லாண்டியம்மன் கோயில் திரு விழாவிலிருந்து என் குடும்பத்தார் திரும்பி வருவதற்கு ஒரு பெரும் படையையே பாதுகாப்பாக அழைத்துச் சென்றிருப்பேன். இதோ நிற்கிறார்களே இந்த இளம் சிங்கங்கள் இவர்கள் பெயர் எனக்குத் தெரியாது; ஆனால் என்றைக்குமே மறக்க முடியாதவர்கள் - கரகம் விடும் விழாவில் என் பெண்களைக் காவேரியாற்றுக்குப் பலியாகாமல் காப்பாற்றியவர்கள் - இவர் களை அழைத்துக் கொண்டு நான் முன்னதாக அரண்மனைக்கு வந்து விட்டேன். விழா முடிந்து அம்மனை தரிசித்து விட்டு அரண்மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்த என் மனைவியையும், மகன் வையம்பெருமானையும், பெண்கள் முத்தாயி பவளாயி யையும் குளித்தலைக்கருகே வழி மறித்து வேறு பாதையில் ராச்சாண்டார் திருமலைக்குக் கொண்டு போய் விட்டார்கள் தலையூர்க்காளியின் ஆட்கள்! அவர்களை எதிர்த்துப் போரிட்டு நமது வீரர்கள் பிணமாகி விட்டார்கள். எஞ்சிய ஒரு வீரன் படுகாயத்துடன் இங்கே வந்து செய்தியைக் கூறி விட்டு அவ னும் வீர மரணமடைந்தான். தலையூர்க்காளியின் தளபதி திருமலை அறிவித்துள்ள திட்டப்படி என் குடும்பத்தார் ராச் சாண்டார் மலையில் சிறைவைக்கப்படுவார்கள். மாந்தியப்ப னுக்கும் என் பெண்களுக்கும் கட்டாயக் கல்யாணம் நடத்த முயற்சிகள் மேற்கொள்ளப்படும். அதற்கு என் பெண்களோ, என் மனைவியோ, என் மகனோ சம்மதிக்கப் போவதில்லை! அந்தத் திருமணத்தை விடத் தற்கொலை செய்துகொண்டு செத்துப்போவதைத்தான் அவர்கள் விரும்புவார்கள். இப் போது நான் என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள்தான் சொல்ல வேண்டும். அதற்காகத் தான் உங்களை அழைத்திருக் கிறேன், சமாதானமாகப் போய்விடுவோம்; நீங்கள் கோரிய படி என் பெண்களை மாந்தியப்பனின் மனைவிகளாக்கு கிறேன் என்று செல்லாத்தாக் கவுண்டருக்கு ஓலை அனுப்பச் சொல்கிறீர்களா? அல்லது எது நேர்ந்தாலும் சரியென்று அவர் களோடு மோதச் சொல்கிறீர்களா? பணிந்து போவதா? படை யெடுப்பதா?''

சின்னமலைக்கொழுந்து விளக்கமளித்து; இறுதியாக இப்படி ஒரு கேள்வியைக் கேட்டவுடன் சூழந்திருந்த ஈட்டிகளும் வாட்களும் விண்ணோக்கி உயர்ந்து ஆடின!

''படையெடுப்போம்! பணிய மாட்டோம்!'' என்று ஒருமித்த குரல் ஓங்காரக் குரலாகக் கிளம்பியது.

''அவர்கள் படை பலமிக்கவர்கள். பக்கத்துணையாகத் தலையூர்க்காளி வேறு இருப்பதை மறந்து விடாதீர்கள்!''

என்று சின்னமலைக்கொழுந்து எச்சரிப்பது போலப் பேசினார்.

''தோல்வியைப் பற்றிக் கவலையில்லை! நாம் தோற்றோம் என்பது நமது மார்பிலிருந்து கொட்டும் ரத்தத்தால் எழுதப்பட வேண்டுமே தவிர, நமது முதுகுப் 'பலகையில் சரணாகதி என்ற எழுத்துக்களை வைரக் கற்களைக் கொண்டு பதித்தாலும் அதில் பெருமையில்லை! அது அவமானச் சின்னமாகத்தான் இருக்கும்!''

என்று ஒரு குரல் கேட்டது! அந்தக் குரலில் வீரத்தின் நாதம் இருந்தது! குரல் வந்த பகுதியை சின்ன மலைக்கொழுந்து உட்பட அனைவரும் திரும்பிப் பார்த்தனர்.

வீரமலைச் சாம்புவன்தான் அப்படிப் பேசினான். அவனைப் பொன்னரும் சங்கரும் புன்னகையுடன் நோக்கினர். இருவருமே அவனைத் தழுவிக்கொண்டனர். அந்த மூன்று இளைஞர்களையும் கோட்டை முகப்பில் கூடியிருந்த அந்த வீரர் கூட்டம் வைத்த விழி வாங்காமல் பார்த்தது.

தங்களால் சூறைக் காற்றிலிருந்தும், மலைப்பாம்பு, முதலையிடமிருந்தும் காப்பாற்றப்பட்ட முத்தாயி பவளாயி இருவருக்கும் இப்படியொரு விபத்து ஏற்பட்டிருப்பதையும் - இப்போது அவர்களை மீட்பதாக இருந்தால் பெரியதோர் யுத்தத்தையே சந்திக்க வேண்டியிருப்பதையும் - பொன்னரும் சங்கரும் எண்ணிப்பார்த்து; அவர்களை மீட்கும் போரில் தங்களுக்கும் அழைப்பு கிடைக்குமா என எதிர்பார்த்திருந்தனர்.

அவர்கள் அப்படி நினைக்கக் கூடிய நிலைக்கு ஆளானவர்கள் - என்பதை அறிந்து கொண்டிருந்ததால்தான் வீரமலையும்; சின்னமலைக்கொழுந்தைப் பார்த்து ''சரணாகதி'' என்ற வார்த்தை அவமானச் சின்னம் என அழுத்தம் திருத்தமாகச் சொன்னான்.

சின்னஞ்சிறு பிரதேசத்துக்குச் சொந்தக்காரர் என்றாலும் சின்னமலைக்கொழுந்து அற்புதமான ராஜதந்திரியாகச் செயல் பட்டார் என்று தான் சொல்ல வேண்டும்.

இல்லாவிட்டால் தனது குடும்பத்தார் சிறைப்பட்டனர் எனக் கேள்வியுற்றதும், படையெடுப்பதற்கு ஆயத்தமாகி - முரசறைந்து அழைப்பு விடுத்தவர் - அழைக்கப்பட்டவர்களைக் கூட்டி வைத்துக்கொண்டு; அவர்களைப் பார்த்தே ''படையெடுக்கலாமா - வேண்டாமா?'' என்று ஆலோசனை கேட்பாரா?

அந்த ராஜதந்திரத்துக்குக் கிடைத்த வெற்றியாக ஆரிச்சம் பட்டி வீரர்களும், குடிமக்களும் ''பணிவது'' என்ற பேச் சுக்கே இடமில்லை என்று கூறி சின்ன மலைக்கொழுந்தின் ஆணைக்குக் காத்திருந்தார்கள் என்றாலும் கூட அந்தப் போரில் தனக்கும் தனது குடும்பத்தார்க்கும் தன் ஆளுகையில் உள்ள மக்களுக்கும் கிடைக்கப் போவது வீர மரணமும் தோல்வியும் தான் என்பது அவருக்கு நன்றாகவே தெரியும்!

அவருக்கிருந்த ஒரேயொரு நம்பிக்கை; உடனே சென்று ராச்சாண்டார்மலையைத் தாக்கினால் அங்கிருந்து ஆரிச்சம் பட்டிப் படையை எதிர்கொள்வது தலையூர்த் தளபதி திருமலை யும் அங்குள்ள படைவீரர்களும் அவர்களுடன் நெல்லி வள நாட்டுப் படையும்தான் என்ற எதிர்பார்ப்பேயாகும்!

தலையூர்த் தளபதி திருமலையை வெல்வது என்பது எளி தல்ல எனினும்; தலையூர்ப்படை முழுதும் வந்து சேர்ந்து மோதுவதற்குள் ஆர்ச்சம்பட்டிப் படை ராச்சாண்டார் மலைக் குள் நுழைந்துவிட்டால் வெற்றிக்கு ஓரளவு வாய்ப்பு உண்டு என்பது சின்னமலைக்கொழுந்தின் கணிப்பு!

எதற்கும் தனது படை பலத்திற்கு மேலும் வலுவூட்டும் வகை யில் அந்த மூன்று இளைஞர்களின் துணையைப் பெற வேண் டுமென்ற உள்ளுணர்வு அவரைத் தூண்டியது.

வீரமலையின் வீரங் கொப்பளிக்கும் வார்த்தைகளையே அந்த இளைஞர்களை நெருங்கிடும் நூலேணியாகப் பயன் படுத்திக் கொண்டு சின்னமலைக்கொழுந்து; பொன்னர் - சங்கர், வீரமலை மூவரையும் நோக்கி - 'நீங்கள் மூவரும் இந்த பீடத்துக்கு வாருங்கள். உங்களின் ஒளி முகங்களையும், திரண் டுயர்ந்த திண்தோள்களையும், ஈட்டிகளும் வேல்களும் போர் முனையில் பாய்ந்து வந்தாலும் இமை கொட்டாத விழிகளை யும் எங்கள் ஊரார் காணட்டும்! தயவு செய்து வாருங்கள்!'' என்றழைத்தார்.

இதயத்தில் குடியேறிக் கொடிகட்டி ஆதிக்கம் செலுத்து கின்ற இன்பவல்லிகளைச் சிறை மீட்கும் போரில் ஈடுபட வேண்டுமெனத் துடிக்கும் தோள்களுடன் நின்று கொண்டிருந் தாலும் - அதை எப்படி வெளியே சொல்வதென்று பொன் னர் தனது தம்பி சங்கருக்காக வெட்கப்பட்டது போலவே சங் கரும் தனது அண்ணன் பொன்னருக்காகத் தயங்கி மயங்கி யிருந்தது என்னவோ உண்மை!

அந்த வெட்க உணர்வையும் தயக்கத்தையும் போக்கிடும் வண்ணம், சின்னமலைக்கொழுந்தின் அழைப்பு அமைந்தது.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டதோடு - இருவருமிணைந்து வீரமலையையும் பார்த்தனர். அவர்கள் இதயத்தில் எழுதியிருப்பதைத் தெளிவாகவே படித்துக்கொண்ட வீரமலை; புன்னகையை நெளிய விட்டுக் கொண்டே அவர்களுடன் அந்தப் பீடத்துக்குப் போகலாமென்று விழியால் ஜாடை காட்டினான்.

மூவரும் பீடத்தில் ஏறி நின்றதும் சின்னமலைக்கொழுந்தைச் சுற்றி மூன்று புலிக்குட்டிகள் இருப்பதைப் போன்ற காட்சி! சூழ்ந்திருந்தோர் தமது படைக்கலன்களை உயர்த்தி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

சின்னமலைக்கொழுந்து வீரமலையைத் தட்டிக் கொடுத்துக் கொண்டே கேட்டார்; "என்ன சொன்னாய்? தோல்வி என்பது நமது மார்பிலிருந்து கொட்டும் ரத்தத்தால் எழுதப்பட வேண்டும். நமது முதுகுப் பலகையில் சரணாகதி என்ற எழுத்துக்களை வைரக் கற்களைக் கொண்டு பதித்தாலும் அதில் பெருமையில்லை; என்று சொன்னாயல்லவா? தம்பி; தோல்வி என்ற வார்த்தைக்கும் சரணாகதி என்ற சொல்லுக்கும் இடமே இல்லாமல் நிச்சயமாக வெற்றிதான் என்று நிர்ணயித்துக் கொண்டு களத்தில் இறங்க எனக்கு ஒரே ஒரு வழியிருக்கிறது - நம்பிக்கையான வழி - எள் முனையளவும் சந்தேகமில்லாத வழி - அந்த வழி வகுத்துக் கொடுக்க உங்கள் மூவரால் முடியும்! நீங்கள் அந்த வழியை வகுத்துக் கொடுப்பீர்களா?"

சின்னமலைக்கொழுந்து, வீரமலையைப் பார்த்துத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டார் என்றாலும் அதற்குப் பதில் அளிக்கும் விதமாகப் பொன்னர்-சங்கர் இருவரும் ஏக காலத்தில் தங்கள் கரங்களை உயர்த்திச் சம்மதம் தெரிவித்தனர்.

சின்னமலைக்கொழுந்தின் உற்சாகம் கரை புரண்டது. ராச்சாண்டார் மலைக்கோட்டை கொத்தளங்கள் மீது ஆரிச்சம்பட்டிப் படையின் தாக்குதல் நடக்கும். எதிர்த்தாக்குதலில் ஆரிச்சம்பட்டி தோல்வியைச் சந்திக்கும். வீர மரணமே விளைவாக இருக்கும். எதுவாயினும் நெஞ்சுறுதியுடன் எதிர்கொண்டு தானே ஆக வேண்டுமென்ற முடிவுடன் இருந்த அவருக்கு, பொன்னர்-சங்கர், வீரமலை ஆகியோரின் துணையும் கிடைத்து விட்ட பிறகு படையெடுப்பின் விளைவு குறித்து சிறிதும் ஐயப்பாடு எழவில்லை.

''விரைவில் தயாராகுங்கள் வீரர்களே!'' எனக் கட்டளை பிறப்பித்த சின்னமலைக்கொழுந்து; கோட்டை முகப்பின் பீடத்திலிருந்து இறங்குவதற்கு முன்பாக மற்றொரு பிரகடனத்தையும் வெளியிட்டார். அந்தப் பிரகடனத்தை வெளியிடுவதற்கு முன்பு; அவர் பொன்னரை ஒரு பக்கத்துத் தோளிலும், சங்கரை ஒரு பக்கத்துத் தோளிலும் அணைத்துக் கொண்டார்.

''இந்தப் படையெடுப்பில் வெற்றி பெற்று - செல்லாத்தாக் கவுண்டரின் சூழ்ச்சியை முறியடித்து - ராச்சாண்டார் மலையில் சிறைப்பட்டுள்ள என் குடும்பத்தாரையும் மீட்டு விட்டால்; என் பெண்கள் முத்தாயியை இதோ இந்த இளைஞனுக்கும், பவளாயியை இதோ இந்த இளைஞனுக்கும் வாழ்க்கைத் துணைவியராக ஆக்குவதாக உறுதியளிக்கிறேன்! ராச்சாண்டார் மலை நோக்கிப் புறப்படும் நமது படையின் தளபதிகளாக இவர்களே பொறுப்பு ஏற்பார்கள்!''

சின்னமலைக்கொழுந்தின் அறிவிப்பு கேட்டு ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்! ''வீரவேல்! வெற்றி வேல்!'' என்ற பேரொலியால் ஆரிச்சம்பட்டி கோட்டையே அதிர்ந்தது.

தளபதிக்குரிய படைக்கலன்களை எடுத்துக் கொள்ளவும், உடைகளை அணியவும் பொன்னரும் சங்கரும் வீரமலையுடன் ஆரிச்சம்பட்டி தளவாட அறைக்குள் நுழைந்தனர்.

நுழைந்த வேகத்திலேயே போர் உடை பூண்டு, உருவிய வாளுடன் வெளிவந்தனர். அவர்கள் வருகைக்காக ஒரு குதிரை மீது சின்னமலைக் கொழுந்து காத்திருந்தார்; பொன்னர், சங்கர், வீரமலை மூவருக்குமாகத் தயார் நிலையில் இருந்த குதிரைகள் மீது அவர்களும் தாவிப் பாய்ந்து ஏறி அமர்ந்து கொண்டனர்.

சின்னமலைக்கொழுந்து; அணிவகுத்துள்ள வீரர்களைக் கம்பீரமாகப் பார்த்து வாளை உயர்த்திக் கொண்டே ''வீர வேல்!'' என உரக்கக் கூறினார். ''வெற்றி வேல்'' என பெரு முழுக்கம் இடியொலியென எழுந்தது. ஆரிச்சம்பட்டி கோட்டையை விட்டுப் படை கிளம்பிற்று!

தீப்பந்தம் ஏந்தியோர் - வாள் ஏந்தியோர் - வில்லம்பு ஏந்தியோர் - வேல் ஏந்தியோர் - ஈட்டி ஏந்தியோர் - குதிரைகளில் அந்த இருட்டில் பாதையில் புழுதியைக் கிளப்பிக்

கொண்டு ராச்சாண்டார் மலைக்குச் செல்லும் வழியை ஆக்ர :மித்துக் கொண்டனர்.

ஆரிச்சம்பட்டியிலிருந்து, நேர்வழியில் ராச்சாண்டார்மலை .அதிக தொலைவு இல்லாத காரணத்தால் விடிவதற்குள்ளா கவே, குதிரைப்படையினர் அந்தப் பகுதிக்குள் சென்று விட் ட.னர்.

ஆரிச்சம்பட்டியினர் சமாதானத்துக்குத்தான் வருவார்கள்; படை கொண்டு வர மாட்டார்கள் என்று நம்பிக் கொண் டிருந்த தலையூர்த் தளபதி திருமலைக்கு இந்தச் செய்தி வியப் புக்குரியதாக ஆயிற்று!

ஒருக்கணம் கூடத் தாமதிக்காமல் அவன் தனது படைவீரர்– களுக்குக் கட்டளை பிறப்பித்து விட்டான்!

விற்போரில் யாராலும் வெல்ல முடியாது என்ற கீர்த்தி பெற்ற தலையூர்க்காளியின் படைவீரர்கள், ராச்சாண்டார் மலைக்கோட்டைக்குள்ளிருந்தவாறு ஆரிச்சம்பட்டிப் படையின் மீது அம்புமாரி பொழிய ஆரம்பித்து விட்டனர்!

கோடை மழையின் பெருந்துளிகளைப் போல் கொட்டுகின்ற அம்புகளின் தாக்குதல் கண்டு சின்னமலைக் கொழுந்து திகைத் துப் போனார். கோட்டையை நோக்கி வீரர்களுடன் முன் னேறிக் கொண்டிருந்த தளபதிகள் பொன்னரும் சங்கரும் சற் றுத் தயங்கி, தங்கள் குதிரைகளை இழுத்துப் பிடித்தனர்.

# போர்முறை புதிது

## 16

தங்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த ஆரிச்சம்பட்டி வீரர்களை நோக்கிப் பொன்னர் உரத்த குரலெடுத்துப் பேசினான்.

''வீரர்களே! அப்படியே நின்று கேடயங்கள் கொண்டு அம்பு களைத் தடுத்திடுங்கள்! எதிரிகளிடமுள்ள அம்புகளில் பெரு மளவு தீர்ந்த பிறகே நமது எதிர்ப்பு தொடங்க வேண்டும்! அதுவரையில் எதிர்ப்பைத் தடுக்கவும் தாங்கிக் கொள்ளவும் மட்டுமே நமது வலிமையைப் பயன்படுத்த வேண்டும்.''

பொன்னரின் இந்த யோசனை ஆரிச்சம்பட்டி வீரர்களுக்குப் புதுமையாக இருந்தது. எதிரி மோதும்போது பதிலுக்கு நாமும் உடனடியாக மோதுவதை விடுத்து எதிரியின் பலத்தைப் பாதி யளவாகக் குறைக்கிற அளவுக்குக் களைப்புறச் செய்து அதன் பிறகு எதிரியைத் தாக்கும் போர்முறை கற்ற பொன்னரும் சங்கரும் கூறிய யோசனையின் உட்பொருள் முதலில் புரியா விட்டாலும்; தளபதியின் கட்டளையென்ற முறையில் ஆரிச்சம் பட்டி வீரர்கள் அதற்குக் கட்டுப்பட்டுச் செயல்பட்டனர்.

ராச்சாண்டார்மலைக் கோட்டைக்குள்ளிருந்து தலையூர்க் காளியின் தளபதி திருமலை, தனது வீரர்களுக்கு ஆணை பிறப்பித்துக் கொண்டிருந்தான். திருமலைக்குப் பக்கத்தில் கையில் ஒரு மதுக்கிண்ணத்துடன் மாந்தியப்பன் அட்டகாச மாகச் சிரித்தவாறு மதுவைக் கொப்பளித்துக் கொப்பளித்து விழுங்கிக் கொண்டிருந்தான்.

இருவரும் அமர்ந்து வீரர்களுக்கு ஆணையிட்டுக் கொண்டி ருந்த இடத்திற்கு அருகாமையில் ஆடம்பரமாக அலங்கரிக்கப் பட்டிருந்த அறையொன்றில் வையம்பெருமான் கனத்த சங்கிலி களால் பிணைக்கப்பட்டு ஒரு பெரிய தூணில் கட்டப்பட்டிருந் தான். அவனை யாரும் நெருங்க முடியாதபடி இரண்டு முரட்டு

வீரர்கள் கொடுவாட்களைக் கையில் பிடித்தவாறு தூணுக்கு இருபுறமும் கொட்டை கொட்டையாக விழித்தவாறு நின்று கொண்டிருந்தனர்.

தந்தங்களால் ஆன கால்கள் அமைக்கப்பட்ட இரண்டு தேக்கு மரக்கட்டில்கள் அந்த அறைக்குள் போடப்பட்டிருந்தன. அவற்றில் ஒரு கட்டிலில் சிலம்பாயி சோகமே உருவாக உட்கார்ந்திருந்தாள். அவளுக்கெதிரே முத்தாயி முழங்காலைக் கட்டிக் கொண்டு கண்களில் நீர் தளும்ப அமர்ந்திருந்தாள். இன்னொரு கட்டிலில் பவளாயி முழங்காலில் தலையைச் சாய்த்தவாறு கன்னங்களில் நீர்த்துளிகள் வழிந்திட உட்கார்ந்திருந்தாள். கோட்டைக்கு வெளியே போர் நடக்கும் ஆரவாரம் அவர்களின் காதுகளில் விழுந்து கொண்டிருந்தது. சின்ன மலைக்கொழுந்துதான் படையெடுத்து வந்திருக்க வேண்டுமென்று அவர்களுக்குத் திண்ணமாகத் தெரியும்.

துரோகம் செய்தும் - கலகம் செய்தும் - மிருகத்தனமாக நடந்து கொண்டும் - எப்படியாவது தன்னலத்தைப் பெருக்கிக் கொண்டு வாழ வேண்டுமென முடிவு கட்டிக் கொண்டிருக்கின்ற செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பன் போன்றோர் உலவினாலும் கூட; கொங்கு வேளாளர் குலத்தின் கீர்த்திமிகு வரலாற்று ஏட்டில் வாழ்ந்தால் வீரத்தோடும் மானத்தோடும் வாழ வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டுள்ள சின்ன மலைக்கொழுந்துகளும் ஏராளமானோர் உண்டு என்ற அந்த உறுதியான நம்பிக்கையின் அடிப்படையிலேதான் கோட்டையைச் சுற்றிப் படை கொண்டு வந்திருப்பது அவராகத்தானிருக்கும் - ஆம்; அவரேதான் என முடிவு கட்டிக் கொண்டனர்.

அதற்காக அடைபட்டுக் கிடக்கும் அவர்களால் மகிழ்ச்சி அடைய முடியவில்லை. ஆறுதல் கொள்ளவும் இயலவில்லை. ஏனெனில் ராச்சாண்டார்மலையில் திருமலையின் தலைமையில் குவிக்கப்பட்டுள்ள படை வீரர்களின் எண்ணிக்கை மிக அதிகம். அதில் பத்தில் ஒரு பங்கு கூட இல்லாத ஆரிச்சம் பட்டிப் படையினால் தளபதி திருமலையைத் தோற்கடித்து - கோட்டையைக் கைப்பற்றி - தங்களையும் மீட்டிட முடியாது என்று அவர்கள் திட்டவட்டமான முடிவுக்கு வந்திருந்தனர்.

மாந்தியப்பன், திருமலை அமர்ந்திருந்த பகுதிக்கு ராச்சாண்டார் மலை வீரர் சிலர் அவசரமாக ஓடி வந்தனர். ''என்ன? என்ன? ஏன் இப்படி ஓடி வருகிறீர்கள்?'' என்றான் திருமலை!

''ஆரிச்சம்பட்டி வீரர்கள் முன்னேறி வரவே இல்லை! அப்படி அப்படியே குதிரைகள் மீது நின்ற இடத்திலே நிற்கின்றனர்! புற்றீசல் போலப் புறப்பட்டுச் செல்லும் நமது அம்புகளைக் கேடயங்களால் தடுத்திட மட்டுமே அவர்களால் முடிகிறது!'' என்றனர் அந்த வீரர்கள்! மதுவுண்ட வெறியில் மாந்தியப்பன் ''சபாஷ்!'' எனக் கத்திக் கடகடவெனச் சிரித்தான். ஓநாய் போல பயங்கரத்தொனியில் கத்தினான்.

''பயல்கள் நடுங்கிப் போயிருப்பார்கள்! ஒரு அடி கூட முன்னால் எடுத்து வைக்க முடியாமல் திணறிப் போயிருப்பார்கள்! தளபதி திருமலையா கொக்கா? இதோ நான் வருகிறேன். கோட்டைக் கொத்தளத்தின் சாளரத்தின் வழியாக அந்தப் பரிதாபக் காட்சியைப் பார்த்துக் களிக்கிறேன்'' என்று கூறி, திருமலையின் தோளைத் தட்டிக் கொடுத்து விட்டு - மாந்தியப்பன் அங்கு வந்த வீரர்களில் இருவரை அழைத்துக் கொண்டு கொத்தளத்தின் முகப்பு நோக்கிச் சென்றான்.

பலகணியை விடச் சற்று சிறியதாகவும் உள்ளிருந்து வெளியே பார்த்தால் பரந்த வெளிப்புறம் தெளிவாகத் தெரியக் கூடியதாகவும் அமைக்கப்பட்டிருந்த அந்த சாளரத்தின் வழியே விழிகளைச் செலுத்திய மாந்தியப்பன் சற்று வியப்புற்றுத் திகைப்படைந்தான்.

ஆரிச்சம்பட்டிப் படைகளின் அணி வகுப்புக்கு முன்னால் சின்னமலைக்கொழுந்தும், அவருக்கு அருகே ஆற்றில் குதித்து முத்தாயி பவளாயி இருவரையும் காப்பாற்றிய அந்த வாலிபர்கள் இருவரும், அவர்களுடன் மற்றொரு வீரனும் அவன் கண்களில் தென்பட்டதே அந்தத் திகைப்புக்குக் காரணம்! சூறாவளிக் காற்றையும் பொருட்படுத்தாமல் அவர்கள் புரிந்த சாகசம்; மலைப்பாம்பு, முதலைகளுடன் அவர்கள் நடத்திய மரணப் போராட்டம்...! இவையெல்லாம் அவன் நினைவுக்கு வரவே, திருமலையின் படை பெரியதாயினும் நெஞ்சுரம் கொண்ட அவர்கள் முன்னால் தாக்குப் பிடிக்க முடியுமா? என்ற சந்தேகமும் அவனை ஆட்கொண்டது!

ஆரிச்சம்பட்டிப் படையினரை விடுத்து விழிகளைத் திருப்பி, நிமிர்ந்து நின்று யோசித்துக் கொண்டிருந்த மாந்தியப்பனிடம் அவனது பணியாள் மற்றொரு மது நிறைந்த கிண்ணத்தை நீட்டினான். அதனை அவன் வயிற்றுக்குள் அனுப்பிய சில நொடிகளில் அவனுக்குத் திடீரென ஏற்பட்ட அச்சம், ஐயம் எல்லாம் பறந்தோடிப் போயின. மதுவின் கிறுகிறுப்பு அவன்

உள்ளத்துக்குப் புதிய தெம்பையும் அசாத்தியத் துணிச்சலையும் வாரி வழங்கியது.

அங்கிருந்து திருமலையிடம் வந்தான். திருமலையோ, அம்பு மழையைக் கோட்டையிலிருந்து இடைவிடாது பொழியத் தனது வீரர்களுக்கு உத்தரவிட்டுக் கொண்டே, அது செயல்படுவதைக் கம்பீரமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஆரிச்சம்பட்டிப் படையை அந்த வாலிபர்கள் தலைமை யேற்று நடத்தி வந்திருப்பதை மாந்தியப்பன்; தளபதி திருமலை யிடம் கூறினான். பெயர் தெரியாத காரணத்தால் கரகம் விடும் திருவிழாவில் காவேரியாற்றில் நடந்த நிகழ்ச்சியை விவரித்து, அந்த வாலிபர்களின் திறமையைக் குறைத்து மதிப் பிடக் கூடாது என்றும் மாந்தியப்பன் எச்சரித்தான். மாந்தி யப்பனுக்கு மதுவின் போதையினால் ஏற்பட்டிருந்த துணிவை விட; திருமலைக்கு அதிகார போதையினால் ஏற்பட்டிருந்த துணிவு அதிகமாகவே இருந்தது!

''எவன் வந்தால் என்ன? எலிக்குஞ்சுகள்; இந்த இமயமலை யிடம் என்ன செய்ய முடியும்? எங்கே நசுங்கிச் செத்தன; என்று கூடத் தெரியாமல் போய் விடும்!'' என ஆர்ப்பரித் தான் திருமலை! ''உம்! ஆகட்டும்!'' எனத் தனது வீரர்களுக்கு அவன் கட்டளையிட்டான் மீண்டும்!

கோட்டைக்குள்ளேயிருந்து கண நேரம் கூடத் தயங்காமல் கணைகள் ஆரிச்சம்பட்டிப் படையை நோக்கிப் பொழிந்த வண்ணமிருந்தன!

கேடயங்களால் கணைகளைத் தடுத்துக் கொண்டிருந்த ஆரிச் சம்பட்டி வீரர்கள்; ஒருவர் - இருவர் - பின்னர் பத்துப்பேர் - நூறு பேர் என்று குதிரைகளில் இருந்து கீழே விழுந்து கொண்டிருந்தனர். வீரர்கள் விழுந்ததும் குதிரைகள் சில ஓடத் தொடங்கின. சில அம்புபட்டு அங்கேயே வீழ்ந்து துடித்தன.

இந்தச் செய்திகள் அடுக்கடுக்காக வரவர; மாந்தியப்பன் தாங்க முடியாத அளவுக்கு வெறிக் கூத்தாடியவாறு - ஆரிச்சம், பட்டிக் குடும்பத்தார் அடைபட்டிருந்த அறை நோக்கிப் பீடு நடை போட்டுச் சென்றான்.

அறைக்கதவு பூட்டப்பட்டிருந்தது. உள்ளே தாழ்ப்பாளும் போடப்பட்டிருந்தது. கதவோரமிருந்த கண்ணாடிப் பலகணி

வழியாக மாந்தியப்பன் உள்ளேயிருந்தவர்களைப் பார்த்துக் கெக்கலி கொட்டினான். அவர்கள் வெறுப்பை விழிகள் வழியே நெருப்பாகக் கொட்டினர். அந்தக் கோபத்தில் மாந்தியப்பன் பலகணியின் கண்ணாடியைத் தனது கைவாளின் பிடியினால் ஓங்கியடித்து உடைத்தெறிந்தான்.

இப்போது அவன் பேசுவது அறைக்குள்ளிருந்தவர்களுக்குத் தெளிவாகக் கேட்டது.

''என்னை மணப்பதற்கென்றே மாயனால் படைக்கப்பட்ட மங்கையர் திலகங்களே! உங்களை மீட்டுக் கொண்டு போவதற்காக உங்கள் முட்டாள் தகப்பன் மட்டுமல்ல; முதலையோடும் மலைப்பாம்போடும் சண்டை போட்டு உங்களைக் காப்பாற்றிய அந்த முரட்டு வாலிபர்களும் வந்திருக்கிறார்கள்.''

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் முத்தாயி, பவளாயி இருவருக்கு மட்டுமல்ல - சிலம்பாயிக்கும் வையம்பெருமானுக்கும் கூட ஒரு ஆறுதல்! ஒரு நம்பிக்கை!

அவர்களின் முக மாற்றத்தை உணர்ந்து கொண்ட மாந்தியப்பன் அலட்சியமாகச் சிரித்து; மதுக் கிண்ணத்தை முத்தமிட்டுக் கீழே வீசி விட்டு ''ஓகோ! அந்தப் பயல்கள் வந்திருப்பதால் நீங்கள் பாதுகாக்கப்படுவீர்கள் எனக் கருதுகிறீர்களா? அதுதான் நடக்காது! இங்கேயுள்ள படை, காவேரியாற்று முதலையோ - மலைப்பாம்போ அல்ல! கோட்டையிலிருந்து நாங்கள் நடத்தும் தாக்குதலில் உங்கள் ஆரிச்சம்பட்டிப் படை பாதிக்கு மேல் அழிந்துவிட்டது! இன்னும் சிறிது நேரத்தில் சின்னமலைக்கொழுந்தும், அவருக்குத் துணை வந்துள்ள அந்தச் சின்னப் பயல்களும் சிறை பிடிக்கப்படுவார்கள்! அதற்கடுத்து எனது திருமணம்! ஒரு பக்கம் முத்தாயி - இன்னொரு பக்கம் - பவளாயி - பாமா ருக்மணிக்கு நடுவில் பகவான் கண்ணபரமாத்மா போல நான் நிற்பேன்!''

அறைக்குள்ளிருந்த அவர்கள் யாரும் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. ஏதோ ஒரு நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட்டிருந்ததால் அவனிடம் வீணாகப் பேசி வார்த்தைகளை விழலுக்கிரைத்த நீராக்க வேண்டாமெனக் கருதி அமைதியாகவே இருந்தனர்.

வெற்றிக் களிப்பும், மது வெறியின் உசுப்பலும் போட்டி போட்டுக் கொண்டு மாந்தியப்பனை ஆட்டிவைத்ததால் அந்த

அறையின் பலகணியை விடுத்துத் தளபதி திருமலை இருக்கும் பகுதிக்கு வந்தான்.

திருமலையோ மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட்டான்! காரணம்; ஆரிச்சம்பட்டிப் படை வீரர்கள் - ஏதோ தற்கொலை செய்து கொண்டு களச்சாவை யாசித்துப் பெறுவதற்கு வந்ததைப் போல ராச்சாண்டார் மலைப்படையினரின் தாக்குதலில் சுருண்டு விழுந்து கிடந்தனர். கொத்தளப் பகுதியிலிருந்து கடைசியாக வந்த ஒரு வீரன் சொன்னான்;

''சின்னமலைக்கொழுந்து அப்படியே அசைவற்றுக் குதிரையில் அமர்ந்திருக்கிறார். அவருக்குத் துணையாகவும், படைக்குத் தலைமையேற்றும் வந்த வாலிபர்கள் மூவரும் கூட அவ்வாறே அவர்களின் குதிரைகளில் அமர்ந்திருக்கிறார்கள். நாம் விடும் அம்புகளை மட்டும் அவர்கள் தமது கேடயங்களால் மிக லாவகமாகத் தடுத்துக் கொண்டு சமாளித்தவாறு இருக்கிறார்கள்! மற்றபடி; ஆரிச்சம்பட்டிப் படை அறவே அழிந்து விட்டது!''

அந்த வீரனைத் திருமலை தட்டிக் கொடுத்து பெரும் சிரிப்பொலி செய்தான்! தொடர்ந்து, திருமலை தனது படைவீரர்களுக்கு புதியதோர் ஆணை பிறப்பித்தான்!

''போதும்! அம்பு பொழிவதை நிறுத்துங்கள்! சின்னமலைக் கொழுந்தைக் கொன்று விட வேண்டாம்! அவரும் அவரோடு வந்த ஓரிருவரும் பிழைத்துப் போகட்டும்! பெண்களின் திருமணத்தைப் பெற்றவர் பார்க்க வேண்டாமா? வாழ்த்த வேண்டாமா?''

தமது தளபதி ஆணைப்படி ராச்சாண்டார் மலைக்கோட்டையிலிருந்து அம்பு பொழிவது நிறுத்தப்பட்டது.

மாந்தியப்பன்; தளபதி திருமலையிடம் தனக்குள்ள ஒரு ஆசையை வெளியிட்டான்.

''திருமலை! நமது கோட்டைக்கு வெளியே ஆரிச்சம்பட்டியார் நிற்கிறார்! இப்போதே முத்தாயி பவளாயி இருவரையும் கோட்டை கொத்தளத்துக்கு அழைத்து வந்து; அவர் கண்ணுக்கு நேராகவே அந்தப் பெண்கள் இருவர் கழுத்திலும் நான் மாலையணிவித்து விடுகிறேன்! இப்படித்தான் ஆரிச்சம்பட்டியாரை மானபங்கப்படுத்த வேண்டும்!''

மாந்தியப்பனின் அந்த ஆசைக்குத் திருமலை இணங்கவில்லை!

"எப்படியும் உங்களுக்கும் ஆரிச்சம்பட்டி இளவரசிகளுக்கும் திருமணம் நடக்கத் தான் போகிறது! அதற்குள் எதற்காக அவசரம்? அவசரம் மட்டுமல்ல; அது பண்பாடும் ஆகாது! தலையூர்க்காளி எதுவும் முறைப்படி நடப்பதைத்தான் விரும்புவார்! இதைக் கேள்விப்பட்டால் என் மீது சீறி விழுவார்! எனவே நான் சம்மதிக்க மாட்டேன்!"

திருமலையின் இந்தப் பதிலைக் கேட்டு மாந்தியப்பன் அசடு வழிய நின்றான்.

அப்போது ராச்சாண்டார் மலைக்கோட்டையை நோக்கி தலையூர் வீரனொருவன் குதிரையில் வருகிற செய்தி தளபதி திருமலைக்குக் கூறப்பட்டது. வந்துள்ள வீரன், கோட்டையின் முகப்பில் தலையூர் முத்திரை மோதிரத்தைக் காட்டி விட்டு உள்ளே வந்து கொண்டிருப்பதாகவும் தொடர்ந்து அறிவிக்கப் பட்டது. அதைத் தொடர்ந்து சில நொடிகளில் தலையூர் வீரன் ஓலைச்சுருள் ஒன்றை தளபதி திருமலையின் கையில் கொடுத்துப் பணிந்து வணங்கி, ஒதுங்கி நின்றான்.

தளபதி பரபரப்புடன் ஓலையைப் படித்து முடித்தான். மாந்தியப்பன்; "என்ன அவசர ஓலை?" என்பது போல தளபதியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"ராச்சாண்டார் மலையிலிருந்து முத்தாயி பவளாயி முதலியவர்களை உடனடியாகத் தலையூருக்கு அழைத்து வந்து விட வேண்டுமாம். திருமணம் தலையூரில்தான் நடக்க வேண்டுமாம். இந்த ஏற்பாடுதான் தலையூர் மன்னருக்குப் பாதுகாப்பான ஏற்பாடாகத் தோன்றுகிறதாம். உடனே ஆரிச்சம்பட்டி குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு தலையூருக்கு வரக் காளி மன்னர் கட்டளையிட்டுள்ளார்."

திருமலை, கடிதத்தில் உள்ளதைச் சுருக்கமாகச் சொல்லி விட்டு; தலையூர் மன்னர் உத்திரவை நிறைவேற்ற ஆயத்தமானான்.

கோட்டை வாசலில் ரத வண்டி கொண்டு வந்து நிறுத்தப் பட்டது. வண்டியைச் சுற்றிப் பாதுகாப்புக்குச் சில வீரர்கள் குதிரைகளில் சூழ்ந்திருந்தனர்.

ஆரிச்சம்பட்டிக் குடும்பம் அடைபட்டிருந்த அறைக்குத் திருமலை சென்றான். வெளிப்புறமாகக் கதவு திறக்கப்பட்டது. அறையின் உள் தாழ்ப்பாளைத் திறக்க முடியவில்லை. திறப்பதற்கு உள்ளே இருந்தவர்களும் சம்மதிக்கவில்லை. புதிய ஆபத்து வருவதை உணர்ந்து நடுங்கினர். தாங்கள் காப்பாற்றப் படவில்லை என அறிந்து நினைவு தடுமாறினர். ஏற்கனவே உடைக்கப்பட்டிருந்த பலகணியின் வழியாகக் கையை உள்ளே விட்டுக் கதவின் உட்தாழ்ப்பாளைத் திறந்தனர் வீரர்கள்!

திருமலை உள்ளே நுழைந்தான். அவர்களிடம் மரியாதையுடன் செய்தியைச் சொன்னான். மாந்தியப்பன், தலைகால் தெரியாமல் ஆடிக் கொண்டிருந்தான்.

''தலையூர் புறப்படுகிறோம்! ஆரிச்சம்பட்டிப் படை அழிந்து விட்டது! உங்களை மீட்க வந்தவர்கள் ஸ்தம்பித்துப் போய் நிற்கிறார்கள்! அவர்களையும் கைது செய்யாதது அவர்கள் செய்த பாக்கியம்! மங்களகரமான மணவிழா தலையூரில் நடைபெறும்போது உங்கள் தந்தையும் வருகை தந்து வாழ்த்த வேண்டுமென்கிற பெரு விருப்பத்துடன் தலையூர் மன்னர் காளி இருக்கிறார். தயவுசெய்து புறப்படுங்கள்! தகராறு செய்யாதீர்கள்!''

திருமலையின் இந்தச் சொற்களைக் கேட்டு - அவர்கள் சோகப் பதுமைகளாக நின்றார்களே தவிர தகராறு எதுவும் செய்யவில்லை!

கோட்டை முகப்பில் நிறுத்தப்பட்டிருந்த ரத வண்டிக்குச் சிலம்பாயி, முத்தாயி, பவளாயி மூவரும் கொண்டு வரப்பட்டார்கள். அவர்களை ரத வண்டியில் உட்கார வைத்த பிறகு வையம்பெருமானையும் சங்கிலியால் பிணைத்தபடியே அந்த வண்டியில் ஏற்றினார்கள்.

இரு கம்பீரமான குதிரைகளில் தளபதி திருமலையும், மாந்தியப்பனும் ஏறி அமர்ந்தனர்.

இந்தக் காட்சியைக் கோட்டைக்கு வெளியே தொலைவில் குதிரைகளில் இருந்தவாறு சின்னமலைக்கொழுந்தும் பொன்னர், சங்கர், வீரமலை ஆகியோரும் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். ரதவண்டி, கோட்டை முகப்பிலிருந்து வேகமாகக் கிளம்பிற்று.

முகப்பைத் தாண்டி, கோட்டையின் இரண்டாவது சுற்றடைப் புச் சுவரைத் தாண்டி அடுத்த முகப்பு வாயிலின் வழியாக வண்டி நுழைந்தபொழுது; ''வேல்! வேல்! வீரவேல்! வெற்றி வேல்!'' என்று ஒரு பெரும் ஒலி! ஆம்; பொன்னர் - சங்கர் - வீரமலை மூவரும் எழுப்பிய ஒலி!

அந்த ஒலி அடங்குவதற்குள் கோட்டைக்கு வெளியே வீழ்ந்து கிடந்த ஆரிச்சம்பட்டி வீரர்கள் ஒரிருவர் தவிர அனைவரும் நிமிர்ந்தெழுந்தனர். எழுந்த வேகத்தில் ரத வண்டியைச் சுற்றிச் சூழ்ந்து வந்த ராச்சாண்டார்மலை வீரர்கள் மீது தாக்குதல்!

பொன்னர் - சங்கர் இருவரும் உருவிய வாளுடன் அந்த வீரர் கூட்டத்தில் புயல் போலப் புகுந்தனர். சங்கரைத் தளபதி திருமலை மடக்கிக் கொண்டான். பொன்னர் ஆரிச்சம்பட்டி வீரர்களுடன் ராச்சாண்டார் மலைவீரர்களை எதிர்த்துப் போர் புரிந்தான். இடையில் வீரமலை, ரதவண்டியில் பாய்ந்து வையம் பெருமானைப் பிணைத்திருந்த சங்கிலியை அறுத்தெறிந்தான்! தளபதி திருமலையின் வாள் சங்கரின் தலையைப் பிளந்து விடக் கூடும் என அஞ்சிப் பதறி சின்னமலைக்கொழுந்து துடித்துப் பதறியபோது சங்கர் அந்த மாமிசமலையின் நெஞ் சில் தனது வாளைப் பாய்ச்சிக் கீழே வீழ்த்தினான்.

தளபதி பிணமானது கண்டு, ராச்சாண்டார்மலை வீரர்கள் சிதறியோடினர். கோட்டைக்குள்ளிருந்து வீரர்கள் வருவதற்கு முன்பாக ரத வண்டியை வையம்பெருமான் செலுத்த, அதற் குப் பின்னால் பொன்னர், சங்கர், வீரமலை, சின்னமலைக் கொழுந்து மற்றும் ஆரிச்சம்பட்டி வீரர்கள் தொடர்ந்தனர்.

ரத வண்டி, காற்றிலும் கடுவேகமாகப் பறந்தது.

அந்த அமளியில் மாந்தியப்பன் தானேறியிருந்த குதிரையில் தலை தெறிக்க ஓடி எப்படியோ தப்பித்துக் கொண்டான்.

17

# சங்கரன்மலையில் சந்திப்பா?

ராச்சாண்டார்மலையிலிருந்து ஒரு கல் தொலைவு கூட சென்றிருக்க முடியாது; அதற்குள் பொன்னர், சங்கர், வீர மலை ஆகிய மூவரின் குதிரைகள்; வையம்பெருமான் ஓட்டி வந்த ரத வண்டிக்கு முன்னால் வந்து விட்டன.

''நாங்கள் போகும் பாதையிலேயே வண்டியும் வீரர்களும் தொடரட்டும்!'' என்று பொன்னர் ஆணையிடும் தொனியில் கூறினான்.

சின்னமலைக்கொழுந்து, தனது குதிரையை சற்று இழுத்துப் பிடித்த படி; ''இது காட்டுப்பாதையாயிற்றே?'' என்று இழுத் தாற் போல் கேட்டார்.

''காட்டுப்பாதைதான்! கொஞ்சம் கஷ்டப்பட்டுத்தான்! போக வேண்டும்! காட்டுப்பாதை மட்டுமல்ல; கரடு முரடான பாதை யும் கூட! எதிரிகள், நாம் ஆரிச்சம்பட்டிக்குப் போவதாக எண் ணிக் கொண்டு பின் தொடரக் கூடும்! நாம் பாதையை மாற் றிக் கொள்வது தான் இந்த சூழ்நிலைக்கு ஏற்றது! என்றான் பொன்னன்.

''அப்படியானால் நாம் எங்கே போகிறோம்? என்று சின்ன மலைக்கொழுந்து வியப்பை விழிகளில் வெளிப்படுத்திக் கேட்கவே;

''சங்கரன்மலைக்கு!'' என்று பொன்னர் பதில் அளித்தான்!

''சங்கரன்மலைக்கா?'' என்று சின்னமலைக் கொழுந்து எழுப்பிய வினாவில் பொருளில்லாமல் போகவில்லை.

பல்வேறு குன்றுகளுக்கு உரிமை படைத்தவனான குன்றுடை

யானின் ஆதிக்கத்தில் இருந்த பகுதிகளில் ஒன்று சங்கரன் மலை!

தனக்கும் குன்றுடையானுக்கும் தனது தங்கை தாமரைநாச்சி யின் திருமணம் காரணமாக ஏற்பட்டிருந்த மனக்கசப்பு இன்ன மும் நீங்காத நிலையில்; குன்றுடையானுக்குச் சொந்தமான சங்கரன்மலைக்கு எப்படிச் செல்வது என்ற தயக்கம் சின்ன மலைக் கொழுந்துவுக்கு!

அந்தப் பழைய நிகழ்ச்சியை அந்த வீர வாலிபர்களிடத்திலே இப்போது விளக்கிச் சொல்வதற்கு அவரே வெட்கப்பட்டார்.

செல்லாத்தாக் கவுண்டரும் அவரது மகன் மாந்தியப்பனும் மக்களிடத்திலே தொடர்ந்து பெற்று வருகிற வெறுப்பும் — மனிதாபிமானமற்ற முறையில் வெளிப்படுகிற அவர்களது சேட்டைகளும் சின்னமலைக்கொழுந்துவின் உள்ளத்தில் அவர் களைப் பற்றிய ஒரு பயங்கரத் தோற்றத்தை உருவாக்கியிருந்த மையால்; எப்படியோ அன்றைக்குத் தனது சகோதரி தாமரை யின் மணவிழாவில் ஏற்பட்ட திடீர் மாற்றமும் அவளைப் பொருத்த வரையில் நலமாகவே முடிந்தது என அவர் சில நேரங்களில் எண்ணிக்கொள்வார்! இருந்தாலும் கூட; தனது தங்கை, பிறந்து வளர்ந்த குடும்பத்தை ஒரு நொடியில் அலட் சியப்படுத்திவிட்டு நெல்லியங்கோடனுடன் இல்லறம் நடத்தப் புறப்பட்டு விட்ட அந்த அதிர்ச்சி அவர் இதயத்திலிருந்து அறவே நீங்கியபாடில்லை!

பொன்னரின் வார்த்தைக்கு மறுவார்த்தை கூற அவருக்கு மனம் வரவில்லை. திடீர் திடீரென வந்த ஆபத்துக்களில் இருந்து தனது குடும்பத்தையே காப்பாற்றிய அந்த தீரமிகு இளைஞர்களின் மீது அவர் கொண்டிருந்த மதிப்பினாலும், அன்பின் ஆழத்தினாலும் பொன்னரின் யோசனையை அப் படியே ஏற்றுக் கொண்டு பின் தொடர்ந்தார், ஆரிச்சம்பட்டி வீரர்களுடன்!

நெருக்கமாக மரங்களடர்ந்த காட்டுப்பாதை - ராச்சாண்டார் மலையிலிருந்து வடக்கு திசை நோக்கிச் செல்லும் அந்த பாதையில் பொன்னர், சங்கர், வீரமலை மூவரும் குதிரை களில் முன்செல்ல அவர்களையொட்டி சின்னமலைகொழுந் தின் குதிரை செல்ல - பின்தொடர்ந்து ரத வண்டியும், வண்டி யைச் சுற்றி வீரர்களும் புடைசூழ்ந்து வர வேகமான பயணம் ஆரம்பமாயிற்று!

ஓரிரு கல் தொலைவு சென்றதும், குதிரையிலிருந்தவாறே சின்னமலைக்கொழுந்து பொன்னர், சங்கர் இருவரையும் நோக்கி; ''சங்கரன்மலையில் ஏற்கனவே உங்களுக்கு யாரும் அறிமுகம் உண்டா?'' என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தார்.

அதற்குப் பொன்னர் பதில் சொன்னான். ''எங்கள் ஆசான் ராக்கியண்ணன் இரண்டொரு முறை எங்களை அந்த இடத்துக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். நெல்லியங்கோடன் எனப்படும் குன்றுடையாக் கவுண்டருக்குச் சொந்தமான இடம் அது என்று சொல்லியிருக்கிறார். எப்போதாவது குன்றுடையார் சங்கரன்மலைக்கு வந்து அங்குள்ள மாளிகையில் தங்குவது உண்டாம். எங்கள் ஆசான் ராக்கியண்ணன் அந்த மாளிகைக்கு எப்போது வேண்டுமானாலும் வரலாம் என்றும், எத்தனை நாள் வேண்டுமானாலும் தங்கலாமென்றும் குன்றுடையார் அனுமதி வழங்கியிருப்பதாக எங்கள் ஆசானே சொல்லியிருக்கிறார். அந்த அடிப்படையில் எமது ஆசான் எங்களை அங்கு அழைத்துச் சென்றுள்ளார். எனவே கடந்த கால அனுபவத்தை வைத்துத்தான் இப்போது நாம் அங்கு போவது உசிதமென முடிவெடுத்தோம். சங்கரன்மலை மாளிகையில் நாம் போய் தங்கிவிட்டால் எதிரிகள் அவ்வளவு சுலபத்தில் உள்ளே நுழைந்து விட முடியாது. மாளிகையைச் சுற்றியுள்ள அரணும், அரணைச் சுற்றியுள்ள அகழியும் பகைவர்களின் பலத்தை நசுக்கக் கூடியவை.''

பொன்னரின் பதிலைக் கேட்டும் நிம்மதியடையாமல் சின்னமலைக் கொழுந்து மற்றொரு சந்தேகத்தை எழுப்பினார்.

''திடீரென்று, நாம் ஒரு படையுடன் சங்கரன்மலைக்கோட்டைக்குள் நுழைந்தால் அங்குள்ள தளபதிகளோ வீரர்களோ நம்மை அனுமதிப்பார்களா?''

''அந்தக் கவலையே தேவையில்லை! நான்தான் முன்பே சொன்னேனே; எங்களுக்குப் பழக்கமான இடமென்று! நமது ஆரிச்சம்பட்டிப் படை வீரர்களைக் கோட்டையைச் சுற்றி நிறுத்திவிட்டு, நாங்கள் அங்குள்ள காவலர்களிடம் நிலைமையை விளக்கினால் தங்குதடையின்றி வரவேற்று உபசரிப்பார்கள்.''

முழுமையான திருப்தி சின்னமலைக்கொழுந்துக்கு ஏற்படவில்லையென்பதை அவரது முகம் காட்டியது. அதைப் புரிந்து கொண்டு சங்கர் அவரிடம் பேசினான்.

"ராச்சாண்டார்மலையிலிருந்து நாம் நேராக ஆரிச்சம்பட்டிக்கே கூடப் போயிருக்கலாம்! ராச்சாண்டார்மலைவீரர்கள் நம்மைப் பின்தொடர்ந்து ஆரிச்சம்பட்டிக்குத்தான் போவார்கள்! சிதறியோடியோர் போக மிச்சமிருப்போர் ஆரிச்சம்பட்டிக்கு செல்லும் வழியில் சிறிது தொலைவு சென்று விட்டு, நம்மைக் காணாமல் திகைத்துப் போய் வேறு பாதையைத் தேர்ந்தெடுப்பதற்குள் நாம் சங்கரன்மலைக்குச் சென்றுவிடலாம்.

சங்கரின் விளக்கத்தில் இருந்த தந்திரத்தை சின்னமலைக் கொழுந்து மனதுக்குள் பாராட்டிக் கொண்டார் என்றாலும்; அடுக்கடுக்காகப் பல ஐயப்பாடுகள்; அலைகளாக எழுந்து மோதிக்கொண்டுதானிருந்தன.

தாக்குண்டு ஓடிய மாந்தியப்பன் செல்லாத்தாக் கவுண்டரிடம் சென்று நடந்ததைச் சொல்லுவான்! அவர் தனது மகனையும் கூட்டிக் கொண்டு, தலையூர்க்காளிடம் ஓடுவார்! தலையூர்க்காளி மன்னனின் கோபத்தைக் கிளறிட ஒரு பெரிய சம்பவமே இருக்கிறது! அது தான் அவனது தளபதிகளில் ஒருவனான திருமலை கொல்லப்பட்ட நிகழ்ச்சி! எப்படியும் தலையூர்க்காளியின் படை, ஆரிச்சம்பட்டியை நோக்கி சில நாட்களில் வரக்கூடும். இப்படி நடக்கக்கூடுமே என எண்ணிய சின்னமலைக்கொழுந்தின் இதயம் படபடத்தது எனினும்; அதேநேரம் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள எதையும் சந்தித்துத்தானே தீர வேண்டுமென்ற உறுதியும் ஆணிவேராகச் சென்று ஆழமாகப் பதிந்து நின்றது!

ரத வண்டியில் அமர்ந்திருந்த முத்தாயி பவளாயி இருவரின் கண்கள், தங்கள் வண்டிக்கு முன்னே குதிரைகளில் பெருமித நோக்குடன் சென்று கொண்டிருந்த பொன்னர், சங்கரை மொய்த்திருந்தன!

நடுவழியில் ஏற்பட்ட விபத்தினால் தங்கள் வாழ்க்கையே நாசமாகும் - ஆரிச்சம்பட்டி குடும்பமே அழிந்து போக நேரிடும் - என்ற நிலைமை ஏற்பட்டிருந்தாலும்: அந்த விபத்தினால்தானே - அதிலிருந்து தங்களைக் காத்திட வந்த அந்த வீரர்களை மீண்டுமொரு முறை தங்கள் விழிகளுக்கு விருந்தாக்கிக்கொள்ளும் வாய்ப்பு கிட்டியது என்றெண்ணி அந்த இளமான்களின் விழிகள் ஒளியுமிழ்ந்தன!

உடல் வலிமையினாலும் - அசாதாரணச் துணிச்சலினாலும் - சூறைக்காற்றை எதிர்கொண்டார்கள்; மலைப் பாம்பை வீழ்த்தினார்கள்; முதலையைப் புறம் கண்டார்கள்; என்று

நினைத்திருந்த அந்தக் கட்டழகுப் பெட்டகங்கள் - அந்த வாலிபர் இருவரும் பெரும்படையினை எதிர்த்துக் களம் காணும் போரிலும் வெற்றி வீரர்களாகத் திகழ்வதறிந்து சொக்கிப் போய் அதிலும் ஒரு சுகம் கண்டார்கள்.

பொன்னரை விழிக்கு விருந்தாக்கிக் கொண்டு - இதயச் சிம்மாசனத்தில் அவனை அமரவைத்து, அவன் முழங்காலில் முகம் பதித்து வீரம் செறிந்த அவனது மார்பகத்தைத் தனது மலர்க்கரத்தால் தடவிக்கொடுத்து இன்பம் அனுபவிப்பது போல் கற்பனை செய்து பார்த்த முத்தாயி; எங்கே தன்னைத் தன் தங்கை பவளாயி பார்த்து விடுவாளோ என்று கடைக் கண்ணால் அவளை நோட்டமிட்டுத் தனக்குத்தானே நாண முற்றுத் தலைகுனிந்து கொண்டாள்.

சங்கரின் மீசையழகில் தன்னைப்பறிகொடுத்து - அவனுடன் இணையாக அந்தக் குதிரையில் அமர்ந்து, தனது கரங்களால் அவனது தேக்குமரத் தேகத்தை வளைத்துப் பிடித்துக் கொண்டது போல் கனவுலகில் திரிந்த பவளாயி; எங்கே தன்னைத் தனது அக்காள் பார்த்துச் சிரித்து விடுவாளோ என நாணிக் கோணித் தலையைச் சாய்த்துக் கொண்டு விட்டாள்.

குதிரையில்; ரத வண்டிக்கு முன்னால் சென்ற பொன்னருக்கு ஆண்டவன் மீது கோபம்! தனக்கு முகத்தில் ஒரு கண்ணையும், பிடரியில் ஒரு கண்ணையும் அவன் படைத்திருந்தால் - ஒரு கண்ணால் பாதையையும், இன்னொரு கண்ணால் வண்டியில் உள்ள பாவையையும் பார்த்துக் கொண்டே பயணம் செய்யலாம் அல்லவா?

இப்படி ஒரு கற்பனை அவனுக்கு! சங்கர்தான் என்ன? அவனுக்குத் தோன்றியதும் சாதாரண கற்பனை அல்ல! தனது உள்ளங்கையை உயர்த்திப் பார்க்க வேண்டுமாம்! அது உடனே ஒரு கண்ணாடியாக மாற வேண்டுமாம்! அதில் ரத வண்டியில் உள்ள பவளாயியின் முகம் தெரிய வேண்டுமாம்! அவனும் அந்தக் கைக்கண்ணாடியைப் பார்த்துக்கொண்டே பயணம் செய்வானாம்!

ராச்சாண்டார்மலைக்குப் படை கிளம்புவதற்கு முன்பு, ஆரிச்சம்பட்டிக் கோட்டையின் முகப்பில் சின்னமலைக் கொழுந்து அறிவித்த செய்தியும் அவர்கள் நெஞ்சில் பொன்னூசல் ஆடிக் கொண்டிருந்தன!

வெற்றிக்கனியைப் பறித்துக் கொடுப்பார்களேயானால் இந்த வீரர்களுக்கு; நான் பெற்ற கனிகளைத் தருவேன் என்று அவர் முழங்கியதை அந்தச் சிங்க இளைஞர்கள் நினைத்து நினைத் துத் தங்கள் இதயத்தை இன்ப ஊற்றால் நனைத்துக் கொண் டார்கள்:

அதோ; சங்கரன்மலைக்கோட்டை அருகாமையில்தான் இருக் கிறது என்பதை அறிவிப்பது போல ஆலயத்தின் கோபுர உச்சி தெரிகிறது!

கோட்டைக்குள்ளிருப்பது யார் என்று தெரியாமலே சின்ன மலைக்கொழுந்தும், அவர் மனைவி மக்களும், அவர்களுக்குத் துணையாகப் பொன்னர் சங்கரும், வீரமலையும் வந்து கொண் டிருக்கிறார்கள்.

செல்லாண்டியம்மன் கோயில் மண்டபத்திலிருந்து குடையூர் சென்று குன்றுடையாக் கவுண்டர் அரண்மனையில் எல்லா வற்றையும் விபரமாகப் பேசலாம் என்று மாயவர் கூறியதை ஏற்றுக்கொண்டு குன்றுடையான் புறப்பட்டாலுங் கூட; வண்டி யிலேறி அமர்வதற்கு முன்பு; மாயவரிடத்திலே ஒரு மாற்று யோசனையை வெளியிட்டான்!

''மாயவரே! காணாமற் போன எங்களின் குழந்தைகளைப் பற்றி நல்ல செய்தி சொல்லப் போகிறீர்கள்! அதற்காக எங் கள் மாளிகைக்கே வருவதாகக் கூறுகிறீர்கள்! ஆனால் ஒன்று; எங்கள் குழந்தைகள் எங்கே காணாமற் போயினவோ; அந்த இடத்துக்கே எங்களுடன் வாருங்கள்! காணாமற் போன கண் மணிகள் எங்கேயிருக்கிறார்கள் என்ற களிப்பான செய்தியை அந்தக் குழந்தைகள் காணாமற்போன இடத்திலேயே சொன் னால்; எந்த இடத்தில் குழந்தைகளைப் பறிகொடுத்து விட்டுக் கதறியழுதோமோ; அந்த இடத்திலேயே அந்தக் குழந்தைகள் உயிரோடிருக்கும் விபரத்தை உங்கள் வாயிலாகக் கேட்டுப் பூரிப்படைகிறோம்!''

''எங்கே அழைக்கிறாய்; நெல்லியங்கோடா?''

''எங்குமில்லை மாயவரே; எனக்குரிமையுடைய சங்கரன் மலைக்குத்தான் அழைக்கிறேன்!''

''குடையூர் மாளிகைக்குச் சென்றால் உனக்கு என்னால் என்ன தொல்லை ஏற்படுமென தயங்குகிறாய்?''

''சே! சே! அப்படியொன்றுமில்லை - இங்கிருந்து குடையூரை விட சங்கரன்மலை அருகாமையில் இருக்கிறது! சங்கரன் மலையைத் தாங்களும் பார்க்க வேண்டுமென்று நான் ஆசைப் பட்டேன்! அங்குள்ள மாளிகை அமைப்பும் அரண் வலிவும், அகழியின் தோற்றமும் தங்களை மிகவும் கவரும்! என் யோசனை தங்களுக்குப் பிடித்தமில்லையென்றால் குடையூருக்கே போக லாம்; எனக்கு அதிலொன்றும் ஆட்சேபணையில்லை!''

மாயவர், குன்றுடையானை இடைமறித்து; ''இல்லை! இல்லை! வேண்டாம் வேண்டாம்! சங்கரன்மலை மாளிகைக்கே போவோம்! குழந்தைகள் காணமற் போனது அந்த இடத்தில் தான் என்கிற போது; எனக்கும் அந்த இடத்தைப் பார்க்க ஆவலாக இருக் கிறது - அங்கேயே போகலாம்!'' என்றார்.

செல்லாண்டியம்மன் கோயிலில் இருந்து தென்மேற்காகச் சென்று அமராவதி ஆற்றின் தென்கரையில் உள்ள குடையூருக்குச் செல்வதைக் காட்டிலும், அந்தக் கோயிலில் இருந்து சற்றுத் தென்கிழக்காகத் திரும்பி மதுக்கரையைத் தாண்டிச் சென்றால் மிக விரைவில் சங்கரன் மலையை அடைந்துவிட லாம். மாயவரும் அங்கேயே போகலாம் என்று விருப்பம் தெரிவித்தவுடன் குன்றுடையான் தாமரைநாச்சியாரையும் அருக்காணியையும் பார்த்து வண்டியிலேறுமாறு கண்களால் பணித்தான்.

சங்கரன்மலைக்குத் தனது கணவனுடன் ஐந்தாறு முறை தாமரைநாச்சியார் வந்திருக்கிறாள் என்றாலும் ஒவ்வொரு முறையும் அவள் வந்த போது அந்த ஊர் மாளிகையில் தனது குழந்தைகள் காணாமற்போன நிகழ்ச்சி அவளைப் பெரிதும் வாட்டியிருக்கிறது. ஒரு தாயின் இதயம், இழந்துவிட்ட குழந்தை களுக்காக எப்போதுமே புலம்பிக் கொண்டிருக்குமெனினும் - அவற்றைப் பறிகொடுத்த இடத்திற்கு வரும்போது; அந்தக் குழந்தைகளுக்காகக் கட்டப்பட்ட சமாதிகளைக் காணுவது போன்ற உணர்வைத் தானே பெற்றுத்தவிக்கும்! அதனால் தாமரை தனது கணவன் அழைத்த போது சில நேரங்களில் சங்கரன்மலைக்கு வருவதைத் தவிர்த்திருக்கிறாள். ஆனால் இப்போது தனது கணவனின் யோசனை அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

என்றைக்கோ இழந்து விட்ட செல்வங்கள் உயிரோடிருக்கி றார்கள் என்று சூசகமாகத் தெரிவித்த மாயவர்; அவர்கள் எங்கேயிருக்கிறார்கள் - எப்படியிருக்கிறார்கள் என்ற முழுச்

செய்தியைச் சொல்லப் போகிறார் - அதுவும் அந்தச் செல்வங்கள் தனது கையை விட்டுப் போன அதே சங்கரன்மலையில் சொல்லப் போகிறார் என்றதும் தாங்கொணாதமகிழ்ச்சியால் நெஞ்சம் கனத்துப் போயிருந்தாள். அண்ணன்மார் இருவர் குழந்தைப் பருவத்திலே காணாமற்போய்விட்டார்கள் என்பதைத் தாயாரின் இடைவிடாத சோகக் கண்ணீரால் எழுதப்பட்டதைப் படித்தறிந்திருந்த அருக்காணித் தங்கமும் ஏதோ சில முக்கியமான விபரங்களுடன் மாயவர், சங்கரன்மலைக்குத் தங்களோடு வருகிற சம்பவத்தைப் பெரிய வாய்ப்பாகவே கருதி உற்சாகமடைந்தாள்.

குடையூர் மாளிகை வண்டியில் - குன்றுடையான், தாமரை நாச்சியார், அருக்காணித் தங்கம் ஆகியோர் ஏறி அமர்ந்து கொள்ள; வண்டிக்கருகாமையில் தனது குதிரையில் மாயவர் பயணம் செய்ய - பாதுகாப்பு வீரர்கள் சிலர் குதிரைகளில் வர அன்றிரவே அவர்கள் சங்கரன்மலை மாளிகைக்குப் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

அவர்கள் மாளிகைக்குள் இருப்பது பற்றிய தகவல் எதுவும் தெரியாமல் தான் பொன்னர் சங்கர் இருவரும் சின்னமலைக் கொழுந்துவையும் ஆரிச்சம்பட்டி குடும்பத்தினர், மற்றும் வீரர்களையும் அந்த ஊரின் முகப்புக்குள் அழைத்து வந்து சேர்ந்தனர்.

சங்கரன்மலை மாளிகை வாசல் முகப்பில் வழக்கத்திற்கு மாறாக வீரர்களின் நடமாட்டமும் காவலர்களின் பந்தாக்களும் அதிகமிருப்பதைக் கண்ட பொன்னரும் சங்கரும் வீரமலைச் சாம்புவனைத் திரும்பிப் பார்த்தனர்.

''சற்று நேரம் தாமதியுங்கள்; நான் உள்ளே சென்று யார் வந்திருக்கிறார்கள் என்று விபரமறிந்து வருகிறேன்''

இவ்வாறு கூறிவிட்டு வீரமலைச் சாம்புவன், தனது குதிரையை சங்கரன்மலைக் கோட்டை வாசலை நோக்கித் தட்டி விட்டான்.

கோட்டை வாசலில் வீரமலை சாம்புவனை அடையாளம் தெரிந்து கொண்ட சங்கரன்மலை வீரர்கள் அவனுக்குத் தலை தாழ்த்தி வணக்கம் தெரிவித்து கோட்டைக்குள் செல்ல அனுமதி மட்டுமல்ல; அவனை அழைத்துக் கொண்டே கோட்டைக்குள் சென்றார்கள்.

கோட்டைக்கு வெளியே மர நிழல்களில் பொன்னர், சங்கர், சின்னமலைக்கொழுந்து குதிரைகளில் அமர்ந்தவாறு காத்தி ருந்தினர். முத்தாயி பவளாயி இருந்த ரத வண்டியும் ஒரு வேப்பமரத்து நிழலில் நிறுத்தப்பட்டிருந்தது. வையம்பெரு மான், வண்டியிலிருந்து கீழே இறங்கி வண்டிக்கு அருகாமை யில் இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தான். ஆரிச்சம்பட்டி படைவீரர்கள் தொலைவில் வரிசையாகக் குதிரைகளில் வீற்றி ருந்தனர்.

''நாமும் ஒரு பகுதியின் எல்லைக்காவல் ஆட்சியாளர்தான் - நாம் நமது வீரர்களுடன் நம்மைப் போன்ற இன்னொரு எல்லைக் காவல் ஆட்சியாளரின் கோட்டை வாசலில் இவ் வளவு நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறதே!'' என்று தனக் குள்ளாக சிலம்பாயி ஆதங்கப்பட்டுக் கொண்டு, ரத வண்டி யில் சாய்ந்திருந்தாள். ராச்சாண்டார்மலைக் கோட்டைக்குள் அடைபட்டிருந்த போது, ''உயிர் தப்பி வெளியே செல்லு வோமா?'' என்ற கவலை! இப்போதோ, ''இவ்வளவு நேரம் வெளியே காத்துக் கொண்டிருக்க வேண்டியுள்ளதே!'' என்ற கௌரவப் பிரச்சினை!

சற்றுத் தாமதமானது உண்மைதான் என்றாலும் - எப்படியோ பொங்கும் இனிய உணர்வின் அடையாளமாகப் புன்னகை புரிந்தவாறு; வீரமலைச்சாம்புவன் - குதிரையை மெல்ல நடத் திக்கொண்டு கோட்டைக்கு வெளியே வந்தான். அவன் பக்கத் தில் வந்ததும், சின்னமலைக் கொழுந்து அவனைப் பார்த்து, ''என்ன ஆயிற்று?'' என்று ஆவலுடன் கேட்டார்.

''கோட்டைக்குள் குன்றுடையாரும் அவரது மனைவியும் மகளும் தங்கியிருக்கிறார்கள்'' வீரமலையிடமிருந்து இப்படிப் பதில் வந்தவுடன் சின்னமலைக் கொழுந்து திடுக்கிட்டு, ''ஆ!'' என்று அவரையுமறியாமல் கொஞ்சம் உரக்கவே கூச்சலிட்டு விட்டார்.



# கபதமா? வாக்குறுதியா? 18

சின்னமலைக்கொழுந்தின் திகைப்பும், வியப்பும், தயக்கமும் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு அவரை மெய் மறக்கச் செய்வதற்கு முன்பே, சங்கரன்மலைக் கோட்டை வாசலில் மங்கல வாத்தியங்கள் முழங்கத் தொடங்கின. ஆலவட்டங்கள் புடைசூழ குன்றுடையான் வந்து கொண்டிருந்தான். வாளும் வேலும் ஏந்திய வீரர்கள் சிலர் அவனுக்கு இரு புறமும் வந்து கொண்டிருந்தனர். சின்னமலைக்கொழுந்து அசைவற்ற நிலையில் அவன் வருவதையே பார்த்துக் கொண்டிருந்தான். பொன்னர், சங்கர், வீரமலை மற்றும் ஆரிச்சம் பட்டி வீரர்கள் முகங்களில் மகிழ்ச்சியின் ரேகைகள் ஒளிவிட்டுக்கொண்டிருந்தன.

குன்றுடையான், தனது பரிவாரங்களுடன் அவர்களை வரவேற்று, கோட்டைக்குள் அழைத்துச் செல்லவே வந்திருக்கிறான் என்பதறிந்த சின்னமலைக்கொழுந்தும் மற்றவர்களும் குதிரைகளில் இருந்து கீழேயிறங்கி நின்று குன்றுடையானையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். குன்றுடையான், குறுநகையை உதடுகளில் தேக்கியவாறு சின்னமலைக்கொழுந்துவுக்கு நேராக வந்து நின்றான்.

இதழ்களில் புன்னகை தவழ்ந்தாலும் - இமைகளின் ஓரங்களில் கண்ணீர்த் துளிகள் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன இருவருக்குமே!

இருவருமே பேச முடியாமல் தவித்தனர்! ஆனால் ஒரே நேரத்தில் இருவரும் தழுவிக்கொண்டு ஒருக்கணம் கற்சிலைகளாக காட்சி தந்தனர்!

''வாருங்கள் உள்ளே போகலாம்! பிரிந்தவர் கூடினால் பேசவும் முடியுமா? எத்தனை ஆண்டுகால பிரிவு?'' என்று

மெல்லிய தழுதழுத்த குரலில் கூறிய குன்றுடையான், சின்ன மலைக்கொழுந்தின் கரங்களைப் பற்றிக் கொண்டான். சின்ன மலைக் கொழுந்தும் உணர்ச்சிவசப்பட்டவராக குன்றுடையா னுடன் நடக்கலானார். குன்றுடையானின் பார்வை பொன்னர் சங்கர் இருவர் மீதும் விழத்தவறவில்லை. அப்படி விழுந்த பார்வை; ஏனோ அவர்களை விட்டுப் பிரியாமல் அவர் களையே பிணைத்துக் கொண்டது என்பது அந்த வீர இளை ஞர்களுக்குப் புரியவில்லை.

இருவரும் பணிவுடன் குன்றுடையானுக்குத் தலை வணங்கி வணக்கம் தெரிவித்து விட்டு சின்னமலைக் கொழுந்துவைப் பின் தொடர்ந்து கோட்டைக்குள் நடந்தனர்.

கோட்டை முகப்பைக் கடக்கும் போது; குன்றுடையான் தனது வீரர் இருவரைப் பார்த்து ''ஆரிச்சம்பட்டியிலிருந்து வந்துள்ள அனைவருக்கும் உணவு வசதி, தங்கும் வசதி அனைத் தும் உடனடியாகத் தயாராகட்டும்!'' என்று ஆணையிட்ட வாறு; சின்னமலைக் கொழுந்தையும் மற்றவர்களையும் கோட் டைக்குள்ளிருக்கும் மாளிகை மண்டபத்தை நோக்கி அழைத்துச் சென்றான்.

பரந்த அளவில் பிரமாண்டமாக எழுப்பப்பட்ட கோட்டை யும் மாளிகையும் அது அல்ல என்றாலுங்கூட - மிகப் பலம் வாய்ந்ததாகத் தோற்றம் அளித்தது. எப்போதாவது ஓய்வெடுக் கத் தங்குகிற இடம்தான் என்பதால் குன்றுடையானின் குடை யூர் மாளிகைக்கு அடுத்தபடியாகத் திகழக்கூடியதுதான் சங்கர மலைக் கோட்டையும் மாளிகையும்!

மாளிகை மண்டபத்தில் நுழைந்ததும் சின்னமலைக்கொழுந் தின் உடம்பெல்லாம் சிலிர்த்திடக்கூடிய உணர்ச்சி மயமான நிகழ்ச்சியொன்று அவரே எதிர்பார்க்காமல் திடீரென நடந்து விட்டது! ஆம்; அவரது தங்கை தாமரைநாச்சியாரும், தங்கை யின் மகள் அருக்காணித் தங்கமும், ஓடி வந்து அவர் காலில் விழுந்து கண்ணீர் பெருக்கினர்! சின்னமலைக் கொழுந்து, ''தாமரை!'' என்று கதறியவாறு சகோதர பாசத்தைப்பொழிந்து அவளைத் தூக்கி நிறுத்தினார்.

ஆண்டுகள் பல ஓடினாலும் ஆழமாக அவர்கள் இதயத்தில் பதிந்திருந்த ஆத்திரம் - அதன் காரணமாக ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்ட சுடுசொற்களில் வேகம் - எல்லாமே பட படவென உதிர்ந்து போய் இருவரும் நேருக்கு நேர் பார்த்துக்

கொண்ட போது பாச உணர்வு மட்டுமே ஓங்கி உயர்ந்தது!

''தாமரை! இதோ இவன்தான் வையம்பெருமான்; என் மகன்! இவர்கள் என் மகள்கள்; முத்தாயி, பவளாயி!'' - என்று அவர் சொல்லி முடிப்பதற்குள் தாமரை நாச்சியார்; கரைபுரளும் உற்சாக வெள்ளத்துடன் ''தெரியுமே! செல் லாண்டியம்மன் கோயில் திருவிழாவிலேயே பார்த்தோமே!'' என்று கூறிக்கொண்டே அவர்களிருவரையும் தன்னருகே இழுத்து அணைத்துக்கொண்டாள்!

''என் பெயர் அருட்கன்னி! என் அம்மாவும் அப்பாவும்; ஏன் எல்லோரும் என்னைச் செல்லமாக அருக்காணி தங்கம் என்று அழைப்பார்கள்'' - என்று முந்திக் கொண்டாள் அருக் காணி தங்கம்! அவளருகே பாசமுடன் சென்று அவளது தலை யைக் கோதி உச்சி மோந்தார் சின்னமலைக் கொழுந்து! அதற் குள் சிலம்பாயி, அருக்காணியைத் தன் பக்கம் இழுத்துத் தழு விக் கொண்டாள்.

குன்றுடையானின் விழிகளைப் போலவே தாமரைநாச்சி யின் விழிகளும் பொன்னர் - சங்கர் இருவரையும் மொய்த் துக் கொள்ளத் தவறவில்லை! நெடுநாள் பகை கொண்டிருந்த இரு குடும்பங்கள் ஒன்று கூடி மகிழ்வது கண்ட மாயவர்; மௌனமாக அந்தக் காட்சியை ரசித்துக் கொண்டு ஒரு ஓர மாக ஒதுங்கியிருந்தார். குன்றுடையான், தாமரை நாச்சியார் இருவரைக் காட்டிலும் அவரது விழிகள்தான் பொன்னர் - சங்கர் இருவரையும் விட்டுச் சிறிதும் அகலாமல் அப்படியே அவர்களது தோற்றத்தையும் அழகையும் கம்பீரத்தையும் பருகிக் கொண்டிருந்தன என்று சொல்ல வேண்டும்.

அவர்களும் மாயவரை ஆச்சரியத்துடன் பார்த்தனர். அன்று மாரிக் கவுண்டன்பாளையத்தில் காட்டுப் பன்றிகளுடன் அவர் கள் போரிட்டபோது அங்கு வந்து, தங்கள் ஆசானின் பாச றைக்கு வழி கேட்டவர் அல்லவா; அவர் எங்கே இங்கு வந் துள்ளார் என்ற ஆச்சரியம் அவர்களுக்கு!

''என்ன மாயவரே; ஒதுங்கி நிற்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே அவரிடம் நெருங்கிச்சென்ற குன்றுடையான்; சின்ன மலைக் கொழுந்தைப் பார்த்து - ''மைத்துனரே! இவரைத் தெரிகிறதா?'' என வினவியதும் - உடனடியாகப் புரிந்து கொள்ள முடியாத தவிப்பை சின்னமலைக் கொழுந்து, தனது அசடு வழியும் முகத்தின் வாயிலாக வெளிப்படுத்தினார்.

''இவர், தலையூர்க் காளியின் அமைச்சர்! பெயர் மாயவர்! இவரைப் பார்த்ததேயில்லையா? அல்லது கேள்விப்பட்டது கூடக் கிடையாதா?''

இப்படிக் குன்றுடையான் கேட்கவே; சின்னமலைக் கொழுந்து தன்னை சமாளித்துக்கொண்டு;

''அடடா! அவரா? கேள்விப்பட்டது மாத்திரமா? நான் பார்த்திருக்கிறேனே! தாடியும் மீசையும் இப்போது அவரை அடையாளமே தெரியாமல் மாற்றிவிட்டது! பல ஆண்டு காலம் நமது தெற்குச்சீமையை விட்டே....'' என்று பேச்சை முடிப்பதற்குள் மாயவர், புன்னகை புரிந்தவாறு அவரைப் பார்த்து;

''பல பகுதிகளில் அலைந்து திரிந்து விட்டு திரும்பத் தலை யூருக்கே வந்து விட்டேன்!'' என்று பதில் அளித்தார்.

''எல்லோரும் உட்காருங்கள்! களைப்பாக இருக்கும்! முத லில் சிற்றுண்டி ஏதாவது அருந்திக் கொண்டே பேசலாம்!'' - என்று உபசரிக்கத் தொடங்கினான் குன்றுடையான்!

மாளிகையின் எழில் ததும்பும் அந்தக் கூடத்திலேயிருந்த இருக்கைகளில் அனைவரும் அமர்ந்தனர்.

பொன்னர், சங்கர், வீரமலை நின்று கொண்டிருப்பதைப் பார்த்து விட்ட சின்னமலைக் கொழுந்து, ''ஏன்? நீங்களும் உட்காருங்கள்!'' என்று அன்பு பொங்கச் சொல்லவே; மீண் டும் ஒரு முறை அனைவரது விழிகளும் பொன்னர் - சங்கரை வட்டமிட்டன!

தாமரைநாச்சியின் விழிகள் அவர்களை நோக்கிய காட்சி; கடற்கரையில் காணாமற் போய் மண்ணில் புதைந்து விட்ட முத்துப் பதித்த கம்மல்களை எடுப்பதற்குக் கரங்கள் கொண்டு கடற்கரை மணலைத் தோண்டுவது போல் இருந்தது!

குன்றுடையானின் விழிகள் அவர்களை நோக்கிய காட்சி; தனது உருவம் இரண்டாகப் பிளந்து எதிரில் உள்ள நிலைக் கண்ணாடியில் தெரிவது எப்படி என்று வியப்புடன் கேட்பது போல் இருந்தது!

மாயவர் விழிகள் அவர்களை நோக்கின! அந்த விழிகள்

தெளிவான ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன!

''இந்தப் பிள்ளையாண்டான்கள் பெயருக்கு அர்ச்சனை பண்ண வேண்டுமென்றுதானே இவர்கள் பெயர்களைக் கேட்டு செல்லாண்டியம்மன் கோயில் திருவிழாவில் அலைந்தீர்கள்?'' - என்று குன்றுடையான்; வையம் பெருமானையும் - முத்தாயி, பவளாயியையும் பார்த்துக் கேட்டுவிட்டான். வெள்ளை உள் ளம் படைத்த நெல்லியங்கோடன் அல்லவா? அதனால் மன தில் எந்த மாசு மருவுமின்றி எல்லோருக்கும் முன்னால் அந்த நிகழ்ச்சியை நினைவுபடுத்திவிட்டான்!

பதிலேதும் விளக்கமாகப் பேசினால் ஆபத்தாக முடியு மென்ற வெட்கத்துடன் முத்தாயி - பவளாயி இருவரும் தலையை மட்டும், ''ஆமாம்'' என்பது போல அசைத்தனர். வையம் பெருமானும் தனது தலையை ஆட்டி வைத்தான்.

'தங்கள் பெயருக்கு அர்ச்சனை செய்ய அலைந்தார்களா? ஓ! அப்படியானால் ஆரிச்சம்பட்டியின் இந்த அழகோவியங் களுக்கு அப்போதே நம் மீது காதல் அரும்பி விட்டிருக்கிறது!' என்ற இன்ப நினைவில் பொன்னரும் சங்கரும் திளைத்துப் போயினர். கயிறு போட்டு இழுத்தும் கேட்காமல் கட்டு மீறி ஓடும் குதிரைகளைப் போல அவர்களது கண் பார்வைகள் முத்தாயி பவளாயி இருவரையும் நோக்கிப் பாய்ந்தன!

பலரும் குழுமியிருக்கும் இடத்தில் காதல் இதயங்களின் உதடுகளாகவும் நாக்குகளாகவும் இருந்து யாருமறியாமல் பேசக்கூடிய வித்தை கற்றவை விழிகள்தானே! அந்த விழிகள் அந்த வேலையை இப்போதும் செய்தன!

''நான் கூட இந்தப் பிள்ளையாண்டான்கள் இந்த மாளி கைக்கு வந்து போவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்! மாரிக்கவுண்டன் பாளையத்து ஆசான் ராக்கியண்ணன் இந்தக் கோட்டைக்கு எப்போது வேண்டுமானாலும் வருவார் போவார்! அவருடன் இவர்களும் வருவதுண்டாம்!''

குன்றுடையான் அந்த வாலிபர்களைப் பற்றிய விபரம் சொல்லத் தொடங்கியதும் - மாயவர் குறுக்கிட்டு; ''ஆனால் இவர்கள் பெயரை மட்டும் சொல்ல மாட்டார்கள்!'' என்று கூறியவர் - அவர்களைப் பார்த்து, ''ஏன் தம்பிகளே! அப் படித்தானே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

''ஆம்'' என்று பொன்னர் - சங்கர், தலையை மட்டும் அசைத்துப் பதில் கூறினர்.

''பெயர் சொல்லாததற்கு என்னப்பா காரணம்? ஒருவேளை உங்கள் பெற்றோர் பெயரே வைக்கவில்லையா?''

அவர்களை விடாமல் மாயவர் இந்தக் கேள்வியைக் கேட்ட வுடன்;

''எங்கள் பெயரை யாரிடமும் சொல்லக் கூடாது என்று எங்கள் ஆசான் ராக்கியண்ணன் கட்டளை!'' என்றான் பொன் னன்!

அப்போது, சின்னமலைக் கொழுந்து சிறிதாக ஒரு கனைப் புக் கனைத்துக் கொண்டு ஏதோ சொல்வதற்கு முனைந்தார்.

அந்தச் சமயம், அருக்காணி தங்கம் நாலைந்து பெண்களு டன் சிற்றுண்டிகளை எடுத்து வந்து அவளே முன்னின்று அங் குள்ளவர்களுக்குப் பரிமாறச் செய்தாள். அந்த நேரம் சின்ன மலைக் கொழுந்து, தனது துணைவி சிலம்பாயியின் காதில் ஏதோ ரகசியமாகக் கூறிவிட்டு, அவளுடைய பதிலுக்காக அவ ளது முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். சிறிது யோச னைக்குப் பிறகு சிலம்பாயி, கணவனிடம் ரகசியமாகவே ஏதோ சந்தேகம் கேட்டாள். அதற்குரிய பதிலையும் சின்ன மலைக் கொழுந்து அவள் காதில் சொன்னார். சிலம்பாயி, ஆழமாக சிந்திப்பது புரிந்தது. பிறகு அவள் அவரிடம் தலையை ஆட்டிக் கொண்டு தனது ஒப்புதலை அவர் காதிலேயே கூறி னாள்.

சிற்றுண்டி பரிமாறிய பெண்கள் அந்த இடத்தை விட்டு அகன்ற பிறகு, சின்னமலைக் கொழுந்து மீண்டும் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார்.

''இந்த வாலிபர்கள் பெயரைச் சொல்லாவிட்டாலும் - உலகில் பெயரை நிலைநாட்டப் போகிறவர்கள் என்று இப் போதே எனக்குத் தெரிகிறது! விளையும் பயிர் முளையிலே என்பதற்கு இவர்களே உதாரணம்! கரகம் விடும் விழாவில் செல்லாண்டியம்மன் கோயிலில் சூறைக்காற்றில் படகோடு காவேரியில் போயிருக்க வேண்டிய என் பெண்களை இவர் களே காப்பாற்றினர்! அது மட்டுமல்ல; செல்லாத்தாக் கவுண் டர் மகன் மாந்தியப்பன், தலையூர் தளபதி திருமலையின்

துணையோடு என் பெண்களை வழிமறித்து ராச்சாண்டார் மலையில் கொண்டு போய் வைத்து விட்டான். இந்த சிங்கக் குட்டிகள் இருவரும் இல்லாவிட்டால் என் பெண்கள் வாழ்வும் பட்டுப்போயிருக்கும். ஆரிச்சம்பட்டிக் குடும்பமும் அழிந்து தொலைந்திருக்கும். ராச்சாண்டார் மலையில் திருமலையை வென்று என் பெண்களை மீட்டுத் தந்தால் - என் பெண்களை இவர்களுக்கு மணமுடிப்பதாக நான் அறிவித்திருக்கிறேன். இப்போது எனது வாக்குறுதியை நான் நிறைவேற்ற வேண்டியவனாக இருக்கிறேன். நல்லவரும் வல்லவருமான மாயவர் முன்னிலையில் - எனது அன்பு மைத்துனர், அருமைத் தங்கை ஆகியோர் முன்னிலையில்; என் முடிவுக்கு அனைவரும் ஒப்புதல் அளிக்க வேண்டுகிறேன்!''

சின்னமலைக்கொழுந்து பேசி முடிந்ததும் மாயவர் கேட்டார்.

''நீங்களே ஒரு பரிசு அறிவித்து நீங்களே முடிவும் எடுத்து விட்டீர்களா? உங்கள் பெண்களின் கருத்தை அறிந்தீர்களா? அல்லது அந்தப் பிள்ளையாண்டான்களின் கருத்துக்களை யாவது கேட்டீர்களா?''

மாயவரின் இந்தக் கேள்விக்கு சின்னமலைக் கொழுந்து விடையளிப்பதற்கு முன்பு, பொன்னர் முத்தாயி - சங்கர் பவளாயி - இந்த இரு இணைகளின் கன்னங்கள் சிவந்து, கண்களிலே புத்தொளி பிறந்து, மௌன மொழியிலேயே தங்கள் சம்மதத்தை வெளிப்படுத்திவிட்டனர்!

''ராக்கியண்ணர் எங்கள் ஆசான்! அவர் ஒப்புதல் கேட்காமல் எதுவும் நடக்காது'' என்று வீரமலை ஒரு கல்லைத் தூக்கித் போட்டான்!

அந்தக் கல்லின் மீது இன்னொரு பெரிய கல்லைத் தூக்கித் தாமரைநாச்சியார் போட்டாள்.

''அண்ணா! திருமண நாளன்று நான் செய்த சத்தியத்தை மறந்து விட்டாயா? நானும் என் அத்தானும் மாட மாளிகையில் இருப்பதை நீ பார்க்கத்தான் போகிறாய்! நான் பெற்றெடுக்கிறேன் இரண்டு சிங்கக்குட்டி மகன்களை! நீயும் இரண்டு பெண்களைப் பெற்றுக்கொண்டு அந்த சிங்கக்குட்டிகளைத் தேடிக்கொண்டு வரத்தான் போகிறாய்! என்று சூளுரைத்திருக்கிறேன் அண்ணா! அதை நீ மறந்தாலும் நான் மறக்க மாட்டேன்!''

தாமரைநாச்சியாரின் பேச்சில் ஆவேசம் இருந்தது! அதே சமயம்; பழைய பகை அகன்று ஒரு பாச உணர்வு வேகமாகப் பொங்கிக் கொண்டிருந்தது!

தாமரையைப் பார்த்து மென்மையான குரலில் சின்னமலைக் கொழுந்து கேட்டார்;

''ஏனம்மா தாமரை! உன் சத்தியம் நிறைவேற வேண்டுமென்று எனக்கு கூட ஆசைதான்! நிறைவேறினால் நமது குடும்பங்களின் நீண்ட கால விரோதம் ஒழிந்திருக்கும். ஆனால்; நீ அன்று சொன்ன அந்த சிங்கக் குட்டிகள் பிறந்தது உண்மை! அவைகள் இறந்து போய் விட்டதும் உண்மைதானே அம்மா!'' என்று.

அதைக் கேட்டதும் தாமரை நாச்சியார் பரபரப்படைந்தாள்!

''யார் சொன்னது? என் பிள்ளைகள் உயிரோடு இருக்கிறார்கள். விரைவில் அவர்களை நான் காண்பேன். அண்ணா! நீ உன் முடிவை மாற்றி உன் பெண்களை என் பிள்ளைகளுக்குத்தான் மண முடிக்க வேண்டும். நீ மறுத்தாலும், என் சபதத்தை நான் எப்படியும் நிறைவேற்றுவேன்!''

தாமரை சீறினாள்.

அப்போது மாயவர் சற்று உரத்த குரலில் - ''இப்போது பிரச்சினை; தாமரையின் சபதம் நிறைவேறுவதா? அல்லது சின்னமலைக் கொழுந்தின் வாக்குறுதி நிறைவேறுவதா? என்றல்லவா ஆகி விட்டது!'' என்று ஒரு புதிய குழப்பத்தை உருவாக்கினார்.

# உண்மையின் ஊர்வலம்

19

''என் தங்கையின் சபதம் நிறைவேற வேண்டுமென்றால் அவள்பெற்ற குழந்தைகள் இப்போது உயிரோடு இருக்க வேண்டுமே!''

மாயவரைப் பார்த்து மட்டுமல்ல; தாமரையையும் ஓர விழிகளால் நோக்கியவாறு சின்னமலைக்கொழுந்து கேட்டார்.

அந்தக் கேள்விக்கு விளக்கமாகவே விடையளிக்கும் முனைப்போடு மாயவர்; கனைத்துக் கொண்டு நிமிர்ந்தார்.

''தாமரை பெற்ற குழந்தைகள் உயிரோடிருப்பதாகத்தான் நான் நம்புகிறேன். அப்படி அவர்கள் இருந்தால், நாமெல்லோரும் சேர்ந்து தாமரை நாச்சியின் சத்தியம் நிறைவேறுவதற்குத்தான் ஒத்துழைக்க வேண்டும்''.

மாயவரின் இந்தப் பீடிகையைக் கேட்டதும் சின்னமலைக் கொழுந்து சிறிது அதிர்ந்து போனார்.

''அது எப்படி? அந்தக் குழந்தைகள் உயிரோடிருப்பதாக, நம்புவதாக, ஓர் அனுமானம் செய்து கொண்டு - அதற்காக நான் அளித்த வாக்குறுதியை நட்டாற்றில் விட்டு விடுவது நியாயம் ஆகுமா? இந்த இளம் வீரர்கள் எனது வாக்கு நாணயத்தைப் பற்றி என்ன நினைப்பார்கள்?''

சின்னமலைக்கொழுந்து, தனது வாக்குச் சுத்தத்திற்கு ஊறு வந்து விடக் கூடாது என்பதிலே எவ்வளவு அக்கறை காட்டுகிறார் என்பதைப் புரிந்து கொண்ட மாயவர்;

''அந்த வாலிபர்கள் என்ன கருதுகிறார்கள்? என்பதை இப்படி சுற்றி வளைத்து அறிந்து கொள்ளப் பார்க்கிறீர்கள்! உங்க

ளுக்கும் எனக்கும் ஏன் சிரமம்? அந்த வாலிபர்களே சொல் லட்டுமே; வாக்குறுதியைக் காக்க வேண்டுமா? சபதத்தை நிறைவேற்ற வேண்டுமா? என்று!'' என்பதாகப் புதிர் ஒன் றைப் போட்டார்.

அப்போது பொன்னர், சங்கரின் முகத்தைப் பார்த்தான். சங்கர் தனது சார்பில் பொன்னர் கருத்துக் கூற உரிமை படைத்தவன் என்பதைத் தனது பார்வையால் தெளிவுபடுத்தி னான். அதனால் பொன்னரே; அந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு காணமுன்வந்தான்!

''நானோ என் தம்பியோ வரமாகப் பெற்றதல்ல அந்த வாக்குறுதி! ஆரிச்சப்பட்டியார் அவராகவே அப்படியொரு பிரகடனத்தைச் செய்தார்! நாங்கள் அதுபோல ஒரு வாக்குறுதி கேட்டு அதற்காகத் தரப்பட்டதுமல்ல! தசரதன் கைகேயிக்கு வாக்குறுதிகளை வழங்கிவிட்டு அதன் பிறகு சங்கடப்பட்ட தைப் போல யாரும் சங்கடப்படத் தேவையில்லை. நாங்கள் அவர்களுக்கு செய்த உதவி எதுவும் கைம்மாறு கருதி செய்யப் பட்டதல்ல! அதனால் என்சார்பிலும் என் தம்பியின் சார்பி லும் திறந்த மனத்துடன் தெரிவிக்கிறேன்; வாக்குறுதியை நாங்கள் யாரும் வலியுறுத்தப் போவதில்லை!''

இந்தச் சொற்கள் பொன்னரிடமிருந்து வெளிப்பட்ட போது, முத்தாயியும் பவளாயியும் பெரும் ஏமாற்றத்துக்காளாயினர்.

வாக்குறுதி கிடக்கட்டும்; வளர்த்துக் கொண்ட காதலின் கதி என்ன ஆவது? அடேடே! எவ்வளவு சாதாரணமாகத் தங்களிருவரையும் அந்த இளம் வீரர்கள் அலட்சியப்படுத்தி விட்டார்கள்! அத்தை தாமரைநாச்சியாரின் புதல்வர்கள், ''இதோ நாங்கள் உயிரோடிருக்கிறோம்!'' என்று எதிரே வந்து நின்றாலும் என்ன செய்ய முடியும்? அதற்காக, மனதை மாற் றிக் கொள்ள முடியுமா? இவர்கள் இருவரையும் சந்திப்பதற்கு முன்பு; ஒருவேளை அத்தையின் பிள்ளைகள் வந்திருப்பார் களேயானால் அது வேறு விவகாரம்! உண்ட உணவின் சத்து, ரத்தத்தில் கலப்பதை விட வேகமாகவும் பரவலாகவும் உட லின் ஒவ்வொரு அணுவிலும், உள்ளத்தின் முழுப் பரப்பிலும் இந்த அற்புத வாலிபர்களின் மீது கொண்ட காதல் மகாத் மியம் இரண்டறக் கலந்து விட்டதே; இந்த நிலையில் தந்தை தந்த வாக்குறுதியை வலியுறுத்தப் போவதில்லையென்று இந்த இனியவர்கள் பின்வாங்குகிறார்களே; இது எந்த வகையில் நியாயமாகும்?

இவ்வாறு முத்தாயி, பவளாயி இருவருமே எண்ணி விம்மினர்!

அந்தப் பெண்களின் மனப்புயலை; மாயவர் தொலைவிலிருந்தே அவர்களின் முக மாற்றத்தின் மூலம் புரிந்து கொண்டார். அதன் அறிகுறியாக மெல்லிய புன்னகை அவருக்கு இழையோடிற்று. அந்தப் புன்னகையில் முதிர்ச்சி கலந்த குறும்புத்தனமும் நிழலாடிற்று. சின்னமலைக்கொழுந்தின் தோளில் கையை வைத்தார். தலையூர் மன்னனின் அமைச்சர் என்ற முறையில் அவரிடம் கொண்டிருந்த மரியாதையின் காரணமாக சின்னமலைக்கொழுந்து நெகிழ்ந்து போனார். மாயவர், எல்லோரையும் பார்த்து ஒருமுறை கண்களை சுழலவிட்டுப் பேச்சைத் தொடர்ந்தார்.

''தாமரைநாச்சியாரின் உணர்வுகளை நாம் சாதாரணமாக மதித்து ஒதுக்கி விட முடியாது. நான் தாமரைநாச்சியாரிடமும் அவளது அன்புக் கணவன் குன்றுடையானிடமும் கேட்டறிந்த உண்மைகளை ஆரிச்சம்பட்டியாரும் அறிந்து கொள்வது நல்லது! அன்றைக்கு ஏதோ, செல்லாத்தாக்கவுண்டர் வீட்டு சம்பந்தம் திடீரெனச் சிதறிப் போனதற்கும், தலையூர்க்காளியின் பகையைச் சம்பாதித்துக் கொள்வதற்கும் — தாமரையாள் எடுத்த முடிவு, காரணமாக இருந்ததையொட்டி சின்னமலைக் கொழுந்து சினம் கொண்டிருக்கலாம்! ஆனால், தாமரையும் குன்றுடையானும் அன்று திருமண மண்டபத்தை விட்டு வெளியேறியது முதல் பட்டுள்ள வேதனைகள் கொஞ்சமல்ல! இந்தக் கொங்கு வேளாளர் குலச் செல்வி; தான் கொண்ட கொள்கையைக் காப்பாற்றி - எதிர் வந்த எத்தனையோ துன்ப துயரங்களைக் கடந்து - யார் தன்னையும் தன் கணவனையும் வீட்டை விட்டு விரட்டினார்களோ; அந்த அண்ணன் குடும்பத்தை அணிதேர்ப் புரவிகளுடன் வரவேற்று உபசரிக்கும் அளவுக்கு இன்றைக்கு உயர்ந்து நிற்கிறாள் என்றால் இது பெண்மையின் திண்மைக்குக் கிடைத்த வெற்றியல்லவா?''

மாயவரின் பேச்சு அவரது உடலையே புல்லரிக்க வைத்தது! சற்றுக் குரல் கூட தழுதழுத்தது! அப்போது தாமரைநாச்சியார் தனது கண்களில் அரும்பிய நீர்த்துளிகளை யாரும் பார்க்காமல் மறைத்துக்கொள்ள ஆகாயத்தைப் பார்த்து நிமிர்ந்து கொண்டாள்! மாயவரோ பேச்சை நிறுத்தவில்லை!

''அரண்மனையில் பிறந்த மாதரசி! நெல்லியங்கோடனிடம் வைத்த அன்பைமாற்றி; வேறொருவனுக்கு மனைவியாக விரும்பாமல் - தன்னையொரு தியாகவல்லியாகவே ஆக்கிக்

கொண்டாள்! கண்ணுக்கெட்டாத தொலைவு பரந்து கிடக்கும் காணிகளில் இருந்து தனது பணியாட்கள் பாடுபட்டுப் பயி ரிட்ட தானியங்களைக் கொண்டுவந்து குவித்திடும் வசதிமிக்க வாழ்வைத் துச்சமென உதறித் தள்ளி விட்டு, தானே தனது கணவனுடன் வயலில், காடுமேடுகளில், உடல் கருக உழைத்து வேளாண் குடிமகளின் பெருமைக்கோர் எடுத்துக்காட்டாக விளங்கும் இந்தப் பெருமாட்டி, பெற்ற பிள்ளைகளை இழந்து த்வித்திடும் வேதனையை எப்படி விவரிக்க முடியும்? தவ மிருந்து பெற்ற பிள்ளை என்பார்கள்! அது ஒரு சம்பிரதாயத் துக்காகச் சொல்லப்படுவதல்ல என்பதை மெய்ப்பிக்கும் வண் ணம் உண்மையிலேயே தவமிருந்து தங்களை வருத்திக் கொள்ப வர்களை விட அதிக அளவுக்குத் தன்னை வருத்திக் கொண்ட சிறப்பு இந்த நாச்சியாருக்கு உண்டு! ஏமாற்றும் குள்ள நரிகள் நிறைந்த இந்த உலகத்தில் எதையும் எளிதில் நம்பும் குன்றுடை யானைத் தனது ஆற்றலாலும், அறிவுத் திறனாலும் பாதுகாத் துப் பலரும் போற்றும் வண்ணம் குன்றுகள் நிறைந்த பகுதி களுக்குத் தலைவனாக்கிய தாமரைநாச்சியார், தங்கள் குடும்பத் துக்கு வாரிசு விளக்குகள் தோன்றவில்லையே என்று பெருங் கவலைப்பட்டாள். அதற்காகக் கணவனும் மனைவியும் ஆடாத தீர்த்தமில்லை! கும்பிடாத கோயில் இல்லை! பிள்ளையில்லா மல் இவர்கள் படும் கவலையை அறிந்த செல்லாத்தாக் கவுண் டர் என்ன செய்தார் தெரியுமா?''

மாயவர், அவரே கேள்வி கேட்டுக் கொண்டு அவரே அதற் கான பதிலைச் சொல்வதற்கு முன் அனைவரும் அவருடைய முகத்தையே ஆவலுடன் பார்த்தனர். தாமரைநாச்சியார் தலை யைக் குனிந்து கொண்டு அமர்ந்திருந்தாள். குன்றுடையானும் தனது வாழ்க்கை ஏட்டின் கடந்த காலப் பக்கங்களை மாயவர் புரட்டிப் படித்துக் காட்டுவதை ஆர்வமுடன் கவனித்துக் கொண்டிருந்தான். மாயவர் மீண்டும் தொடர்ந்தார்!

''சில சோதிடர்களைத் தயார் செய்து செல்லாத்தாக் கவுண் டர் இவர்களிடம் அனுப்பினார். எங்கிருந்து வந்த சோதிடர் கள் என்று தெரியாத இவர்களிருவரும் அவர்களை வரவேற்று உபசரித்து அவர்கள் கேட்ட தட்சணையும் ஏனைய பொருள் களும் கொடுத்து; குழந்தை பாக்கியம் உண்டா என்பது பற்றி சோதிடம் கேட்டனர். மதுக்கரை செல்லியம்மனுக்குத் தேர் செய்து வைத்து, அதில் அம்மனை அலங்கரித்துத் தேரோட்டம் நடத்தினால் உடனே புத்திரபாக்கியம் உண்டாகும் என்று சோதிடர்கள் புளுகிவிட்டுப் போனார்கள்.

"அதை நம்பிய குன்றுடையானும் தாமரைநாச்சியாரும் உடனே செல்லியம்மனுக்குத் தேர் செய்யும் ஏற்பாடுகளை கவனித்தனர். தனது சூழ்ச்சித் திட்டத்தில் ஏமாந்து விட்ட தாமரையையும் குன்றுடையானையும் பழி வாங்க இதுதான் சமயமென்று தேர் செய்யும் தச்சர்களில் ஒருவரைப் பிடித்து செல்லாத்தாக் கவுண்டர் மற்றொரு சூழ்ச்சிக்கு வித்திட்டார்! அதன்படி தேர் ஓடும்போது திடீரென சிக்கிக் கொள்வது போல யாருக்கும் தெரியாமல் ஒரு பயங்கர சதி உருவாக்கப் பட்டது. தேர்த் திருவிழா மிக விமரிசையாக நடைபெற்றது. ஆனால் விழா நாளன்று புறப்பட்ட தேர், வீதியில் சிறிது தூரம் ஓடிய பிறகு நின்றுவிட்டது! அப்போதும் செல்லாத்தாக் கவுண்டரால் அனுப்பப்பட்ட அந்த சோதிடர்கள் வந்தார்கள். அவர்கள் ஏதோ அம்மன் குற்றம் நடந்து விட்டதென்றும் அதனால்தான் தேர் ஓடவில்லை - சிக்கிக் கொண்டதென்றும் பயமுறுத்தினர்! அது மட்டுமல்ல; தேர் முழுமையாக ஓடி நிற்காவிட்டால் அந்த ஊர் மக்களுக்கே ஆபத்து என்றும் மிரட்டினர்! அதற்குப் பரிகாரம் என்னவென்றால் தேர்ச் சக்கரத்தில் யாராவது ஒரு சுமங்கலி தனது தலையைக் கொடுத்து பலியாக வேண்டும். இல்லையேல் ஊரே அழிந்து விடும் என்று அபாண்டப் பொய் ஒன்றை அவிழ்த்துக் கொட்டினர். தங்கள் குடும்பம் அழிந்தாலும் பரவாயில்லை; தான் அழிந்தாலும் பரவாயில்லை - தங்களை நம்பி வாழும் ஊர் மக்களுக்கு எந்த ஆபத்தும் வரக்கூடாது என்று கூறி, தாமரைநாச்சியார் - தானே தேர்க்காலில் தன்னைப் பலி கொடுத்துக் கொள்ளத் தயாரானாள். நீயே போகும்போது நான் மட்டும் என்ன; இருவரும் 'சேர்ந்தே போவோம் என்று தாமரையுடன் தேர்க்காலில் படுத்துச் சாகக் குன்றுடையானும் தயாராகவே - அதைத் தடுக்க ஊரே முனைந்து நின்றது! இவர்களோ கேட்கவில்லை! அன்பு வடிவம் - அருள் பொழியும் உருவம் - எனப்படுகிற அம்பாள்; தனது மக்களை அழிப்பாளா; என்ற எண்ணமே இவர்களுக்கு வரவில்லை! சோதிடத்தை நம்பினார்கள். செல்லாத்தாக் கவுண்டர் சூழ்ச்சி வலையில் சிக்கினார்கள். ஊராரை மீறிக்கொண்டு தேர்ச் சக்கரங்களில் போய்ப் படுத்துக்கொண்டு; தங்கள் மீது தேரை இழுக்குமாறு ஆணையிட்டார்கள்! அப்போது அங்கே ராக்கியண்ணன் வந்துவிட்டார். அவர் செல்லாத்தாக் கவுண்டரின் சூழ்ச்சியைப் புரிந்து கொண்டார். குன்றுடையானையும், தாமரைநாச்சியையும் பார்த்து முதலில் நீங்கள் தேர்க்காலை விட்டு எழுந்திருங்கள்; நான் இந்தத் தேரை எந்தப் பலியும் கொடுக்காமலே ஓட வைக்கிறேன் என்றார்! சொன்னபடி செய்தார்! தேரில் நடத்தப்

பட்டிருந்த சதி வேலையைக் கண்டுபிடித்துச் சரி செய்தார் - பிறகு தேர் ஓடிற்று!

''இப்படிக் கோயில், குளம், தேர், திருவிழா, அர்ச்சனை, பிரார்த்தனை என்று க்ஷேத்திரங்களுக்கு அலைந்து திரிந்து கொண்டிருப்பதை நிறுத்திவிட்டு, குடையூர் மாளிகையிலேயே தங்கியிருங்கள்; அல்லது சங்கரன்மலையில் உள்ள அரண் மனையில் தங்குங்கள் - ஆண் பெண் உறவில் உருவாகக் கூடிய இனவளர்ச்சிக்கு ஆண்டவன் மீது பழியைப் போடாதீர் கள்'' என்று ராக்கியண்ணன் சிரித்துக் கொண்டே சொன்ன போது குன்றுடையானுக்கும் தாமரைநாச்சியாருக்கும் ஏதோ ஒரு அவநம்பிக்கை தான் இருந்தது. பிறகு அவர்களே யோசித் துப் பார்த்தார்கள். சங்கரன்மலையில் உள்ள அரண்மனையில் வந்து தங்கிக் கொண்டார்கள். திருமணமான புதிதில் பட்ட கஷ்டங்கள் நீங்கி; தாமரைநாச்சியாரின் ''தற்காத்துத் தற் கொண்டான் பேணி'' என்ற குறள்மொழிக்கொத்த செயற் பாடுகளின் விளைவாக வளமான வாழ்வு பெருகியதை அவர் கள் வீணாக்க விரும்பவில்லை. சங்கரன்மலைப்பகுதி ஒரு காலத்தில் இயற்கையின் தொட்டிலாகவே இருந்த இடம்! இளம் இதயங்களில் உணர்ச்சி அலைகளை எழும்பிடச் செய் யும் வகையில் சலசலத்து ஓடும் அருவிகளின் ஓரத்தில் ஆடும் மயிலினங்கள் - பாடும் குயிலினங்கள் - துள்ளி ஓடும் மானி னங்கள் - இவை சேர்ந்து இன்பம் அனுபவிக்கும் காட்சிகள் ஏராளம்! ஏராளம்! இன்று அவ்வளவு இல்லாவிடினும் இரு பது ஆண்டுகளுக்கு முன்பு குன்றுடையானும் தாமரைநாச்சி யாரும் அக்காட்சிகளில் மயங்கினார்கள்! அவர்களை இப் போது பிள்ளைகுட்டி பெற்ற பெருமக்களாக எதிரே உட்கார வைத்துக்கொண்டு; சங்கரன்மலையின் இயற்கையின்பச்சார லால்தான் இல்லற சுகத்தின் அருமையை அவர்கள் உணரத் தலைப்பட்டார்கள் என்பதோ - அதை மேலும் விவரிப்பதோ அழகல்ல! உணர்ந்ததின் தொடர்ச்சியாக தாமரைநாச்சியார் கர்ப்பமுற்றது கண்டு குன்றுடையானுக்குக் கொள்ளை மகிழ்ச்சி! குடையூரிலும் விழா எடுத்துக் கொண்டாடினான்!

''சங்கரன்மலையும் விழாக்கோலம் பூண்டது! தாமரைநாச்சி யார் கருவுற்றிருக்கிற செய்தி ஆரிச்சம்பட்டிக்கும் வழக்கப்படி தெரிவிக்கப்பட்டது. அப்படி சொல்லியனுப்பியதில் தாம ரைக்கு விருப்பமில்லையென்றாலும் எதையும் மனதில் வைத் துக்கொண்டு அதற்காக அலட்டிக்கொள்ளாத குன்றுடையான் அந்தத் தகவலை உரிய முறையில் சம்பந்தி வீட்டுக்குத் தெரி வித்து விட்டான். ஆனால் கொங்கு வேளாளர் குல முறைப்

படி கர்ப்பமுற்ற ஏழாவது மாதம் பண்டம் பலகாரங்களுடனும் பல்வகைக் கட்டுச் சாதங்களுடனும் சென்று பெரிய விருந்தும் நடத்தி பெண்ணைத் தாயார் வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். ஆரிச்சம்பட்டிக்காரராகிய நீங்கள் வருவீர்கள் என்று குன்றுடையான் எதிர்பார்த்து ஏமாற்றமடைந்ததுதான் மிச்சம்!''

இவ்வாறு கூறிக்கொண்டே மாயவர் சின்னமலைக்கொழுந்தை உற்று நோக்கியபோது, அவர் தனது கடந்த காலப் போக்கை எண்ணித் தலையைக் கவிழ்ந்து கொண்டார்.

''காலங்கடந்தாவது செய்து விட்ட தவறுக்காக வருந்தினால் அதைப் பாராட்டத்தான் வேண்டும்'' என்று உவகை பொங்க மாயவர் கூறியதோடு, தனது விளக்கத்தையும் தொடர்ந்தார்.

''தாமரை கருவுற்று ஏழு மாதம் ஆகிவிட்டது என்ற செய்தி, வளநாட்டில் செல்லாத்தாக்கவுண்டருக்குக் கிடைக்காமல் இருக்குமா? குன்றுடையானுக்குக் குழந்தை பிறந்தால் எதிர்காலத்தில் வளநாட்டு உரிமைக்காகக் குரல் கொடுக்கக் கூடும் என்ற அச்சம் செல்லாத்தாக் கவுண்டருக்கு ஏற்பட்டது! குன்றுடையானோ, தனக்குச் சேரவேண்டிய நிலப்பரப்பு சேரவில்லையென்றாலும், அதைப்பற்றிக் கவலைப்படாமல், இருப்பதை வைத்துக் காவல் ஆட்சி நடத்துகிறவன் - அவனுக்குப் பிறக்கிற குழந்தைகளும் அவனைப் போலவே ''மசை''யாக இருப்பார்கள் என்று யார் கணிக்க முடியும்? அதனால் குன்றுடையானுக்கு குல விருத்தியே கூடாது - அது எதிர்காலத்தில் தனக்குப் பெரும்பகையாக விளங்கக்கூடும் என்று செல்லாத்தாக் கவுண்டர் முடிவு கட்டினார். தாமரை நாச்சியாருக்கு பிள்ளைப்பேறு மருத்துவம் பார்ப்பதற்காக இரண்டு மருத்துவச்சிகள் தயாரிக்கப்பட்டார்கள். செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் அந்த மருத்துவச்சிகளுக்குப் பல திட்டங்களை சொல்லிக் கொடுத்து அதற்கு வெகுமானமாக ஒரு பொற்கிழியும் அளித்து அனுப்பினார்கள். தாமரைக்குப் பிரசவ நேரம் வந்துவிட்டது! வலி பொறுக்கமுடியாமல் கத்திக்கொண்டிருந்த போது குன்றுடையான் என்ன செய்வதென்று புரியாமல் மனைவியின் துடிப்பைப் பார்த்து துவண்டு போனான். அந்த வேளையில்தான் மருத்துவச்சிகள் இருவர் வந்திருப்பதாகக் குன்றுடையானுக்குச் செய்தி வந்தது. மனைவி படும் துயரத்தைக் கண்டு ஆண்டவன்தான் மருத்துவச்சிகளை அனுப்பி வைத்திருப்பதாக அவன் நினைத்துக் கொண்டான். உண்மையில் அந்த மருத்துவச்சிகளை அனுப்பி வைத்த செல்லாத்தாக்

கவுண்டரின் திட்டம் என்ன என்பதுதான் முக்கியம்! அந்த மருத்துவச்சிகள் என்ன செய்ய வேண்டுமென்று அவர்களுக்கு சூழ்ச்சி வகுத்து வழங்கப்பட்டு விட்டது.

தாமரைநாச்சியார் புயல் வீசுவது போன்ற பிரசவ வலிக்கு ஆட்பட்டுக் கதறினாலும்கூட - பிள்ளை பிறந்தவுடன் ஒரு அமைதிக்கு ஆளாகி; மிகவும் களைப்புற்றுக் கிடப்பாள். அந்தச் சில விநாடிகளில் தாமரையின் குழந்தையை மறைத்து விட வேண்டும். குன்றுடையான் குழந்தையைப் பார்க்க ஓடி வருவான். அவனிடம் குழந்தையே பிறக்கவில்லையென்றும் - கருப்பையிலிருந்து உதிரம்தான் பெருகியதென்றும் - வயிற்றிலேயே குழந்தை சிதைந்து விட்டதால் ஏற்பட்ட விபரீதம் என்றும் அந்த மருத்துவச்சிகள் கூறிவிட வேண்டும்.

இந்தத் திட்டத்துடன் பிரசவ அறைக்குள் அந்த மருத்துவச்சிகள் இருவரும் நுழைந்தார்கள். தாமரைநாச்சியார் வலி பொறுக்க மாட்டாமல் கூச்சலிட்டுக் கத்திக் கொண்டிருந்தாள். அரண்மனையில் உள்ள பெண்கள் பதட்டத்துடன் பிரசவ அறைக்குள் வர முயன்ற போதிலும் மருத்துவச்சிகள் மிகவும் கண்டிப்பாக அவர்களையெல்லாம் தொலைவில் போய் இருக்கச் சொல்லி விட்டனர். குன்றுடையான் தவித்துப் போய் பிரசவ அறையைச் சுற்றி சுற்றி வந்தான். மருத்துவச்சிகள் அவனைப் பார்த்து ''நாங்கள் எங்கள் வேலையை ஒழுங்காகப் பார்த்து அம்மாவுக்கு சுகப் பிரசவம் நடக்க வேண்டுமென்று நீங்கள் நினைத்தால் தயவுசெய்து உங்கள் இடத்தில் போய் அமருங்கள். இல்லாவிட்டால் நாங்கள் போய் விடுவோம். இப்படிச் சொல்வதற்காக எங்களை மன்னித்துக் கொள்ளுங்கள். இடையூறு எதுவுமில்லாமல் எங்கள் கடமையை சரியாகச் செய்ய வேண்டுமென்பதற்காக இதனைக் கூறுகிறோம்.'' என்று பவ்யமாகக் கூறியதும், குன்றுடையான் - ''சரி! சரி! எப்படியாவது தாமரைக்கு சுகப் பிரசவம் ஆனால் சரி! உங்கள் மீதும் ஆண்டவன் மீதும் பாரத்தைப் போட்டு விட்டுப் போகிறேன்'' என்றுரைத்து விட்டுக் கலங்கியிருந்த கண்களைத் துடைத்தவாறே அந்த இடத்திலிருந்து அகன்றான்.

நீண்ட நேரம் தாமரைநாச்சியார் பிரசவ வேதனையால் துடித்த பிறகு உச்ச கட்ட வலியொன்றுடன் குழந்தை பிறந்து விட்டது! ஆண் குழந்தை! தாமரையாள் மயக்கமுற்றுத் துவண்டு கிடந்தாள். பெரிய மருத்துவச்சி சின்னமருத்துவச்சியிடம் குழந்தையைத் தூக்கிக் கொடுத்து; மறைத்து எடுத்துக் கொண்டு ஓடச் சொன்னாள். அவளும் அந்த சிசுவைத் தூக்கிக் கொண்டு

ஓடினாள். சின்ன மருத்துவச்சி ஓடிய சிறிது நேரத்துக்கெல் லாம் பெரிய மருத்துவச்சிக்கு ஆச்சரியம் ஒன்று காத்திருந்தது.

தாமரை நாச்சியார் மீண்டும் பிரசவ வேதனையால் துடிக்க ஆரம்பித்தாள். அடுத்து ஒரு ஆண் குழந்தை பிறந்தது! அதை யும் பெரிய மருத்துவச்சி தூக்கிக்கொண்டு சின்னவள் போன வழியிலேயே ஓடினாள்!

இருவரையும் எதிர்பார்த்துக் கொண்டு கரும்போர்வையால் தன்னை மூடிக் கொண்டிருந்த ஒரு உருவம்; அந்த இரண்டு குழந்தைகளையும் தனது கைகளில் வாங்கிக் கொண்டது.

தாமரைநாச்சியார் இரு குழந்தைகளைப் பெற்ற களைப்பில் சோர்வுற்று மயக்கம் தெளியாமல் படுத்திருந்தாள். பிரசவ அறையில் எந்த சப்தமும் கேட்கவில்லையே என்ற சந்தேகத் துடன் குன்றுடையான் மெல்ல நடந்து வந்து எட்டிப் பார்த் தான். அப்பொழுதுதான் கண் விழித்த தாமரைநாச்சியார், தன்னருகே குழந்தையில்லாதது கண்டு — ''என் குழந்தை? என் குழந்தை? எங்கே என் குழந்தை?'' என்று கதறியழத் தொடங்கினாள். குன்றுடையானுக்கு ஒன்றும் புரியவில்லை. அதற்குள் அங்கு சூழ்ந்துவிட்ட அரண்மனைப் பெண்களைப் பார்த்து, ''குழந்தை எங்கே?'' அந்த மருத்துவச்சிகள் எங்கே?''. என்று அவன், ஆவேசமாகக் கத்தினான். குழந்தைக்கு ஏதோ ஆகிவிட்டது என யூகித்துக் கொண்ட தாமரை, ''என் குழந் தையை என்ன செய்தீர்கள்?'' என்று தேம்பித் தேம்பி அழுதாள்.

''ஒரு குழந்தையல்ல அம்மா! பிறந்தது இரண்டு குழந்தை! இரண்டும் இரண்டு சிங்கக் குட்டிகள்!'' என்றவாறு கையில் இரு குழந்தைகளையும் ஏந்திக் கொண்டு அந்த கரும் போர்வை யணிந்த உருவம் பிரசவ அறையின் வாசலில் வந்து நின்றது. அந்த உருவத்துக்கருகே மருத்துவச்சிகள் இருவரும் விலங்கு களால் பிணைக்கப்பட்டு நின்றனர்.

''என்ன இதெல்லாம்?'' என்று குன்றுடையான் பதறினான்.

''குழந்தைகளைக் கொல்லத் திட்டம்! குழந்தையே பிறக்க வில்லையென்று சொல்லத் திட்டம்! அந்தத் திட்டத்தைத் தவிடு பொடியாக்கி விட்டேன்! சதிகாரிகளையும் கைது செய்திருக் கிறேன்!''

இப்படி கம்பீரமாக பதிலளித்தது அந்தக் கரிய உருவம்!

தாமரை, பிள்ளை பெற்ற களைப்பை எங்கேயோ தூக்கி எறிந்து விட்டு எழுந்தோடி வந்து குழந்தைகளைத் தனது கையில் வாங்கிக் கொண்டாள்.

கரிய உருவம், தன்னை மறைத்திருந்த கரும் போர்வையை விலக்கியது — போர்வைக்குள்ளிருந்தது ராக்கியண்ணன்!.

குன்றுடையான், மெய்மறந்து ராக்கியண்ணனைக் கட்டித் தழுவிக் கொண்டான்!''

மாயவர் இந்த நிகழ்ச்சியை வர்ணித்தபோது குன்றுடையான் தாமரைநாச்சியார் இருவர் கண்களும் நீரைப் பொழிந்தன. மற்றவர்கள் நீண்ட பெருமூச்சு விட்டனர். மாயவர் மேலும் தொடர்ந்தார்.

''காணாமற் போக இருந்த குழந்தைகளை ராக்கியண்ணன் காப்பாற்றிய கட்டம் வரையில் சொன்னேன். அந்தக் குழந்தைகள் மீண்டும் காணாமற் போனது எப்படி என்பதையும் சொல்லி விடுகிறேன்'' எனத் தொடங்கினார் அவர்!






மாயவர் விரித்துரைத்த கடந்த கால நிகழ்ச்சிகளும் காணா மற்போக இருந்த குழந்தைகளை ராக்கியண்ணன் மீட்டுக் கொடுத்த சம்பவமும்; குன்றுடையானும் தாமரைநாச்சியாரும் மாயவருக்குக் கூறி - அவர் அதனையே திரும்பக் கூறிய கார ணத்தால், அந்த நிகழ்ச்சிகளோடு ஒன்றிய தங்கள் உணர்வின் பிரதிபலிப்பை மட்டுமே வெளிப்படுத்திய குன்றுடையானும் தாமரைநாச்சியாரும், இப்போது மாயவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக் காத் திருந்தனர்.

செல்லாத்தாக் கவுண்டரின் சூழ்ச்சித் திட்டப்படி தங்கள் குழந்தைகளைக் கொல்வதற்காகத் தூக்கிச் சென்ற மருத்துவச்சி களை மடக்கிப் பிடித்து; அடையாளம் தெரியாமல் கரும் போர்வைக்குள் புகுந்து கொண்டு குழந்தைகளைக் காப்பாற்றிக் கொடுத்த ராக்கியண்ணன்; குழந்தைகளைக் காப்பாற்றியது யார் என்று யாரிடமும் தெரிவிக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டு விடை பெற்றார்.

அதுவரையில் நடந்தவைகளை விவரித்த மாயவர்; அங் குள்ளவர்களைப் பார்த்து, ''இனிமேல் நான் சொல்லப் போவது மாரிக்கவுண்டன்பாளையத்துப் பாசறையில் ராக்கி யண்ணனைச் சந்தித்த போது அவர் வாயிலாகத் தெரிந்து கொண்ட உண்மைகளாகும்'' என்று பீடிகை போட்டுக் கொண்டு ஆரம்பித்தார்.

''குழந்தைகளைத் தூக்கிச் சென்று கொல்வதற்காக ஏவி விடப்பட்ட மருத்துவச்சிகள் உடனடியாகச் சங்கரன் மலையில் பாதாளச் சிறையில் அடைக்கப்பட்டார்கள். ராக்கியண்ணன் தலையிட்டுத்தான், தாங்கள் சிக்கிக் கொண்டோம் என்று அந்த மருத்துவச்சிகளுக்குத் தெரியாது. செல்லாத்தாக் கவுண்டரின்

திட்டப்படி அந்தக் குழந்தைகளை வாங்கிக் கொண்டு செல்லத் தயாராகக் காத்திருந்த கருப்புப் போர்வைக்காரனான வள நாட்டு வீரனை ராக்கியண்ணன் கொன்றுவிட்டு, அந்தப் போர்வையால் அவர் தன்னை மறைத்துக் கொண்டு நின்றார். ஏற்பாடு செய்யப்பட்டபடி காத்திருக்கும் வளநாட்டு வீரன் தான் என எண்ணி மருத்துவச்சிகள் ஏமாந்து விட்டனர். மருத்துவச்சிகள் இருவரும் பாதாள சிறைக்கு அனுப்பிவைக்கப் பட்ட பிறகு, ராக்கியண்ணன், குன்றுடையானிடமும் தாமரை நாச்சியாரிடமும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு விடை பெறும்போது, ''எச்சரிக்கையாக இருங்கள்! எந்த நேரமும் இந்தக் குழந்தைகளுக்கு ஆபத்து வரக்கூடும்!'' என்று அறி வித்து விட்டே சென்றார்.

எய்தவனிருக்க அம்பைக் குறை கூறி என்ன பயன்? என்ற கேள்வி ஏக காலத்தில் குன்றுடையான், தாமரை இருவர் உள்ளத்திலும் எழுந்ததால் சில நாட்கள் கழித்து இருவருமே பாதாள அறைக்குச் சென்று அங்கே அடைபட்டிருக்கும் மருத் துவச்சிகளைச் சந்தித்தனர்.

நன்றாகச் சமைக்கப்பட்டு சுவையான உணவு அவர்களுக்கு அளிக்கப்பட்டாலும் கூட அந்த உணவு தங்கள் அகோரப் பசிக்குப் போதுமானதாக இல்லையென்று அவர்களிடம் மருத் துவச்சிகள் முறையிட்டனர். உடனே குன்றுடையான் சிறைக் காவலருக்கு ஆணையிட்டு, அந்த மருத்துவச்சிகள் போதும் போதும் என்கிற அளவுக்கு உணவு வழங்க ஏற்பாடு செய் தான். இவ்வளவு வெள்ளை உள்ளம் படைத்த ஒரு நல்லவ னின் குழந்தைகளைக் கொல்ல வந்தோமே என்ற குற்ற உணர் வால் அவர்கள் வெட்கித் தலை குனிந்தனர். 'இன்னா செய் தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்' எனும் குறளுக்கு இலக்கணமாகத் திகழும் குன்றுடையான் மீது அவர் களுக்கு ஒரு தனி மரியாதையே ஏற்பட்டது. இருவரும் குன்று டையான் தாமரைநாச்சியார் கால்களில் விழுந்து தங்களை மன்னித்து விடும்படி கெஞ்சிக் கதறினர். எல்லாமே செல்லாக் கவுண்டரின் சதியே என்பதையும் அந்த மருத்துவச்சிகள் விளக் கிக் கூறினர். குன்றுடையான் அவர்களுக்கு மன்னிப்பு வழங்கி, பாதாள சிறையிலிருந்து விடுதலை செய்தான். செல்லாத்தாக் கவுண்டரால் தங்களுக்கு ஆபத்து நேரும் என்று மருத்துவச் சிகள் பயந்து நடுங்கியதைக் கண்ட தாமரைநாச்சியார், அவர் களுக்குத் தேவையான அளவு பொன் கொடுத்து வேறு நாட் டுக்கு எங்காவது ஓடிப் போய்ப் பிழைத்துக் கொள்ளுமாறு அனுப்பி வைத்தாள்.

இந்தச் செய்திகளை எல்லாம் ராக்கியண்ணனுக்குத் தெரிவிக்க ஒரு இளைஞன் இருந்தான். அவன் பெயர் வீரமலை. ராக்கியண்ணன் பாசறையில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த அந்தச் சிறுவன், ராக்கியண்ணனின் உத்திரவுப்படி அடிக்கடி சங்கரன் மலைக்கும் குடையூருக்கும் சென்று அந்தக் குழந்தைகளைப் பற்றிய செய்திகளைத் திரட்டி வந்து ராக்கியண்ணனுக்குத் தந்து கொண்டிருந்தான். அந்தக் குழந்தைகள் விஷயத்தில் ராக்கியண்ணன் இவ்வளவு அக்கறையோடு இருப்பதற்கு என்ன காரணம் என்று அந்தச் சிறுவன் வீரமலை மனதைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தான்.

அவன் அப்படிக் குழப்பத்திலிருக்கிறான் என்பது ராக்கியண்ணனுக்கும் தெரியும். அதற்காக அவர் எந்தவொரு விளக்கத்தையும் வீரமலைக்குச் சொல்ல வேண்டுமென்று நினைக்கவில்லை. யாருக்கும் எந்தத் தீங்கும் விளைவிக்க வேண்டுமென்று மனதால் நினைப்பது கூடப் பெரும் பாபம் எனக் கருதும் குன்றுடையான் போன்ற அப்பாவிகளுக்கு வலுவில் சென்றாவது துணை நிற்க வேண்டுமென்பதுதான் ராக்கியண்ணனின் கொள்கையாக இருந்தது.

'குழந்தைகளுக்கு இன்று விலை உயர்ந்த பட்டுச் சொக்காய் தைத்துப் போட்டிருக்கிறார்கள்.'

'குழந்தைகளுக்கு இன்று தங்கத் தொட்டில்கள் இரண்டு செய்து தொங்க விடப்பட்டுள்ளன.'

குழந்தைகளுக்கு இன்று முத்து மாலைகள் அணிவிக்கப்பட்டன.

குழந்தைகளுக்கு இன்று வைரமிழைத்த தண்டைகள் பூட்டப் பட்டன.

இப்படி அவ்வப்போது வீரமலை, ராக்கியண்ணனுக்குத் தகவல்கள் கொடுத்துக் கொண்டேயிருந்தான்''.

மாயவர் இதைச்சொல்லும்பொழுது வீரமலையின் உள்ளம் நெகிழ்ந்தது. ஆனால் தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளக் கூடாது என்ற உறுதியிலிருந்து ஒரு சிறிதும் மாறாமல்; யாரோ ஒரு இளைஞனைப் பற்றி மாயவர் சொல்வதைக் கேட்பது போல கேட்டுக் கொண்டிருந்தான். வீரமலையின் திடத்தை; உள்ளுக்குள் பாராட்டியவாறு பொன்னரும் சங்கரும் அவனைப் பார்த்தனர். அவன் உறுதியை வியந்தனர்.

அடுத்து மாயவர் வாயிலிருந்து வெளிப்படும் வார்த்தைகள் என்னவென்று' அறிவதிலே அனைவரும் அவசரம் காட்டினர்! மாயவர் தொடர்ந்தார்.

''ராக்கியண்ணனுக்கு ஒருநாள் தலையூரிலிருந்து ஒரு ஓலை வந்தது. தலையூர் அரண்மனையிலிருந்து வந்த ஓலையென்பதால் அதை அந்த அரண்மனையின் முக்கியமான வீரனொருவன் கொண்டு வந்திருந்தான். தலையூர்க் காளிக்கும் ராக்கியண்ணன் வில்வித்தை, வாள்வித்தை முதலியவற்றைக் கற்றுத் தந்த ஆசான் அல்லவா? அதனால் தலையூர் அரண்மனையிலிருந்து அந்த ஓலை அலட்சியப் போக்காக அனுப்பப்படாமல் மதிப்பு மிக்க நிலையில் அனுப்பப்பட்டிருந்தது. தலையூர் மன்னர் குடும்பத்தின் குலதெய்வமான காளி கோயில் திருப்பணி மிகப் பெரும் பொருட் செலவில் முடிவுற்று அந்தக் கோயில் கும்பாபிஷேகத்திற்கான அழைப்புதான் அந்த ஓலை! ராக்கியண்ணன், அந்த அழைப்புக்கு நன்றி தெரிவித்துப் பதில் மடல் எழுதி, தலையூர் வீரனிடமே கொடுத்தனுப்பினார். ஓலையில் குறித்திருந்தபடி தலையூர்க்காளியம்மன் கோயில் கும்பாபிஷேகத்துக்கு ஏக ஆடம்பரமாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. காளி கோயில் பூசாரியும், வணிகனுமான **''செம்பகுலன்''** முன்னின்று கும்பாபிஷேகத் திருவிழாக் காரியங்களை கவனித்தான். அந்தக் கோயிலைப் பொறுத்தவரையில் பூசாரி, தர்மகர்த்தா, மேலாளர் எல்லாமே செம்பகுலன் தான்! தங்கள் குல தெய்வமான காளி கோயில் பற்றிய பொறுப்புகள் அனைத்தையுமே தலையூர் மன்னர்கள் செம்பகுலன் குடும்பத்தாரிடமே ஒப்படைத்திருந்தனர். அந்தப் பரம்பரையில் வந்த செம்பகுலன் பொன் வணிகத்திலும் ஈடுபட்டு - அதேசமயம் காளிகோயில் நிர்வாகத்திலும் முக்கியஸ்தனாகத் திகழ்ந்தான். கோயில் திருப்பணி - கும்பாபிஷேகப் பொறுப்பு அனைத்துமே செம்பகுலனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்ததால் - பாதிப் பணத்துக்கு மேல் பொய்க் கணக்கு எழுதியே, தன் வாயில் போட்டுக் கொண்டவன் அவன்!

தெய்வத்துக்கு விரோதமாக அதன் கோயில் திருப்பணியிலேயே திருடும் அந்தச் செம்பகுலன், தனது கொள்ளையை மறைக்க - கும்பாபிஷேகத் திருவிழாவைக் காண்போர் மலைத்துப் போகும் வண்ணம் நடத்தினான். அழைப்பையேற்று ராக்கியண்ணனும் கும்பாபிஷேகத்துக்காகத் தலையூர் சென்றிருந்தார். தனது ஆசான் என்ற முறையில் தலையூர்க்காளி அவரை மெத்த மரியாதையுடன் வரவேற்று உபசரித்தான். அவருக்கு முன்பே தலையூர்க்காளியின் புரவலரான செல்லாத்

தாக் கவுண்டரும் அவரது மகன் மாந்தியப்பனும் தலையூருக்கு வந்து விட்டனர். செல்லாத்தாக்கவுண்டருக்கும் மாந்தியப் பனுக்கும் தனித்தனியாக விருந்தினர் விடுதிகள் ஒதுக்கப்பட்டி ருந்தன. தந்தையையும் மகனையும் ஒரே விடுதியில் தங்கிடச் செய்யாததற்கு ஒரு காரணம் இருந்தது. தலையூர்க்காளியும் மாந்தியப்பனும் ஏறத்தாழ சம வயதுடைய வாலிபர்கள் என்ப தால் அவர்களிருவரும் தனித்திருந்து அளவளாவிடவும், மது பானம் அருந்தவும் அந்த ஏற்பாடு! கும்பாபிஷேகத்துக்கு முதல் நாள் இரவு; அந்தக் கூத்தை ராக்கியண்ணனே தனது கண் களால் பார்த்திருக்கிறார். அவர்களது விருந்தினர் விடுதிக்கு அடுத்தாற்போலத்தான் ராக்கியண்ணன் தங்கியிருந்த விடுதி - அதனால் அவருக்கு அந்த சந்தர்ப்பம் கிட்டியிருக்கிறது. தலை யூர்க்காளி ஒரு கிண்ணம் மதுவை அருந்தி முடிப்பதற்குள் மாந்தியப்பன் ஒன்பது கிண்ணம் மதுவை அருந்தி முடித்து விட்டானாம் - தலையூர்க்காளி அளவோடு குடித்து விட்டு; மாந்தியப்பனைத் தடுத்தும் பயனில்லாமற் போய் விட்டதையும் ராக்கியண்ணன் பார்த்திருக்கிறார். மாந்தியப்பன் மயங்கித் தனது படுக்கையில் சாய்ந்ததும் - தலையூர்க்காளி அந்த அறை யிலிருந்து வெளியேறி விட்டிருக்கிறான். அதற்குப் பிறகு நடந் ததுதான் விரசமான வேடிக்கை. அந்த அறையில் ஒரு அழ கான பெண்ணின் சிலை இருந்திருக்கிறது. மயக்கமுற்றிருந்த மாந்தியப்பன் கண்களுக்கு அந்தச் சிலை ஒரு உயிருள்ள மங் கையாகவே தெரிந்திருக்கிறது போலும்! சிலை, நடனமாடுவது போலவும் - அவனைக் கண்டு நெளிவது போலவும் - அவன் தோளில் துவண்டு விழுவது போலவும் - அவனுக்கு ஒரு கற் பனை! அந்தக் கற்பனையின் வேகத்தில் சிலையைத் தழுவிக் கொண்டு குடிவெறியில் கொஞ்சத் தொடங்கி, இறுதியில் சிலையும் அவனுமாகத் தரையில் விழுந்திருக்கிறார்கள். அதைக் கண்ட ராக்கியண்ணனுக்கு செல்லாத்தாக் கவுண்டர் குடும்பத் தின் மீதிருந்த வெறுப்பு மேலும் ஒரு மடங்கு அதிகமாயிருக் கிறது...''

மாந்தியப்பனின் மிருக வெறித்தனத்தை மாயவர் குறிப்பிட்ட போது; அருக்காணித் தங்கத்துக்கு - அந்த மாந்தியப்பன், தன்னிடம் நடந்து கொண்ட கொடுஞ்செயல் நினைவுக்கு வரத் தவறவில்லை!

கொங்கு மண்டலத்தில் எங்கும் எவருக்கும் ஏற்படாத கீழ்த்தரக்குணம் - ஏன்; மனநோய் கொண்ட ஒருவனுக்குக் கூட ஏற்படாத கீழ்த்தரமான எண்ணம் - மாந்தியப்பனுக்கு ஏற்பட்டு; அவன் தன்னைத் துரத்திய அந்தக் கொடூர நிகழ்ச்

சியை அவளால் மறக்க முடியவில்லை! மிருக இனத்தில் மனிதப் பண்பு கொண்டோர் பிறக்கிறார்களோ இல்லையோ; மனித இனத்தில் மிருகப் பண்பு கொண்டோர் ஒருசிலர் பிறந்து விடுகிறார்கள் என்பதற்கு மாந்தியப்பனே உதாரணம் என்று எண்ணி அருக்காணித் தங்கம் பெருமூச்சு விட்டாள். கொங்கு வேளாளர் குலப் பெருமையைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு என அவள் உதடுகள் முணுமுணுத்தன.

மாயவரோ, ராக்கியண்ணன் தன்னிடம் கூறிய விபரங்களை தொடர்ந்து கூறிக் கொண்டிருந்தார்.

''பொழுது விடிந்தது. தனது நண்பனைக் கும்பாபிஷேகத்துக்கு அழைத்துச் செல்ல தலையூர்க் காளி வந்திருக்கிறான். நண்பன் மாந்தியப்பனோ அந்தச் சிலையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறான். தலையூர்க் காளிக்கு வந்த ஆத்திரத்தில் ஒரு குடம் தண்ணீரை மாந்தியப்பன் மீது கொட்டச் செய்திருக்கிறான். போதை தெளிந்த மாந்தியப்பனுடன் தலையூர்க் காளி புறப்பட்டு, செல்லாத்தாக் கவுண்டர் தங்கிருந்த விடுதிக்குச் சென்று அவரையும் அழைத்துக் கொண்டு அதன்பிறகு ராக்கியண்ணன் தங்கியிருந்த விடுதிக்குச் சென்று அவரையும் அழைத்துக் கொண்டு கும்பாபிஷேகத்துக்குச் சென்றிருக்கிறான்.

செம்பகுலன் முன்னின்று அனைத்தையும் கவனிக்க கும்பாபிஷேகம் முடிவுற்றிருக்கிறது. அதன் பிறகு காளியம்மன் கோயில் கர்ப்பகிருக மண்டபத்துக்கு தலையூர்க் காளி, ராக்கியண்ணன், செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பன் ஆகியோர் போயிருக்கிறார்கள். செம்பகுலன், காளியம்மனுக்கு பூஜை செய்து தூப தீப நைவேத்தியங்கள் காட்டி, விபூதி குங்குமம் முதலிய பிரசாதங்களுடன், முதலில் தலையூர்க் காளி மன்னனுக்குத் தந்திட வந்தவன்; திடீரென ஆவேசம் வந்து ஆடியிருக்கிறான்.

''அடேடே அம்பாள் ஆவேசம் வந்து ஆடுகிறாள்! ஏதாவது அருள் வாக்கு சொல்லுவாள்! தாயே! சொல்லு தாயே; சொல்லு! தலையூர் மன்னருக்கு நல்ல வாக்கு சொல்லு தாயே!'' என்று செல்லாத்தாக் கவுண்டர், செம்பகுலனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பயபக்தியுடன் கேட்டிருக்கிறார்.

ஆவேசம் வந்து ஆடும் செம்பகுலன்; ''நல்வாக்கு சொல்ல முடியாது! என் குழந்தைக்கு ஒரு பெரிய ஆபத்து இருக்கிறது'' என்று ஓங்காரக் கூச்சலிட்டிருக்கிறான்.

''எந்தக் குழந்தைக்குத் தாயே? என்னம்மா ஆபத்து? சொல்லடி காளிகாதேவி!'' என்று செல்லாத்தாக் கவுண்டர் பரபரப்புடன் கேட்டிருக்கிறார்.

''எனக்கு ஒரே குழந்தைதான்; இதோ இந்தத் தலையூர் மன்னன்தான்! இந்தக் குழந்தைக்குத்தான் ஆபத்து!''

அதைக் கேட்டதும் தலையூர் மன்னனுக்கே தாங்க முடியாத அதிர்ச்சி! காளியம்மன் காரியத்தில் ஏதாவது தவறு செய்து விட்டோமோ என்று கலங்கிப் போய் நின்றிருக்கிறான்.

''தலையூர்க் குடும்பத்தை அழிக்க குன்றுடையான் மாளிகையிலே இரண்டு குழந்தைகள் பிறந்திருக்கின்றன! அந்தக் குழந்தைகள் வளர்ந்து பெரிய பிள்ளைகள் ஆனால் அவர்களால் தலையூர்காளி வம்சத்துக்கே அழிவு! பேரழிவு!''

செம்பகுலனின் கண்கள் காளிவிக்ரகத்தின் கண்களைப் போலவே பயங்கரமாக மின்னிக் கொண்டிருந்ததால் காளிதேவியே எதிரே வந்து நிற்பதாகக் கருதிய தலையூர் மன்னன்; தழுதழுத்த குரலில் மிகுந்த பணிவுடன்,

''தாயே! காளியம்மா! அந்த ஆபத்தைத் தடுப்பது எப்படி? நீயே வழி சொல்லு தாயே! உனக்கு தங்கக் கவசம் செய்து அணிவிக்கிறேன்!'' என்று கூறித் தொழுதிருக்கிறான்! காளிதேவியாகவே மாறிவிட்டிருந்த செம்பகுலன்;

''உன் உற்ற நண்பர்களோடு உட்கார்ந்து ஆலோசனை செய்! முள் மரத்தை முளையிலேயே கிள்ளி எறியாதவன் முட்டாள் என்பதை மறவாதே!'' என்று சொல்லிக் கொண்டே சுற்றிச் சுழன்று விபூதி குங்குமத்தை வாரி வீசியபடி கீழே விழுந்திருக்கிறான். அம்பாள் மலையேறிவிட்டாள் என்று செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் செம்பகுலனைத் தூக்கி ஆசுவாசப்படுத்தியிருக்கிறார்கள்.

தலையூர் மன்னர் கவலை தோய்ந்த முகத்துடன் காளி கோயிலை விட்டுப் புறப்பட்டுத் தனது ரதத்தில் ஏறி மாளிகைக்குச் சென்றிருக்கிறான்.

செம்பகுலன் மீது காளி ஆவேசம் வந்து ஆடிய நிகழ்ச்சியில் ஏதோ மர்மம் இருக்கிறது என்ற சந்தேகம் ராக்கியண்ணனுக்கு ஏற்படவே; அவரும் கோயிலை விட்டுப் போவது போலப்

போக்குக் காட்டி அங்குள்ள கல் தூணின் மறைவில் ஒதுங்கியிருந்து கவனித்திருக்கிறார். அப்போது செல்லாத்தாக் கவுண்டர் ஒரு பையை எடுத்து பூசாரி செம்பகுலனிடத்தில் நீட்டி, ''இந்தா செம்பகுலா! நான் சொன்னபடி நாடகத்தை நன்றாக நடத்திவிட்டாய்! இதோ என் வாக்கு மாறாமல் நூறு பவுன்!'' என்று பாராட்டி, அவன் முதுகில் அன்போடு தட்டி, அந்தப் பையைக் கொடுத்திருக்கிறார்.

கும்பாபிஷேக நிகழ்ச்சியைத் தொடர்ந்து அன்று மாலையே தலையூர்க் காளியின் ஆலோசனை மண்டபத்தில் மன்னன் காளி, செல்லாத்தாக் கவுண்டர், ராக்கியண்ணன், மாந்தி யப்பன் ஆகியோர் கூடியிருக்கிறார்கள்.

''குழந்தைகளால் உனக்கு என்ன ஆபத்து ஏற்படுத்த முடியும்? அதை நினைத்துக் கலக்கமடையத் தேவையில்லை!'' என்று தலையூர் மன்னனிடம் ராக்கியண்ணன் கூறியதை உடனடியா கக் குறுக்கிட்டு செல்லாத்தாக் கவுண்டர் மறுத்திருக்கிறார்.

''குழந்தையென்றால் சாதாரணமாக எண்ணி விட முடியுமா? கம்சனைக் கொல்லக் கிருஷ்ணன் பிறக்கவில்லையா? அந்தக் கிருஷ்ணனைச் சரியாக அடையாளம் கண்டு அவன் சிசுவாக இருக்கும்போதே கொன்றிருந்தால் கம்சன் செத்திருக்க வேண்டிய தில்லையே!''

இது செல்லாத்தாக் கவுண்டரின் வாதம்! இறுதியாக அந்த வாதமே வலிவானது என்று தலையூர்க்காளி மன்னனும் ஒப்புக் கொண்டிருக்கிறான்.

''சரி; அப்படியானால் அந்தக் குழந்தைகளை யார் கொல் வது?''

இது தலையூர் மன்னன் கேள்வி! இந்தக் கேள்விக்கு ராக்கி யண்ணன் உடனே பதில் சொல்லியிருக்கிறார்.

''தலையூர் மன்னா! என் மாணவனாகிய உனக்கு குன்றுடை யானின் இரண்டு குழந்தைகளால் உயிருக்கே ஆபத்து என்றால் - அந்தக் குழந்தைகளை நானே கொன்று விடுகிறேன்.''

தன்னைக் காப்பாற்ற தனது ஆசான் ராக்கியண்ணனே முன்வந்து விட்டார் என்பது கண்டு தலையூர்க்காளி அவர் காலில் விழுந்து வணங்கியிருக்கிறான்.

அப்போது செல்லாத்தாக் கவுண்டர் கூறிய யோசனைதான், ராக்கியண்ணனைத் திடுக்கிட வைத்திருக்கிறது.

"குழந்தைகளைக் கொண்டு வந்து தலையூர் மன்னரிடமே ஒப்படைக்க வேண்டும். அவைகளைக் காளியின் முன்னால் பலி கொடுக்கிற பணியை தலையூர் மன்னரே நிறைவேற்ற வேண்டும்!"

இவ்வாறு செல்லாத்தாக் கவுண்டர் கூறியதும், "ஆமாம் அதுதான் சரி!" என்று தலையூரான் தலையசைத்திருக்கிறான். ராக்கியண்ணனுக்கோ, ஆயிரம் சம்மட்டி அடிகள் தலையில் விழுந்தது போல் இருந்திருக்கிறது!"

மாயவர் இதைச் சொல்லி, கலங்கியிருந்த தனது கண்களைத் துடைத்துக் கொண்ட போது; அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த அனைவருமே அசைவற்றுப் போயினர்.

# வீரமலையைப் பற்றி வீரமலை 21

சில நொடிகள் மௌனத்திற்குப் பிறகு, மாளிகையின் அந் தக் கூடத்தில் ஒரு குரல் எழுந்தது.

''எங்கள் ஆசான் ராக்கியண்ணன், தங்களிடம் நடந்தவை யனைத்தையும் முழுமையாகக் கூறி முடித்துவிட்டார் என்று நினைக்கிறேன். அதனால் தலையூரில் இருந்து ஆழ்ந்த சிந் தனையுடன் மாரிக்கவுண்டன்பாளையத்துக்குத் திரும்பி வந்த ராக்கியண்ணன் என்ன செய்தார் - தலையூர்க் காளி மன்ன னுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற எவ்வாறு செயல் பட்டார் என்பதை நான் சொல்வதற்கு அனுமதிப்பீர்களா?''

இப்படிக் கேட்டது வீரமலை! எல்லோருடைய கவனமும் அவன் பக்கம் திரும்பியது. மாயவர் கண்களில் கலக்கமிருந் தாலும் கருணை பொழியும் தன்மையுடன் வீரமலையை நோக் கின.

''ஆமாம்! ராக்கியண்ணன் வாயிலாக அறிந்துள்ள அனைத் தையும் எடுத்துக் கூறுவதே என் வருகையின் குறிக்கோள். நடைபெற்ற சம்பவங்களில் உனக்கு நேரடித் தொடர்பு இருக்குமே யானால் உன் வாயாலேயே அதைச் சொல்லலாம். எனக்கும் கூட அது விருப்பம்தான்!''

என்றார் மாயவர்! பொன்னர் சங்கர் இருவருக்கும் சற்றுப் பின்னால் இருந்த வீரமலை, அவர்களைச் சிறிது நகர்த்திக் கொண்டு முன்னோக்கி வந்து; உள்ளங்கையால் நெற்றியைத் தேய்த்துத் தடவி விட்டுப் பழைய நினைவுகளைப் புதுப்பித்துக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

''தலையூரிலிருந்து மாரிக்கவுண்டன்பாளையம் வரையில் ராக்கியண்ணன் ஏறியிருந்த குதிரை ஓடி வந்ததாகவே தெரிய

வில்லை. அடி மேல் அடி வைத்து நடந்து வந்தது போலவே பாசறை வாசலில் வந்து நின்றது. மிகவும் களைப்புற்றவராக வும் சோகமுகத்தினராகவும் ராக்கியண்ணன் காணப்பட்டதை சிறுவன் வீரமலை பார்த்து வியப்படைந்தான். தனது ஆசானை இவ்வளவு சோர்வாக அவன் கண்டதேயில்லை. நெடிதுயர்ந்து நெஞ்சை நிமிர்த்தியவாறு மதயானை போல நடந்து வரக்கூடிய அந்த வீர உருவம் சூறாவளிக் காற்றில் ஆடி ஓய்ந்து நிற்கும் மரம் போலக் காட்சி தந்தது. வீரமலை, குதிரையைப் பிடித்து லாயத்தில் கட்டி விட்டு, தனது ஆசானின் முக மாற்றத்துக்குக் காரணம் தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தான். பாசறைக் குள் நுழைந்த ராக்கியண்ணன், அங்கே கிடந்த சாய்வான பிரம்பு நாற்காலியில் தனது உடலைப் போட்டார் என்றுதான் சொல்ல முடியும் - அமைதியாக சாய்ந்து கொண்டார் என்று கூற முடியாது. அடிக்கடி அவர்விட்ட பெருமூச்சின் ஒலி, பாசறையில் பரவியது. வீரமலை மெதுவாக நடந்து அவர் அருகே சென்று, ''அய்யா, குடிப்பதற்குத் தேன் கலந்த பால் சூடாக இருக்கிறது. தரட்டுமா?'' என்று கேட்டான். வேண் டாம் என்று அவர் தலையசைத்து விட்டு சாய்வு நாற்காலியை விட்டு எழுந்தார். பாசறையைக் காலடிகளால் அளப்பது போல அங்குமிங்கும் நடந்து கொண்டேயிருந்தார். ''வீரமலை!'' என்று அழுத்தம் திருத்தமாக அவர் குரல் ஒலித்ததும், அவன் அவர் அருகே ஓடி நின்றான்.

ராக்கியண்ணனின் கை, வீரமலையின் தோளைத் தடவியது. மீண்டும் ''வீரமலை'' என்ற ஒரு சோகமான அழைப்பு; ஆனால் எப்போதும் போன்று அழுத்தத்துடன்!

''அழகுநாச்சி வரவில்லையா?'' என்று ராக்கியண்ணன் வீரமலையிடம் கேட்டுக் கொண்டே பாசறைக்கு வெளியே வந்து அங்கிருந்த கொய்யா மரத்தின் பெரிய கிளையில் கையை அழுத்திக் கொண்டு நின்றார்.

அழகுநாச்சி, ஆசான் ராக்கியண்ணனின் மனைவியார்! வீரத்தைக் காதலிப்பது போலவே ராக்கியண்ணன் அழகு நாச்சியாரையும் காதலித்தார்! பாசறையிலிருந்து அவரது இல் லம் கூப்பிடு தூரத்தில் தான்! ஒவ்வொரு நாளும் மாலை வேளையில் அழகுநாச்சியார் இல்லத்தை விட்டுப் புறப்பட்டு நடந்தே பாசறைக்கு வந்து விடுவார். ராக்கியண்ணனும் நாச்சி யாரும் பாசறைக்குள்ளிருக்கும் சோலையில் உலவியபடியே பேசி, சிரித்து உற்சாகமாகப் பொழுதைக் கழிப்பார்கள். மாலை வந்து, பின்னர் இருளின் கை ஓங்குவதற்குள்ளாக

அழகுநாச்சியார் வீட்டுக்குத் திரும்பி விடுவார். இரவு உண வருந்தும் நேரம் வரையில் ராக்கியண்ணன் பாசறையில் இருந்து விட்டுப் பிறகுதான் வீட்டுக்குச் செல்வார்.

''அம்மா வந்தார்கள். நீங்கள் வருவீர்கள் என்று காத்திருந் தார்கள். நேரமாகவே சற்று முன்புதான்! வீட்டுக்குச் சென் றார்கள். நீங்கள் வந்ததும் ஓடி வந்து தெரிவிக்கச் சொன்னார் கள். போய் சொல்லி விட்டு வரட்டுமா?''

என்று வீரமலை பணிவுடன் பதில் அளித்து விட்டு, ஆசான், என்ன உத்தரவிடுகிறார் என எதிர்பார்த்தான்.

''நீ போக வேண்டாம். நானே வீட்டுக்குப் போகிறேன்'' என்ற ராக்கியண்ணன், பெரிய கிணற்றின் சகடைக் கயிறை இழுத்து விட்டு கனமான வாளியில், தானே தண்ணீர் மொண்டு முகம், கால், கைகளைக் கழுவிக் கொண்டார். வீரமலை, ராக்கியண்ணனின் ஒவ்வொரு அசைவையும் கவனமாகப் பார்த்துக் கொண்டே அங்கு நின்றான்.

''வீரமலை! நீ ஒரு காரியம் செய்ய வேண்டும்'' என்றார் ஆசான்!

''என்ன காரியம் அய்யா?''

வீரமலை, வழக்கமான பணிவுடன் கேட்டான். ராக்கியண் ணனின் முகத்தில் வெண்மேகத்திரளாக எழுந்த சோகம், கரு மேகக் கூட்டமாக மாறியதை வீரமலையால் உணர முடிந்தது. தொண்டையைக் கனைத்துக் கொண்டு ராக்கியண்ணன், கிணற் றின் அருகேயிருந்த கருங்கல்லில் அமர்ந்தார். வீரமலையை இழுத்து அவன் தலையை மெல்லக் கோதியவாறு பேசினார்.

''புதிய காரியம் ஒன்றுமில்லை. சங்கரன்மலைக்குப் போக வேண்டிய காரியம்தான். அங்கே போய் குன்றுடையான் எப் படியிருக்கிறார் - தாமரைநாச்சியார் எப்படியிருக்கிறார் - அவர்களுக்குப் பிறந்த இரட்டைக் குழந்தைகள் எப்படியிருக் கின்றன என்ற விபரமெல்லாம் தெரிந்து கொண்டு நாளை இரவுக்குள் நீ வந்து சேர வேண்டும்! அங்கே யார் கேட்டா லும் நான் அனுப்பி நீ வந்திருப்பதாகச் சொல்லக்கூடாது. அவர்கள் உன்மீது சந்தேகப்படாதது மாதிரி நடந்து கொண்டு விபரங்களைத் தெரிந்து கொண்டு திரும்ப வேண்டும்.''

''சரி!'' என்று வீரமலை உறுதியுடன் சொல்லவே, ''களைப் பாயிருக்கிறது - பயணக் களைப்பு! வீட்டுக்குப் போய் ஓய் வெடுக்கிறேன் - நான் சொன்னபடி நீ உடனே புறப்படு!'' என்று அவனிடம் கூறிவிட்டு ராக்கியண்ணன் பாசறையிலிருந்து புறப்பட்டார்.

ஆசானின் ஆணைப்படி வீரமலை, சங்கரன்மலைக்கோட் டைக்குப் புறப்பட்டான். அவனுக்கு ஒரே குழப்பம்! சங்கரன் மலைக்கோட்டைக்கு ராக்கியண்ணனே அவனை ஓரிரு தடவை அழைத்துச் சென்றிருக்கிறார். அவனது தந்தை சோழன்தோட்டி மணியங்குரிச்சியெனும் ஆரிச்சம்பட்டியில் பணியாற்றிய கார ணத்தால் தாமரை நாச்சியின் அன்பைப் பெற்றிருந்ததால் அந்த சோழன்தோட்டியின் மகன் வீரமலையிடம் தாமரைக்கு ஒரு பரிவு இருக்கவே செய்தது. எனவே வீரமலை சங்கரன் மலை மாளிகைக்கு சென்று அங்கு நடப்பவைகளைத் தெரிந்து கொண்டு ராக்கியண்ணனிடம் வந்து சொல்வது அவனுக்கு எளிதான செயலேயாகும்.

இருந்த போதிலும் இப்போது அவனை அங்கு அனுப்பு வதில் ராக்கியண்ணனுக்கு இவ்வளவு சங்கடம் ஏற்படுவா னேன்? எதற்கும் கலங்காத அவரது முகம் கவலையால் வாடி யிருப்பானேன்? இந்த வினாக்கள் குடைந்தெடுக்க; அவற்றுக்கு விடைகாண முடியாமலே அவன் சங்கரன்மலையை நோக்கி நடந்தான்.

சூரிய உதயத்துக்கு முன்பே சங்கரமலையைச் சென்றடைந்த வனுக்கு வியப்பு காத்திருந்தது. கோட்டை முகப்பில் வண்ணத் தோரணங்களை அழகுறக் கட்டிக் கொண்டு நூற்றுக்கணக்கா னோர் சுறுசுறுப்பாக இருந்தனர். வீரமலை ஒரு வீரனைப் பார்த்து என்ன விசேஷம் என்று கேட்டான். குன்றுடையாரின் குழந்தைகளுக்கு மறுநாள் இரவு பெயர் சூட்டு விழா என்று அந்த வீரன் தெரிவித்தான். அதற்கு மேல் வீரமலை அங்கு நிற்க விரும்பவில்லை. கோட்டைக்குள் போவது போலப் போக்குக் காட்டி விட்டு வேகவேகமாக மாரிக்கவுண்டன் பாளையத்துக்கு திரும்பினான். அந்தி சாய்ந்து இரண்டு நாளி கைக்கெல்லாம் பாசறைக்கு வந்தடைந்த வீரமலை, ராக்கி யண்ணனிடம்; குன்றுடையான் குழந்தைகளுக்குப் பெயர்சூட்டு விழா நடைபெறப் போவதை அறிவித்தான்:

பெயர் சூட்டு விழாவுக்குத் தனக்கும் அழைப்பு வந்திருக்கிற தென்று ராக்கியண்ணன் வீரமலையிடம் கூறிவிட்டு, சங்கரன்

மலைக்குச் செல்வதற்கான பயண ஏற்பாடுகளைச் செய்யுமாறு பணித்தார்.

அப்போது குதிரையொன்று பாசறை நோக்கி விரைந்து வரும் குளம்படிச் சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து பாசறை முகப்பில் குதிரையிலிருந்து தலையூர் வீரன் ஒருவன் இறங்கி வந்தான். அவன் ராக்கியண்ணனைப் பணிந்து வணங்கி ''தலையூர் மன்னர் அனுப்பிய மடல்'' என்று கூறிக் கொண்டே அரக்கு முத்திரையிட்ட குழல் ஒன்றைத் தந்தான். அதைப் பிரித்து ராக்கியண்ணன் படித்தார். ஏதோ சிந்தித்தார். பிறகு தலையூர் வீரனைப் பார்த்துச் சொன்னார்.

''நீ போகலாம். என்னிடம் ஒப்படைத்த வேலையை நானே செய்து முடிப்பதாக மன்னரிடம் நான் சொன்னதாகச் சொல்லி விடு! விரைவில் நேரில் வருகிறேன் என்றும் கூறிடுக!''

வாய்மொழியாகவே ராக்கியண்ணன் சொன்ன பதிலுடன் தலையூர் வீரன் குதிரையிலேறித் தட்டி விட்டான். குதிரை பறந்து போய்விட்டது. ஆசான் வீரமலையைப் பார்த்தார்.

''வீரமலை! நீ இளைஞனாக இருந்தாலும் நான் உன்னை நம்புகிறேன் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். நடைபெற இருக்கிற ஒரு காரியத்துக்கு நீதான் சாட்சியாக இருக்க வேண் டும்! நம்பிக்கையான சாட்சி!'' என்று சொல்லிக் கொண்டே தலையூரிலிருந்து வந்த மடலை வீரமலையிடம் கொடுத்து, ''இதைப் படித்துப் பார்த்து விட்டுப் பத்திரமாக வைத்துக் கொள்! அழகுநாச்சியார் என்னை அவசரமாக வரச்சொல்லி யிருப்பதால் வீட்டுக்குப் போகிறேன். காலையில் சங்கரன் மலைக்கோட்டைக்குப் புறப்பட எல்லாம் தயாராகட்டும்'' என்றுரைத்துவிட்டு ராக்கியண்ணன் பாசறையை விட்டகன்றார்.

அவர் போனதும் வீரமலை அங்கிருந்த அகல்விளக்கின் ஒளியில் அந்த மடலைப் படித்துப் பார்த்தான்.

'ஆசான் ராக்கியண்ணன் அவர்கள் அறிவது யாதெனில்? குன்றுடையான் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டு விழாவாம். அந்தக் கோலாகல நிகழ்ச்சியைத்தான் நமது வேலைக்குப் பயன் படுத்திக் கொண்டு குழந்தைகளைக் கடத்திவிடவேண்டும். தங்களால் இயலாதாயின் தலையூர் வீரர்களையே அனுப்பத் திட்டமிட்டிருக்கிறேன் - தலையூர் மன்னன் காளி'.

அந்த எழுத்துக்கள் வீரமலையின் விழிகளில் மின்னல்கோடு களாகப் பாய்ந்து வெட்டின! அதைத் தொடர்ந்து அவன் இதயத்தில் சமாளிக்க முடியாத மற்றொரு கொந்தளிப்பு!

அதுதான் தலையூர் வீரனிடம் ராக்கியண்ணன் சொன்ன பதில்! ''என்னிடம் ஒப்படைத்த வேலையை நானே செய்து முடிப்பதாக மன்னரிடம் நான் சொன்னதாகச் சொல்லிவிடு!'' என்று ஆசான் சொன்னதிலேயிருந்து, குன்றுடையாரின் குழந் தைகளை ஆசானே கடத்திக் கொண்டு போய்த் தலையூர்க் காளியிடம் ஒப்படைக்கப் போகிறார் என்றல்லவா ஆகிறது! வீரமலைக்கு ஒன்றுமே புரியவில்லை! தலையூர் மன்னரின் ஓலையை ஆசான் தன்னிடம் ஒப்படைத்து இந்தப் பயங்கர மான சதித்திட்டத்தைப் பற்றிய ரகசியத்தை எதற்காகத் தனக் குத் தெரிவிக்க வேண்டும்? ஒருவேளை, தனது உதவியோடு அந்தக் குழந்தைகளைக் கடத்த ஆசான் திட்டமிட்டுள்ளாரா?

எந்தக் குழந்தைகளை மருத்துவச்சிகள் மூலம் நடைபெற்ற சதியிலிருந்து காப்பாற்றிக் கொடுத்தாரோ அதே குழந்தை களை அவரே கடத்தப் போகிறாரா? எந்த முடிவுக்கும் திட மாக வர முடியாமல் அந்த இளைஞன் பாசறையில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தான். பொங்கல் திருநாளையொட்டி பாசறை மாணவர்கள், அவர்களது ஊர்களுக்குச் சென்றிருந்த காரணத்தால் தனிமையில் இருந்த அவனுக்குத் தூக்கமே பிடிக்க வில்லை. பயிற்சி மாணவர்கள் யாரும் இருந்தால்தான் என்ன; அவர்களிடம் கலந்துரையாடி பகிர்ந்து கொள்ளக் கூடிய விஷ யமா இது?

'ஆசான் மனம் நல்ல மனம். அதனால் எது நடந்தாலும் நல்லதாகத் தான் நடக்கும்.' என்று திடப்படுத்திக் கொண்டு, அதிகாலையில் எழுந்து ராக்கியண்ணன் ஏறிச் செல்வதற்கான குதிரையைத் தயார்படுத்தி நிறுத்தினான். பயணத்துக்குத் தேவையான பொருள்கள் அடங்கிய பை ஒன்றும் குதிரைக் கருகிலேயே வைக்கப்பட்டது.

புறப்படுவதற்குத் தயாராக வந்த ராக்கியண்ணன், வீரமலை யைப் பார்த்து, ''நீயும் ஒரு குதிரையில் என்னுடன் வருகிறாய்!'' என்றார். சிறிது தயங்கிய வீரமலை தனக்கும் ஒரு குதிரையைத் தயார் செய்து கொண்டு ஏறி உட்கார்ந்தான். இருவரும் புறப் பட்டனர். போகும் வழியிலேயே ராக்கியண்ணன், சங்கரன் மலைக்கோட்டையில் வீரமலை செய்து முடிக்கவேண்டிய சாக சம் என்ன என்பதை அறிவித்து விட்டார்! தான் மேற்கொண்

டுள்ள செயலுக்கு என்ன காரணம் என்பதையும் வீரமலைக்கு விளக்கி விட்டதால் அவனுக்கும் குழப்பம் தீர்ந்தது.

அன்றிரவு சங்கரன்மலைக்கோட்டை அகல்விளக்கு அலங் காரத்தால் கார்த்திகைத் திருவிழா போல் காட்சியளித்தது. குன்றுடையாரின் ஆதிக்கத்திற்குட்பட்ட சிறிய காணியாளர் கள் பலரும் குழந்தைகளின் பெயர் சூட்டு விழாவுக்கு வந்திருந் தனர். ராக்கியண்ணன் குழந்தைகளை வாழ்த்தி விட்டுப் புறப் பட்டவர், வீரமலையின் காதில் ரகசியமாக செய்தி சொல்லி விட்டுக் கோட்டையிலிருந்து வெளியேறினார்.

விழா ஆர்ப்பாட்டம் முடிந்து உணவருந்திய களைப்பில் அவரவரும் படுக்கைக்குச் சென்று விட்டனர். வீரமலை, குழந் தைகளின் தொட்டில்களுக்குப் பக்கத்தில் அமர்ந்து அவை களையே பரிவுடனும் பாசமுடனும் பார்த்துக் கொண்டிருந் தான். தாமரைநாச்சியார் இனிப்புப் பண்டங்களை எடுத்து வந்து வீரமலையைச் சாப்பிடச் சொன்னார். அப்போது குன் றுடையார் அங்கு வந்து குழந்தைகள் தொட்டிலில் தூங்குகிற அழகை ரசித்தார். பிறகு தாமரைநாச்சியார், குன்றுடையாரை உணவருந்த அழைத்தார். ''குழந்தைகளை பத்திரமாகப் பார்த் துக் கொள்'' என்று வீரமலையிடம் சொல்லிவிட்டு இருவரும் அங்கிருந்து உணவருந்தச் சென்றனர்.

சமயத்தை எதிர்பார்த்திருந்த வீரமலை மெல்ல எழுந்து, தொட்டிலில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த இரண்டு குழந் தைகளையும் துணியொன்றினால் மூடி எடுத்துக் கொண்டு, கோட்டைச் சுவர் பக்கம் ஓடினான். சுவரின் அடுத்த பக்கம் திட்டமிட்டபடி நின்று கொண்டிருந்த ராக்கியண்ணன் கையில் மிகவும் பத்திரமாக இரண்டு குழந்தைகளும் ஒப்படைக்கப்பட் டன. அவைகளை ஒப்படைத்து விட்ட வீரமலை ஒரு ஆழ்ந்த பெருமூச்சுடன் தன்னை நிதானப்படுத்திக் கொண்டு மீண்டும் குழந்தைகளின் தொட்டில்கள் அருகே வந்து நன்றாகத் தூங்கு வது போல நடிக்கத் தொடங்கினான்.

குழந்தைகளை கவனிக்க வந்த அரண்மனைப் பணிப்பெண் கள் ''அய்யோ! குழந்தைகளைக் காணவில்லை!'' என்று கூச் சல் போட்டுக் கத்தினர். அந்தப் பேரொலியில் அதிர்ச்சி யடைந்து தாமரை நாச்சியாரும் குன்றுடையாரும் அங்கே ஓடி வந்தனர். தூங்கிக் கொண்டிருந்த வீரமலையைத் தட்டி எழுப்ப, அவன் கண்களைக் கசக்கிக் கொண்டு ஏதுமறியாதவன் போல்

திகைத்தான். ''அடப்பாவி!'' என்று அலறிய தாமரைநாச்சி யார் மயக்கமுற்றார். குன்றுடையார் ''செல்லாண்டியம்மா! எங்களை ஏன் இப்படி சோதிக்கிறாய்?'' என்று அலறினார். வீரமலையை அந்த அரண்மனை வீரர்கள் பிடித்து, இழுத்து, அடித்து, உதைத்து, உண்மையைச் சொல்லடா; குழந்தைகள் எங்கே? என்று மிரட்டினர். அவன் தனக்கு எதுவுமே தெரி யாது என்று கூறவே அவனைச் சிறையில் தள்ளக் கொண்டு போயினர். மயக்கம் தெளிந்து கண்விழித்த தாமரை நாச்சியார் ''அவனை ஒன்றும் செய்யாதீர்கள்! அவன் நல்ல பிள்ளை - பாவம்; தூங்கிவிட்டான் - யாரோ பாவிகள் செய்த பாதகத்துக்கு அவன் என்ன செய்வான்? அவனை விட்டு விடுங்கள்! என்று சொல்லவே வீரமலை விடுவிக்கப் பட்டான்.

வீரமலையே; வீரமலைக்குத் தொடர்புடைய நிகழ்ச்சிகளை விவரித்துக் கொண்டிருக்கிறான் என்பது குன்றுடையான் தாமரைநாச்சிக்கு நன்றாகவே புரிந்திருந்தது என்றாலும், அவனே தான் தங்கள் குழந்தைகளைத் தூக்கிக் கொண்டு போய் ராக்கியண்ணனிடம் கொடுத்தான் என்று தெரிந்ததும் அவர்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ராக்கியண்ணன் எதற் காகத் தானே முன்னின்று குழந்தைகளைக் கடத்திச் சென்றார் என்பது அவர்களுக்குப் புரியாத புதிராகவே இருந்தது.

குழந்தைகள் கடத்தப்பட்டன - கடத்தியவர் ராக்கியண்ணன் - அந்தக் குழந்தைகள் வளர்ந்து இதோ பொன்னர் சங்கராக நின்று கொண்டிருக்கிறோம் - அதுவும் ஆசான் ராக்கியண்ண னின் மாணவர்களாக நின்று கொண்டிருக்கிறோம் - பெற் றெடுத்த தாய் தந்தையர் முன்னிலையிலேயே நின்று கொண்டி ருக்கிறோம் - அப்படியானால் நாம் குழந்தைகளாக இருக்கும் போது தலையூர்க்காளி மன்னரிடம் கொண்டு போய் நம்மை ராக்கியண்ணன் ஒப்படைக்கவில்லையா?

இப்படியொரு அவிழ்க்க முடியாத சந்தேகத்துடன் அந்த மாளிகை மண்டபத்தில் பொன்னர் சங்கர் ஒருவரையொருவர் உற்று நோக்கியவாறு வீற்றிருந்தனர். அவர்கள் விழிகள் கேள் விக் குறிகளாக மாறியிருந்தன! குன்றுடையான் தாமரை இரு வரின் இதயங்களோ, ஆச்சரியக் குறிகளாக மாறியிருந்தன!

''இனிமேல்தான் ஒரு தியாக வரலாறே ஆரம்பமாகிறது!'' என்று வீரமலை தனது பேச்சைத் தொடர்ந்தான்.

# தியாகத்தின் எல்லை 22

“தாமரைநாச்சியாரின் தயவினால் விடுவிக்கப்பட்ட வீர மலை, தனது குதிரையின் மீது தாவி ஏறியவன் சங்கர மலையை விட்டு, இவ்வளவு வேகமாக எப்படி வந்தோம் என அவனே ஆச்சரியப்படும் அளவுக்கு மாரிக்கவுண்டன்பாளையம் வந்து சேர்ந்தான். குழந்தைகளுடன் ராக்கியண்ணன் பாசறையில் தான் இருப்பார் என்ற திடமான எண்ணத்துடன் பாசறையை நோக்கிக் குதிரையை நடக்க விட்டான். பாசறை முகப்பிலோ உட்பகுதியிலோ தலையூர் வீரர்கள் யாரும் தென்படுகிறார் களா என்று சுற்றிலும் பார்த்துக் கொண்டு உள்ளே நுழைந் தான். அவர்கள் யாரும் காணப்படாததால்; ஒருவேளை தலை யூர்க்காளியின் வீரர்கள் காத்திருந்து ராக்கியண்ணனிடமிருந்து குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு போயிருப்பார்களோ என்ற சந்தேகமும் வீரமலைக்கு ஏற்பட்டது. சே! ஆசான் அப் படியொன்றும் செய்திருக்க மாட்டார் என்ற நம்பிக்கையொளி யும் உடனே தோன்றி அந்தச் சந்தேக இருட்டை விலக்கியது.

குதிரையிலிருந்து இறங்கி, குதிரையை அப்படியே நிறுத்தி விட்டு பாசறையின் உட்பகுதிக்குள் சென்று பார்த்தபோது ஆசான் அங்கில்லை. வீரமலைக்கு வியர்த்துக் கொட்டியது. சங்கரன்மலைக்கோட்டையிலிருந்து அவர் நேராகத் தலையூருக்கே போயிருக்கக் கூடுமோ? என்று நினைத்து வீரமலை நடுங்கி னான். அவன் நடையில் அவனது இளமைக்கு முற்றிலும் மாறான ஒரு தளர்ச்சி! இருப்பினும் சமாளித்துக் கொண்டு, தான் வந்த குதிரையைப் பிடித்துக் கொண்டு போய் பாசறை லாயத்தில் கட்டுவதற்காகப் போனான். அங்கு கண்ட காட்சி, அவனுக்கோர் ஆறுதல் பெருமூச்சை வரவழைத்தது.

சங்கரன்மலைக்கோட்டைக்கு ராக்கியண்ணன் ஏறிச் சென்ற குதிரை, லாயத்தில் கட்டப்பட்டிருந்தது. அப்படியானால் ஆசான், வீட்டுக்குத்தான் சென்றிருப்பார் என்று தீர்மானித்

துக் கொண்ட வீரமலை ஓட்டமும் நடையுமாக அங்கே சென்றான்.

ஆசான் வீட்டுக் கதவு உட்பக்கமாகத் தாள் போடப்பட்டிருந்தது. வாயிற்புறத்து நிலைப்படியின் இருபுறமும் உள்ள உயர்ந்த திண்ணைகளையொட்டி அமைந்திருந்த பலகணிகளில் ஒன்றின் கதவு மட்டும்; சில பேர் தூங்கும்போது திறந்திருக்கும் இமையைப் போல் சிறிதளவு திறந்திருந்தது. பரபரப்பான அந்தச் சூழ்நிலையில் மறைந்திருந்து கவனிப்பது தவறில்லையென்றே வீரமலையின் மனதிற்பட்டது. மெதுவாகத் திண்ணையிலேறி, பலகணி இடுக்கின் வழியாக உட்புறம் பார்த்தான்.

அழகுநாச்சியாரும் ராக்கியண்ணனும் கட்டிலில் அமர்ந்திருந்தனர். அழகுநாச்சியாரின் மடியில் இரண்டு குழந்தைகள்! ராக்கியண்ணன் மடியில் இரண்டு குழந்தைகள்! அழகுநாச்சியாரும் ராக்கியண்ணனும் பேசியது வீரமலையின் காதில் விழுந்தது.

''அழகுநாச்சி! நமக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தபோது, அந்தச் செய்தி எனக்கே ஒரு அதிர்ச்சியாக இருந்தது. பிறகுதான் மெல்ல மெல்ல அது மகிழ்ச்சியாக மலர்ந்தது. இப்போது அந்த மகிழ்ச்சி என்னைப் பொறுத்தவரையில் பல மடங்கு அதிகமாகியிருக்கிறது. ஆனால் நீ எப்படி உணருகிறாய் என்பதுதான் எனக்குப் புரியவில்லை!''

''உங்கள் மகிழ்ச்சிதான் என் மகிழ்ச்சியும்! இருந்தாலும் உங்கள் செய்கை என் மனத்தில் ஏதோ ஒரு குழப்பத்தை உருவாக்கியிருக்கிறது. இந்த இரண்டு குழந்தைகளும் யார்? எங்கிருந்து கொண்டு வருகிறீர்கள்? எதற்காக?''

''உன்னிடம் சொல்லாமலா இருக்கப் போகிறேன். சொல்லத்தான் போகிறேன். சொல்லித்தான் ஆக வேண்டும்.''

''வந்தது முதல் வளைத்து வளைத்துப் பேசுகிறீர்களே தவிர, இன்னும் எந்த விபரமும் சொல்லவில்லை. இதைப் பார்க்கும் போதுதான் எனக்குப் பயமாக இருக்கிறது!''

''சொல்லிவிடுகிறேன் அழகு! எந்தக் குன்றுடையான் குழந்தைகளின் பெயர் சூட்டு விழாவுக்குச் சென்றிருந்தேனோ; அந்தக் குன்றுடையானின் குழந்தைகள்தான் இவைகள்!''

''என்ன சொல்கிறீர்கள்? அரண்மனையிலிருந்து அவர்கள் விருப்பம் கேட்டுத் தூக்கி வந்தீர்களா? அல்லது... அல்லது...?''

''குழந்தைகளைத் திருடிக் கொண்டு வந்தீர்களா? என்று கேட்க நினைக்கிறாய்! எப்படிக் கேட்பதென்று நீ திண்டாடத் தேவையில்லை. நானே கூறுகிறேன்; திருடிக் கொண்டுதான் வந்தேன்!''

''திருடிக் கொண்டா? ஏன்? இனியும் என்னை வாட்டி வதைக்காமல் விரைவில் சொல்லுங்கள்!''

''நான் இந்தக் குழந்தைகளைக் களவாடிக் கொண்டு வரா விட்டால், எப்படியும் செல்லாத்தாக் கவுண்டரின் சதிச் செய லால் இந்தக் குழந்தைகள் தலையூர்க்காளி மன்னனின் கை களில் ஒப்படைக்கப்பட்டுவிடும். இந்த அரும்புகளின் வாழ்வை இப்போதே முடித்துவிட வேண்டுமென்று செல்லாத்தாக் கவுண்டர் துடியாய்த் துடிக்கிறார்.''

''ஏன்? அவருக்கு ஏன் இந்த வஞ்சக எண்ணம்? குன்றுடை யாரின் வளநாட்டையே அபகரித்துக் கொண்டு ஆட்சி நடத்து கிறாரே! அது போதாதா? அவரது குழந்தைகளை எதற்காகக் கொல்ல வேண்டும்?''

''வஞ்சகத்தால் பெற்ற வளநாட்டு ஆட்சியைத் தானும், தனக்குப் பிறகு தனது வழித் தோன்றல்களுமே பரிபாலிக்க வேண்டும். குன்றுடையான் குடும்பத்தில் யாரும் தலையெடுத்து வளநாட்டை மீட்டுவிடக் கூடாது என்பதற்காகத்தான் இப் படிப்பட்ட ஒரு நல்ல எண்ணம் அவருக்கு உதயமாகியிருக் கிறது. அந்தக் காரியத்தைத் தன்னால் செய்ய முடியுமா என்ற ஐயப்பாட்டினால்தான், தலையூர்க்காளியை ஏமாற்றி - மிரட்டி - அவனைக் கொண்டே இந்தக் குழந்தைகளைத் தீர்த்துக் கட்டி விடத் திட்டம் தீட்டிவிட்டார். நல்லவேளை அந்தச் சமயம் தலையூரில் இருந்த நான் குழந்தைகளைக் கொண்டு வரும் பொறுப்பை என்னிடமே விடுமாறு தலையூர் மன்னனைக் கேட்டுக் கொண்டேன். இப்போது என் கையில் இந்தக் குழந் தைகள் பத்திரமாக இருக்கின்றன.

''தலையூர் மன்னர் தங்களிடமிருந்து குழந்தைகளைக் கேட்க மாட்டானா?''

''கட்டாயம் கேட்பான்! அவன் கேட்பதற்கு முன்பு, நானே

கொண்டு போய்க் குழந்தைகளை அவனிடம் கொடுத்து விட வேண்டும்.''

''கொடுத்து விட்டால் இந்தக் குழந்தைகளின் கதி?''

''செல்லாத்தாக் கவுண்டரின் யோசனைப்படி கொல்லப் பட்டு விடலாம்!''

''என்ன சொல்கிறீர்கள்? தங்க விக்ரகங்கள் மாதிரி இருக் கிற இந்தக் குழந்தைகளைக் கொல்வதற்கு நீங்களும் உடந் தையா?''

''நான் உடந்தையாக இருக்க விரும்பவில்லை! அழகுநாச்சி! குன்றுடையான் குழந்தைகள் என்பது மட்டுமல்ல; கோளாத் தாக் கவுண்டரின் பேரப் பிள்ளைகள் என்பதை நினைக்கும் போது, என் இதயமே பிளந்து விடும் போலிருக்கிறது! கோளாத் தாக் கவுண்டர் குணநலன்களின் குன்றமாகவே உயர்ந்து நின்று ஆட்சி புரிந்தவர். அவருக்கு வாய்த்த குல விளக்கு பவளாத் தாள்; மக்கள் அனைவராலும் தாய் என்றே போற்றப்பட்டவர். கோயில்கள் பல கட்டிக் குடமுழுக்கு செய்து புகழ்பெற்றவர் மட்டுமல்ல; பெருங்குடிக்குலத்தார்களுக்கெல்லாம் காணி உரிமை ஏற்படுத்திக் கொடுத்த பெருமையும் கோளாத்தாக் கவுண்ட ருக்கு உண்டு. வாங்கலான் என்றும் பாட்டப்பன் என்றும் வாயார மனமார நல்லோர் பலர் வாழ்த்திப் பாராட்டினர் அவரை! பெருமையுடன் பல திக்கிலும் ஆட்சி செலுத்திப் பின்னர் நிலப்பரப்பில் குறுகி விட்ட சேர சோழ பாண்டிய மன்னர்களுக்கிடையே எல்லைத் தகராறு ஒன்று பெரும் தொல் லையாக முளைத்த போது அவர்களுக்குள் போர் மூண்டது. அந்தப் போரை நீடிக்கவிடாமல் நிறுத்துமாறு வேண்டுகோள் விடுத்து, மூன்று மன்னர்களையும் மதுக்கரை செல்லாண்டியம் மன் கோயிலுக்கு வரவழைத்துச் சமாதானம் பேசி, அவர்களுக் குள் ஏற்பட்ட எல்லைப் பிரச்சினையைத் தீர்த்து வைத்தவரும் கோளாத்தாக் கவுண்டரேதான்! அந்தத் தீர்வில் மகிழ்ச்சி யடைந்த சோழ வேந்தர் கோளாத்தாக் கவுண்டருக்குத் திருக் காம்புலியூர் அருகில் பெரும்பகுதி நிலப்பரப்பைப் பரிசாக வழங்கினார். சோழ மன்னரின் நட்புடனும் சேரர் பாண்டியர் ஆகிய இரு மன்னர்களின் மதிப்புக்குரிய நிலையிலும் மிகப் பெரும் நிலப்பரப்பில் காவல் ஆட்சி உரிமைபெற்று மக்க ளோடு மக்களாக இருந்து உழைத்த உத்தமர்தான் கோளாத் தாக் கவுண்டர். அவ்வளவு ஏன்; இதோ நாம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிற இந்தப் பெரிய வீடும், இதைச் சுற்றி

யுள்ள தோட்டம் துரவு நில புலங்களும் - நமது பாசறையும் அதைச் சார்ந்த சோலைகளும் கோளாத்தாக் கவுண்டரால் நமது குடும்பத்துக்கு அந்தக் காலத்திலேயே பரிசாக வழங்கப் பட்டவை! அப்படிப்பட்ட பரந்த மனமும் இனிய சிந்தையுங் கொண்ட ஒரு குடும்பத்தில் வெள்ளையுள்ளம் படைத்த குன்றுடையானின் குழந்தைகளைக் கொண்டு போய்க் கொலைக் கூடமொன்றில் ஒப்படைக்க எனக்கு எப்படி இதயம் இடங் கொடுக்கும்? முடியாது; நிச்சயமாக என்னால் முடியாது!''

''அப்படியென்றால் இந்தக் குழந்தைகளை தலையூர் மன்னனிடம் ஒப்படைக்காமல் இருந்து விடப் போகிறீர்களா?''

''ஒப்படைக்காவிட்டால் - அவனுக்கு நான் என்ன பதில் சொல்வது? இந்தக் குழந்தைகளைக் கொண்டு வந்து தரும் பொறுப்பை நானேயல்லவா ஏற்றுக் கொண்டிருக்கிறேன்!''

''கடத்திக் கொண்டு வந்து கொன்று விட்டதாகச் சொல்லி விடுங்களேன்.''

''அதை நம்ப முடியாது என்பதால் தானே, குழந்தைகளைத் தலையூரில் கொண்டு வந்து கொடுக்க வேண்டுமென்று அப் போதே திட்டவட்டமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.''

''இப்படியொரு அநியாயப் பழியைத் தாங்கள் வலுவில் தூக்கி உங்கள் தலையில் போட்டுக் கொண்டிருக்கவே தேவை யில்லை!''

''நான் இந்தக் காரியத்தைச் செய்வதாக ஒத்துக் கொள்ளா விட்டால் - தலையூர் மன்னனின் ஆட்கள் எப்படியும் இந்தக் குழந்தைகளைக் கொன்று விடுவார்கள்.''

''அவர்கள் கொல்லக் கூடாது; நாமே கொல்வோம் என்று முடிவு எடுத்து விட்டீர்களா?''

''அப்படி முடிவெடுத்திருந்தால் உன்னோடு இவ்வளவு நேரம் எதற்காகப் பேசிக் கொண்டிருக்கப் போகிறேன்?''

''என்ன சொல்கிறீர்கள்? குழந்தைகளைத் தலையூர் மன்னனிடம் கொடுக்கவும் வேண்டும் - ஆனால் குழந்தைகள் சாகவும் கூடாது என்றால் அது எப்படி முடியும்? தாங்கள் குழந்தைகளைக் கொடுப்பது தலையூரானின் கைகளில் அல்ல;

கொடுவாளின் முனையில் என்பதை மறந்து விட்டுப் பேசு கிறீர்களா?''

''குழந்தைகளைத் தலையூர் மன்னனிடம் ஒப்படைக்க வேண் டும். ஆனால் குன்றுடையான் பெற்றெடுத்த பொன்னர் - சங் கர் எனும் இந்தச் செல்வங்களையல்ல!''

இதைச் சொன்ன போது ஆசானின் குரலில் ஒரு நடுக்கம் தோன்றியதை, பலகணி வழியே பார்த்துக் கொண்டிருந்த வீர மலை கவனித்தான். வீரமலையின் ஆவல் எல்லை கடந்து போயிற்று. ஆசானின் தோளில் தனது கரத்தைப் பதித்துக் கொண்டே அழகுநாச்சியார் கேட்டார்;

''பிறகு எந்தச் செல்வங்களை ஒப்படைக்கப் போகிறீர்கள்?'' என்று!

''அழகுநாச்சி! நான் சொல்வதைத் தாங்கிக் கொள்ள உன் நெஞ்சத்தைப் பக்குவப்படுத்திக்கொள்! ஏனென்றால் எந்தத் தாயினாலும் தாங்கிக் கொள்ள முடியாத ஒன்றை நான் இப் போது சொல்லப் போகிறேன்.''

இப்படிக் கூறிக் கொண்டிருந்த ஆசானின் கண்களிலே யிருந்து பொல பொலவென நீர்த்துளிகள் சிந்தின. அழகுநாச் சியார் திடுக்கிட்டெழுந்து குழந்தைகளை மார்புறத் தழுவிக் கொண்டே,''அப்படியென்ன சொல்லப் போகிறீர்கள்?'' என்று கேட்டவுடன், ஆசான் ராக்கியண்ணன் ஒரு கணம் வாயடைத் துப் போய் நின்றார். பிறகு, கட்டிலின் ஓரமாகக் கையில் குழந்தைகளுடன் தலைகுனிந்தவாறு உலவினார். அதன் பிறகு, தன் கையிலிருந்த குழந்தைகளைக் கட்டிலில் படுக்க வைத் தார். அதைத் தொடர்ந்து அழகு நாச்சியார் அருகே சென்று இரு கைகளையும் நீட்டிக் குழந்தைகளைக் கேட்டார்.

கருவாக்கி வளர்த்த வயிறோடும் - பால் தந்த மார்பகத் தோடும் அழகுநாச்சியார் அந்தக் குழந்தைகளை அழுத்திய வாறு கண்ணீர் பொழிந்த காட்சி கண்டு வீரமலையின் ரத்த ஓட்டமே நின்று விடும் போலிருந்தது.

''உம்! கொடு!'' என்று கணவன் இருகைகளையும் நீட்ட, மனைவியார் அழகுநாச்சியாரோ; ''வேண்டாம்! வேண்டாம்!'' என்பது போலத் தலையை அசைத்துக் கொண்டு தயங்கி நின் றார்.

''அழகுநாச்சி! எனக்காக அல்ல; நமது பெருங்குடி மக்களின் எதிர் காலத்துக்காக நீயும் நானும் இந்த தியாகத்தை செய்தே ஆக வேண்டும். கோளாத்தாக் கவுண்டரால் நமது மக்களும் நாடும் எவ்வளவோ நன்மைகளைப் பெற்றதற்கு நன்றிக் கடனாக அவரது பேரக் குழந்தைகளை நாம் காப்பாற்றியே ஆகவேண்டும். நமக்கு ஏன் இரட்டைக் குழந்தை பிறந்தது என்று அன்றைக்கு நாமே கூட அதிசயத்தில் ஆழ்ந்தோம்! ஆனால், இன்றைக்கு? அது எவ்வளவு நல்லதாகப் போயிற்று பார்த்தாயா? இதோ குன்றுடையானின் இரட்டைக் குழந்தைகள் என்று நமது குழந்தைகள் இரண்டையும் தலையூரானிடம் ஒப்படைத்து விடலாம் அல்லவா? கோளாத்தாக் கவுண்டரின் கொடி மலர்கள் இரண்டையும் கசங்கி விடாமல் காப்பாற்ற முடியும் அல்லவா?''

''அய்யோ - இரட்டைக் குழந்தை நமக்குப் பிறந்ததின் வேதனை இப்போதல்லவா தெரிகிறது! ஒரே குழந்தையாகப் பிறந்திருந்தால், இப்படியொரு யோசனை உங்கள் மூளையில் துளிர் விட்டிருக்காதே!''

அழகுநாச்சியார் விம்மியழத் தொடங்கினார். அவரைச் சமாதானப்படுத்திக் கொண்டே, அவரது கையில் இருந்த குழந்தைகளை ஆசான், தனது கையில் வாங்கிக் கொண்டார்.

''அழகுநாச்சி! அழக்கூடாது! தாயின் வேதனையை விட இந்தத் தந்தையின் வேதனை குறைந்ததல்ல! ஆனால் நமது பெருங்குடிக் கூட்டத்து வருங்கால நல்வாழ்வுக்காக - நமது குலத்தின் வீரமும் மாண்பும், விண்முட்டக் கொடி கட்டிப் பறக்கும் சிறப்பினைப் பெறுவதற்காக - நாமிருவரும் இந்தத் தியாகத்தை செய்தே தீர வேண்டும்.

''அய்யோ! ஒரு தாய் தன் குழந்தைகளை எப்படி மனம் வந்து இழப்பதற்குத் துணிய முடியும்? நீங்களே சொல்லுங்கள்!''

''முடியாதுதான்! ஆனால் வேறு வழியே இல்லையே! அழகு நாச்சி! இழக்கக் கூடியதை இழப்பது தியாகமில்லை - சில பேர் சுயநலத்துக்காக இழக்கக் கூடியதைக் கூட இழக்கத் துணிய மாட்டார்கள்! இழக்கக் கூடாத பெரும் செல்வமாம் மக்கட் செல்வத்தை இந்த மண்ணின் எதிர்காலத்துக்காக இழக்கும் தியாகத்தைச் செய்ய இப்படி எப்போதாவதுதான் ஒரு வாய்ப்பு கிடைக்கும். அந்த வாய்ப்பைத் தவற விட்டு, நாம்

தன்னலவாதிகளாகி விடக் கூடாது! தயவுசெய்து நான் சொல்வதைக் கேள்! இதோ கட்டிலில் கிடக்கும் கண்மணிகள் பொன்னர் - சங்கர்தான் இனி நமது செல்வங்கள்! இவர்களை வளர்த்து ஆளாக்கித் தக்க சமயத்தில் குன்றுடையானிடமும் தாமரைநாச்சியிடமும் ஒப்படைப்பது நமது கடமை! அதுவரையில் இந்தக் குழந்தைகள்தான் பொன்னர் - சங்கர் என்று யாருக்குமே தெரியக் கூடாது! இந்தா; இந்தக் குழந்தைகளுக்குக் கடைசியாக முத்தம் கொடுத்து வழியனுப்பி வை! இப்படி இரண்டு குழந்தைகள் நமக்குப் பிறந்ததையே மறந்து விடுவோம் - கலங்காதே! அழாதே! நீ ஒரு வீரனின் மனைவி என்பது உண்மையானால்; தாயே ஆனாலும் தன்னலமற்றவள் என்பது உண்மையானால்; நமது பெருங்குடிக் கூட்டத்தினர் நல்வாழ்வும் எதிர்கால ஒளியும்தான் நமது குறிக்கோள் என்பது உண்மையானால்; எனக்கு விடை கொடு!''

மலைத்துப் போய் நின்ற அழகுநாச்சியார் கணவனின் கைகளிலிருந்த தனது குழந்தைகளை வாங்கி, ஆசை தீர ஒன்றிரண்டு - நூறு இருநூறு - ஆயிரம் லட்சமென முத்தமாரி பொழிந்தார். பின்னர் மயக்கமுற்ற நிலையில் கட்டிலின் மீது வீழ்ந்து குன்றுடையாரின் குழந்தைகளிரண்டின் பாதங்களில் தனது கண்களைப் புதைத்துக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதார்.

தனது இரு குழந்தைகளையும் கையில் தாங்கியவாறு ஆசான்; வாசற் பக்கம் திரும்பி,

''வீரமலை! நீ எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருப்பது எனக்குத் தெரியும். நீ கவனிக்க வேண்டும் என்பதற்காகத்தான் பலகணியைச் சிறிது திறந்தே வைத்திருந்தேன். நடந்தது அனைத்துக்கும் நீயே சாட்சி! அழகுநாச்சிக்கு சொன்னது முழுவதும் உனக்கும் பொருந்தும். என்னைப் போலவே குன்றுடையான் குடும்பத்தின் மீது உனக்கும் விசுவாசம் உண்டு. நான் இந்தக் குழந்தைகளுடன் தலையூர் போகிறேன். நீ அழகுநாச்சியாரை கவனித்துக் கொள்!''

என்று கூறிவிட்டு வெளியே சென்றார்.

இந்த விபரங்களை உணர்ச்சியோடு சொல்லி முடித்த வீரமலையின் கண்கள் இப்போது அருவிகளாக இருந்தன.

# 23

# "ஆசானின் ஆணைகேட்டே நடப்போம்"

அடுத்து வீரமலையின் வாயிலிருந்து என்ன வார்த்தைகள் வரப்போகின்றன எனத் தாமரையின் காதுகள், தம்மைக் கூர்மையாக்கிக் கொண்டன என்றாலும் அவற்றுக்கு முன்பே அவளது இதயம் படபடவெனத் துடிக்கத் தொடங்கியது. தான் பெற்ற பிள்ளைகள் உயிரோடிருக்கிறார்கள் என்பது வீரமலை சொன்ன விபரங்களில் இருந்து தெரிந்து விட்டாலும் கூட அவர்கள் எங்கேயிருக்கிறார்கள், எப்படியிருக்கிறார்கள் என்பதை உடனடியாக அறிந்து கொள்ள ஒரு தாயின் உள்ளம் அலை மோதுவது இயல்பேயல்லவா? சில நொடிகள் பொறுமையாக இருந்து முழுமையும் கேட்கலாமென்று நெஞ்சத்தை உறுதிப்படுத்திக் கொள்ள தாமரைநாச்சியார் முயன்றாள் என்றாலும், அந்த உறுதியையும் மீறிக்கொண்டு, "நான் பெற்ற கண்மணிகள் உயிரோடு இருக்கிறார்களா?"என்று அவள் வீரமலையைப் பார்த்து அலறிவிட்டாள். குன்றுடையான் அவளைத் தட்டிக் கொடுத்து, "பதற்றமடையக் கூடாது தாமரை. நல்ல செய்திகளைத்தான் நாம் கேட்டுக் கொண்டிருக்கிறோம்; கேட்கவும் போகிறோம்! அதற்குள் பதற்றமடைந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே! தாமரை! இந்த நல்ல செய்திக்கிடையே ஒரு துன்பச் செய்தி கேட்டாயே? அது என்ன சாதாரணமானதா? நம்முடைய குழந்தைகள் பொன்னர் - சங்கரைக் காப்பாற்ற அவைகளுக்குப் பதிலாகத் தனது குழந்தைகளைத் தலையூருக்கு எடுத்துக் கொண்டு போன ராக்கியண்ணனுக்கு நாம் எப்படி நன்றி சொல்லப் போகிறோம்! அவரும் அவர் மனைவியும் செய்த தியாகத்திற்கு ஈடு இணை இருக்க முடியுமா?" எனத் தழுதழுத்த குரலில் கூறினார்.

பெற்றோர்கள் குன்றுடையான் தாமரைநாச்சியாருக்கு முன்னால் - மாமன் சின்னமலைக்கொழுந்து அத்தை சிலம்பாயி இருவருக்கும் எதிரில் - மைத்துனன் வையம்பெருமானுக்கு அருசில் தாங்கள் இருந்தும் கூடத் தங்களை யார் என்று சொல்

லிக் கொள்ளாமல் இருக்கக் கூடிய ஒரு சூழ்நிலையை எண்ணிப் பொன்னரும் சங்கரும் பெருமூச்சு விட்டனர். தனது அண்ணன்மார் இருவரும் உயிருடன் இருப்பது கேட்டு அருக்காணித்தங்கமும் இன்பப் பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

அப்போது முத்தாயி-பவளாயி இருவரும் விட்ட பெருமூச்சு, வேதனை மூச்சாக இருந்தது. அவர்களிருவரும் தங்கள் இதயக் கோயிலின் மூல விக்கிரகங்களாக அமைத்து அன்பு மலர்களால் அர்ச்சித்துக் கொண்டிருக்கும் அந்த வீர இளஞ் சிங்கங்கள் தங்களை மணந்து மகிழ்விப்பார்கள் என எண்ணிக் களித்திருந்த வேளையில் பொன்னர் - சங்கர் உயிரோடிருக்கிறார்கள் என்ற செய்தி தீயாகச் சுட்டது. தாமரைநாச்சியார் தனது சபதத்தை நிறைவேற்றிக் கொள்ளவும் ஆரிச்சம்பட்டியில் தனது தாய் வீட்டு உறவு மீண்டும் செழித்துப் பூக்கவும் தனது பிள்ளைகள் பொன்னர்-சங்கருக்கே தங்களை மணமுடிக்குமாறு ஒற்றைக் காலில் நிற்கத்தான் போகிறாள் என்பதைப் புரிந்துகொண்டு அந்தக் கோகிலங்கள் குறுகிப் போய் நின்றன. தங்களின் கண்ணெதிரே நிற்கும் அந்தக் கட்டழகுக் காளைகள் தான் பொன்னர்-சங்கர் என அவர்கள் அறிந்திருப்பார்களானால் அச்சம் நாணம் மறந்து கூட ஓடிச் சென்று அவர்களின் கால்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் பொழிந்திருப்பார்கள்.

ஒருவேளை ராக்கியண்ணனின் மனைவி அழகுநாச்சியார் தனக்கேற்பட்ட விரக்தியிலும் வெறுப்பிலும் அந்தக் குழந்தைகளை என்ன செய்தாளோ? அவளே வளர்த்தாளா? அல்லது யாரிடமாவது தூக்கிக் கொடுத்து விட்டாளா? ராக்கியண்ணன் தன்னை ஏமாற்ற முயற்சித்ததை உணர்ந்து கொண்டு தலையூர்க் காளி மன்னனே உண்மையான பொன்னர்-சங்கரைக் கண்டுபிடித்துக் கொன்றிருந்தால்?

மலரின் இதழினும் மென்மையான பெண்மையின் இதயங்களில் இப்படியும் சில விரும்பத்தகாத கேள்விகள்! பிறகு அந்த இதயங்களே தங்களை சபித்துக் கொண்டன. ''சே! நாம் காதலித்தவர்களை மணந்து வாழ்வதற்காகக் குன்றுடையாரும் தாமரைநாச்சியாரும் தங்கள் அன்பு மகன்களை இழந்துவிட வேண்டுமா? எவ்வளவு சுயநலமான நினைவு இது!'' என்று வசைபாடிக் கொண்டன.

வீரமலை, அடுத்து என்ன சொல்லப் போகிறான் என்பது மாயவருக்குத் தெரியும் - பொன்னர் சங்கருக்குக் கொஞ்சம்

தெரியும் - மற்றவர்களுக்குத் தெரியாதே! அதனால் அவர்கள் வீரமலையின் உதடுகள் அசைவதையே இமை கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்தபடி வீர மலை கதையைத் தொடர்ந்தான்.

''ராக்கியண்ணன், தனது குழந்தைகளுடன் வெளியேறிவிட் டார். அவர் வெளியேறும்போது வீரமலையிடம், ''நீதான் எல் லாவற்றுக்கும் சாட்சியாக இருக்கிறாய்!'' என்று சொன்னதை வீரமலை சிந்தித்துப் பார்த்தான். அழகுநாச்சியாரிடம் விட் டுச் சென்றிருப்பது பொன்னர் - சங்கர் என்ற குழந்தைகளை - ராக்கியண்ணன் தூக்கிப் போயிருப்பது அவரது இரட்டைக் குழந்தைகளை - இந்த உண்மையை ஒரு நாள் வெளிப்படுத் தும்போது அதற்கு அவருக்கு சாட்சி வேண்டுமல்லவா; அந்த சாட்சியாகத்தான் தன்னை நியமித்துக் கொண்டிருக்கிறார் என் பது வீரமலைக்குத் தெளிவாயிற்று.

பலகணியை விட்டு நகர்ந்து திண்ணையிலிருந்து இறங்கி - திறந்திருக்கும் நிலைவாசல் கதவின் வழியாக உட்புறம் அடி யெடுத்து வைத்தான் வீரமலை! கட்டிலில் கிடந்த குழந்தை களின் கால்களில் வைத்த தலையை எடுக்காமல் அழகுநாச்சி யார் படுத்திருந்தார். குழந்தைகளிரண்டும் வீறிட்டு அழுது கொண்டிருந்தன. தன் வயிற்றில் பிறந்த மாணிக்கங்கள் இரண் டையும் பிரிந்த துயரத்தில் மயங்கிக் கிடக்கும் மாதாவின் செவியில் அந்தக் குழந்தைகளின் அழுகைச் சப்தம் எங்கே விழப் போகிறது என்று வீரமலையின் உள்ளத்தில் கேள்வியும் பதிலும் எதிரொலித்தன. கட்டிலின் அருகே சென்றான். அழகு நாச்சியார் முகம் அந்தக் குழந்தைகளின் பாதங்களை அழுத் திக் கொண்டிருந்தது. அவரது கண்களில் இருந்து வழிந்த நீர் அந்தப் பிஞ்சுப் பாதங்களை நனைத்திருந்தன.

''அம்மா!'' என்று மெல்லிய குரலில் வீரமலை கூப்பிட்டுப் பார்த்தான். பதில் இல்லை. மீண்டும் சற்று உரத்த குரலில், ''அம்மா!'' என்று அழைத்தான். அப்போதும் பதில் இல்லை. ''அம்மா! அம்மா!!'' என்று பதற்றத்துடன் கூவினான். பதிலே இல்லை. வீரமலை பயந்து விட்டான். என்ன செய்வதென்று புரியவில்லை. அழகுநாச்சியாரின் இரு பாதங்களையும் தனது கைகளால் பற்றிக் கொண்டு, ''அம்மா! என்னம்மா செய் கிறது?'' என்று நடுங்கும் குரலில் கேட்டான். கால்களைப் பற் றிய அவன் கரங்களே அவனுக்குப் பதில் அளித்து விட்டன. அழகு நாச்சியார் உடல் ஜில்லிட்டுப் போயிருந்தது. ''அய்யோ அம்மா'' என்று அலறிக் கொண்டு மூக்கில் சுவாசம் வரு

கிறதா என்று பார்த்தான். அது எப்போதோ நின்று போயிருந் தது. நாடி பிடித்துப் பார்த்தான். அவை அடங்கிப் போய் விட்டன. அழகுநாச்சியாருக்காக அழுவது போல அந்தக் குழந்தைகள் கதறிக் கொண்டிருந்தன. வீரமலை வெளியே ஓடி வந்தான். பக்கத்து தெருக்கள் - அங்குள்ள வீடுகளில் செய்தி யைச் சொன்னான். எல்லோரும் கேட்டனர், ''எப்படி திடீ ரென்று இறந்தார்'' என்று! அந்தக் கேள்விக்கு மட்டும் அவன் பதில் சொல்லவே இல்லை. ஊமையாகவே இருந்தான். ஆசான் வீட்டு வாசலில் ஊரே கூடிவிட்டது. ''அடடா! தங்கச் சிலைகள் மாதிரி இரண்டு குழந்தைகளை விட்டு விட்டுப் போய் விட்டாளே!'' என்று மூதாட்டிகள் அழுது புலம்பினர்.

மறுநாள் காலையில் தலையூரிலிருந்து திரும்பிய ஆசான் ராக்கியண்ணன், அழகுநாச்சியாரைப் பிணக்கோலத்தில் கண்டு அவர் அருகிலேயே நெடுநேரம் அமர்ந்திருந்தார். புயல் கடலில் உருவாகும்போது வானத்தில் மப்பும் மந்தாரமுமாகக் காணப்படும் பயங்கர மௌனத்தைப் போல அவர் உள்ளத் தில் உருவாகும் புயலுக்கு அறிகுறியாக அவரது முகம் விளங் கிற்று. வீரமலையைக் கூப்பிட்டார். என் குழந்தைகள் எங்கே என்றார். பத்திரமாக இருக்கின்றன எனச் சொல்லிப் பக்கத் தில் உள்ள அறையில் ஆடிய தொட்டில்களை வீரமலை காட் டினான். ராக்கியண்ணன் மெதுவாக எழுந்து சென்று அந்தக் குழந்தைகளைப் பார்த்தார். பெருமூச்சோடு வெளியே வந் தார். அழகுநாச்சியாரை அடக்கம் செய்வற்கான ஏற்பாடு களைக் கவனித்தார். பக்கத்தில் உள்ள காணியாளர்கள், காவல் ஆட்சியாளர்கள் எல்லோருக்கும் சொல்ல வேண்டு மென்று ஊர்ப் பெரியவர்கள் ராக்கியண்ணனிடம் கூறினார் கள். ''யாரும் தேவையில்லை. அழகுநாச்சியாரின் அடக்கம் எளிமையாகவே நடக்கட்டும்'' என்று ஆசான் பிடிவாதமாகச் சொல்லிவிட்டார். எல்லாம் முடிந்து விட்டது. குத்து விளக் காக ஆசான் வீட்டில் சுடர் விட்டுக் கொண்டிருந்த அழகுநாச் சியார் அணைந்து போய் ஐந்தாறு நாட்களாகி விட்டன.

அதன்பிறகு ஒருநாள் வீரமலை, தைரியத்தை வரவழைத்துக் கொண்டு - ஆசானிடம் சென்றான். ஆசான், பொன்னர் - சங்கர் இருவரையும் மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டிருந்தார். வீரமலையைப் பார்த்ததும், கலங்கியிருந்த தனது கண்களைத் துடைத்துக் கொண்டு, ''என்னப்பா?'' என்று அன்பொழுகக் கேட்டார். வீரமலை தடுமாறினான். இருந்தாலும் கேட்டு விடுவது என்ற முடிவோடு வந்திருந்தான்.

''உங்கள் குழந்தைகளை என்ன செய்தீர்கள்?''

ஆசான், வீரமலையை ஏற இறங்கப் பார்த்தார். மென்மையாகச் சிரித்தார்.

''இதோ இதுதான் என் குழந்தைகள்'' என்றார்.

''என்னைச் சாட்சியென்று சொல்லியிருக்கிறீர்கள்; அதை மறந்து விடாதீர்கள் இவை குன்றுடையாரின் குழந்தைகள்! நீங்கள் பெற்ற குழந்தைகளை எடுத்துப் போனீர்களே; என்ன செய்தீர்கள் என்று தான் கேட்கிறேன்'' அசட்டுத் துணிச்சலுடன் வீரமலை பேசினான்.

''அந்தக் குழந்தைகளைத் தலையூர்க்காளியிடம் கொடுத்து விட்டேன். அவனும் அந்தக் குழந்தைகள்தான் பொன்னர்-சங்கர் என நம்பி வாங்கிக் கொண்டான்.''

ஆசானின் தொனியில் இப்பொழுது அழுத்தம் இருந்தது. தியாகத்தின் பெருமிதம் இருந்தது.

''தலையூர் மன்னன் குழந்தைகளை என்ன செய்திருப்பான்?''

''செல்லாத்தாக் கவுண்டர் மாந்தியப்பன் எல்லோரும் அவனருகில்தானே இருந்தார்கள்! அவர்களின் ஆலோசனைப்படி அவைகளைக் கொன்றிருப்பான்!''

இதைச் சொல்லும்போது ஆசானின் தலை நிமிர்ந்தது. நெஞ்சு புடைத்தது. தன் மடியிலிருந்த குழந்தைகள் பொன்னர்-சங்கரைத் தூக்கிக் கொண்டு எழுந்தார். ''வீரமலை'' என்று திடமான குரலில் கூப்பிட்டார். அவன் அவரிடம் ஓடினான். ஆசான் வீரமலையைத் தனது பக்கத்தில் வரச்சொன்னார். அவன் பயபக்தியுடனும் துயரம் நிறைந்த மனத்துடனும் அவர் சொல்வதைக் கவனித்தான்.

''வீரமலை! உனக்கும் எனக்குமட்டுமே தெரிந்த இந்த உண்மை யாருக்குமே தெரியக் கூடாது. ஒரு காலம் வரும். அப்போது இந்த உண்மையை வெளியிட வேண்டிய அவசியம் வரும். அதுவரை இந்தக் குழந்தைகளுக்கு நீயும் நானும்தான் பாதுகாவலர்கள். அழகுநாச்சியாரிடம் நான் சொன்ன விளக்கங்களையெல்லாம் கேட்டிருக்கிறாய் - ஏன்; இந்தக் குழந்தைகளை நான் பாதுகாக்கிறேன் - எப்படி கடமைப்பட்டிருக்

கிறேன் என்பதையெல்லாம் நீயும் அறிவாய்! என்னுடைய அழகுநாச்சி ஒரு தியாகவல்லியாக இருந்து தான் பெற்ற செல்வங்களை என் கையில் ஒப்படைத்தாள். ஆனால் ஒரு தாய் நிலையில் இருந்து அவளால் அதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. குழி விழுந்து போன கண்களோடும் - ஒட்டிய வயிறோடும் - விலா எலும்பு தெரிய - எறும்பும் ஈயும் மொய்த்திட நிறைந்த புண்களோடும் - கையில் தொடவே அசிங்கமாக இருக்கிற ஒரு குழந்தையைக் கூட அதனைப் பெற்ற தாய் பறி கொடுக்க சம்மதிக்கமாட்டாள். அந்தத் தாய்மை உணர்வுதான் என் அழகு நாச்சியை என்னிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்துவிட்டது. நீங்காத சோகமாக என் மனதில் நிலைத்து விட்ட நிகழ்ச்சிக்குப் பரிகாரமாக நான் இந்தக் குழந்தைகளை வளர்த்து ஆளாக்க வேண்டும். அதற்கு நீதான் துணையிருக்க வேண்டும்''

ஆசானின் வேண்டுகோளை வீரமலை கட்டளையாக ஏற்றுக் கொண்டான். ஆசான் வீட்டிலும் பாசறையிலுமாகப் பொன்னர்-சங்கர் வளர்ந்து இன்றைக்குப் புலிக்குட்டிகளாக விளங்கு கிறார்கள்''

— என்று வீரமலை சொல்லி முடித்ததுதான் தாமதம்; தாமரைநாச்சியார், ''இப்போது என் பிள்ளைகள் எங்கேயிருக் கிறார்கள்?'' என்று; அங்கிருப்போர் யாரைப் பற்றியும் கவலைப்படாமல் கூச்சல் போட்டு விட்டாள்.

''அதைச் சொல்லத்தான் உங்களைத் தேடிக்கொண்டு நான் வந்தேன்'' என்று புன்னகையுடன் கூறியவாறு மாயவர் அவரது இருக்கையிலிருந்து எழுந்தார்.

''எவ்வளவு நேரம் என்னை சோதிப்பீர்கள்? நான்பெற்ற தங்கங்கள் எங்கேயென்று இப்போதே சொல்லுங்கள்!''

தாமரை கதறினாள்!

''இப்போதே சொல்லுகிறேன்! இதோ இருக்கிறார்கள்; எழு ஞாயிறுகளாய்! இணையற்ற வீரர்களாய்! இவர்கள்தான் பொன்னர் - சங்கர்!''

என்றுரைத்தபடியே மாயவர், பொன்னரை ஒரு கரத்திலும் சங்கரை ஒரு கரத்திலும் அணைத்துக் கொண்டு நின்றார். தாமரை நாச்சியாரும் குன்றுடையானும் போட்டி போட்டுக் கொண்டு

ஓடிச் சென்று பொன்னர் - சங்கரைக் கட்டித் தழுவிக் கொண்டனர். பெற்ற மனங்களின் ஊற்றுக் கண்ணிலேயிருந்து தடைபடாமல் பெருக்கெடுத்த பாச உணர்வின் இன்பக் குளிர்ச்சியில் மெய் மறந்த. பொன்னரும்-சங்கரும் தாய் தந்தையர் கால்களில் விழுந்து வணங்கினர். தங்கள் தண்மலர்களால் பாத பூஜை செய்தனர். ''பெற்றவுடன் பிரிந்துவிட்ட குழந்தைகளைப் பல ஆண்டுகள் கழித்துப் பார்த்த தாயின் உள்ளத்தைப் போல'' என்று, வேறு ஒரு நிகழ்ச்சிக்கு உவமை கூறலாம்! ஆனால் இப்போது அந்த உவமையே நிகழ்ச்சியாயிருக்கும்போது - எந்த உவமையால் வர்ணிக்க முடியும்? தாய் தந்தையரின் அன்பு வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த பொன்னர் சங்கரைச் சிரமப்பட்டு மீட்டு சின்னமலைக் கொழுந்தும் சிலம்பாயியும் உச்சிமோந்து வாழ்த்தினார்கள்.

''அண்ணா! இப்போது என்ன சொல்லுகிறாய்? உன் வாக்குறுதியை நீ நிறைவேற்ற வேண்டுமானால் என் தயவுதான் வேண்டும். உன் பெண்களை மீட்டுக் கொடுத்தால் இவர்களுக்கே மணமுடிப்பதாகச் சொன்னாயே; நான் சம்மதிக்காமல் எப்படி முடியுமண்ணா?''

என்று புளகாங்கிதத்தோடும் பெருமிதத்தோடும் தாமரைநாச்சியார், சின்னமலைக்கொழுந்தைப் பார்த்துக் கேட்டாள்.

சின்னமலைக்கொழுந்து, தனது சகோதரியின் எல்லையற்ற மகிழ்ச்சியைக் கண்டு குறுக்கே எதுவும் பேசாமல் நின்றபோது முத்தாயி பவளாயி இருவரும் ஏற்கனவே சிவந்திருந்த கன்னங்கள் மேலும் சிவக்க அங்கிருந்து நகர்ந்து திரைமறைவுக்குள் போய் நின்று கொண்டார்கள். அவர்கள் ஆணையிட்டும் கேட்காமல் விழிகள்மட்டும் வண்டுகளாய் கிளம்பி பொன்னர் - சங்கரை மொய்த்துக் கொண்டிருந்தன.

''என் தங்கை தாமரையின் சபதமே நிறைவேறட்டும். என் தங்கையிடம் நானே கேட்கிறேன். என் மகள்கள் முத்தாயியை பொன்னருக்கும், பவளாயியை சங்கருக்கும் கட்டிக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். போதுமா? இன்னும் கெஞ்ச வேண்டுமா?''

என்றார் சின்னமலைக்கொழுந்து.

''நீங்கள் கேட்காவிட்டாலும் சரி; அவர்கள் சம்மதிக்காவிட்டாலும் சரி; நம் எல்லோரையும் மீறி இந்தத் திருமணம்

நடந்தே தீரும். அதை யாரும் தடுக்க முடியாது!''

என்று சிரித்துக் கொண்டே சிலம்பாயி சொன்னாள்.

''என் இரண்டு பெண்களை உன் மகன்களுக்குக் கொடுக்கிறேன். நீ என் மகன் வையம்பெருமானுக்கு அருக்காணித் தங்கத்தைக் கொடுக்க வேண்டும்'' என்று குழைந்தார் சின்ன மலைக் கொழுந்து.

''என்ன இது; நான் ஒருவன் இருப்பதையே மறந்து விட்டு அண்ணனும் தங்கையும் சம்பந்தம் பேசி முடிக்கிறீர்கள்?'' என்று வெள்ளை உள்ளம் படைத்த குன்றுடையான் கேலியாகக் கேட்டான். தனது திருமணப் பேச்சை எடுத்ததும் அருக்காணித் தங்கம் முகத்தை ஒரு மாதிரி திருப்பிக் கொண்டு நாணத்துடன் முத்தாயி பவளாயி மறைந்திருக்கும் திரையைக் கடந்து உள்ளே ஒடிவிட்டாள்.

''இந்த விஷயங்கள் நாம் யாரும் பேசி முடிவு செய்வதல்ல! இதற்கெல்லாம் முடிவு சொல்ல வேண்டிய ஒரே ஒரு ஜீவன் எங்கள் ஆசான் ராக்கியண்ணன்தான்!''

இப்படிப் பொன்னர் சொன்னதும் அந்த இடமே மௌனத்தால் ஆக்கிரமிக்கப்பட்டு விட்டது. மௌனத்தைக் கலைத்துக் கொண்டு மாயவரின் சொற்கள் கிளம்பின.

''பல ஆண்டுகள் நாடுகள் பல சுற்றிவிட்டு மீண்டும் தலையூர் வந்த நான், குன்றுடையான் குடும்பத்தைப் பற்றி விசாரிக்கவே ராக்கியண்ணனைச் சந்தித்தேன். போகும் வழியிலேயே பொன்னர் சங்கரைப் பார்த்தேன். அப்போது இவர்கள்தான் பொன்னர் சங்கர் எனத் தெரியாது. ராக்கியண்ணன் எல்லா விபரங்களும் என்னிடம் சொன்னார். பொன்னர் சங்கரைப் பற்றிய உண்மையையும் குன்றுடையானிடம் தெரிவிக்க வேண்டினார். அவரும் இதோ இந்த வீரமலையும் கட்டிக்காத்த உண்மைகள் நெடுநாட்களுக்குப் பிறகு என் வாயிலாகவும், வீரமலையின் உதவியோடும் வெளிப்பட அனுமதி கொடுத்தவரே ராக்கியண்ணன்தான்! குன்றுடையானைப் பார்த்து பொன்னர் - சங்கர் பற்றிய உண்மையைக் கூறுவது மட்டுமல்ல; அவர்கள் இருவரையும் சோழ மன்னரிடமும் அழைத்துப் போக வேண்டுமென்பதே எனது நோக்கம். என் நோக்கம் நிறைவேற குன்றுடையான் ஒப்புதல் அளித்தால் - பொன்னர் சங்கர் விரும்பி

னால் நான் மிகுந்த மகிழ்ச்சி அடைவேன்!''

மாயவரின் வார்த்தைகள் அங்குள்ள அனைவருக்கும் தேன் துளிகளாக இனித்த போதிலும்; பொன்னர் - சங்கர் இருவர் மட்டும் குறுக்கிட்டு - ''எல்லாம் எங்கள் ஆசானின் விருப்பப் படியே நடக்க வேண்டும்'' என்று உறுதியாக மொழிந்தனர்.



# ஆசானின் சபதம்!

## 24

''ஆசானின் விருப்பத்தையும் அறிந்து அவர் ஒப்புதலையும் பெற்றுக் கொள்ள வேண்டுமென்பதில் எனக்கு கருத்து வேறு பாடே இல்லை. ஆசானிடம் இவ்வளவு மரியாதையும் நன்றி உணர்வும் கொண்டிருக்கிற பொன்னர் - சங்கர் இருவரின் நல்ல பண்பை நான் பாராட்டுகிறேன். உதவி செய்தவர்களுக்கு உபத்திரவம் கொடுப்பது - துணை நின்றவர்களுக்குத் துரோ கம் விளைவிப்பது - வளர்த்து ஆளாக்கியவர்களின் முதுகி லேயே குத்துவது என்பதே இன்றைக்குப் பலரது குணாதிசயங் கள் ஆகிவிட்டிருக்கும்போது அவர்களுக்கு மத்தியில் உப்பிட்ட வரை உள்ளளவும் நினைக்கின்ற உண்மையான நெஞ்சங் களும் இருக்கின்றன என்பது மனதுக்கு எவ்வளவு இதமாக இருக்கிறது! பொன்னர் - சங்கரின் இந்தப் புனித எண்ணத்தை நாம் அனைவரும் மதித்தே ஆக வேண்டும்'' என்று உணர்ச்சி மேலிட மாயவர் கூறினார்.

''அப்படியானால் இப்போதே இங்கிருந்து குன்றுடையார் மாரிக்கவுண்டன்பாளையத்துக்கு ஒரு ஓலையனுப்பி, ராக்கி யண்ணனை உடனே புறப்பட்டு வருமாறு செய்யலாமே!'' என்று சின்னமலைக்கொழுந்து யோசனை தெரிவித்தார்.

•

பொன்னரும் சங்கரும் அந்த யோசனையை ஏற்றுக்கொள்ள வில்லை. ''ஆசானால் வளர்க்கப்பட்ட நாங்களிருவரும் இங்கே இருந்துகொண்டு, எங்களைப் பார்க்க அவரை அழைப்பது எந்த வகையில் நியாயமாகும்? எங்களுக்கு தாயாக - தந்தை யாக - ஆசானாக விளங்கிடும் அந்தத் தியாகத் திருவிளக்கு இருக்குமிடம் நோக்கி நாங்கள் சென்று, நடந்தவைகளைச் சொல்லி, அவர் காலைப் பிடித்துக் கொண்டு ஆனந்தக் கண் ணீர் வடிக்கும் வரையில் எங்கள் பரபரப்பும் பதற்றமும் நிற் காது. எனவே எங்களுக்கு விடை கொடுங்கள்'' என்று அவர் கள் கேட்டனர்.

''என் பிள்ளைகள் சொல்வது தான் சரி! அவர்களை வாழ வைத்த தெய்வத்தை அவர்கள் சென்று வணங்கட்டும். அவர்களுடன் நானும் தாமரைநாச்சியும் போகிறோம். எங்கள் குடும்பத்துச் செல்வங்களைக் காப்பாற்றுவதற்காகத் தியாகத்திலேயே மிக உயர்ந்த தியாகத்தைச் செய்த ராக்கியண்ணனை நாங்களும் பார்க்கத் துடிக்கிறோம்'' என்றான் குன்றுடையான்.

''நீங்கள் வருவதைப் பற்றி ஒன்றுமில்லை. ஆனால் ஒரு முக்கியமான விஷயத்தை மறந்துவிடக் கூடாது. ராச்சாண்டார் மலையில் நடந்த போரில் தோற்றுவிட்டதையும் தலையூர்த் தளபதி திருமலை மாண்டு விட்டதையும் இந்நேரம் தலையூர்க் காளி மன்னன் அறிந்திருக்கக் கூடும். தலையூர்க் காளியை உசுப்பித் தூண்டிவிட செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் ஒற்றைக் காலில் நின்று கொண்டிருப்பார்கள். அவர்கள் பேச்சைக் கேட்டுத் தலையூர் மன்னன் ஆரிச்சம்பட்டியின் மீது பாய்வதற்குத் திட்டம் தீட்டக் கூடும். இப்படிப்பட்ட சமயத்தில் ஆரிச்சம்பட்டிக் குடும்பத்தினரை அவர்களது அரண்மனைக்கு அனுப்புவதும் நல்லதல்ல; அதே போல இங்கே சங்கரமலைக்கோட்டையிலும் அவர்களைத் தனியாக விட்டு விட்டு குன்றுடையாரும் தாமரைநாச்சியார் அம்மையாரும் மாரிக்கவுண்டன்பாளையம் வருவதும் எனக்குச் சரியாகப் படவில்லை'' என்று வீரமலை குறுக்கிட்டுச் சொன்னதும், அந்தக் கருத்தை யாரும் மறுத்துப் பேச முன்வரவில்லை.

''பொன்னர் - சங்கர் இருவரையும் அழைத்துக் கொண்டு நான் ராக்கியண்ணனிடம் போகிறேன். திருமணத்துக்கான ஒப்புதலை அவரிடம் பெறுவதோடு; பொன்னரையும் சங்கரையும் சோழ மன்னரிடம் அழைத்துப் போவது குறித்தும் ஆலோசனை கேட்கிறேன். ராக்கியண்ணனே இங்கு வந்து உங்களையெல்லாம் ஒரு சேரப் பார்க்க விரும்புவார் என்பது எனக்குத் தெரியும். எதற்கும் அவருக்குக் காட்ட வேண்டிய மரியாதைக்காக நானும் பொன்னர் - சங்கரும் இன்றே புறப்படுகிறோம். வீரமலை இங்கு துணையாக இருப்பது நல்லது என நினைக்கிறேன். வீரமலை விரும்பினால், குன்றுடையாரும் சம்மதித்தால் வீரமலையின் பொறுப்பில் சங்கரமலைக்கோட்டையின் பாதுகாப்புப் பகுதி ஒன்று இருக்கலாம். வலிமையிலும் திறமையிலும் அறிவுக்கூர்மையிலும் அதற்குப் பொருத்தமான வீரன் தான் வீரமலை என்பது என் கணிப்பு'' என்று விவரித்துக் கொண்டே மாயவர் குன்றுடையானை நோக்கினார். அதில் தனக்கு முழுச் சம்மதம் என்றார் குன்றுடையான். வீரமலை மட்டும் ஆசானிடம் சென்று அதன் பிறகு திரும்பி வரலாமே என எண்ணியதால் தயக்கம் காட்டினான்.

''உனக்காக ராக்கியண்ணனிடம் நான் பேசிக் கொள்கி றேன். சங்கரமலைக்கோட்டையில் நீ இருக்க வேண்டியது மிக அவசியமாகும்!'' என்று மாயவர் கூறிக் கொண்டே புறப்படத் தயாரானார். வீரமலையிடம் விடை பெற்றுக் கொள்ளும் சாக் கில் அவன் பக்கம் திரும்புவது போலத் திரும்பிக் கண்களை விட்டுத் தேடிப் பிடிக்கச் சொன்னார்கள் பொன்னரும் சங்க ரும்; முத்தாயி பவளாயியை!

அவர்கள் முகம் முழுமையாகத் தெரியாவிட்டாலும் அந்தத் திங்கள் முகங்கள் மறைந்திருந்த திரைச்சீலை மட்டும் மெல்ல அசைந்து அவர்கள் அங்கேதான் இருக்கிறார்கள் என்ற ரகசி யத்தைச் சொல்லிற்று. எங்களைத் தவிக்க விட்டுப் போகிறீர் களா? என்று அந்த விழிகள் கேட்டன. பிரிய முடியாமல் பிரி கிறோம் என்று ஏக்கத்துடன் விடையளித்தவாறு அங்கிருந்து மெல்ல விலகின பொன்னர் - சங்கரின் விழிகள்! தாயும் தந்தையும் தழுவி முத்தமீந்து விடைகொடுத்து வாழ்த்தியனுப்பி னர். சின்னமலைக்கொழுந்து சிலம்பாயி வையம்பெருமான் மூவரும் புன்னகை மலர நின்றனர். அருக்காணித் தங்கம் திரைமறைவில் நின்றவள் ஓடோடி வந்து, பொன்னர் - சங்கர் இருவரின் கைகளையும் பிடித்துக் கொண்டு, ''அண்ணா! அண்ணா! சீக்கிரம் வந்து விடுங்கள்!'' என்று பாசத்தைப் பொழிந்தாள்.

மாயவர், பொன்னர், சங்கர், மூவரையும் ஏற்றிக் கொண்ட குதிரைகள் சங்கர்மலைக்கோட்டையிலிருந்து புறப்பட்டன.

மாரிக்கவுண்டன்பாளையம் பாசறையில் சோலைப் பக்க மாக உலவிக் கொண்டிருந்த ராக்கியண்ணன் குதிரைகளின் குளம்படிச் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். அவர் பார்த்தவுடனேயே பொன்னரும் சங்கரும் தங்கள் குதிரைகளில் இருந்து கீழே குதித்து ஆசானுக்குத் தமது பணிவை உணர்த் தும் வகையில் குதிரைகளைப் பிடித்தவாறு நடந்து வந்தனர். மாயவர் மட்டும் ராக்கியண்ணன் உலவிக் கொண்டிருந்த இடம் வரையில் குதிரையில் வந்து மெல்ல இறங்கினார்.

ராக்கியண்ணன் பேசுவதற்கு இடம் வைக்காமலே மாயவர் முந்திக் கொண்டார். பொன்னர் - சங்கர் புரிந்த வீரச் செயல் களை மாயவர் சொல்லக்கேட்டு ராக்கியண்ணன் மகிழ்ச்சியில் திளைத்தார்.

தங்களை யாருடைய மக்கள் என்று தெரிவிக்காதது மட்டு

மல்ல; தன்னுடைய மக்களாகவே வளர்த்து ஆளாக்கிய ஆசானின் முகத்தைப் பார்த்த போது பொன்னர் - சங்கருக்கு அவர் மீது ஏற்பட்ட பக்தி எல்லை கடந்து நின்றது. அவர்கள் இருவரும், தான் எதிர்பார்த்தவாறு ஈடு இணையற்ற வீரத்திலகங்களாகத் தன் முன்னால் நிற்பது ஆசானுக்கும் மிகப் பெருமிதமாக இருந்தது. ராக்கியண்ணனின் அருகில் அங்கிருந்த கருங்கல்லால் ஆன ஒரு பலகையில் மாயவர் அமர்ந்து கொண்டார். பொன்னர் - சங்கர் இருவரையும் பார்த்து ஆசான் ஏதோ சைகை செய்திட, அதைப் புரிந்து கொண்ட அவர்கள் ஆளுக்கொரு பக்கம் விரைந்தார்கள். சில நொடிகளில் திரும்பி வந்த பொன்னரின் கையில் பழங்கள் நிறைந்த தட்டொன்று இருந்தது. சங்கரின் கையில் இரண்டு கிண்ணங்களில் பால் இருந்தது. அவர்கள் கொண்டு வந்ததை ஆசானுக்கும் மாயவருக்கும் நடுவில் - அந்தக் கருங்கல் பலகையில் வைத்தார்கள். பாலில் தேன் ஊற்றியிருக்கிறதா என்று ஆசான் கேட்கவே சங்கர் 'ஆம்' என்று தலையசைத்தான். மாயவர், ராக்கியண்ணனைப் பார்த்து, ''இத்தனை வயதுக்கும் உமது தேகக் கட்டு உடையாமல் வலிமையாக இருப்பதற்கு பாலில் தேனைக் கலந்து அருந்துவதும் ஒரு காரணமாக்கும்!'' எனக் கூறிச் சிரித்தார். ''அதிலென்ன சந்தேகம்? இளமை முதலே எனக்கு இந்தப் பழக்கம் உண்டு! நாம் கஷ்டப்பட்டு சேகரிக்க வேண்டிய மூலிகைகளைப் பசு மாடு உணவாகக் கொண்டு அதன் சத்திலிருந்து பால் தருகிறது! அதைப் போலவே விதவிதமான மலர்களில் காணப்படும் அருமருந்து போன்ற மதுவைக் கொண்டு வந்து தேனீக்கள் அடை கட்டுகின்றன! ஆகவே பாலும் தேனும் படாடோபமானதும் ஆடம்பரமானதுமான உணவாகத் தோன்றாவிட்டாலும் உடலுக்கு உரமேற்றி, அறிவுக்குத் தெளிவேற்ற மெத்தவும் பயன்படுகிறது என்பது மூத்தோர் கருத்து!'' என்று ராக்கியண்ணன் அளித்த பதில் மாயவருக்கு மன நிறைவைத் தந்தது.

''தேனும் பாலும் தரும் இனிப்பை விட இனிப்பான செய்தியொன்று சொல்லப் போகிறேன்'' என்றார் மாயவர். ராக்கியண்ணன் ஆவலுடன் கவனித்தார். மாயவர், ஒரு பழத்தை உரித்து சுளையை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். மற்றொரு சுளையை ராக்கியண்ணனிடம் கொடுத்தார். ராக்கியண்ணன் அந்தச் சுளையைத் தனது வாயில் மென்றவுடன் முகத்தைச் சுளித்தார். ஆசான் முகம் சுளிப்பதை மாயவர் மட்டுமல்லாமல் பொன்னர் - சங்கர் இருவரும்கூட கவனித்தார்கள்.

''என்ன; புளிக்கிறதா? நீங்கள் கொடுத்த பழம்தானே?'' என்றார் மாயவர் வினயமாக!

''நீங்கள் நல்ல சுளையை எடுத்துக் கொண்டு எனக்குப் புளிப்பான சுளையைக் கொடுத்திருக்கிறீர்கள்!'' என்று பதிலுக்குக் கேலி செய்தார் ஆசான்!

''பழச்சுளையில் ஒன்றும் புளிப்பும் இனிப்பும் இல்லை; ராக்கியண்ணரே! நான் சொல்லப் போகும் செய்திக்கு உம்மிடமிருந்து வரப்போகும் பதிலில்தான் இனிப்பு இருக்கிறதா; புளிப்பு இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்'' என்றார் மாயவர்!

என்ன சொல்லப் போகிறார் என்பதை ராக்கியண்ணன் கூர்ந்து கவனித்துக் கொண்டு அமர்ந்திருந்தார்.

''பொன்னர் - சங்கர் இருவரையும் சோழ மன்னரிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்த விரும்புகிறேன். அதற்கு உமது விருப்பத்தை அறிய வேண்டும் என்று பொன்னர் - சங்கர் திட்டவட்டமாகக் கூறிவிட்டனர்'' என்று மாயவர் சொல்லி நிறுத்துவதற்குள்; ''அதில் எனக்கு பூரண திருப்தி! சோழ மன்னரின் பேரன்புக்குப் பாத்திரமாகப் பொன்னர் - சங்கர் திகழ்ந்தால் தான் கொங்கு மக்களின் குலப்பெருமையையும், மரபின் மாண்பையும் கட்டிக் காத்து அந்த மக்களின் எதிர்கால நல்வாழ்வுக்கு உத்திரவாதமளிக்க முடியும். இன்று கொங்கு மண்டலத்தில் செல்லாத்தாக்கவுண்டரும் மாந்தியப்பனும் தங்கள் இஷ்டத்துக்கு தலையூர்க்காளி மன்னனை ஆட வைத்து நடத்துகிற கொடுமைகள் - கோணங்கிச் சேட்டைகள் - இவைகளை எல்லாம் குழிக்குள் போட்டு மூட வேண்டுமேயானால் பொன்னர் - சங்கர் இருவரும் வருங்காலத்தில் நடத்த இருக்கும் சாதனைகளுக்குச் சோழ மன்னரின் தூய துணை இருந்தே ஆக வேண்டும். நீங்கள் இவர்களை இன்றைக்கே வேண்டுமானாலும் சோழ மன்னரிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்துங்கள். அதற்காவன செய்ய நான் தயார்!'' என்று உற்சாகம் கரை புரள ராக்கியண்ணன் கூறினார்.

''இன்றைக்கே தேவையில்லை! எனக்கும் தலையூர் அரண்மனையில் வேறு பணிகள் காத்திருக்கின்றன. அவற்றை முடித்து விட்டுத்தான் சோழ மன்னரிடம் நான் சென்றிட இயலும்! எப்பொழுது அழைத்துச் செல்வது என்பது முக்கியமல்ல! அழைத்துச் செல்லலாம் என்பதற்கு ஆசானிடம் அனுமதி

கிடைத்து விட்டதே; அதுவே போதும்!'' என்றார் மாயவர் முகப் பொலிவுடன்!

ராக்கியண்ணன், பால் கிண்ணத்தையெடுத்து மாயவரிடம் கொடுத்து, ''ஆறுவதற்குள் அருந்துங்கள்!'' என்றார்.

''பால் இருக்கட்டும்; சாப்பிடுகிறேன்! ராக்கியண்ணரே; நான் இப்போது இன்பத்துப் பாலைப் பற்றிப் பேசப் போகிறேன்'' எனக் கண் சிமிட்டினார் மாயவர்!

''ஆதாரத்துடன் பேச வேண்டுமானால் திருக்குறள் சுவடி இருக்கிறது. எடுத்து வரச் சொல்லட்டுமா?'' என்று கேலியைத் தொடர்ந்தார் ஆசான்!

''தேவையில்லை! நான் இப்போது இன்பத்துப் பாலைப் பற்றி விரிவுரையும் விளக்கவுரையும் ஆற்றப் போவதில்லை - நமக்குள்ளே பேசித் தீர்க்க வேண்டிய ஒரு விவகாரம். அவ்வளவுதான்!'' என்றவாறு மாயவர், பொன்னர் சங்கரைப் பார்த்தார்.

இன்பத்துப் பால் என்றதும் ஏதோ விரசமான செய்தி சொல்லப் போகிறார் என நினைத்து விட்ட ராக்கியண்ணன், பொன்னரையும் சங்கரையும் ஒதுங்கிச் செல்லுமாறு கண்களால் கட்டளையிட்டார். அவர்களும் ஒருக்கணம் தயங்கி நின்று, பிறகு அங்கிருந்து நகர ஆரம்பித்தனர். அதைப் பார்த்து விட்ட மாயவர்; ''அடேடே! விஷயமே அவர்களைப் பற்றியது தானே! அவர்களும் இருக்கட்டும்'' என்றார்.

மின்னல் வேகத்தில் மாறிய ஆசானின் முகம், மீண்டும் பழைய நிலைக்கு வந்தது. பொன்னர் சங்கரை அங்கேயே இருக்குமாறு பணித்து விட்டு, மாயவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை மிக்க பரபரப்புடன் கவனித்தார்.

''குன்றுடையான் திருமணத்தின் போது தாமரைநாச்சியார் செய்த சபதப்படி சின்னமலைக்கொழுந்தின் பெண்கள் இருவரையும் பொன்னரும் சங்கரும் மணந்து கொள்ள வேண்டும். ராச்சாண்டார்மலையில் அடைக்கப்பட்ட மகள்களை வடுவித்தால் அந்த மகள்களையே பொன்னர் - சங்கருக்கு மணம் முடிப்பதாக சின்னமலைக் கொழுந்து அறிவித்த வாக்குறுதிப்படியும் அந்த மணம் நடந்திட வேண்டும். அந்த மணவிழாவுக்கு உமது ஒப்புதல் தேவை.''

இதை மாயவர் சொன்னவுடன் ராக்கியண்ணன் திடுமென எழுந்து நின்றார். வானத்தை நோக்கினார். வலுவான கை கொண்டு கழுத்தைப் பிடித்து விட்டுக் கொண்டார்.

''தாமரைநாச்சியாரின் சபதப்படி பொன்னரும் சங்கரும் சின்னமலைக் கொழுந்தின் பெண்களை மணக்கத்தான் வேண் டும். அதில் எனக்கு எந்தவிதமான மறுப்பும் இல்லை'' என்று ஆசான் சற்று உரத்த குரலில் சொன்னது பொன்னர் - சங்கருக்கும் மாயவருக்கும் சிறிது வித்தியாசமாகத் தோன்றி னாலும் - ''மறுப்பு இல்லை'' என்று திட்டவட்டமாகச் சொன் னது கேட்டுப் பூரித்துப் போனார்கள். அந்தப் பூரிப்புக்கிடையே ராக்கியண்ணனின் வார்த்தைகள் ஒலித்தன!

''ஆனால் ஒன்று!'' என்று ராக்கியண்ணன் அழுத்தம் திருத் தமாகக் கத்திப் பேசினார்.

பூரிப்பால் மயங்கி நின்ற பொன்னர், சங்கர், மாயவர் மூவ ரும் திடுக்கிட்டு, ''என்ன ஆனால்?'' என விழிகளை அகல விரித்துப் பார்த்தனர்.

''எனது சபதம் ஒன்று இருக்கிறது! அதை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு பொன்னர் சங்கருக்கு இருக்கிறது.''

இவ்வாறு ஆசான் ஆவேசமாக முழங்கினார்.

''என்ன சபதம்?'' என்று மாயவர் அவசரப்பட்டார். ராக்கி யண்ணனின் தொனியில் ஏற்றம் குறைந்தது! அவரது தொண்டை அடைத்துக் கொண்டது போல ஒரு கரகரப்பு! ''என்ன சப தம்? என்பதைக் கேட்பதற்கு முன் அதை நிறைவேற்றி வைப்ப தாக பொன்னரும் சங்கரும் எனக்கு சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்! கொடுப்பீர்களா?'' என்று அவர்களைப் பார்த்து ஆசான் கேட்டார். பொன்னரும் சங்கரும் ஓடோடி வந்து ஆசான் முன் பணிவுடன் குனிந்தார்கள். அவரது காலைத் தொட்டுக் கும்பிட்டார்கள். நீட்டப்பட்டிருந்த அவரது கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடுத்தார்கள். அதன்பிறகு ஆசான் மிகவும் தாழ்ந்த குரலில் பேச ஆரம்பித்தார்.

''என் குலக்கொழுந்துகளைக் காப்பாற்ற வேண்டுமென்பதற் காக என் குடும்பத்துக் கொழுந்துகளைக் கொண்டு போய் தலையூர்க்காளியிடம் கொடுத்தேன். அவன் அவைகளைக் கொன்றானா; கொல்லாமல் விட்டானா என்பது எனக்குத்

தெரியாது. ஒன்று மட்டும் நிச்சயம். சகுனியை விட மோசமான குணம் கொண்ட செல்லாத்தாக் கவுண்டரும் அவர் மகன் மாந்தியப்பனும் குன்றுடையானின் வமிசம் வளரக் கூடாது என்பதற்காக அந்தக் குழந்தைகளைக் கொல்லத்தான் சொல்லியிருப்பார்கள் என்பது திண்ணம். என் குழந்தைகள் என்ன ஆயின என்பது பற்றி எனக்குச் செய்தி கிடைக்காமலே போய்விட்டது. அவைகள் இருப்பதும் ஒன்றுதான் இறப்பதும் ஒன்றுதான். கொல்லப்பட்டிருந்தால் இந்நேரம் அவைகள் புதைக்கப்பட்ட இடம் புல் முளைத்து அதுவும் மாறிப் போய் அடையாளம் தெரியாமல் போயிருக்கும். கொல்லப்படாவிட்டாலும் அவைகளை ஒழுங்காக வளர்த்து உயர் தனி வீரர்களாக ஆக்கியிருக்க மாட்டார்கள். அதனால் என் குழந்தைகள் இறந்து விட்டதாகவே முடிவு செய்து கொண்டேன். அந்த முடிவோடுதான் தலையூரிலிருந்து மாரிக்கவுண்டன் பாளையத்துக்குப் புறப்பட்டேன். என் மனைவி அழகுநாச்சியாரை எப்படி சமாதானப்படுத்தப் போகிறோம் என்று கவலைப்பட்டுக் கொண்டே வந்தேன். அந்தக் கவலையை எனக்கு வைக்காமல் அதைவிடப் பெருங்கவலையைத் தந்து விட்டு அவள் என்னை விட்டே போய் விட்டாள். அழகுநாச்சியாருக்கு நடத்த வேண்டிய ஈமச் சடங்குகளை நடத்தி முடித்தேன். இரவு வீட்டுக்குள்ளே தூக்கமின்றித் துடித்தேன். இதோ இந்தப் பொன்னர் சங்கர், குழந்தைகளாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அழகு நாச்சியைப் பற்றிய நினைவு, ஏதோ ஒரு ஆவேசத்தை என் இதயத்தில் புயலாக வடிவெடுக்கச் செய்தது. ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து குழந்தைகள் பொன்னர் சங்கரைத் தூக்கிக் கொண்டு, என் மனைவியை அடக்கம் செய்த இடத்திற்கு ஓடினேன். குழந்தைகளைக் கையில் வைத்துக் கொண்டு அந்த மயான அமைதியைக் கிழிக்குமளவுக்கு பலங்கொண்ட மட்டும் கத்தினேன். அது கத்தல் அல்ல; சபதம்! இதோ என் பொன்னரும் சங்கரும் நிறைவேற்றித் தரவேண்டிய சபதம்!''

ஆசான் கண்கள் கனலாக மாறி நின்றார்.

''என்ன சபதம்? சொல்லுங்கள் நாங்கள் நிறைவேற்றித் தருகிறோம்!''

பொன்னரும் சங்கரும் எக்காள முழக்கமிட்டனர்.

''அழகுநாச்சியாரே! என் அன்பே! ஆருயிரே! உன் குழந்தைகளை நான் கொன்று விட்டதாக என் மீது கோபம் கொள்ளாதேயம்மா! நமது குழந்தைகளை நாட்டுக்காக அர்ப்பணித்

திருக்கிறோம் - நமது குலப்பெருமை ஓங்குவதற்காக தியாகம் செய்திருக்கிறோம். நமது குழந்தைகளைக் கொல்வதற்கு யார் காரணமாக இருந்தார்களோ; அவர்களைப் பழிவாங்குவதற்கு இதோ இந்தக் குழந்தைகளை பயன்படுத்துவேன்! இந்தக் குழந் தைகள் வாழத்தானே நமது குழந்தைகளை இழந்திருக்கிறோம்! இன்று முதல் இவை நமது குழந்தைகள்! இந்தக் குழந்தை களை வளர்ப்பேன் - வீரர்களாக வளர்ப்பேன் - வீணர்களை வீழ்த்த இவர்களையே பயன்படுத்துவேன்! இது சத்தியம்! சத்தியம்! என்னுடைய இந்தச் சபதம் நிறைவேறும் வரையில் இந்தக் குழந்தைகள் பொன்னரும் சங்கரும் பிரும்மச்சாரிகளாகவே வாழ்வார்கள்! இதுவும் சத்தியம்! சத்தியம்!''

ராக்கியண்ணன் மாயவரையும், பொன்னர் சங்கரையும் பார்த்து, ''இதுதான் நான் செய்த சபதம்! இதைத்தான் பொன் னர் சங்கர் எனக்கு நிறைவேற்றித் தர வேண்டும் - அதுவரை யில் இவர்கள் பிரமச்சாரிகளாகவே இருக்கவேண்டும்!'' என்றார்.



# நியாயம் ஏற்படாத நிலையில்...! 25

வீரமலை யூகித்துச் சொன்னபடியே வளநாட்டுப் படை ஆரிச்சம்பட்டி அரண்மனையை வளைத்து முற்றுகையிட்டு விட்டது. ஆரிச்சம்பட்டியிலிருந்து பெரும்பாலான வீரர்கள் ஏற்கனவே ராச்சாண்டார்மலைக்குச் சென்று முத்தாயி பவளா யியை மீட்டுக் கொண்டு சங்கரமலைக்கோட்டைக்குப் போயிருந்த காரணத்தால் வளநாட்டுப்படையை நீண்ட நேரம் எதிர்த்து நிற்க முடியாமல் ஆரிச்சம்பட்டி திணறியது. மாந்தியப்பனின் தலைமையில் வளநாட்டுப் பெரும் படையை ஆரிச்சம்பட்டிக்கு அனுப்பி விட்டு செல்லாத்தாக் கவுண்டர் தலையூருக்கு விரைந்து காளி மன்னனிடம் ராச்சாண்டார் மலையில் தலையூர்த் தளபதி களில் ஒருவனான திருமலை கொல்லப்பட்டதைக் கூறி ஆரிச்சம் பட்டியின் மீது காளிக்குக் கடுங்கோபம் ஏற்படுமளவுக்குத் தூபம் போட்டார்.

"காளி மன்னா! உனக்கு நான் புரவலாக இருந்து என்ன பயன்? அடிமை போல் இருக்க வேண்டிய ஆரிச்சம்பட்டியான் வீட்டுப் பெண்களை என் மகன் மாந்தியப்பனுக்கு மணம் முடிக்க முடியாமல் என் மதிப்பு மரியாதை அனைத்தையும் இழந்து நிற்கிறேன். அந்த சின்ன மலைக்கொழுந்தின் தங்கை தாமரை நாச்சியை மாந்தியப்பனுக்குத் தருவதாகச் சொல்லி, மணவிழாத் தருணத்தில் நம் அனைவரின் மானத்தையும் பறித் தவர்கள்தான் ஆரிச்சம்பட்டிக்காரர்கள்! எப்படியும் அந்த வீட்டில் பெண் எடுக்க வேண்டும் - இரத்தம் சிந்தாமல் ஆரிச்சம் பட்டியையும் நமது எல்லைக்குள் இணைத்துக் கொள்ள வேண் டும் - என்ற எனது திட்டத்தை நிறைவேற்ற எத்தனையோ முயற்சிகள் எடுத்தும் பயனில்லாமல் போய்விட்ட காரணத் தால்தான் அந்தப் பெண்களை சிறையெடுத்து ராச்சாண்டார் மலையில் வைக்க நேரிட்டது. அதைக் கேள்விப்பட்ட சின்ன மலைக்கொழுந்து நேராக உன்னிடம் வந்து முறையிட்டிருக்க வேண்டும். நீ அவனுக்காக மனமிரங்கி அந்தப் பெண்களை

விடுவிப்பதற்கு நிபந்தனையாக இருவரையும் மாந்தியப்பனுக்கு மணமுடிக்க சின்னமலைக்கொழுந்தின் சம்மதத்தைப் பெற்றிருக்க வேண்டும். அப்படித் தான் நடக்குமென்று நான் எதிர் பார்த்ததற்கு மாறாக அந்தச் சின்ன மலைக்கொழுந்து ராச்சாண்டார்மலையின் மீது படையெடுத்து நமது படைத் தளபதியையும் கொன்றுவிட்டான் என்றால்; எனக்கு மட்டுமல்ல - வெற்றியன்றி வேறொன்றையும் இதுவரை அறியாத தலையூர் அரசுக்கு மிகப் பெரிய தலைக் குனிவு!''

செல்லாத்தாக் கவுண்டரின் வார்த்தைகள் தலையூர்க் காளியின் உரமிக்க நெஞ்சத்தைக் குன்றிடச் செய்தது எனினும்; அவன் பொறுமையிழக்காமல் அவரைப் பார்த்துக் கேட்டான்.

''ஆரிச்சம்பட்டிக்காரர்கள் ராச்சாண்டார் மலையில் நமது வீரர்களை வெற்றி கொண்டதற்குக் காரணம்; சின்னமலைக் கொழுந்தின் வீரமோ, திறமையோ அல்ல என்றும் - இரண்டு இளம் வீரர்களின் ஆற்றலின் விளைவு தான் நமக்கேற்பட்ட தோல்வியென்றும் நான் கேள்விப்பட்டேனே; அது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

செல்லாத்தாக்கவுண்டர், தலையூர்க்காளியின் இந்தக் கேள்விக்குத் தெளிவாகப் பதில் சொல்ல இயலவில்லை. காரணம்; அவருக்கும் அந்த வீரவாலிபர்களைப் பற்றிய விபரம் எதுவும் தெரியாது. ஆனால் அந்த வாலிபர்களின் சாகசத்தினால்தான் ராச்சாண்டார்மலைத் தோல்வி ஏற்பட்டது என்பது மட்டும் அவருக்குத் தெரிந்திருந்தது.

''அந்தப் பொடியன்களை யாரென்றே எனக்கும் தெரியவில்லை! போரில் புலிகளாக இருக்கிறார்கள் என்று ராச்சாண்டார்மலையில் காயம்பட்டுக்கிடக்கும் நமது துணைத் தளபதிகளில் ஒருவனே என்னிடம் சொன்னான்!'' என்று செல்லாத்தாக் கவுண்டர் நெஞ்செரிச்சலுடன் கூறினார்.

''ஆரிச்சம்பட்டி வெற்றிக்குத் திடீரெனத் தோள் கொடுத்த அந்தத் தீரமிக்க வீரர்கள் இருவரும் யாராகத்தான் இருப்பார்கள்?'' என்று வியப்புக்குறியை விழிகளில் பதித்து உலவிய தலையூர்க் காளியின் காதுகளில் ''அவர்கள் யார் என்று நான் கூறுகிறேன்'' என்ற சொற்கள் விழுந்திடவே அவன் மட்டுமல்ல; செல்லாத்தாக் கவுண்டரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்.

இதழோரம் புன்னகையை நெளியவிட்டுக் கொண்டு மாய வர், அவர்களை நோக்கி மெல்ல நடந்து வந்தார்.

''உங்களைத் தேடிக் கொண்டேயிருக்கிறேன்; எங்கு போய் விட்டீர்கள்?'' எனச் சற்றே ஆறுதல் பெற்றவனாக தலையூர்க் காளி ஆவலுடன் கேட்டான்.

''உன்னிடம் சொல்லிவிட்டுத்தானே புறப்பட்டேன். அண்டை அருகாமையில் உள்ள ஆட்சியாளர்கள் எப்படியிருக்கிறார்கள்; அவர்களிடமெல்லாம் நமது தலையூர் அரசின் அணுகுமுறைகள் எவ்வாறு அமைதல் வேண்டும்; என்ற விபரங்களை ஆங்காங்கு சென்று அறிந்து வரத்தான் சென்றிருந்தேன். எனது பழைய நண்பர், ஆசான் ராக்கியண்ணனைச் சந்தித்தேன். குன்றுடை யான் குடும்பத்தினரைப் பார்த்தேன், பேசினேன். அந்தச் சமயம் நான் எதிர்பாராதவிதமாக - இப்போது நீயும் செல் லாத்தாக் கவுண்டரும் எந்த இளைஞர்களைப்பற்றி விவா தித்துக் கொண்டிருக்கிறீர்களோ; அந்த இளைஞர்களும் அங்கு வந்து விட்டார்கள்!''

இதைக் கூறிக் கொண்டு மாயவர், காளி மன்னனின் தோளில் தட்டிக் கொடுத்தார். அப்படித் தட்டியது பொறுமையாக இரு - பொங்கியெழுந்து விடாதே - என்று அவனை அமைதிப் படுத்துவது போல இருந்தது.

''அந்த இளைஞர்கள்தான் யார் என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன். ராச்சாண்டார்மலையில் நமது தளபதி திருமலை யையே வீழ்த்துகிற அளவுக்கு ஆற்றல் பெற்ற வீரர்கள் யாராக இருக்க முடியும்?''

காளி மன்னன் மாயவரிடம் உடனே பதிலை எதிர்பார்த் தான். மாயவர் அவன் எதிர்பார்த்தவாறு பதில் கூறியிருப் பாரோ என்னவோ; அதற்குள் செல்லாத்தாக் கவுண்டர் குறுக் கிட்டு விட்டார்.

''தலையூர்த் தளபதி மட்டும் கொல்லப்படவில்லை. ராச் சாண்டார்மலையை இழந்து விட்டதால் தலையூரின் மானமும் கொல்லப்பட்டு விட்டது! அதற்குத் துணை நின்ற அந்தத் துடுக்கு மிக்கப் பொடியன்களை யாரென்று கண்டுபிடித்தேயாக வேண்டும்.''

செல்லாத்தாக் கவுண்டரின் பேச்சில் எரிச்சல் எரிமலை குமுறியதை மாயவர் உணர்ந்து கொண்டார்.

''கவுண்டர் அவர்களே; காளி மன்னன் இயல்பாகவே நல்ல உள்ளம் படைத்தவன் என்பது எனக்குத் தெரியும். ஓங்கி உயர்ந்த மலையிலிருந்து கீழே விழும் அருவியாக இருந்தால் நீங்கள் கலக்கும் விஷத்தை அடித்துக் கொண்டு சென்று விடும். இவனோ; தேங்கி நிற்கும் திருக்குளமாக இருக்கிறான் - அதனால் நீங்கள் சிறிதளவு விஷம் தூவினாலும், அது பரவிப் பாழாக்கி விடுகிறது இவனது உள்ளத்தை!''

மின்னல் போன்ற மாயவரின் தாக்குதல் செல்லாத்தாக் கவுண்டரை உலுக்கிவிட்டது. காளிமன்னனும் சிறிது அதிர்ச்சி அடைந்தான்.

''மாயவரே! தலையூருக்கு நீர் அமைச்சர் மட்டுமே! நான் மன்னனுக்குப் புரவலர் என்பதை மறந்து விடவேண்டாம். மமதை உமது கண்களை மறைத்தால் பிறகு நான் பொல்லாதவனாக மாறி விடுவேன்'' எனச் சீறினார் செல்லாத்தாக் கவுண்டர்.

''நீர் என்னை பயமுறுத்துவது எப்படியிருக்கிறதென்றால் - பாம்பு, கடிப்பேன் என்று சொல்வது போலிருக்கிறது!''

''சொல்லி விட்டு கடிக்காது பாம்பு! அதன் வாலை மிதித்தாலே போதும்; நச்சுப்பல் உடலில் ஏறும் - பிறகு உச்சி முதல் உள்ளங்கால் வரையில் விஷமாக மாறும்!''

''எப்படியோ நீர் யார் என்பதை நீரே முன்வந்து ஒத்துக் கொண்டதற்கு நன்றி!''

''இதற்கு மேல் என் வாய் பேசாது; வாள்தான் பேசும்!'' என்று உரத்த குரலில் கத்திக் கொண்டே செல்லாத்தாக் கவுண்டர் வாளை உருவினார். அதற்குள் காளி மன்னன் பாய்ந்து சென்று அவரது கையைப் பிடித்துக் கொண்டு,

''தயவுசெய்து அமைதியாக இருங்களேன். நமது தளபதி திருமலையைக் கொன்று ரச்சாண்டார்மலையில் வெற்றிக் கொடி நாட்டி விட்டுச் சென்ற அந்தப் பொடியன்கள் யார் என்று மாயவர் சொல்லட்டுமே! அதற்குள் ஏன் அவசரப்பட வேண்டும்? எதற்காகப் பேச்சில் அபசுரம் கிளம்ப வேண்டும்?'' என்று திடமான தொனியில் கூறி, அங்கு தோன்ற இருந்த

அமளிக்குத் தொடக்கத்திலேயே முற்றுப்புள்ளி வைத்தான்.

''அந்த இளம் வீரர்கள் யார் என்று சொல்லுகிறேன்'' என்று மாயவர் தனது தாடியைத் தடவிக் கொண்டபோது, காளி மன்னனின் ஆவல் முகத்தில் ததும்பி வழிந்தது.

''ஆசான் ராக்கியண்ணனின் மாணவர்கள் அவர்கள்!''

''ஆசானின் மாணவர்களா?''

''ஆமாம் - காளி! ஆசானின் மாணவர்கள் மட்டுமல்ல; அவரது வளர்ப்புப் பிள்ளைகள் கூட!''

''அப்படியா? ராக்கியண்ணர் நமது சொற்கேட்டு, நம்முடைய அரசுக்கு விசுவாசமாக இருப்பவராயிற்றே! அவரது வளர்ப்புப் பிள்ளைகள் நமது தளபதியைக் கொன்றார்கள் என்பது வேடிக் கையாக இருக்கிறதே!''

''காளி மன்னா! சுமார் இருபது வருடங்களுக்கு முன்னால் கூட; இதோ இந்தச் செல்லாத்தாக் கவுண்டரின் யோசனைப் படி ஆசான் ராக்கியண்ணன் உனக்கு மாபெரும் உதவி யொன்றைச் செய்துள்ளார் அல்லவா?''

''எந்த உதவியைச் சொல்லுகிறீர்கள்?''

''அது மறந்து விட்டதா உனக்கு? மறக்கக் கூடாத ஒன்றா யிற்றே அது! அதாவது; குன்றுடையானுக்குப் பிறந்த குழந்தை களால் உன் உயிருக்கு ஆபத்து ஏற்படுமென்று அம்மன் சொன்னதாகப் பூசாரி மீது ஆவேசம் வந்து சொல்ல - அத னால் அந்தக் குழந்தைகளை கொன்று விடத் திட்டம் தீட்டி னீர்கள் - அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை ராக்கி யண்ணன் அவரே முன்வந்து ஏற்றுக் கொண்டார்...''

''இதெல்லாம் தங்களுக்கு யார் சொன்னது?''

''உண்மைகள் தங்கம் மாதிரி!. ஓராயிரம் ஈராயிரம் அடி மண்ணுக்குக் கீழே மறைந்து கிடக்கும். என்றாவது ஒரு நாள் சுரங்கங்கள் அமையும். தங்கத் துகள்கள் வெளியே வருவது மாதிரி உண்மைகளும் வெளியே வந்து ஒளி உமிழும்.''

''உவமை போதும்! உண்மையை வெளிப்படுத்தியது யார்?''

''ராக்கியண்ணனே தான்!''

''ராக்கியண்ணனா?''

''ஆச்சரியமாயிருக்கிறதா காளி? அந்தக் குழந்தைகளைக் குன்றுடையான் குடும்பத்திலேயிருந்து பிரித்து உன்னிடம் கொண்டு வந்து கொடுத்த அதே ராக்கியண்ணன் எதற்காகத் தனது குற்றத்தை ஒப்புக் கொண்டார் என்று ஆச்சரியமாகத்தானிருக்கும் உனக்கு! ஆனால் ஒன்று; அவர் அந்தக் குற்றத்தைச் செய்யாத காரணத்தால்தான் என்னிடம் உண்மையை விரித்து வைத்து விட்டார்!''

''என்ன சொல்கிறீர்கள்? ராக்கியண்ணர் அந்தக் காரியத் தைச் செய்யவில்லையா? அந்த இரட்டைக் குழந்தைகளை அவர் என் கையில் ஒப்படைத்தார். அவர் அந்தக் குற்றம் செய்யவில்லையென்று எப்படிக் கூறுகிறீர்கள்?''

''குழந்தைகள் உன் கையிலே ஒப்படைக்கப்பட்டது உண்மை! ஆனால் அந்தக் குழந்தைகள் குன்றுடையானின் குழந்தைகள் அல்ல!''

''என்ன? என்ன மாயவரே சொல்லுகிறீர்கள்?''

''மாயத்தீவு - அதில் ஒரு மர்ம மனிதன் - அவன் மந்திரத்தில் மாங்காயைத் தேங்காயாக்கிக் காட்டுகிறான் என்கிற கதை மாதிரி இருக்கிறதே என்று நினைக்காதே! நடந்ததைத்தான் நான் சொல்லுகிறேன். உதயமாகும் செங்கதிருக்குக் கருந்திரை யிட்டு உலகத்தை இருட்டாக்கி விடமுடியாது. அதைப் போலத் தான் விடிய வேண்டிய நேரம் வந்து, வெள்ளியும் முளைத்து விட்டது. எனவேதான் உனக்கும் தலையூருக்கும் நான் ஆற்றிட வேண்டிய கடமையை உணர்ந்து செயல்படத் துடிக்கிறேன். நல்லவைகள் கசக்கும்; நானறிவேன்! ஆனால் அதுவேதான் நலிவு போக்கும் மருந்து என அருந்தி நலம்பெற வழி காண வேண்டும்!''

''வளர்த்த வேண்டாம்; சொல்லுங்கள்! அவை குன்றுடை யானின் குழந்தைகள் அல்ல என்றால்; பிறகு யாருடைய குழந் தைகள்?''

''ஆசான் ராக்கியண்ணனின் குழந்தைகள்! அவரது குழந்தை களைத்தான் நீ கொன்றிருக்கிறாய். குன்றுடையான் பெற்ற குல

மாணிக்கங்களைக் காப்பாற்றுவதற்காக - தனது குழந்தைகளைத் தியாகம் செய்த உத்தமனின் காலடிகளைக் காலமெல்லாம் பூஜை செய்யலாம்.''

''சரி! சரி! ஆசான் அவ்வளவு பெரிய மனிதர் - என்னை ஏமாற்றியிருக்கிறார். அவருக்குப் புகழாரம் சூட்டிக் கொண்டிருக்கிறீர்கள். அப்படியானால் அந்தக் குன்றுடையானின் குழந்தைகள் என்ன ஆனார்கள்?''

''அவர்கள்தான் ராச்சாண்டார் மலையில் தங்களது திண்தோள் வீரத்தைக் காட்டித் தளபதி திருமலையையும் தீர்த்துக் கட்டிய பொன்னர் - சங்கர் எனும் புலிக் குட்டிகள்!''

''அவர்கள்தானா?''

''ஆமாம் காளி; அவர்களேதான்! ஆசான் ராக்கியண்ணனின் பாசறையில் பயின்றவர்கள்! இப்போதும் சொல்கிறேன், அவர்களை நீ எதிரிகளாகக் கருதவே தேவையில்லை.''

''ஓகோ, குத்தவரும் கொம்பு மாடுகளைக் கும்பிட்டுத் தொழுது, குடலைக் கிழித்துக் கொண்டு சாவு என்கிறீர்களா?''

தலையூர்க்காளி பொறுமையிழந்து இந்தக் கேள்வியைக் கேட்டவுடன்; சமயம் பார்த்திருந்த செல்லாத்தாக் கவுண்டர் மாயவர் மீது வார்த்தைக் கணைகளைத் தொடுத்தார்.

''ஏதோ மாபெரும் சதியொன்று பின்னப்பட்டிருக்கிறது. இந்த சதிக்கு மாயவரும் உடந்தையோ எனச் சந்தேகப்படும் அளவுக்கு அவரது பேச்சு இருக்கிறது. குன்றுடையானின் குழந்தைகளால் வர இருக்கும் ஆபத்தைத் தவிர்த்துக் கொள்ள, அம்பாள் இட்ட கட்டளைப்படி நடக்க வேண்டிய நிலைமை நமக்கு! அதற்குத் துணை நிற்பதாக நடித்த ராக்கியண்ணன் கடைந்தெடுத்த துரோகமே செய்திருக்கிறார். இந்தச் சூழலில் அவரால் தயாரிக்கப்பட்ட அந்தப் பொன்னரும் - சங்கரும் நமக்கு விரோதிகள் அல்ல என்பது ஒரு மாய்மாலம்! அதை நம்புவது பைத்தியக்காரத்தனம்!''

''செல்லாத்தாக் கவுண்டர் அவர்களே! உமது சொந்தக்காரர்களை அழிப்பதற்கும் - உமது ஆட்சி எல்லைக்கு உரிமை கொண்டாட யாரும் முளைத்து விடக் கூடாது என்பதற்கும் - குன்றுடையானிடமிருந்து பறித்துக்கொண்ட வளநாடு ஆட்சிக்கு

அவனுடைய வாரிசுகள் யாரும் வந்துவிடக் கூடாது என்பதற்கும் - நீர் போட்ட திட்டமே, ''அம்பாள் அருள்வாக்கு'' என்பது எனக்கு நன்றாகவே தெரியும். உமது மாயையில் சிக்கி, நீர் சொல்வதை அப்படியே நம்பிவிடும் காளி மன்னனும் குழந்தைகளைக் கொல்லுமாறு ராக்கியண்ணனைப் பணித்து விட்டான். ராக்கியண்ணன் உம்மைப் போல சுயநல வாதியல்ல! கொங்குச் சமுதாயத்தின் வீர காவியங்கள் பொன்னர் - சங்கர் எனும் மனித உருவங்களில் வந்திருக்கின்றன என்பதை முன்கூட்டி உணர்ந்தவர் போல - அவர்களைக் காப்பாற்ற தனது குழந்தைகளைத் தியாகம் செய்திருக்கிறார்.''

மாயவரின் விளக்கத்தைத் தலையூர்க் காளியினால் நம்பவும் முடியவில்லை - தன்னிடம் பொய்யுரைத்துக் குன்றுடையானின் குழந்தைகளைக் காப்பாற்றி தனக்கு எதிரான அணியில் நிறுத்தியுள்ள ராக்கியண்ணனின் செயலைப் பொறுத்துக் கொள்ளவும் முடியவில்லை. அதற்கும் மேலாக ராக்கியண்ணனுக்காக, மாயவர் பரிந்து பேசுவதைச் சகிக்க முடியாமல் அவன் கொதித்தான். காளியின் உதடுகள் மிகச் சூடான சொற்களை உச்சரித்தன.

''துரோகம்! துரோகம்! என்னைச் சுற்றிலும் துரோகம்!'' என்று காளி மன்னன் கத்தினான்.

அவனைச் சுற்றியிருக்கும் துரோகம், செல்லாத்தாக் கவுண்டர்தானே; என்று எண்ணியவாறு பரிதாபமாகச் சிரித்தார் மாயவர்.

காளி மன்னன், தனது கையைத் தட்டி, ''யாரங்கே?'' என்று அதட்டினான். பாதுகாப்பு வீரர்கள் இருவர் ஓடோடி வந்து வணங்கி நின்றனர். ''தலைமைத் தளபதியைக் கூப்பிடு'' என்று ஆணையிட்டான். பறந்து வந்தது போல் படைத் தளபதி பராக்கிரமன், முகத்தில் பாதியை மீசைகள் ஆக்கிரமித்துக் கொண்ட நிலையில் மன்னனுக்கு எதிரே வந்து, தலை குனிந்து வணக்கம் தெரிவித்தான். காளி மன்னன் பராக்கிரமனிடம் ஆணை பிறப்பித்தான்.

''நமது படையில் ஒரு பகுதி உடனடியாக ஆரிச்சம்பட்டிக்குப் போகட்டும். அங்கே கோட்டையை முற்றுகையிட்டிருக்கும் மாந்தியப்பனுக்கு உதவியாக நமது படை செயல்படட்டும். இன்னொரு பகுதியை இப்போதே குடையூருக்கு அனுப்புக. குடையூரில் குன்றுடையானின் அரண்மனையும் அவனது படை

யும் நாளை காலைக்குள் நமது காலடியில் விழ வேண்டும். இந்தப் படையெடுப்பின் நோக்கம் ஆரிச்சம்பட்டி, ராச்சாண்டார் மலைப்பகுதி முழுமையும் செல்லாத்தாக் கவுண்டரின் வளநாட்டு ஆட்சிக்குக் கீழே வரப்பட வேண்டும் என்பதாகும். சின்னமலைக்கொழுந்துக்குப் பக்கபலமாகவும் பாதுகாப்பாகவும் இருந்திடும் குன்றுடையானின் கொட்டத்தையும் அடக்க வேண்டும். அதற்காகத்தான் அவனது குடையூரைக் கைப்பற்ற வேண்டுமென்று கட்டளை பிறப்பிக்கிறேன். மூன்றாவதாக நமது படையில் ஒரு பகுதியினர், திறமைமிக்கத் துணைத் தளபதிகளின் கண்காணிப்பில் சங்கரமலைக் கோட்டைக்குப் புறப்பட வேண்டும். அங்கேயிருக்கும் குன்றுடையான் குடும்பத்தார், சின்னமலைக் கொழுந்தின் குடும்பத்தார் யாரையும் பாக்கியில்லாமல் உடனடியாகக் கைது செய்ய வேண்டும்.''

கட்டளைகளைப் பிறப்பிக்கும்போது கூட செல்லாத்தாக் கவுண்டரால் சும்மாயிருக்க முடியவில்லை.

''அங்கேதான் அந்தப் பொடியன்கள் பொன்னர் - சங்கர் இருப்பார்கள். அவர்களை உயிரோடு கைது செய்யுங்கள். அல்லது களத்திலேயே வீர சுவர்க்கத்துக்கு அனுப்பி வையுங்கள்'' என்று குறுக்கே ஒரு உத்திரவு போட்டார். மாயவரால் மௌனமாக இருக்க முடியவில்லை. தலையூரான் தணல் மீது நிற்கிறான் என்பதையும், இந்த நேரத்தில் அவன் சினம் தணித்திட எடுக்கும் முயற்சிகள் பலனளிக்காது என்பதையும் அவர் புரிந்து கொண்டிருந்தாலும் கூட, தனது கடமையைச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் காளி மன்னனின் அருகே சென்று அவன் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

''அவசரப்பட்டு முடிவுகளை மேற்கொள்ளாதே! பொன்னரும் - சங்கரும் தலையூரின் எதிரிகளாக வருவார்கள் என்று யாருடைய சுயநலத்துக்காகவோ சொல்லப்பட்ட பொய்யுரையை நம்பி நீ செயல்படுகிறாய்! உனது செயல்களின் மூலம்தான் அவர்கள் இனி உனக்கு எதிரிகளாக மாறுவார்களே தவிர, அம்மன் அருள்வாக்கின்படி அவர்கள் பிறக்கும்போதே உனது எதிரிகள் அல்ல! அம்மன் பெயரைச் சொல்லி, பூசாரி செம்பகுலனைக் கையில் போட்டுக் கொண்டு, இதோ நிற்கும் இந்த செல்லாத்தாக் கவுண்டர் செய்த ஏமாற்று வேலை அது என்பதே என் கருத்து!''

மாயவர் சொல்லி முடிக்கவில்லை; அதற்குள் ஆவேசம்

வந்தவனைப் போல காளி மன்னன் அலறிவிட்டான்.

''செல்லாத்தாக் கவுண்டரை இழித்துரைக்க நான் யாரையும் அனுமதிக்கமாட்டேன்!''

இது போதாதா செல்லாத்தாக் கவுண்டருக்கு? இப்படி யொரு வாய்ப்பைத்தானே அவர் எதிர்பார்ப்பார். மளமள வென்று அவர் பேசலானார்.

''பெரிய மன்னர் என்னை இந்த அரசுக்கும், காளி மன்ன னுக்கும் புரவலராக நியமித்த காலம் தொட்டு அணுவளவும் பிரியாமல் அருகிருந்து ஒரு தாயைப் போல் பரிவு காட்டி வருகிறேன் நான். மந்திரி மாயவரோ, நாட்டுப்பற்று சிறிது கூட இல்லாமல், கோபதாபங்களைக் காரணம் காட்டி பல ஆண்டுக்காலம் ஊர் சுற்றி விட்டு மீண்டும் பதவிக்காக இங்கு வந்தவர். ஏதோ பெரியவர், மேதை என்பதற்காக காளி மன் னன் மரியாதை காட்டியதையும், நானும் இவரை ஒரு பொருட் டாக மதித்து இவரது கருத்துக்களுக்கு இதுவரை மறுப்புத் தெரிவிக்காமல் இருந்ததையும் நமது பலவீனம் என்றே நினைத்து விட்டார். எனக்கென்ன வந்தது? எனக்கேது சுயநலம்? என் னுடைய வளநாடு, அரண்மனை, கோட்டை, அனைத்துமே தலையூருக்கு தாரை வார்க்கப்பட வேண்டுமென்றால், அதை உடனே செய்து விட்டு ஒரு துறவி போலக் காவியுடை அணிந்து, தலையூர் அரண்மனையில் ஒரு மூலையில் கிடந்து ஆண்ட வனைச் சேவித்துக் கொண்டிருக்க நான் தயார்! என்னைப் பார்த்து மாயவர் மனந்துணிந்து குறை சொல்லவும், அதை நான் கேட்டுக் கொண்டிருக்கவுமான ஒரு காலமும் வந்து விட்டதே! அதுவும் மன்னனுக்கு நேராக என் கௌரவம் குப்பைத் தொட்டியில் வீசியெறியப்படுகிறதென்றால்; இதை யெல்லாம் கேட்டுக்கொண்டு இனியும் நான் உயிர் வாழ வேண்டுமா?''

உருக்கத்தை மிக அதிகமாகவே கலந்து நடித்த செல்லாத்தாக் கவுண்டரின் நாடகத்தில் தலையூர்க்காளி மேலும் மயங்கினான்.

''எதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டும்? மாயவர் யோச னையைக் கேட்டு நான் போரை நிறுத்தப் போவதில்லை! படைத்தளபதி பராக்கிரமனுக்கு நான் பிறப்பித்த ஆணைகள் திரும்பப் பெறக்கூடியவைகள் அல்ல! குடையூர் கோட்டை கொத்தளங்கள் நமது வசமாகும். ஆரிச்சம்பட்டி இனி மேல் நமது கொடி நிழலில்! சங்கரமலையில் உள்ள குன்றுடையான்

குடும்பமும், ஆரிச்சம்பட்டி குடும்பமும் தலையூர் சிறைச்சாலை யில் தவமிருக்க வேண்டும்!''

தலையூர்க்காளி முழக்கம் செய்தான்.

''ராக்கியண்ணனை வெளியே விட்டு வைப்பதும் நல்ல தல்லவே?'' செல்லாத்தாக் கவுண்டர், தனது தூபத்தில் ஒரு பிடி சாம்பிராணி அள்ளிப் போட்டார். அது நன்றாகப் புகைந்தது.

''ஆமாம்! ஆசான் என்று பார்க்காமல் அந்த துரோகி ராக்கி யண்ணனையும் கைது செய்க!'' என்று கூச்சலிட்டான் தலையூர்க் காளி!''

''நான் சொல்வதைக் கேள், காளி!'' என்றார் மாயவர்.

''முடியாது! பராக்கிரமா! ஆணையை நிறைவேற்று!'' என்று கூறிவிட்டுக் காளி மன்னன் அந்த இடத்தை விட்டு அகன்றான். ''இனி எனக்கு இங்கு வேலையில்லை'' என்று சொல்லிய வாறு மாயவர் அங்கிருந்து வெளியேறுவதை காளி பார்த்தான் என்றாலும் அதற்காக அவன் கவலைப்பட்டு அதிர்ச்சி அடைய வில்லை.






வேகமாக வீசப்பட்ட கத்திகள் மின்னல் வெட்டுக்கள் நிறைந்த காரிருளைக் கிழித்துக் கொண்டு செல்வது போல மூன்று வெண்புரவிகள் சங்கரமலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. முதலாவதாகவும் நடுநாயகமாகவும் ராக்கியண்ணன் ஒரு குதிரையில் அமர்ந்திருந்தார். இருபுறமும் இரு குதிரைகளில் பொன்னரும் சங்கரும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

அந்த இருவர் உள்ளத்திலும் தங்களிருவரிடமும் ராக்கியண்ணன் கையடித்துப் பெற்றுக் கொண்ட சூளுரை நிகழ்ச்சியே சுழன்று கொண்டிருந்தது. தங்களின் ஆசானுக்கு மிஞ்சி எதுவுமில்லையென்கிற அளவுக்கு ராக்கியண்ணனிடம் அவர்களுக்கு முழுமையான அன்பும் பற்றும் இருந்த போதிலும் தங்களை வாழ்க்கைத் துணைவர்களாக அடைந்து இல்வாழ்வு தொடங்குவதற்கு காத்துக் கொண்டிருக்கும் முத்தாயி பவளாயி இருவரும் இந்த திடீர் திருப்பமான செய்தி கேட்டால் எப்படி அதிர்ந்து போவார்கள் என எண்ணிக் கவலைப் பட்டார்கள்.

தன்னிடம் எவ்வளவு நன்றியுணர்வுடன் கூடிய விசுவாசம் வைத்திருந்தால் உயிராக மதிக்கும் காதலிகளை மறந்து திருமணத்தைத் துறந்து தனது சபதம் நிறைவேறும் வரையில் பிரம்மச்சாரிகளாகவே வாழ்வதாக சத்தியம் செய்து கொடுத்திருப்பார்கள் என எண்ணியவாறு ராக்கியண்ணன் குதிரையில் பறந்து கொண்டிருந்தார்.

ஆசானைச் சந்திக்கச் சென்றவர்கள் இன்னும் திரும்பி வரவில்லையே; மாயவராவது ஏதாவது செய்தியனுப்பியிருப்பார் - அவரிடமிருந்தும் எந்தச் செய்தியும் வரவில்லையே என்று குன்றுடையானும், தாமரைநாச்சியாரும் வீரமலையிடம் கவலைப்பட்டுக் கொண்டிருந்தனர்.

அவர்களது திகைப்பையும் வேதனையையும் அதிகப்படுத்து கிற அளவுக்கு ஆரிச்சம்பட்டியை வளநாட்டுப் படை வீரர்கள் மாந்தியப்பன் தலைமையில் முற்றுகையிட்டு முன்னேறிக் கொண் டிருக்கிறார்கள் என்ற செய்தியும் கிடைத்து விட்டது. சங்கர மலையில் உள்ள ஆரிச்சம்பட்டி வீரர்களை அழைத்துக் கொண்டு வீரமலையே அந்த முற்றுகையைத் தகர்ப்பதற்குச் செல்லலாமா என்ற யோசனை தெரிவிக்கப்பட்டு அதற்கு வீரமலையும் தயாராகிவிட்டான் என்றாலும்; அவன் சங்கரமலைக்கோட் டையை விட்டு அப்போது புறப்படுவது என்பது அவ்வளவு சரியல்ல என்ற அச்சமும் உடனடியாகத் தெரிவிக்கப்பட்டு அந்தத் திட்டம் கைவிடப்பட்டு விட்டது.

''போர்முனையில் ஆரிச்சம்பட்டி'' - ''போனவர்கள் இன் னும் திரும்பவில்லை'' - இத்தகைய குழப்பச் சூழலில் குன் றுடையான் குடும்பத்தினரும், சின்னமலைக்கொழுந்து குடும் பத்தினரும் சிக்கியிருந்தபோது அந்தக் குதிரைகள் மூன்றின் குளம்படிச் சப்தம் உரக்க ஒலிக்கவே அரண்மனைக்குள்ளிருந் தோர் செவிகள் அனைத்தும் ஒலி வந்த திக்கில் திரும்பின.

பொன்னர் - சங்கர் ஆசானுடன் வருகிறார்கள் எனக் கேட்டு அனைவரும் ஆறுதல் பெருமூச்சு விட்டுக் கொண்ட னர். கோட்டைக்குள் நுழைந்து அரண்மனைப் பகுதியைக் கடந்து வந்த குதிரைகளில் இருந்து மூவரும் இறங்கினார்கள். முதலில் இறங்கிய ஆசானிடம் குன்றுடையான் ஓடிச் சென்று அவரை இறுகத் தழுவிக் கொள்ளவே ஆசானின் கண்கள் கலங்கின. இருவரும் சிறிது நேரம் பேச முடியாமல் தவித்த னர். வீரமலையும் மாயவரும் சொன்ன - கடந்த கால நிகழ்ச் சிகள், அங்கிருந்தோர் அனைவரின் மனத்திரையில் மீண்டும் ஒரு முறை ஓடின. அந்த நினைவோடு அவர்கள் ஆசானை ஒரு புதிய மதிப்புடன் பார்த்தனர். ஏற்கனவே கொண்டிருந்த மரி யாதையை விட மேலும் மரியாதை பெருகி எல்லைக்கோட் டையே தாண்டிவிட்டது என்றே கூறலாம். அவரை ஒரு வீரர், ஆசான், துணிச்சல்மிக்க மனிதர், எல்லோராலும் பாராட்டப் படக் கூடியவர் என்றெண்ணித் தரப்பட்ட மரியாதை இப் போது பல மடங்கு உயர்ந்ததற்குக் காரணம் அவரது தன்ன லங்கருதாத தியாக மனப்பான்மையே ஆகும்.

''எங்கள் குடும்பத்துக்கு நீங்கள் செய்துள்ள உதவிக்கு ஏழேழு பிறவிகள் எடுத்தாலும் எங்களால் ஈடு செய்ய முடியாது!'' என்று தாமரைநாச்சியார் தழுதழுத்த குரலில் கூறிக் கொண்டே கையெடுத்துக் கும்பிட்டு நின்றாள். தனது மகள் அருக்காணி

தங்கத்தை அருகழைத்து ராக்கியண்ணனின் காலில் விழுந்து வணங்கச் சொன்னாள். அவளை ஆசான் வாழ்த்தி நிமிர்வதற் குள் முத்தாயி பவளாயி இருவரும் வந்து அவரது காலைத் தொட்டு வணங்கினர். கேள்விக்குறியுடன் திரும்பிய ஆசா னுக்கு உடனடியாக விளக்கமளித்து விட்டான் குன்றுடையான்.

''இந்தப் பெண்கள்தான் மருமகள்களாக வரப் போகிற வர்கள். இதைப்பற்றிப் பேச நானும் தாமரையும் மாரிக்கவுண் டன்பாளையம் பாசறைக்கே வருவதற்கு இருந்தோம்''.

ஆசான், குன்றுடையானின் பேச்சை முடிக்க விடாமல் குறுக்கிட்டு; ''அதற்குத்தான் நானே இவர்களுடன் வந்து விட் டேன்! பொன்னர் - சங்கரிடமும் மாயவரிடமும் எல்லா விபரங்களும் கூறியிருக்கிறேன். மாயவர் அவசரமாகத் தலை யூர் போக வேண்டுமெனக் கூறிப் போய்விட்டார். இல்லை யேல் அவரே வந்து உங்களிடம் பேசியிருப்பார்'' என்றார்.

''என்னதான் நாங்கள் அப்பா அம்மாவாக இருந்தாலும் பெற்றோர்கள் என்ற பெயரைத் தவிர வேறென்ன பெருமை எங்களுக்கிருக்கிறது? நீங்கள்தானே பொன்னர் - சங்கருக்கு தாய், தந்தை, ஆசான் தெய்வம் எல்லாமே! அதனால் அவர் கள் திருமணத்துக்கு உங்கள் சம்மதம் மிக மிக முக்கியமல்லவா?''

குன்றுடையானின் பேச்சில் உருக்கமிருந்தது. உண்மையு மிருந்தது. சின்னமலைக்கொழுந்து, சிலம்பாயி, வையம்பெரு மான், வீரமலை ஆகியோர் ராக்கியண்ணன் என்ன சொல்லப் போகிறார் என்று மெத்த மரியாதையுடன் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். தாமரையும் அருக்காணித் தங்க மும்; ஆசான் பொன்னர் - சங்கரை அருகழைத்து அவர்கள் தலையைத் தடவிக் கொடுத்து சிரித்த முகத்துடன் ஆசீர்வாதம் வழங்குவார் என்று எதிர்பார்த்தனர். முத்தாயி பவளாயி இரு வரின் கால் பெருவிரல்கள் பூமியில் புள்ளியில்லாக் கோலம் போட்டுக் கொண்டிருந்தன. மணவிழாவுக்கான ஒப்புதல் வார்த்தைகள் ஆசானிடமிருந்து வெளிப்படும் போது அவற் றைத் தமது காதுகள் மட்டும் கேட்டால் போதுமென்று கண் களை நிலத்தில் பதித்திருந்தனர் அவர்கள்!

''பொன்னர் - சங்கரைக் காப்பாற்றுவதற்காக என் புதல்வர் களையும், மனைவியையும் இழந்து விட்டவன் நான்! என்மீது நீங்கள் எல்லாம் கொண்டுள்ள மதிப்பு எள்முனையளவும் குறையாது என்ற நம்பிக்கையுடன், கூறுகிறேன்; என் குழந்தை

களைக் கொன்றவர், கொல்வதற்குக் காரணமாக இருந்தவர் பழிவாங்கப்பட வேண்டும். அந்தப் பணியை இந்தப் பொன்னர் - சங்கர்தான் நிறைவேற்ற வேண்டும். அதுவரையில் இவர்கள் பிரம்மச்சாரிகளாகவே இருக்க வேண்டும். என் மனைவியின் பிணத்தின் முன் நின்று இவ்வாறு சபதம் செய்தவன் நான்! என் சபதத்தை நிறைவேற்றுவதாகவும் அது வரையில் பிரம்மச்சாரியாக இருப்பதாகவும் பொன்னர் - சங்கர் என்னிடம் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்கள். அதற்கு மாயவரும் சாட்சி!'' என்று ஆசான் சொன்னவுடன் பொன்னரும் - சங்கரும் ஒருவரையொருவர் முந்திக் கொண்டு, அவரது முழங்காலைப் பற்றிக் கொண்டு, ''அய்யனே! இதற்கு சாட்சி எதற்காக? நாங்கள் செய்த சத்தியத்தை இல்லையென்று மறுக்கவா போகிறோம்?'' என்று பதற்றமுடன் கேட்டனர்.

### ''பிரம்மச்சாரியாக வாழ்வது!''

இந்தச் சொற்றொடர் அங்கிருந்தோர் அனைவரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது எனினும், முத்தாயி பவளாயி இருவரையும் திகைப்புத் தீயிலேயே தூக்கி எறிந்து கருக்கத் தொடங்கியது. நொடிக்கு ஒரு திருப்பமாக இன்பமும் துன்பமும் அவர்களின் இதயத்தில் மாறி மாறி வலம் வருவது ஏன் என்று கலங்கித் துடித்தனர். தங்களை மணக்கவே பிறந்தவர்கள், தங்களின் அன்பு நெஞ்சத்தை அள்ளிக் கொண்டவர்கள் பிரம்மச்சாரிகளாக வாழ்வது என்பதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாமல் திணறினர். ஆசானின் சபதம் எப்போது நிறைவேறப் போகிறது? அதை நிறைவேற்றும் பணியில் என்ன விளைவுகள் ஏற்படுமோ? இந்தக் கேள்விகளும் முத்தாயி பவளாயி இருவரையும் திக்குமுக்காடச் செய்தன. அம்மனுக்கு எடுத்த கரக விழாவிலேயே சூறைக்காற்றில் ஆற்றுடன் போயிருக்கக் கூடாதா - அல்லது அந்த முதலைக்கோ மலைப்பாம்புக்கோ இரையாகியிருக்கக்கூடாதா என்று வேதனைக் கண்ணீர் வடித்தனர். ஆசானின் காலில் விழுந்து, அந்தக் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''எங்களுக்காக இரக்கம் காட்டுங்கள்'' என்று கெஞ்ச வேண்டும் போல் இருந்தது. ஆனால் பேச நா எழாமல் உடலும் அசைவற்றுப் போனது போல அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டனர்.

சின்னமலைக்கொழுந்தின் முகத்தை சிலம்பாயி தாங்க முடியாத வருத்தமுடன் பார்த்தாள். தன் மனைவியின் மனம் படும் பாட்டை சின்னமலைக்கொழுந்து புரிந்து கொண்டார். ஆகையால் ஆசானிடம் பேசிப் பார்த்தால் பயன் கிடைக்குமென்ற

நம்பிக்கையுடன் அவர் பக்கத்தில் சென்றார்.

''ஆசான் அவர்களே! தாங்கள் எடுத்துள்ள சபதம் தேவையானது. நிறைவேற்றப்பட வேண்டியது. அதற்கு என்னாலான உதவியைக் கூடச் செய்யத் தயாராக இருக்கிறேன்''.

இந்த வார்த்தைகள் ஆசானின் இதயத்தில் சிறிதளவு சினத்தை எழுப்பியிருக்க வேண்டும். அதனால் அவர் முகம் கறுத்தது. பதிலிலும் கடுமையிருந்தது.

''என்னால் கூட முடியும்! உமது உதவியைக் கூடப் பெற முடியும்! ஆனால் எனது சபதம்; என்னால் வளர்க்கப்பட்ட என்பிள்ளைகள் பொன்னரும் சங்கருமே என் சபதத்தை நிறைவேற்ற வேண்டும் என்பது என் விருப்பம்!''

சின்னமலைக்கொழுந்து ஆசானின் சினத்தையறிந்து தனது கோரிக்கையை விட்டு விடத் துணியவில்லை. தனது பெண்களின் வாழ்க்கை பாலைவனமாகி விடக் கூடாது என்பதில் அவருக்கிருந்த அக்கறையினால் - வராத புன்னகையைத் தானாக வந்தது போல் வரவழைத்துக் கொண்டு மீண்டும் பேச்சைத் தொடர்ந்தார்.

''ராச்சாண்டார்மலையில் சிறைவைக்கப்பட்ட என் பெண்களை மீட்டுத் தந்தால் அவர்களைப் பொன்னர் - சங்கருக்கு மண முடிப்பதாக நான் தந்த வாக்குறுதி - இதோ என் தங்கை தாமரைநாச்சியார் திருமணக்கோலத்தில் தன் மகன்களுக்கு என் பெண்களைத் திருமணம் முடிப்பதாக செய்திட்ட சபதம் - இரண்டுமே இணைந்து நிறைவேறுவதற்கான ஏற்பாடுகளை நாங்கள் கவனிக்கும்போது இப்படியொரு எதிர்பாராத தடையென்றால் எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்?''

சின்னமலைக்கொழுந்து பேச்சை முடிக்க முடியாமல் விம்மியழுதே விட்டார். அந்த இடத்தில் மிக ஆழமான ஒரு மௌனம்! ஆசான் என்ன பதில் சொல்வது என்று புரியாமல் அங்குமிங்கும் உலவினார். பிறகு பொன்னர் - சங்கரிடம் வந்து நின்றார். தனது உயர்ந்த தோள்களை மேலும் உயர்த்திக் குலுக்கினார். உரம் வாய்ந்த கரங்களைத் தூக்கித் தனது அன்பு மாணவர்களின் தோள்களை அழுத்திப் பிடித்துக் கொண்டார். மெல்லச் சிரித்தார்.

''இதற்கு நீங்கள் தானப்பா பதில் சொல்ல வேண்டும்!'' என்றார்.

சபதத்தை நிறைவேற்றுவதற்காகப் பிரம்மச்சாரிகளாக இருக்க முடியாது. அது தேவையுமில்லை என்று பொன்னரும் சங்கரும் கூறிவிட மாட்டார்களா என முத்தாயியும் பவளாயியும் ஒருக் கணம் துடித்தார்கள் என்றாலும்;

அய்யோ! அப்படிக் கூறிவிட்டால் அவர்கள் வாக்குறுதி தவறிய வாய்மையற்றவர்கள் என்ற பழிக்கு ஆளாகி விடுவார்களே; வேண்டாம் வேண்டாம் அவர்கள் தங்களுக்குக் கிடைக்காவிட்டாலும் உலகத்தின்முன் உறுதியற்ற உள்ளம் படைத்தவர்கள் என்ற அவப்பெயர் அவர்களை அணுக வேண்டாம்!' என்று தங்கள் நெஞ்சத்து உதடுகளால் பிரார்த்தனை செய்து கொண்டார்கள்.

ஆசான், தங்களது தோளைப் பிடித்துக் கொண்டு ''நீங்களே பதில் சொல்லுங்களப்பா'' என்றுரைத்தவுடன் பொன்னர்-சங்கர் இருவரும் சின்ன மலைக்கொழுந்திடம் வந்தனர்.

''எங்களுக்காக உங்கள் பெண்கள் காத்திருக்கத் தேவையில்லை. அவர்களுக்கு வேறு நல்ல இடமாகப் பார்த்து மணம் முடியுங்கள். ஆசானிடம் நாங்கள் செய்து கொடுத்துள்ள சத்தியத்தைக் காப்பாற்றுவதே எங்கள் வாழ்வின் முக்கியமான லட்சியம்!''

இந்த பதிலை அவர்கள் சொல்லி முடிப்பதற்குள் முத்தாயியும் பவளாயியும் ஆவேசம் வந்தவர்கள் போல அலறிவிட்டனர். அந்தக் கூடத்தில் அவ்வளவு பேர் நிற்கிறார்களே என்ற நாணமோ அச்சமோ அவர்களைத் தடுத்திடவில்லை. ஓடோடி வந்து சின்னமலைக்கொழுந்து சிலம்பாயி இருவரின் கால்களையும் பிடித்துக் கொண்டு கதறியழுதனர்.

''அப்பா! அம்மா! நாங்கள் வாழ்வதாகயிருந்தால் அவர்களைத் திருமணம் செய்து கொண்டு வாழ்கிறோம். இல்லாவிட்டால் சாவது ஒன்றே நல்ல வழி எங்களுக்கு! நீங்களும் எங்கள் அத்தையும் நினைத்தபடியே திருமணம் நடக்கட்டும். அவர்கள் ஆசானின் சபதத்தை நிறைவேற்றும் வரையில் உடலுறவு இல்லாமலே இல்வாழ்க்கை நடத்துகிறோம். இப்போதே எங்கள் திருமணத்தை நடத்தி விடுங்கள். அத்தான் இருவரும் ஆசானின் சபதம் முடிக்கும்வரையில் பிரம்மச்சாரிகளாக இருக்கட்டும். மணவிழா என்பது இவர்களோடுதான் எங்களுக்கு; இல்லையேல் - எங்கள் பிணங்களைத்தான் பார்க்க முடியும்!''

முத்தாயி பவளாயி கதறல் கேட்டுமட்டுமல்ல; அவர்கள் பொன்னர் - சங்கரை மணந்து கொண்டு உடலுறவு இல்லா மலே இல்வாழ்க்கை நடத்துவதாகக் கூறியதில் உள்ள உண்மை யான இதய அன்பின் மகிமையை உணர்ந்து கொண்ட ஆசான் அங்கிருந்தோரைப் பார்த்து அகமலர்ச்சியுடன்; இப்போதே திருமணத்தை முடித்துக் கொண்டு என் சபதம் நிறைவேறும் வரையில் பொன்னர் - சங்கர் பிரம்மச்சாரிகளாக வாழ்வதில் எனக்கு எந்தவித ஆட்சேபணையுமில்லை'' என்றார்! அது கேட்டு சின்னமலைக்கொழுந்து மகிழ்ந்தார் என்றாலும், ''இப் போதே திருமணம் என்றால் எப்படி முடியும்?'' என வியப்பு தெரிவித்தார்.

உடனே குன்றுடையான், ''ஏன் முடியாது? இன்று பொழு துக்குள் எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடிக்க எவ்வளவோ ஆட்கள் இருக்கிறார்கள். திருமணம் மட்டும்தானே நடத்தப் போகிறோம். மற்ற விஷயங்கள்தான் இப்போது எதுவும் இல் லையே!'' என்று தனது வெகுளி உள்ளத்தை வெளிச்சம் போட்டுக் காட்டினான்.

''ராஜகுடும்பத்துத் திருமணமென்றால் ஆடம்பரமாக நடத்த வேண்டும்; உற்றார் உறவினரை மாத்திரமல்லாமல் ஊரார் அனைவரையும் கூட்ட வேண்டும் என்பதற்காக நான் சொல்ல வில்லை. குறைந்த பட்சம் ஆரிச்சம்பட்டி அரண்மனையில் உள்ளவர்களாவது வர வேண்டாமா? அதுபோலக் குடையூர் மாளிகையில் உள்ளவர்கள் வந்து கலந்து கொள்ள வேண் டாமா? இந்தக் கூட்டமெல்லாம் தேவையில்லையென்றாலும் மாயவருக்கு அழைப்பு அனுப்பி அவர் வந்திருந்து திருமணத் தில் மணமக்களை வாழ்த்த வேண்டாமா?''

அன்றைக்கே திருமணம் நடத்துவதற்குத் துளியளவு கூடச் சம்மதமில்லாத சின்னமலைக்கொழுந்து சொன்ன இந்தக் கருத் துக்கு சிலம்பாயியும் தலையசைத்தாள். தாமரைநாச்சியாருக் கும் அது சரியென்றே பட்டது.

''ஆரிச்சம்பட்டியார் சொல்வதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது'' என்று குன்றுடையான் தனது எண்ணத்தை மாற்றிக் கொண்டு ''மசச்சாமி'' என்ற அழகான அடைமொழிக்கு தான் உரியவன் என்பதை மீண்டும் ஒரு முறை நிரூபித்துக் கொண் டான்.

திருமணத்தைப் பற்றி ஒரு தீர்க்கமான முடிவுக்கு வருவதற்

குள்ளாக சின்னமலைக்கொழுந்தைத் திடுக்கிட வைக்கும் செய்தியொன்று வந்து விட்டது. செய்தியைச் சுமந்து கொண்டு வந்தவன் ஆரிச்சம்பட்டியைச் சேர்ந்த ஒரு விவசாயி! வாலிப வயதினன்! போர் வீரனுக்குரிய உடையெதுவும் அணியாவிட்டாலும் அவன் கையில் ரத்தம் தோய்ந்த ஈட்டியொன்று இருந்தது. அவனை அழைத்துக் கொண்டு வந்த சங்கரமலைக் கோட்டை வீரர்கள், அவனை சின்னமலைக் கொழுந்தும் மற்றவர்களும் உரையாடிக் கொண்டிருந்த கூடத்தில் விட்டுச் சென்றனர்.

''நான் ஆரிச்சம்பட்டியிலிருந்து வருகிறேன்!''

''அப்படியா? ஈட்டியில், ரத்தம் தோய்ந்திருக்கிறதே; என்ன காரணம்?''

''நான் ஊரிலிருந்து தங்களுக்குச் சேதி சொல்ல ஓடி வரும் போது வளநாட்டு வீரன் ஒருவன் எதிர் நின்று தடுத்தான். அவன் கையிலிருந்த ஈட்டியைப் பிடுங்கி அவனைக் குத்திச் சாய்த்து விட்டு ஓடி வந்தேன்''

''என்ன செய்தி சொல்ல வந்தாய்?''

''வளநாட்டு மாந்தியப்பன் படையை ஆரிச்சம்பட்டி வீரர்களால் தாக்குப் பிடிக்க முடியவில்லை.''

''அதனால் என்ன ஆயிற்று?''

''மாந்தியப்பன் நமது அரண்மனைக்குள் நுழைந்து விட்டான். வளநாட்டுக் கொடி நமது கோட்டை முகப்பில் பறக்க விடப்பட்டு விட்டது. ஆரிச்சம்பட்டியைக் கைப்பற்றிய வளநாட்டு வீரர்கள் நடத்தும் அக்கிரமங்களுக்கு எல்லையே இல்லை. வீடுகளில் புகுந்து கொள்ளையடிக்கிறார்கள். வீதிகளில் பெண்கள் நடமாட முடியவில்லை. எங்கு பார்த்தாலும் அழுகுரல் தான் கேட்க முடிகிறது.''

''ஆ! என்ன ஆரிச்சம்பட்டிக்கு இப்படி ஒரு அவலமா? அய்யோ! கேட்கவே முடியவில்லையே இந்தக் கொடுமையை!''

''வெற்றி விழா நடத்தப் போகிறானாம் மாந்தியப்பன்... நமது ஆரிச்சம்பட்டி அரண்மனையில்! அந்தக் கேளிக்கை களியாட்டத்தில் அவனது படுக்கைக்கு நல்ல பக்குவமான பருவமடைந்த

அழகிய பெண்கள் பத்து பேர் கொண்டு வரப்பட வேண்டு மாம். அவர்களில் அவனுக்குப் பிடித்தமான ஒருத்தியை இரவு விருந்துக்கு ஏற்பாடு செய்து கொள்வானாம். மிச்சமுள்ளவர் களை அவனது தளபதிகள் எச்சில் படுத்துவார்களாம். இப்படி பகிரங்கமாகவே அறிவித்து விட்டுப் பாவையர்களை வேட்டை யாடுகிறார்கள் பாவிகள்!''

ஆரிச்சம்பட்டியிலிருந்து வந்த விவசாயக் குடும்பத்து வாலி பன், சின்னமலைக்கொழுந்திடம் கூறிய செய்தி கேட்டு ராக்கி யண்ணனின் கண்கள் கோவைப் பழங்களாயின. மீசை துடிக் கப் பல்லை நறநறவென்று கடித்தார்.

''அந்த நாச காரியத்தை அனுமதிக்கவே முடியாது. நானே போகிறேன். ஆரிச்சம்பட்டியை மாந்தியப்பனிடம் இருந்து மீட்கும் போராட்டத்தில் நான் மடிந்தாலும் பரவாயில்லை; போர் வீரர்கள் புல்லர்களாக மாறிச் சேட்டைகள் செய்வதை சகித்துக் கொண்டிருக்க முடியாது!'' என்று இடியென ஒலித் தார். அப்போது பொன்னரும் சங்கரும் தங்களின் ஆசானை அமைதிப்படுத்தி:

''நாங்கள் இருவரும் சென்று அந்த மாந்தியப்பனுக்குப் புத்தி புகட்டி வருகிறோம். ஆணையிடுங்கள் ஆசான்!'' என்று வேண்டிக் கொண்டனர்.

''என் வேண்டுகோளை சின்னமலைக் கொழுந்தார் உட்பட அனைவரும் தயவுசெய்து கேளுங்கள்; சங்கரமலைக் கோட் டைக்கு வந்துள்ள ஆரிச்சம்பட்டிப் படை வீரர்களுக்குப் பொன் னரும் சங்கரும் தலைமை வகித்து உடனே ஆரிச்சம்பட்டி சென்று மாந்தியப்பனின் வளநாட்டுப் படைகளைச் சந்திக்கட் டும்! இருவரும் புறப்படுவதற்கு முன்பாக இப்பொழுதே அவர் களின் திருமணத்தை இங்கே நடத்தி வைப்போம்'' என்று ஆசான் உணர்ச்சி பெருக்குடன் கூறினார்.

''போர்முனைக்குப் போகும்போது திருமணமா? களத்தில் எங்களுக்கு ஏதாவது ஆகிவிட்டால் அதன் பிறகு முத்தாயி பவ ளாயி கைம்பெண்களாக நிற்க நேரிடாதா?''

பொன்னர் இப்படிக் கூறியதும் முத்தாயி, தனது விழிகளில் வழிந்திடும் நீரைத் துடைத்தவாறு; ''களத்தில் அல்ல; அடுத்த கணமே அவர்கள் இவ்வுலக வாழ்வை விட்டுப் போய் விடு வார்கள் என்றாலும் எங்கள் கழுத்தில் அவர்கள் கரங்களி

னால்தான் மாங்கல்யம் ஏறிட வேண்டும்'' என்றவாறு தேம்பித் தேம்பி அழுதாள். சகோதரி அழுவதைக் கண்டு பவளாயியும் விம்மியழத் தொடங்கினாள். தாமரைநாச்சியார் தழுதழுத்த குரலில் சிலம்பாயியை பார்த்து, ''திருமணத்தை இப்போதே முடிக்க எனக்குச் சம்மதமே'' என்றாள். சிலம்பாயி மறுப்புச் சொல்லவில்லை.

''இரு இல்லத்து அரசிகளும் சொன்ன பிறகு அதற்கு மறுப்பு ஏது?'' என்றான் சிரித்துக் கொண்டே குன்றுடையான்.

அடுத்த நொடியில் அந்த அரண்மனை அவசரத் திருமண ஏற்பாடுகளால் திணறியது.






ஆரிச்சம்பட்டியில் மணமகள்களின் அரண்மனையில் முறைப் படி நடைபெற வேண்டிய திருமணம் சங்கரமலைக்கோட்டை யில் போர்ச்சூழலுக்கிடையே நடைபெற்றாலும் மரபுக்கேற்ப மணவிழா நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. உடனே நிச்சயதார்த்தம் - உடனே மணவிழா என்ற நிலையில் ஒரே பரபரப்பு!

பொன்னர் முத்தாயி - சங்கர் பவளாயி திருமண நிச்சயம் செய்து வெற்றிலை பாக்குப் பரிசம் போடப்பட்டது. அழகிய பந்தலொன்று மணவிழாவுக்கென அமைக்கப்பட்டு மாவிலைத் தோரணங்கள் கட்டப்பட்டன. புதுமணல் பரப்பி வாழை மரங்கள் வரிசையாக வைக்கப்பட்டன. பொன்னர் - சங்கர் இருவரின் உடனிருந்து வையம்பெருமானும் வீரமலையும் மண மகன்களுக்குரிய அலங்காரங்களைச் செய்தனர். அருக்காணித் தங்கமும் அவளது அருமைத் தோழி குப்பாயிக்குச் சொல்லி யனுப்பி பக்கத்து சிற்றூரில் இருந்த அவள் மணமகள்கள் இரு வருக்கும் தேவையான ஆடை அணிகளுடன் வந்து சேர்ந்து விட்டாள். அருக்காணித் தங்கம் குப்பாயி இருவரும் மணமகள் களின் தோழிப் பெண்களாகச் செயல்பட்டு மணவிழாப் பணி களைச் பம்பரமெனச் சுழன்று ஆற்றிக்கொண்டிருந்தனர். சங்கரமலைக்கோட்டை வாழ் பெரியவர்களும் அவர்களுடன் ராக்கியண்ணனும் மணப்பந்தலில் அமர்ந்து மணமக்களை அகமும் முகமும் மலர வாழ்த்திக் கொண்டிருந்தனர். பொன்னர் - சங்கர் இருவரையும் குதிரைகள் மீதேற்றி கோட்டையைச் சுற்றிவரச் செய்து மணமேடைக்கு அழைத்து வந்தனர். நாணத் தால் முகம் சிவந்திருந்த முத்தாயி பவளாயி இருவரும் குனிந்த தலை நிமிராமல் மணமேடையில் வந்தமர்ந்தனர். தாமரை நாச்சியாரும் சிலம்பாயியும் எத்தனையோ வேதனைகள் உள் ளத்தில் அழுத்திக் கொண்டிருந்தாலும் அவற்றை ஒருக் கணம் மறந்து விட்டு, தங்கள் மக்களின் மணக் கோலத்தைக் கண்டு மகிழ்ச்சியில் திளைத்தனர்.

அருமைப் பெரியவர் எனப்படும் அருமைக்காரர் இறைவழி பாடு செய்து மணவிழாவைத் தொடங்கினார். ஒரு கலம் நிறைய வைக்கப்பட்ட அரிசியில் மணமகன்களின் கையையும் மைத்துனன் வையம்பெருமானின் கையையும் கோத்து வைத்து வெற்றிலை பாக்கு கொடுக்கப்பட்டு மங்கல வாழ்த்து பாடப் பட்டது. வாழ்த்து முழக்கம் - வாத்திய முழக்கங்களுக்கிடையே முத்தாயி கழுத்தில் பொன்னரும், பவளாயி கழுத்தில் சங்கரும் மங்கல நாண்களை அணிவித்தனர். அப்போது ராக்கியண் ணன் ஆனந்தக் கண்ணீர் பொழிந்தபடி மணமக்கள் மீது மலர் களைத் தூவினார். குன்றுடையானும் சின்னமலைக் கொழுந் தும் தங்களையும் மீறி விழிகளில் எட்டிப்பார்க்கும் கண்ணீர்த் துளிகளைத் துடைத்தவாறு மணமக்களுக்கு வாழ்த்துக் கூறிய தோடு அவர்களுக்காக ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொண் டனர்.

அவசரத் திருமணமாக இருந்த போதிலும் வேளாளர் குல மரபுகள் எதையும் விட்டுவிடாமல் அடையாளத்திற்காகவாவது அத்தனையும் செய்து முடிக்கப்பட்டன. மணமக்கள் கைகளில் கட்டப்பட்ட கங்கணங்களை அவிழ்த்து மணவிழா மங்கல நிகழ்ச்சி இனிது நிறைவேறியவுடன் விழாவுக்கு வந்திருந்தோர் அனைவருக்கும் விருந்து பரிமாறப்பட்டது. விருந்து மண்டபத் துப் பணிகளை தாமரைநாச்சியார், சிலம்பாயி, அருக்காணித் தங்கம், அவள் தோழி குப்பாயி ஆகியோர் முன்னின்று கவ னித்தனர்.

போர் முனைக்குப் புறப்படும் நேரத்தில் ஒரு மணவிழா - அதுவும் ஆசானின் சபதம் நிறைவேறும் வரையில் உடலுறவு கொள்ளாமல் மணமக்கள் பிரமச்சரியம் கடைப்பிடிக்க வேண் டும் என்ற நிலையில் நடைபெற்ற மணவிழா - எல்லோருமே பொன்னர் - சங்கரின் வீர தீரத்தில் கொண்டுள்ள நம்பிக்கை யில் எதிர்காலத்தைப் பற்றி அச்சம் கொள்ளாவிடினும் ஏதோ ஒரு பதற்றத்தில் இருந்தனர்.

மணக்கோலம் மாற்றிப் போர்க்கோலம் பூணுவதற்கு பொன்னரும் சங்கரும் அந்தக் கோட்டையில் படைக்கலன் களும் போர் உடைகளும் உள்ள அறைக்குச் சென்றனர்.

ஒட்டியாணம் பூட்டெடுத்து
இடையில் பதித்து அப்போ
வாங்கு பிடி சூரி வளைதடியும் சக்கரமும்
சுருட்டு முத்துப் பட்டா சூரவாள் கேடயமும்

ஈட்டி கோல் வலையமும் எரி ஈட்டி நேரிசமும்
கம்பு கத்தி சமுதாடு சமுக்குலா பட்டாவும்
தூக்கும் பரிசையோட நிலம் தூத்துவரும் சல்லிகளும்
பத்துக் கட்டி போட்டடித்த பாரமான கேடயமும்
எட்டுக் கட்டி போட்டடித்த ரணங்கண்ட மந்திரவாள்
பதினெட்டு ஆயுதமும் அண்ணர் இருவரும்
பாங்காகத் தானெடுத்து...

அறையிலிருந்து வெளியே வந்தனர்.

களம்புகு வீரர்களாகத் தங்கள் கண்மணிகள் வந்து நிற்பது கண்டு குன்றுடையானும் தாமரைநாச்சியாரும் நெகிழ்ந்து போயினர். ஆசான் ராக்கியண்ணன் தனது மாணவர்களாக வும் மகன்களாகவும் வளர்ந்த அந்த அரிமாக்களைக் கண்டு அப்படியே மலர்ந்து போய் நின்றார். ஆசான் கால்களிலும் பெற்றோர் கால்களிலும் பொன்னர் - சங்கர் விழுந்து வணங்கி ஆசி பெற்றனர். சின்னமலைக் கொழுந்து சிலம்பாயி இரு வரும் தங்கள் மனத்துக்குள் தெய்வத்தை வேண்டிக் கொண்டு பொன்னர் - சங்கர் நெற்றியில் திலகமிட்டு வாழ்த்தினர். அப்போது அருக்காணித் தங்கம் தனது அண்ணன்மார்களின் வீரஞ்செறிந்த முகத்தை ஆவலுடன் பார்த்துக் கொண்டு நின் றாள். அவளை கவனித்து விட்ட பொன்னர் - சங்கர் அவ ளருகே சென்று அவள் தலையைக் கோதியவாறு, ''என்னம்மா தங்கம்?'' என்று அன்பொழுகக் கேட்டனர்.

''அண்ணிகள் காத்திருக்கிறார்கள் அண்ணா! அவர்களிடம் சொல்லிக் கொள்ள மறந்து விடாதீர்கள்!'' என்று கண்கலங்கக் கூறினாள் அருக்காணித் தங்கம்.

தங்கையின் வேண்டுகோளைச் செவிமடுத்த இருவரும் தங் களின் ஆசான் முகத்தைப் பார்த்தனர். மனைவிகளிடம் போய் விடைபெறுவதென்றால் அவர்கள் உடனே விடை கொடுத்து விடமாட்டார்களே; அதனால் அது தேவையா? என்பது போல் இருந்தது அந்தப் பார்வை! ஆசானுக்கும் அது புரியாமல் இல்லை!

''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின் வல்வரவு வாழ்வார்க்கு உரை'' என்ற திருக்குறள் நினைவுக்கு வந்து விட்டதோ? அதாவது நீ பிரிந்து போகாதிருப்பதாயின் என்னிடம் சொல்லிக்கொள்! போய்த்தான் தீரவேண்டு மெனில் நீ திரும்பி வரும்பொழுது யார் உயிருடன் இருப்

பார்களோ அவர்களிடம் சொல்லிக்கொள்! என்பது போல உங்கள் துணைவியர்கள் சொல்வார்களோ என அஞ்சுகிறீர்களா? முற்றாக நிலைமைகளை உணர்ந்துள்ள முத்தாயியும் பவளாயியும் அப்படிச் சொல்லமாட்டார் கள்!''

என்று ஆசான் புன்னகை புரிந்தவாறு கூறினார். ஆசானின் உரையைக் கேட்டபிறகும் அவர்களுக்கு ஒரு தயக்கம். ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள். ஆசானை நிமிர்ந்து நோக்காமல் அவரது கால்களையே உற்று நோக்கினர்.

''ஓகோ - பிரமச்சரியம் என்ன ஆவது என்று யோசிக் கிறீர்களா? பார்ப்பது பேசுவது இவற்றால் எந்தப் பாதக மும் இல்லை - என் சபதம் நிறைவேறும் வரையில் உட லுறவுதான் கூடாது!''

என்று ஆசான் விளக்கம் தந்து, பொன்னர் - சங்கர் இருவரது கரங்களையும் பரிவுடன் பற்றிக் கொண்டு,

''உம்! போய் சொல்லிக்கொண்டு புறப்படுங்கள்.''

என்றார். அதைக் கேட்ட அருக்காணித் தங்கத்துக்கு பூரிப்பு தாங்கவில்லை. குதித்தோடிச் சென்று குப்பாயியைத் தழுவிக் கொண்டாள். பிறகு அவளை விட்டு அண்ணிகள் இருவரும் இருக்கும் அந்தப்புரம் நோக்கிப் பறந்தாள்.

''அண்ணி! அண்ணன் வருகிறார்! அண்ணன் வருகிறார்!''

என்று முத்தாயியிடமும் பவளாயியிடமும் ஓடோடிச் சென்று செய்திகளைச் சொன்னாள்.

அந்தப்புரக் கதவின் மீதே பார்வையைப் பதிய வைத்து நின்று கொண்டிருந்த முத்தாயியின் இதயம் படபடத்தது. தனது அருமைக் கணவன் பொன்னர் வரப்போகிறான் - தன்னுடன் பேசப்போகிறான் என்பதை விட; வருபவன் திரு மணம் முடித்தவுடனேயே போர்க்களத்துக்குப் புறப்படும் செய் தியைச் சொல்வதற்காக அல்லவா வரப்போகிறான் என்பதை எண்ணிடும்போது அவளது வேதனை எல்லை கடந்தது. கத வைத் திறந்து கொண்டு பொன்னர் வந்து நின்றான். சிலிர்த்துக் கொண்டு நிற்கும் ஒரு சிங்கத்தின் செம்மாந்த தோற்றம். விரிந்து பரந்த மார்பில் கவசம் பூண்டு, இடுப்பில் தொங்கிய உறைவாளின் மீது ஒரு கையை வைத்தவாறு அவன் நின்ற காட்சி கண்டு முத்தாயி பெருமிதம் கொண்டாள். கட்டழகன்

மட்டுமல்ல, களங்காணத் துடிக்கும் காளையைக் கணவனாகப் பெற்றோமேயென்று களிபேருவகை கொண்டாள். அவன் முன்னால் தனது கலக்கத்தைக் காட்டிக் கொள்வது கூடாது என்ற நினைப்பில் தலையைக் குனிந்து கொண்டு விழிகளை மட்டும் மேலுயர்த்தி அவனைப் பார்த்தாள்.

''போய் வருகிறேன்.''

பொன்னர் உதடுகளைக் கடந்து வெளிப்பட்டது வார்த்தைகள் தான் என்றாலும் அந்த வார்த்தையின் ஒவ்வொரு எழுத்தும் ஈட்டியாக உருவெடுத்து அவள் நெஞ்சைத் துளைத்திடத் தவற வில்லை. சமாளித்துக் கொண்டாள். குங்குமத் திலகமிருந்த தட்டை எடுத்து வந்து அவன் முன்னால் நீட்டியபடி நின்றாள். பொன்னர் அந்தத் தட்டிலிருந்த குங்குமத்தை விரலால் எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டான். மீண்டும் ஒரு முறை சொல் லிக் கொண்டான். ''வருகிறேன்'' என்று! ''வெற்றியோடு திரும்புங்கள்'' என்று முத்தாயி சொன்னாள். ஆனால் அந்தச் சொற்றொடரின் ஒவ்வொரு எழுத்தும் கடுங்குளிரில் நடுங்கும் சிசுவைப் போல் நடுங்கின. பொன்னர் அந்தப்புரத்திலிருந்து கிளம்பினான். முத்தாயியின் விழிகள் அவன் தோள்களில் தொத்திக் கொண்டன.

பவளாயி, முத்தாயியை விடக் கொஞ்சம் துணிவுடையவள். சங் கர் அவளது அந்தப்புரத்தில் நுழைந்தவுடனேயே, ''புறப்பட்டு விட்டீர்களா?'' என்று கேட்டுக் கொண்டே எதிர் வந்து நின் றாள். நின்றவள் கண்ணுக்கு நேரே நெடுங்குன்றமொன்று படைக் கலன்களுடன் போருடை அணிந்து நிற்பது போல சங் கர் வந்து நின்றான்.

''ஆமாம் பவளம்; புறப்பட்டு விட்டேன்!'' என்றான் சங்கர்!

''உங்கள் வெற்றிக்காக நான் தவமிருப்பேன் என்றாள்!

''வரம் கேட்டுத்தான் எனக்கு வெற்றி கிடைக்க வேண்டுமா? என் நெஞ்சுரத்தில் உனக்கு நம்பிக்கையில்லையா?'' என்று கேலி செய்தான் சங்கர்!

''நிச்சயம் - வெற்றியுடன்தான் திரும்புவீர்கள். அதில் சந் தேகமில்லை'' எனக் கூறிக் கொண்டே குங்குமத் தட்டெடுத்து வந்து அவன் முன்னே நீட்டினாள். சங்கர் அவளைப்பார்த்துக் கொண்டே, குங்குமத்தை எடுத்து நெற்றியில் திலகமிட்டுக்

கொண்டு மீண்டும் ஒரு முறை அவளிடம், ''வருகிறேன் பவளம்'' என்றான். அவளும் சரியென்று தலையசைத்தாள். அவன் அங்கிருந்து அகன்ற பிறகு அவளுக்கு அந்த அறை ஒரு இருளாகத் தெரிந்தது. தன் கண்களை அவனோடு காவலுக்கு அனுப்பி விட்டதைப் பின்னர்தான் அவளால் உணர முடிந்தது.

ஆரிச்சம்பட்டி வீரர்கள் சங்கரமலைக் கோட்டைக்கு எதிரே குதிரைகளில் அணிவகுத்து நிற்க, அங்கே பொன்னரும் சங்கரும் வந்தனர். அவர்கள் ஏறிச் செல்ல வேண்டிய குதிரைகளில் ஒன்றில் வீரமலையும் மற்றொன்றில் வையம்பெருமானும் ஏறிவந்து அவர்களுக்கு எதிரே நிறுத்தி விட்டுக் கீழே இறங்கினர். பொன்னரும் சங்கரும் குதிரைகளைத் தட்டிக் கொடுத்து விட்டு கம்பீரமாக ஏறி அமர்ந்தனர். போர் வீரர்களை உற்சாகப்படுத்தும் இசைக் கருவிகள் முழங்கின. போர் முரசங்கள் அதிர்ந்தன. பொன்னர் - சங்கர் இருவரையும் பின்பற்றி ஆரிச்சம்பட்டி வீரர்கள் தங்கள் மண்ணைக் காத்திட விரைந்தனர்.

படை செல்லும் வழியைப் பார்த்தவாறு ராக்கியண்ணன், சின்னமலைக் கொழுந்து, குன்றுடையான், வீரமலை, வையம் பெருமான், மற்றும் சங்கரமலைக்கோட்டை வீரர்கள் நின்றிருந்தனர். தூசிப் புழுதியால் படை சென்ற வழி மறைந்து போயிற்று.

கைப்பற்றப்பட்ட ஆரிச்சம்பட்டியை மீட்பதற்குச் சங்கரமலைக் கோட்டையிலிருந்து படை புறப்பட்டு விட்டது என்ற செய்தி கேட்டு ஆரிச்சம்பட்டியை வசப்படுத்தியிருந்த மாந்தியப்பன் கடுங்கோபம் கொண்டான். ஆரிச்சம்பட்டி நோக்கி வரும் அந்தப் படையை எதிர்த்து நொறுக்குவதற்குத் தனது தளபதிகளுக்கு கட்டளையிட்டான். ஆரிச்சம்பட்டி எல்லையில் இருபடைகளும் மோதிக்கொண்டன. பொன்னர் - சங்கர் போர் புரிவதில் மட்டுமல்ல, போர்த் தந்திரத்திலும் மிகவும் வல்லவர்கள் என்பதைக் காட்டிக் கொண்டனர். எப்படியோ அவர்களது தலைமையில் வந்த போர் வீரர்கள் சிலர் ஆரிச்சம்பட்டியில் உள்ள சாதாரண பொதுமக்களைப்போல வேடமணிந்து ஆரிச்சம்பட்டிக்குள் நுழைந்து விட்டனர். அவர்களது வாக்குத் திறமையினால் ஆரிச்சம்பட்டிப் பொதுமக்களை எழுச்சி கொள்ளச் செய்தனர். வளநாட்டுப் படை வீரர்களின் கொடுமை கண்டு அஞ்சி நடுங்கி ஒடுங்கிக் கிடந்த பொதுமக்கள் ஆர்த்தெழுந்தனர். தங்களை அடிமை கொண்ட வளநாட்டு வீரர்களுக்கு ஊருக்குள் எவ்வளவு தொல்லை கொடுக்க முடியுமோ அவ்வளவு தொல்லைகள் கொடுத்தனர். வெளியிலிருந்து பொன்னர் - சங்கர் தலைமையில் நடத்தப்படும் தாக்குதலையும் -

ஆரிச்சம்பட்டியில் திடீரென மக்கள் கொண்ட எழுச்சி காரண மாக விளைந்த தாக்குதலையும் சமாளிக்க முடியாமல் மாந்தி யப்பனின் படை தத்தளித்தது. பொன்னர் - சங்கர் புயல் வேகத்தில் எதிரிப் படை வீரர்களின் தலைகளை வெட்டி வீழ்த்தினர். ஆரிச்சம்பட்டி நகர எல்லை, பொன்னர் - சங்கர் வசமாயிற்று. எல்லைப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டு, ஆரிச்சம்பட்டிக் கோட்டைக்குள் நுழைவதற்குப் பொன்னர் - சங்கர் முன்னேறி வருகிறார்கள் எனக் கேள்வியுற்றதும் மாந்தி யப்பன் தனது படைகளுடன் கோட்டையிலிருந்து வெளியேற முடிவு செய்தான். பொன்னர் - சங்கர் படைகளுடன் கோட் டைக்குள் நுழைவதற்கும், மாந்தியப்பன் தனது வீரர்களுடன் வெளியேறுவதற்கும் சரியாக இருந்ததால் அவன் தப்பித்துக் கொண்டான். ஆரிச்சம்பட்டியும் கோட்டை கொத்தளங்களும் மீட்கப்பட்டன. மாந்தியப்பன் தனது படைகளுடன் வளநாட் டுக்கு விரைந்தோடினான்.

சங்கருக்குப் போர்த்தினவு தீரவில்லை. மாந்தியப்பனை வளநாடு வரையில் விரட்டிச் சென்று வளநாட்டையும் கைப் பற்ற வேண்டுமென்ற ஆசை தோன்றியது. அதைப் பொன்ன ரிடம் சொன்னபோது பொன்னர் தயங்கினான்.

> "தம்பி; வளநாட்டுப்படை மிகவும் வலிவுடையது. ஓரளவு படை வீரர்களுடன் மாந்தியப்பன் ஆரிச்சம்பட்டியை வளைத்த காரணத்தினால் இப்போது நம்மிடம் தோற் றோடியிருக்கிறான். அவன் மீண்டும் படைதிரட்டிக் கொண்டு இங்கு வருவான். அவனையும் வளநாட்டுப் படையையும் இங்கு எதிர்த்து முறியடிப்பதே நமக்கு சுல பம். அவன் கோட்டைக்குள் சென்று மாட்டிக் கொள்வது நல்லதல்ல!"

பொன்னரின் இந்த அறிவுரை சங்கரின் காதில் ஏறவில்லை.

> "இல்லையண்ணா; நான் மறுத்துச் சொல்வதற்காக என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். எதிரிகள் அடிபட் டுப்போகும் போதுதான் மேலும் அடி கொடுக்க வேண் டும். இல்லாவிட்டால் பாம்பை அடித்து விட்டு விட்டது போலாகிவிடும். இதே வேகத்தில் வளநாட்டைத் தாக்கி அதனை நம் பிடியில் கொண்டு வரவேண்டும். இந்த வாய்ப்பை நழுவ விடக்கூடாது"

என்று சங்கர் பிடிவாதம் பிடிக்கவே; பொன்னரும் சிறிது நேரம் மறுத்துப் பார்த்து விட்டு பிறகு சங்கரின் திட்டத்துக்கு இணங்கினான்.

ஆரிச்சம்பட்டியை மீட்டதற்கான வெற்றி முழக்கம் அடங்கு வதற்குள்ளாக வளநாடு நோக்கித் தென்திசையில் பொன்னர் - சங்கர் புறப்பட்டனர். ராச்சாண்டார் மலைத் தோல்வி - ஆரிச்சம்பட்டித் தோல்வி - இந்த இரண்டு நிகழ்ச்சிகளாலும் துவண்டு போயிருந்த வளநாட்டு வீரர்களை நம்பிப் பொன்னர் - சங்கரை எப்படி எதிர்க்க முடியும் என்ற மந்திராலோசனை மாந்தியப்பனின் வளநாட்டு அரண்மனையில் நடந்தது. உடனே தலையூர்க்காளி மன்னனுக்கும், அங்கு தங்கியுள்ள செல்லாத் தாக் கவுண்டருக்கும் செய்தி அனுப்பி தலையூர்ப்படையை வள நாட்டுக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்வதென முடிவெடுக் கப்பட்டது. அதுவரையில் பொன்னர் - சங்கர் படையை வள நாட்டு எல்லையில் எதிர்த்துத் தாக்குப் பிடித்துக் கொண்டிருந் தால் போதுமானது என்றும் போர்த்தந்திரம் வகுக்கப்பட்டது.

பொன்னர் - சங்கர் ஆரிச்சம்பட்டிப் படையுடன் வளநாட்டு எல்லையை முற்றுகையிட்டனர். வளநாட்டு வீரர்கள் மிக மூர்க்க மாக எதிர்த்து நின்றனர். ஆனால் பொன்னர் - சங்கரின் நேர டித் தலைமையில் போர் நடைபெற்றதால் அவர்கள் இருவரின் வலிமை, திறமை இவற்றுக்கு முன்னால் வளநாட்டுப்படை நிற்க முடியவில்லை. இருந்த போதிலும் வளநாட்டுப் படை யினர் எண்ணிக்கையில் அதிகம் என்பதால் பொன்னர் - சங்கர் மிக எளிதாக அந்த எல்லைப் பகுதிகளைக் கைப்பற்றிட இயலவில்லை. ஆரிச்சம்பட்டி வீரர்களை நூற்றுக் கணக்கில் பலி கொடுக்க வேண்டியதாயிருந்தது. ஒரு கட்டத்தில் பொன் னர் - சங்கரைப் பார்த்து, ''தம்பி, நான் சொன்னதைக் கேட் டாயா? வளநாட்டுப் படை வீரர்களின் எண்ணிக்கைக்கும் நமது வீரர்களின் எண்ணிக்கைக்கும் எவ்வளவு வித்தியாசம் பார்!'' என்று ஆதங்கப்பட்டுக் கொண்டார். ''கவலைப்படா தீர்கள் அண்ணா! இந்த வாள் வெற்றி மலர் சூடும்!'' என்று கர்ச்சனை செய்தான் சங்கர்!

அப்போது ஆயிரக்கணக்கான வீரர்கள், குதிரைகள், தேர் கள் கொண்ட பெரும் படையொன்று வளநாடு நோக்கி விரைந்து வரும் ஒலி செவிகளைப் பிளந்தது.

''தம்பி, தலையூர்க்காளியின் படையாகத்தானிருக்கும். நாம் இப்பொழுது ஒரு புறம் வளநாட்டுப் படைக்கும் மற்றொரு புறம் தலையூர்ப்படைக்கும் இடையிலே சிக்கிக் கொண்டோம்!'' என்று பொன்னர் சங்கரைப் பார்த்துச் சொன்னான். சங்கர் திகைப்புடன் அந்தப் படை வரும் திசையை நோக்கினான்.

# புலிக் கொடியும் பொன்னர் சிந்தனையும்

## 28

பெரும் புயலில் எழும்பிக் குதித்து கரைதாண்டி உயர்ந்து வரும் கடலின் பேரலைகளைப் போல் அந்தப் படை வந்து கொண்டிருந்தது. சங்கருக்கும் சரி பொன்னருக்கும் சரி அந்தப் படை யாருக்குரியது என்பதை எளிதில் தெளிவுபடுத்திக் கொள்ள முடியவில்லை. அவர்களது யூகம் மட்டும் அது தலையூர்க்காளியின் படையாக இருக்குமென்றே உணர்த்தியது. படையின் முகப்பில் வீரர்கள் தங்கள் கரங்களில் ஏந்திவந்த கொடிகளில் பொறிக்கப்பட்டிருந்த சின்னம் என்னவென்று தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அந்தப்படை தொலைவில் வந்து கொண்டிருந்தது. சங்கர், பொன்னரைப் போல் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. ஒரு துளி அச்சமும் இல்லாதவனாகப் பொன்னரை நோக்கிச் சொன்னான்:

''அண்ணா! நான் மட்டும் அந்தப்படைக்கு எதிரில் சென்று பார்க்கிறேன்.''

தம்பியின் வீரத்தையெண்ணித் தனக்குள் மகிழ்ந்து கொண்டான் பொன்னர் என்றாலும்; அதில் விவேகமிருப்பதாக அவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

''சங்கர்! வந்துகொண்டிருப்பதோ எண்ணற்ற வீரர்களைக் கொண்ட மிகப்பெரிய சேனையாகத் தோன்றுகிறது. அதனை எதிர்கொண்டு பார்க்கிறேன் என்பது அறிவுடைமையாகாது! மீண்டும் சொல்கிறேன்; ஒருபுறம் வளநாட்டுப் படையிருப்பதை மறந்துவிடக் கூடாது. இப்போது புதிதாக வருகிற இந்தப் படையையும் வளநாட்டுப் படையையும் நாம் எப்படி சமாளிப்பது என்பது குறித்து யோசித்து விரைவில் முடிவு எடுப்பதே நல்லது.''

*பொன்னர் தடுத்துரைத்ததையும் கேளாது சங்கர் அவனைப் பார்த்து, "அண்ணா! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்! இதோ சில நொடிகளில் திரும்பி விடுகிறேன்" என்று கூறிக் கொண்டே ஓங்கிய வாளுடன் குதிரையைத் தட்டிவிட்டான்.*

*காற்றைக் கிழித்துக்கொண்டு புரவியில் செல்லும் தம்பி சங்கரின் துணிச்சலைப் பார்த்து வியந்த பொன்னர், அவனுக்கு எதிர்வரும் பெரும்படையினால் என்ன விபத்து நேருமோ எனக் கலங்கினான். அந்தச் சிறிது நேரத் தயக்கத்தைப் பயன் படுத்திக் கொண்டு வளநாட்டுப் படையினர் ஆரிச்சம்பட்டிப் படைமீது மேலும் மூர்க்கத்தனமாக மோதினர். அது கண்ட பொன்னர் வெகுண்டெழுந்து தனது தம்பியைப் பற்றிய கவலையை ஒதுக்கி வைத்துவிட்டு ஆரிச்சம்பட்டி வீரர்களை எழுச்சிகொள்ளச் செய்து, அவனே படைமுகப்பின் முன் னின்று வளநாட்டுப் படைகளைத் தாக்க முற்பட்டான்.*

*தனியொருவனாகக் குதிரையில் சென்ற சங்கர், எதிரில் வரும் படையின் முகப்பில் பறந்து கொண்டிருந்த கொடியின் சின்னத்தை அறிந்து கொள்ள எவ்வளவோ முயன்றும் முடிய வில்லை. குதிரைகளின் குளம்படிகள் கிளப்பும் புழுதிமண் டிலத்தில் அந்தக் கொடிகள் தெளிவாகத் தெரியவில்லை. அவன் சென்ற பாதையில் பாறையொன்று தென்படவே குதிரையுடன் சென்று அதில் மறைந்து நின்று பார்ப்பது உசிதமெனக் கருதினான். எதிரே வருவது தலையூர்க்காளியின் படையாக இருந்து, அந்த வீரர்களில் யாராவது தன்னைக் கண்டுவிட்டால் அந்த இடத்திலேயே தன்னைப் பொடிப் பொடியாக ஆக்குவதற்குத் தயங்கமாட்டார்கள் என்பது அவ னுக்குத் தெரிந்திருந்தும் அவனைப் பய உணர்வு தொட்டுக் கூடப் பார்க்கவில்லை. அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்தப்படை அவன் ஒளிந்திருந்த பாறையின் அருகே வந்து விட்டது. அப்போது அப்படை முகப்பில் பறந்துகொண்டிருந்த கொடி மட்டுமல்ல; படைக்குத் தலைமை வகித்து வந்தது யார் என்பதும் சங்கருக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது.*

*உடனே சங்கர், பாறையிலிருந்து குதிரையுடன் வெளிப் பட்டுப் பாதையின் நடுவே வந்து நின்றான்.*

*சோழநாட்டுப் படையின் புலிக்கொடி! படைமுகப்பில் போர்க்கோலம்பூண்டு அமர்ந்திருப்பவரோ மாயவர்! ஆம்; தலையூர்க்காளியின் அமைச்சர் மாயவர்! ஆச்சரியத்தினால் அயர்ந்து போன சங்கர், குதிரையிலிருந்து இறங்காமலே,*

அவரை கம்பீரமாக நோக்கினான். மாயவர், தனது கரத்தை உயர்த்தி தன்னைத் தொடர்ந்து வரும் படையினரை நிறுத்தினார்.

''என்ன சங்கர்! ஏன் எங்களை தடுக்கிறாய்?'' என்ற மாயவரின் கேள்வியில் மிடுக்கு இருந்தது.

''நண்பராக வருகிறீர்களா? பகைவராக வருகிறீர்களா? என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?''

சங்கர் விடுத்த எதிர்க்கேள்வியில் இளமையின் துடிப்பும் வீரமும் துள்ளியது.

''பகைவராக வருகிறோம் என்று சொன்னால் உன்னால் என்ன செய்ய முடியும்? என்னைத் தொடர்ந்து வரும் குதிரைப் பட்டாளம் - காலாட்படை - எம்மிடமுள்ள படைக்கலன்கள் - இவைகளுக்கு ஈடுகொடுக்க உன்னாலும் உன் அண்ணன் பொன்னராலும் அல்லது உங்கள் தலைமையில் உள்ள ஆரிச்சம்பட்டிப் படையினராலும் முடியுமென்று நம்புகிறாயா?''

''போர்க்களம் புகுந்தபிறகு முடியுமா முடியாதா என்று யோசிப்பதே கோழைத்தனம் என்றுதான் எங்கள் குருநாதர் போதித்திருக்கிறார். இந்தப் பெரும்படையையோ அல்லது தங்களையோ எதிர்ப்பதா கூடாதா என்பது பற்றி நாங்கள் யாரிடமும் ஆரூடம் கேட்கமாட்டோம். தலையூர்க்காளியின் படைபலம் போதாமல் தங்கள் தலைமையில் சோழநாட்டுப் படையும் வளநாட்டைக் காப்பாற்ற வந்திருக்கிறது என நான் எண்ணிக் கொள்ளலாமா என்றுதான் கேட்கிறேன்.''

''அதற்குப் பதிலாக இப்படி எண்ணிப் பாரேன்! வளநாட்டை மீட்பதற்காக நீயும் பொன்னரும் நடத்துகிற போருக்குத் துணையாக சோழநாட்டு மன்னன் எனது தலைமையில் படைகளை அனுப்பியிருக்கிறான் என்று!''

''இது பெரும் புதிராக இருக்கிறது எனக்கு! தாங்களோ தலையூர்க்காளியின் அமைச்சர்! வளநாட்டை ஆள்பவர்களோ அந்தக் காளியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்கள்! அவர்களது வளநாட்டுக்கு ஆபத்து என்கிறபோது தலையூர்க்காளி அதில் தலையிடுவது இயற்கை! தாங்களோ தலையூர்க்காளியின் அமைச்சராக இருப்பவர்!''

''இருப்பவர் என்று சொல்லாதே! இருந்தவர் என்று சொல்!

சங்கர்; நான் கூறுவதைக் கவனமாகக் கேள்! வளநாட்டு ஆட்சிக்காவலரும் தலையூர்க்காளியின் புரவலருமான செல்லாத்தாக் கவுண்டரின் பொல்லாத போதனைகளே காளிமன்னனுக்கு புனித வேதமாகிவிட்டது. உங்களிருவரையும் மாரிக் கவுண்டன்பாளையத்தில் விடுத்துப் பிரிந்துசென்ற நான் நேராகத் தலையூர்தான் சென்றேன். எனது நோக்கம் தலையூர்க்காளியைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவர வேண்டுமென்பது. ஆனால் திருந்தக்கூடிய அளவுக்கு பக்குவம் பெற்ற அவனது உள்ளத்தைச் செல்லாத்தாக் கவுண்டர் விஷப்பொய்கையாகவே மாற்றி விட்டார். குடையூரில் தலையூர்க்காளியின் படைகள் பிரவேசிக்க வேண்டுமாம் - ஆரிச்சம்பட்டியும் தலையூருக்கு அடிமையாக வேண்டுமாம் - சங்கரமலைக்கோட்டையில் உள்ளவர்கள் - தாய் தந்தையர் உள்ளிட்ட அனைவரும் கைது செய்யப்பட்டுத் தலையூர் சிறைச்சாலைக்குக் கொண்டு வரப்படவேண்டுமாம் - இத்தனை உத்திரவுகளையும் ஏற்று தலையூர்ப் பெரிய தளபதி பராக்கிரமன் படையெடுப்புகளுக்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தொடங்கிவிட்டான். என்னுரையில் எதையும் ஏற்றுக்கொள்ளாத காளிமன்னனிடம் இனிப் பணியாற்றுவதில் பயனில்லையென்று பதவி துறந்தேன். உறையூர்ச் சோழ மன்னனிடம் சென்றேன். உதவிப் படையைப் பெற்றேன். ஓடோடி வந்துள்ளேன். உங்களுக்குத் துணைநிற்பதற்காக!''

மாயவரின் சொற்களைக் கேட்ட சங்கர் நன்றிப்பெருக்குடன் குதிரையை விட்டு இறங்க முயன்றான். ஆனால் மாயவர் அவனைத் தடுத்து, ''வேண்டாம் சங்கர்! நாம் இங்கே தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் தலையூர்க்காளியின் படைகள் இங்கு வந்து சேர்வதற்கு வழிவகுத்து விடுவதாக இருக்கும். எனவே விரைந்து செல்வோம் போர்முனைக்கு!'' என்றார்.

''நான் முதலில் சென்று அண்ணனிடம் தகவல் தெரிவித்து விபரம் கூறுகிறேன்.''

என்றுரைத்த சங்கர், தனது குதிரையை முன்னிலும் பல மடங்கு வேகமாக வளநாட்டு எல்லையில் பொன்னர் போர் புரிந்து கொண்டிருக்கும் இடம் நோக்கிச் செலுத்தினான்.

''தம்பி சங்கர்; சோழநாட்டுப் பெரும்படை துணைக்கு வந்து விட்டது என்று மகிழ்ச்சி அடைந்து விடாதே! சோழமன்னன் என்ன நிபந்தனையோடு படையுதவி செய்துள்ளான் என்பதை அறிந்து கொள்வது மிகவும் முக்கியம்!''

- என்று சங்கரின் உற்சாகத்திற்கு அணைபோட்டுத் தடுத்தான் பொன்னர்.

அதற்குள் மாயவர் தலைமையில் சோழநாட்டுப் படை அங்கு வந்து சேர்ந்தது. பொன்னர் மாயவருக்கு வணக்கம் தெரிவித்து வரவேற்றான் என்றாலும் சங்கரைப்போல் அளவு கடந்த மகிழ்ச்சியுடையவனாக அவன் காணப்படவில்லை.

''தம்பி சங்கர் விபரமனைத்தும் சொன்னான். மிகவும் நன்றி. ஆனால் ஒரு சந்தேகம். அதனை நீக்காவிடில் சோழப்படையின் உதவியைப் பெறுவதில் நாங்கள் தயக்கம் காட்ட வேண்டி யிருக்கும்.''

வீரவடிவத்தில் சங்கரையும், விவேகத்தின் உருவமாகப் பொன்னரையும் கண்டுகளித்த மாயவர், தனது வழக்கமான புன்னகையை நெளியவிட்டுக் கொண்டே, ''என்ன பொன்னர் உனக்குச் சந்தேகம்? அதுவும் இந்த நேரத்தில்? ஆரிச்சம் பட்டியை மீட்டதோடு நிற்காமல் வளநாட்டையும் கைப்பற்ற வந்த நீங்கள் தலையூர்க்காளியின் வலிமைவாய்ந்த படைகளைச் சந்திக்க வேண்டிய நெருக்கடியான கட்டத்தில் வலியவரும் சோழப்படையின் உதவியைப் புறக்கணிக்கிற அளவுக்கு அப் படியென்ன சந்தேகம்?'' என்று வினவினார்.

அருகே ஆரிச்சம்பட்டிப்படையும் வளநாட்டுப்படையும் மோதுகிற ஒலி கேட்டுக் கொண்டேயிருக்கிறது. பிணமாகும் வீரர்கள் எழுப்புகிற கடைசிக் குரல் காற்றில் கலந்து கொண் டிருக்கிறது. வாட்களோடு வாட்கள் ஈட்டிகளோடு ஈட்டிகள் உராயும் சப்தம் காதுகளைச் செவிடுபடச் செய்து கொண்டிருக் கின்றன. இறுதிவெற்றி வளநாட்டுக்குத்தான் கிட்டும் என்பதற் கான அறிகுறிகள். ஆரிச்சம்பட்டிப்படையினால் வளநாட்டுப் படையின் எதிர்ப்பைத் தாக்குப்பிடிப்பது எளிதல்ல என்ற நிலைமை. அந்தச் சூழலிலும் பொன்னர் அமைதியிழக்காமல் நிதானமாகப் பேசினான்.

''சோழப்படையின் உதவியைப் பெற்று நாங்கள் வளநாட்டை செல்லாத்தாக் கவுண்டரின் ஆதிக்கத்திலிருந்து மீட்டுவிடுவதாக வைத்துக்கொள்ளுங்கள். அதற்குப்பிறகு, நாங்கள் சோழ மன்னனின் ஆதிக்கத்தில் அவருக்குக் கப்பம் கட்டுகிறவர்களாக வும் அவரது அதிகாரத்திற்கு உட்பட்டவர்களாகவும் வள நாட்டில் ஆட்சி செலுத்த வேண்டியிருக்குமென்றால்; அந்த நிபந்தனையுடன் கூடிய படை உதவி எங்களுக்குத் தேவை

யில்லை. அதற்குப் பதிலாக நாங்கள் போரில் வீழ்வதே மேல்.''

பொன்னரின் உறுதி கண்டு மாயவர் மெய்சிலிர்த்துப் போனார். இருந்தாலும் பொன்னரின் உறுதியான உள்ளம் எவ்வளவு ஆழமுடையது என்பதை அறிய விரும்பியவர் போல மேலும் சில கேள்விகளை எழுப்பினார்.

''சோழமன்னரின் ஆதிக்கத்தில் வளநாடு இருக்க விரும்ப வில்லை என்கிறாய்; சரி! அப்படியானால் இது வரையில் வளநாடும் அதன் ஆட்சிக்காவலர் செல்லாத்தாக் கவுண்டரும் வேட்டுவமன்னன் தலையூர்க்காளியின் ஆதிக்கத்தில் இருப்பதை மறந்து விட்டாயா?''

பொன்னர் இந்தக் கேள்விக்கு ஒரு நொடிகூடத் தயங்காமல் பதில் அளித்தான்.

''வேட்டுவரில் தலையூர்க்காளியைப் போல ஆதிக்க உணர்வு கொண்டவர்களும் இருக்கிறார்கள். தங்களைப் போன்ற அன் பும் பரந்த மனப்பான்மையுமுள்ள பெரியவர்களும் இருக் கிறார்கள். கொடிய மனங்கொண்டவர் செல்லாத்தாக் கவுண்டர் என்பதால் கொங்குவேளாளர் குலத்துக்கே ஒரு கோடரிக் காம்பாக வாய்த்துவிட்டார். எங்கள் தந்தை குன்றுடையாரைப் போன்ற குணவான்கள் நிறைந்த கொங்குவேளிர் குலத்துக்கே ஒருகேடாக வந்த பிறந்த செல்லாத்தாக் கவுண்டர் வழியும் அவர் மகன் மாந்தியப்பன் வழியும் எங்கள் வழியாக இருக்க முடியாது. யாருக்கும் அடிமையாக இருந்து அரண்மனை வாழ்வு வாழ்வது செல்லாத்தாக் கவுண்டருக்கு விருப்பமான கொள் கையாக இருக்கலாம். தலையூர்க்காளியைவிட வலிமை வாய்ந்த அரசு சோழ அரசு எனினும் அதற்கு அடிமையாக வளநாடு வாழ வேண்டுமென்றால் அந்த நாட்டில் எங்களுக்கு வெற்றி தேவையில்லை. வீழ்ச்சியையே பெருமையாகக் கருதுவோம்!''

''அப்படியானால் வளநாட்டில் நீ விரும்புவது?''

''கொங்குவேளாளரின் தனியாட்சி எங்கள் தலைமையில் நடைபெற்றாக வேண்டும். அது எந்த நாட்டுக்கும் தலைவணங் காத ஆட்சியாக இருத்தல் வேண்டும்.''

பொன்னரின் கம்பீரமானதும் சலனமற்றதுமான இந்தப் பதிலைக் கேட்ட மாயவர், அவனை ஆரத்தழுவிக்கொண்டு உச்சிமோந்தார்.

''உன் விருப்பம் போல் தனியாட்சி - எந்த நாட்டுக்கும் தலைவணங்காத ஆட்சி! உனது நிபந்தனையை ஏற்று சோழப் படை உதவி புரியத் தயார்! ஆனால் - ஒரே ஒரு வேண்டு கோள்; நிபந்தனையல்ல - அதை நீங்களிருவரும் நிறைவேற்றிட வேண்டும்!''

மாயவர் இருவீரர்களின் முகத்தையும் பார்த்தார். இதற்கும் அண்ணனே பதில் கூறட்டும் என்று கருதியவனாய் சங்கர் மௌனமாகவே நின்றான்.

''என்ன வேண்டுகோள்? சொல்லுங்கள்!'' என்றான் பொன்னர்.

''வளநாட்டைக் கைப்பற்றிய பிறகு நீங்களிருவரும் சோழ மன்னர் தரும் வரவேற்பு நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வேண் டும். வெற்றிவிழா விருந்தில் சோழமன்னர் தரும் விருதினைப் பெற்றுக்கொள்ள வேண்டும். முக்கியமாக இளஞ்சிங்கங்களான உங்களைச் சோழமன்னர் காண விரும்புகிறார்.''

மாயவரின் அந்த வேண்டுகோளைப் பொன்னர் - ஏற்றுக் கொண்டான். மன்னரின் விருப்பம் நிறைவேற்றப்படுமென்றான். பிறகு பேச்சுக்கு இடமில்லாமற் போயிற்று. சோழன் அனுப் பிய படை ஆரிச்சம்பட்டிப் படையுடன் இணைந்து கொண்டது. மாயவர் ஒரு பகுதியில் தாக்குதலில் ஈடுபட்டார். பொன்னர் ஒருபுறமும் சங்கர் ஒருபுறமும் தலைமையேற்று வளநாட்டு எல்லை கடந்து கோட்டையைச் சூழ்ந்து கொண்டனர். தலை யூர்க்காளியின் படையினர் வளநாட்டில் பொன்னர் - சங்கர் தாக்குதல் நடைபெறக்கூடும் என்பதைச் சற்றும் எதிர்பார்க்காத காரணத்தால் ஆரிச்சம்பட்டிக்கு ஒரு சிறுபகுதி அனுப்பப்பட்டது போக வேறு இரு பெரும் பகுதி வீரர்கள் குடையூர் நோக்கியும், சங்கரமலைக்கோட்டை நோக்கியும் சென்று விட்டனர். அத னால் வளநாட்டை நெருங்கிவிட்ட பொன்னர் - சங்கரையும் சோழப்படையுடன் வந்துவிட்ட மாயவரையும் எதிர்த்து வாகை சூடுகிற அளவுக்குத் தலையூர்ப் படையின் எண்ணிக்கை அமைய வில்லை. ஆரிச்சம்பட்டியிலிருந்து மாந்தியப்பன் விரட்டப் பட்ட காரணத்தால் தலையூர்ப்படை அங்கும் தனது வலிமை யைக் காட்டமுடியாமல் வளநாடு வந்து சேர்ந்தது. அது வரு வதற்குள் பொன்னர் - சங்கர் சோழப்படையுடனும் ஆரிச்சம் பட்டிப் படையுடனும் வளநாட்டுக் கோட்டைக்குள் புகுந்து விட்டனர். கோட்டையில் பறந்த வளநாட்டுக் கொடிமரம் அடி யோடுவெட்டிசாய்க்கப்பட்டது.உயிர் தப்பினால் போதுமென்று மாந்தியப்பன் சில வீரர்களுடன் சுரங்கப்பாதையொன்றின்

வழியாகக் கோட்டையிலிருந்து வெளியேறி வளநாட்டை விட்டே ஓட்டம் பிடிக்கவேண்டியதாயிற்று. இத்தனையும் முடிந்தபிறகு அங்குவந்து சேர்ந்த தலையூர்ப்படை எண்ணிக் கையில் மிகக் குறைவாக இருந்தபடியால் - எதிர்பார்த்ததை விட பெரும்பலத்துடன் வெற்றிமுரசு கொட்டிக் கொண்டிருந்த பொன்னர் - சங்கர் இருவரையும் எதிர்த்து முன்னேற முடியாமல் திரும்பிச் சென்றது.

வளநாடு வசப்பட்டது என்ற பெருமகிழ்ச்சி பொங்கிட பொன்னரும் சங்கரும் மாயவருடன் அந்த மாளிகைக்குள் நுழைந்தனர்.

மாளிகையின் எந்த அறையை நோக்கினும் அவிழ்ந்து கிடக் கும் ஆரணங்குகளின் ஆடைகள், கவிழ்ந்து கிடக்கும் மதுக் கலயங்கள் இவைகளே பெருங்காட்சியாக இருந்தது. அனைத் தும் அரை நாழிகைக்குள் தூய்மைப்படுத்தப்பட வேண்டு மென மாயவர் ஆணை பிறப்பித்தார். ஆரிச்சம்பட்டி வீரர் களும் சோழப்படை வீரர்களும் மாயவரின் ஆணையேற்று மாளிகையில் நிறைந்திருந்த அத்தகைய மாசுகளை அகற்றினர்.

கோட்டை கொத்தளம் - அரண்மனைப் பகுதிகள் அனைத் திலும் பொன்னர் - சங்கர் தமது வீரர்களைக் கொண்டு காவலைப் பலப்படுத்தினர். வளநாட்டு வீரர்கள் பலர் பொன் னர் - சங்கர் முன்வந்து வீழ்ந்து தங்களை மன்னித்தருளுமாறு மன்றாடிக் கேட்டுக்கொண்டனர்.

வளநாட்டு மக்கள் பல்லாயிரக்கணக்கில் கோட்டை முகப் பில் குழுமினர். அநியாய ஆட்சிக்கு முடிவு கட்டப்பட்ட மகிழ்ச்சியை விழாவாக எடுத்தனர். எங்கணும் ''பொன்னர் - சங்கர் வாழ்க!'' என்ற முழக்கம்!

இருமருங்கிலும் பொன்னர் - சங்கரை அணைத்தவாறு மாய வர் கோட்டைமுகப்பின் உச்சியில் வந்து நின்றார். குழுமியிருந்த மக்கள் வான்முட்ட வாழ்த்தொலியெழுப்பினர். மாயவர் அனைவருக்கும் கேட்கும்படியாக ஓங்கிய குரலில் பேசினார்.

''அநீதி - அராஜகம் - பழிவாங்கும் தன்மை - அடிமை மனப்பான்மை - காட்டிக் கொடுக்கும் கயமை - கொடுங் கோன்மை - எல்லாவற்றுக்கும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டு இன்று முதல் உண்மையான சுதந்திர ஆட்சி வளநாட்டில் மலர்கிறது. இந்த ஆட்சியைக் கட்டிக்காக்க இருக்கும் இணை

யற்ற வீரர்கள் இதோ! இவர்களை உங்களுடன் சேர்ந்து நானும் வாழ்த்துகிறேன்!''

மாயவர் வாழ்த்துடன் பல்லாயிர மக்களும் தமது வாழ்த்துக் களையும் இணைத்தனர். பொன்னர் - சங்கர், தங்கள்பால் அன்புமழை பொழியும் வளநாட்டு மக்களைப் பார்த்துக் கைகளை அசைத்து நன்றியுணர்வை வெளிப்படுத்தினர்.

அப்போது கோட்டைக்குள்ளே ஒரு குதிரை மிக வேகமாக வந்து நுழைந்தது. அதைக் காவலர்கள் தடுத்து நிறுத்துவதை பொன்னர் - சங்கர் பார்த்து விட்டனர். குதிரையில் இருப்பது வையம்பெருமான் என்பதறிந்து உள்ளே அனுமதிக்குமாறு உத்திரவிட்டனர். உத்திரவை எடுத்துச் சென்ற வீரன் காவலர் களிடம் தகவலைக் கூறி வையம்பெருமானை உள்ளே அழைத்து வந்தான்.

வையம்பெருமான் கொண்டு வந்த செய்தி, பொன்னர் - சங்கரை ஆவேசத்தின் உச்சகட்டத்திற்கே தூக்கிச் சென்றது.



# அம்பு மழையில் ஆச்சான் 29

''அமராவதி ஆற்றைக் கடந்து வந்த தலையூர்ப்படை குடையூரை முற்றுகையிட்டுக் கைப்பற்றிக் கொண்டதோடு, குடையூர்; தலையூரின் ஆட்சிக்குக் கீழே வந்துவிட்டது என்பதை அறிவிக்கத் தலையூர்க் காளி மன்னனின் கொடியும் பறக்க விடப்பட்டுள்ளது. தலையூர்ப் படைக்குத் தலைமையேற்றுள்ள தளபதி பராக்கிரமன் அடுத்ததாக சங்கரமலைக்கோட்டை நோக்கி வருகின்றான். காளி மன்னனின் கட்டளைப்படி சங்கரமலைக் கோட்டையில் உள்ள குன்றுடையார் குடும்பத்தினரையும், ஆரிச்சம்பட்டி குடும்பத்தினரையும் கைது செய்வதே பராக்கிரமனின் குறிக்கோள்!''

— வையம்பெருமான் வாயிலாக இச்செய்தி கிடைத்ததும் விலாப்புறத்தில் கணை பாய்ந்த சிங்கம் கர்ச்சனை செய்வது போல சங்கர் முழக்கமிட்டான்:

''இப்போதே நாம் படையுடன் சங்கரமலைக்கோட்டைக்குச் செல்ல வேண்டும். பராக்கிரமனைப் பிடித்து கோட்டைக் கொடி மரத்தில் கட்ட வேண்டும். ஆணையிடுங்கள் அண்ணா!'' எனத் துடித்த சங்கரின் உணர்ச்சிக்கு இம்மியளவும் குறைந்தல்ல பொன்னரின் உணர்ச்சியென்றாலும் கூட அந்த உணர்ச்சியை ஓரளவு கட்டுப்படுத்திக் கொண்டு அவன் சிந்திக்கத் தொடங்கினான். பொன்னர் சிந்திக்கும் போதெல்லாம் அவனது நெற்றியில் கோடுகள் விழுகிற அழகைக் கண்டு பூரித்தவன் சங்கர். இப்போது பூரிப்பு வெளிப்படவில்லை. மாறாக சங்கர் பொறுமையிழந்து காணப்பட்டான். அவனது மனோநிலையைப் புரிந்து கொண்ட மாயவர்; ''சற்று அமைதியாக இரு சங்கர்! அண்ணனின் தயக்கத்துக்கு ஏதாவது அர்த்தமிருக்கும். இந்தத் தயக்கம்; செய்கிற காரியத்தைச் செம்மையாகச் செய்ய வேண்டுமென்பதற்கானதே தவிர அச்சத்தின் விளைவல்ல!'' என்று கூறினார்.

பொன்னரும் தம்பியை அருகழைத்து ''ஆமாம் தம்பி! மாய வர் கூறுவதுதான் சரி! இப்போதுதான் ஆரிச்சம்பட்டியில் போர் நடத்தி முடித்து விட்டு நமது வீரர்கள் களைப்பாறக் கூட நேரமின்றி வளநாட்டுப் போரையும் முடித்திருக்கிறோம். இரண்டிலும் வெற்றிவாகை சூடியிருக்கிறோம். என்றாலும் உட னடியாகத் தலையூர்க் காளியின் தாக்குதலை எதிர்த்து முறி யடிக்க சங்கரமலைக்கோட்டைக்குப் போவதென்றால் அதற் கான திட்டத்தை எப்படி வகுப்பது என்று தான் யோசிக் கிறேன். நமது படை முழுவதும் சங்கரமலைக்குப் போவதென் றால் வளநாட்டுக் கோட்டையின் பாதுகாப்பை எப்படிக் கவ னிப்பது என்பதும் பெரிய பிரச்சினையல்லவா? அதனால் நீ இங்கேயிருந்து வளநாட்டைப் பாதுகாத்துக் கொள்! உனக்குத் துணையாக மாயவர் இருப்பார்! சோழப் படைகளும் இருக் கும்! நான் ஆரிச்சம்பட்டிப் படையுடன் சங்கரமலைக்கோட் டைக்குச் சென்று பராக்கிரமனின் படையை எதிர் கொள் கிறேன்'' என்று பொன்னர் கூறியதை சங்கர் ஏற்றுக் கொள்ள வில்லை.

''அண்ணா! நம்மில் ஒருவர் பராக்கிரமனின் படையை எதிர்த்து முறியடிக்கச் செல்ல வேண்டும் என்பதை ஏற்கிறேன். அந்த ஒருவன் நானாக இருக்க வேண்டும். தாங்கள் இங்கி ருந்து வளநாட்டுப் பரிபாலனத்தையும் பாதுகாப்பையும் கவ னிக்க வேண்டும். பராக்கிரமனை வென்று, தலையூர்ப் படையை புறமுதுகிடச் செய்து விட்டு தாய் தந்தையையும் நமது குடும்பத் தினரையும் வளநாட்டுக்கு அழைத்து வரும் பணியை என் பொறுப்பில் ஒப்படைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.''

சங்கரின் இந்த வேண்டுகோளில் உறுதியும் இருந்தது. அண் ணனிடம் காட்டும் உருக்கம் மிகுந்த பணிவும் இருந்தது. சங் கரின் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளுமாறு மாயவரும் பொன்னரை வலியுறுத்தினார். பொன்னருக்கோ தம்பியைத் தனியாக அனுப்புவதில் விருப்பமில்லை. சங்கர் ஒரு காட் டாற்று வெள்ளம். எதைப் பற்றியும் கவலைப்படாமல் போர் முனையில் புகுந்திடும் இயல்பு கொண்டவன். தலையூர்க் காளி யின் படையினர் ஏற்கனவே பெற்றுள்ள தோல்வியின் காரண மாக வெறி கொண்டு தாக்குவர். அதில் சங்கரையே இழந்து விட நேரிட்டால்? அதைப் பொன்னரால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. அதனால்தான் சங்கருக்குப் பதிலாகத் தானே படை நடத்திச் செல்ல பொன்னர் விரும்பினான். உடன்பிறப்பின் பாசப் பெருக்கைப் புரிந்து கொண்டிருந்த

தம்பி சங்கரும்; தனது உயிரைப் பற்றிக் கவலைப்படாமல் அண்ணனின் உயிரைப் பற்றியே கவலைப்பட்டான்.

''யார் படை நடத்திச் செல்வது? என்பதில் இருவரும் போட்டி போட்டுக் கொண்டு நேரத்தைக் கடத்தி விட்டால்; அதற்குள் பராக்கிரமன் சங்கரமலைக்கோட்டையை முற்றுகை யிட்டு விடக் கூடும். விரைவில் ஒரு முடிவு எடுங்கள்!'' என்று மாயவர் அவர்களைத் துரிதப்படுத்தினார்.

''தாங்களே ஒரு முடிவு சொல்லுங்கள்!'' என்று பொன்னர் மாயவரைக் கேட்டான்.

''எதற்கு வம்பு? திருவுளச் சீட்டு போட்டுப் பார்த்து விட லாமே!'' என்ற மாயவரின் யோசனை ஏற்கப்பட்டது. இரண்டு ஓலைகளில் மாயவரே பெயர்களை எழுதி திருவுளச் சீட்டு தயாரித்தார். பொன்னரும் சங்கரும் தங்கள் பெயரே வர வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொண்டனர். மாயவர் அந்தச் சீட்டுகளைக் குலுக்கிப் போட்டு வையம்பெருமானை விட்டு எடுக்கச் சொன்னார். இரண்டு சீட்டுகளில் ஒன்றை வையம்பெருமான் எடுத்தான். அதை வாங்கி மாயவர் பிரித் தார். பிரித்துப் படிக்கும் வரையில் பொன்னருக்கும் சங்க ருக்கும் இருப்புக் கொள்ளவில்லை. மாயவர் உரக்கப் படித் தார். சீட்டில் சங்கர் பெயரே வந்தது. ''அண்ணா!'' என்று உணர்ச்சி பொங்கப் பொன்னரைச் சங்கர் தழுவிக் கொண் டான். பொன்னரின் கண்கள் கலங்கின.

பொன்னரைப் பார்த்து மாயவர், ''ஆறுதலாக இரு! தம்பி யைப் பற்றி உனக்குக் கவலை தேவையில்லை. சங்கருடன் நானும் செல்கிறேன். என்னுடன் சோழ நாட்டுப் படையில் ஒரு பகுதியும் வருகிறது'' என்றார். அதன் பிறகு பொன்னர் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டான்.

சங்கரும் மாயவரும் வையம்பெருமானும் முன் வரிசையில் குதிரைகளில் அமர்ந்து வழி நடத்தப் படை புறப்பட்டது சங் கரமலையை நோக்கி!

வளநாட்டிலிருந்து சங்கரமலைக்குப் போய்ச் சேரும் தொலை வும், குடையூரிலிருந்து சங்கரமலைக்குப் போய்ச் சேரும் தொலை வும் ஏறத்தாழ ஒன்றேதான்! இருந்தாலும் கூட, குடையூரில் தலையூர் கொடியை நாட்டி விட்டு தளபதி பராக்கிரமன் சங்கரமலையை நெருங்குவதற்கு முன்பு சங்கர் தலைமையில்

சென்ற படைகள் அங்கு போய்ச் சேர நேரம் போதுமானதாக இல்லை.

சங்கரமலைக்கோட்டையும் அந்தக் கோட்டையிருக்கும் சிறிய நகரமும் பராக்கிரமனின் படையால் சூழப்பட்டு விட்டது. கோட்டைக்குள்ளே தாமரைநாச்சியார் சிலம்பாயி இருவரின் பாதுகாப்புடன் முத்தாயி, பவளாயி, அருக்காணித் தங்கம் அவளது தோழி குப்பாயி ஆகியோரை இருக்கச் செய்து விட்டு ராக்கியண்ணனும், குன்றுடையானும் சின்னமலைக் கொழுந்தும் போர்க்கோலம் பூண்டு தலையூர்ப் படையுடன் மோதுவதற்குத் தயாராயினர்.

எவ்வளவு தொலைவிலிருந்தும் வில்லில் அம்புகளைப் பூட்டிக் குறி பார்த்து எதிரிகளைக் கொல்லுவதில் தலையூர் வீரர்கள் திறமைசாலிகள். அந்த வில் வீரர்களை சங்கரமலைக் கோட்டை முகப்பிலிருந்து எதிர்த்தவர்களிடம் ஈட்டி, வாள் போன்ற படைக்கலன்கள்தான் அதிகம்! அவற்றை வைத்துக் கொண்டே தலையூர்ப்படையை சமாளித்துப் பார்த்தனர். இருபுறத்திலும் நூற்றுக்கணக்கான வீரர்கள் பிணங்களாகச் சாய்ந்தனர். காயம்பட்ட வீரர்கள் கதறிக்கொண்டே விழும் ஒலி அந்தக் கோட்டைக்குள்ளே எதிரொலித்தது. அந்தப்புரத்தில் அடைபட்டுக் கிடந்த தாமரைநாச்சியார், எந்த நேரத்திலும் அங்குள்ள பெண்களுக்கு ஆபத்து நேரக் கூடும் என்ற ஐயப்பாட்டுடன் உருவிய வாள் ஒன்றுடன் அவர்களுக்குப் பாதுகாப்பாக நின்று கொண்டிருந்தாள்.

தலையூர்ப் படை சங்கரமலைக் கோட்டையை மிக வேகமாக நெருங்கி வளைத்துக் கொண்டிருக்கும் போது தளபதி பராக்கிரமன் தனது படை வீரர்களின் பக்கம் திரும்பி, கையமர்த்தி நிறுத்தி விட்டு அவன் மட்டும் ஒரு குதிரையிலமர்ந்து கையில் ஓங்கிப் பிடித்த வாளுடன் தனியாகக் கோட்டை முகப்புக்கு வந்தான். ராக்கியண்ணன், குன்றுடையான், சின்னமலைக் கொழுந்து ஆகிய மூவரும் அவனது செயலுக்கு அர்த்தம் புரியாமல் ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். பராக்கிரமன் கம்பீரமான தோரணையில் பேசினான்.

''உங்கள் யாருடைய உயிருக்கும் ஆபத்தில்லாமல் இந்தப் போரை முடிக்க விரும்புகிறேன். தலையூர் மன்னன் எனக்கு இட்டுள்ள ஆணையை நிறைவேற்றுவதே என் லட்சியம்! அதன்படி குடையூர் கைப்பற்றப்பட்டு விட்டது. அடுத்ததாக உங்கள் அனைவரையும் கைது செய்து தலையூருக்கு அழைத்துச் செல்ல

வேண்டும். உங்களையெல்லாம் உயிரோடு தலையூருக்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்பதே என் விருப்பம். என்ன சொல்கிறீர்கள்?''

— போரில் தோற்றுப் போய் கையில் ஆயுதங்கள் ஏதுமின்றி சரணாகதி அடைவதற்குத் தயாராக இருப்பவர்களைப் பார்த்துப் பேசுவது போன்ற ஆணவமும் அலட்சியமும் பராக்கிரமனின் ஒவ்வொரு வார்த்தையிலும் பொதிந்திருப்பதையுணர்ந்த குன்றுடையான் கோபம் கொப்பளிக்க ''பேசாதே நிறுத்து!'' என்று கத்தினான். அப்படிக் கத்தியவன் தலையூர் தளபதியிடம் தனது குதிரையைத் தட்டிவிட்டுக்கொண்டு வந்து நின்றான். வெகுளியென்றும் மசச்சாமி என்றும் அழைக்கப்படும் குன்றுடையானா இவ்வளவு துணிச்சலுடன் தன்னருகே வந்து நிற்கின்றான்? அவனா தன்னைப் பார்த்து, ''பேசாதே நிறுத்து'' என்று ஆணையிடுகின்றான்? என்ற ஆச்சரியம் பராக்கிரமனை ஒரு உலுக்கு உலுக்கியது.

''தலையூர்த் தளபதி பராக்கிரமா! எங்களைக் கைது செய்ய வேண்டிய அவசியம் என்ன வந்தது உங்கள் மன்னனுக்கு?''

குன்றுடையானின் இந்தக் கேள்விக்குப் பராக்கிரமனால் விளக்கமளிக்க முடியவில்லை. அதனால் அவன் ஒரே வரியில் பதில் அளித்தான்:

''இந்தக் கேள்வியை எங்கள் மன்னரிடமே நேரில் கேட்கலாம்!''

தளபதியளித்த பதிலுக்கான பொருளைக் குன்றுடையான் எளிதில் புரிந்து கொள்ளவில்லை.

''ஓகோ! உங்கள் மன்னன் இப்போது இங்கே வரப் போகிறானா?'' என்று கேட்டு, ''மசச்சாமி'' என்று பட்டத்துக்கு எத்துணை பொருத்தமானவன் என்பதை நிரூபித்துக் கொண்டான்.

''நீங்கள் போர் செய்து மாண்டுவிடாமல் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு உங்கள் குடும்பத்தாருடன் தலையூருக்கு வருவீர்களேயானால் அங்கே எமது மன்னன் உங்களைக் கைது செய்ததற்கான காரணத்தைக் கூறுவார் என்கிறேன். இது கூடவா புரியவில்லை'' எனச் சொல்லி, தளபதி பராக்கிரமன் கேலியாகச் சிரித்தான். குன்றுடையான், ராக்கியண்ணனையும் சின்னமலைக்கொழுந்தையும் திரும்பிப் பார்த்து, ''தளபதி

பராக்கிரமன் கூறுவது வேடிக்கையாக இல்லை?'' என்று கேட்டுக் கொண்டே அவர்களருகே வந்தான். ''கைது செய்வதாம்! அதற்கு நாமும் கைகளை நீட்டுவதாம்! நான் நல்லவனாக இருப்பதாலேயே வல்லவனாக இருக்க மாட்டேன் என்று தலையூர்க்காளியும் அவன் தளபதியும் எண்ணி விட்டார்களே!'' என்று கூறி குன்றுடையான் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

''உங்களோடு விவாதித்துக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. என் மன்னரது ஆணையை நிறைவேற்ற வேண்டும். இப்போது கைதாக ஒப்புக் கொள்கிறீர்களா இல்லையா?''

சீறினான் தலையூர்த் தளபதி! குன்றுடையானின் மீசைகள் துடித்தன. அவன் கையிலிருந்த வாளின் பிடியை மேலும் இறுகப் பிடித்துக் கொண்டான்.

''என் பிணத்தையும் என் குடும்பத்தார் பிணங்களையும் வேண்டுமானால் கைது செய்து கொண்டு போ!'' என்று குன்றுடையான் செய்த முழக்கம் இருபுறமும் நின்ற படை வரிசையில் எதிரொலித்தது. இவ்வளவு நேரம் பராக்கிரமனும் குன்றுடையானும் பேசியதைக் குமுறும் நெஞ்சத்துடன் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த ராக்கியண்ணன் தலையூர்த் தளபதியை ஏற இறங்கப் பார்த்தார். வைரம் பாய்ந்த பனை மரம் போன்ற வலிவான உடல். நெருப்புப் பொறிகளைக் கக்கிக் கொண்டிருக்கும் கண்கள். பாறைகளிரண்டைப் பெயர்த்தெடுத்துப் பொருத்தியது போன்ற தோள்கள். உதடுகளின் மேலே இரண்டு கட்டாரிகளை வைத்தது போல் மீசை. உயர்ந்து வளர்ந்து கம்பீரமாகக் காட்சியளிக்கும் குதிரையே கூட அவனைத் தாங்க முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது. ஒரு பார்வையிலேயே தளபதி பராக்கிரமனின் வலிமையை முழுமையாக உணர்ந்து கொண்ட ராக்கியண்ணன் அவனிடம் பேச்சுக் கொடுத்தார்:

''தலையூர்த் தளபதியே! எங்களையெல்லாம் கைது செய்து கொண்டுவர வேண்டும் என்பதுதானே உனது மன்னன் விருப்பம்?''

''உங்களைக் கைது செய்வதற்கு மாரிக்கவுண்டன்பாளையம் செல்ல வேண்டுமேயென எண்ணியிருந்தேன். அந்த வேலையும் இல்லாமற் போய் விட்டது.''

''மிகவும் நன்றி! என்னையும் சேர்த்துத்தான் ''எங்களையெல்லாம்'' என்று குறிப்பிட்டேன். நாங்கள் கைதாவதைப்

பற்றிக் கவலைப்படவில்லை. ஆனால் ஒன்று; தலையூர்க் குடும்பத்து இளைஞர்களுக்கு; ஏன் உனது மன்னன் உட்பட பலருக்கு போர்ப் பயிற்சி அளித்த பாரம்பரியத்தில் வந்தவன் நான்! எனவே என்னைக் காட்டிலும் ஒரு பெரிய வீரன் என்னைக் கைது செய்வதாக இருந்தால் நான் மகிழ்ச்சி அடைந்திருப்பேன்!''

''உமது கேலியும் கிண்டலும் எனக்குப் புரிகிறது. உம்மைக் காட்டிலும் ஒரு பெரிய வீரன் உமது எதிரில் நிற்கிறான் என்பதை இன்னமும் நீர் உணர்ந்து கொள்ளாதது பெரிய வேடிக்கை!''

''வேடிக்கையாகக் கூட உன்னை ஒரு வீரன் என்று வர்ணித்துக் கொள்ளாதே! என்னைக் காட்டிலும் நீ பெரிய வீரன் என்பது உண்மையானால் அதை இப்போதே இங்கேயே நிரூபித்துக் காட்ட வேண்டும். நிரூபித்தால் நாங்கள் அனைவருமே உன் பின்னால் கை கட்டிக் கொண்டு கைதிகளாகத் தலையூர் வருவதற்குத் தயார்!''

''எப்படி நிரூபிக்க வேண்டும்?''

''நீ கொண்டு வந்துள்ள பெரிய படையும், இங்குள்ள சிறிய படையும் மோதுவதால் உனது வீரத்துக்குப் பெருமையில்லை. என்னை விட நீ வீரத்தில் சிறந்தவனா என்ற கேள்விக்கு விடையளிக்க உனக்கு ஒரு வாய்ப்பு தருகிறேன். நாம் இருவரும் தனியாக மோதிப் பார்ப்போம். அதாவது மற்போர் புரிவோம். நான் உன்னிடம் தோற்று விட்டால் எங்கள் அனைவரையும் கைது செய்து கொண்டு போக உனக்கு தடையின்றி அனுமதி அளித்ததாக அர்த்தம்! என்ன சொல்லுகிறாய்?''

''ராக்கியண்ணரே! என் உடல் வலிவையும் உள்ளத்து உறுதியையும் ஈசற்பூச்சியின் சிறகுகள் என்று கருதி விட்டீர்! என்னிரு கரங்களும் ராஜாளிப் பறவையின் இறக்கைகள் என்பதை மெய்ப்பித்துக் காட்டுகிறேன். உமது நிபந்தனையை ஏற்க நான் தயார்!''

தலையூர்த் தளபதி தனது கையிலிருந்த ஆயுதங்களைக் கீழே வீசி விட்டுக் குதிரையிலிருந்து குதித்து மற்போருக்கு ஆயத்தமாகத் தோள் தட்டி நின்றான். ராக்கியண்ணனும் தன்னிடமிருந்த வாள், ஈட்டி, கேடயம் ஆகியவற்றைக் கீழே போட்டு விட்டு மற்போருக்கு முன் வந்தார். குன்றுடையானும் சின்ன

மலைக்கொழுந்தும் ராக்கியண்ணன் பராக்கிரமனுடன் மோது வதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு அசைவற்று நின்றனர். கோட்டையைக் காத்து நின்ற படை வரிசையும், எதிரே கோட்டையைத் தாக்க வந்த தலையூர்ப் படை வரிசை யும்; திடீரென அங்கு அமைந்து விட்ட அந்த மற்போரைக் கவனிக்கத் தொடங்கின.

இருமலைகள் மோதுவது போல பராக்கிரமனும் ராக்கி யண்ணனும் மோதினர். முற்றாத இளம் வயதுடைய பராக்கிர மன்; முதிர்ந்து தோன்றும் ராக்கியண்ணன் மீது மான் குட்டி போலத் துள்ளிப் பாய்ந்து புலி போலக் கட்டிப் புரண்டான். இப்படிப் பல்வேறுவிதமான மற்போர் முறைகளைப் பலருக் குக் கற்றுத் தந்த ஆசானல்லவா ராக்கியண்ணன்; அதனால் அவனது துள்ளலையும் துடுக்குத் தனத்தையும் அவரால் சமா ளிக்க முடிந்தது. இருவரும் பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டு ஒருவரையொருவர் கட்டிப் பிடித்து உருட்டிட முனைந்த போது; நாட்டுச்செக்கு சுழலும்போது எழும் ஓசையை நினைவுபடுத்தியது.

இப்படியோர் போர் கோட்டை முகப்பில் நடைபெறுவதைக் கேள்வியுற்று கோட்டைக்குள்ளிருந்து தாமரைநாச்சியார், சிலம் பாயி, முத்தாயி, பவளாயி, அருக்காணித் தங்கம், குப்பாயி ஆகியோர் பரபரப்புடன் ஓடிவந்து பலகணி வழியாகப் பார்வையைச் செலுத்தி பதற்றமுடன் நின்று கொண்டிருந்த னர். எத்தகைய நிபந்தனையுடன் அந்த மற்போர் நடைபெறு கிறது என்பதையும் அவர்கள் தெரிந்து கொண்டதால் ராக்கி யண்ணன் வெற்றியடைய வேண்டுமென்பதில் பேரார்வம் காட் டினர். அவருக்குக் கிடைக்கும் வெற்றியில்தான் தங்களின் எதிர் கால வாழ்வே இருக்கிறது என்பதால் செல்லாண்டியம்மனுக் குப் பிரார்த்தனை செய்து கொண்டு மற்போரை உற்று நோக் கியவண்ணமிருந்தனர். ராக்கியண்ணனின் லாவகமான பிடி யில் சிக்கிக் கொண்ட பராக்கிரமன் தரையில் விழுந்து விடக் கூடாது என்பதில் மிகக்கவனமாக இருந்து, இறுதியில் அந்தப் பிடியைத் தளர்த்தி அவரை உதறிவிட்டு சிலிர்த்து நின்றான். அப்போது குன்றுடையானும் மற்றவர்களும் அதிர்ச்சியடைந் தனர். ஆனால் ராக்கியண்ணன் கடுகளவுகூட மனந்தளர்ந்தவ ராகக் காணப்படாமல் மதயானையொன்று அடிபட்ட வேகத் தில் பிளிறுவதைப் போல ஒலியெழுப்பிக் கொண்டு பராக்கிர மன் மீது பாய்ந்தார்.

அவர் பாய்ந்த வேகத்தில் அவரைப் பந்தாடி விட வேண்டு மென்று திட்டமிட்டு பராக்கிரமன் உயர எழும்பி அவர் தலைக்கு நேராக கால்களை உயர்த்தி, கால்களாலேயே அவ ரது கழுத்தைக் கத்தரிப்பிடி போட்டு நசுக்கிவிடத் தீர்மானித் தான். அவ்வாறே ராக்கியண்ணனின் கழுத்து அவனது இரு கால்களுக்கிடையே சிக்கிக் கொள்ள இருந்தது. இதை எதிர் பார்த்தவர் போல அவர், தனது பலம் பொருந்திய கைகளைத் தனது கழுத்தருகே கோத்து வைத்துக் கொண்டு, ராக்கியண்ண னின் கால்கள் கழுத்தைப் பின்னிட முனைந்த போது; அவை களை இறுக்கிப் பிடித்துக் கொண்டு சுழற்றத் தொடங்கினார். ராக்கியண்ணனிடம் வசமாக மாட்டிக் கொண்ட பராக்கிரமன் ராட்டினம் சுழல்வது போலக் கரகரவெனச் சுழன்றான். இன் னும் ஓரிரு விநாடிகள்தான் பாக்கி; ராக்கியண்ணன், பராக்கிர மனை வயலோரக் களத்தில் கதிர் அடிப்பது போல அடிக்கப் போகிறார் என்பதைத் தலையூர்ப்படை வீரர்கள் உணர்ந்து கொண்டு பதைத்துப் போயினர். அவர்கள் எதிர்பார்த்தபடியே பராக்கிரமனை ராக்கியண்ணன் பூமியில் ஒரு மோது மோதி னார். அந்த மோதலில் அவன் போட்ட சப்தம் பயங்கரமாக இருந்தது. அடுத்து ஒரு சுழற்சி! அதைத் தொடர்ந்து இன் னொரு மோதல்! மேலும் ஒரு சுழற்சியையும் மோதலையும் பராக்கிரமன் தாங்க மாட்டான்; பிணமாகி விடுவான் என்பது எல்லோருக்கும் தெளிவாகி விட்டது.

அந்த நேரத்தில் தலையூர்ப் படையின் துணைத் தளபதிகள் தங்கள் வீரர்களைப் பார்த்து கையை அசைத்தனர். வீரர்கள் தயாராயினர். துணைத் தளபதிகள் தங்கள் வில்லில் கணை களைப் பூட்டி ராக்கியண்ணன் மீது பாய விட்டனர். தலை யூர்ப்படை வீரர்கள் அனைவரது வில்லிலிருந்தும் கொடிய கணைகள் பறந்தன. அத்தனை கணைகளும் ராக்கியண்ணன் உடலில் தைத்தன. ஒன்று, இரண்டு, பத்து, நூறு எனக் கணைகள் தாக்கிடவே ராக்கியண்ணன் நிலை தடுமாறினார். அவர் கெட்டியாகப் பிடித்துச் சுழற்றிக் கொண்டிருந்த பராக் கிரமன் விடுபட்டு எழுந்தோடித் தனது படை வீரர்களுடன் சேர்ந்து கொண்டான்.

அம்பு மழையில் உடலெங்கும் சல்லடைக் கண்களாக ரத்தம் வழிய வழிய ராக்கியண்ணன் ஆகாயத்தை நோக்கியவாறு பூமி யில் சாய்ந்தார்.

அவர் சாய்ந்த அடுத்த கணமே சங்கர் தலைமையில் வள நாட்டிலிருந்து புறப்பட்ட படையும் அங்கு வந்து சேர்ந்தது.

சங்கரமலைக்கோட்டையை நோக்கித் தலையூர்ப்படையினர் அம்புகளைப் பொழிவதை மட்டுமே கண்ட சங்கர், தனது படைகளுக்கு ஆணையிட்டான்; தலையூர்ப்படையின் மீது விரைந்து தாக்குதல் நடத்தும்படியாக!

தலையூர்ப்படையின் கணை வீசும் திறமைக்கு ஈடு கொடுக்கும் வகையில் சங்கருடனும் மாயவருடனும் வந்த சோழப் படையைத் தாக்குப் பிடிக்க முடியாமல் பராக்கிரமன் திணறினான். திடீரென சோழப்படை வந்திருப்பதும், அப்படையின் ஒரு பகுதிக்கு மாயவர் தலைமையேற்றிருப்பதும் பராக்கிரமனைப் பெருங்குழப்பத்திலாழ்த்தவே, தனது படையைப் பின் வாங்கச் செய்வதைத் தவிர வேறு வழி தெரியாமல் திகைத்தான்.

சிறிது நேரத்தில் தலையூர்ப் படை பின்வாங்கி ஓட ஆரம்பித்தது. அவர்களைத் துரத்திச் சென்று முழுமையாக அழித்தொழிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் குதிரையைத் தட்டிவிட்ட சங்கரின் கண்ணெதிரே குருதி வெள்ளத்தில் ராக்கியண்ணன் கிடப்பது தெரிந்தது.



# 30 கண் விழித்தார்; கடமை உணர்ந்தார்!

தாயாகத் தந்தையாகத் திகழ்ந்து ஆளாக்கி விட்ட ஆசான் ராக்கியண்ணன் படுகாயமுற்று மயக்கம் தெளியாத நிலையில் சங்கரமலைக் கோட்டையில் மருத்துவர்கள் சூழ மரணப் படுக்கையில் இருக்கிறார் என்ற செய்தி கேட்டுப் பொன்னர் வளநாட்டிலிருந்து உடனடியாக வந்து சேர்ந்தான். கோட்டை மாளிகையின் காற்றோட்டமிக்க தனி அறையொன்றில் ராக்கியண்ணனுக்குத் தேவையான சிகிச்சைகள் அனைத்தும் செய்து அவரை எப்படியாவது உயிர் பிழைக்க வைத்திட வேண்டுமென்று குன்றுடையான் இட்ட கட்டளையை நிறைவேற்ற மருத்துவர்கள் படாதபாடு பட்டுக் கொண்டிருந்தனர். அவரது உடலில் கணைகளால் துளைக்கப்பட்டு குருதி வழிந்து கொண்டிருந்தது போலவே அவர் நிலை கண்டு பொன்னர் - சங்கர் கண்களிலும் நீர் வழிந்து கொண்டிருந்தது.

போர் முரசத்தின் ஒலியும், வாட்கள் ஈட்டிகள் மோதிய ஒலியும், கோட்டைச் சுவர்களின்மீது அம்புகள் பாய்ந்த ஒலியும், வீரர்கள் முடுக்கி விட்ட குதிரைகள் எழுப்பிய குளம்பொலியும்... இப்போது அடங்கிப் போய் சங்கரமலைக் கோட்டையின் உள்ளும் புறமும் அமைதி குடி கொண்டிருந்தது. ஆசான் உயிர் பிழைத்துக் கொள்வாரா? எப்போது உணர்வு திரும்பும்? ஒரு வேளை உணர்வு திரும்பாமலே உயிர் பிரிந்து விடுக் கூடுமோ? இந்தக் கவலையால் தாக்குண்டு குன்றுடையான் குடும்பத்தாரும் ஆரிச்சம்பட்டி குடும்பத்தாரும் ஆசான் இருந்த அறையைச் சூழ்ந்தே அமர்ந்திருந்தனர். அவர்களில் யாருக்கும் பசியெடுக்கவில்லை. தூக்கம் வரவில்லை. அச்சடித்த பதுமைகள் போல் அவர்கள், ''ஆசான் பிழைத்துக் கொள்ள வேண்டும்'' என்ற ஒரே பிரார்த்தனையுடன் அந்த அறையை ஒட்டிய தாழ்வாரத்தில் இருந்தனர். குப்பாயி ஒருத்தி மட்டுமே தைரியத்துடன் அங்குமிங்கும் ஓடி மருத்துவர்களுக்கு உதவியாக அவர்கள் கேட்ட சிகிச்சைப் பொருட்களை கொண்டு வந்து

கொடுத்துக் கொண்டிருந்தாள். அவள் இதயத்தையும் துயரம் அழுத்திக் கொண்டிருந்த போதிலும், தேவையான கடமை களைச் செய்யாமல் தானும் சோர்ந்து கிடக்கக் கூடாது என்ற தெம்பு அவளைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தது. மருத் துவர்கள் ஆசான் பிழைத்துக் கொள்ளக்கூடும், அதற்கான அறிகுறிகள் இருக்கின்றன என்று எவ்வளவோ நம்பிக்கை தெரிவித்துக் கூறியும் கூட பொன்னர் - சங்கர் இருவரும், ஆசான் கிடத்தப்பட்டிருந்த கட்டில் அருகே சிலைகளைப் போல் நின்றவர்கள் நின்றவர்கள்தான்! அந்த இடத்தை விட்டு அகலவே இல்லை. அவர்களது மனக்கண் முன்னே கடந்த கால நிகழ்ச்சிகள் ஓடிக் கொண்டிருந்தன. ஆசானின் தோளி லும் மடியிலும் தவழ்ந்து விளையாடியது - அவர் அருகில் உட்கார்ந்து உண்டது - அவர் பக்கத்தில் படுத்து உறங்கியது - அவர் கல்வி புகட்டியது - களம்புகு வீரர்களாக அவர்களை ஆக்குவதற்குப் பயிற்சி அளித்தது - அன்பு காட்டியது - அர வணைத்து மகிழ்ந்தது - அறிவுரை கூறியது - இவையனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாக நிழலாடியதால் நெஞ்சுத் துடிப்பு இரட்டிப்பான நிலைமையில் அவர்கள் நின்று கொண்டிருந்தனர்.

குன்றுடையானும் தாமரை நாச்சியாரும் ஒவ்வொரு மருத்து வராக ஓடியோடி சந்தித்து; எப்படியிருக்கிறது? எப்படியிருக் கிறது? என்று கேட்பதிலே பரபரப்பு காட்டினர். மருத்துவர் கள் என்ன பதில் சொல்லியிருப்பார்கள்? நல்ல பதிலா? அல்லவா? என்பதை குன்றுடையான், தாமரை இருவரின் முக பாவங்கள் மூலமாக அறிந்து கொள்ள மற்றவர்கள் துடித் தனர். ஆசான் அடிபட்டு வீழ்ந்து உணர்விழந்து ஒரு முழு நாளும் முடிந்து அடுத்த நாளும் வந்து விட்டது; இன்னமும் அவர் கண்ணிமைகள் அசையக் கூட இல்லை. சுவாசம் மட் டுமே ஓடிக் கொண்டிருந்தது.

மறுநாள் நள்ளிரவு! அதுவரையில் அந்தக் கோட்டைக்குள் யாரும் உண்ணவுமில்லை, உறங்கவுமில்லை! மருத்துவர்கள் தீவிர சிகிச்சையில் மிகுந்த நம்பிக்கையுடன் ஈடுபட்டிருந்தனர். அவர்களின் நம்பிக்கை வீண் போகாமல் ஆசானின் உடலில் ஒரு அசைவு தெரிந்தது. மெல்லிய முனகல் சப்தமும் எழுந் தது. தங்களின் முயற்சிக்கு வெற்றி கிட்டுகிறது என்ற மகிழ்ச்சி யுடன் மேலும் விரைந்து சிகிச்சைகளை ,மருத்துவர்கள் மேற் கொண்டனர். சிறிது நேரத்திற்குப் பிறகு பெரிய மருத்துவர்; பொன்னர் - சங்கர் இருவரையும் அருகழைத்து குரல் கொடுத் துப் பார்க்கச் சொன்னார்.

தழுதழுத்த குரலில் அவர்கள் இருவரும், ''அய்யா! அய்யா!'' என்று அழைத்தனர். அப்போது துயரத்தை அடக்க முடியாமல் விம்மி அழுதே விட்டனர். தனது அருமை மாணவர்கள் மட்டு மல்ல; வளர்ப்பு மகன்களின் குரல் கேட்டு ஆசானின் விழி கள் மெல்லத் திறந்தன! அந்த விழிகளையே நோக்கியவாறு பொன்னரும் சங்கரும் தமதுடல் பதற வாய் விட்டுக் கதறி விட்டனர். கரங்களைத் தூக்கி அவர்களை அமைதிப்படுத்த முடி யாத அந்த நிலையிலும், ஆசான் தனது விழியசைவின் மூலம் அவர்களைக் கவலைப்படாதிருக்குமாறு கேட்டுக் கொண்டார். ஏதோ பேச வேண்டும் போலிருந்தது அவருக்கு! ஆனால் பேச முடியவில்லை.

அதற்குள் மருத்துவர்கள் ஆசானைப் பார்த்து அமைதியா யிருக்கும்படி சைகை மூலம் கேட்டுக் கொண்டனர். ஆசானின் விழிகள் பொன்னர் - சங்கரையும் அவர்களருகே, சற்று தொலைவில் நின்று தன்னையே கவலை தோய்ந்த முகத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும் முத்தாயி, பவளாயி இருவரையும் நோக்கின! ஏனோ தெரியவில்லை - அப்போது ஆசானின் கண்களும் கலங்கின! கலங்கிய விழிகளில் எட்டிப் பார்த்த நீர்த்துளிகளை அருகில் இருந்த குப்பாயி, தனது விரலால் துடைத்து விட்டாள்.

பெரிய மருத்துவர் , பொன்னர் - சங்கரின் தோள்களைப் பிடித்து அணைத்தவாறு அழைத்துக் கொண்டு குன்றுடை யான், தாமரை, சின்னமலைக் கொழுந்து மற்றும் குடும்பத்தார் இருக்கும் இடத்துக்கு வந்தார். அவர்கள் அனைவரும் பெரிய மருத்துவரின் வாயசைவையே ஆவலுடன் பார்த்துக் கொண்டி ருந்தனர்.

''ஆசானுக்கு உணர்வு திரும்பியுள்ளது. இது ஒரு நல்ல அறிகுறி. அவர் உயிர் பிழைத்து விடக் கூடும் என்பதில் எனக் குப் பெரும் நம்பிக்கையே ஏற்பட்டுள்ளது. அதனால் நீங்கள் எல்லோரும் சிறிது பசியாறி உறங்கி ஓய்வெடுத்துக் கொள்ளுங் கள். அவர் அருகிலேயே இருக்க வேண்டுமென்று உங்களுக்கு ஆசை இருக்கும். அது இந்தச் சமயம் அவரது உடல் நிலைக்கே ஏற்றதல்ல! உங்களையெல்லாம் பார்க்கும்போது அவர் உணர்ச்சி வயப்படக் கூடும்! அது இயல்பு! அப்படி உணர்ச்சி வயப் படுவது அவரது நலத்துக்குத்தான் கேடு! தயவுசெய்து நீங்கள் அனைவரும் இங்கிருந்து சென்று ஓய்வு எடுத்துக் கொள்ளுங் கள். காலையில் அவர் வாய் திறந்து பேசக் கூடிய அளவுக்கு நலம் பெறுவார்.''

மருத்துவரின் இந்த வேண்டுகோள், எல்லோருடைய வயிற்றிலும் பால் வார்த்தது போலிருந்தது. தாமரைநாச்சியார் மட்டும் மருத்துவரைப் பார்த்து, ''அய்யா! நாங்கள் யாராவது ஒருவர் இங்கு உதவி ஒத்தாசைக்கு இருக்கிறோமே?'' என்று கேட்டாள். அதற்குள் குப்பாயி முந்திக் கொண்டு, ''அதுதான் நானிருக்கிறேனே!'' என்றாள். பெரிய மருத்துவரும், ''ஆமாம்! ஆமாம்! இந்தப் பெண் ஒருத்தி போதும்; படு சுட்டி! இந்தப் பெண் இருந்தாலே பத்து மருத்துவர்கள் பக்கத்தில் இருப்பது போல!'' என்று குப்பாயியைத் தட்டிக் கொடுத்தார்.

குப்பாயியை மட்டும் ஆசானின் பக்கத்தில் விட்டு விட்டு மருத்துவரின் வற்புறுத்தலின் பேரில் அங்கிருந்து செல்வதற்கு மனமின்றி மற்றவர்கள் அந்த இடத்தை விட்டகன்று அவரவர்கள் அறைகளை நோக்கி நடந்தனர். அருக்காணித் தங்கம், குப்பாயியைக் கூப்பிட்டு அவள் காதோடு காதாக, ''உனக்குக் களைப்பாயிருந்தால் என்னைக் கூப்பிடு! நான் வந்து கவனித்துக் கொள்கிறேன்'' என்றாள். ''எனக்கொன்றும் களைப்போ அலுப்போ வராது! தேவையானால் கூப்பிடுகிறேன் போ!'' என்று கூறி, குப்பாயி - அருக்காணித் தங்கத்தை அனுப்பி வைத்தாள்.

நள்ளிரவு நகர்ந்து, காலம்; விடியற்பொழுதை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. ஆசான், உணர்வு திரும்பியவராக ஓரளவு நலம் பெற்றவர் மருத்துவர்களின் யோசனைப்படி தூங்குவதற்கான மருந்து கொடுக்கப்பட்டு நன்றாக அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார். உதவி மருத்துவர்கள் மிகக் களைப்புற்றிருந்த காரணத்தால் அவர்களையெல்லாம் பெரிய மருத்துவர், பக்கத்து அறையில் சென்று ஓய்வெடுக்கக் கூறியிருந்தார். அத்துடன் அவரும் குப்பாயியிடம் கூறி விட்டுச் சற்று கண்ணயர; ஆசான் படுத்திருக்கும் கட்டிலையொட்டிய திரைமறைவில் ஒரு சாய்வுப் பலகையில் கால் நீட்டிப் படுத்துக் கொண்டார். ஏறத்தாழ இரண்டு முழு நாட்கள் ஒருக்கணமும் ஓய்வின்றி சிகிச்சையில் ஈடுபட்டிருந்ததால் பெரிய மருத்துவர் குறட்டை விட்டுத் தூங்கத் தொடங்கினார். அந்தக் குறட்டைச் சப்தம் கேட்டு குப்பாயி குழம்பிப் போனாள்.

''பாவம்! மிகுந்த அயர்வு காரணமாக இப்படிக் குறட்டை விடுகிறார். எழுப்பினாலோ - தூக்கம் கலைந்து விடும். அதனால் எழுப்பவும் சங்கடமாக இருக்கிறது. அதே நேரம் அந்த ஒலியினால் ஆசான் விழித்துக் கொள்ளக் கூடும். இப்போது என்ன செய்வது?''

இந்தக் குழப்பம் நீண்ட நேரம் நீடிக்கவில்லை! காரணம்; அதற்குள் ராக்கியண்ணன் விழித்துக் கொண்டது மட்டுமல்ல - தலையை இப்படியும் அப்படியும் அசைத்து, தன்னருகே குப்பாயி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். குப்பாயி, முகம் ஏதோ மந்திர தந்திரத்தில் மலர்ந்தது போல் திடீரென மலர்ந்தது. ஆர்வத் துடிப்புடன் மெல்லிய குரலில் அவரைப் பார்த்து ''அய்யா!'' என்றாள்! ''என்னம்மா!'' என்று ஆசான் மிகச் சன்னமான தொனியில் கேட்டதும் அவளுக்கு இருப்பு கொள்ள வில்லை. உடனடியாக ஓடி பெரிய மருத்துவரைக் கூப்பிட வேண்டும் போல் தோன்றியது. அதனால் பரபரப்பாக எழுந்தாள். அவளது துடிப்பை உணர்ந்து கொண்டவர் போல, ஆசான் - அவளைப் பார்த்துக் கையசைத்து, ''வேண்டாம்; அவர் தூங்கட்டும்; நீ உட்கார்!'' என்றார்.

இத்தனை வார்த்தைகளை ஆசான் பேசியது கேட்டு, குப்பாயி அதிர்ந்து போனாள்! உடலில் ஒரு இடம் கூட மிச்சமின்றி அம்புகள் பாய்ந்து, அந்த அம்புகள் இழுத்துப் பறித்து எடுக்கப்பட்ட இடங்களில் எல்லாம் ரத்தம் கசிந்து கொண்டிருப்பது இன்னமும் அறவே நிற்காத இந்த நிலையில் ஒரு மனிதர், உணர்வு திரும்பப் பெற்று - சரளமாகப் பேசக்கூடிய வலிமையும் கொண்டிருக்கிறார் என்றால்; ஏ, அப்பா! எத்துணை உள்ள உரம் பெற்ற வீரராக, தீரராக இருக்க வேண்டுமென்று ஆச்சரியத்தில் மூழ்கினாள்! ஒருவேளை அணையப் போகும் சுடர் என்பார்களே; அப்படி ஏதாவது? அய்யோ அவளால் அந்த எண்ணத்தை நெஞ்சில் சுமக்கவே முடியவில்லை. அவளையறியாமல் தனது கரங்கள் கொண்டு ஆண்டவரைத் தொழுது கொண்டே பிரார்த்தனை செய்தாள். பிறகு ஆசானைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அவர் ஏன் தன்னை உட்காரச் சொன்னார் என்ற கேள்விக் குறி ஆவலுடன் எழுந்து நின்றது. மீண்டும் ஒரு முறை ஆசானை நோக்கி, ''அய்யா! ஒரு கிண்ணம் பால் சாப்பிடுங்கள்!'' என்றாள். சொல்லிக் கொண்டே பால் கிண்ணத்தை அவரது இதழ்களின் இடுக்கில் மெல்லக் கவிழ்த்தாள். அவருக்கும் நா உலர்ந்திருந்ததால் சிறிது பாலருந்தித் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டார். அவரது முகத்தையே குப்பாயி உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆசான் மீண்டும் பேசினார். ''குப்பாயி! பொன்னர் - சங்கர் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்களா?'' இதைக் கேட்கும்போது அவர் கண்களில் பாச ஒளி படர்ந்து பிரகாசித்தது. ''கவலைப்படாமல் இருப்பார்களா? இரண்டு நாட்களாக இங்கேயே தான் அன்ன ஆகாரமின்றி நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மட்டுமா? இந்தக்

கோட்டையிலே யாருக்கும் நிம்மதி இல்லை! மருத்துவர்களின் பிடிவாதத்தினால் கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் எல்லா ருமே இங்கிருந்து போனார்கள்'' என்றுரைத்த குப்பாயி; ஆசா னிடம், ''அய்யா! அவர்களைக் கூப்பிட வேண்டுமா?'' என் றும் கேட்டாள்.

''வேண்டாம் அம்மா! பொழுது நன்றாக விடிந்த பிறகு கூப்பிடலாம். அதற்குள் உன்னிடம் நான் ஒன்று கேட்க வேண் டும். ஒளிக்காமல் உண்மையைச் சொல்வாயா?''

என்றார் ஆசான்! இப்பொழுதும் பெரிய மருத்துவரின் குறட்டை ஒலி அந்த அறையின் சுவர்களை அசைத்துப் பார்த் துக் கொண்டுதானிருந்தது.

''என்னய்யா கேட்கிறீர்கள்; தாராளமாகக் கேளுங்கள்!'' என்று மிகுந்த பரிவுடன் பதில் கூறினாள் குப்பாயி!

''என் மீது முத்தாயி பவளாயி இருவருக்கும் வருத்தம் உண்டல்லவா?''

''ஏன்? எதற்காக? அவர்களுக்கு உங்கள் மீது வருத்தம் ஏற் படக் காரணமே இல்லையே! அவர்களுங்கூட இவ்வளவு நேரம் இங்கேயிருந்து நீங்கள் நலம் பெறத்தானே பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள்!''

''பிரார்த்தனை செய்திருப்பார்கள்! நான் இல்லையென்று சொல்லவில்லை! என்ன இருந்தாலும் அவர்களின் கணவர் களது ஆசானல்லவா நான்! அதனால் நான் உயிர் பிழைக்க பிரார்த்தனை செய்திருப்பார்கள். இருந்தாலும் அவர்களுக்கு என் மீது ஒரு வருத்தம் இருக்கத்தான் செய்யும்!''

''அய்யா! நீங்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லை.''

''புரியும்படி சொல்கிறேனே! என்னுடைய சபதத்தைப் பொன்னர் - சங்கர் நிறைவேற்ற வேண்டுமென்றும் அப்படி நிறைவேற்றி முடிக்கும் வரையில் அவர்கள் திருமணமாகியும் கூட பிரமச்சாரிகளாக இருக்க வேண்டுமென்றும் நான் விதித்த நிபந்தனையினால் முத்தாயி பவளாயிக்கு என்மீது வருத்தம் இருக்கத்தானே செய்யும்?''

''திருமணமாகியும் இல்வாழ்க்கை சுகத்தை அடைய முடிய

வில்லையே என்ற வருத்தம் இந்த நிலைமையிலே உள்ள எந்தப் பெண்ணுக்கும் இருக்கத்தான் செய்யும்! ஆனால், அதற்காக அவர்கள் உங்கள் மீது வருத்தப்படவே மாட்டார்கள். தங்கள் ஆசானுக்குச் செலுத்த வேண்டிய நன்றிக் காணிக்கையைத் தங்களின் கணவர்கள் செலுத்துவதற்காக அவர்கள் இந்தக் கடுமையான பத்தியத்தைக் கடைபிடிப்பதில் வருத்தப் பட மாட்டார்கள்!''

''குப்பாயி! ஒரு உண்மையை ஒத்துக் கொண்டாய்! அந்தப் பெண்களுக்கு என் மீது வருத்தமில்லை என்பது சரி! ஆனாலும் வண்டையும் மலரையும் அருகருகே வைத்து விட்டு இடையிலே ஒரு கண்ணாடிப் பலகையை நிறுத்தியது போல் என் நிபந்தனை வந்து சேர்ந்ததே என்றெண்ணி - பிரிவுத் துன்பத்தால் அவர்கள் பெரிதும் வருந்துவார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையல்லவா?''

''பிரிவுத் துயரால் வேதனைப் படுவார்கள். நான் இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் அதற்காக உங்கள் மீது வருத்தப்பட மாட்டார்கள் என்பதுதான் என் அழுத்தமான கருத்து.''

குப்பாயியின் இந்தப் பதிலுக்குப் பிறகு ஆசான் மௌனமாகவே படுத்திருந்தார். ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறார் என்பதை அவரது முகம் உணர்த்தியது. ஆம்; அவரது எண்ண அலைகள் எழுந்து, விரிந்து, பரந்து, வீழ்ந்து இதயக்கரையில் மோதத் தொடங்கின.

பொன்னர் - சங்கரைக் கொண்டு எனது சபதத்தை முடிப்பேன் என்று அழகுநாச்சியாரை அடக்கம் செய்தபோது எடுத்துக் கொண்ட உறுதி நியாயமானதுதான்! ஆனால் அது வரையில் அந்தப் பிள்ளைகள் பிரமச்சாரிகளாக இருக்க வேண்டுமென்று எதற்காக எனக்கு நானே ஒரு நிபந்தனை விதித்துக் கொண்டேன்? அந்த நிபந்தனை எனக்குள்ளேயே அமுங்கி அழிந்து போகாமல் எதற்காக அதை அந்தப் பிள்ளைகளிடமும் வெளியிட்டேன்? திருமண நேரத்தில் கூட அந்த நிபந்தனையில் நான் கண்டிப்பாக இருந்து விட்டது, நான் எவ்வளவு கடின உள்ளம் கொண்டவன் என்பதை எனக்கே இப்போது உணர்த்துகிறதே! பிரமச்சாரிகள்தான் வீரர்களாக விளங்க முடியுமா? அவர்களால்தான் மன உறுதியுடன்; தங்கள் சூளுரைகளை நிறைவேற்ற முடியுமா? மணம் புரிந்து மனைவி மக்களுடன் வாழ்ந்தவர்கள் எத்தனையோ பேர் மகா

வீரர்களாக திகழவில்லையா? ''பிரமச்சரியம்'' மன உறுதிக்கு மேலும் வலிமை சேர்க்குமென்றாலும் இல்வாழ்க்கை அந்த வலிமையை அளிக்காது என்பதற்கு என்ன ஆதாரம் இருக் கிறது? நான் செய்த சபதம் சரி! பொன்னர் - சங்கரிடம் அந்தச் சபதத்தை முடிக்கும் பொறுப்பை ஒப்படைத்ததும் சரி! ஆனால்... ஆனால்... அந்த இளம் பெண்களின் ஆசைக் கனவுகளைக் கலைத்தது பெரும் பாபம்! இதற்கு நான் நிவா ரணம் தேடியாக வேண்டும். இப்போதே பொன்னர், சங்கர் - முத்தாயி, பவளாயி அவர்களின் பெற்றோரை அழைத்து வரச் சொல்லி, சபதத்தை நிறைவேற்ற பிரமச்சரிய நிபந்தனை தேவையில்லை என்று சொல்லியாக வேண்டும்.'

இப்படி ஆசானின் உள் மனம் உணர்த்தியது. அதனால் அவர்களை அழைத்து வரச் சொல்ல வேண்டுமென்று இதயம் துடித்தது.

''குப்பாயி!'' என்றார்.

''அய்யா!'' என அன்பொழுகக் கேட்டாள் குப்பாயி!

''உடனே போய் பொன்னர் - சங்கர் மற்றும் எல்லோ ரையும் அழைத்து வா!'' என்றார்.

குப்பாயி, பெரிய மருத்துவரை எழுப்பி விட்டு, ''ஆசா னைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் அனைவரையும் அழைத்து வருகிறேன்'' என ஓடினாள்.

ஓடியவள்; கோட்டைக்குள் எல்லா அறைகளுக்கும் சென்று, ''ஆசான் நன்றாகப் பேசுகிறார், நலமுடன் இருக்கிறார். உங் களை அழைத்து வரச் சொன்னார்'' என்று மெத்தப் பரபரப் புடன் அழைப்பு விடுத்தாள்.

எல்லோரும் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்து ஆசான் இருந்த அறைக்கு ஓடி வந்தனர். அப்போது மருத்துவர்கள் ஆசானின் கட்டிலை சூழ்ந்து நின்றனர். பொன்னர் - சங்கரும் அவர் களைத் தொடர்ந்து எல்லோரும் வருவதைக் கண்ட பெரிய மருத்துவர் அவர்களின் எதிரே நின்று சோகத்துடன் தலை யைக் குனிந்து கொண்டார். பொன்னரும் சங்கரும் அவரைப் பார்த்து, ''மருத்துவரே!'' என்றலறினர். மருத்துவர் அமைதி யாகச் சொன்னார் ''ஆசான் அமரராகி விட்டார்!'' என்று!





# 31

தலையூர் அரண்மனை ஒரே பரபரப்பாக இருந்தது. படையின் தலைமைத் தளபதி பராக்கிரமன்; மலையொன்று தனது முடியைச் சாய்த்துக் கொண்டிருப்பது போல் தலையைக் குனிந்து கொண்டு நின்றான். தலையூர் மன்னன் காளி, அரண்மனையின் ஆலோசனை மண்டபத்தை இப்போதுதான் அளந்து பார்த்துக் கணக்கிட விரும்பியது போல் அடிமேல் அடி வைத்து அங்குமிங்குமாக உலவிக் கொண்டிருந்தான். செல்லாத்தாக் கவுண்டர், தனது அடர்ந்த மீசையை விரல்களால் தடவி விட்டுக் கொண்டும் சில நேரங்களில் மீசை முடிகளில் ஒன்றிரண்டை இழுத்துப் பிடுங்கிக் கீழே எறிந்து கொண்டும் ஆத்திரம் மிகுந்த ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தார். ஆலோசனை மண்டபமே வினாக்குறி உருவெடுத்திருந்த அந்தச் சமயத்திலும் மதுக்கிண்ணத்தை உதடுகளில் பதித்து உறிஞ்சிக் கொண்டே தனது உடல் வலியை சமாளித்துக் கொண்டு ஒரு நாற்காலியில் சாய்ந்திருந்தான் மாந்தியப்பன்!

வளநாட்டை இழந்துவிட்ட கலக்கம் - ஏமாற்றம் - துன்ப துயரம் இவற்றால் வாடிப் போயிருந்தார் செல்லாத்தாக் கவுண்டர்.

தலையூர்ப் படையின் துணையுடன் எதிரிகளைப் பந்தாடி வளநாட்டிலிருந்து விரட்டியடிக்கலாம் என்றும் ஆரிச்சம்பட்டியையும் வளநாட்டு ஆதிக்கத்திலேயே வைத்திருக்கலாமென்றும் கண்ட கனவு பொய்த்ததே என்று மாந்தியப்பனின் நெஞ்சு முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

குடையூரில், பறக்க விட்ட கொடியைச் சங்கரமலையிலும் பறக்க விடலாம் - ஆரிச்சம்பட்டியிலும் பறக்க விடலாம் - மாரிக்கவுண்டன்பாளையத்திலும் பறக்க விடலாம் என்று மார் தட்டிப் பாய்ந்த மாவீரம் மண்ணாகிப் போய்விட்டதேயென புழுங்கிக் கொண்டிருந்தான் பராக்கிரமன்.

போரில் ஏற்பட்ட தோல்வியையும் - தனது ஆணை நிறை வேற்றப்படாமல் முதல் தடவையாகத் தனது படை வீரர்கள் புறங்காட்டி ஓடி வந்ததையும் - தலையூர்க் காளி அவ்வளவு பெருங்கவலைக்குரிய நிகழ்ச்சியாக எடுத்துக் கொள்ளவில்லை. மீண்டும் ஒரு திட்டமிட்ட படையெடுப்பின் மூலமும், அந்த யுத்தத்திற்குத் தானே தலைமை தாங்கி நடத்துவதின் மூலமும் இழந்த வெற்றியைப் பெற்று விடலாமென்றே அவன் நம்பி னான். அப்படியொரு நம்பிக்கையிருக்கும்போது, அவன் முகம் சுண்டிப் போய் இருப்பானேன்?

அவனது உள்ளத்தைக் குழப்பிக் கொண்டிருந்ததெல்லாம் ராக்கியண்ணன் அமரராகி விட்டதுதான்!

தனது ஆசான் மறைந்து விட்டார் என்பதிலே கூட கவலை வந்து இதயத்தைக் கசக்கிப் பிழிகிறது என்று கூறி விட முடி யாது. அவர் மீதே ஆத்திரங் கொண்டு கைது செய்து வரு மாறு கட்டளையிட்டவன்தானே; அதனால் அவர் கொல்லப் பட்டு விட்டார் என்ற துயரத்தால் சோர்ந்து போய் விட்டான் என்றும் சொல்வதற்கில்லை.

அவனைக் குழப்புகிற பிரச்சினையே; மாரிக்கவுண்டன் பாளையத்தில் நடைபெறுவதாக அறிவிக்கப்பட்டுள்ள ராக்கி யண்ணனின் உடல் நல்லடக்கத்திற்கு அவன் போவதா இல் லையா என்பதுதான்!

ஆசான் சாவுக்குக் காரணமே அவனது தலையூர்ப் படை கள்தான் என்கிற போது அவரது உடல் அடக்கத்துக்கு அவன் செல்வதென்றால்; அதனால் விளையக் கூடியவை எப்படி யெல்லாம் இருக்கக் கூடும்! சுற்றியிருப்போர் என்னவெல்லாம் பேசுவார்கள்!

"அக்ரமக்காரன் வந்து விட்டான் பார்; ஆசானையே கொன்று குவித்து விட்டு - இப்போது அழுவதற்காக வந்து விட்டான் பார்!" என்று மாரிக்கவுண்டன் பாளையத்துக்கு வருவோரில் பெரும்பாலோர் நேரடியாகப் பேசாவிடினும் மறைமுகமாகவேனும் பேசத்தானே செய்வர்!" இப்படியும் தலையூர்க் காளி நினைத்தான்.

போகாமல் தவிர்த்து விட்டால்; அப்போதும் - "பாரய்யா - எப்படியோ நடந்தது நடந்து விட்டது; அதற்குப் பிராயச் சித்தமாகவாவது அந்தத் தலையூர்க் காளி மாரிக்கவுண்டன்

பாளையம் வந்திருக்க வேண்டுமல்லவா? என்ன இருந்தாலும் அவனுக்கு மட்டுமல்ல; அவன் குடும்பத்துக்கே போர்ப்பயிற்சி ஆசானாக ராக்கியண்ணனும் அவரது மூதாதையரும் விளங்கியவர்களாயிற்றே!'' என்றும் பலர் பேசக் கூடுமே! இப்படியும் காளி மன்னனால் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

போக வேண்டாமென்று தடுத்திட்ட உணர்வை விட, போய் வருவதுதான் நலமென்று தூண்டுகிற உணர்வுதான் மிஞ்சி நின்றது!

மாரிக்கவுண்டன்பாளையம் போவது என்றே அவன் இறுதியாக முடிவெடுத்து விட்ட போது செல்லாத்தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் வாயை மூடிக் கொண்டு இருந்து விடவில்லை. ஏதேதோ காரணங்களைச் சொல்லி அவன் பயணத்தை நிறுத்தத்தான் பார்த்தனர்.

தற்காலிகமாக வெற்றி பெற்றிருக்கும் எதிரிகள் தலையூர் மன்னனைக் கண்டவுடன் வெறியும் ஆத்திரமும் அதிகம் கொண்டு அங்கேயே ஒரு போர்க்களத்தை உருவாக்கக் கூடும். அதை எதிர்பார்த்துப் பெரும்படையுடன் சென்றிடவும் முடியாது. துக்கம் விசாரிக்கப் போகுமிடத்துக்குப் படையுடன் செல்வது பரிகாசத்துக்கிடமாகும். அதற்காகத் தனிமையில் மிகச் சாதாரண பாதுகாப்புடன் சென்றால் உயிருக்கே கூட ஆபத்து விளைத்திடக் கூடும்.

இந்தக் காரணங்கள் அனைத்தும் தனது வீரத்திற்கு விடப்படும் அறைகூவலாகத் தலையூர் மன்னனுக்குத் தோன்றியதால் அவற்றை அவன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. பராக்கிரமனுக்கு ஆணையிட்டுப் பயணத்துக்கு ஏற்பாடுகளைச் செய்திடக் கூறினான். அதற்கு மேல் தடை கூறிட செல்லாத்தாக் கவுண்டர் முயற்சி மேற்கொள்ளவில்லையென்றாலும் தலையூர் மன்னனின் நெஞ்சில் வெறுப்பு நெருப்பை மூட்டிட வேண்டிய அளவுக்கு மூட்டிவிடத் தவறவில்லை.

''மாரிக்கவுண்டன்பாளையத்துக்கு அந்த மசச்சாமி குன்றுடையான் வந்திருப்பான். அவன்தான் ராக்கியண்ணனின் இறுதிக் காரியம் அனைத்துக்கும் ஏற்பாடு செய்துள்ளான். அவன் நமது தலையூர்ப்படையிடம் தனது குடையூரை இழந்து விட்ட போதிலும் சங்கரமலைக் கோட்டையை நாம் கைப்பற்ற முடியாமல் திரும்பி விட்ட நிகழ்ச்சியினால் கம்பீரமாக நிமிர்ந்து நிற்பான்! அவனுக்குப் பக்கத்தில் சின்னமலைக்கொழுந்து

இருப்பான்! ஆரிச்சம்பட்டியில் நமக்கு ஏற்பட்ட தோல்வி, அவனைப் பெரிய வெற்றி வீரனாக நினைக்கத் தூண்டியிருக்கும். அவனும் ஏற இறங்கப் பார்த்து அலட்சியம் காட்டுவான். இதையெல்லாம் விட என் மனத்தை அலைக்கழிக்கும் ஒன்று; பொன்னர் - சங்கர் என்ற அந்தப் பொல்லாச் சிறுவர்கள் அங்கேயிருப்பார்கள் என்பதுதான்! ராச்சாண்டார் மலையில் தலையூரின் துணைத் தளபதி திருமலையை வீழ்த்தி வெற்றி கண்டவர்கள் அவர்கள்! ஆரிச்சம்பட்டியைக் கைப்பற்றிய மாந்தியப்பனை விரட்டியவர்கள் அவர்கள்! மாயவர் கொண்டு வந்த சோழப்படையின் உதவியுடன் வள நாட்டு ஆட்சியையே என்னிடமிருந்து அபகரித்து விட்டவர்கள் அவர்கள்! சங்கர மலையில் ராக்கியண்ணனை வீழ்த்திய தலையூர்ப்படை பராக்கிரமன் தலைமையில் அங்கே வெற்றி முரசு கொட்டப் போகும் வேளையில் அதனைத் தடுத்து நிறுத்தியவர்கள் அவர்கள்! எல்லாவற்றுக்கும் மேலாக அந்தப் பொன்னர் - சங்கர்தான் தலையூர் மன்னனுக்கு எமன்கள் என்று செம்பகுலன் மேல் ஆவேசம் வந்து காளிதேவியே கூறியிருக்கிறாள் என்பதையும் மறந்து விடக் கூடாது! நமது பகைக் கும்பலுக்குப் பக்கத்திலே இப்போது இருப்பது யார்? அந்தத் துரோகி மாயவர்! அதையும் அலட்சியப்படுத்தி விடக் கூடாது! இந்தச் சூழலில் மாரிக் கவுண்டன் பாளையத்துக்குப் பயணம் தேவையா?'' என்று செல்லாத்தாக் கவுண்டர் எடுத்துரைத்தது காளி மன்னனைத் தடுத்து நிறுத்துவதற்காக என்பது போலத் தோன்றினாலும் - தலையூரான் மனத்தில் அந்தப் பகையுணர்ச்சி மங்கிப் போய் விடக் கூடாது என்பதுதான் அவரது பிரதான நோக்கமாக இருந்தது.

ஆசான் சாவுக்கு வரவில்லை என்ற அவப் பெயர் தனக்கு வந்து விடக் கூடாது என்பதற்காகத் தலையூர் மன்னன் மாரிக் கவுண்டன்பாளையத்துக்குப் புறப்படுவதில் எந்தத் தடையும் குறுக்கே நிற்க முடியவில்லை. மது மயக்கத்தில் உடல்வலியைச் சிறிது மறந்திருந்த மாந்தியப்பனையும் தன்னுடன் வருமாறு காளி மன்னன் அழைத்தபோது, மாந்தியப்பன் நடுங்கித்தான் போய்விட்டான்.

''இத்தனை பகைவர்கள் மத்தியில் எப்படிப் போவது அப்பா?'' என்று செல்லாத்தாக் கவுண்டரைக் கெஞ்சும் தோரணையில் பார்த்தான். பகைவர்களைப் பற்றிய ஒரு பயங்கரமான குறிப்பைச் செல்லாத்தாக் கவுண்டர் தலையூர் மன்னனிடம் தந்தது; ஏற்கனவே கனன்று கொண்டிருக்கும் வெறுப்பை வளர்ப்பதற்காகத்தானே தவிர; அவருக்கே தெரியும் அவரது

பகைவர்கள் நல்ல பண்பாளர்கள் என்று! அதனால் மாந்தியப் பனுக்குத் தைரியமூட்டி அவனையும் காளி மன்னனுடன் அனுப்பி வைத்தார்.

மாரிக்கவுண்டன்பாளையம் மக்கள் கடலில் மிதந்து கொண் டிருப்பது போல் அவ்வளவு பெருங் கூட்டம். கொங்கு வேளா ளப் பெருமக்கள், வேட்டுவப் பெருமக்கள் மற்றும் பல்வேறு வகுப்பினர், வேறுபாடு கருதாமல் ஆசான் ராக்கியண்ணனின் முக தரிசனம் காணச் சாரைசாரையாக எல்லாப் பாதை களிலும் வந்து கொண்டிருந்தனர். காணியாளர்கள், நிலக் கிழார்கள், குறுநில ஆட்சியாளர்கள், எல்லைக் காவல் ஆட்சி யாளர்கள், தமது பரிவாரங்களுடன் ராக்கியண்ணனின் பாச றையில் நிறைந்திருந்தார்கள்.

குன்றுடையான், சின்னமலைக் கொழுந்து, மாயவர், பொன் னர், சங்கர், வீரமலை, வையம்பெருமான் ஆகியோர் ராக்கி யண்ணனின் உடல் வைக்கப்பட்டிருந்த மேடைக்கு அருகே கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்தனர். அவர்களது குடும்பத்துப் பெண்கள் மற்றும் உறவுக்காரப் பெண்கள் அனை வரும் வேறொரு பகுதியில் பாசறைக்குள்ளே சோக சித்திரங் களாகக் காணப்பட்டனர். தாமரைநாச்சியார், சிலம்பாயி, முத்தாயி, பவளாயி, அருக்காணித் தங்கம், குப்பாயி - இவர் களைச் சூழ்ந்து நூற்றுக்கணக்கில் மகளிர் கண்கலங்க வீற்றி ருந்தனர்.

தலையூர் மன்னன் வந்து விட்ட செய்தியை ஒரு வீரன், மாயவர் காதில் போடவே, அவர் எழுந்து பாசறையின் வாயிற்பக்கம் சென்றார். தலையூரான் மாந்தியப்பனுடன் வந் திறங்குவதைப் பார்த்து, அவனை மாயவர் எதிர்கொண்டு மௌனச் செய்கையின் மூலம் அழைத்துக் கொண்டு ஆசான் உடல் வைக்கப்பட்டிருக்குமிடத்துக்கு வந்தார்.

என்ன இருந்தாலும் ஆசான் உடல் பெரிய இரும்புத் தூண் ஒன்று சாய்ந்து கிடப்பது போல் கிடப்பதைக் கண்டதும் தலை யூர்க் காளியின் கண்கள் அவனையறியாமலே கலங்கி விட்டன. தளபதி பராக்கிரமன் கையிலிருந்த மல்லிகை மாலையை வாங்கி ஆசானின் கழுத்தருகே கொண்டு போன காளி மன்னன் என்ன நினைத்தானோ தெரியவில்லை - அந்த மாலையை ஆசானின் பாதங்களுக்குச் சூட்டி, அந்தப் பாதங்களைத் தொட் டுக் கும்பிட்டுத் தனது குரு பக்தியைக் காட்டிக் கொண்டான்.

கருமேகம் சூழ்ந்து கொள்ளாதபோது நிலவு அழகாகவும் இருக்கிறது. தெளிவாகவும் இருக்கிறது. ஒளி மழையும் பொழி கிறது. அதுபோலத்தான் செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப் பன் ஆகியோரின் துர்ப்போதனைகள் கிளம்பாத போது தலை யூர்க் காளி, குணத்தில் தங்கம் போலப் பிரகாசிப்பான்! அவர் களின் துர்ப்போதனை - கோள் மூட்டல் - இவை கருமேக மென மறைத்துக் கொள்ளும்போது அவன் தன்னையே இழந்து விடுவான்!

ஒருக்கணம் அந்தத் தீமை அவனைத் தீண்டாத நிலையில் - ஆசானின் மீதுள்ள அன்பையும் மரியாதையையும் மெத்த பண் புடன் உணர்த்திய காளி மன்னன், எங்கே அமரலாம் என்று சுற்றுமுற்றும் விழியோட்டிய போது - குன்றுடையான், தனது அடக்கமான இயல்புக்கேற்ப விரைந்து வந்து தனது இருக்கையில் அவனை அமர்த்திவிட்டு, அவன் வேறொரு இருக்கைக்குச் சென்று விட்டான். குன்றுடையானைப் பின்பற்றி சின்ன மலைக் கொழுந்தும் எழுந்து விடவே தலையூரானுக்குப் பக் கத்து இருக்கையில் மாந்தியப்பன் உட்கார்ந்து கொண்டான்.

அவர்களிருவரும் இருந்த இருக்கைகளுக்கு நேராக - ஏதோ தற்செயலாக - குன்றுடையான் குடும்பத்துப் பெண்களும், ஆரிச்சம்பட்டிக் குடும்பத்துப் பெண்களும் இருந்தனர். ஒரு பெரும் சாவுக்கு வந்திருப்போர் அனைவருமே அந்த மனித ரின் சிறந்த வாழ்க்கை பற்றியும், ஈடு இணையற்ற வீரங் குறித் தும், தலை தாழாத தன்மான உணர்வு குறித்தும் எண்ணியவ ராய் - ஒருவருக்கொருவர் மெல்லிய குரலில் பேசியவராய் - சோகக் கடலில் சங்கமித்திருந்தனர். அதனால் மகளிர் கூட்டத்தின் பக்கம் அவர்கள் கண்கள் திரும்பினாலும் அங் குள்ள எல்லாப் பொருள்களையும் பார்ப்பது போலத்தான் அவை பார்த்துத் திரும்பின. ஆனால் மாந்தியப்பனின் குரங்கு மனமும், அந்த மனத்தால் இயக்கப்படுகிற விழிகளும் மகளிர் பக்கம் மொய்த்தது மொய்த்ததுதான்! அங்கிருந்து விடுபடவே யில்லை.

சோகச் சூழலை வெளிப்படுத்த சங்கு ஒன்று அந்தப் பாச றையில் முழங்கிக் கொண்டிருந்தது. ஆசான் அன்புடன் வளர்த் ததும், அவர் வழக்கமாக ஏறிச் செல்வதுமான குதிரை அவருக் கருகே நின்று கொண்டிருந்தது. துக்கம் கேட்கவும், மறைந்து விட்ட பெரும் வீரரின் முகம் காணவும் அலை மோதிக் கொண்டிருந்த கூட்டம், தலையூரான் வருகையினால் மூக்கின் மீது விரல் வைத்து வியப்பு தெரிவித்தது. ஆசான் உடலுக்கு

மரியாதை செலுத்த வரிசையில் நின்று வருவோர், அவரைப் பார்த்து வணக்கம் செலுத்தி விட்டு, தலையூர்க் காளியை உற்றுப் பார்த்து விட்டே அங்கிருந்து நகர்ந்து கொண்டிருந்தனர்.

மகளிர் கூட்டத்தில் மொய்த்திருந்த மாந்தியப்பனின் விழிகள், ஒரு கட்டத்தில் திடீரென நிலைத்து நின்று வெறித்து நோக்கின! அவன் அருக்காணி தங்கத்தை அங்கே பார்த்து விட்டான். செல்லாண்டியம்மன் கோயில் திருவிழாவில் அவளிடம் அவன் சேட்டை செய்தது நினைவுக்கு வந்தது. அவள் தன்னிடம் எவ்வளவு கடுமையாக நடந்து கொண்டாள் என்பதும் மறந்து விடவில்லை. அவனது மூளை விஷமத்தனமாகத் தனது வேலையைத் தொடங்கியது. ஏற்கனவே மது போதையில் வெறியேறிப் பொங்கிக் கொண்டிருக்கும் மூளை! அதனால் விஷமத்தனமான கலகத்திற்கு வித்திடவும் அதற்கான தூபம் போடவும் அந்த மூளைக்கு துணிவு மிக அதிகமாகத் துளிர்த்திருந்தது. தலையூர் மன்னனுக்கு அருக்காணித் தங்கத்தைக் காட்டி அவன் உள்ளத்தில் நஞ்சு தெளிக்கத் திட்டமிட்ட மாந்தியப்பன், மெதுவாகத் தலையூரானைத் தொட்டான். அவன் மாந்தியப்பனை நோக்கி மிகத் தாழ்வான குரலில், ''என்ன?'' என்று கேட்டான். மாந்தியப்பன் காளியிடம், ''அதோ! அந்தக் கூட்டத்தில் ஒரு இளம் பெண் இருக்கிறாளே, தெரிகிறதா? அவள் தான் பொன்னர் - சங்கரின் தங்கச்சி அருக்காணி தங்கம்! நன்றாகப் பார்த்துக் கொள்ளவும், பிறகு விபரமாகப் பேசுகிறேன்! என்னுடைய மூளையில் ஒரு பெரிய ராஜதந்திரமே உதயமாகியிருக்கிறது. அதை இங்கு பேச வசதியில்லை'' என்றான்.

தலையூர்க்காளியும், மாந்தியப்பன் ஜாடையாகச் சுட்டிக் காட்டிய மகளிர் கூட்டத்தைப் பார்த்தான். அருக்காணி தங்கமும், குப்பாயியும் அருகருகே உட்கார்ந்திருந்தார்கள். ஏறத்தாழ இருவருக்கும் ஒரே வயது. அசைப்பில் கூட இருவரும் ஒருவரைப் போலவே தோற்றமளித்தனர். தலை சீவிப் பின்னலிட்டிருப்பதிலிருந்து ஆடையுடுத்தியிருப்பது வரையில் இருவரும் ஒன்று போலவே திகழ்ந்தனர். ''இருவரில் யார் அந்த அருக்காணி தங்கம்?'' என்று அவன் கேட்கவில்லை. அப்படியெல்லாம் அந்த இடத்தில் கேட்பது பண்புடைய செயலாகவும் அவனுக்குப்படவில்லை. ஏதோ, ''ராஜதந்திரம்'' என்று மாந்தியப்பன் சொன்னதால் கொஞ்சம் கவனித்துப் பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டான். மாந்தியப்பன், தனது அருகில் இருந்த பராக்கிரமனின் காதில் மிக ரகசியமாக, ''நீயாவது சரியாகப் பார்த்து வைத்துக் கொள்! பிரம்மாண்டமான ராஜதந்திர

திட்டத்துக்கு வழி வகுத்திருக்கிறேன்'' என்று சொன்னதும், பராக்கிரமன் தனது பெரிய விழிகளால் வலை போட்டுத் தேடினான்.

''இரண்டு பெண்களும் ஒரே மாதிரி தெரிகிறார்களே, இதில் நீங்கள் சொல்லும் அருக்காணி யார்?''என்று பராக்கிர மன் மாந்தியப்பனின் காதோரம் வந்து கேட்டான்.

''சிகப்புச் சேலை! சிகப்புச் சேலை!'' என்று மாந்தியப்பன் கிசுகிசுத்தான். பராக்கிரமன் நிதானமாகப் பார்த்துக் கொண் டான் என்றாலும் அவன் கண்ணுக்கு அருக்காணியும் குப்பாயி யும் ஒரே மாதிரிதான் தெரிந்தார்கள். அந்தக் கூட்டத்திலும் அந்தச் சூழ்நிலையிலும் அதற்கு மேல் அவன் மாந்தியப்பனிடம் விளக்கம் கேட்க விரும்பவில்லை.

அதற்குள் வீரமலை அந்தப் பாசறையின் மேடை மீது வந்து நின்றான். அந்த மேடை, ஆசான் உடல் இருந்த மேடைக்குச் சற்று தொலைவில் இருந்தது. வீரமலையின் கையில் ஒரு மூங் கில் குழாய் இருந்தது. அந்த மூங்கில் குழாயின் இரு முனை களும் மூடப்பட்டு முத்திரை குத்தப்பட்டிருந்தது.

''எல்லோரும் கவனத்தை என் பக்கம் திருப்புமாறு வேண்டு கிறேன்'' என்று வீரமலை உரத்த குரலில் பேசியதும், முன்னை விடப் பன்மடங்கு அமைதி அங்கே கூடியிருந்தோரிடம் காணப் பட்டது. வீரமலை, தொடர்ந்து பேசினான்:

''இதோ என் கையிலிருக்கும் முத்திரை குத்தி மூடப்பட் டுள்ள மூங்கில் குழாய் ஆசான் அவர்கள் என்னிடம் ஒப் படைத்தது; அவர் இறந்த பிறகு பொதுமக்கள் முன்னிலையில் படிக்கப்பட வேண்டுமென்று ஆணையிட்டுள்ள மரண சாசன மாகும். இதை முதலில் இங்குள்ள முக்கியமான பெரியவர் களிடம் காட்டுகிறேன்.''

வீரமலை மேடையிலிருந்து கீழே இறங்கி வந்து தன்னிட முள்ள மூங்கில் குழாயையும், அது சரியாக மூடப்பட்டு முத் திரையிடப்பட்டுள்ளதா என்பதையும் எல்லோரும் சரியாகப் பார்த்துக் கொள்ளட்டும் என்பதற்காக தலையூர்க் காளியிட மும், மற்றும் காணியாளர்கள், எல்லைக் காவல் ஆட்சியாளர் களிடமும் காட்டினான். அனைவரும் சரியாக இருக்கிறது என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாலும் கூட, அதற்குள்ளிருப்பதாகச் சொல்லப்படும் மரண சாசனத்தில்

ஆசான் என்ன எழுதியிருப்பார் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களின் முன்னாலேயே மூங்கில் குழாயில் உள்ள முத்திரையை வீரமலை அகற்றினான். குழாய்க் குள்ளிருந்து ஓலையை எடுத்தான். அந்த ஓலையை தலையூர்க் காளியிடமும் பொன்னர் - சங்கரிடமும் குறிப்பாகக் காட்டி நீங்களும் ஆசானின் மாணவர்கள் என்பதால் அவரது கை யெழுத்துத்தானா என்பதை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங் கள் என்றான். காளி மன்னன், பொன்னர் - சங்கர் மட்டு மின்றி அங்குள்ள காவல் ஆட்சியாளர்கள், காணியாளர்கள் அந்தக் கையெழுத்தைப் பார்த்து ஒப்புதல் அளிப்பது போலத் தலையை ஆட்டினர். மீண்டும் வீரமலை மேடையில் ஏறிக் கொண்டு அந்த ஓலைகளைக் கையில் ஏந்தியவாறு ''இதோ நமது ஆசான் ராக்கியண்ணன் எழுதியுள்ள ''சாவு முறி'' எனப்படும் மரண சாசனப் பத்திரத்தை உங்கள் முன்னால் படிக்கிறேன்'' என்று கூறிவிட்டுப் படிக்கத் தொடங்கினான். பாசறையில் குழுமியிருந்தோர், ஊசி விழுந்தால் கூட அதன் ஒலி கேட்கக்கூடிய அளவுக்கு அவ்வளவு நிசப்தமாக, வீர மலை என்ன படிக்கப் போகிறான் என்பதை மெத்த ஆவ லுடன் கவனித்தனர். பாசறைக்கு வெளியே அலைமோதிக் கொண்டிருந்த கூட்டமோ ஒருவரையொருவர் தள்ளிக் கொண்டு வீரமலையின் குரல் கேட்கத் துடித்துக் கொண்டிருந்தனர்.

எத்தனையோ செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் கூறிய வீர மலை, ஆசானின் மரண சாசனம் பற்றி எதுவுமே இதுவரை யில் கூறவில்லையே - அதில் என்ன எழுதப்பட்டிருக்குமோ என்று மேடையை நோக்கி வீரமலையை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தார் மாயவர்!





# 32

மரண சாசனம் எழுதப்பட்டிருந்த ஓலையை வீரமலை படிக்கத் தொடங்கி விட்டான்.

"மாரிக்கவுண்டன்பாளையத்து பயிற்சிப் பாசறை ஆசான் ராக்கியண்ணனாகிய நான், நல்ல திடகாத்திரத்துடனும் - சித்த சுவாதீனத்துடனும் - எந்தவித சந்தேகத்துக்கும் இடமின்றி - இருதய சுத்தியுடன் எழுதி வைத்துள்ள மரணசாசனம். இந்த மரண சாசனத்தை நான் முன் கூட்டியே எழுதி மூங்கில் குழாயில் அடைத்து முத்திரை பதித்து வைத்திருக்கிறேன் என்றாலும் இதனை என் மரணத்துக்குப் பிறகு பிரித்து உற்றார் உறவினர் ஊர்ப் பொதுமக்கள் முன்னிலையில் வெளிப்படையாகப் படித்து அறிவிக்குமாறு எனது மாணவர்களில் ஒருவரான வீரமலைக்கு வாய்மொழியாகக் கூறியுள்ளேன். எனது மரணம் இயற்கையாக அமைந்தாலும் அல்லது போரில் ஈடுபட்டு உயிரிழந்து வீர சுவர்க்கம் அடைய நேரிட்டாலும்உடனடியாக இந்த மரணசாசனத்தில் கண்டுள்ளவை நடைமுறைக்கு வருவதற்கு சம்பந்தப்பட்டவர்கள் முன் வர வேண்டுமென்பது எனது ஆசையாகும். எனது மூதாதையர் இந்த மாரிக்கவுண்டன்பாளையத்தில் பாசறை அமைத்து வழிவழியாகக் கொங்கு வேளாளப் பிள்ளைகளுக்கும் வேட்டுவ குலப் பிள்ளைகளுக்கும் போர்ப் பயிற்சி பலவற்றைக் கற்றுத் தந்தனர் என்பதும், அவர்களைப் பின்பற்றி நானும் இந்தப் பாசறையை நடத்தி வருகிறேன் என்பதும் அனைவரும் அறிந்த ஒன்று! மாரிக்கவுண்டன் பாளையத்தில் எங்கள் மூதாதையர் இந்தப் பாசறை அமைப்பதற்கு முன்பு எமது பழம்பெரும் முன்னோர்கள் வளநாட்டுக்கு அருகாமையில் உள்ள வீரப்பூர் காட்டில் பெரும் பாசறை அமைத்து சேர, சோழ, பாண்டிய நாட்டு வீரர்கள் எல்லாம் வந்து போர்ப் பயிற்சி பெற்றுச் செல்லுகிற அளவுக்கு சிறந்து விளங்கினார்கள். கால ஓட்டத்தில் பல்வேறு படையெடுப்புகள், வேளாண் குலத்தாருக்கிடையே ஏற்பட்ட உட்பகை, அந்த உட்பகையைப் பயன்படுத்திக் கொண்டு எதிரிகள் பெற்ற வெற்றி, இவற்றின் காரணமாக வீரப்பூர் காட்டில்

மிக விரிவான முறையில் நடைபெற்ற எங்கள் முன்னோரின் பாசறை அங்கிருந்து இடம் பெயர்ந்து மாரிக்கவுண்டன்பாளையத்துக்கு வர நேர்ந்தது என்பது வரலாறு! வளநாட்டுக்கும் தலையூருக்கும் அந்தக் காலத்திலேயே ஏற்பட்ட பகையின் விளைவாக ஏற்பட்ட படையெடுப்பு, முற்றுகை போன்ற குழப்பங்களால் வீரப்பூர் பாசறையைக் காலி செய்து விட்டு வெளியேறிய எனது முன்னோர், விலை உயர்ந்த சில கலைப் பொருள்களைக் கையில் எடுத்துக் கொண்டு வர முடியாமல் வீரப்பூர் காட்டுப் பகுதியிலேயே சில ரகசிய இடங்களில் புதைத்து வைத்து விட்டு வந்து விட்டனர். அந்தக் கலைப்பொருள்களில் மிக அழகானதும், விலை மதிப்பில்லாத அளவுக்குப் பெருமை உடையதுமான ஒன்று உண்டு. மரகதப் பச்சையும், மாணிக்கக் கல்லும் கொண்டு இழைக்கப்பட்ட கிளியின் உருவம் அது. அந்தக் கிளி வைரம் இழைத்த ஒரு தங்கக் கூண்டுக்குள் இருப்பது போன்ற அமைப்பு உடையது. கிளியும், கிளியின் கூண்டும், சிறிதுகூட சிதைந்து போகாதவாறு பாதுகாக்க ஒரு வெள்ளிப்பேழையில் வைக்கப்பட்டு அனைத்தும் வீரப்பூர் காட்டில் மிக ரகசிய இடத்தில் புதைக்கப்பட்டுள்ளது. இதுநாள் வரையில் அதை நான் தேடிக் கண்டுபிடித்துக் கைப்பற்றாததற்குக் காரணம் உண்டு. பல ஆண்டு காலமாக வீரப்பூர் காடு தலையூர் மன்னனின் ஆதிக்கத்தில் இருப்பதாலும் அந்தக் காட்டைச் சுற்றி தலையூர்ப் படைவீரர்கள் பாதுகாப்பு எப்போதும் விழிப்போடு இருப்பதாலும் தனியொருவனாக நான் அந்த முயற்சியில் ஈடுபடவில்லை. ஒரு படையெடுப்பின் மூலமே அந்த முயற்சியில் வெற்றி காண முடியும். அந்த மரகதப் பச்சை மாணிக்கக் கிளியை குன்றுடையாரின் மகள் அருக்காணித் தங்கத்துக்குப் பரிசாக வழங்க வேண்டுமென்பது என் நீண்டநாள் அவா! குன்றுடையான் குடும்பத்துடன் எனக்கு எப்படியோ ஒரு பாசத் தொடர்பு ஏற்பட்டு விட்டது. குன்றுடையான் மக்களைக் கொல்வதற்கு தலையூர்க்காளி மன்னனும் செல்லாத்தாக்கவுண்டரும் திட்டம் தீட்டியபோது, அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்வதாகக் கூறி - அதற்காக என் குழந்தைகளை இழந்து குன்றுடையான் குழந்தைகளைக் காப்பாற்றினேன். அந்தக் குழந்தைகளைக் காப்பாற்றினேன் என்றாலும், குன்றுடையானும் தாமரையும் காணமற்போன தங்கள் குழந்தைகள் பொன்னர் - சங்கரை நினைத்து நினைத்து அழுது புலம்பியதை நானறிவேன். உண்மையை அவசரப்பட்டு வெளியிடக் கூடாது எனக் காத்திருந்தேன். பொன்னரும் - சங்கரும் ஆற்றல்மிகு வீரர்களாக வளரும் வரையில் அவசரப் படாமல் இருந்தேன். அந்தச் சமயத்தில் எனக்கு குன்றுடையான் குடும்பத்தின்மீது ஏற்பட்ட பரிவு எல்லையற்றதாகும்.

அந்தத் தொடர்பில் அவர்களின் அருமைச் செல்வி அருக் காணித் தங்கத்தின் மீதும் அளவு கடந்த பிரியம் ஏற்படலா யிற்று. எப்படியாவது வீரப்பூர் காட்டில் புதைந்து கிடக்கும் எங்கள் மூதாதையரின் கலைச் செல்வமான அந்த மரகதப் பச்சை மாணிக்கக் கிளியை அருக்காணித் தங்கம் பரிசாக அடைய வேண்டும். அந்தக் கிளி புதைக்கப்பட்டுள்ள இடம் பற்றிய குறிப்பை இந்த மூங்கில் குழாயில் தனியாக ஒரு ஓலையில் எழுதி - அந்த ஓலையை மடித்து முத்திரை பதித் துள்ளேன். அதை அருக்காணித் தங்கம் வைத்துக் கொள்ள வேண்டியது..."

ஆசானின் மரண சாசனத்தைப் படித்துக் கொண்டிருந்த வீரமலை, சற்று நிறுத்தி விட்டுத் தன் கையில் உள்ள மூங்கில் குழாயைக் கவிழ்த்துப் பார்த்தான். அதற்குள்ளிருந்து, மடித்து முத்திரை குத்தப்பட்ட ஒரு துண்டு ஓலை விழுந்தது. அதை எடுத்துப் பார்த்தான். ''அருக்காணித் தங்கம் அறிய வேண்டி யது'' என அந்த ஓலையின் மேல் எழுதப்பட்டிருந்தது. உடனே வீரமலை மேடையிலிருந்து கீழே இறங்கி, அந்த துண்டு ஓலைச் சுருளை எடுத்துப் போய் பெண்களின் கூட்டத்தில் அமர்ந் திருந்த தாமரைநாச்சியாரிடம் கொடுத்து, ''அம்மணி! இதைத் தங்கள் மகளிடம் தந்து விடுங்கள்'' என்றான். தாமரைநாச்சி யார் அதனை வாங்கிக் கொண்டாள்.

அதற்குள் மாயவர் வீரமலையைப் பார்த்து, ''வீரமலை! மரண சாசனம் மிச்சத்தையும் படி!'' என்று உரக்கக் கத்தி னார். வீரமலை மீண்டும் மேடையில் ஏறி, மரண சாசன ஓலைகளைப் பிரித்தான். எல்லோரும் ஆச்சரியத்துடனும் ஆவல் ததும்பிடும் நிலையிலும் காத்திருந்தனர். தலையூர் மன் னனுக்கும், மாந்தியப்பனுக்கும், தளபதி பராக்கிரமனுக்கும் முகமெல்லாம் கறுத்துப் போயிற்று. இருப்பினும் சமாளித்துக் கொண்டு, கம்பீரம் குறையாமல் அமர்ந்திருந்தனர். குன்றுடை யான் பிள்ளைகளைக் கொல்ல தலையூர் மன்னன் திட்டம் தீட் டிய செய்தியை ஊர் மக்கள் புதிதாகக் கேள்விப் பட்டதால் எல்லோரும் தலையூரான் முகத்தையே பார்த்துக் கொண்டிருந் தனர்.

வீரமலை, ஆசானின் மரண சாசனத்தை விட்ட இடத்தி லிருந்து தொடர்ந்து படித்தான்.

''புதைக்கப்பட்டுள்ள மரகதப் பச்சை மாணிக்கமிழைத்த கிளி பற்றிய ரகசியக் குறிப்பை, அருக்காணித் தங்கமே வைத்

துக்கொண்டு, தனது மணவிழாவின் போது அந்தக் குறிப்பை தனது அண்ணன்மார்களான பொன்னர் - சங்கரிடம் தர வேண்டியது. தங்கையின் மணவிழா நிறைவேறியதும், அவ ளுக்கு மணவிழாப் பரிசாக அந்தக் கிளியை சங்கர் எடுத்து வந்து தர வேண்டியது. அதற்குரிய திறமையும் வலிமையும் பொன்னருக்கும் சங்கருக்கும் உண்டென்ற நம்பிக்கையுடன் தான் இதனை எழுதியுள்ளேன். இதைத்தவிர பொன்னருக்கும் சங்கருக்கும் ஒரு முக்கிய கடமை உண்டு. அந்தக் கடமைதான் என் சபதத்தை நிறைவேற்றுவதாகும். என் மனைவி அழகு நாச்சியாரின் கல்லறை முன் எடுத்துக்கொண்ட சபதமாகும் அது. தலையூர்க்காளியும் செல்லாத்தாக் கவுண்டரும் பொன்னர் - சங்கரைக் கொல்லத் திட்டம் போட்டனர். நான் பொன்னர் - சங்கரைக் காப்பாற்ற என் குழந்தைகளைப் பலி கொடுத் தேன். அதற்குப் பரிகாரமாகப் பொன்னரும் - சங்கரும் அந் தத் தீயவர்களை பழிவாங்க வேண்டும். அதுவரையில் அவர் கள் பிரமச்சரிய விரதம் கடைப்பிடிக்க வேண்டும். என் சப தத்தை என்னால் வளர்க்கப்பட்ட அந்த பிள்ளைகள் நிறை வேற்றுவதைத் தங்கள் இலட்சியமாகக் கொள்ள வேண்டும். என் இல்வாழ்க்கைத் துணைவி அழகுநாச்சியாரின் நினைவாக மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயிலில் நாள்தோறும் விளக்கேற்றும் உபயத்தை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். என் மரணத்துக்குப் பிறகும் அந்தப் பணி என் மனைவியின் நினைவாகத் தொடர வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன். என் மரணத்துக்குப் பிறகு இந்தப் பாசறையின் சகல உரிமை களும், இதைத் தொடர்ந்து நடத்தும் பாத்யதையும், என் தோட் டம் துரவு வீடுகள் அனைத்தும் எனது விசுவாசமுள்ள மாண வன் வீரமலையின் பொறுப்புக்கு வருகிறது என்பதையும் தெரி வித்துக் கொள்கிறேன்.''

இறுதியாகத் தன்னைப் பற்றித் தனது ஆசான் எழுதியுள்ள மரண சாசனக் குறிப்பைப் படித்த போது வீரமலையின் குரல் தழுதழுத்தது. விழிகளில் வெள்ளம் பெருக்கெடுத்தது. தலை சுற்றி மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தவனை, மாயவர் ஓடிச் சென்று பிடித்துக் கொண்டார். வீரமலை, தனது கையில் உள்ள மரண சாசன ஓலைகளை மாயவரிடம் ஒப்படைத்து விட்டு அந்த மேடையிலேயே சாய்ந்து விம்மி விம்மி அழத் தொடங்கினான். குழுமியிருந்த அனைவருமே விம்மியழும் ஒலி எழுந்தது.

தலையூர்க்காளி மன்னன், மாந்தியப்பனையும் பராக்கிர மனையும் ஓரக்கண்ணால் பார்த்து, ''போகலாம்'' என்பது போல ஜாடை காட்டவே அவர்கள் எழுந்தனர்.

ஆசான் ராக்கியண்ணனை அடக்கம் செய்வதற்கான ஏற் பாடுகள் விரைவுபடுத்தப்பட்டன. அந்தப் பரபரப்பில் தலை யூர்க்காளி மன்னன் அங்கிருந்து புறப்பட்டு விட்டது குறித்து யாரும் அவ்வளவாக அலட்டிக் கொள்ளவில்லை.

ஆனால் ஒன்று, வெளிப்படையாகவே தலையூர்க்காளி மன்னனுக்கும் பொன்னர் - சங்கருக்கும் ஒரு பெரிய மோதல் - ஒருவரையொருவர் வீழ்த்திட முனையும் மோதல் - உருவா கப் போகிறது என்பதற்கு ஆசானின் மரண சாசனம் முகவுரை எழுதியிருப்பதாகவே அனைவரும் தீர்மானித்துக் கொண்டனர்.

தலையூர்க்காளியின் ரத வண்டி மாரிக்கவுண்டன் பாளை யத்தை விட்டு வெகு தொலைவு வந்து விட்டது. ரத வண்டிக் குப் பின்னால் ஒரு சில வீரர்கள் குதிரைகளில் பாதுகாப்பாக வந்து கொண்டிருந்தனர். ரத வண்டியை பராக்கிரமனே ஓட்டி வந்தான். பின்னால் உள்ள இருக்கைகளில் காளி மன்னனும், மாந்தியப்பனும் அமர்ந்திருந்தனர்.

நீண்ட நேரம் மௌனம் ஆட்சி செய்து கொண்டிருந்த அந்த ரத வண்டியில் ஒரு கனைப்புக்கிடையே மாந்தியப்பனின் குரல் மௌனத்தைக் கலைத்து சிலிர்த்துக் கொண்டு கிளம்பியது.

''காளி மன்னன் கவலைப்பட்டு இப்போதுதான் நான் பார்க்கிறேன். கதிரவனே திசை மாறினாலும் காளி மன்ன னின் வெற்றியை எவனும் தட்டிப் பறிக்க முடியாது என்று பெயர் பெற்றதெல்லாம் கற்பனைதானா?''

மாந்தியப்பனின் இந்தப் பேச்சு தலையூரானைத் தலை நிமி ரச் செய்தது!

''மாந்தீ! நான் அஞ்சி நடுங்கவில்லை. என்னையும் உன் தந்தையையும் தீர்த்துக் கட்டுவதற்காகவே அந்த ஆசான் ராக்கி யண்ணன்; பொன்னர் - சங்கரை வளர்த்து விட்டு - இப் போது மரண சாசனமும் எழுதி வைத்துள்ளாரே; அதை நினைத்துப் பார்க்கிறேன்! அந்தத் திட்டத்தை எப்படி முறி யடிப்பது என்று சிந்திக்கிறேன்! அவ்வளவுதான்!''

''சூழ்ச்சியை சூழ்ச்சியால்தான் வெல்ல வேண்டும். அதற்கு ஒரு அற்புதமான யோசனை என் மூளையில் உதயமாயிருக்கிறது!''

''என்ன யோசனை? தைரியமாகச் சொல்லலாம்; நம்மோடு பராக்கிரமன் மட்டும்தானே இருக்கிறான் - எந்த ரகசியமும் வெளியே போகாது!''

''பொன்னர் - சங்கர் இருவரும் நமது விரோதிகளாக ஆனால்தானே அவர்கள் நம்மை பழிவாங்க நினைப்பார்கள்!'' அவர்கள் விரோதிகளாக ஆகாமலே இருந்து விட்டால்?''

''என்ன மாந்தியப்பா சொல்லுகிறாய்? அவர்கள் இனிமேல் தானா விரோதிகளாகப் போகிறார்கள்? ஏற்கனவே நம்மைப் பழி தீர்க்க சபதம் எடுத்துக் கொண்டுள்ள பகைவர்கள்தானே!''

''அந்தப் பகையை வெறும் புகையாக ஊதி விடத்தான் ஒரு ராஜதந்திரமான சிந்தனை எனக்கு உதித்திருக்கிறது!''

''சொன்னால்தானே புரியும்!''

''சொல்லுகிறேன்! அந்த அருக்காணித் தங்கத்தை தலையூர்க் காளியின் மனைவியாக ஆக்கிக் கொண்டால் - பிறகு பொன்னரும் - சங்கரும் காளி மன்னனின் மைத்துனர்கள்! பகை உணர்வு, தானாகவே ஒழிந்து போகிறது!''

''நான் வேட்டுவ குலம்! அருக்காணித் தங்கம் கொங்கு வேளாளர் குலம்! சம்பந்தமாவது மண்ணாங்கட்டியாவது!''

''அவசரப்படாமல் கேட்க வேண்டும்! அவசரமும் ஆத்திரமும் அறிவை மறைத்து விடும் - அந்த அருக்காணித் தங்கத்தின் கையில் வீரப்பூர் காட்டில் புதைந்துள்ள மரகதப் பச்சை மாணிக்கக் கிளி பற்றிய ரகசியத்தை ராக்கியண்ணன் ஒப்படைத்துள்ளார். ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்பது போல் - அந்த விலை உயர்ந்த கிளியையும் நமக்கு சொந்தமான வீரப்பூர் காட்டிலிருந்து கைப்பற்றலாம்; அருக்காணித் தங்கத்தையும் தலையூர்க்காளியின் தாரமாக்கிக் கொள்ளலாம்!''

''அதற்குத்தான் என்ன வழி என்று கேட்கிறேன்!''

''சுலபமான வழியிருக்கிறது! நமது தளபதி பராக்கிரமனிடம் நான் சொல்லுகிற வேலையை ஒப்படைக்க வேண்டும். பராக்கிரமன் அந்த வேலையை திறம்பட முடிக்க வேண்டும்.''

''பராக்கிரமனிடம் என்ன வேலையை ஒப்படைப்பது?''

''பராக்கிரமன், நேரடியாகப் போருக்குச் சென்று சாதிக்க முடியாத வேலை! புத்தி சாதுர்யத்தால் செய்து முடிக்கக்கூடிய வேலை!''

''பொறுமையை சோதிக்காமல் சொல்லு மாந்தியப்பா!''

''என்ன மாயாஜால வித்தை செய்தாவது, பராக்கிரமன் வளநாட்டுக் கோட்டைக்குள் நுழைந்து அருக்காணி தங்கத்தை தூக்கிக் கொண்டு வந்து விட வேண்டும். அதில் பராக்கிரமன் வெற்றி பெற்றால் அருக்காணியுடன் அந்த மரகதக் கிளி ரகசியமும் வந்துவிடும். அருக்காணித் தங்கம், தலையூர் மன்னன் மஞ்சத்துக்கு வந்த பிறகு தப்ப முடியுமா? கற்பிழந்த தங்கையை பொன்னரும் - சங்கரும் காளி மன்னனுக்கே கட்டி வைக்க ஒப்புக் கொள்வார்கள். பிறகு தலையூரின் சம்பந்திகளாகி விடுவார்கள். சண்டை சச்சரவு இல்லை. தலையூரான் தலையும் தப்பும்!''

''வளநாட்டுக் கோட்டையிலிருந்து அருக்காணித் தங்கத்தை அபகரிப்பதா? அதர்மத்தின் உச்சிக்கே போகச் சொல்கிறாயே!''

''பொன்னர் - சங்கர் என நினைத்து ஆசானின் இரண்டு குழந்தைகளை காளிதேவிக்குப் பலி கொடுத்தோமே; அதை விட அதர்மமான யோசனை ஒன்றையும் நான் சொல்லி விடவில்லையே! பகையை தந்திரமாக சமாளிக்கத்தானே வழி சொல்லுகிறேன்! நமது வீரப்பூர் காட்டுக்குள்ளேயிருக்கும் அந்த மரகத மாணிக்கக்கிளி நமது அரண்மனைக்குச் சொந்தமாக வேண்டாமா? அருக்காணியை தலையூரின் ராணியாக ஆக்குவதால் பொன்னர் - சங்கர் அடங்கி ஒடுங்கி ஆமை போல் ஆகிவிட மாட்டார்களா?''

மாந்தியப்பன், எப்படியும் தலையூர்க்காளியை குன்றுடையான் குடும்பத்தின் மீது மோதவும் - இழந்த வளநாட்டைத் தான் மீண்டும் பெறவும் - காளி மன்னனை உசுப்பி விடுகிறான் என்பது தலையூரான் அறிவுக்கு எட்டவில்லை!

எனவே அவன் மாந்தியப்பன் கூறிய திட்டம் குறித்து, அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் வகையில் யோசிக்க ஆரம்பித்து விட்டான்.

ரத வண்டி, தலையூர் நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

# தடையுடைத்த தடந்தோள்

## 33

தலையூர் அரண்மனை வாசலில் ரத வண்டி வந்து நின்றதும்; அதுவரையில் மாந்தியப்பனின் திட்டம் குறித்து சிந்தித்துக் கொண்டே மௌனமாக இருந்த காளி மன்னன், மாந்தியப்பன் தோளைக் குலுக்கி, ''மாந்தி! உன் யோசனை ஏற்கப்படுகிறது. பராக்கிரமா! இந்தக் காரியத்திலாவது நீ வெற்றி பெறுவாயல்லவா?'' என்று வினயமாகக் கேட்டுக் கொண்டே கீழே இறங்கினான். தனது திட்டத்தைத் தலையூர் மன்னன் ஏற்றுக் கொண்டதால் மாந்தியப்பனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி, பராக்கிரமனும் மன்னன் முன் தலைதாழ்த்தி, ''எப்படியும் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவேன்'' என்று உறுதி கூறி நின்றான்.

அரண்மனைக் காவலர்கள், துணைத் தளகர்த்தர்கள், மற்றும் பிரதானியர் பணிந்து வரவேற்க, சிந்தனை தேக்கிய முகத்துடனே காளி மன்னன், தனது ஆலோசனை மண்டபத்துக்குள் நுழைந்து வெள்ளியாலான ஆசனமொன்றில் அமர்ந்தான். ''பயணம் எப்படியிருந்தது?'' எனக் கேட்டுக் கொண்டே செல்லாத்தாக் கவுண்டர் அவனருகில் வந்து உட்கார்ந்தார். மன்னன் வருகைக்காகக் காத்திருந்தவன் போல அரண்மனைக் காவலன் ஒருவன், அவன் முன்னால் முதுகு வளையக் குனிந்து வணங்கி விட்டு முத்திரையிடப்பட்ட ஓலையொன்றை மெத்த மரியாதையுடன் நீட்டினான். ''என்ன இது? யார் அனுப்பியது?'' என்று வினவியவாறு காளி மன்னன் ஓலையைக் கையில் வாங்கி, அதனைப் பிரித்துப் படிக்குமாறு செல்லாத்தாக் கவுண்டரிடம் கொடுத்தான். ஓலையைப் பிரித்துப் பார்த்த செல்லாத்தாக் கவுண்டரின் விழிகள் அகன்று விரிந்தன.

''உறையூர் மன்னர் * அக்களதேவச் சோழரிடமிருந்து வந்துள்ள ஓலை'' என்றார் செல்லாத்தாக் கவுண்டர்! இந்த விபரத்தைச் சொல்லும்போதே அவர் முகம் வெறுப்பால் கறுத்துப் போயிருந்தது. அக்களதேவச் சோழ மன்னனின் பெயரைக் கேட்டவுடன் தலையூர்க்காளிக்கும் கண்கள் சிவந்தன. மீசை

துடித்தது. ஆத்திரத்தால் உடல் பதறியது. தனது புரவலர் செல்லாத்தாக் கவுண்டரின் வளநாட்டைக் கைப்பற்ற மாயவரு டன் படையனுப்பித் தனது பகைவர்களான பொன்னர் - சங்கர் கரத்தை வலுப்படுத்தியவன் உறையூர்ச் சோழன் என்ப தால்; அந்த ஓலைக்குத் தரவேண்டிய மதிப்பைக் காளி மன் னன் தரவில்லை. அலட்சியமாகக் கேட்டான், ''அக்கள தேவன் என்ன எழுதியிருக்கிறான்'' என்று!

செல்லாத்தாக் கவுண்டர் அவன் கேள்விக்குப் பதிலாக அந்த ஓலையைப் படிக்கத் தொடங்கினார்.

''தலையூர்க் காளி மன்னர்க்கு உறையூர் மாமன்னர் அக்கள தேவச் சோழர் அன்புடன் விடுத்திடும் அழைப்பாவது...''

இந்த வரிகளைப் படித்து விட்டு செல்லாத்தாக் கவுண்டர் கேலியாகச் சிரித்துக் கொண்டே ''ஓகோ! இவர் உறையூர் மாமன்னரோ? மன்னர்களுக்கெல்லாம் மன்னரல்லவா மாமன்ன ராக இருக்க முடியும்? இவர் எப்போது மாமன்னர் ஆனார்?'' என்று கேட்டார்.

அமர்ந்திருந்த காளி மன்னன் எழுந்து நின்று செல்லாத்தாக் கவுண்டரைப் பார்த்து, ''எல்லைக் காவல் ஆட்சி நடத்துகிற நமது வேட்டுவ குலப் பங்காளிகள் பதினெட்டு பேர் ஆளுகிற பகுதிகளை பதினெட்டு நாடுகள் என்று அழைக்கிறோம். அந்த நாடுகளுக்கு நான் தலைவனாக இருப்பதால் மன்னன் என்ற பட்டம் எனக்கு உண்டல்லவா; அது போல் என்னைப் போன்ற ஒன்றிரண்டு சிற்றரசுகளைத் தன் ஆதிக்கத்தில் வைத்துள்ள உறையூர்ச் சோழன்; ''மாமன்னன்'' எனத் தன்னை அழைத் துக் கொள்கிறான். அது போகட்டும் - என்ன எழுதப்பட் டுள்ளது ஓலையில்? முழுவதையும் படியுங்கள்!'' என்றபடி மண்டபத்துக்குள் உலவிடத் தொடங்கினான்.

''குன்றுடையார் மக்கள் பொன்னர் - சங்கர் எனும் இரு இளைஞர்களின் வீரம் பற்றிக் கேள்வியுற்று மகிழ்ச்சி அடைந் தோம். அவர்கள் தீரத்துடன் போராடி அவர்தம் குடும்பத்திற்கு உரிமையுடைய வளநாட்டைக் கைப்பற்றியிருப்பது எந்த வகை யிலும் குற்றமுடைய ஒன்றாகக் கருத முடியாததாகும். உரி மையை மீட்பதற்குப் போரிடுவோர்க்கு உதவிடுவது உறையூர்ச் சோழ அரசின் பொறுப்பு என உணர்ந்த காரணத்தினாலேயே உறையூர்ப் படையை பொன்னர் - சங்கருக்குத் துணையாக அனுப்பினோம். எமது படையின் துணையுடன் அந்த இளை

ஞர்கள் பெற்றுள்ள வெற்றி போற்றத் தகுந்தது. எனவே அவர்களை வளநாட்டு ஆட்சிக் காவலர்களாக அங்கீகரிப்பதற்கு உறையூர் அரசு முடிவு செய்துள்ளது. அந்த முடிவினை நிறைவேற்ற; நிகழும் ஆவணி இருபது ஞாயிற்றுக் கிழமையன்று உறையூர் அரண்மனையில் விழா ஒன்று ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. பொன்னர் - சங்கரை சிறப்பித்து, வளநாட்டின் நாட்டுக் காவல் ஆட்சி அங்கீகாரம் வழங்கும் அந்த விழாவுக்குத் தங்கள் வருகையும் எதிர்பார்க்கப்படுகிறது. அதன் நிமித்தமே இந்த அழைப்பு அனுப்பப்படுகிறது.''

ஓலையைப் படித்து முடித்த செல்லாத்தாக் கவுண்டர், காளி மன்னனின் முகத்தை நோக்கினார். தனது உயிர் குடிப்பதற்காகவே பிறந்துள்ள பொன்னர் - சங்கருக்கு பக்க பலமாகப் படையனுப்பியது மட்டுமல்ல; தனக்குத் துரோகம் செய்து விட்டுப் போன மாயவரின் வஞ்சக வலையில் வீழ்ந்து விட்டது மட்டுமல்ல; தனது படை வலிமையாலும் செல்வாக்கினாலும் கட்டிக் காக்கப்பட்ட வள நாட்டு ஆட்சியை அபகரித்த அந்தப் பொடியன்களை ஆட்சிக் காவலர்களாகவும் அங்கீகரிக்கப் போகிற செயலுக்கு விழா எடுத்து, அந்த விழாவுக்குத் தனக்கு அழைப்பும் அனுப்பி மிகவும் புண்படுத்தி விட்டதாகக் கருதிய காளி மன்னன் கையைத் தூணில் அறைந்து கர்ச்சனை செய்து உறுமினான்.

''நானும் போகப் போவதில்லை. நம்மைச் சார்ந்த பதினெட்டு நாட்டு வேட்டுவ குல ஆட்சிக் காவலர்களையும் உறையூர் விழாவுக்குப் போகாமல் தடுத்து விடுகிறேன்'' என்று காளி மன்னன் ஆங்காரமாகக் கத்தியதைத் தனக்கு மிகவும் சாதகமாக எடுத்துக் கொண்டு செல்லாத்தாக் கவுண்டர் தனது வழக்கமான தூபம் போடும் பேச்சைத் தொடங்கினார்.

''ஆமாம்; அப்போதுதான் உறையூர் சோழனுக்கும் கொஞ்சம் உறைக்கும். மாயவரைப் பெரிதாக மதித்து பொன்னர் - சங்கருக்குப் படையுதவி புரிந்ததால் அல்லவா தலையூரின் நட்பையும் அத்துடன் தலையூரைச் சார்ந்த பதினெட்டு நாட்டுத் தலைவர்களின் நட்பையும் இழக்க வேண்டியதாயிற்று என்ற மனக் கலக்கம் உறையூர்க்காரனுக்கு இப்போது ஏற்பட்டால் தான் இனி எதிர்காலத்திலாவது ஒழுங்காக இருப்பான். அது மட்டுமல்ல; ஏ, அப்பா! தலையூர்க்காளி எவ்வளவு தன்மானமுள்ள வீரனாக விளங்குகிறான் என்று சோழநாட்டில் உள்ள குடி மக்கள் அனைவரும் வெளிப்படையாக இல்லாவிட்டாலும் மனதுக்குள்ளாகவாவது புகழ்ந்து பாராட்டுவார்கள்.''

செல்லாத்தாக் கவுண்டர் தலையூர்க்காளியை இப்படி வான ளாவப் போற்றிப் பேசியே தனது செல்வாக்கை அந்த அரண் மனையில் உயர்த்திக் கொண்டிருப்பவர் என்பதை அறியா மலே அவர் மீது அபார நம்பிக்கையும் மதிப்பும் கொண்டுள்ள தலையூர்க்காளி, ''ஆமாம்!'' என்பது போலத் தனது கொத்து மீசையைத் தடவிக் கொண்டு புன்னகை புரிந்தான். அத்துடன் விடவில்லை செல்லாத்தாக் கவுண்டர்.

''நாம் விழாவுக்குப் போகாமல் இருந்தால் மட்டும் போதாது. அந்த விழாவில் முக்கிய கதாநாயகர்களாகக் கலந்து கொள்ளப் போகும் பொன்னர் - சங்கர் என்னும் பொடிப்பயல்களை உறையூரில் எப்படியாவது அவமானப்படுத்த வேண்டும்.''

''உறையூர் விழாவில் அவர்களை அவமானப்படுத்துவதா? அது எப்படி முடியும்?'' என்று தனது புரவலரான கவுண்ட ரைப் பார்த்துக் காளி மன்னன் கேட்டான்.

''உறையூர்க் கோட்டையின் வாயில் காக்கும் வீரர்களுக்குத் தலைமை வீரனாகப் பணியாற்றிக் கொண்டிருப்பவன் நமது தளபதி பராக்கிரமனின் தம்பி விக்கிரமன் என்பதை மறந்து விட வேண்டாம். பொன்னர் - சங்கரை அவமானப்படுத்தி உறையூர்ச் சோழனுக்குப் பகைவர்களாக்க விக்கிரமன் மூலம் வழி காண வேண்டும். அந்த வேலையைப் பராக்கிரமன் இப் போதே செய்து முடிக்க வேண்டும். வேறொன்றுமில்லை; தம்பி விக்ரமனுக்கு அண்ணனிடமிருந்து ஒரு தகவல் போனாலே போதுமானது'' என்று கூறிய செல்லாத்தாக் கவுண்டர், பராக் கிரமனைப் பரிவுடன் நோக்கி ''என்ன தளபதியாரே! நான் சொல்வது சரிதானா?'' எனக் கேட்டார்.

''உறையூரில் நமது ஆளாகத்தானே விக்ரமனையே விட்டு வைத்திருக்கிறேன். அதனால் கவலை வேண்டாம். இன்றைக்கே அவனுக்குச் செய்தி அனுப்பி விடுகிறேன்'' என்று பராக் கிரமன்; அந்தப் பணியை முடித்து விட்டது போலவே பதில் கூறினான்.

அதுவரையில் வாய் திறவாமல் கவனித்துக் கொண்டிருந்த மாந்தியப்பன் ''எல்லாமே நன்மைக்குத்தான் நடைபெறுகின் றன'' என்று துள்ளிக் குதித்து எழுந்தான். அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் காளி மன்னன் ஆவலுடன் எதிர்பார்த்தான்.

''அருக்காணித் தங்கத்தைத் தூக்கிக் கொண்டு வர வேண்டும்; அவளிடமிருக்கும் மரகதப் பச்சை மாணிக்கக் கிளி பற்றிய ரகசிய இடத்தை அறிய வேண்டும்; அவளையும் தலையூரின் ராணியாக்கி விட வேண்டும் என்று சொன்னேன் அல்லவா - அதற்கு வசதியாகத்தான் உறையூரில் பொன்னர் - சங்கருக்கு விழா நடக்கிறது.''

''மாந்தியப்பா! நீ என்ன சொல்கிறாய்? அருக்காணியைக் கடத்தி வரும் திட்டத்துக்கும் உறையூரில் பொன்னர் - சங்கர் வரவேற்கப்படுவதற்கும் என்ன தொடர்பு இருக்கிறது?''

சந்தேகம் கண் பார்வையில் மிதந்திட காளி மன்னன் கேட்டான்.

''நிறையத் தொடர்பு இருக்கிறது. பொன்னரும் - சங்கரும் உறையூர் போகும் நேரத்தில் வள நாட்டு அரண்மனையில் நமது திட்டத்தை மிகச் சுலபமாக நிறைவேற்றி விடலாம் அல்லவா? கடவுளாகப் பார்த்து அந்தப் பொடியன்களை உறையூருக்கு அனுப்பி வைக்கிறார். அந்தச் சமயத்தை நாம் நழுவ விடாமல் காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டும்.

இப்போது தலையூர் மன்னனுக்கு ஒரு புதிய தெம்புடன் கூடிய நம்பிக்கை பிறந்தது.

''ஆமாம்! மாந்தியப்பன் சொல்வதும் சரிதான். வள நாட்டில் பொன்னர் - சங்கர் இல்லாத பொழுதுதான் எதிர்ப்பு அதிகமின்றி நமது திட்டம் வெற்றி பெறும்.''

காளி மன்னன் அந்த வெற்றியைக் குறித்து அழுத்தம்திருத்தமாகப் பேசினான். மாந்தியப்பன், தனது அற்புதமான மூளைத் திறத்தை தலையூர்க்காளி மன்னன் மேலும் பாராட்ட வேண்டுமென்று விரும்பினான்.

''என் மூளை மிக வேகமாக வேலை செய்கிறது. எனது தந்தையின் யோசனைப்படி உறையூரில் பொன்னர் - சங்கர் அவமானப்படுத்தப்பட்டால் அவர்களுக்கு உறையூர்ச் சோழன் அக்களதேவன் மீதுதான் கோபம் ஏற்படும். சிறுவர்களான படியால் சீறிக் கிளம்புவர். அதன் விளைவாக உறையூர்ச் சோழன் உறவு முறியும். அப்படி நடந்து விடுமானால் அந்தப் பொடியன்களுக்குப் படை உதவி செய்ய பிறகு எவன் முன் வரப் போகிறான்! பலவீனப்பட்டு நிற்கப் போகிற பொன்ன

ரும் - சங்கரும் வேறு வழியில்லாமல் தலையூருக்கு வருவார்கள். அருக்காணியைக் கடத்தி வந்ததைப் பற்றி எங்களுக்கு வருத்தமில்லை. அவளையே மணந்து கொண்டு எங்களுக்கு சம்பந்தியாகி விடுக என்று பேரம் பேசுவார்கள். சம்பந்தியாகி விட்டால் பிறகு எந்தப் பிரச்சினையும் இல்லை. காளியம்மன் செம்பகுலன் மீது ஆவேசமாக வந்து எச்சரித்த அந்தப் பகைவர்கள் பொன்னரும் - சங்கரும் தலையூரின் அடிமைகளாகி விடுவார்கள்.''

மாந்தியப்பனின் அபாரமான கற்பனையைக் கேட்டு அவனை அப்படியே கட்டித் தழுவிக் கொண்ட செல்லாத்தாக் கவுண்டர், ''நீ என் மகன் என்பதை நிரூபித்து விட்டாயடா! பகைவர்களை அணைத்துக் கெடுக்க வேண்டும் என்ற ராஜ தந்திரத்துக்கு நீ கொடுத்திருக்கிற செயல் வடிவம் வெற்றி பெற்று விடுமேயானால் தலையூர்க்காளி மன்னனின் கொடியை உறையூர்க் கோட்டையிலே கூட ஒரு காலத்தில் ஏற்ற முடியும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது'' எனக் கூறி மகிழ்ந்தார்.

தந்தையும் மகனும் தங்களின் சுய நலத்துக்காக பகைத்தீயை வளர்க்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ளாமல் அவர்கள் மீது அளவற்ற அன்பும் மரியாதையும் நட்புறவும் வைத்துள்ள தலையூர்க்காளி அவர்களது நடிப்பில் மேலும் மயங்கினான்.

''என்ன இருந்தாலும் எனக்காகத் தங்கள் குலத்தையே காட்டிக் கொடுக்கும் கோடரிக் காம்புகளாகத் திகழ்கிறார்களே! இவர்கள் செய்வது துரோகம் என்றாலும் அந்தத் துரோகம் எனக்காகவும் என் தலையூருக்காகவும் பயன்படும்பொழுது, ''துரோகம்'' என்பதை மறந்து விட்டு இவர்களுக்கு என்றைக்குமே நன்றியுணர்வுடன் கடமைப்பட்டவனாக அல்லவா நான் இருக்க வேண்டியுள்ளது! காட்டிக் கொடுப்பவர்களை நம்பக் கூடாது என்றாலும் - இவர்களைப் பொருத்த மட்டும் என்னை என்றைக்குமே காட்டிக் கொடுக்க மாட்டார்கள் - எனக்காக யாரையும் காட்டிக் கொடுப்பார்கள் என்பதால்தானே எனக்கு இவர்களிடம் இத்தனை பாசம்!''

செல்லாத்தாக் கவுண்டரையும், மாந்தியப்பனையும் மனத்துக்குள் இவ்வாறு பாராட்டிக் கொண்டே, தலையூர்க் காளி ''பராக்கிரமா!'' என்று கட்டளையிடும் தோரணையில் அழைத்தான்.

''வளநாட்டு அரண்மனையிலிருந்து அருக்காணித் தங்கத்தை இங்கு கொண்டு வர வேண்டியதும் - உறையூரில் பொன்னர் - சங்கர் அவமானப்படுத்தப்பட வேண்டியதும் உன் முழுப் பொறுப் பில் விடப்படுகின்றன.''

''இரண்டையும் சிறப்பாகச் செய்து முடிக்கிறேன் அரசே!''

''வள நாட்டிலிருந்து அந்தப் பெண்ணைத் தூக்கி வருவதற்கு உன் இயல்புக்கு ஏற்ப முரட்டுத்தனமான திட்டங்கள் எதையும் தீட்டி விடாதே! சாகசச் செயல் மூலம் அவளைக் கடத்தி வரு வதுதான் நல்ல வழி!''

''அப்படியே செய்கிறேன்'' எனப் பணிந்து வணங்கி விட்டு பராக்கிரமன் விடைபெற்றுப் புறப்பட்டான். அவன் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் தலையூர் ஒற்றன் ஒருவன் ஆலோ சனை மண்டபத்துக்குள் நுழைந்து ''அரசே! வளநாட்டிலிருந்து பொன்னரும் - சங்கரும் அவர்களுடன் மாயவரும் அலங்கரிக் கப்பட்ட ரத வண்டியில் அமர்ந்து ஒரளவே பாதுகாப்புடன் உறையூர் செல்லும் வழியில் போய்க் கொண்டிருப்பதாகத் தகவல் வந்துள்ளது'' என்றான்.

''அவர்கள் உறையூருக்கு ஏன் போகிறார்கள் என்ற தகவல் உனக்கு முன்பே எமக்குக் கிடைத்து விட்டது! பரவாயில்லை; தொடர்ந்து என்ன நடக்கிறது என்பதை ஊன்றிக் கவனிக்கச் சொல்'' எனக் கூறிவிட்டு தலையூர்க்காளி, செல்லாத்தாக் கவுண்டருடனும், மாந்தியப்பனுடனும் ஆலோசனை மண்டபத் திலிருந்து உணவருந்தும் கூடத்திற்குக் கிளம்பினான். ஒற்றனும் காளி மன்னனின் கட்டளையை நிறைவேற்ற உறையூர் நிகழ்ச்சி களைக் கவனிக்கும் பணியைத் தொடர அங்கிருந்து விரைந்து சென்று விட்டான்.

உறையூர் நகரம் முழுதும் வண்ண வண்ணத் தோரணங் களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகர மாந்தர் அனைவருமே புத்தாடை பூண்டு வீதிகளில் உற்சாக மாக நடந்து அரண்மனையை நோக்கிப் போய்க் கொண்டிருந்த னர். வாழை, கமுகு போன்ற மரங்கள் வீதிகளின் இரு மருங் கிலும் நீண்டுயர்ந்த மூங்கில் மரங்களுடன் இணைத்துக் கட்டப் பட்டிருந்தன. பனை, தென்னை ஓலைகளால் ஆன கூந்தல்கள் எல்லா ராஜ வீதிகளிலும் குறுக்கும் நெடுக்குமாகக் கட்டப் பட்டு வானத்தையே மறைக்கும் வகையில் நிறைந்து காணப் பட்டன. ஆங்காங்கு நெருக்கமாக நெற்கதிர்களைக் கயிறு

களில் முடிந்து தொங்க விட்டிருந்த காட்சி சோழ நாட்டின் வளப்பத்திற்குச் சான்று கூறிக் கொண்டிருந்தது. உறையூர் அரண்மனைக்குள்ளும் உற்சாகப் பெருவெள்ளம். கொலு மண்டபத்துக்குச் சென்றமர்ந்து அங்கு வர இருக்கும் பொன்னர் - சங்கரை வரவேற்று வாழ்த்தளித்து வள நாட்டு ஆட்சிக் காவலர்களாக அவர்களை அங்கீகரிக்க இருக்கும் நிகழ்ச்சியை எண்ணியவாறு அக்கள தேவச் சோழன் அணிமணிகள் பூண்டு மகுடம் புனைந்து அந்தப்புரத்திலிருந்து புறப்பட்டான். அறுபது வயதைக் கடந்தாலும் கூட நரைதிரை விழாமல் உடற் கட்டுடன் கம்பீரமாகத் தோற்றமளித்த அக்கள தேவனை இருபுறமும் மெய்காப்பாளர் சூழ கொலு மண்டபம் நோக்கி அழைத்துச் சென்றனர். பட்டு விரித்த தரையில் சோழன், அவனது கொடியின் சின்னமான புலியின் நிமிர்ந்த நோக்குடன் நடை போட்டுக் கொண்டு வந்தான்.

கொலு மண்டபத்தில் குறு நில மன்னர்கள் பலரும் வீற்றிருந்தனர். அவர்களையன்னியில் மாராயன், பேரரையன், அரையன், மூவேந்த வேளான், தொண்டைமான், பல்லவராயன், காலிங்கராயன், காடவராயன், கச்சிராயன், சேதிராயன், வாணகோவரையன், மாவலி வாணராயன், விழுப்பரையன், மழவரையன், சோழகோன் போன்று வழிவழியாக சோழ நாட்டுக்குரிய பட்டங்களை அரசிடமிருந்து பெற்ற அரசின் அதிகாரிகள் பலரும் அந்த அவையில் அமர்ந்திருந்தனர். கிராம அவைகளின் தலைவர்கள், உறுப்பினர்கள், கிராமப் பணிகளை நிறைவேற்றும் மத்தியஸ்தன், கரணத்தான், பாடிகாப்பான், தண்டுவான் போன்றோரும் குழுமியிருந்தனர்.

அக்கள தேவன் மண்டபத்திற்குள் நுழைந்து புலிச் சின்னம் பொறித்த தங்க ஆசனத்தில் அமரும் வரையில் அனைவரும் எழுந்து நின்று, பின்னர் வணங்கி அவரவர் இருக்கையில் உட்கார்ந்து கொண்டனர்.

அரசனது இருக்கையை ஒட்டி, சற்றுக் கீழ்ப்புறமாக முன் வரிசையில் மூன்று இருக்கைகள் போடப்பட்டிருந்தன. அவை பொன்னருக்கும் - சங்கருக்கும் அவர்களுடன் வரும் மாயவருக்கும் என்பதுணர்ந்து மண்டபத்திலிருந்த எல்லோருடைய கண்களும் அவற்றையே வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

''இன்னும் ஏன் வரவில்லை?'' என்பது போல அக்கள தேவச் சோழன், தனது தளபதியைத் திரும்பிப் பார்த்தான். மன்னரின் மனதைப் புரிந்து கொண்ட தளபதி கொலு மண்

பத்திலிருந்து அவசரமாகப் புறப்பட்டு கோட்டை வாசலை நோக்கி நடந்தான்.

இதற்கிடையே பொன்னர் - சங்கர், மாயவர் மூவரும் வந்த ரத வண்டி உறையூருக்குள் நுழைந்து விழாக் கோலம் பூண்ட வீதிகளையெல்லாம் கடந்து அரண்மனை வாசலுக்கு வந்து சேர்ந்தது.

அந்த வாயிற்புறத்தின் அழகும், பொன்னர் - சங்கரை வர வேற்பதற்காக மேலும் அலங்கரிக்கப்பட்டிருந்த விதமும் அவர் களை வெகுவாகக் கவர்ந்தது. ரத வண்டியின் சாரதி, அதனை வாயிற்புறத்துக்குள்ளே செலுத்திய போது ஆச்சரியமொன்று அவர்களுக்குக் காத்திருந்தது. அரண்மனை வாயிற் கதவு மின் னல் வேகத்தில் மூடிக் கொண்டதுதான் அந்த ஆச்சரியம்!

வாசல் காக்கும் வீரர்களின் தலைவனான விக்ரமன் ரத வண்டியின் முன்னால் வந்து நின்றான்.

''பொன்னர் - சங்கர் தானே நீங்கள்?''

''ஆமாம்!''

''உறையூரின் அடிமைகளாக அங்கீகரிக்கப்பட இருக்கிற நீங்கள் அரண்மனையின் பிரதான வாசல் வழியாக நுழையக் கூடாது. பின்புறத்தில் ஒரு வழியிருக்கிறது. அந்தப் பக்கமாகச் செல்லுங்கள்.''

''என்ன?''

''இது சோழ மன்னர் உத்திரவு!''

சங்கர் புயலானான்! ''இது சகிக்க முடியாத அவமானம்! மாயவரே! இதைப் பொறுத்துக் கொள்ளவே முடியாது!'' என்று உரக்கக் கூவினான். ''பொறு தம்பி!'' என்று சங்கரை அடக்கினான் பொன்னர்!

மாயவர், ரத வண்டிக்கு முன் நின்ற விக்ரமனை உற்று நோக்கினார். பிறகு சங்கரைப் பார்த்துச் சொன்னார்.

''இது உறையூரின் உத்திரவு இல்லை! தலையூரின் சூழ்ச்சி!''

''அப்படியானால்?'' என்று உறுமினான் சங்கர்!

''தடையை மீறலாம்!'' என்றார் மாயவர்.

''மீற விடமாட்டோம்!'' என்று பயங்கரமாக பயமுறுத்தி னான் விக்கிரமன். பயமுறுத்தியது மட்டுமல்ல பல நூறு வீரர் களைச் சேர்த்துக் கொண்டு, ரத வண்டியை இப்படியும் அப் படியும் அலைக்கழித்து இறுதியாகக் கீழே உருட்டி விட்டான். குதிரைகள் மிரண்டோடின. சாரதி காயமுற்றான். பொன்னர் - சங்கர், மாயவர் மூவரும் தரையில் வீழ்ந்தனர்.

வீழ்ந்த அந்தக் கணமே சங்கர் அடிபட்ட புலியின் வேகத் தோடு அந்தக் கோட்டைக் கதவின் மீது பாய்ந்தான். அவன் பலமனைத்தும் எப்படித்தான் அவனது வலது தோளில் திரட் டப் பட்டுக் குவிந்து விட்டதோ தெரியவில்லை - அந்தத் தோளினால் கோட்டைக் கதவை ஒரு மோது மோதினான்.

கதவு மூன்று நான்கு பகுதிகளாகப் பிளந்து சிதறித் திறந்து கொண்டது.

அந்த ஒலி அக்கள தேவனின் அத்தாணி மண்டபத்துக்குள்ளே பெரும் இடி விழுந்தது போன்ற ஒலியாகக் கேட்டது.

கோட்டைக் கதவை உடைத்துக் கொண்டு பகைவர்கள் யாரோ நுழைந்து விட்டனர் என்று ஒரே பரபரப்பு!

''ஆ!'' எனச் சினந்து எழுந்தான் அக்கள தேவச் சோழன்!

# அவையில் நடந்த அங்கீகார விழா!

## 34

உறையூரிலிருந்து செய்திகளை மூட்டை கட்டிக் கொண்டு வந்த ஒற்றன், தலையூர் மாளிகையின் அந்தரங்க மண்டபத்தில் காளி மன்னனிடம் அனைத்தையும் விபரமாகச் சொல்லத் தொடங்கினான்.

''கோட்டைக் கதவு எதிரிகளால் உடைக்கப்படவில்லை என்பது சில நொடிகளுக்குள் அக்கள தேவச் சோழருக்கு தெரிவிக்கப்பட்டு விட்டது. நமது விக்கிரமன் எண்ணிச் செயல் பட்டது வேறு! ஆனால் நடந்து விட்டதோ வேறு! கோட்டை யின் பிரதானக் கதவைச் சாத்தி பொன்னர் - சங்கரை அவ மானப்படுத்தினால் அவர்கள் சினந்து கொண்டு திரும்பிச் செல்வார்கள். சோழனுக்கும் அவர்களுக்கும் பகை வளரும் என்பதுதான் திட்டம். ஆனால் அந்த மாயவர் விக்கிரமன் யார் என்பதைப் பொன்னர் - சங்கருக்கு உணர்த்தியிருக்க வேண்டும். அதனால் நூறு யானைகளின் பலத்தோடு அந்த சங்கர் கோட் டைக் கதவைத் தனது மத்தகம் போன்ற தோளினால் மோதிச் சிதற அடித்து விட்டான். சோழர் தளபதி கோட்டை வாயிற் புறத்துக்கு வந்தவுடனேயே மாயவர் அவர் காதில் ஏதோ சொன்னார். விக்ரமனின் உத்திரவு கேட்டு பொன்னர் - சங்கர் வந்த ரதத்தை உருட்டி விட்ட வீரர்கள்; திடீரென மாறி - தளபதியின் உத்திரவுப்படி அதே விக்ரமனைச் சூழ்ந்து கொண்டு அவன் கைகளில் விலங்கிட்டுச் சிறைச்சாலைக்கு இழுத்துச் சென்றார்கள்.''

ஒற்றன் இதைச் சொன்ன போது, தலையூர்க் காளியின் கண்கள் நெருப்புத் துண்டங்களாயின.

''என்ன? விக்ரமனைச் சிறையில் போட்டு விட்டார்களா? அவனை விசாரணை கூடச் செய்து என்ன நடந்தது என்று அறிந்திட சோழ மன்னன் நினைக்கவில்லையா?'' என ஆத்தி ரத்துடன் கேட்டான். ஒற்றனோ அதற்கு நிதானமாகப் பதில் அளித்தான்.

''அரசே! உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற உண்மைக்கு எதற்காக விசாரணையென்று எண்ணியிருக்கக் கூடும். எத்தனையோ விசாரணைகளில் உண்மைக் குற்றவாளிகள் விடுவிக்கப்பட்டு விடுகிறார்கள். நிரபராதிகள் தண்டிக்கப்பட்டு விடுகிறார்கள். இது நம்முடைய மனச்சாட்சிக்கே தெரிந்த விஷயம்; விக்ரமன் குற்றவாளி என்பது! நமது நாட்டில் நமது கோட்டையின் தலைமைக் காவலன் ஒருவன் இவ்வாறு நடந்து கொண்டிருந்தால் என்ன செய்திருப்போம்?''

யோசிக்காமல் பதில் சொன்னான் காளி மன்னன்; ''தலையை வெட்டி எறிந்திருப்போம்!'' என்று!

''அதனால் சோழ நாட்டில் நமது விக்கிரமனுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை மிகக் குறைவானது என்பது புரிகிறதல்லவா அரசே!''

மிகப் பணிவாகவும் குழைந்தும் நெளிந்தும் ஒற்றன் பேசியதால் தலையூர்க்காளி; அவன் தனக்கு அறிவுரை கூறுகிறானே யென்று கருதி பொங்கி எழவில்லை. காளி மன்னன் அமைதியாகச் சிந்திக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட ஒற்றன்; அதுதான் சமயமென்று கருதி - காளி மன்னன் சென்று கொண்டிருக்கும் பாதையிலிருந்து சற்று வேறு திசையில் அவனைத் திருப்பலாமென்று நம்பிக் கொண்டு தொடர்ந்து பேசினான்.

''நான் உங்கள் ஒற்றன். உங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்ட பணியாள். வேட்டையாடும்போது நீங்கள் வீசும் வேலோ, விடும் அம்போ - நேராகச் சென்று நீங்கள் வைத்த குறியின் மீது பாயும்! நானோ ஒற்றன்! நேராகப் பாயும் வேலோ அம்போ அல்ல! வளைந்து வளைந்து சென்றும், ஒளிந்து ஒளிந்து சென்றும் வ்ன விலங்குகள் எங்குள்ளன என்பதை மோப்பம் கண்டு அறிவிக்கும் நாயைப் போன்றவன். எனவே என் மூலம் கிடைக்கும் செய்திகளுக்குத் தாங்கள் முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.''

''இப்போது முக்கியத்துவம் அளிக்காமலா இருக்கிறேன். ஏன் உனக்கு இந்தச் சந்தேகம்? எதையும் என்னிடம் ஒளிக்காமல் சொல்லலாம்!''

''சொல்லலாம் - ஆனால் தாங்கள் அதை நம்புவது என்பது எளிதான காரியமல்லவே! மனம் திறந்து தங்களிடம் பேசிய

தால்தானே மாயவருக்கும் தங்களுக்கும் மனக்கசப்பே ஏற்பட்டு - அவர் நம்மிடமிருந்து பகையாளிகளுக்கே உறவாகி விட்டார்.''

''மாயவர் விஷயமே வேறு! என்னுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் குறுக்கிட்டுத் தடுத்துக் கொண்டேயிருந்தார். எனக்குத் துணையாக இருந்து எனது விரோதிகளை வீழ்த்த வேண்டிய பொறுப்பில் இருந்தவர் வேண்டாத யோசனைகளைச் சொல்லிக் கொண்டிருந்தால் எப்படி?''

''அதனால்தான் நானும் எதையும் வெளிப்படையாகச் சொல்ல பயப்படுகிறேன் அரசே! ஆனால் ஒன்று; என் உயிரை விட நான் ஆற்ற வேண்டிய கடமையை நான் உயர்வாகக் கருதுவதால் தங்களிடம் சொல்லிவிட வேண்டுமென்ற துணிவும் எனக்கு ஏற்படாமல் இல்லை''

''அஞ்சாமல் சொல்லலாம். அதை ஏற்றுக் கொள்வதும் ஏற்றுக் கொள்ளாததும் என்னைப் பொறுத்தது. எனக்கு ஒரு நம்பிக்கையிருக்கிறது. நீ சொல்வதை நான் ஏற்றுக் கொள்ளாவிட்டால் நீயும் அந்த மாயவரைப் போல எனக்குத் துரோகம் செய்து விட்டுப் போய்விட மாட்டாய் என்று திடமாகவே நான் நம்பியிருக்கிறேன்.''

''அரசே! மோப்பம் பிடித்து வன விலங்குகளைக் காட்டும் வேட்டை நாய் என்று என்னைச் சொல்லிக் கொண்டேன் அல்லவா?''

''ஆமாம்!''

''இந்த வேட்டை நாய் மோப்பம் பிடித்துத் தங்களுக்கு அடையாளம் காட்டும் இரண்டு மிருகங்கள் மனித உருவில் நடமாடிக் கொண்டிருக்கின்றன.''

ஒற்றன், யாரைச் சொல்லப் போகிறான் என்பதை ஓரளவு உணர்ந்து கொண்ட காளி மன்னன்; ஒற்றனின் வாயிலிருந்தே அந்தப் பெயர்களை வரவழைக்கலாமே என்ற கருத்துடன்;

''நீ யாரைச் சொல்கிறாய்?'' என்று கேட்டான். அதற்கு விடையளிக்க ஒற்றன் முனைந்த போது அந்தரங்க மண்டபத்திற்குள் யாரோ வரும் ஓசை கேட்டது. காளி மன்னனும், ஒற்றனும் திரும்பிப் பார்த்தனர். செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் வந்து கொண்டிருந்தனர். காளி மன்னனுக்கு

பயம்; ஒற்றன் ஏதாவது துணிச்சலாக உளறி விடப் போகி றான் என்று! அதனால் அவன் வாயை அடைக்க மிகுந்த சாதுர்யத்தோடு பேச்சின் திசையை மாற்றினான். திசை மாற் றப்பட்டதே தவிர, ஒற்றனுக்குச் சொல்லித் தெளிய வேண்டிய பதிலை அவன் அளித்து விட்டான்.

''பாரதத்திலே, துரியோதனன் - சகுனி இவர்களைப் பற்றித் தெரிந்திருந்தும் கர்ணன் கடைசி வரையில் அவர்களது பேச் சையே கேட்டுக் கொண்டிருந்தான். காரணம் என்ன தெரியுமா? அவனது இளமைப் பருவத்தில் துரியோதனன் கூட்டத்தார் தான் அவனுக்கு ஆதரவாக இருந்தார்கள். அவனை அங்க தேசாதிபதி ஆக்கினார்கள். அவர்களுக்கு நன்றிக் கடன் கழிப் பதற்காகக் கர்ணன் அவர்கள் கிழித்த கோட்டைத் தாண்டாமல் இறுதி வரையில் வாழ்ந்தான். அவர்களுக்காகவே வீழ்ந்தான்.''

''என்ன திடீரென்று மகாபாரத உபன்யாசம் நடக்கிறது? அதுவும் ஒற்றரிடம்?'' என்று செல்லாத்தாக் கவுண்டர் சிரித்துக் கொண்டே கேட்டார்.

''ஒன்றுமில்லை! பராக்கிரமன் தம்பி விக்ரமனை உறையூர்ச் சோழன் சிறையில் போட்டு விட்டதைப் பற்றி ஒற்றன் கவ லைப்பட்டதற்காக ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்கிறேன்; கடமையைச் செய்ததற்காக கர்ணன் உயிரையே விட்டு விட வில்லையா; என்று!''

செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் திகைப்புற்று; ''என்ன? விக்ரமன் சிக்கிக் கொண்டானா?'' என ஒரே குரலில் அலறினர்.

''ஆமாம் மிச்சமுள்ள செய்திகளையும் ஒற்றன் சொல்லட்டும்'' என்று காளி மன்னன் கூறவே; ஒற்றனுக்கு இயல்பாகவே ஏற் பட்ட சலிப்புடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, உறை யூர் நிகழ்ச்சிகளை விவரித்தான்.

''இனிய வரவேற்பில் எதிர்பாராமல் ஏற்பட்ட சம்பவத் திற்காக உறையூர் அரசு மிகவும் வருத்தப்படுகிறது என்று அக் கள தேவச் சோழர் அவையிலேயே தெரிவித்தார். பொன்ன ரும் - சங்கரும் மாயவரும் கொலுமண்டபத்தில் அவர்களுக் கென போடப்பட்டிருந்த சிறப்பு ஆசனங்களில் அமர்த்தப் பட்டனர். அந்த இரண்டு வீரர்களுடைய தோற்றத்தையும் அடிக் கடி பார்த்துப் பார்த்துப் சோழமன்னர் பூரித்துப் போனார். வள

நாட்டு எல்லைக் காவல் ஆட்சித் தலைவர்களாகப் பொன்னரையும் - சங்கரையும் சோழ அரசு அங்கீகரிப்பதற்கான செப்புப் பட்டயம் ஒன்றை அமைச்சர் அரசரிடம் கொடுத்தார். சோழ அரசர் அதைத் தனது கரத்தில் ஏந்தியவாறு, பொன்னரையும் - சங்கரையும் தனது அருகே வரும்படி அழைத்தார். பொன்னரும் - சங்கரும் மாயவரின் முன்னே தலை தாழ்த்தி வணங்கி விட்டு அவரது வாழ்த்தைப் பெற்றுக் கொண்டு சோழ மன்னர் அருகில் போய் நின்றனர். அந்தக் காட்சியைக் கண்டு பரவசமுற்ற அவையினர் ''அக்கள தேவச் சோழ மன்னர் வாழ்க!'' என்று முழங்கினர். அப்போதுதான் யாரும் எதிர்பாராத அந்த அதிசயம் நடந்தது. பொன்னர் - சங்கரின் தன்மான உணர்வு தலை தூக்கி நின்ற அந்த நிகழ்ச்சி என்னையே புல்லரிக்கச் செய்து விட்டது.''

ஒற்றன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே காளி மன்னன் சிரித்தவாறு ''போதும்! போதும்! நீ உணர்ச்சி வசப்பட்டு விடாதே! நடந்ததை மட்டும் சொன்னால் போதும்!'' என்றான். அந்தச் சிரிப்பில் சினமும் கலந்திருந்தது.

பதற்றமடையாமல் ஒற்றன் நிதானமாக; உறையூர்க் கொலு மண்டபத்தில் மேலும் என்ன நடந்தது என்பதை விவரித்தான்.

''செப்புப் பட்டயத்தை அக்கள தேவச் சோழர் கையில் வைத்துக் கொண்டே பொன்னர் - சங்கரையும் அவையோரையும் பார்த்துப் பேசினார்.''

''என்ன பேசினார்? என்ன நடந்தது?''

''பொன்னர் - சங்கரின் வீர தீர பராக்கிரமம் பற்றி மாயவர் விளக்கியதோடு, இவர்களின் தந்தை குன்றுடையாருக்கு நியாயமாகச் சேர வேண்டிய நாட்டுரிமை குறித்தும் நம்மிடத்திலே எடுத்துக் கூறினார். அதன் பொருட்டே நமது சோழர் படை பொன்னர் - சங்கருக்குத் துணையாக அனுப்பப்பட்டது. அதுவுமன்னியில் வளநாட்டைக் காவல் ஆட்சி புரிந்து வந்த செல்லாத்தாக் கவுண்டரும், அவருக்குத் துணையாக இருக்கும் தலையூர்க்காளி மன்னனும் நமது சோழ மண்டிலத்துக்கு அடங்கியிருப்பவர்களைப் போலக் காட்டிக் கொண்டாலும் கூட அது வெறும் நடிப்பு என்பதை நாம் உணர்ந்து விட்டோம். நமது ஆட்சிக்கு அவர்கள் மதிப்பளிக்காது நடந்து கொண்டதால் கூட நமக்கு வருத்தமில்லை. அவர்களின் ஆட்சிக்குட்பட்ட மக்கள் படுந்துயருக்கு அளவேயில்லை. விவசாயி

கள், தொழிலாளிகள் வணிகர்கள் எனப் பலதரப்பட்ட பிரி வினரும் துயர வாழ்வே மேற்கொண்டுள்ளதாகச் செய்திகள் வந்த வண்ணமிருக்கின்றன. நீர் வளங்குன்றி நில வளம் நசித் துப் போய் வறுமையின் பிடியில் குடி மக்கள் வாடுவதைப் பற்றிச் சிறிதும் சலனமடையாமல், தங்களின் ஆடம்பரமான கோலாகலக் கேளிக்கை வாழ்க்கையிலேயே வள நாட்டு அர சும் - அதற்குத் தோழனாக தலையூர் அரசும் இருப்பதை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும். அதனால்தான் மாய வரின் வேண்டுகோளை நாம் தயங்காமல் ஏற்றுக் கொள்ள நேரிட்டது. நமக்கு நாடு பிடிக்கும் ஆசை கிடையாது. நமது சோழர் குலத்தைப் பொறுத்தவரையில் நமது மூதாதை இராஜ ராஜ சோழர், இராஜேந்திர சோழர் இவர்களெல்லாம் கடற் படை கொண்டு கடாரம் வரை சென்றார்கள். வென்றார்கள். இலங்கைத் தீவிலும் தமிழ் மக்களைக் காக்க அவர்களின் கடற் படை சென்று வெற்றிக் கொடி நாட்டியதுண்டு. இப்படிப் பரந்து விரிந்திருந்த சோழ சாம்ராஜ்யம் இறுதியாக மூன்றாம் இராஜேந்திர சோழருக்குப் பிறகு சாம்ராஜ்ய அந்தஸ்தை இழந்து விட்டது என்பதை அவையோர் அறிவீர்கள். அதன் பின்னர் சோழ மண்டிலம் பல பகுதிகளாகப் பிரிந்தது. அவற் றில் ஒரு பகுதியே நமது உறையூரின் ஆளுகைக்குட்பட்ட பகுதி. இந்தப் பகுதிக்கு அடங்கியது தலையூர் எனினும் தலையூரையும் அதனைச் சார்ந்த பதினெட்டு வேட்டுவர் குல நாடுகளையும் ஓரளவு சுதந்திரத்துடன் இயங்க நாம் சம்மதித்திருக்கிறோம். தலையூர் நாட்டின் பக்க பலத்துடன் இருந்தாலும் கூட வள நாட்டு அரசு என்பது நமது உறையூர் அரசைத் தனது பேரர சாகக் கொண்டு இயங்க வேண்டியதாகும். நமது அதிகார வரம்பைக் கடுமையாகக் கடைப்பிடிக்காத காரணத்தால் வள நாடு, தனது விருப்பம் போல் ஆட்சி நடத்தி மக்களின் வெறுப்பையும், நமது வெறுப்பையும் சம்பாதித்துக் கொண் டது. இப்போது அதற்கு ஒரு முடிவு ஏற்பட்டு வளநாட்டுப் பரிபாலனம் குன்றுடையாருக்கும் அவரது குமாரர்களுக்கும் கிடைத்திருக்கிறது. படையெடுப்பின் மூலம் பொன்னரும் - சங்கரும் வள நாட்டை மீட்டிருந்தாலும் கூட, அவர்களை அந் தப் பகுதியை ஆளுகின்ற பொறுப்புக்கு உரியவர்களாக்க சோழ நாட்டின் அங்கீகாரம் வழங்கப்பட வேண்டும். அந்த அங்கீகாரத்தைத்தான் இந்த அவையில் உங்கள் அனைவரின் நல்லாசிகளுடன் வழங்கப் போகிறேன்.''

சோழ மன்னர் ஆற்றிய உரையை ஒரு எழுத்து விடாமல் ஒற்றன் கூறிக் கொண்டிருந்த போது தலையூர்க்காளி குறுக் கிட்டு;

''இந்த ராமாயணமெல்லாம் எதற்கு? நடந்ததை சீக்கிரம் சொல்!'' என்றான்.

''அரசரிடம் எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் சொல்ல வேண்டுமல்லவா? சோழ மன்னர், தனது பேச்சை முடிக்காமல் தன் கையிலிருந்த செப்புப் பட்டயத்தை பொன்னர் - சங்கர் இருவர் கைகளிலும் கொடுத்தார். அவர்களும் மிகவும் மரி யாதையுடன் அந்தப் பட்டயத்தைப் பெற்றுக் கொண்டனர்.''

''அது சரி; ஏதோ அதிசயம் நடந்தது? தன்மான உணர்வு தலை தூக்கியது; என்றாயே - அது என்ன?

அவசரப்பட்டான் தலையூர்க்காளி!

ஒற்றன், ''இதோ சொல்லி விடுகிறேன்'' என்று கூறி காளி யைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டான்.

''உங்களிருவரையும் வள நாட்டு ஆட்சிக் காவலர்களாக அங்கீகரிக்கும் இந்தப் பட்டயத்தில் குறிப்பிட்டுள்ளவைகளை ஊன்றிப் படித்து அதன்படி நடந்து கொள்வீர்களாக'' என்று அக்கள தேவச் சோழர் சொன்னதுமே சங்கரின் முகம் மாறிப் போய் விட்டது. அவன் புன்னகை எப்படியோ மறைந்து போய் விட்டது.

''உம்; பிறகு?'' என்றான் தலையூர்க்காளி ஒற்றனிடம்!

''சோழ மன்னரே அந்த செப்புப் பட்டயத்தில் உள்ள குறிப் புகளை பொன்னர் - சங்கருக்கு விளக்கிச் சொன்னார்!''

''என்ன குறிப்புகள்?''

காளி மன்னனால் பொறுமையாக இருக்க முடியவில்லை.

''வள நாட்டுக் குடிமக்களை வாட்டம் சிறிதுமின்றி வாழ வைப்போம். குடி மக்களின் குறைபாடுகளை அறியவும், அது குறித்து ஆவன செய்யவும் கிராம சபைகளை அமைத்துச் செயல்படுவோம். நல்லோரை வாழ வைப்பதும், தீயோரை அடக்கியொடுக்கித் திருத்துவதும் கிராம சபையின் கடமை யெனக் கொண்டு வள நாடு முழுதும் அதன் வழிக் காரியங் கள் ஆற்றுவோம். ஏரி, குளம், ஊருணி முதலிய நீர் நிலை களைப் பாதுகாத்து விளைவு பெருக்கிட ஏரிவாரியங்களை

நியமித்தும், புன்செய் மற்றும் தோட்டங்களைப் பராமரிக்க தோட்ட வாரியங்களை நியமித்தும், பொன் நாணயங்களை ஆராய்ந்திட பொன் வாரியங்களை நியமித்தும், நிலவரி மற்றும் பிற வரிகளை வசூலித்து அரசுக்குச் செலுத்திட பஞ்ச வார வாரியங்களை நியமித்தும், இவையன்னியில் கழனிகளைக் கவனிக்க - கணக்குகளை ஆய்வு செய்ய அலுவலர்களை நியமித்தும், இந்த நியமனங்களைத் தேர்வு மூலம் செய்தும், குடி மக்களின் நலன்களைப் பேணுவோம். சோழ அரசின் நிர்வாகப் பணிகளுக்காகச் செயல்படும் முறைகளைத் தவறாது பின்பற்றி, வளநாட்டு மக்களை வளமான வாழ்வு நலமான வாழ்வுக்குரியவர்களாக ஆக்குவோம் எனச் சூளுரைப்பதுடன், இந்த நிர்வாகப் பணிகள், மற்றும் பாதுகாப்புப் பணிகள், கல்விப் பணிகள், இஃதன்னியில் எஞ்சிய பணிகள் அனைத்தையும் உறையூர்ச் சோழ அரசின் அனுமதி பெற்று நிறைவேற்றுவோம் என வாக்குறுதியும் வழங்கி; உறையூர்ச் சோழருக்கு ஆண்டுதோறும் முறையாகக் கப்பம் செலுத்துவோம் என்றும் இந்த அவையில் சத்தியம் செய்கிறோம்; என்று அக்கள தேவச் சோழர் ஒவ்வொன்றாகச் சொல்லச் சொல்ல பொன்னர் கூடச் சற்றுப் பொறுமையாக இருந்தான். அவன் முகம் கறுத்துப் போயிருந்ததே தவிர ஆத்திரத்தை அவன் விழிகளில் காண முடியவில்லை. ஆனால் சங்கர் எரிமலையைப் போலப் பொங்கினான். குமுறினான். பொன்னர் கையிலிருந்த அந்த செப்புப் பட்டயத்தை வெடுக்கென்று இழுத்து ''சே! இது என்ன எங்களை அங்கீகரிக்கும் பட்டயமா? அல்லது உறையூருக்கு எங்கள் வளநாட்டை அடிமையாக்கும் கருவியா?'' என்று கேட்டுக் கொண்டே கொலு மண்டபத்தில் வீசி எறிந்தான்.''

இந்த நிகழ்ச்சியை ஒற்றன் சொல்லி முடித்ததும் - தலையூர்க் காளி ஆச்சரியத்தில் மூழ்கிப் போய்; ''அப்படியா? அதன் பிறகு என்ன நடந்தது?'' என்று மெத்தப் பரபரப்புடன் கேட்டான்.

''அந்த அவையில் உள்ளோர் அசைவற்றுப் போய்த் தூண்களோடு தூண்களாக நின்றனர். அக்கள தேவச் சோழர் சிலையானார். மாயவர் திகைத்துப் போய் நின்றார். பொன்னர், சங்கரைப் பிடித்து இழுத்து - தம்பி! பொறுமையாக இரு'' என்றான்.

''அதன் பிறகு?''

''அக்கள தேவர், சிலையாக நின்ற நிலையிலிருந்து மாறி - நினைவு வந்தவராக; மெல்லப் படிகளிலிருந்து கீழே இறங்கி வந்து - அவையில் - தரையில் - வீசியெறியப்பட்ட அந்த செப்புப் பட்டயத்தைத் தனது கையில் எடுத்தார்.

''எடுத்து என்ன செய்தார்?''

''அவர் அதை எடுப்பதற்குள் சோழத் தளபதி, உடைவாளை உருவி வீரர்களுக்கு ஆணையிடவே; வீரர்கள் விலங்குகளுடன் பொன்னர் - சங்கர் இருவரையும் சூழ்ந்தனர்.''



# வந்தாளே ஒரு வடிவழகி

## 35

அந்த அத்தாணி மண்டபமே அதிரும்படி அக்களதேவச் சோழர்; பொன்னர் - சங்கரைச் சூழ்ந்து சென்ற வீரர்களை நோக்கி ''நில்லுங்கள்'' என்று ஆணையிட்டார். விலங்கு களுடன் சென்ற வீரர்கள் விசை முடுக்கப்பட்ட பொம்மை களைப் போல பின் வாங்கினர். செப்புப் பட்டயத்தைக் கையில் பிடித்துக் கொண்டே சோழ மன்னர், சங்கரின் அரு கில் வந்தார். சங்கரின் விழிகளில் முதலில் கிளம்பிய தீயின் ஜீவாலை தணிந்திருந்தது என்றாலும் கனல் முழுமையாக அணையாமல் இருப்பதை உறையூர் மன்னர் உற்றுக் கவனித் தார். சங்கர் தனது தவறை உணர்ந்து மன்னிப்பு கேட்கக் கூடும் என்று மண்டபத்தில் குழுமியிருந்தோர் எதிர்பார்த்தனர். அக்கள தேவர், அர்த்தம் பொதிந்த சிரிப்பொன்றை உதிர்த் தார். பிறகு சங்கரைப் பார்த்து அமைதியாகவே பேசினார்.

''இளம் வீரனே! சோழ மண்டிலத்துக்கு சொல்லொணாத அவமானத்தை விளைவித்திருக்கிறாய்; இருந்தாலும் எனக்கு உன்மீது கோபம் இல்லை. பரிந்தூட்டும் பாலமுதத்தை தாயின் கையிலிருந்து கீழே தட்டி விடும் பச்சிளங் குழந்தையை அந்தத் தாய், தண்டிக்க முடியுமா என்ன? ஏன் தட்டி விட்டாய்? என்று அன்னை அந்தக் குழந்தையிடம் கேட்க மாட்டாள். கேட்டுப் பயனில்லை. காரணம்; அந்தக் குழந்தை, பேசும் பரு வத்தை அடைந்திடவில்லை. ஆனால் நீ பேச முடியும். அத னால் கேட்கிறேன்; செப்புப் பட்டயத்தை இகழ்ந்துரைத்து ஏன் தட்டி விட்டாய்?''

சோழனின் கேள்விக்குப் பதில் ஏதும் கூறாமல் அண்ணனை அழைத்துக் கொண்டு அவையிலிருந்து வெளியேறி விடலாமா என்று முதலில் நினைத்த சங்கர், அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டவனாக நெஞ்சை நிமிர்த்தியவனாக அக்களதேவருக்கு முன்னால் சென்றான்.

''மன்னர் அவர்களே! பட்டயம் தந்தீர்களே; அதனை நாங்கள் பாலமுதமாகக் கருதவில்லை. பாஷாணம் ஊற்றித் தயாரிக்கப்பட்ட பாயசமாகக் கருதுகிறோம். எங்கள் பகுதியில் எங்கள் மக்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்கள் அனைத்துக்கும் தங்கள் நாட்டின் அனுமதி பெற வேண்டும். ஆண்டுதோறும் உங்களுக்கு நாங்கள் கப்பம் வேறு கட்ட வேண்டும். இப்படியொரு அங்கீகார விழாவில் கலந்து கொள்ள நாங்கள் இங்கு வரவில்லை''

''வள நாட்டை மீட்கப் படைத்துணை புரிந்ததை மறந்துவிட்டுப்பேசலாமா? இனி என்றும் எமது நாட்டுப் படை வீரர்கள் உங்கள் நாட்டுக்குப் பாதுகாப்பாக இருப்பார்களே; அதெல்லாம் தேவையில்லையா?''

''இப்படியொரு நிலை வரக் கூடும் என்று சந்தேகப்பட்டுத்தான் நான் அப்போதே மாயவரிடம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொண்டேன். ஆனால் அன்று மாயவர் சொன்னது வேறு; இன்று நடப்பது வேறு!'' என்று பொன்னர் குறுக்கிட்டுப் பேசவே, மாயவர் அதற்கு விளக்கம் அளிக்க முடியாமல் திணறினார். இருப்பினும் நிலைமையைச் சமாளிக்க வேண்டுமே என்ற நெருக்கடிக்கு ஆளானவராய் - பொன்னரையும் - சங்கரையும் பார்த்து முக வாட்டத்துடன் தனது மௌனத்தைக் கலைத்தார்.

''அரசே! என் வேண்டுகோளையேற்று பொன்னர் - சங்கருக்குப் பக்கபலமாக சோழப் படையை அனுப்பினீர்கள். சங்கர், மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்ற போதிலும் - அப்போதே சோழப் படையைப் பயன்படுத்திக் கொள்ள பொன்னர் - விதித்த நிபந்தனை; ''படையை அனுப்பிவிட்டு அதற்குப் பதிலாக வள நாட்டை அடிமை நாடாக ஆக்கிக் கொள்ளக் கூடாது'' என்பதுதான்!''

அக்கள தேவச் சோழர் ஆச்சரியத்துடன், ''அப்படியா?'' என்று கேட்டார்.

''ஆமாம் மன்னவா; நானும் அந்த நேரத்தில் எப்படியும் வளநாடு கைப்பற்றப்பட்டு செல்லாத்தாக் கவுண்டரின் ஆட்சி வீழ்ந்து - அத்துடன் தலையூர்க் காளிக்கு அந்த நாட்டின் மீதிருந்த ஆதிக்கமும் தகர்ந்தால் போதுமென்ற நினைப்புடன் - பொன்னரின் நிபந்தனையைத் தங்கள் சார்பில் ஏற்றுக் கொண்டுவிட்டேன். தங்கள் ஒப்புதலைப் பெறாமல் நான் அவ்வாறு

உறுதியளித்தது தவறுதான்! அதைவிடப் பெரிய தவறு என் உறுதிமொழியை பொன்னர் - சங்கர் இருவரும் நம்பும்படி நான் நடந்து கொண்டது!''

''மாயவரே! தலையூருக்கு ஒரு வகையில் வளநாடு அடிமையாக இருந்தாலும் - தலையூரும் சரி, வளநாடும் சரி; நமது சோழ ராஜ்யத்துக்குக் கட்டுப்பட்டவைகள்தானே! அப்படியிருக்கும் போது இப்போது நான் என்னவோ புதிதாக வளநாட்டின் மீது ஆதிக்கம் செலுத்த முற்படுகிறேன் என்று இந்த இளம் வீரர்கள் நினைப்பது சரியல்லவே!''

பொன்னர் தனக்கேயுரிய நிதானத்துடன் - ஆனால் திட்டவட்டமாகத் தெரிவித்தான். ''அடிமைத்தனம் தொடர வேண்டுமென்று ஆண்டவன் கட்டளையா? இந்தக் கூற்றை ஏற்றுக் கொள்ள என் உள்ளம் இடம் தரவில்லை. கேடுகள் ஒழிய வேண்டும் - வள நாட்டு மக்கள் நல்வாழ்வு பெற வேண்டும் என்ற தூய எண்ணத்துடன் தாங்கள் எங்களுக்குத் துணை புரிந்தீர்கள் என்பது உண்மையானால் அதற்குப் பதிலாக உறையூருக்குக் கப்பம் கட்டுகிறவர்களாக நாங்கள் இருக்க வேண்டுமெனக் கூறுவது எங்கள் தன்மான உணர்வுக்கும் உரிமை வேட்கைக்கும் விடப்படும் அறைகூவல் அல்லவா?''

''அப்படியானால் சோழ நாட்டுடன் வள நாட்டுக்கு எந்த வகையான தொடர்பும் இருத்தலாகாது என்பது பொன்னர் - சங்கரின் கருத்தோ?''

சோழ மன்னரின் இந்தக் கேள்வியில் அவரது மன உளைச்சல் தெரிந்தது. அதற்கு சங்கர் உடனடியாக விடையளித்து விட்டான்.

''தொடர்பே இருக்கக் கூடாதென்றால் எங்களை அங்கீகாரம் செய்யும் இந்த விழாவுக்கு வந்திருக்கவே மாட்டோம்! உறையூர், வள நாட்டை விடப் பெரிய நாடு! படை பலம் மிக்க நாடு! பரப்பளவில் மக்கள் தொகையில் எல்லாவற்றிலுமே பெரிய நாடு! இத்தகைய சோழர் நாடு; இன்றைக்கு ஆதிக்கப் பிடிப்பிலிருந்து விடுபட்டுள்ள வளநாட்டை நட்பு முறையில் அங்கீகரித்து அதன் சுதந்திரத்துக்கும் சுக வாழ்வுக்கும் உறுதுணையாக இருக்க வேண்டுமேயன்றி - அடிமையாக்கும் தன்மையில் அங்கீகாரம் அளிப்பது எம்மைப் போன்ற உரிமை வேட்கையுள்ளவர்களால் ஒப்புக்கொள்ளக் கூடியதா?''

சோழ வேந்தனுக்கு எதிராகச் சொல்லப்பட்டது அந்தப் பதில் என்ற போதிலும் - அந்தப் பதில் கேட்டு அக்களதேவர் சீற்றம் கொள்ளவில்லை. பொன்னர் - சங்கரின் விவேகம், வீரம் இரண்டையும் இணைக்கும் உரிமை தாகம் - இவற்றை எண்ணிப் பார்த்து மனத்துக்குள் மகிழ்ந்து பாராட்டிக் கொண் டார். அவர்கள் மீது அவருக்கு மேலும் ஒரு படி மதிப்பு உயர்ந்தது. இருப்பினும் அவர்களது முடிவை உடனடியாக ஏற் றுக் கொள்ளாமல் மீண்டும் ஒரு கேள்வியை எழுப்பினார்.

''அப்படியானால் நட்பு அடிப்படையிலே கூட சோழ நாடு உங்களோடு உறவு கொள்ளத் தயாராயில்லை என வைத்துக் கொள்ளுங்கள்! நீங்கள் விரும்புகிறபடி வளநாடு சுதந்திர பூமி யாக நீடிக்குமா? நீடிக்க முடியுமா? தலையூர்ப் படையும் அத னைச் சார்ந்த பதினெட்டு நாட்டுப் படைகளும் பெரும் படை யெடுப்பு ஒன்றை வளநாட்டின்மீது நடத்தினால் உங்கள் சுதந் திரம் நிலைக்குமா?''

சங்கர் இதயத்தில் ஒரு சவுக்கடியின் மின்னல் வீச்சு. சுளீர் என்று! துடித்துப் போய் விட்டான்!

''உறையூர் சோழருக்கு ஒன்றுரைப்பேன்! இளங்கன்றுகள் பயமறியாது துள்ளுவதாக எண்ணிட வேண்டாம்! எவருக்கோ பணிந்து, வளைந்து, குனிந்து - அடிமையாக இருப்பினும் பர வாயில்லை; ஆட்சிச் சுகத்தை அனுபவித்தால் போதுமென்று நாங்கள் அலையவில்லை. எதிரிகளின் பிரளயம் போன்ற படை வரிசைகளால் தாக்குண்டு நாங்கள் பிணமானாலும் சரி; சுதந்திரக் காற்றைச் சுவாசித்துக் கொண்டே சாகிறோம் என்ற நிம்மதி மட்டும் எங்களுக்குப் போதுமானது! அதற்கு மாறாக - தங்களின் படைவீரர்களின் துணையைப் பெற்று; பகையை அழித்துவிட்டு - தங்களுக்கு நாங்கள் கப்பம் கட்டுகிற அடிமை யாக இருப்பதை எங்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடிய வில்லை. அப்படித் தூக்கத்தில் ஒரு கனவு கண்டால் கூட அது எங்கள் வீரத்துக்கும் உரிமை வேட்கைக்கும் பெரும் இழுக்கு மன்னரே; பெரும் இழுக்கு! அந்தக் கனவுக்குப் பிறகு நாங்கள் வாழ்வதே கூட இந்தப் பூமிக்குப் பெரிய சுமை!''

சங்கரின் உரை அக்களதேவரை உலுக்கி விட்டது. தாவிப் பாய்ந்து அவனை இறுகத் தழுவிக் கொண்டார். அதே போல் பொன்னரையும் இழுத்துச் சேர்த்து அணைத்துக் கொண்டார். அவரது கண்களில் புத்தொளி! அவையோரைப் பெருமிதத் துடன் நோக்கினார்! பூரிப்பு பொங்கிடப் பேசினார்!

''இந்த இளஞ்சிங்கங்களின் மான உணர்வு என்னை மட்டு மல்ல; உங்களனைவரையும் கவர்ந்திழுத்துள்ளது என்பதை அறிகிறேன். கொங்குச் சீமையின் கோபுரக்கலசங்களாகப் பொன்னரும் - சங்கரும் வரலாறு படைக்கப் போகிறார்கள் என்று ஏதோ ஒரு இனந்தெரியாத உணர்வு எனக்கு நம்பிக் கையூட்டுகிறது! அவர்கள் விரும்புவது போலவே வளநாடு எல்லா உரிமைகளும் பெற்று சோழநாட்டுக்கு நட்பு நாடாகத் திகழும். எனவே இந்தச் செப்புப் பட்டய அங்கீகாரம் திரும்ப பெறப்படுகிறது. பொன்னரும் - சங்கரும் என்றைக்கும் உறை யூரின், உற்ற நண்பர்கள் என்ற முறையில் நமது நட்பு நாடு களில் ஒன்றாக வளநாடு அங்கீகரிக்கப்படுகிறது. அதற்கு அடையாளமாக அவர்களுக்கு இந்த முத்தாரங்களை அணி விக்கிறேன்''

சோழர், தனது மார்பில் அசைந்தாடிக் கொண்டிருந்த முத் தாரங்களைக் கழற்றி இருவர் கழுத்திலும் அணிவித்தார். ''பொன்னர் - சங்கர் வாழ்க!'' என்று அவையோர் முழங் கினர். அப்போது மாயவர், தனிக்குரலாக - ஆனால் தழு தழுத்த குரலாக - அடக்க முடியாத ஆனந்தப் பெருக்கில், ''அக்களதேவச் சோழர் வாழ்க!'' என்று கூறினார். பொன் னரும் - சங்கரும் உறையூர் அரண்மனை விருந்தினர்களாக ஓரிரு நாட்கள் தங்கி விட்டுப் போகுமாறு சோழ மன்னர் கேட்டுக் கொண்டார். பொன்னர், சங்கரைப் பார்க்க - சங் கர், பொன்னரைப் பார்க்க இருவரையும் பார்த்து விட்டுச் சோழர்; ''நட்பு முறையில்தான் கேட்டுக் கொள்கிறேன்'' என் றதும் சகோதரர்கள் இருவரும் புன்னகை சிந்தியவாறு தலை யசைத்து ஒப்புக் கொண்டனர்.

உறையூர்க் கொலு மண்டபத்தில் அந்த இளைஞர்களுக்குக் கிடைத்த சிறப்பினையும் - சோழ மன்னர், அவர்கள் மீது கொண்டு விட்ட அன்பினையும் - ஒற்றன் மூலம் தெரிந்து கொண்ட தலையூர்க்காளி மன்னன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ் கினான். செல்லாத்தாக் கவுண்டருக்கும் மாந்தியப்பனுக்கும் இதயம் வெந்துகொண்டிருந்தது.

உலைக்களத்துத் தீயில் உருவாகும் கட்டாரி, கத்திகளைப் போல வெந்துபோன அவர்களது உள்ளத்திலிருந்து சூழ்ச்சிகள் உருவாயின. தந்தையும் மகனும் போட்டி போட்டுக் கொண்டு தலையூர்க் காளியிடம் திட்டங்களைத் தெரிவித்தனர். அவர் களையும் அவர்களது திட்டங்களையும் ஒற்றனுக்குப் பிடிக்காது என்பதை அறிந்திருந்த காளி மன்னன் ஒற்றனுக்கு விடை

கொடுத்து அங்கிருந்து அனுப்பி வைத்தான். ஒற்றன் சென்ற பிறகு செல்லாத்தாக் கவுண்டர் மாந்தியப்பன் இருவரும் தலை யூர்க் காளியின் மூளையைச் சலவை செய்ய ஆரம்பித்தனர்.

''பொன்னர் - சங்கர் இருவரும் உறையூர் அரண்மனையில் விருந்தினராகத் தங்கியிருக்கும் இந்த அருமையான நேரத்தை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சூழ்ச்சியின் சிகர மான அந்த மாயவரும் பொடியன்களுடன் உறையூரில் இருப் பது நமக்கு இரட்டிப்பு வாய்ப்பாகும். சின்னமலைக்கொழுந்து, வையம்பெருமான் இருவருமே ஆரிச்சம்பட்டிக்குச் சென்றிருப் பார்கள். அந்த பயல் வீரமலை மட்டும் தான் வள நாட்டுக் காவல் பொறுப்பை ஏற்றிருப்பான். மற்றபடி அரண்மனையில் தாமரைநாச்சியும் அவளது மருமகள்கள் முத்தாயியும் பவளாயி யும்தான் இருக்கப் போகிறார்கள். அருக்காணித் தங்கத்தை தூக்கிக் கொண்டு வந்து விட இதைக் காட்டிலும் தோதான ஒரு சமயம் நமது தளபதி பராக்கிரமனுக்குக் கிடைக்கப் போவதில்லை. இன்றைக்கே பராக்கிரமனை வள நாட்டுக்குப் போகச் சொல்வது நல்லது''

இருவரும் இணைந்து வழங்கிய யோசனையைக் கேட்ட தலையூரான்; ''பராக்கிரமன்தான் முன்னமே என்னிடம் உத் திரவு பெற்றுக் கொண்டு கிளம்பி விட்டானே! இந்நேரம் அவன் வளநாட்டில் இருப்பான்'' என்றான்.

''அதுதான் இல்லை; பராக்கிரமன் இன்னமும் வளநாடு புறப்படவில்லை. வடிவழகியுடன் இருக்கிறான்''

நமட்டுச் சிரிப்புடன் மாந்தியப்பன் இப்படியொரு தகவ லைக் கொடுத்ததும் - தலையூரான் சிறிது அயர்ந்து போனான். ''அது யார் அந்த வடிவழகி?'' என்று ஆவல் ததும்பக் கேட் டான். தளபதி பராக்கிரமனுக்குத்தான் இதுவரை திருமணமே ஆகவில்லையே; பிறகு எப்படி ஒரு வடிவழகி வந்தாள் என்ற சந்தேகம் தலையூர்க் காளியைக் குழப்பியது!

''வடிவழகி, பராக்கிரமனுக்கு மனைவியல்ல - ஆசை நாயகி! சுரங்கத்துக்குள் தங்கம் இருப்பது போல அவள் தளபதி மாளி கைக்குள்ளேயே இருக்கிறாள். என்னைத் தவிர இந்த ரகசியம் வேறு யாருக்கும் தெரியாது. நான் இப்போது சொல்லிவிட்ட தால் யாரும் தெரிந்ததாகவும் காட்டிக் கொள்ளக்கூடாது. அவளிடம் விடைபெற்றுக் கொள்ளாமல் தளபதி பராக்கிரமன் எங்கும் செல்வதில்லை''

''அப்படியொருத்தியை எங்கே பிடித்தான்?'' காளி மன்னன் இப்போது அந்த ஆராய்ச்சியில் இறங்கிவிட்டான்.

''அரசு காரியமாக அடிக்கடி உறையூருக்குச் சென்ற போது அந்த நடனக்காரி இவன் கண்ணில் பட்டிருக்கிறாள். கொண்டு வந்துவிட்டான்! மொண்டு மொண்டு குடிக்கிறான் அவளிடம் இன்பத்தை! அளவற்ற அழகியென்று சொல்லி விட முடியாது -- ஆனால் ஆள் மயக்கி! தயவு செய்து நான் சொன்னதாகச் சொல்லிவிடக் கூடாது! இப்போதுதான் அவர்கள் இருவரையும் பார்த்து விட்டு வருகிறேன். அதனால்தான் தீர்மானமாகச் சொன்னேன்; அவன் இன்னும் வளநாட்டுக்குப் புறப்படவில்லையென்று!''

மாந்தியப்பன் மேலும் கொடுத்த தகவலுக்குப் பிறகு தலையூ ரானுக்குத் தனது தளபதி மீது சிறிது எரிச்சலே கூட ஏற்பட்டது.

''ஓகோ! அவன் ஆசைநாயகியின் உல்லாச மண்டபத்திலேயே உருகிக்கிடப்பதால்தான் தலையூர்ப்படை தோல்வியைத் தழுவியது என்ற அதிசயச் செய்திக்கு இடம் கிடைத்து விட்டது! சரி; சரி - மாந்தீ! நீ மறுபடியும் போய்ப் பராக்கிரமனைப் பார்! அவன் இன்னமும் வளநாட்டுக்குப் புறப்படாமல் இருப்பதால் நான் சினமுற்றிருப்பதாகச் சொல்லி, சீக்கிரம் அவனை அங்கு அனுப்பி வை!''

காளி மன்னன் கூறியதைக் கட்டளையாகவே பாவித்து, மாந்தியப்பன்; தளபதி பராக்கிரமனின் மாளிகை நோக்கிப் புறப்பட்டான்.

பராக்கிரமன் மாளிகையில் மாந்தியப்பன் தாராளமாக நுழைய என்றைக்குமே தடையிருந்தது கிடையாது! காவலர்கள் கழுத்து வலிக்கக் குனிந்து அவனை வரவேற்று உள்ளே அனுப்பினார்கள். படுக்கையறை வரையில் போய் நின்றான். வாயிற் கதவு சாத்தப்பட்டிருந்தது. தாளிட்டிருக்குமோ என்று சந்தேகத்தில் மெல்லத் தள்ளிப்பார்த்தான். கதவு திறந்து கொண்டது. முழுமையாகக் கதவைத் திறக்க அவன் விரும்பவில்லை. ஏனென்றால் உள்ளே அவர்கள் முழுமையாகத் திறந்த நிலையில் ஒருவர் மீது ஒருவர் சாய்ந்து தழுவிக் கொண்டிருந்தனர். பராக்கிரமன் கையில் உள்ள மதுக் கிண்ணம் வடிவழகியின் பலாச்சுளை இதழுக்கும் - அவள் கையில் இருக்கும் மதுக் கிண்ணம் அவனது பெருத்த உதடுகளுக்கும் முத்தமீந்து கொண்டிருந்தன!

''நான் இன்றே வளநாடு புறப்பட்டிருப்பேன் என்று காளி மன்னர் கருதிக் கொண்டிருப்பார்!''

''உங்கள் நண்பர் மாந்தியப்பன் போய் எதுவும் உளறிவிட மாட்டாரே?''

ஏய்; வடிவழகீ! அவன் எனக்கு மட்டுமா நண்பன்? உனக்கும் கூடத்தானே?''

''அதெல்லாம் எப்போதாவதுதானே! இலையில் சோறு பரிமாறுவதற்கு முன் ஒரு ஓரத்தில் வைக்கப்பட்டிருக்கும் ஊறுகாயை ஒரு விரலால் எடுத்து நாவில் தடவிக் கொள்வதில்லையா; அது போல நீங்கள் இல்லாத சமயத்தில் அவர் எனக்கு ஊறுகாய்!''

''என்ன இருந்தாலும் அவன் கொண்டு வந்து உன் மேனியில் குவித்திருக்கும் நவரத்தின மணிமாலைகளை என்னால் கொடுக்க முடியுமா? இன்றைக்குக் கூட அவன் வந்தது, நான் வளநாடு போயிருப்பேன் - உன்னோடு விளையாடலாம் என்றுதான்! பாவம்; நான் இருந்து தொலைத்துவிட்டேன்! ஏய் - மறைக்காமல் சொல்! நான் ஒன்றும் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டேன் - என்னை விட அவனிடம் அதிகமாக இன்பம் காணுகிறாயா?''

''சே! சே! இது என்ன கேள்வி? இதற்கு நான் சுருக்கமாக ஒரு பதில் சொல்லட்டுமா?''

''உம்! சொல்லடி வடிவு!''

''அவர் என்னிடம் இன்பம் காணுகிறார். நான் உங்களிடம் இன்பம் காணுகிறேன். போதுமா? இன்னும் புரியும்படி சொல்லவா?''

''வேண்டாம்! வேண்டாம்! நன்றாகவே விளங்கி விட்டது!''

இந்த அந்தப்புர உரையாடல் கேட்டு மாந்தியப்பனின் முகத்தில் அசடு வழிந்தது என்றாலும் ஒரு மாதிரி சமாளித்துக் கொண்டு அங்கேயே நின்று கவனித்தான். பராக்கிரமன் சொன்னது போல அன்று அவன் அனுபவித்திருக்க வேண்டிய விருந்து - அந்த விருந்தை பாரதக் கதையில் வரும் கடோற்கஜனைப் போல பராக்கிரமன் அனுபவித்துக் கொண்டிருக்கிறான். படுத்திருக்கும் யானையின் மத்தகத்தின் மீது சாய்ந்து கிடக்கும் மானைப் போல் பராக்கிரமன் தோள் மீது அவள்

சாய்ந்திருந்தாள். மதுக் கிண்ணங்கள் அடிக்கடி நிரப்பப்பட்டுக் கொண்டிருந்தன. மாந்தியப்பனோ அசையாமல் நின்று வாயில் ஊறும் உமிழ்நீரை மட்டும் ''மொடக்'' ''மொடக்'' என்று விழுங்கிக் கொண்டிருந்தான்.

அதற்குள் காலியாகி விட்ட மதுக் குடங்களை தங்கள் கால் களால் உருட்டி விட்டனர் பராக்கிரமனும் வடிவழகியும்!

போதை உச்சிக்கு ஏறிவிட்டது! பராக்கிரமன் அவளை இறு கத் தழுவினான் - அவள் சற்று விலகிக் கொண்டு; இரண்டு பெரிய அகல்விளக்குகளில் ஒன்றைக் காட்டி ''அணையுங்கள்'' என்று அன்பு பொங்க ஆணையிட்டாள்!''

ஒரு விளக்கு அணைந்ததும், அவர்களின் நிழல் உருவங்கள் சல்லாத் துணியால் ஆன திரையில் இன்ப ரசக்கேளிக்கை நடத்தியதைக் காண விரும்பாமல் மாந்தியப்பன் கதவை மெது வாக மூடிக் கொண்டு - கதவுக்கு வெளியே நின்றான்.

எவ்வளவு நேரம் நிற்பான் பாவம்; கால் வலி எடுத்து விட் டது.

இறுதியாக ஒருவாறு துணிவை வரவழைத்துக் கொண்டு - கதவைத் தனது விரல்களைச் சொடுக்கித் தட்டினான்.

உள்ளேயிருந்து ''யார்?'' என்று ஒரு குரல் பதற்றமுடன் கேட்டது.

''நான்தான் மாந்தியப்பன்!''

பிறகு சிறிது நேரம் அறைக்குள்ளிருந்து யாரும் பேசவில்லை. மாந்தியப்பன் உள்ளே நுழையாமல் கதவுக்கருகிலேயே காத்துக் கொண்டிருந்தான். அவன் மூன்று நான்கு முறை பெருமூச்சு விட்ட பின்னர் நிலை குலைந்த உடைகளுடன் பராக்கிரமனும் வடிவழகியும் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தனர். ''உள்ளே வாருங்கள்!'' என்று மொழி யுதிர்த்தும் விழியசைத் தும் வடிவழகி வரவேற்றாள்.

''இன்னும் நீ வளநாடு கிளம்பவில்லையென்று காளி மன் னன் காதுக்கு எப்படியோ செய்தி எட்டியிருக்கிறது. என்னைக் கேட்டார். எனக்குத் தெரியாது என்றேன். எதற்கும் போய்ப் பார்த்து விட்டு - தளபதி இன்னும் புறப்படாமல் இருந்தால்

புறப்படுமாறு விரைவு படுத்தச் சொன்னார். அதனால் ஓடி வந்தேன்! நல்ல நேரத்தில் என்னால் இடையூறு ஏற்பட்டதற்கு மிகவும் வருந்துகிறேன்''

''பரவாயில்லை! பரவாயில்லை!'' எனக் கூறிக் கொண்டே பராக்கிரமன் அவளைப் பார்த்துக் கண் சிமிட்டினான். அவளோ; தனக்கும் வெட்கமும் நாணமும் உண்டு என்பது போல் அழகாய்ச் சிரித்து அளவாய்த் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

''புறப்பட்டுப் போய் விட்டதாக காளியிடம் சொல்லி விடவா?''

''ஓ! தாராளமாகச் சொல்லிவிடலாம்!''

''நீ எப்போதுதான் புறப்படப் போகிறாய்?''

''விடியற்காலையில்! என்னுடன் இளவரசியையும் அழைத்துச் செல்ல வேண்டாமா? அதனால்தான் தாமதம்!''

''எந்த இளவரசி?''

''சோழ நாட்டு இளவரசி!''

''என்ன; சோழ நாட்டு இளவரசியா?''

''ஆமாம்! ஆமாம்!''

''உறையூர்ச் சோழனின் மகளையா?''

''ஆமாம்; அக்களதேவச் சோழனின் மகளைத்தான்! அந்த இளவரசியைத்தான் குறிப்பிடுகிறேன்!''






## 36

அந்தி சாயும் நேரம்...புலிக்கொடி கலசத்தில் பறந்திட வேகமாக வந்து கொண்டிருந்த அழகான ரதம், வளநாட்டின் கோட்டை முகப்புக்கு முன்னால் - ரதத்தில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை சாரதி இழுத்துப் பிடித்ததின் காரணமாக ஒரு குலுங்கு குலுங்கி நின்றது. ரதத்தின் இரு புறமும் காவலுக்கு வந்து கொண்டிருந்த குதிரை வீரர்களும் அந்த ரதத்தை ஒட்டிய நிலையில் நின்றுவிட்டனர். வளநாட்டுக் கோட்டைக் காவலன் மிகுந்த பரபரப்புடன் ரதத்தின் அருகே சென்று தனது பார்வையினாலேயே, ''யார்?'' என்ற கேள்வியைத் தொடுத்தான். ரதத்தைச் சுற்றி மூடப்பட்டிருந்த நீலநிறப் பட்டுத் திரையை விலக்கிக் கொண்டு ஒரு தலை எட்டிப் பார்த்தது.

அந்தத் தலைக்குரிய உருவம் மலைபோல் பெருத்திருந்ததை கோட்டைக் காவலன் கவனித்தான். அந்த உருவத்தின் பாதி முகத்தை, தாடியும், மீசையும் மறைத்திருந்தன. அந்த உருவம் தனது மார்பகத்தில் அணிந்திருந்த இரும்புக் கவசத்தை நன்றாகக் காணுமாறு கோட்டைக் காவலனுக்கு சைகைமூலம் தெரிவித்தது. காவலனும் ஆமை ஓடு போன்ற அந்தக் கவசத்தை நோக்கினான். கவசத்தில் சோழனின் புலிச்சின்னம் ஒளி விட்டுக் கொண்டிருந்தது.

அந்த உருவம் தனது அகலமான பற்களைக் காட்டிப் புன்னகை புரிந்தவாறு, எதிர்ப்புறமாக நீல நிறப் பட்டுத் திரையைச் சிறிது விலக்கிக் காட்டிய போது வளநாட்டுக் கோட்டைக் காவலன் திடுக்கிட்டான்.

விலை மதிப்பில்லா நவரத்தின மாலைகளை அணிந்து கொண்டு ஒரு அழகி எதிரேயுள்ள இருக்கையில் லாவகமாகச் சாய்ந்து அமர்ந்திருந்தாள். நட்சத்திரங்களைப் போல மாணிக்கக் கற்கள் மின்னுகின்ற பச்சை வண்ணப்பட்டுத் துணியொன்று

அவள் உடலைப் போர்த்திக் கொண்டிருந்தது. நெற்றிக்கு மேலே தலையில் முத்துச் சரமொன்று சூடிக் கொண்டிருந் தாள். அவளது விழியசைவும் - தோற்றமும் அவளையொரு அரண்மனை மங்கையாக முரசறைந்து தெரிவித்துக் கொண்டி ருந்தன. ''ஏன் ரதம் நின்று விட்டது?'' என்று அவள் எழுப் பிய வினாவில் கம்பீரம் கொடி கட்டிப் பறந்தது.

''ஒன்றுமில்லை அம்மணி! வளநாடு வந்து விட்டோம். கோட்டைக் காவலர்கள், நாம் யார் என்று தெரிந்து கொள்ள ரதத்தை நிறுத்தியுள்ளார்கள்.''

அந்தப் பெருத்த உருவம் இவ்வாறு விளக்கமளித்ததும் அவள் வெகுண்டாள்...

''என்ன? கோட்டைக் காவலர்கள் நமது ரதத்தை நிறுத்தி, யார் என்று கேட்கிறார்களா? ஏன்; செய்தி முன் கூட்டியே வரவில்லையா - உறையூரிலிருந்து நான் வருவதாக?''

அவளுக்கும் அவனுக்கும் நடந்த உரையாடல் கேட்டு கோட் டைக் காவலன் திகைத்து விட்டான்.

''மன்னிக்க வேண்டும். என் கடமையை நான் செய்கிறேன். தாங்கள் உறையூரிலிருந்து...'' என அவன் இழுத்தாற் போல் கேட்டு முடிப்பதற்குள் அந்த பருத்த உருவத்தினன் பதில் கூறி விட்டான்!

''ஆமாம் - உறையூரிலிருந்துதான் வருகிறோம். ரதத்தில் பறக்கும் புகழ் பெற்ற சோழ நாட்டுப் புலிக்கொடி கூட உனக்குத் தெரியவில்லையா? நீ தடுத்து நிறுத்தியுள்ள இந்த ரதத்தில் இருப்பது உறையூர் இளவரசி உதயநந்தினி தேவியார்! நான் மெய்க்காப்பாளன் வாணவராயன்! இளவரசி வருகிற செய்தி காலையிலேயே ஓலைமூலம் அனுப்பப்பட்டதே; அந்தச் சோழ வீரர்கள் வந்து சேரவில்லையா?''

கோட்டைக் காவலன், ரதத்தில் அமர்ந்திருந்த இளவரசி உதய நந்தினிக்குப் பணிந்து வணக்கம் தெரிவித்தான்.

''தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள்! தெரியாமல் நடந்து விட்டது. ஆனால் ஒன்று; சோழ இளவரசி வருகிற செய்தி எதுவும் முன்கூட்டி அறிவிக்கப்படவில்லை. தாங்கள் கூறியபடி சோழ நாட்டு வீரர் யாரும் ஓலை கொண்டு வரவும் இல்லை!

இவ்வாறு காவலன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, கையில் புலிக்கொடி ஏந்தியவாறு குதிரையொன்றில் ஒரு வீரன் காற்றைக் கிழித்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். அவனுக்கு மூச்சு வாங்கியது. அவன் ஏறி வந்த குதிரைக்கு வியர்த்துக் கொட்டியது. மெத்தக் களைப்புற்ற நிலையில் அவன் குதிரையிலிருந்து கீழே இறங்கினான்.

ரதத்திலிருந்த மெய்க்காப்பாளன் வாணவராயன் அவனைப் பார்த்து, ''ஏய்! என்ன நடந்தது? ஏன் இவ்வளவு பரபரப்பு?'' என்று வியப்புடன் கேட்டான். இளவரசியின் ரதத்தைச் சுற்றிப் பாதுகாப்பாக வந்த வீரர்களும் அவனையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். தன்னை மிகவும் கஷ்டப்பட்டு ஆசுவாசப்படுத்திக் கொண்டு அந்த வீரன், மெய்க்காப்பாளன் அருகே வந்து பேசினான்...

''இளவரசி வருகையைத் தெரிவிக்க உறையூர் அரண்மனையின் ஓலையைக் கொண்டுவந்து கொண்டிருந்தோம்; நானும் மற்றொரு வீரன் மலையனும்! வழியில் தலையூர்க் காளியின் படைவீரர்கள் பத்துப்பேர் எங்களை மறித்துத் தாக்கினர். எதிர்ப்பை சமாளிக்க முடியாத நாங்களிருவரும் குறுக்குப் பாதையில் காட்டு வழியில் ஓடினோம். மலையனின் குதிரை, பாறையொன்றில் கால் இடறிக் கீழே உருண்டது. தலையூர் வீரர்களிடம் சிக்கிக் கொண்ட மலையன் அந்த இடத்திலேயே பிணமாகச் சாய்ந்தான். அவனிடமிருந்த உறையூர் அரண்மனை ஓலையைக் கைப்பற்றிக் கொண்டு தலையூர் வீரர்கள் என்னைத் துரத்தினார்கள். நான் அவர்களிடம் மாட்டிக் கொள்ளாமல் வெகு தொலைவு ஓடி இறுதியாகத் தப்பித்து வளநாட்டுச் சாலைக்கு வந்து சேர்ந்தேன். இளவரசியாரின் ரதம் வருவதைப் பார்த்து விட்டுப் பின்னாலேயே ஓடிவருகிறேன்.''

வீரன் கூறிய தகவல்களைக் கேட்டு, மெய்க்காப்பாளன் வாணவராயன் ஆத்திரமுற்றான். அடர்ந்து வளர்ந்திருந்த தாடி மீசையைத் தடவிக்கொண்டு, இளவரசியைப் பார்த்து; ''கேட்டீர்களா இளவரசி, இந்தக் கேடு கெட்ட செயலை! தலையூர்ப் படை வீரர்களால் நமக்கே ஏதாவது தொல்லை வரக்கூடுமென்றுதான் பாதுகாப்பு சற்று பலமாக இருக்கட்டுமென்று இத்தனை பேரை அழைத்து வந்தேன்! பாவம், மலையன் உறையூர் அரண்மனையில் விசுவாசமுள்ள வீரன் - அவனை இழந்தது எனக்கு மட்டுமல்ல; நமது மன்னருக்கே பெரும் கவலையைத் தரக் கூடிய செய்தியாகும்!'' என்றான்.

''முதலில் தப்பி வந்தவன் இளைப்பாறட்டும்! மற்ற விஷயங்களை மாளிகைக்குள் சென்ற பிறகு யோசிக்கலாம். எதற்கும் நம்முடன் வந்த வீரர்களில் ஒருவனை அனுப்பி என் தந்தை யாரிடம், நடந்த விவரங்களைத் தெரிவிக்கச் செய்யவேண்டும்.''

இளவரசி இவ்வாறு கூறியதை, மெய்க்காப்பாளன் ஆணையாக பாவித்து ஏற்றுக்கொண்டு, ''அப்படியே ஆகட்டும் இளவரசி!'' எனக்கூறினான்.

இப்போது கோட்டைக் காவலன், ரதத்திற்கு வழி விட்டு ஒதுங்கி நின்று கொண்டதுமல்லாமல் - தனக்குக் கீழுள்ள சில வீரர்களை மாளிகைக்குள் அனுப்பி - உறையூர் இளவரசியார் வந்திருக்கும் செய்தியை குன்றுடையானுக்கும் தாமரைநாச்சியாருக்கும் மற்றவர்களுக்கும் உடனடியாகத் தெரிவிக்க ஏற்பாடு செய்தான்.

கோட்டை முகப்பைக் கடந்து இளவரசியின் ரதம் மெதுவாக ஆடி அசைந்து கொண்டு, வளநாட்டு அரண்மனையின் உட்பகுதியில் சென்று கொண்டிருந்தது. அந்த வழியாகப் போய்க் கொண்டும் வந்து கொண்டும் சில இடங்களில் காவல் புரிந்து கொண்டுமிருந்த வீரர்கள் புலிக்கொடி பறக்கும். ரதத்தைக் கண்டு, வணக்கம் தெரிவித்தனர், ஏற்கனவே வளநாட்டுப் படையுடன் கலந்திருந்த சோழ வீரர்கள் பலரும் தங்கள் நாட்டுப் புலிக்கொடியுடன் வரும் ரதத்தில் இளவரசியார் இருக்கிறார் எனக் கேள்வியுற்று தொலைவிலிருந்தே மகிழ்ச்சி தெரிவித்து வணக்கம் செலுத்தினர்.

அரண்மனையின் உள் முகப்பை ரதம் நெருங்கிய போது, எதிரே மங்கல வாத்தியங்கள் முழங்கிட, குன்றுடையானும் தாமரைநாச்சியாரும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடன் அருக்காணித் தங்கம், முத்தாயி, பவளாயி, குப்பாயி முதலியோரும் மலர்ந்த முகத்துடன் வந்தனர். மகளிர் பலர் அழகிய வெள்ளித்தட்டுகளில் பூ, பழம், சந்தனம், குங்குமம் ஆகியவற்றை நிரப்பிச் கொண்டு மயில் கூட்டம் போல நடந்து வந்தனர்.

உள்முகப்பு வாசலருகே ரதம் நின்றது. தாமரைநாச்சியார் ரதத்திடம் சென்று நீலப் பட்டுத் திரையை விலக்கிக் கொண்டே புன்னகை தவழ இளவரசியை வரவேற்றாள். இளவரசிக்கு எதிர் இருக்கையில் உட்கார்ந்திருந்த மெய்க்காப்பாளன் வாணவராயன் ரதத்திலிருந்து குதித்து குன்றுடையானுக்கு முன்பு

சென்று, ''நான்தான் இளவரசியாரின் மெய்க்காப்பாளன்'' என்று அறிமுகப்படுத்திக் கொண்டான். இளவரிசி உதய நந்தினியிடம் தாமரைநாச்சியார் தன்னை யார் என்று கூறி விட்டு மற்றவர்களையும் அறிமுகப்படுத்தி வைத்தாள். முத் தாயி, பவளாயி இருவரையும் அறிமுகப்படுத்தியபோது இள வரசி; அவர்களை இறுக அணைத்துக் கொண்டு - ''மாவீரர் களின் மனைவிகள் - இப்படிப்பட்ட வீரர்களை மணக்கப் பெரும் பாக்கியம் செய்திருக்க வேண்டும்'' என்று புகழ்ந் துரைத்தாள். ''இவள்தான் என் மகள் அருக்காணித் தங்கம். இவளை என் கணவர் நல்ல தங்கம் என்றுதான் கூப்பிடு வார்!'' என்று தாமரை நாச்சியார் சொன்னபோது, குன்றுடை யான் புளகாங்கிதமுடன், ''நான் மட்டுமல்ல - ஊரே என் மகளை நல்ல தங்கம் என்றுதான் கூறும்!'' என்றான்! இள வரசி, அருக்காணியையும் தழுவிக்கொண்டு - ''ஆயிரம் ஜென்மங்கள் எடுத்தாலும் இது மாதிரி அண்ணன்மார்களைப் பெற முடியாதம்மா - நீ பெரிய அதிர்ஷ்டசாலி!'' என்று பாராட்டியதோடு - தாமரை நாச்சியாரிடம், ''அம்மா! நீங்கள் என்ன தவம் செய்தீர்களோ தெரியவில்லை - பீமசேனன் அர்ச்சுனன் இரண்டு பேருடைய பலத்தையும் உங்களுடைய இரண்டு மகன்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே பெற்றிருக் கிறார்கள். சாட்சாத் ரதி தேவியே உங்கள் வயிற்றில் அவ தரித்தது மாதிரி ஒரு பெண்ணையும் பெற்றிருக்கிறீர்கள்! என்னை நீங்களும் உங்கள் கணவரும் ஆசீர்வதியுங்கள் தாயே!'' எனக் கூறி, தாமரைநாச்சியார் - குன்றுடையான் இருவர் காலிலும் விழுந்து வணங்குவதற்கு மண்டியிட்டுக் குனிந்தாள். தாமரைநாச்சியார் திடுக்கிட்டு இளவரசியைத் தூக்கி அணைத் தவாறு, ''என்ன காரியம் செய்தாய் அம்மா! சோழ சாம்ராஜ் யத்தின் ராஜகுமாரி நீ! உங்களுக்குக் கட்டுப்பட்ட ஒருநாட்டில் வந்து இப்படி தலைவணங்கி வாழ்த்துப் பெறுவதா? கூடாது! கூடாது!'' என்று சொல்லிக்கொண்டே அவள் கூந்தலைத் தடவிக் கொடுத்தாள்.

அப்போது இளவரசி கலகலவென சிரித்து விட்டு, தனது மெய்க்காப்பாளனைப் பார்த்து, ''வாணவராயா! என்ன பேசா மல் மீசையையும் தாடியையும் வருடிக் கொண்டு நிற்கிறாய்? இவர்கள் சொல்வதைக் கேட்டாயா? சோழ நாட்டுக்கு வள நாடு கட்டுப்பட்ட நாடாம்? உறையூர் கொலுமண்டபத்தில் என்ன நடந்தது சொல்லேன்!'' என்றாள்.

வாணவராயன் பெருமிதமாக சிரித்தான், குன்றுடையான் தாமரை மற்றுமுள்ளோர்களையெல்லாம் தனது விழிகளைச் சுழற்றி ஒரு நோட்டம் விட்டான்.

''எல்லோரும் நின்று கொண்டே பேசிக்கொண்டிருப்பதா? பொன்னர் - சங்கரின் பெருமையைச் சொல்வதென்றால் ஒரு நாள் இரு நாள் போதுமா? இளவரசியார் அதைத்தானே சொல்லும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்கள்!'' என்றான்.

''மெய்க்காப்பாளர் சொல்வதும் சரிதான். வாருங்கள், மாளிகைக் கூடத்தில் அமர்ந்து பேசலாம்.'' எனக்கூறிய குன்றுடையான், தாமரையிடம், ''தாமரை! இளவரசியாருக்கும் மற்றவர்களுக்கும் முதலில் பழரசம் தயார் செய்யச் சொல்! எல்லோருக்கும் அறுசுவை உணவு தயாராகட்டும்!'' என்றபடி இளவரசியை அழைத்துக் கொண்டு கூடத்திற்குள் நுழைந்தார்.

இளவரசி, அருக்காணித் தங்கத்தைத் தன்னுடன் சேர்த்து அணைத்தவாறு, ''உண்மையிலேயே நீ ரதிதான்! நான் புகழ்வதற்காகச் சொல்லவில்லை!'' என்று வர்ணித்துக் கொண்டே கூடத்திற்கு வந்தாள். அருக்காணிக்கு இயல்பான நாணம் அவள் தலையைக் குனியச் செய்தது. கூடத்துக்குள் அனைவரும் வந்ததும் அருக்காணி, இளவரசியை விட்டு மெல்ல நகர்ந்து குப்பாயியிடம் வந்தாள். குப்பாயி, அருக்காணியைக் குறும்பாகப் பார்த்துக் கொண்டே, ''இளவரசியின் காலடி மண்ணை எடுத்து உனக்கு திருஷ்டி சுற்றிப்போட வேண்டியதுதான்!'' என்றாள்! ''போடி!'' என்ற அருக்காணி, குப்பாயியைச் செல்லமாகக் கடிந்து கொண்டு சிரிப்பையும் வெளிக் காட்டாமல் அடக்கிக் கொண்டாள்.

வாணவராயன் உறையூர்க் கொலுமண்டபத்தில் நடந்த நிகழ்ச்சிகளை வர்ணிக்கத் தொடங்கினான்.

''எதிரிகளைக் கண்டு இமை கொட்டுவது கூட கோழைத்தனம் என்று கருதக் கூடிய மகாவீரர் சோழ மன்னர்! யாரையும் அடக்கிப் பழக்கப்பட்டவரே தவிர, யாருக்கும் அடங்கிப் போனவரல்ல! அவரையே தங்கள் வழிக்குக் கொண்டு வருகிற அளவுக்கு பொன்னர் .- சங்கர் காட்டிய வீரமும், நடத்திய விவேகமிக்க வாதமும் உறையூர்க் கொலுமண்டபத்தையே உலுக்கிவிட்டது! யாருக்கும் கப்பம் கட்டமாட்டோம் - யார் கட்டளைக்கும் கீழ்ப்படிந்து எங்கள் கொங்குமண்டிலக் கொடி பறக்காது - என்று பொன்னர் பேசியதையும், சங்கர் முழங்கி

யதையும் கேட்ட எமது மன்னர் அக்களதேவச் சோழர் மெய் மறந்து போனார்! வளநாடு, சோழநாட்டுக்கு அடிமையல்ல! நட்பு நாடாக அங்கீகாரம் பெறுகிறது என்று கூறி, செப்புப் பட்டயத்தையே மாற்றி அமைத்து விட்டார். அது மட்டுமா? உங்கள் புதல்வர்களின் பேராற்றலைக் கண்டு வியந்த சோழ மன்னர் அவர்களை உறையூர் அரண்மனை விருந்தினர்களாக இருக்கும்படியும் கேட்டுக்கொண்டார். அது மட்டுமல்ல; இள வரசியாரை இங்கு அனுப்பியிருப்பதே - குன்றுடையாரையும் தாமரைநாச்சியாரையும் உறையூருக்கு அழைத்து மரியாதை செய்வதற்காகவேதான்!''

சோழ நாட்டு மெய்க்காப்பாளன் உரை கேட்டு சொக்கிப் போன குன்றுடையான், ''எங்களை அழைப்பதற்கு இளவரசி நேரில் வர வேண்டுமா? ஓலை கொடுத்து ஒரு வீரனை அனுப்பினால், வந்திருக்க மாட்டோமா?'' என்று கேட்டு, ''மசைச்சாமி'' என்ற தனது பட்டப் பெயரை இப்போதும் ஒரு முறை நிலைநிறுத்திக் கொண்டான்.

''கப்பம் கட்டும் நாடாக இருந்தால் ஓலை மூலம் அழைப்பு வந்திருக்கும்! இப்போது; அதாவது உங்கள் புதல்வர்களின் காலத்தில் இது நட்பு நாட்டின் தகுதியைப் பெற்று விட்டதே! அதனால்தான் இளவரசியே நேரில் வந்து தங்களையும் தாமரை நாச்சியாரையும், பொன்னர் - சங்கரின் ராணிகளையும், உங்கள் அருமைப்புதல்வியார் அருக்காணித் தங்கத்தையும் அழைத்துப் போக இருக்கிறார். ஒரு தவறு நடந்து விட்டது. இளவரசி இங்கு வர இருப்பதை தங்களுக்கு முன்கூட்டியே அறிவிக்க சோழ நாட்டு மன்னர் ஓலை கொடுத்து அனுப்பி னார். வரும் வழியில் ஒரு வீரன் கொல்லப்பட்டு விட்டான்!''

வாணவராயன் சொல்லி முடிப்பதற்குள்; குன்றுடையான் பரபரப்படைந்து, ''என்ன... என்ன! சோழநாட்டு வீரன் கொல்லப்பட்டு விட்டானா? ஏன்? எதற்காக? எப்படி?'' என்று வினாக்களை அடுக்கினான்.

''எல்லாம் தலையூர்க் காளியின் வேலைதான்! அவனுடைய தளபதி பராக்கிரமனின் சகோதரன் விக்ரமனைத் தூண்டிவிட்டு, உறையூரில் பொன்னர் - சங்கருக்கு அவமானம் விளைவித்து அதன் காரணமாக சோழநாட்டுக்கும் வள நாட்டுக்கும் பகையை உருவாக்க தலையூர்க்காளி சூழ்ச்சி செய்தான்! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது போல், பகை வளர்வதற்குப் பதிலாக சோழ நாட்டுக்கும் வளநாட்டுக்கும் நட்பு மலர்ந்து விட்டது!

இளவரசியார், தங்களை அழைப்பதற்கு மரியாதை சந்திப்பாக வரப்போகிற விஷயம் எப்படியோ தலையூர்த் தளபதி பராக் கிரமனுக்குத் தெரிந்திருக்கிறது. அதனால்தான் வளநாட்டுக்கு நாங்கள் வருகிற வழியில் தலையூர் படை வீரர்கள் காத்தி ருந்து எங்களைக் கடத்திச் செல்ல திட்டமிடப்பட்டிருக்கிறது. இதனை அறிந்த நான். முன் எச்சரிக்கையாக சரியான பாது காப்புடன் இளவரசியை அழைத்து வந்து விட்டேன். எங்கள் வருகைக்காகக் காத்திருந்த தலையூர் வீரர்கள்; உறையூரிலிருந்து ஓலை கொண்டு வந்த வீரர்களை மடக்கி ஒரு வீரனைக் கொன்று ஓலையையும் அபகரித்து கொண்டு போயிருக்கிறார் கள். அந்த எதிர்பாராத சலசலப்பு நிகழ்ச்சியால் நாங்கள் எப்படியோ எதிர்ப்பு எதுவுமின்றி இங்கு வந்து சேர்ந்து விட் டோம்'' என்று விவரித்து முடித்தான் வாணவராயன்!

''அப்பாடா! எப்படியோ கடவுள்தான் உங்களையெல்லாம் காப்பாற்றியிருக்கிறார்'' என்று குன்றுடையான் பக்திக் களை சொட்ட சொட்ட பவ்யமாகச் சொன்னான்.

இளவரசி வருகையை முன்னிட்டு எல்லோருக்கும் பழ ரசம் வழங்கப்பட்டது. குப்பாயிதான் முன்னின்று அனைவருக்கும் பழரசம் தருகின்ற ஏற்பாட்டை கவனித்துக் கொண்டிருந்தாள். அவளது துடிப்பையும் துள்ளலையும் கண்ட இளவரசி; தாமரை நாச்சியாரிடம், ''ஏனம்மா, இந்தப் பெண் யார் என்றே எனக்கு அறிமுகப்படுத்தவில்லையே! உங்கள் மகள் அருக் காணித் தங்கம் மாதிரியே இருக்கிறாள்! ஏறத்தாழ இருவரும் அணிந்திருக்கும் உடை, நகை எல்லாமே ஒன்று போலிருக் கிறது!'' என்று ஆச்சரியப்பட்டாள்.

''இவள் பெயர் குப்பாயி! திருக்காம்புலியூர் பச்சனா முதலி யார் என்பவரின் மகள்! சிறு வயதிலிருந்தே அருக்காணித் தங்கத்துக்கு உயிர்த் தோழி! யாரைப் பார்த்தாலும் இவள் என்ன இரட்டைக் குழந்தையாக அருக்காணியுடன் பிறந்தவளா? என்று கேட்கத் தவற மாட்டார்கள்! நானும் இவளை என் மகளைப் போலத்தான் நினைக்கிறேன்'' என்று கூறிய தாமரை ''ஏ, குப்பாயி! இங்கே வா! இளவரசி உன்னைப் பார்க்க வேண்டுமாம்!'' எனக் கூப்பிட்டதும், குப்பாயி வெட்கத்தால் துள்ளிக் குதித்து அந்தக் கூடத்தை விட்டே ஓடி விட்டாள். ''ஏ! ஏ! நில்லு! நில்லு!'' என்று கத்திக் கொண்டே அவளைப் பிடிக்க அருக்காணித் தங்கமும் அங்கிருந்து போய் விட்டாள்.

வாணவராயன் இரண்டு மூன்று தடவை பழரசம் பருகி அவனையும் மீறி வந்த ஏப்பங்களைச் சுதந்திரமாக வெளியேற அனுமதித்துக் கொண்டிருந்தான்!

இளவரசி, தனது பவளம் போன்ற இதழ்களில் பழரசக் கோப்பை பட்டதும் படாததுமாக வைத்து அதனை அருந்து வது போல பாவனை செய்து கொண்டிருந்தாள். ''கொஞ்ச மாவது சாப்பிடம்மா!'' என்று தாமரைநாச்சியார் கொஞ்சினாள்.

பழரசத்தை ருசி பார்த்து கொண்டிருந்த குன்றுடையான் திடீரென வாயிற்புறம் பார்த்து, ''அடடே! வீரமலை... வந்து விட்டாயா?'' என்று ஆர்வத்துடன் கேட்டான். அவனது கேள் வியைத் தொடர்ந்து வீரமலை, அந்த மாளிகைக் கூடத்துக்குள் நுழைந்தான்.

சற்றும் தாமதிக்காமல் குன்றுடையான், வீரமலைக்கு; சோழ நாட்டு இளவரசியையும் அவளது மெய்காப்பாளனையும் அறி முகப்படுத்தி வைத்து நடந்தவற்றையும் - இளவரசி வந்துள்ள நோக்கத்தையும் விரிவாக எடுத்துரைத்தான்.

வீரமலை, அந்தக் கூடத்தில் நுழைந்த போதே அவனது கம்பீரமான உடல் அமைப்பில் தன்னையறியாமல் உள்ளத் தைப் பறிகொடுத்து விட்ட நிலையில் அவனையே வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் இளவரசி!

''இவர்தான் வீரமலை!'' என்று குன்றுடையான் சொன்ன வுடன், இளவரசியின் மார்பகம் விம்மிப் புடைத்து மெல்லத் தணியும் அளவுக்கு ஒரு நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது. இளவரசி, தன்னைக் கண்டவுடன் ஒரு மாதிரி ஆகிவிட்டதை வீரமலையும் ஜாடையாகக் கவனித்து விட்டான்.

''அப்படியானால் உறையூருக்கு எப்போது புறப்பட வேண் டும்?'' என்று கேட்டான் வீரமலை! கடைக்கண்ணை அவன் மீது வீசியிழுத்த இளவரசி, குன்றுடையானையும் தாமரை யையும் நோக்கி.

''இரவில் அந்தப் பாதையில் செல்ல எனக்கும் பயமாக இருக்கிறது; காலையில் புறப்படலாம் என்று கருதுகிறேன். புறப்படுவதற்கு உங்களுக்கு எப்போது வசதிப்படும்?'' என்று கேட்டாள். அப்படிக் கேட்கும்போது, அவள் கன்னங்கள் சிவப்பு மலர்களாகக் காட்சியளித்தன!

''காலையிலேயே புறப்படுவோம்! இரவு இளவரசி நன்றா கக் களைப்பாறட்டும்!'' என்றான் குன்றுடையான்!

''இளவரசிக்குரிய எந்த வசதிகளும் குறையாமல் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்று அரண்மனைப் பணியாட்கள் அனை வருக்கும் குன்றுடையானும் தாமரைநாச்சியாரும் ஆணை பிறப்பித்தார்கள்.

மாலைப் பொழுது அடையாளம் தெரியாமல் மறைந்து, இருளின் ஆதிக்கம் பரவியது வளநாட்டுக் கோட்டையிலும், அரண்மனையிலும்!

அரண்மனையில் வழக்கமாகக் கொளுத்தி வைக்கப்படும் தீப்பந்த விளக்குகளும், பெரும் பெரும் அகல் விளக்குகளும் தங்களாலியன்ற ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன!

''வளநாட்டு அறுசுவை உணவை அளவுக்கு மீறி ஒரு பிடி பிடித்து விட்டேன்! தூக்கம் கண்ணைச் சுற்றுகிறது!'' என்று வீரமலையிடம் கூறிவிட்டு சோழ நாட்டு மெய்க்காப்பாளன் வாணவராயன், அவனுக்கென ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குச் சென்று கட்டிலில் உருண்டு விட்டான். அவனுடன் வந்த வீரர் களும் அவனது அறையைச் சுற்றிப் படுத்துக் கொண்டார்கள். அவர்களில் சில வீரர்களது குறட்டைச் சப்தம் அந்த அரண் மனைச் சுவர்களையே அதிர வைத்துக் கொண்டிருந்தது.

எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்த அந்த நேரத்தில் - கோட்டைக் காவலர்கள் விழிப்புடன் காவல் புரிகிறார்களா என்பதை அறிய வீரமலை மட்டும் கோட்டைச் சுவர்களிலும் - தாழ்வாரங்களிலும் மெல்ல நடைபயின்று கொண்டிருந்தான்.

ஆடம்பரமும் வசதிகளும் நிரம்பிய அறையொன்று ஒதுக்கப் பட்டிருந்தும் கூட இளவரசிக்கு மட்டும் ஏனோ தூக்கம் வர வில்லை. அப்போது ''இன்னும் தூங்கவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே அகிற்புகை எழும் தூபம் ஒன்றை அந்த அறையில் கொண்டு வந்து வைத்தாள் குப்பாயி!

''ஏதேதோ நினைவுகள்! இப்போது தான் தூக்கம் கண் களைத் தொட ஆரம்பித்திருக்கிறது!'' என்றாள் இளவரசி.

''தூங்குங்கள், வருகிறேன்!'' என்று சொல்லிவிட்டுப் போனவளை இளவரசி, ''குப்பாயி! இங்கு வாயேன்!'' என அழைத்தாள்! குப்பாயியும் இளவரசியின் படுக்கையருகே வந்து, ''என்ன இளவரசி?'' என்று கேட்டாள்!

''ஒன்றுமில்லை! இந்த வீரமலை இரவு முழுவதும் கோட்டை கொத்தளங்களைச் சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருப்பாரா? இரவில் தூங்கவே மாட்டாரா?''

குப்பாயிக்கு தூக்கி வாரிப் போட்டது! ஓகோகோ! இளவரசிக்குத் தூக்கம் வராத காரணம் புரிந்துவிட்டது! என்று அவளது மனம் மௌன மொழி பேசிற்று!

''இல்லை இளவரசி! கொஞ்ச நேரம் சுற்றிப் பார்த்து விட்டு, பிறகு ஓய்வெடுப்பார்! ஆனால் திடீர் திடீரென்று விழித்துக் கொண்டு கோட்டை கொத்தளங்களைச் சுற்றிப் பார்க்கப் போய் விடுவார்!''

இளவரசி, அந்த பதிலைக் கேட்டு நிம்மதியடைந்தவளைப் போலக் காணப்பட்டாள்! இருந்தாலும் அவளிடம் இன்னொரு கேள்வி கேட்டுவிடத் தீர்மானித்தாள்!

''குப்பாயி! எனக்கு கேட்கவே வெட்கமாயிருக்கிறது! தவறாக எடுத்துக் கொள்ளாதே! வீரமலையின் அறை எங்கிருக்கிறது?''

''அதோ... அரண்மனை முகப்பு வாயிலுக்கு அருகே; மாலையில் உங்களை வரவேற்போமே, அந்த இடத்துக்குப் பக்கத்தில் தான் இருக்கிறது!''

இந்தப் பதிலை சொல்லி விட்டு, குப்பாயி இளவரசியின் முகத்தைப் பார்த்தாள். இளவரசி இளநகை புரிந்தாள். ''சரி! நீ போ குப்பாயி!'' என்றாள். குப்பாயிக்கு இதயத்தில் பல மின்னல்கள்! ''கண்டதும் காதலா?'' இப்படியொரு திடீர்க் கேள்வி! ''ஒருவேளை - பல நாள் காதலா?'' ''அல்லது பழகிப் போன காதலா?'' அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. கால்கள் ஒன்றையொன்று பின்னிட அந்த அறையிலிருந்து வெளியேறினாள்.

இளவரசி, படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தாள். தூக்கம் வரவில்லை. தலையணையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு படுத்துப் பார்த்தாள். மீண்டும் எழுந்து பலகணிப்பக்கம் வந்து நின்றாள்.

யாரோ அவள் அறையை நோக்கி வருவது போல் தெரிந்தது. அரண்மனைத் தாழ்வாரத்து விளக்குகளின் ஒளி மங்கலாக இருந்ததால் யார் என்று இளவரசிக்கு சரியாகத் தெரியவில்லை.

வந்த உருவம், இளவரசியின் அறைக் கதவுப் பக்கம் வந்து நின்றது. பலகணி வழியே தலையை நீட்டி இளவரசி உற்றுப் பார்த்தாள். அது வேறு யாருமல்ல; வீரமலையேதான்! ஓடிப் போய், கதவைத் திறந்தாள் ஓசையின்றி! ஆனால் வீரமலை அவளது அறையைக் கடந்து சென்று கொண்டிருந்தான். அவள் திறந்திருந்த கதவின் வழியாக அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அரண்மனைத் தாழ்வாரம் முழுமையும் கடந்து, வீரமலை தனது அறைக்குள் சென்றான். அவனது அறையில் மெல்லியதாக எரிந்து கொண்டிருந்த அகல் விளக்கின் திரியை நெருடி விட்டு ஒளியைப் பெருக்கினான். அப்போது கதவுப் பக்கம் ஏதோ ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தான். குனிந்த தலை நிமிராமல் கொள்ளை வெட்கத்துடன் இளவரசி நின்று கொண்டிருந்தாள்.

37

# வீரமலையை வீழ்த்திய காதல்

சற்றும் எதிர்பாராத வகையில் இளவரசி உதயநந்தினி அந்த நேரத்தில் தனது அறைக்குள் நுழைந்து நாணம் தலையைப் பிடித்து அழுத்திக் கவிழ்த்திட, ஒளியுமிழும் இரு விழிகளை மட்டும் மேலே தூக்கித் தன்மீது படர விட்டவாறு நிற்பதைக் கண்ட வீரமலை, ''என்ன இது? இந்த நேரத்தில்?'' எனக் கேட்டுக் கொண்டே அவளருகில் வந்தான். ''ஏன்? வரக் கூடாதா?'' என்று கேட்டுக் கொண்டே இளவரசி அங்கிருந்த தூணில் முகத்தை மறைத்துக் கொண்டு தனது வெட்கத்தை விளம்பரப்படுத்தினாள்.

''எனக்கு ஒன்றுமே புரியவில்லை இளவரசி! திடீரென இங்கு எதற்காக வந்தீர்கள்?'' என்றான் வீரமலை.

இளவரசி, அவனுக்கு உடனே விடையளிக்கவில்லை. மேல் வாய்ப் பற்களை மெல்ல அழுத்திக் கீழ் உதட்டை கடித்துக் கொண்டே இடை நெளித்து அசைப்பு காட்டிக் கொண்டே தூணின் மறைவிலிருந்து வெளிப்பட்டாள். வீரமலையும் வைத்த விழி வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''ஏன்; நான் வந்தது பிடிக்கவில்லையா? போ என்று சொன்னால் போய் விடுகிறேன்.''

''இல்லை இளவரசி; இந்த நேரத்தில் தங்களை யாராவது இந்த இடத்தில் பார்த்தால் என்ன நினைப்பார்கள்?''

''என்ன நினைப்பார்கள்? நான் உறையூர் இளவரசி! நீங்களோ வளநாட்டின் தளபதி! ராஜீய விஷயங்களைக் கலந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள் போலும் என்று நினைத்துக் கொள்வார்கள்!''

''அப்படியென்ன அவசரமான ராஜீய விஷயம்? எதைப் பற்றி என்னிடம் பேச வந்தீர்கள்?''

''உறையூருக்கும் வள நாட்டுக்கும் ஏற்பட்டுள்ள உறவு மேலும் பலப்பட வேண்டுமென்பதற்காக நாமிருவரும் விவாதித்து ஒரு முடிவு எடுப்பது கூட ராஜீய விஷயந்தானே!''

''கொஞ்சம் புரியும்படி சொன்னால் பரவாயில்லை.''

''பொன்னர் - சங்கர் இருவருக்கும் திருமணமாகாமல் இருந் திருந்தால் - என் தந்தை என்னை அந்த இருவரில் ஒருவருக்கு மணமுடித்து; உறையூர் வளநாட்டு உறவை வலுப்படுத்தியிருப் பார்!''

''நடந்ததைப் பற்றி இனிமேல் பேசுவானேன்?''

''நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசலாம் அல்லவா?''

இப்போது இளவரசியின் கண்கள் வீரமலையின் மீது மோக னாஸ்திரங்களாகச் சென்று பாய்ந்தன! அவளே தொடர்ந்து பேசினாள். ''பொன்னருக்கும் சங்கருக்கும் தானே திருமணம் முடிந்துள்ளது! இன்னமும் வீரமலைக்குத் திருமணம் முடிய வில்லையே!'' இதைக் கேட்டதும் வீரமலை திகைத்துப் போய் விட்டான்.

ஒரு பெண் - அதுவும் சாதாரணப் பெண்ணல்ல - மன்ன ரின் மகள் - அவளா இப்படிப் பேசுகிறாள்? பலாப்பழம் தனக்குள்ளிருக்கும் சுளையை மூடி மறைத்து வைத்துக்கொள்ள எத்தனை போர்வைகள்! அவற்றுக்கு மேலே எவ்வளவு முள் நிறைந்த கனமான தோல்! பெண்கள் அப்படித் தானே தங்கள் உள்ளத்தில் உள்ளதை எளிதில் யாரும் புரிந்து கொள்ள முடி யாமல் மூடி மறைத்துக் கொண்டிருப்பார்கள்! இவள் என்னமோ; மாலையில்தான் வந்தாள்! இரவிலே அறையில் நுழைந்தாள்! சிறிதுகூடத் தயக்கமின்றி திருமணப் பேச்சுக்கே அடிகோலி விட்டாளே!

வீரமலைக்கு ஒரே குழப்பம்! இளவரசியை மீண்டும் உற்றுப் பார்த்தான்!

''இளவரசீ! எண்ணுவதெல்லாம் நடந்து விடுவதில்லை! அதுவும் உங்கள் எண்ணம் ஒரு வழிப்பாதையாக இருக்கிறது!''

''பொய் சொல்லாதீர்கள்! மாலையில் உங்களை நான் பார்த்த போதே உங்கள் மனம் எனக்குப் புரிந்து விட்டது! கண்ணும் கண்ணும் சந்தித்து விட்டால் வாய்ச்சொற்களால் எந்தப் பயனு மில்லை!''

''ஒரு அழகிய காட்சி - ஒரு அற்புத ஓவியம் - பார்வையில் பட்டால் அவற்றைப் பார்ப்பது போலத்தான் இளவரசியையும் பார்த்திருப்பேன். அந்தப் பார்வைக்கு விபரீத அர்த்தம் எடுத் துக் கொண்டதற்கு நான் பொறுப்பாக முடியுமா?''

''அழகிய காட்சி என்பது என்ன? நீலவானம் - அதிலே நீந்தும் நிலவு - அந்த ஒளி பொழியும் மணல்வெளி - அல்லது ஒரு அருவி - அதன் பக்கமெல்லாம் மணம் வீசும் மலர்க்கொடிகள் - ஆனந்தத் தென்றல் - அந்தக் காட்சியை ரசித்துக் கொண்டே அந்த இடத்திலேயே இருப்பதற்கு ஆசை தோன்றுவது இயற்கைதானே!''

''ஆசை தோன்றும்; கவிஞனாக இருந்தால்! அல்லது காத லியை அங்கு தேடி வரும் காதலனாக இருந்தால்! நான் அப்படி யல்ல! கடமையை நிறைவேற்ற நடத்தும் பயணத்தில் காலில் படுவது முள்ளாக இருந்தால் எடுத்தெறிந்து விட்டுச் செல் கிறேன்! கண்ணில் படுவது மலராக இருந்தால் பார்த்துக் களித்து விட்டுப் போகிறேன்! அதைப் ,பறித்துப் போக வேண்டு மென்று கருதுவதில்லை!''

''அற்புத ஓவியம் என்றீர்கள்! அந்த ஓவியம் உயிர் பெற்று உங்களருகே ஓடி வரும் போது உதைத்துத் தள்ளி விட்டு ஒதுங்கி விடுவீர்களா?''

''எனக்கு மிகவும் வியப்பாகவும் இருக்கிறது! திகைப்பாகவும் இருக்கிறது! ஒரு நாட்டின் இளவரசி இன்னொரு நாட்டின் - அதுவும் மிகச்சிறிய நாட்டின் சாதாரணத் தளபதி மீது இப்படி யொரு அன்பை - இவ்வளவு வெளிப்படையாக, இவ்வளவு அவசரமாக வெளியிடுவது வேடிக்கையாகக் கூட இருக்கிறது!''

''பல நாள் கஷ்டப்பட்டு பூமியைத் தோண்டி மிக ஆழத்தி லிருந்து கிணற்று நீர் எடுக்கிறோம்! அதிகம் தோண்டாமலும் சிரமப்படாமலும் ஆற்று மணலில் ஊற்று நீர் எடுக்கிறோம்! உடனே விரைவில் கிடைத்து விட்டது என்பதற்காக ஊற்று நீர்

ருசியில்லாமல் போய்விடுமா? ஒரு இருதய அன்பு எளிதில் கிடைக்கிறது என்பதற்காக அதனைக் குறைத்து எடை போட்டு விடலாமா?''

''இவ்வளவு நேரம் நாம் பேசிக் கொண்டிருப்பது கூட பெரும் தவறு!''

''அரண்மனையே ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறது! யாரும் கவனிக்க மாட்டார்கள்!''

''யாரும் கவனிக்காமலிருக்கலாம். ஆனால் என் மனசாட்சி என்னைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறதே; அதை அலட்சியப்படுத்த முடியுமா?''

''இதில் என் குற்றம் எதுவுமில்லை! நான் வந்தது என்னவோ குன்றுடையார் குடும்பத்தை உறையூர் விருந்தினர்களாக அழைத்துச் செல்வதற்குத்தான்! இடையில் உங்களைப் பார்த்ததால் வந்த வம்புதான் எல்லாம்! உறையூர் அரண்மனையில் பொன்னரையும் சங்கரையும் பார்த்தேன். இங்கே வந்தவுடன் முத்தாயி, பவளாயி இருவரையும் பார்த்து என்னையறியாமலே பொறாமை கொண்டேன். திடீரென உங்களைப் பார்த்தவுடன் அந்தப் பொறாமை ஓடிப் போய் விட்டது. முத்தாயிக்கும் பவளாயிக்கும் எதிராக என்னாலும் போட்டி போட முடியும் என்ற துணிச்சல் எனக்கு ஏற்பட்டு விட்டது! அப்படியொரு முடிவுக்கு என்னை அவசர அவசரமாக வரச் செய்தது, இதோ என் முன் நிற்கும் இந்த ஆஜானுபாகுவான உருவம்தான்! தேக்குமர தேகத்துக்குரியவராக நீங்கள் இல்லாமலிருந்தால் எத்தனையோ ஆண்கள் என் கண்ணில் படுவது போலத்தான் நீங்களும் பட்டிருப்பீர்கள்! கோயில் காளையின் திமிலைப்போல் உயர்ந்து நிற்கும் உங்கள் தோள்களில் சாய வேண்டுமென்று எந்தப் பெண்தான் ஆசைப்பட்டு உருக மாட்டாள்!''

''நீங்கள் இளவரசி! இப்படியெல்லாம் பேசக் கூடாது!''

''இளவரசியென்றால் அவள் இருதயம் மட்டும் தங்கத்தால் செய்து வைரம் பதிக்கப்பட்டிருக்கிறதா? அதெல்லாம் ஒன்றுமில்லை! என் இருதயத்தில் பூஜை மாடம் கட்டப்பட்டு விட்டது! தயவுசெய்து அதில் ஒரு விக்கிரகமாகக் குடியேறுங்கள்!'' என்று கூறிக் கொண்டே, வீரமலையின் கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள் இளவரசி! என்ன செய்வதென்று அறி

யாமல் தத்தளித்த வீரமலை, அவளது கரங்களின் பிடியிலிருந்து கால்களை விடுவித்துக் கொண்டு நகர்ந்து சென்றான்.

''இளவரசியைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என்னைத் தொடாதீர்கள். எவ்வளவோ உயரத்தில் இருக்கும் ராஜ குலம் எங்கே - சோழன் தோட்டியின் மகன் இந்த வீரமலை எங்கே?''

''குலம், கோத்திரம், உயர்வு, தாழ்வு இவைகளையெல்லாம் கணக்கெடுத்துக் கொண்டு காதல் மலர்வதில்லை. அப்படி மலர்ந்தால் அதற்குக் காதல் என்று பெயருமில்லை. இப்போது இந்த அறையில் நின்று கொண்டிருப்பவர்கள் சோழ நாட்டு இளவரசியும் வள நாட்டு தளபதியும் அல்ல! உங்கள் மீது உயிரையே வைத்து விட்ட உதயநந்தினியும் - அவளது உயிரைக் காப்பாற்றுகிற பொறுப்பை நிறைவேற்ற வேண்டிய அவளது காதலன் வீரமலையும்தான்!''

''என்னைப்பற்றிச் சொல்லி விடுகிறேன். குன்றுடையார் குடும்பத்துக்கு மிகவும் கடமைப்பட்டது என் குடும்பம். என் தந்தையார் காலத்துக்கு முன்பிருந்தே கோளாத்தாக் கவுண்டர் குடும்பத்துக்கு விசுவாசமாக இருந்த குடும்பம். இன்றைக்கும் எனது உயிரான கடமை இந்தக் குடும்பத்திற்கு எல்லா வகையிலும் விசுவாசமாகவும் பாதுகாப்பாகவும் இருப்பதுதான்! இளவரசியின் எண்ணத்தை நிறைவேற்றுகிற எந்தவொரு முடிவையும் நானே எடுக்க முடியாது! எனக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருக்கிற தாமரைநாச்சியாரும் குன்றுடையாரும் எனது சகோதரர்களாக விளங்குகிற பொன்னர் சங்கருந்தான் என்னைப் பற்றி எந்த முடிவையும் எடுக்க உரிமை படைத்தவர்கள்!''

''அப்படியானால் அவர்கள் சம்மதம் கொடுத்தால் உங்களுக்கு மறுப்பு ஏதும் இல்லையே?''

''மின்னல் வெளிச்சத்தில் படிக்கச் சொல்வது போல இருக்கிறது இந்தத் திடீர் கேள்விக்கு என்னிடம் பதிலை எதிர்பார்ப்பது!''

''மின்னலாவே தெரிகிறது! எதிரே இருப்பது நிலவாகத் தெரியவில்லையா?''

வீரமலை உமிழ்நீரை விழுங்கிக் கொள்கிற ஒலி கூட மெது வாகக் கேட்டது. தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள மிகுந்த பிரயத்தனப்பட்டான்.

''வளநாட்டில் உள்ளவர்கள் சம்மதம் கிடைத்தாலும் கிடைக் கலாம். ஆனால் உறையூர்ச்சோழர் உடைவாளை உருவிக் கொண்டு கிளம்புவார். மாயவர் முயற்சியினால் இன்றைக்கு இரு நாடுகளுக்கும் ஏற்பட்டிருக்கிற நட்பும் நல்ல எண்ணமும் நம்மால் நாசமாகி விடக்கூடாதல்லவா?''

''அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம். என் தந்தையை ஒப்புக் கொள்ள வைப்பது என் பொறுப்பு. நாளையதினம் குன்றுடையார் குடும்பத்துடன் நீங்களும் என்னுடன் உறையூர் வருகிறீர்கள்! அதாவது சோழமன்னரின் விருந்தினராக வரு கிறீர்கள் - திரும்பும்போது சோழ மன்னரின் மருமகனாக வரப் போகிறீர்கள்! சரிதானா?''

''என்னால் நம்ப முடியவில்லை இளவரசி!''

''நம்ப முடியாதவைகள் சிலநேரங்களில் நடப்பதால்தானே ஆண்டவனின் செயல் என்று அதற்குப் பெயர் வைக்கிறோம். நாளைக்கு என்னுடன் வந்து பாருங்கள்! நடக்கிறதா இல்லையா என்று!''

''சரி; வர முயற்சிக்கிறேன்! முதலில் தாமரைநாச்சியாரிட மும் குன்றுடையாரிடமும் பேசுகிறேன்.''

''அந்தச் சிரமம் கூட உங்களுக்கு வேண்டாம். விடிந்ததும் விடியாததுமாக நானே அவர்களிடம் பேசி அவர்களை இணங்க வைக்கிறேன். பிறகு நீங்கள் எங்களுடன் உறையூருக்கு வருகிறீர் கள்!''

''சரி, வருகிறேன்!''

''நாளைக்கு உறையூர் வரலாம். இப்போது என் அறை வரை யில் வாருங்கள்!''

''ஏன்?''

''தனியாகவா அறைக்குத் திரும்புவது?''

''தனியாகத்தானே வந்தீர்கள்?''

''வரும்போது தனியாகத்தான் வந்தேன்! இப்போது விலை உயர்ந்த பொருள் ஒன்றை இருதயத்தில் சுமந்து கொண்டு செல்கிறேனே!''

வீரமலை தயங்கினான். வலது கை கட்டை விரலையும் ஆட்காட்டி விரலையும் விரித்து மீசையைத் தடவிக் கொண்டான். இளவரசி, கொடியென நெளிந்து அசைந்து அவனை நெருங்கினாள். அவன் விலகிக் கொண்டான்.

''தொடக்கூடாது என்று கூறியிருக்கிறீர்கள். துணைக்கு வருவதாயிருந்தால் தொடமாட்டேன். இல்லாவிட்டால் இப்போது தொட்டு விடுவேன். மறுத்தால் உங்கள் மடியிலேயே துவண்டு விழுவேன்.''

''சரி... சரி... இதோ வருகிறேன்'' என்று வீரமலை அவளுடன் புறப்பட்டான். இருவரும் அரண்மனைத் தாழ்வாரப் பாதையில் அருகருகே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். தீப்பந்த விளக்குகள் அரண்மனைச் சுவர்களில் சொருகப்பட்டிருந்தவை - ஓரளவு வெளிச்சத்தை வழங்கிக் கொண்டிருந்தன. அரண்மனைக்காவலர்கள் நீண்ட நெடிய மதில்சுவர்களின் மேல் வாட்களை உயர்த்தியவாறு அங்குமிங்கும் நடந்து காவல் புரிந்து கொண்டிருந்தனர்.

தாழ்வாரத்தில் நடந்து கொண்டிருந்த இளவரசியின் காலில் ஏதோ சிறுபொருள் ஒன்று தடுக்கினாற்போலிருந்தது. அதில் அவள் தள்ளாடிக் குப்புற வீழ்வது போல் சாய்ந்து - சாய்ந்த வேகத்தில் வீரமலையின் மீது மோதிக் கொண்டாள். ஆபத்துக்குப் பாவமில்லை என்பதற்கொப்ப அவனும் அவளைத் தாங்கிப் பிடித்து, சரியாக நடக்க வைத்தான். அந்த ஒருகணம் வீரமலையின் நாடி நரம்புகள் உலைக்களத்து நெருப்பில் உள்ள இரும்புக்கம்பிகள் போல் ஆயின. அவன் உடலை அவனே தொட்டுப் பார்த்துக்கொண்டு இளவரசியுடன் நடந்தான்.

''நீங்கள் முன்னால் செல்லுங்கள். நான் பின்னால் வருகிறேன்'' என்று அவளாகவே ஒதுங்கி நின்று அவனுக்குப் பின்னால் மிக மிக நெருக்கமாக நடந்து சென்றாள்.

அரண்மனைத் தாழ்வாரம் மேடும் பள்ளமும் குண்டும் குழி யுமாக இருந்தது. ''ஏன் இப்படி சீர் கெட்டுக் கிடக்கிறது?'' என இளவரசி வீரமலையைக் கேட்டாள்.

''எல்லாம் மாந்தியப்பன் ஆட்சி புரிந்த அழகு! அவனுக்கும் அவன் தகப்பனாருக்கும் கோட்டையைக் கவனிக்கவோ, நாட் டைக் கவனிக்கவோ நேரம் எங்கேயிருந்தது? கேளிக்கை, உல் லாசம், பொழுதுபோக்கு இப்படி ஊதாரித்தனங்கள்தானே நடைபெற்றுக் கொண்டிருந்தன!''

என்று சொல்லி வீரமலை வாய் மூடுவதற்குள் - ''ஹா!'' என்று மெல்லிய குரலில் கத்தியபடி ஏதோ ஒன்றில் கால் தடுக்கிய சாக்கில் இளவரசி அவனது முதுகின் மீது விழுந்து, அவன் தோள்கள் இரண்டையும் தனது புஜங்களால் அழுத்திப் பிடித்துக் கொண்டாள். வீரமலைக்கு அதிர்ச்சி! ஆனந்த உணர்ச்சி! இளவரசியின் மார்பகம் அவனது முதுகில் பட்டதுமட்டுமல்ல; கொஞ்ச நேரம் ஒட்டியும் கொண்டதால் - வீரமலை மெய் மறந்து போனான். அவனாக அவளை விலக்கிவிட முயன்றிட வில்லை. அவன் தன்னிடம் தோற்கிறான் என்பதை உணர்ந்து கொண்ட இளவரசி; அவளாகவே தன்னை விலக்கிக்கொண்டு நடந்தாள். இருவரும் மௌனமாகவே அறையை நோக்கி நடந் தனர்.

அறைக்கு அருகில் உள்ள ஒரு பெரிய தூணின் மறைவில் யாரோ ஒருவன் ஒளிந்து கொண்டு அவர்களிருவரையும் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெருந்தூணில் சொருகப் பட்டிருந்த தீப்பந்தம் அணைந்து கருகியிருந்ததால் - அவன் ஒளிந்திருப்பதை வீரமலை கவனிக்கவில்லை. வீரமலை இள வரசியையே பார்த்துக் கொண்டு அவளது அறையை நோக்கி அவளுடன் நடந்தான். இன்னொரு முறை தாழ்வாரத்தில் அவள் எதிலாவது கால் வைத்து தடுக்கி விழமாட்டாளா என்ற ஆசை இப்போது வீரமலைக்கு!

முதலில் இளவரசி அறைக்குள் கால் எடுத்து வைத்தாள். தூணின் மறைவிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த உருவம் மெல்ல வெளியே வந்து அறையையே உற்று நோக்கிக் கொண் டிருந்தது. தொலைவிலிருந்த தூணில் அமைந்த தீப்பந்த வெளிச் சத்தில் அந்த உருவம் மெய்க்காப்பாளன் வாணவராயன்தான் என்பது தெளிவாகத் தெரிந்தது.

அறைக்குள் சென்ற இளவரசி, படியில் கால் வைக்கும் போதே மீண்டும் ஒரு முறை, ''ஆ'' என்று கூச்சலிட்டுக் கொண்டே கீழே விழுந்து விட்டாள். அறைக்குள் விழுந்த வளை, அறைக்கு வெளியே நின்ற வீரமலை ஒரே பாய்ச்சலில் பாய்ந்து தூக்கி நிறுத்தினான்.

''பயந்து விட்டீர்களா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் கலகலவென்று சிரித்து அவனைக் கட்டித் தழுவிக் கொண் டாள்.

''ஊஹூம்! என்ன இளவரசி இது? வேண்டாம்; விட்டு விடுங்கள்!''

''இன்னும் என்ன இளவரசி என்ற மரியாதை? நான் இப் போது தளபதி வீரமலையின் காதலி!''

''அந்த அறையில் பேசி முடிவு செய்ததை இந்த அறையில் மாற்றி விடலாமா? கூடாது! கூடவே கூடாது! வளநாட்டுக் குடும்பத்து சம்மதமும் - உறையூர்க் குடும்பத்து சம்மதமும் இல் லாமல் நாம் தவறு செய்து விட்டால்; இரு நாடுகளுக்குமே இருவருமே துரோகம் செய்தவர்களாகிவிடுவோம்''

வீரமலையின் நெஞ்சம், பருவ காலத்துக்கடலின் அலைகள் உயர்ந்தும் தாழ்ந்தும் - ஒன்றோடொன்று மோதிச்சிதைவது போல; ஒருநேரம் அவள்மீது மயங்கியும் - அடுத்த நேரம் தயங்கியும் குழம்பிக் கலங்கிக்கொண்டிருந்தது.

''கொஞ்ச நேரம் உட்காருங்களேன். பேசிக் கொண்டிருக் கலாம்!''

''இல்லை இளவரசி; எனக்கு பயமாயிருக்கிறது! வருகிறேன்!''

வீரமலை, அவளை ஆசை தீர ஒரு முறை பார்த்துவிட்டு வெளியே செல்ல அறைக்கதவின் பக்கம் வந்தான்.

''அய்யோ... சொன்னால் கேளுங்கள்! நான் ஒன்றும் உங் களைக் கடித்துத் தின்று விட மாட்டேன்'' என்றுரைத்த இள வரசி, அவனை இறுக அணைத்துத் தழுவிக் கொண்டே, அறைக் கதவைத் தாழிட்டு விட்டாள்.

அவன், ''என்ன இது?'' என்று சொல்லித் தாழ் போட்ட கதவிடம் நெருங்குவதற்குள் அவனை இழுத்துக் கட்டில் பக்கம் கொண்டு போய்விட்டாள்.

தூணில் மறைந்திருந்து வெளிப்பட்ட வாணவராயன், தாளி டப்பட்டிருந்த அந்த அறையின் கதவை வெளிப்புறமாக ஒரு பூட்டு மாட்டிப் பூட்டினான். அவனது கண்கள் அந்தக் குறைந்த வெளிச்சத்தில் காட்டுப்பூனையின் கண்களைப் போலப் பள பளத்தன.

அப்போது அந்த அறைக்குள்ளிருந்து ஒரு பெரும் சப்தம்! பெண்ணின் குரல்தான்! ''அய்யோ! என்னைக் காப்பாற்றுங் கள்! காப்பாற்றுங்கள்!'' என்று பயங்கரக் கதறல்! அது அந்த இளவரசியின் குரல்தான்!

வெளியில் அறைக்கதவைப் பூட்டிக் கொண்டு உருட்டி விழித்துக் கொண்டிருந்த வானவராயன்; தன் இடுப்பில் சொருகியிருந்த ஒரு ஊதுகுழலை எடுத்துப் பரபரப்புடன் ஊதினான்!

அடுத்த கணம் அந்த அரண்மனை முழுதும் அல்லோலகல் லோலப்பட்டது!

# குன்றுடையான் கூழப்பம்

## 38

இளவரசியிருந்த அறைக்குள்ளிருந்து கதவைத் திறப்பதற் கான முயற்சியில் வீரமலை மிகத் தீவிரமாக ஈடுபட்டான். ஆனால் தாழ்ப்பாளைத் தொட விடாமல் அவள், அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டே; ''அய்யோ! என்னைக் காப்பாற் றுங்கள்! என்று தொடர்ந்து அலறிய வண்ணமிருந்தாள். வீர மலை, ஆத்திரத்துடன் அவளைப் பிடித்துக் கீழே தள்ளி விட்டு தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறக்க முனைந்த போது - அவன் நினைத்தபடி கதவு திறக்காமல் வெளியே வாணவரா யன் மாட்டிய பூட்டு தடுத்து விட்டது.

ஏற்கனவே வாணவராயனின் ஊதுகுழல் ஒலி கேட்டு அரண் மனை வீரர்கள் அந்த அரண்மனை முழுதும்சிதறியோடிய சமயத்தில், வாணவராயனுடன் இளவரசிக்குப் பாதுகாப்பாக வந்த சோழ நாட்டு வீரர்கள்; அவர்களைத் தாக்கிப் பலத்த காயமுறச் செய்து வீழ்த்தினர். இதைக் கண்டு - வளநாட்டுப் பாதுகாப்புக்காக முன்னரே வந்திருந்த சோழ நாட்டு வீரர்கள் வியப்பும் திகைப்பும் கொண்டனர். வாணவராயனுடன் வந்த சோழ வீரர்களுக்கும் மாயவரால் அழைத்து வரப்பட்டிருந்த சோழ வீரர்களுக்கும் வேறுபாடு தெரியாமல் வளநாட்டு வீரர் கள்; பொதுவாக எல்லா சோழ வீரர்களுடன் மோதிச் சண்டை யிட்டனர். அதனால் வளநாட்டு உள் அரண்மனையிலும், கோட்டைக்குள்ளும் பெருங்குழப்பம் ஏற்பட்டது. அந்த இரு ளில் ஆங்காங்கு வெளிச்சம் காட்டிக் கொண்டிருந்த தீப் பந்தங்களும் வாணவராயனின் ஆட்களால் தூக்கி எறியப்பட்டு அணைந்து விட்ட காரணத்தால் யார் யாருடன் போரிடு கிறார்கள் என்று தெரியாமலே ஒரே கூக்குரல் சப்தம் மட் டுமே அந்தக் கோட்டைக்குள் கேட்டுக் கொண்டிருந்தது.

குன்றுடையான் கையில் வாளேந்திக் கொண்டு சில வீரர்கள் ஓங்கிய ஈட்டிகளுடன் பின் தொடர வேக வேகமாக இளவரசி யிருந்த அறையை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

அவன் வருவதைப் பார்த்து விட்ட வாணவராயன், தனது வீரன் ஒருவனின் காதில் அவசர அவசரமாக எதையோ சொல்லிவிட்டு, அங்குள்ள பெருந்தூண்களில் மறைந்து மறைந்து அந்த இடத்தை விட்டு, புயல் போலப் போய் விட்டான்.

இளவரசியின் அறைக் கதவுக்கு முன்னால் வந்துவிட்ட குன்றுடையானை நோக்கி, ''அரசே! இந்த அநியாயத்தைப் பாருங்கள்! உங்கள் தளபதி வீரமலை எங்கள் இளவரசியிடம் எவ்வளவு கேவலமாக நடந்து கொள்கிறார் பாருங்கள்!'' என்று கதறியவாறு வாணவராயனின் ஆள்; அவனது கால் களைக் கட்டிப்பிடித்துக் கொண்டான்.

குன்றுடையான், அந்த ஆளின் தோள்களைப் பற்றி நிற்க வைத்து - ''என்ன நடந்தது சொல்!'' என்று பதற்றத்துடன் கேட்டான்.

''இனி என்ன நடக்க வேண்டும்? எல்லாம் இளவரசியே சொல்லுவார்! உங்கள் தளபதி வீரமலை இளவரசியின் அறைக் குள் புகுந்து அவரைப் பலாத்காரம் செய்ய முயற்சித்தார். இளவரசி கூச்சல் போடவே நான் ஓடி வந்து கதவைப் பூட்டி விட்டேன். இல்லா விட்டால் நீங்கள் வருவதற்குள் வீரமலை இங்கிருந்து ஓடி விடுவார் அல்லவா? இப்போது உங்கள் கண் முன்னால் கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டார்!''

என்று அவன் சொல்லிக் கொண்டே கதவில் மாட்டியிருந்த பூட்டை அகற்றினான். குன்றுடையான் கதவை ஓங்கி உதைத்து விட்டு உள்ளே சென்றான், தனது வீரர்களுடன்!

அங்கே குன்றுடையான் கண்ட காட்சி அவனை சினத்தின் சிகரத்துக்கே கொண்டு சென்றது.

வீரமலை ஏதோ ஒரு அதிர்ச்சியுடன் நின்று கொண்டிருந் தான். இளவரசியோ, ஆடைகள் நிலை குலையவும் - அவள் அணிந்திருந்த ஆரங்கள் தரையில் சிதறிக் கிடக்கவும் - அரை நிர்வாணமாகவும் கட்டிலின் ஓரத்தில் நடுநடுங்கிக் கொண்டி ருந்தாள். குன்றுடையானையும் வீரர்களையும் கண்டவுடன், அவள் பாய்ந்து சென்று படுக்கையிலிருந்த போர்வையொன்றை இழுத்து, தனது நிர்வாணத்தை மறைத்துக் கொண்டாள்.

தனது அரண்மனைக்கு வந்த இளவரசிக்கு இப்படியொரு மானபங்கமா? இந்தச் செய்தி அறிந்தால் உறையூர்ச் சோழர்

எவ்வளவு கோபம் கொள்வார்? அதனால் ஏற்படும் விளைவுகள் எவ்வளவு விபரீதமாக இருக்கும்? இப்படி தொடர்ச்சியாக மின்னல் கிளம்புவது போல் குன்றுடையான் மனத்தில் கேள்விகள் எழுந்து குடைந்தன!

வீரமலையோ இருதயமே நின்று விட்டதைப் போல; தரையில் பொத்தென்று விழும் நிலையில் இருந்தான்.

'என்ன இது; எல்லாம் புதிராக இருக்கிறது? இவள் தானே என் அறைக்கு வந்தாள்! இவள்தானே என்னைக் காதலிப்பதாகச் சொன்னாள்! இவள்தானே என்னைக் கட்டிப்பிடித்தாள்! இவள்தானே இந்த அறைக்குத் துணையாக என்னைக் கூட்டி வந்தாள்! இப்போது இப்படி நடிக்கிறாளே; இவள் உண்மையிலேயே உறையூர் இளவரசிதானா? அல்லது பகை நாட்டிலிருந்து உளவறிய வந்தவளா?

இத்தனை வினாக்களும் வீரமலையின் உடைந்து போன உள்ளத்திலிருந்து ஒன்றன் பின் ஒன்றாகக் கிளர்ந்தெழுந்தன. எனினும்; அவனால் வாய் திறந்து பேச முடியவில்லை.

''வீரமலை? இதெல்லாம் என்ன அக்கிரமம்? என் எதிரே நிற்பது நீ தானா? அல்லது பச்சைத் துரோகத்தின் வடிவமா?''

குன்றுடையான் கேள்விக்குப் பதில் சொல்லாமல் வீரமலை அசைவற்று நின்றான்.

''அம்மா; இளவரசி! என்னம்மா நடந்தது? சீக்கிரம் சொல்லம்மா; எனக்குத் தலை சுற்றுகிறது!''

என்று குன்றுடையான் இளவரசியைப் பார்த்துக் கேட்டவுடன்; அவள் விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

''அழாதே இளவரசி! நடந்ததைச் சொன்னால் இந்தக் கணமே தண்டனை வழங்குகிறேன்.''

''எப்படி என் வாயினால் சொல்லுவேன்? அகில் புகை தூபத்தைக் கொண்டு வந்து வைத்து விட்டுக் குப்பாயி இங்கிருந்து போனாள். எனக்குத் தூக்கம் வந்து விட்டதால் அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு படுக்கலாமென்று கதவருகே சென்றேன். அப்போது, உங்கள் தளபதி வீரமலை கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்து விட்டான்.''

அவள் இப்படிச் சொன்ன போது வீரமலை குறுக்கிட்டு, ''இல்லை! இல்லை!'' எனக் கூறிக் கொண்டு, குன்றுடையானுக்கு அருகே ஓடி வந்தான்!

''சே! நீ பேசாதே!''

என்று குன்றுடையான் சீறி விழுந்தான். இளவரசி மீண்டும் அழத்தொடங்கினாள்.

''தயவுசெய்து அழாமல் சொல்லம்மா! எங்கள் குலத்தின் தன்மானத்துக்கும் பண்பாட்டுக்கும் விடப்பட்ட அறைகூவலம்மா இது! இதற்கு நான் பதில் சொல்லியாக வேண்டும். எனவே எதையும் மறைக்காமல் சொல்!'' என்றான் குன்றுடையான்.

''அவன் சொன்ன வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லவே என் நாக் கூசுகிறது.''

''பரவாயில்லை - நடந்ததைச் சொல்லத்தானே வேண்டும்.''

''அறைக்குள்ளே வந்த வீரமலை என் அழகைப் புகழ்ந்தான். ரம்பையாம் நான்! ஊர்வசியாம் நான்! மேனகையாம் நான்! இப்படிப் பைத்தியம் பிடித்தவன் போல் உளறினான். என்ன இருந்தாலும் உங்கள் தளபதியாயிற்றே; புத்தி பேதலித்து அவன்தான் காமாந்தகாரனாக நின்று உளறுகிறான் - நாமும் பதிலுக்குக் கடுஞ்சொல் கூறக்கூடாது - அது குன்றுடையாரையே அவமதிப்பதாகிவிடும் என்று எண்ணி நான், அவனைப் பார்த்து அறிவுரை கூறி வெளியே போகுமாறு கேட்டுக் கொண்டேன். அவன் என்னை அனுபவிக்காமல் திரும்ப மாட்டேன் என்று என் கையைப் பிடித்து இழுத்தான். கதவைத் தாளிட்டான். நான் இந்த அறைக்குள்ளே ஒரு பூனைக்கு முன்னால் கிளி அகப்பட்டுக் கொண்டது போல அகப்பட்டுத் தவித்தேன்.''

''அடப்பாவி! வீரமலை! உன்னை என்னுடைய பிள்ளைகளைப் போலக் கருதியிருந்தேனே; அதற்கு இதுதான் நீ காட்டும் நன்றியா?''

குன்றுடையானின் உடல் முழுதும் நடுங்கிற்று. உணர்ச்சி வசப்பட்டுக் குன்றிப் போனான் என்பதை குன்றுடையானின் தழுதழுத்த பேச்சே விளக்கிற்று.

''தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள்!'' என்று வீரமலை கெஞ்சும் தோரணையில் குன்றுடையானுக்கு முன்னே மண்டியிட்டுக் கதறினான். ஆனால் இளவரசி அவனைப் பேச விடவில்லை.

''அவன் என்னிடம் நடந்து கொண்டது கூட எனக்கு கவலையைத் தரவில்லை. என்னை அடைவதற்காக அவன் கூறிய ஆசை வார்த்தைகளை நினைத்தால் அவன் இந்த நாட்டுக்கும் உங்களுக்கும் உங்கள் மகன்களுக்கும் எவ்வளவு பெரிய துரோகம் செய்ய இருந்தான் என்பது இப்போது கூட என்னைப் பயமுறுத்துகிறது!''

''அப்படியா? என்ன சொன்னான் இளவரசி; என்ன சொன்னான்?''

''இந்த வீரமலையை சாதாரண தளபதியென்று நினைத்துக் குறைத்து எடை போடாதே! இன்னும் சில நாட்களில் குன்றுடையானையும், பொன்னர் - சங்கரையும் கூண்டோடு அழித்து விட்டு, வளநாட்டு ஆட்சியை அபகரிக்கவே திட்டம் வைத்திருக்கிறேன். இன்றைய சோழ நாட்டு இளவரசி உதயநந்தினி வெகு விரைவில் வளநாட்டு மகாராணியாகப் போகிறாள் என்று சொன்னான்.''

''அப்படியா? அதைக் கூட இவன் செய்திருக்கலாம். என்னையும் என் பிள்ளைகளையும் தீர்த்துக்கட்டி விட்டு இந்த ராஜ்யத்தைக் கூட இவன் எடுத்துக் கொள்ளலாம். அதற்காக நான் கலங்கமாட்டேன். ஆனால் என் அரண்மனையில் என் பாதுகாப்பில் உள்ள சோழநாட்டு ராஜகுமாரியிடம் தகாத முறையில் நடந்து கொண்டிருக்கிறானே - இவனுக்கு ஆயுட் காலம் வரையில் சிறை தண்டனையே அளிக்கலாம்.''

என்று சினங்கொண்ட வேங்கையாக உறுமிய குன்றுடையான், இளவரசியிடம் மிகத் தாழ்ந்த குரலில் -

''அம்மா! உனக்கு வேறு எதுவும் அசம்பாவிதம் ஏற்படவில்லையே?''

என்று பவ்யமாகவும் பரிவுடனும் கேட்டான்.

''ஏதோ என் தாய் தந்தையர் செய்த தவத்தின் மகிமையாலும், எங்கள் குல தெய்வத்தின் அருளாலும் என் கற்பு நூலிழையில் காப்பாற்றப்பட்டு விட்டது.''

எனச் சொல்லி இளவரசி உதயநந்தினி தேம்பித் தேம்பி அழுதாள்!

''அடேடே! கற்பு காப்பாற்றப் பட்டதற்காக ஏனம்மா அழு கிறாய்!''

என்று கேட்டு குன்றுடையான் தனக்கு ''மசச்சாமி'' என்ற பட்டம் எவ்வளவு பொருத்தமானது என்பதை மீண்டும் ஒரு முறை நிரூபித்துக் கொண்டான்.

இதற்கிடையே அரண்மனை முழுதும் வாட்கள் ஒன்றோ டொன்று உராய்வதும், ஈட்டிகள் சுவர்களில் பேரொலியுடன் பாய்வதும் - காயம் பட்ட வீரர்கள் அலறுவதும் - குதிரைகள் யானைகள் பயங்கரச் சப்தம் எழுப்புவதுமாக - ஒரே குழப்ப மாக இருந்தது.

குன்றுடையான், வீரமலையைக் கொண்டு போய்ச் சிறையில் தள்ளுமாறு தனது வீரர்களுக்குக் கட்டளையிட்டான். வீரமலை, குன்றுடையானிடம் உண்மையை விளக்கிட எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. அவனை அரண்மனை வீரர்கள் பரபரவென இழுத்துச் சென்றனர்.

''இனி ஒருக்கணம் கூட இங்கேயிருக்க முடியாது! குன்றுடை யார் அவர்களே; நான் வருகிறேன்! ஏய் எங்கே வாணவரா யன்? என் ரதத்தைக் கொண்டு வாருங்கள். இப்பொழுதே உறையூருக்குப் புறப்பட வேண்டும்.''

என்று இளவரசி, ஆர்ப்பாட்டமாகக் கத்தினாள். அவளுடன் வந்த ஒரு வீரன், ''அம்மா! வாணவராயனைக் காணவில்லை! ரதம் தயார்! அதனை ஓட்டும் சாரதியாக நானே இருக்கிறேன்.'' என்று அவளுக்கு நேரே ஓடி வந்து சொன்னான். ''அந்த வாணவராயன் எங்கே தொலைந்து விட்டான்?'' என்று முணு முணுத்தபடியே இளவரசி, சரேலென அந்த அறையை விட்டு வெளியேறி - ''எங்கே ரதம்?'' என அதட்டினாள். ''அதோ! அதோ!'' என்று சொல்லிக் கொண்டே வீரன் அவளை அந்த இருட்டில் ரதத்தின் பக்கம் அழைத்துச் சென்றான்.

திகைத்துப் போன குன்றுடையான், செய்வதறியாது கை பிசைந்து நின்றான். அந்த இருளைக் கிழித்துக் கிளம்பும் கூச்ச லில் சிக்கித் தவித்த அரண்மனையில் என்ன நடக்கிறதென்றே அவனுக்குப் புரியவில்லை. பிணமாக விழுந்து கொண்டிருந்த

வீரர்களின் பெருங்கூச்சல் ஒரு பக்கம் அவனது காதைத் துளைத்திட - பிறிதோர் பக்கம் இளவரசியின் ரதம் அந்த அரண்மனையை விட்டு மிக வேகமாகப் புறப்பட்டுப் போன ஒலியும் அந்தக் காரிருளில் அதிர்ச்சி தரத்தக்கதாய் இருந்தது.

குன்றுடையான், தனது வலிமை முழுவதையும் ஒன்று திரட்டிப் பெருங்குரலெடுத்து - ''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!'' என்று ஆவேசமாகக் கத்தினான். பெருமழை, தூறலாகச் சிறுத்தது போல வாட்கள் ஈட்டிகள் மோதிக் கொண்ட ஒலி, கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து ஒரு அமைதி திரும்பிற்று! ஆனால் அந்த அமைதியையும் மீறிக் கொண்டு காயம்பட்ட வீரர்களின் முனகல் ஒலி, விட்டு விட்டுக் கேட்டுக்கொண்டிருந்தது.

குன்றுடையான் மெய் சோர்ந்த நிலையிலும் கடமையாற்றும் உள்ளத்துடன் தனது காவலர்களுக்கு ஆணை பிறப்பித்தான். தீப்பந்தங்களைக் கொளுத்தி முதலில் வெளிச்சத்தைக் கொண்டு வாருங்கள் என்பதுதான் அந்த ஆணை! தீப்பந்தங்கள் மளமள வெனச் சில கொளுத்தப்பட்டுத் தூண்களில் பழையபடி வைக்கப்பட்டன.

மீண்டும் அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு குதிரையொன்று அரண்மனைக்குள்ளிருந்து கோட்டை முகப்பை நோக்கி ஓடுவது போல் தெரிந்தது. குன்றுடையானும் அவனைச் சுற்றியிருந்த வீரர்களும் பரபரப்படைந்து அந்தக் குதிரையைக் கவனித்தனர்.

''யார்? உறையூர் மெய்க்காப்பாளன் வாணவராயனா?'' என்று குன்றுடையான் கேட்டான்; அவனது பருத்த உருவத்தைப் பார்த்து விட்டு ஒரு யூகமாக!

''ஆமாம்; வாணவராயனாகத்தான் வந்தேன். ஆனால் இப்போது தலையூர்த் தளபதி பராக்கிரமனாகத் திரும்புகிறேன்! வெறுங்கையோடு திரும்பவில்லை. வந்த வேலையை நானும் வடிவழகியும் வெற்றிகரமாக முடித்து விட்டுத்தான் திரும்புகிறோம். இதோ என்னுடன் குதிரையில் இருப்பது யார் தெரிகிறதா?''

தலையூர்த் தளபதி பராக்கிரமன் தந்திரமாகத் தங்களை ஏமாற்றி விட்டான் என்பதைப் புரிந்து கொள்ள குன்றுடையனுக்கு அதிக நேரமாகவில்லை!

அவனுடன் குதிரையில் இருக்கும் பெண் யார் என்பதைத் தெரிந்து கொள்ள உற்றுப் பார்த்தான். அதே நேரம் அவனது வீரர்கள், பராக்கிரமனை நோக்கிப் பாய்ந்தோடினர்.

''வேறு யாருமல்ல; உமது மகள் அருக்காணித் தங்கம்தான்!'' என்று கூறிக் கொண்டே பராக்கிரமன், ஒரு கையால் அந்தப் பெண்ணின் வாயை மூடிக் கொண்டு, மற்றொரு கையால் குதிரையை நாலு கால் பாய்ச்சலில் செலுத்துவதற்குக் குத்தினான்.

குதிரை பறந்து சென்ற வேகத்தில் குன்றுடையானின் வீரர் களால் பராக்கிரமனை நெருங்க முடியவில்லை.

கோட்டை முகப்பை விட்டுக் குதிரையில் வெளியேறிய பராக்கிரமன் தப்பி விட்டான் என்பதறிந்து வெட்கிப் போன குன்றுடையான், ''அப்படியானால் அவளும் இளவரசியல் லவா?'' என்று தனக்குத் தானே புலம்பினான்.

''அவள் பெயர் என்னமோ வடிவழகி என்று சொன்னானே!'' என ஒரு வீரன் தெளிவுபடுத்தினான்.

''சே! விசாரிக்காமலே வீரமலையை சிறையில் போடச் சொல்லி விட்டேனே! உடனே அவனை விடுவித்து அழைத்து வாருங்கள்!'' என்று மற்றொரு ஆணை பிறப்பித்தான் மசச் சாமி குன்றுடையான்!

வீரர்கள் சிலர் வீரமலையைச் விடுவித்து அழைத்து வர சிறைச்சாலைக்கு ஓடினர்.

குழப்பம் தலையைச் சுற்றக் குன்றுடையான் மெல்ல நடந்து, குற்றுயிர் குலை உயிராகக் கிடக்கும் வீரர்களைக் கவனித்துக் கொண்டிருந்தபோது ''அப்பா! அப்பா!'' என்றலறியவாறு அருக்காணித் தங்கம் ஓடி வந்தாள்!

குன்றுடையானுக்கு மேலும் குழப்பம்! தன் மகள் அருக் காணியைத்தான் பராக்கிரமன் தூக்கிக் கொண்டு போய் விட் டானே, இப்போது எப்படி அரண்மனைக்குள்ளிருந்து வந் தாள்? கண்களை அகல விரித்து அவளைப் பார்த்தான். அருக்காணித் தங்கமேதான்!

''என்னம்மா?'' என்று ஓடிப் போய் அவளை அணைத்துக் கொண்டான்!

''அப்பா! அம்மாவை கொன்றுவிட்டார்கள்!'' என்று கதறிய படி குன்றுடையானின் காலில் அருக்காணி தங்கம் விழுந்து விட்டாள்.

''ஆ! தாமரை! தாமரை!''

எனக் கண்ணீர் கரை புரள குன்றுடையான் அந்த இருளில் ஓடினான். அருக்காணியும் அவனைத் தொடர்ந்து ஓடினாள்.



# யாகப் பறவைகள்! 39

தாமரைநாச்சியார், தனது படுக்கையறையில் ரத்த வெள்ளத்தில் மயக்கமுற்றுக் கிடந்தாள். அவளருகே முத்தாயி பவளாயி இருவரும் கண்ணீர் கரை புரளத் தேம்பியழுது கொண்டிருந்தனர். அரண்மனையில் உள்ளோர் அனைவரும் அந்த அறைக்குள் வேகவேகமாக மிக்க பரபரப்புடனும் அழுது புலம்பியவாறும் நுழைந்து கொண்டிருந்தனர். அருக்காணியுடன் அங்கு வந்த குன்றுடையான், தனது ஆருயிர்த் துணைவியின் நிலை கண்டு நிலை குலைந்தான்.

''தாமரை! தாமரை!'' என்று குன்றுடையான் கதறி, தாமரை நாச்சியாரின் தலையை அசைத்து அசைத்து அழுதபோது உடலில் உயிர் இழைந்து கொண்டிருந்த காரணத்தால் ஓரளவு மயக்கம் தெளிந்த தாமரை மெல்லக் கண் திறந்து தனது கணவனை மெத்த பரிவுடன் நோக்கினாள்.

'தாமரையின் முகத்தில் மரண பயம் துளியளவு கூடத் தென்படவில்லை. ''என்ன தாமரை இது? அய்யோ, இந்த விபரீதம் எப்படி ஏற்பட்டது?'' என்று நடுங்கிடும் குரலில் கேட்டுக் கொண்டே குன்றுடையான், ''மருத்துவர்கள் எங்கே? உடனே அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

அதற்குள் தாமரை, குன்றுடையானின் கரங்களைப் பற்றிக் கொண்டு, ''மருத்துவர் வேண்டாம். என் முடிவை யாராலும் தடுக்க முடியாது. நான் உங்களையும் என் பிள்ளைகளையும் என் மருமகள்களையும் எல்லோரையும் விட்டுப் பிரிந்து கொண்டிருக்கிறேன்'' என்றாள். அப்போது அவள் முகத்தில் மெல்லிய புன்னகை ஒளியே நிறைந்திருந்தது.

தாமரைநாச்சியாரையே குன்றுடையான் உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான். தன் மீது கொண்ட தூய அன்புக்காக தாய் தந்தையரையும் தமையனையும் பகைத்துக் கொண்டு, செல்வச்

செழிப்பையெல்லாம் 'சீ' என இகழ்ந்துரைத்து விட்டு - எத்தனை எத்தனையோ இன்னல்களையெல்லாம் ஏற்றுக் கொண்டு - இல்வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகளில் எல்லாம் இணை பிரியாதிருந்து - தனக்கு வாழ்க்கைத் துணைவியாக மட்டுமின்றி வரும் பொருளுரைத்திட்ட அமைச்சரைப் போலவும் துணை நின்ற தாமரைநாச்சியார்: வாழ்க்கையின் கோடை காலம் முழுவதும் தனக்குத் துணையாக இருந்து விட்டு - இப்போது வாழ்க்கையின் வசந்த காலமாக வளநாட்டு ஆட்சியும், அந்த ஆட்சியைப் பரிபாலித்திட இரு ஆண் சிங்கங்கள் வழித் தோன்றல்களாகவும் விளங்குகிற இந்த நேரத்தில் இப்படியொரு முடிவை நோக்கித் தள்ளப்பட்டு விட்டாளேயென்ற தாங்க முடியாத சோகத்துடன் குன்றுடையான் அவளது கைகளை இறுகப் பற்றிக் கொண்டு, ''தாமரை என்னம்மா இப்படி? அய்யோ! என்ன நடந்தது?'' என்று விம்மியழுதான்.

அப்போது சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட வீரமலை, நெஞ்சில் வேல் பாய்ந்தது போன்ற துடிதுடிப்போடு அங்கு வந்து சேர்ந்தான். தாமரைநாச்சியாரைக் கண்டதும் 'அம்மா! அம்மா!' என அவன் அலறிய ஒலி, அங்கிருந்தோர் அனைவரையும் கதறிக் கதறி அழுதிடச் செய்தது.

வீரமலையைத் தாமரைநாச்சியார் கை ஜாடை செய்து தன்னருகே அழைத்தாள். அவளருகே சென்று பணிந்து குனிந்து, அவள் என்ன சொல்லுகிறாள் என்பதை வீரமலை ஆவலுடன் கேட்டான்.

''உறையூர் இளவரசியென்று சொல்லிக் கொண்டு வந்தவள் இளவரசியே அல்ல! தலையூர்க் காளியின் தளபதி பராக்கிரமனும், அவனோடு வந்த ஒரு வேஷக்காரியும் நம்மை ஏமாற்றியிருக்கிறார்கள்.''

இதைத் தாமரைநாச்சியார் சொன்ன போது வீரமலையின் மனசாட்சி, அவனை நூறாயிரம் சவுக்குகளைக் கொண்டு தாக்கியது. அத்தனை அடிகளும் அவன் இதயத்தில் ரத்தம் கசிகிற அளவுக்கு விழுந்தன.

''எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டேன். இத்தனை நாள் கட்டிக்காத்து வந்த கடமையுணர்வு எவளோ ஒரு கைகாரியின் கடைக்கண் வீச்சுக்கு முன்னால் கல்லறைக்குப் போய் விட்டதே! குற்றம் அவள் மீதா? இல்லவே இல்லை! கண் வீசுவது அவள் கற்ற கலை! அந்த வகையில் சிக்கிய குற்றம் என்

னுடையதே தவிர அவளுடையதாக எப்படி இருக்க முடியும்? உறையூர் இளவரசியாக இருந்திருந்தால் அவள் என்னை எப்படி விரும்பியிருக்க முடியும் என்றுகூட நினைத்துப் பார்க்க முடியாமல் அவளது அங்க அசைவுகளுக்கு அடிமையாகி மான பங்கப்பட்டு விட்டேனே! அழகு, ஆபத்தானது என்பார்கள் - அழகு போல ஒப்பனை செய்து கொண்டு வந்த ஆபத்தையே நான் நம்பி மதி மோசம் போய் விட்டேனே! சே! இப்படியும் பெண்களா? உடலை யாருக்கு வேண்டுமானாலும் விருந்தாக அளித்துக் காரியம் சாதித்துக் கொள்ளக் கொஞ்சமாவது கூச்ச நாச்சமிருக்காதா? அதைவிடக் கேவலம்; இப்படி சிகப்புத் தோல் போர்த்திய சிங்காரிகளை வைத்துத் தனது சிம்மாசனச் செல்வாக்கை பெருக்கிக் கொள்ள நினைக்கும் மானங்கெட்ட மனிதர்களும் இருக்கிறார்களே என்பதுதான்! அந்த மனிதப் பிண்டங்களையும் அவர்களின் கையாட்களாகப் பயன்படும் இந்த மயக்கு மோகினிகளையும் குறைசொல்லிப் பயன் என்ன? வெண்புறாக்களின் சிறகையொட்டிக் கொண்டு வட்டமிடும் இந்த வல்லூறுகளின் வஞ்சகக் கொஞ்சலில் ஏமாந்து போகும் என்னைப் போன்ற முட்டாள்களையல்லவா தண்டிக்க வேண்டும்! அரசரின் மகள் என்றாள்! ஆள் மயக்கியாக வந்து வென்றாள்! அதில் தோற்றது நானல்லவோ? என் தோல்வி - என் இதயத்தில் கண நேரம் மின்னி மறைந்த காதல் உணர்வால் ஏற்பட்ட களங்கமல்லவா? காதல் உணர்வா அது? இல்லை! காமச் சூறாவளி - நிச்சயமாகக் காதலெனும் பூங்காற்று அல்ல! நானாகத் தேடிக் கொண்ட தோல்வியினால் அல்லவா - என் தந்தை போன்ற குன்றுடையார் என்னைச் சிறையிலிட ஆணையிட்டார். வளநாட்டுக் கோட்டையிலே அமளி - என் தாய்; இதோ மரணத்தோடு போராடுகிறார்கள்! அனைத்துக்கும் என் அறியாமையன்றோ காரணம்!''

'சுளீர்! சுளீர்!' இப்படி விழுந்தன சவுக்கடிகள், வீரமலையின் இதயத்தில்.

வீரமலையுட்பட அனைவரும் தாமரைநாச்சியாரின் உதடுகள் அசைவதையே கவனித்துக் கொண்டிருந்தனர்.

''குப்பாயி இளவரசியின் அறைக்கு அகிற்புகைத் தூபம் கொண்டு போய் வைக்கப் போனவள், இளவரசியாக இருந்தவளின் பேச்சைப் பார்த்து ஏதோ சந்தேகப்பட்டிருக்கிறாள். வீரமலையைப்பற்றி அவள் விசாரித்தது ஏன் என்று குப்பாயிக்குப் புரியவில்லை. அதனால் குழப்பமடைந்த குப்பாயி, இளவரசியின் மெய்க்காப்பாளன் வாணவராயன் தங்கியிருந்த

அறையின் பக்கம் வந்து மெதுவாக கவனித்திருக்கிறாள். அறைக்குள் ஏதோ பேச்சுக்குரல் மட்டும் கேட்டிருக்கிறது. அதாவது அருக்காணித் தங்கத்தைப் பற்றிய பேச்சு. அருக் காணி தங்கம் படுத்திருக்கும் அறை எது என்று பேச்சு நடந் திருக்கிறது. அருக்காணி அவளுடைய தாயார் தாமரைநாச்சி யாருடன்தான் படுத்துறங்குவது பழக்கமாம் என்று அந்த அறைக்குள்ளிருந்த ஒருவன் கூறியிருக்கிறான். உடனே குப் பாயிக்கு சந்தேகம் ஏற்பட்டு விட்டது. அருக்காணித் தங்கத் துக்கு ஏதோ ஆபத்து என்று உணர்ந்திருக்கிறாள். உணர்ந்த தும் என் அறைக்கு ஓடி வந்தாள். 'அம்மா! அம்மா! இன் றைக்கு நான் உங்களோடு படுத்துறங்கப் போகிறேன்' என் றாள். 'அருக்காணி தங்கம் படுத்துத் தூங்கி விட்டாளே' என் றேன். அவளே அருக்காணியை எழுப்பி அவளைத் தனது அறையிலே போய்ப் படுக்கச் சொன்னாள். அருக்காணி தூக்க மயக்கத்தில் இருந்தாள். பிடிவாதமாக அவளைக் குப்பாயி அழைத்துக் கொண்டு போய்த் தனது அறையிலே படுக்க வைத்து விட்டு வந்தாள். "என்னடியம்மா குப்பாயி இதெல் லாம்? நீயேன் திடீரென்று என்னுடன் படுத்துறங்க ஆசைப் படுகிறாய்?" என்று கேட்டேன். முதலில் சரியான பதில் சொல்லாமல் சமாளித்தாள். பிறகு நான் விடாமல் கேட்கவே அப்போதுதான் சொன்னாள்; அருக்காணியைப் பற்றி வாண வராயன் அறையில் பேசப்பட்ட விபரத்தை! அதற்காக நீயேன் இங்கு படுத்தாய்? என்று கேட்டேன். அருக்காணிக்கு ஆபத்து விளைவிக்க எண்ணுகிறவர்கள்; தன்னை அருக்காணியென்று எண்ணிக் கொள்ளட்டும் - எப்படியோ அருக்காணி தங்கம் தப்பித்துக் கொண்டால் சரி என்றாள். நான் பதைத்துப் போனேன்! 'முட்டாள் பெண்ணே! இவ்வளவு பெரிய ஆபத் தான செய்தியை நீ முந்தானையில் முடிந்து வைத்துக் கொண் டால் நல்லது அல்ல - உடனே வீரமலையிடம் சொல்லி, ஆக வேண்டியதைப் பார்க்கலாம். நீ இப்போதே போய் வீரமலையை அழைத்து வா' என்றேன். அவளும் புறப்பட ஆயத்தமாகி அறைக் கதவைத் திறந்தாள். அதற்குள் யாரோ சிலர் மளமள வென அறைக்குள் நுழைந்த சப்தம் கேட்டது. திடுக்கிட்டேன். குப்பாயி வீறிட்டுக் கத்தினாள். அதற்குள் அவளது வாயை அடைத்து விட்டார்கள். அறைக்குள்ளிருந்த தீப்பந்தங்கள் தூக்கி வீசப்பட்டு அணைந்து போயின. குப்பாயி சப்தம் போட்ட இடம் நோக்கி ஓடினேன். என்னை ஒரு முரட்டுக் கரம் பிடித்துத் தடுத்தது. 'அடே யாரடா நீ' என்று அதட்டிக் கேட்டேன். நான்தான் தலையூர்த் தளபதி பராக்கிரமன். உனது மகள் அருக்காணி தங்கத்தைச் சிறையெடுத்து தலையூர் மாளி கைக்குக் கொண்டு போகிறேன் என்றான். நான் ஓடிப்போய்

அந்த இருளில் சுவரில் மின்னிக் கொண்டிருந்த வாளையெடுத்து அவன் மீது ஓங்கினேன். அதற்குள் என் வயிற்றிலும், கழுத்திலும் தலையிலும் கட்டாரிக் குத்துக்கள் - அரிவாள் வெட்டுகள் - அந்தக் கொடியவன் பராக்கிரமன் குப்பாயியைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான்.''

விழியோரம் நீர் வழிய இந்த விபரங்களைச் சொன்ன தாமரை நாச்சியார், அதற்கு மேல் பேச முடியாமல் திணறினாள். குன்றுடையான் அவள் கரத்தை இறுகப் பிடித்துக் கொண்டு தழு தழுத்த குரலில் கேட்டான்.

'அடே! நீ தூக்கிப் போவது அருக்காணியல்ல; அவள் குப்பாயி என்று நீ சொல்லியிருக்கக்கூடாதா? நமது பெண்ணைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எனது நண்பர் பச்சனா முதலியாரின் பெண்ணைக் காட்டிக் கொடுத்து விட்டதாகப் பெரும் பாபம் வந்து சேருமே!''

இந்தக் கேள்வியில் குன்றுடையானின் வெள்ளை உள்ளம் மட்டுமல்ல; நல்ல உள்ளம் - நம்மால் பிறருக்குக் கேடு வரக் கூடாது; நமக்கு வந்தாலும் தாங்கிக் கொள்ளலாம் என்ற நேர்மையான உள்ளம் - பட்டை தீட்டப்பட்ட வைரம் போல் ஒளியுமிழ்ந்தது. இந்த உள்ளம்தான் குன்றுடையானுக்கு ''மசச்சாமி'' என்ற பட்டத்தை வாங்கித் தந்தது போலும்.

''நான் அந்த நேரத்தில் என்ன செய்ய முடியும்? அருக்காணியைக் காப்பாற்றுவதற்காக குப்பாயி இப்படியொரு ஏற்பாடு செய்வாள் என்றே எனக்குத் தெரியாதே! நான் பல முறை கேட்ட பிறகுதானே கடைசியில் விஷயத்தைச் சொன்னாள்! நான் வீரமலையைக் கூப்பிடச் சொல்வதற்குள் தான் எல்லாம் முடிந்து விட்டதே!''

தாமரை; தனது உடலில் இருந்து மெல்ல மெல்லக் கரைந்து கொண்டிருக்கும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பேசுவது போல இந்த வார்த்தைகளைச் சொல்லி விட்டு, குன்றுடையானை அன்பு ததும்பும் புன்னகை புரிந்து அருகே, மிக அருகே தன் முகத்தருகே வருமாறு கரங்கொண்டு அவன் கழுத்தை வளைத்து, ''எப்படியாவது குப்பாயியைக் காப்பாற்றுங்கள். வளநாட்டு மக்களை வாழ வையுங்கள். எனக்கு ஒரு குறையுமில்லை. எனக்கு விடை கொடுங்கள் நான் போய் வருகிறேன். இதோ இந்த மாங்கல்யத்துக்கு ஒரு முத்தம் கொடுங்கள்'' என்று கூறிக்கொண்டே தாமரை நாச்சியார் மஞ்சள் பூசப்பட்ட தனது உள்கழுத்து நூலைக் கை நடுங்க எடுத்து

குன்றுடையான் உதடுகளின் அருகே காட்டினாள். குன்றுடையான் அந்த மாங்கல்ய நூலையும் தனது பாசமிகு மனைவியின் முகத்தையும் ஒரு சேரப் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

பழைய நினைவு - தாமரை நாச்சியாருக்கும் மாந்தியப்பனுக்கும் திருமண ஏற்பாடு - மேளதாளங்கள் முழங்குகின்றன! முரசுகள் அதிர்கின்றன! ஏழை எளியோர்க்குத் தாமரைநாச்சியார் உணவு தானியங்கள் வழங்கிக் கொண்டிருக்கிறாள்.

அப்போது கிழிந்த கந்தலாடை - பரட்டைத் தலை-தாடி மீசை நடக்கக் கூட சக்தியற்ற வாலிபன் - அவன்தான் குன்றுடையான். அவனை அடையாளம் தெரிந்து கொள்ளாத தாமரையின் தாயார் பெருமாயி அம்மாள், ''என்னப்பா வேண்டும்? அரிசியா? கம்புவா? வரகா?'' என்று கேட்கிறாள். அதற்கு குன்றுடையான், ''கம்பு சோளம் வரகு வாங்க வரவில்லை அத்தை - கணவனாக உன் மகள் கழுத்தில் தாலி கட்ட வந்தேன் அத்தை!'' என்று பதில் அளிக்கிறான். அப்போது புத்துயிர் பெற்றவளைப் போல தாமரை நாச்சியார், அங்குள்ள பெருங்கூட்டத்தைப் பொருட்படுத்தாமல் சரேலென அவன் மீது பாய்ந்து அத்தான் எனக் கூவியழைத்து அவனைத் தழுவிக் கொள்கிறாள்...

அந்தப் பழைய நிகழ்ச்சி - அடடா... மல்லிகை போல் மலர்ந்து, தாழம்பூ போலத் தளிர் மேனி கொண்டு தன்னைத் தழுவி மகிழ்ந்த தாமரையின் இளம் பருவக்காலம் - தன்னை அவள் இதயத்தில் வழிபடு-தெய்வமாகக் கொண்டிருந்த அந்த உணர்ச்சி மிகு நிகழ்ச்சி - குன்றுடையானின் கண்களில் பிரளயத்தையே பொங்கி வழியச் செய்தது.

கொட்டடியில் அடைபட்டுக் கிடக்கிறான் குன்றுடையான் - ஆம், அப்போது குன்றுடையான் அல்ல - நெல்லியங்கோடன் அவன் பெயர் - குன்றுகள் அவனுக்குச் சொந்தமில்லை - அதற்கு மாறாக அந்தக் கொட்டடியில் குன்று போல் கரையான் செல்லுப்பூச்சிகள் குவிந்திருக்கின்றன. அவற்றின் பயங்கரமான படையெடுப்புக்குப் பயந்து கொட்டடியில் உள்ள உத்திரத்தைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறான் - அப்போதும் அந்தப் பூச்சிகளின் கோரத் தாக்குதல் - வேறு வழியில்லை - வேட்டியைக் கிழித்து ஒரு பாதியை உடுத்திக் கொண்டு மற்றொரு பாதியை உத்திரத்தில் கட்டித் தூக்குமாட்டிக் கொண்டு சாக முடிவு செய்கிறான் - அப்போது, ''அத்தான்! என்ன வேலையிது?'' என்று கதறியழுதபடி ஓடி வந்து கட்டிக் கொண்டு அவனை விடுவிக்கிறாள் தாமரைநாச்சியார்!

குன்றுடையான் அந்த நிகழ்ச்சியில் நினைவைப் பதித்தவாறே மனைவியின் முகத்தையும் மாங்கல்யத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

தாமரையின் விருப்பப்படியே திருமணம் நடைபெறுகிறது. குன்றுடையானின் கரம் பிடித்து மணப்பந்தலில் மகிழ்ச்சியுடன் இருக்கும் தாமரையை அவளது தந்தை இழிமொழி கூறி வெளி யேற்றுகின்றார். அண்ணன் சின்னமலைக்கொழுந்து தாமரைக் குப் பதில் சொல்லும்விதத்தில் ஆவேசமாக, ''பெறுவதுதான் பெறுகிறாய், இரண்டு சிங்கக்குட்டிகளாகப் பெற்றுப் போடு! இரண்டையும் கொண்டுவந்து என் வீட்டு வாசலில் நாய் களைப் போல் காவலுக்குக் கட்டிவைக்கிறேன்'' என்கிறான். அதற்குத் தாமரை சிறிதும் கலங்காமல் ''பெறுகிறேன் அண்ணே பெறுகிறேன்! நீயும் இரண்டு பெண்களைப் பெற்றுக்கொண்டு அந்தச் சிங்கங்களைத் தேடிக் கொண்டு வரப்போகிற காட்சியை நான் கண்டு களிக்கத் தான் போகிறேன்'' எனச் சூளுரைக் கிறாள்.

அம்மவோ; அந்த முகம் வீராங்கனையின் முகமன்றோ!

தென்றலாய் - தேன்பாகாய் - தெவிட்டாத அமுதமாய் - திரு விளக்காய் - தியாகச்சுடராய் - வாழ்க்கைத் துணைநலமாய் - வாழ்வின்சோலை - பாலை - இரண்டையும் சமமாகக் கருதி வாழ்ந்த இல்லத்து அரசியாய் - இணைபிரியாது விளங்கிய அந்த மங்கைநல்லாளின் மாங்கல்யத்தைக் குன்றுடையான் முத்த மிட்டான். முத்தமிட்டுக் கொண்டேயிருந்தான்.

பொன்னரும் - சங்கரும் வந்து விட்டார்களா? இந்தக் கேள் வியைத் தாமரை கேட்கவில்லை. ஆனால் மங்கலாகிக்கொண்டிருந்த அவளது விழிகள் அவர்களைத் தேடின. அவர்களிருவரும் இந்தச் சம்பவம் எதுவும் அறியாமல் உறை யூர் அரண்மனையில் உறங்கிக் கொண்டிருந்தனர். முத்தாயி, பவளாயி, அருக்காணி மூவரும் தன்னருகே வர வேண்டுமென்று தாமரை விரும்புவதை அவளது விழிகள் அறிவித்தன. விம்மி யழுதவாறு அந்த மூவரும் தாமரை நாச்சியாரின் கால்களில் தங்களது முகங்களைப் பதித்துக் கொண்டனர்.

தனது கணவனின் தலையை வருடிக் கொண்டே - அதில் ஒரு தனி ஆனந்தம் கண்டு கொண்டிருக்கும் போதே - தாம ரையின் வலது கை, தடார் எனக் கீழே விழுந்தது!

''தாமரை!'' என்று குன்றுடையான் அலறியது அந்த அரண் மனை முழுதும் எதிரொலித்தது.

அந்த அலறலுடன், தாமரையின் நெஞ்சின் மீது கவிழ்ந்து பதிந்த குன்றுடையானின் தலை பிறகு அசையவே இல்லை! ஆமாம்; குன்றுடையானின் உடல் கூட அசையவில்லை!

உறையூர் அரண்மனையில் ஆழ்ந்த உறக்கத்திலிருந்த பொன் னர் - சங்கர் இருவரும் தங்கள் தலையில் உறையூர் அரண் மனையே இடிந்து விழுந்தது போன்ற அதிர்ச்சியுடன்;

அம்மா!

அப்பா!

என்று அலறிக்கொண்டு எழுந்தனர்!

# மனித மிருகமும் மான்குட்டியும்

## 40

வள நாட்டு அரண்மனையும் கோட்டையும் மட்டுமல்ல; வள நாடு முழுமையுமே கண்ணீரில் மிதந்து கொண்டிருந்தது. பொன்னரும் சங்கரும் தங்களின் அருமைப் பெற்றோர்களின் உடல்களின் அருகே வாளின் 'கைப்பிடியை அழுத்திப் பிடித்த வாறு அமர்ந்திருந்தனர். அவர்கள் இருவர் உள்ளிட்ட அனை வரையும் தழுதழுத்த குரலில் ஆறுதல் கூறி அமைதிப்படுத்தும் முயற்சியில் மாயவர் ஈடுபட்டிருந்தார். வீரமலை, தனது மன உறுதி ஒருக்கணம் குலைந்துபோனதால் இவ்வளவு பெரிய விபரீதம் தடுக்கப்பட முடியாமல் போயிற்றேயென்ற வெட்கம் கலந்த வேதனையில் தென்னை மரத்தின் பழுப்பு மட்டையைப் போல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஒரு மூலை யில் சாய்ந்து நின்றான். சோழ மன்னன் அக்கள தேவன் அனுப்பி வைத்திருந்த அமைச்சர்கள் இருவர் சோழ அரசின் சார்பில் குன்றுடையானின் உடலுக்கும், தாமரை நாச்சியாரின் உடலுக்கும் புலிச்சின்னம் பொறித்த பொன்னாடைகளைப் போர்த்தி இறுதி வணக்கம் தெரிவித்தனர்.

பூந்துறை நாடு, காங்கேய நாடு, பொங்கலூர் நாடு, தென் கரை நாடு, ஆறை நாடு, வாரக்க நாடு, திருவாவினன் குடி நாடு, தலைய நாடு, தட்டைய நாடு, பூவாணி நாடு, அரைய நாடு, ஒடுவங்க நாடு, வடகரை நாடு, வாழ வந்தி நாடு, கிழங்கு நாடு, நல்லுருக்கா நாடு, அண்ட நாடு, ஆனைமலை நாடு, வெங்கால நாடு, காவடிக்க நாடு, ராசிபுர நாடு, காஞ் சிக் கோயில் நாடு, குறுப்பு நாடு, மண நாடு, ஆகிய கொங்கு இருபத்தி நான்கு பகுதிகளில் இருந்தும், ஆயிரக்கணக்கான மக்கள் வகுப்பு வேறுபாடின்றி வள நாட்டில் வந்து குழுமினர்.

குன்றுடையானின் வெள்ளை உள்ளத்தைப் பற்றி அந்த மக்கள் கும்பல் கும்பலாகக் கூடி நின்று புகழ்ந்துரைத்தனர். எரிமலைக் குழம்பு போன்ற இன்னல்கள் சூழ்ந்த போதும்; ஏதோ அருவியில் குளிப்பது போன்ற உணர்வுடன் கணவ

னின் அருகிருந்து வாழ்ந்து முடித்த தாமரை நாச்சியாரின் கற்பின் சிறப்பையும் - பண்பாட்டுப் பெருமையையும் ஏற்றிப் போற்றாதார் எவருமேயில்லை.

தக்காரா? தகவிலரா? என்பது அவரவர் எச்சத்தாற் காணப் படும் என்பதற்கேற்ப வள நாட்டு மாந்தரும் - துக்கம் கேட்ப தற்குப் பெருந்திரளாய்க் கூடிய கொங்குச் சீமையின் பல பகுதிப் பெரு மக்களும் வெள்ளமாய்ப் பரவிட அந்த வெள் ளத்தின் மீது நீந்தும் படகு போல குன்றுடையானையும் தாமரை நாச்சியாரையும் சுமந்து கொண்டு இறுதி ஊர்வல ரதம் சென்றது.

இறுதிச் சடங்குகள் முடிவுற்று மக்கள் வெள்ளம் வற்றிய தைத் தொடர்ந்து வள நாட்டுக் கோட்டைக்குள் ஆழமான அமைதி!

கோட்டை அரண்மனையின் உள்மண்டபத்தில் எதிர் காலத் தைப் பற்றிய தீவிர சிந்தனையுடையவராக மாயவர் தனது தாடியைத் தடவிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பொன்னர், சோகமே உருவாகக் காட்சியளித்ததும் - அண்ணன் வாயிலி ருந்து என்ன ஆணை பிறக்குமென எதிர் பார்த்தவாறு சங்கர், வாளின் உறையை விரல்களால் மெல்லத் தட்டிக் கொண்டி ருந்ததும் - வீரமலை தனது கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு; தான் செய்துவிட்ட தவறுக்கு எப்படிப் பிராயச் சித்தம் செய்து கொள்வது என்பது போலக் கவலைக்குறி காட்டியதும் ஏதோ ஒரு முடிவெடுக்க வேண்டிய அவசியத்தில் அவர்கள் இருக்கிறார்கள் என்பதைத் தெளிவாக்கின.

முத்தாயி, பவளாயி இருவரும் அந்த மண்டபத்தின் ஒரு பகுதியில் தொங்கிக் கொண்டிருந்த திரைச்சீலையின் மறைவில் அமர்ந்து கண்கள் கலங்கிட என்ன முடிவு எடுக்கப்பட இருக் கிறது என்பதை ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தனர்.

அப்போது அனைவரையும் வியப்பில் ஆழ்த்தும் வகையில் அங்கே அருக்காணித் தங்கம் திடீரெனத் தோன்றினாள். அவள் அங்கு வந்தது பற்றி யாருக்கும் ஆச்சரியமில்லை. ஆனால் அவள் வந்து நின்ற தோற்றம்தான் அங்கு பெருங் குழப்பத்தை ஏற்படுத்தி விட்டது. ஒரு போர் வீரனுக்குரிய உடை! கையில் வாள்! கண்களில் கனல்!

''அருக்காணீ!'' என்று ஒரே சமயத்தில் பொன்னரும் சங்க ரும் அலறிவிட்டார்கள்! திரை மறைவில் இருந்த முத்தாயி பவளாயி இருவரும் திகைத்துப் போய் வெளி வந்தனர்.

''அண்ணா! அண்ணா!'' என்றழைத்தவாறு அருக்காணி தங்கம், பொன்னர் சங்கர் இருவரிடமும் நெருங்கினாள். தங்கை ஏன் இந்தக் கோலம் கொண்டாள் என்று கேட்டுத் தெரிந்து கொள்வதற்கு முன்னரே; அவளே விடையளிக்கத் தொடங்கி விட்டாள்.

''தாயையும் தந்தையையும் இழந்து விட்டோம் - பெரும் இழப்புத்தான்! அவர்களுக்காக அழுது புலம்பிவிட்டோம் - நம் ஆயுள் முடியும் வரையில் அவர்களின் நினைவு நமது நெஞ்சில் நிறைந்திருக்கும் - அவர்களின் பொன்னுடலை மண்ணில் கலந்து விட்டோம் - அவர்களை இவ்வளவு விரைவில் நம்மிடமிருந்து பிரிப்பதற்குக் காரணமான பகைவர்களைப் பழிவாங்க வேண்டும் - அது பெரிய விவகாரம்! அதைப்பற்றி நீங்கள் மந்திராலோசனை நடத்துங்கள்! பகைவர்களைப்பழி வாங்கி விடுவதால் நாம் இழந்து விட்ட தாய் தந்தையை நாம் திரும்பப் பெற்று விடப் போவதில்லை! ஆனால், நாம் திரும்பப் பெற்றுத் தீர வேண்டிய ஒன்றை மறந்து விட்டோமே! நாம் என்று என்னையும் சேர்த்துச் சொல்வது தவறு! திருத்திக் கொள்கிறேன்! நீங்கள் மறந்து விட்டீர்கள்! நான் மறக்கவில்லை. மறக்க மாட்டேன். என் பாசமுள்ள தோழி குப்பாயியை நான் மறக்க மாட்டேன். அண்ணா! எனக்கு அனுமதி கொடுங்கள்! அவளை மீட்டு வரப் புறப்பட்டுவிட்டேன்! எனக்குத் துணையாக சில வீரர்களை மட்டும் அனுப்பினால் போதும் - குப்பாயியை மீட்கும் முயற்சியில் வெற்றி பெற்றால் மட்டுமே திரும்பி வருவேன் - இல்லையேல் அந்த முயற்சியில் செத்து மடிவேன்! அனுமதி கொடுங்கள்!''

ஆருயிர்த் தோழி, குப்பாயிக்காக அருக்காணித் தங்கம் வாளேந்தி எழுந்துள்ளது கண்டு, அவர்களது நட்பின் சிறப்பை மனதுக்குள் பாராட்டினாலும் கூட; அந்த முயற்சியில் அருக்காணியினால் வெற்றி பெற இயலாது என்பதை பொன்னரும் சங்கரும் உணராமல் இல்லை. வெற்றி தோல்வியைப் பற்றிக் கவலைப்படாமல் எதிரியை சந்திக்க வாள் பிடித்து நிற்கும் அருக்காணி; தங்களின் தங்கை என்பதை நிரூபித்து விட்டாள் என்பதிலே அண்ணன்மார்களுக்கு ஒரு பெருமிதம்!

பொன்னர் அருக்காணியின் கன்னத்தில் அன்புடன் தட்டிக் கொடுத்து; ''தங்கம்! உன் தோழி குப்பாயியை நாங்கள் மறந்து விடவில்லை! அவளை விடுவித்து வருவதற்கு சங்கரை அனுப்புவது பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறோம். அதற்குள் நீ அவசரப்பட்டு விட்டாய்!'' என்றான்.

சங்கரும், அருக்காணியிடமிருந்த வாளைத் தன் கையிலே வாங்கிக் கொண்டு ''அருக்காணி! நீ ஓங்கியவாள் - என் கையிலே இருக்கட்டும்! நீ எந்த வாளை எடுத்தாயோ; அதே வாள் கொண்டு குப்பாயியை மீட்டு வருகிறேன்'' என்று வீரக் குரல் எழுப்பினான்.

அண்ணன்மார்களின் பேச்சை ஒரு வேளை அருக்காணி தங்கம்; அவள் தோழியின் மீது கொண்டுள்ள அன்பின் காரண மாக மறுத்து விடுவாளோ என்று அஞ்சிய முத்தாயி பவளாயி இருவரும் விரைந்து வந்து அருக்காணியைத் தழுவிக் கொண்டு - கண்ணீர் பெருக்கினர்!

சங்கர்; பவளாயியைப் பார்த்து - ''உம் அருக்காணியைப் பத்திரமாகக் கவனித்துக் கொள்!'' என்று கூறிவிட்டு, தங்கை யிடமிருந்து பெற்ற வாளை நிமிர்த்திப் பிடித்தபடி அண்ணன் பொன்னரையும், மாயவரையும் வீரமலையையும் பார்த்து, விழி களாலேயே விடை பெற்றுக் கொண்டு இரை தேடும் வேங்கை, குகை விட்டுக் கிளம்புவது போல அந்த மண்டபத்திலிருந்து கிளம்பினான். அண்ணன் சங்கர் அடலேறு நடை போட்டுப் போவது கண்டு அருக்காணியின் நெஞ்சில் ஆறுதல் உணர்வு ஊற்றெடுத்தது எனினும்; அவளையுமறியாமல் ''குப்பாயி'' எனக் குமுறிக் கதறி விட்டாள்.

★ ★ ★ ★ ★

குப்பாயியைக் குதிரை மீதமர்த்தி, அவளை அப்புறம் இப் புறம் அசைய வொட்டாமல் அந்த இருளில் கடத்திச் சென்ற பராக்கிரமன் - வடிவழகி வரும் ரதத்தை எதிர்பார்த்து வீரப் பூர் காட்டில் ரகசிய மண்டபம் ஒன்றில் காத்திருந்தான். ஏற் கனவே வடிவழகிக்கு அடையாளம் காட்டப்பட்ட பாதை! அடையாளம் காட்டப்பட்ட ரகசிய மண்டபம்! மண்டபத்தில் அடைக்கப்பட்ட குப்பாயி, தன்னை - பராக்கிரமனிடம் அருக் காணி தங்கம் என்றே அடித்துச் சொன்னாள்! பராக்கிரமனுக் குப் பாதி சந்தேகம் - பாதி நம்பிக்கை! இருவரும் ஏறத்தாழ ஒரே வயது - கிட்டத்தட்ட ஒரே முகபாவம் - இருவர் அணி வதும் ஒரே மாதிரி உடை - தாமரை நாச்சியாரின் படுக்கை யறையில் அவளுக்கருகே படுத்துறங்குவது என்றால்; அது அருக்காணியாகத்தானே இருக்க வேண்டும்! ஆகையால், தலை யூர் மன்னன் அனுபவிக்கப் போகும் அவளை, பராக்கிரமன் மிக்க மரியாதையுடன் நடத்தினான். அவள்தான் அந்த மரியா தையை ஏற்றுக்கொள்ளவில்லை. ஒரு மனிதமிருகத்திடமிருந்து

கிடைக்கும் மரியாதையும் கௌரவமும் - அதனைக் கொடுப்ப வரைக் காட்டிலும், ஏற்றுக் கொள்பவருக்குத்தான் மிகக் கேவலம் என்பதை அவள் புரிந்து கொண்டிருந்தாள்.

அவளை, மண்டபத்துக்குள்ளேயுள்ள வசதியும் ஆடம்பரமும் நிறைந்த அறையொன்றில் அடைத்துப் பூட்டி விட்டு - பராக்கிரமன், மண்டபத்து வாயிற்புறம் வந்து; வடிவழகியின் ரதம் வருகிறதா என்று எதிர்பார்த்துக் கொண்டு நின்றான்.

மண்டபத்தைச் சுற்றியுள்ள வீரப்பூர் காட்டில் மரங்கள் காற்றில் அசையும் ஒலியும் - தொலைவில் கேட்கும் நரிகளின் ஊளையும் - அந்த ஊளைச்சப்தம் கேட்டு, மரக்கிளைகளில் அமர்ந்து தூங்கிக் கொண்டிருந்த பல்வேறு வகைப் பறவைகள் சிறகடிக்கும் ஓசையும் - காட்டின் இரவு நேர அமைதியைக் கிழித்துக் கொண்டிருந்தன.

கண் வலியெடுக்க வடிவழகியின் ரதத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்த பராக்கிரமன் காதுகளில் குதிரைகள் வரும் குளம்படிச் சப்தம் கேட்டது. அந்தச் சப்தம் வெகு விரைவில் மண்டபத்தின் அருகே வந்து விட்டது. பாதுகாப்புக்காக சோழ நாட்டு வீரர்களைப் போல உடையணிந்து வந்த, தலையூர்க் குதிரை வீரர்கள் புடை சூழ புலிக்கொடி பறக்கும் வடிவழகியின் ரதம் மண்டபத்து வாசலில் வந்து நின்றது!

பராக்கிரமன் ஏகடியமாகச் சிரித்துக் கொண்டே, வடிவழகிக்குக் கை கொடுத்து ரதத்திலிருந்து அவளைக் கீழே இறக்கி விட்டு; ''உறையூர் இளவரசியாரே! வருக! வருக!!'' என்றான்.

அவளும் தனது மார்பகம் பராக்கிரமனின் முதுகில் அழுந்திட அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''ஆமாம்! போங்கள்!'' என்று கூறிக் கலகலவெனச் சிரித்தாள். அந்தக் காட்சியை; இருளை விரட்ட முயற்சிக்கும் மங்கலான தீப்பந்த வெளிச்சத்தில் பார்த்த தலையூர் வீரர்கள், வேறு பக்கம் திரும்பிக் கொள்வது போலப் பாவனை செய்து கடைக்கண்ணால் கண்டு களித்துப் பெருமூச்சு விட்டனர். தாங்க முடியாதவர்கள் சிலர் குதிரை மேலிருந்த தங்கள் கால்களை அவற்றின் உடலின் இருபுறமும் அழுத்தினர். சிலர் உதட்டைக் கடித்துக் கொண்டனர்.

பராக்கிரமனும் வடிவழகியும் மண்டபத்துக்குள் ஒருவரையொருவர் தழுவியவாறே நுழைந்தனர்.

''எப்படியிருக்கிறாள் அருக்காணித் தங்கம்?'' என்று வடிவழகி, பராக்கிரமனின் பாறை போன்ற கன்னத்தில் அழுந்த ஒரு முத்தம் கொடுத்துக் கொண்டே கேட்டாள்.

பராக்கிரமனோ அந்த முத்தச் சுவையில் மயங்கி அவளை அப்படியே இடுப்பின் பக்கமும், மார்பகப் பக்கமும் கை கொடுத்துத் தூக்கித் தன் மடியில் கிடத்தியவாறு, அங்கிருந்த ஒரு பளிங்கு மேடையில் அமர்ந்தான்.

''அருக்காணி எப்படியிருக்கிறாள் என்றா கேட்கிறாய்? கடைந்தெடுத்த சிலை போல இருக்கிறாள். கசங்காத மலராக இருக்கிறாள். இனிமை - இளமை - புதுமை மூன்றும் நிறைந்த புதையலாக இருக்கிறாள். சுருக்கமாகச் சொன்னால்; நீ மாங்கனி! அவள் மாவடு! சிறு பிராயத்தில் மாவடுக்களை மரத்திலேறிப் பறித்து சாப்பிட்டிருக்கிறேன். அதில் கொஞ்சம் உப்பும் கலந்து சாப்பிட்டால் அடடா; என்ன ருசி! என்ன ருசி!''

''நான் அருக்காணியின் கட்டழகைப் பற்றிக் கதையளக்கச் சொல்லவில்லை! கடத்திக் கொண்டு வந்திருக்கிறோமே; கலங்கிப் போயிருக்கிறாளா? கண்கள் வீங்க அழுது கொண்டிருக்கிறாளா?'' என்றுதான் கேட்டேன்

''ஓ! அதைக் கேட்கிறாயா? வேடனிடம் பிடிபட்ட மான்குட்டி போல திருதிருவென விழித்துக் கொண்டிருக்கிறாள். சின்னஞ் சிறுசுதானே - உன்னைப் போலவா? எத்தனை பேர் தொட்டுத் தூக்கினாலும் இன்னும் பத்து பேர் தொட்டுத் தூக்க மாட்டார்களா என்று ஏங்குவாய் நீ!''

''அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு இந்தப் பண்பெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் உங்களைப் போன்ற ஆண்களுக்குப் பெண்களால் ஈடுகொடுக்க முடியுமா?''

பராக்கிரமன் வெறியோடு தனது உதடுகளை அவளது இதழ்களில் பதித்து - அவள், ''ஹா! வலிக்குது'' என்று வீறிட்டுத் துடிக்கிற அளவுக்கு முத்தமொன்று கொடுத்தான். பின்னர், அவளை அணைத்தவாறு அழைத்துக் கொண்டு ''வா, வடிவழகி - அருக்காணியைப் பார்க்கலாம்! அவளை நீயே மெதுவாக வழிக்குக் கொண்டு வா! உன்னாலும் முடியாவிட்டால் அவளை ரதத்தில் கட்டிப் போட்டு - தலையூர் அரண்மனைக்குக் கொண்டு போக வேண்டியதுதான்!'' என்று சற்று மிரட்டுகிற குரலில் கூறியவாறு குப்பாயி இருக்கும் அறைக்கதவைத்

திறந்து உள்ளே நுழைந்தான். வடிவழகியும் அவனைப் பின் தொடர்ந்து அறைக்குள் வந்தாள்.

குப்பாயி; அந்த அறையின் ஒரு மூலையில் தலை கவிழ்ந்த நிலையில் சுவரின் பக்கம் திரும்பிக் கொண்டு சுருண்டு படுத் திருந்தாள்.

''இதோ பாரம்மா அருக்காணி; உறையூர் இளவரசி வந் திருக்கிறார்கள்'' என்றான் பராக்கிரமன்! அந்த வாசகம் காதில் விழுந்தவுடன், குப்பாயி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து நின்றாள். அவளைப் பார்த்ததும் வடிவழகி திகைத்துப் போனாள்.

'யார்? யார்?' என்று வடிவழகியின் உதடுகள் முணுமுணுத்தன!

பின்னர் அவளே சென்று அந்த அறையின் சுவரில் சொரு கப்பட்டு எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தை எடுத்து, குப் பாயியின் முகத்துக்கு நேரே பிடித்துக் கொண்டு அவளை உற்றுப் பார்த்தாள்.

குப்பாயி இப்போது வெற்றிக்களிப்பில் பயங்கரமாகச் சிரித் தாள்! 'ஏமாந்து விட்டீர்களா எத்தர்களே' என்று கேட்டுக் கேலிச் சிரிப்பு சிரித்தாள்!

''இவள் அருககாணித் தங்கமல்ல! குப்பாயி! குப்பாயி!'' என்று வடிவழகி கத்தினாள்! பராக்கிரமன் அசைவற்றுப் போனான். அவனால் எதுவும் பேச முடியவில்லை. அவன் ஏமாந்து போய் அருக்காணிக்குப் பதிலாகக் குப்பாயியைக் கொண்டு வந்து விட்ட முட்டாள் தனத்தை எண்ணி வெட்கப் படுவதற்கு பதிலாகக் கோபப்பட்டான். தன்னை, ஒரு சாதா ரணப் பெண் - இந்தக் குப்பாயி ஏமாளியாக்கி விட்டாளே யென்று கொதித்தான்!

வடிவழகியைப் பரபரவென இழுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

வடிவழகி அஞ்சி நடுங்கினாள். அவளைப் பார்த்து பராக் கிரமன் ''பயப்படாதே!'' என்று கூறி மீண்டும் ஒரு முறை உடல்கள் அழுத்திடத் தழுவிக் கொண்டான். பராக்கிரமனின் போக்கு, வடிவழகிக்கு ஒன்றுமே புரியவில்லை.

•

''வடிவழகி! நான் ஏமாற்றப்பட்டதிலும் ஒரு ஆதாயம் உண்டு! இவளை அருக்காணி என்று நம்பியதால் - இவள்; தலையூர் மன்னருக்கு உரியவளாயிற்றே என்று தயங்கினேன்! இவள் கொள்ளையழகை, தலையூர் மன்னன் அனுபவிக்கப் போகிறானேயென்றெண்ணி ஏங்கினேன்! இப்போது எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை! இதே மண்டபத்தில் - இன்றிரவே - இவளை எனது விருந்தாக ஆக்கிக் கொள்ளப் போகிறேன்! மிச்சமிருக்கும் இரவுப் பொழுது முழுதும் இவளை அனுப விப்பேன்! பிறகு இவள் எச்சிற் பண்டம்!'' என்று கூறிய பராக்கிரமன், வடிவழகிக்கு இன்னுமொரு முத்தம் கொடுத்து விட்டு - குப்பாயி இருந்த அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டான்.

''வராதே! வந்தால் உன் உயிர் உனக்கில்லை!'' என்று உறுமிக்கொண்டே குப்பாயி, அந்த அறையின் சுவரில் மாட் டப்பட்டிருந்த ஒரு குத்துவாளைக் கையில் எடுத்துக் கொண் டாள்.

''பெண்ணே! மலையை உளியால் பிளக்க முடியாதடி! வெடி கொண்டு கூடப் பிளக்க முடியாத பர்வதமடி இந்தப் பராக்கிரமன்! தலையூர் மன்னரின் மஞ்சத்தை அலங்கரிக்க ஒரு பஞ்ச வர்ணக் கிளியைப் பிடிக்க வந்தோம்! பச்சைக் கிளி நீ அகப்பட்டுக் கொண்டாய்! இருந்தாலும் என் இச்சைக் குகந்த கிளி! இங்கிருந்து தப்ப முடியாது நீ! பிணமாகலாம்; ஏன் தொல்லை? மணமாகாத உன்னை நீ மனம் வைத்தால் நான் மணக்கவும் தயார்! இணங்கி விடு கண்ணே - இரவு வீணாகிறது!''

பராக்கிரமன், அவளை நெருங்கினான். குப்பாயி, தன் கையிலிருந்த குத்துவாளை ஓங்கி அவன் நெஞ்சில் குத்தினாள். அவன் அதைத் தடுத்துக் கொண்டு, அவள் கையை முறுக்கிக் குத்துவாளைக் கீழே வீழ்த்தினான். அவளையும் இறுக அணைத் துக் கொண்டான். அவளோ, தன்னைக் கட்டிப் பிடித்த கையைப் பலங்கொண்ட மட்டும் பல்லால் கடித்து அவனிட மிருந்து விடுபட்டாள். பராக்கிரமன் ரத்தம் கசியும் தனது கையை ஒருமுறை பார்த்துக் கொண்டான். காமவெறியில் அவனுக்கு அந்த வலி ஒரு பொருட்டாகத் தெரியவில்லை.

அறைக்குள் அவள் எங்கே ஓடி தப்பித்துக் கொள்ள முடி யும்? முட்டிக் கொண்டாள்! மோதிக் கொண்டாள்! அவளது ஆடையை இழுத்து அவளை அலங்கோலமாக்கினான். அந்த

அலங்கோலக் காட்சி அவன் இதயத்தில் எரியும் காமத்தீக்கு எண்ணெய் ஊற்றியது போலாயிற்று!

அவளை அப்படியே வாரித் தூக்கி, ஒரு மலர்ச்செண்டை வீசுவது போல் படுக்கையில் வீசினான்.

அப்போது அறைக்கு வெளியே மண்டபத்திற்குள் ஏதேதோ வித்தியாசமான ஒலிகள்!

மஞ்சத்தில் வீசப்பட்ட குப்பாயி மீது பராக்கிரமன் தாவினான்.

படார் என்ற பயங்கர ஓசையுடன் அறையின் கதவுகள் தூள் தூளாகச் சிதறி விழுந்தன!

பராக்கிரமன், வெறியுணர்வுடன் திரும்பிப் பார்த்தான்!

வேலொன்று பராக்கிரமனின் நெஞ்சைப் பிளந்து கொண்டு, முதுகுப் புறம் எட்டிப் பார்த்து நின்றது!

பராக்கிரமன் தள்ளாடினான்! தடுமாறினான்! வேல் வீசியது யார் என்று பராக்கிரமனின் ஒளி மங்கிக் கொண்டிருந்த விழிகள் உற்றுப் பார்த்தன!

உற்றுப் பார்த்தவன் அதிர்ச்சிக்கு ஆளானான்!

''அரசே! நீங்களா?'' என்று பராக்கிரமன் அலறினான்! கதறினான்!

''ஆமாம்; நானேதான்!'' என்று கூறிக் கொண்டு தலையூர்க் காளி மன்னன் தனது முக்காட்டை விலக்கிக் கொண்டு நின்றான்.

# ஆளை மயக்கிப் பாறை!

## 41

ஒற்றன் பணி ஒழுங்காக நடைபெறுகிறதா? என்று பார்ப்பதற்கு அவனுக்குத் தெரியாமல் இன்னொரு ஒற்றனை அனுப்பிவைப்பது ராஜதந்திரங்களில் ஒன்று என்பதை நான் படித்திருக்கிற காரணத்தால்தான் - எனக்குத் தலைமைத் தளபதியாகவும் அந்த ரங்க ஒற்றனாகவும் உள்ள உன்னையும் கண்காணிக்க மற்றொரு ஒற்றனை அனுப்பியிருந்தேன். உன்னை முழுமையாக நான் நம்பியிருக்க வேண்டும். நம்பியிருக்க முடியும். ஆனால், உனது சமீபகால நடவடிக்கைகள் - நீ நடத்தும் கேளிக்கைகள் பற்றியெல்லாம் கேள்விப்பட்ட போது; கடமையென்பது உன்னைப் பொறுத்தவரையில் இரண்டாவது மூன்றாவது இடத்தைத் தாண்டி, கடைசி இடத்திற்கே போய் விட்டது என்பதை உணர முடிந்தது. அதனால்தான் வளநாட்டு அரண்மனைக்குச் சென்ற உன்னை எனது முக்கிய ஒற்றன் ஒருவன் பின்தொடர்ந்தான். போகும் போதே நீயும் உன் ஆசைநாயகியும் இங்கே வீரப்பூர் காட்டுக்கு விஜயம் செய்து விட்டு, இந்த மண்டபத்திலும் தங்கிப் போயிருக்கிறீர்கள். அருக்காணியைக் கடத்தி வந்து இந்த மண்டபத்திலே தங்க வைத்து, அவளிடம் இருக்கும் மரகதப் பச்சை மாணிக்கக்கிளி பற்றிய ரகசியத்தைப் பெற்று அந்த விலை மதிப்பில்லா கிளியை நீங்களிருவரும் திருடிக் கொள்வது என்று திட்டம் தீட்டினீர்கள். உங்கள் தீய திட்டத்தைத் தெரிந்து கொண்ட ஒற்றன் உடனடியாக எனக்குத் தகவல் தந்து விட்டான். கையும் களவுமாக உன்னைப் பிடிக்க வேண்டுமென்றுதான் வீரப்பூர் காட்டில் மாறு வேடத்தில் நான் ஒளிந்திருந்தேன். அற்பனே, அழைத்து வரப்பட்டவள் அருக்காணி அல்ல என்று தெரிந்ததும் - உன் திட்டம் தூளாயிற்றே யென்று கூட நீ கவலைப்படவில்லை! தித்திப்புப் பண்டம் ஒன்று கிடைத்ததேயென்று அதைத் தின்பதற்குவாயைப் பிளந்து கொண்டு கிளம்பி விட்டாய்! அருக்காணியைக் கடத்த முடியாமல் இடையில் இவள் குறுக்கிட்டு விட்டாளேயென்ற ஏமாற்றத்தில் இவளை நீ குத்திக் கொலை செய்திருந்தால் கூட நான் உன்னை மன்னித்திருப்பேன். எனக்காக ஒருத்தியைக் கடத்தப்

போனாய் - வேறொருத்தி கிடைத்தாள் - அவளும் எனக்குச் சேர வேண்டியவள்தான் என்று கூட நினைத்துப் பார்க்காமல்; அவள் கற்பையே சூறையாடத் துணிந்த உனக்கு இதைவிட நான் வேறு என்ன தண்டனை அளிக்க முடியும்?''

அக்கினியில் போட்டெடுத்த வார்த்தைகளைக் கொண்டு, தலையூர்க்காளி - தனது செயலுக்கு விளக்கமளித்ததைக் கேட்ட வாறு; கண்களிலே ஒளி மங்கிடும் நிலையில் பராக்கிரமன் சாவின் கரங்களில் மெல்லச் சாய்ந்து கொண்டிருந்தான்.

அவனது மங்கிய பார்வை அந்த அறைக்கு வெளியே உள்ள தாழ்வாரத்தில் விழுந்தபோது; தலையூர்வீரர்கள் சூழ விலங் கிடப்பட்டு வடிவழகி தலைகுனிந்து நிற்பதைப் பராக்கிரம னால் காண முடிந்தது.

அவனுடைய முடிவுக்காக அழவேண்டிய சமயத்தில் அவளுக் காக அவனால் அழ முடியுமா?

''அரசே! அந்த மரகதப் பச்சை மாணிக்கக் கிளியை நான் திருடிக் கொள்ள திட்டமிட்டதாக ஒற்றன் உங்களிடம் உரைத் திருந்தால் அது பொய்!''

பராக்கிரமன் தள்ளாடியபடியே - நொறுங்கிப் போன இந்த வாசகத்தைத் தணிந்த குரலில் தலையூர் மன்னனுக்கு முன்னே உதிர்த்தான்.

''தலையூர் காளியம்மன் மீது சத்தியமாகச் சொல்! சாகும் தருவாயிலாவது உன்னை நம்பியிருந்த என்னிடம் உண்மை யைச் சொன்னால், உன் ஆத்மாவுக்கும் சிறிது அமைதி கிடைக் கும்! எங்கே சத்தியமாகச் சொல்!'' என்று உரத்த குரலெடுத் துக் கேட்டான் மன்னன். பராக்கிரமன் மேலும் மேலும் பூமி யில் சாய்ந்து கொண்டிருந்தவன்; விழுந்தே விட்டான்.

என்ன இருந்தாலும் தன்னிடம் பணியாற்றிய தளபதியல் லவா? ஏதோ ஒரு சபலம் அவனையுமறியாமல் அவனை ராஜத் துரோகியாக நினைக்கிற அளவுக்கு ஆக்கி விட்டாலும் - செத்துக்கொண்டிருக்கிறவனை அலட்சியப்படுத்தி விட முடியவில்லை தலையூர் மன்னனுக்கு! அதனால் அவசரமாகப் பாய்ந்து, தரையில் விழுந்த பராக்கிரமனின் தலையைத் தூக் கித் தனது மடியில் வைத்துக்கொண்டான். காட்டாற்று வெள் ளத்தில் மிதந்து வரும் மலர்களைப் போல தலையூர்க் காளி

யின் உள்ளத்திலும் இப்படிச் சில நேரங்களில் கருணையும் இரக்கமும் சுரப்பதுண்டு. தனது மன்னனின் மடியில் தன் தலையிருப்பதை ஒரு பாக்கியமாகக் கருதிக் கொண்ட பராக் கிரமன்; தான் செய்த தவறுக்கு மன்னன் கொடுத்த தண்டனை மிக அதிகம் என்பதைத் தனது கண்ணீர் அருவியின் வாயிலாக வெளிப்படுத்தினான்.

''அரசே!'' என்றான். நா அசைய மறுத்தது. அரசன், பராக் கிரமனின் விழிநீரைத் தனது கரங் கொண்டு துடைத்து விட் டான். மெத்த சிரமத்துடன் பராக்கிரமன் மீண்டும் பேச முயற் சித்தான்...

''அரசே! அந்தக் கிளியிருக்கும் இடத்தைப் பற்றிய ரகசியம் அருக்காணியிடமிருந்து கிடைத்தால் அதை நானே தேடியெடுத் துத் தங்களிடம் கொண்டு வந்து ''— அத்துடன் பேச்சு நின் றது! மூச்சும் அடங்கியது! அதிகப்படியான தண்டனை தான் கொடுத்து விட்டோமோ என்ற சஞ்சலத்துடன் தனது தளபதி யின் முகத்தையே காளி மன்னன் உற்றுப்பார்த்துக் கொண் டிருந்தான்.

வடிவழகியைக் கைது செய்து அவளைச் சூழ்ந்து நின்ற வீரர்களைத் தவிர மற்ற வீரர்கள் அனைவரும் பராக்கிரமனின் உடலை சூழ்ந்து வந்து நின்று, தங்களின் தளபதிக்கு வீர வணக்கம் செலுத்தினர். அந்த வீரர் கூட்டத்திலிருந்த துணைத் தளபதிகளில் ஒருவனிடம் தலையூர் மன்னன்; பராக்கிரமனின் உடலை சகல மரியாதைகளுடன் வீரப்பூர் காட்டிலேயே அடக் கம் செய்து விடுமாறு ஆணையிட்டான். பின்னர் தாழ்வாரத் திற்கு வந்து வடிவழகியை இழுத்துச் சென்று அவளது வீட்டி லேயே விட்டுவிடுமாறு பணித்தான். அப்போது வடிவழகி கதறியழுது கொண்டே ஓடிவந்து, காளிமன்னனின் கால் களைப் பிடித்துக் கொண்டு, ''பிரபு! எனக்கு ஒன்றுமே தெரி யாது! எல்லாம் தளபதியாரின் சொற்படிதான் நடந்தேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்று கெஞ்சினாள்.

''உன்னை மன்னித்திருப்பதால்தான் உன் வீட்டில் கொண்டு போய் விடச் சொல்கிறேன்'' என்று அவளிடம் கூறிய காளி மன்னன்; உள்ளே அறைப்பக்கம் திரும்பிப் பார்த்து, ''அந்தப் பெண் எங்கே?'' என்று கேட்டான். உடனே வீரர்கள் ஆளுக் கொரு பக்கம் அந்த அறைக்குள்ளும் மண்டபத்திற்குள்ளும் ஓடிப்போய் குப்பாயியைத் தேடினார்கள். அந்த மண்டபத்தில் ஏற்பட்ட பரபரப்பைப் பயன்படுத்திக் கொண்டு குப்பாயி,

அப்போதே அங்கிருந்து தப்பியோடி விட்டாள் என்பதைப் புரிந்து கொண்ட காளிமன்னன்; சில வீரர்களை அனுப்பி அவள் என்ன ஆனாள் என்பதைப் பார்த்து வருமாறு கட்டளை பிறப்பித்தான். தனது ஆணைப்படி அனைத்தும் நடக்கட்டும் என உறுமி விட்டு, மண்டபத்து வாசலில் தனக்கெனக் கொண்டு வரப்பட்டிருந்த ரதத்திலேறி, தலையூருக்குப் புறப்பட்டான் காளி!

அந்த இருளில் குப்பாயி, காட்டுப் பாதையில் கண்மண் தெரியாமல் ஓடிக்கொண்டிருந்தாள். காளி மன்னன் உத்திரவுப்படி தலையூர் வீரர்கள் நாலாபக்கமும் அவளைத் தேடி ஓடிக்கொண்டிருந்தனர். தன்னைப் பின் தொடர்ந்து தலையூர் வீரர்கள் வருவதைத் தெரிந்து கொண்ட குப்பாயி, அவர்கள் கையில் சிக்கிக் கொள்ளாமல் இருக்கவும் - தனது கற்பைக் காப்பாற்றிக் கொள்ளவும் - அடர்ந்த புதர் ஒன்றில் நுழைந்து தன்னை மறைத்துக் கொண்டாள். அந்தப் புதரின் அருகாமையிலேயே மூன்று நான்கு தலையூர் வீரர்கள் வந்து நின்று பேசுவது அவள் காதில் விழுந்தது.

''ஏதாவது ஒரு புதரில் ஒளிந்திருப்பாளா?''

எத்தனை பெரிய புதர் இருக்கிறது.

இதில் எந்தப் புதர் என்று நாம் தேடிப்பார்ப்பது?''

''ஒரு வேலை செய்யலாம் - காய்ந்து கிடக்கும் சருகுகளையெல்லாம் குவித்துக் கொளுத்தி விடலாம். எந்தப் புதரில் ஒளிந்திருந்தாலும் அவள் வெளியே வரத்தானே வேண்டும்!''

''சே! சே! வேண்டாம் - வேண்டாம்! ஒரு வேளை அவள் வெளியே வராமல் புதருக்குள்ளேயே இருந்து, நெருப்பில் பொசுங்கிப் போய் விட்டால், பிறகு மன்னருக்கு யார் பதில் சொல்வது?''

புதர்களுக்குத் தீ மூட்டும் திட்டம் கைவிடப்பட்டதும்; ஒரு வீரன் ஏதோ யோசித்து விட்டு மற்ற வீரர்கள் காதில் ரகசியமாகக் கிசுகிசுத்தான். அவன் சொன்னதை ஒப்புக் கொள்வது போல மற்ற வீரர்கள் தலையசைத்தார்கள். உடனே அந்த வீரன் உரத்த தொனியில் பேசினான்...

''பாவம் அந்தப் பெண் எந்தப் புதருக்குள் ஒளிந்து கிடக்கி றாளோ? எல்லாப் புதரிலும் விஷப் பாம்புகள் நிறைய இருக் கின்றன!'' இப்படிச்சொன்னால், குப்பாயி பயந்து கொண்டு ஓடி வருவாள் - அப்போது பிடித்துக் கொள்ளலாம் என்பது அவர்கள் திட்டம்!

ஆனால் அஞ்சி நடுங்கி அவள் வெளியே ஓடுவதற்குப் பதிலாக - ஒரு வேளை பாம்புகள் வந்தால் அவற்றை அடிக்க ஏதாவது கம்பு கிடைக்குமா என்று புதருக்குள்ளேயே உற்று உற்றுப் பார்த்தாள். அந்த இருட்டில் ஒரு நீண்டு வளைந்த கம்பு கிடப்பது அவள் கண்ணுக்குத் தெரிந்தது. அதை மெது வாக எடுத்தாள். எடுத்த கம்பு அவள் கைகளில் வழவழ வென்று நெளிந்து வளைந்தது. அவளுக்குப் புரிந்து விட்டது; அவள் கம்பு என்று எடுத்தது ஒரு பாம்பு என்பது!

அலறியடித்து அதைக் கீழே எறிந்தால் இரண்டு ஆபத்து! எறிந்த வேகத்தில் கோபங் கொண்ட பாம்பு சீறிக் கடிக்கும்! அலறல் சப்தம் கேட்டால் புதரின் அருகே நிற்கும் தலையூர் வீரர்களிடம் மாட்டிக் கொள்ள வேண்டும். அதனால் அவள் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, அந்தப் பாம்பைத் தொந் தரவு செய்யாமல் மெதுவாகக் கீழே விட்டாள். தரையில் விடப்பட்ட பாம்பு, புதரில் ஏதோ தனக்கு எதிராக இருப்ப தாக உணர்ந்தோ என்னவோ அங்கிருந்து வேகமாக ஊர்ந்து புதருக்கு வெளியே வந்தது. வந்த வேகத்தில் அருகாமையில் நின்று கொண்டிருந்த தலையூர் வீரர்களின் காலின் பக்கம் சென்றது. ஒரு வீரன் அதை நன்றாக மிதித்து விடவே; அது வெகுண்டெழுந்து சீறிக் கிளம்பிற்று! அவ்வளவுதான், அந்த வீரர்கள் அலறியடித்துக் கொண்டு அங்கிருந்து ஓட்டம் பிடித்தனர்.

•

புதருக்குள்ளிருந்த குப்பாயி, ஆறுதலாகப் பெருமூச்சு விட் டுக் கொண்டு - புதரை விலக்கியவாறு வெளியே பார்த்தாள். விடியத் தொடங்கியிருந்தது. வீரர்கள் வெகு தொலைவில் போய்க் கொண்டிருந்தனர். புதரிலிருந்து வெளிப்பட்ட குப் பாயி, சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே அந்தக் காட்டின் கல்லிலும் முள்ளிலும் கால் நோக நடந்தாள். அருக்காணியை தப்ப வைப்பதற்காக; தான் செய்த தியாகத்தை அவள் அப்படி யொரு பெருமையாக எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு தந்தி ரம் செய்து தனது தோழியைக் காப்பாற்றி விட்டதாகவே அவள் மகிழ்ந்திருந்தாள். அந்த இரவில் வளநாட்டு அரண் மனையில் அவளுக்குத் திடீர் என்று தோன்றிய திட்டம் அது

ஒன்றுதான். சதிகாரக்கும்பல் ஒன்று உறையூர்ச் சோழர் பெயரைச் சொல்லிக் கொண்டு வளநாட்டு அரண்மனைக்குள் நுழைந்திருக்கும்போது குப்பாயிக்குத் தேவையானதெல்லாம் அவர்களை ஏமாற்றி உடனடியாக வெளியேற்றிட வேண்டும் என்பது மட்டுமே! அதற்காகவே அருக்காணியெனத் தன்னை எண்ணிக் கொள்ளட்டுமென்று அவள் தன்னைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளாமலே அந்த அவசரமான சூழ்ச்சியில் இறங்கினாள். இப்போதும் பராக்கிரமனிடம் தனது தூய வாழ்வு பறிபோகப் போகிறதே என்ற துடிப்புடன் தவித்தாளே; அந்தக் கொடுமையான நிகழ்ச்சியை அவள் நினைத்துப் பார்த்தபோது - அருக்காணியைக் காப்பாற்றப் போய்தானே இவ்வளவு கஷ்டம்; என்று அவள் இதயம் முணுமுணுக்கவில்லை, கல்லிலும் முள்ளிலும் காட்டுப்பாதையில் கால் கடுக்க நடந்திடும் துன்பத்தைக் கூட அவள் ஒரு வீர சாகசமாகவே எடுத்துக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தாள்.

அவள் பாதையில் மலைப்பாறையொன்று குறுக்கிட்டது. சற்று நீண்டுயர்ந்த பாறை - பாறையின் அடித்தளத்தில் சுற்றிலும் மரங்கள் அடர்ந்து வளர்ந்தோங்கியிருந்தன. பாறையின் ஓரமாக மிகக் குறுகலான வழியமைத்துக் கொண்டு மெல்ல ஓடிக் கொண்டிருக்கும் ஒரு தெளிந்த நீரோடை. அதைப் பார்த்தவுடன் குப்பாயிக்குக் கொஞ்சம் உற்சாகம். நீரோடையில் போய் நின்று தனது அழகிய இளங்கரங்களால் தண்ணீரை அள்ளி முகத்தைக் கழுவிக் கொண்டாள். தேவையான அளவுக்கு தண்ணீரை அள்ளி அருந்தினாள். என்ன நடக்குமோ என்ற அச்சம் - உயிருக்கல்ல; உயிரை விட மேலான கற்புக்கு என்று படபடத்துக் கொண்டிருந்த நெஞ்சுக்கு அந்தத் தெள்ளிய நீரை அருந்தியது மிகவும் இதமாக இருந்தது. அந்த நீரோடைக் கரையில் கிடந்த ஒரு கல்லின் மீது அமர்ந்து இளைப்பாறினாள். எப்படியும் பொழுது போவதற்குள் வீரப்பூர் காட்டைக் கடந்து வளநாட்டுக்குச் சென்று விடலாம் என்று ஒரு நம்பிக்கை அவளுக்கு ஒளிவிட்டது.

அப்போது, சிறிது தொலைவில் ஆட்கள் வரும் ஒலி கேட்டது. குப்பாயி, கவனித்தாள். அந்த ஒலி ஒரு திக்கிலிருந்து மட்டுமல்ல - நாலு திசையிலிருந்தும் கேட்டது. உடன் அவள் எழுந்து பாறையோடு பாறையாக ஒட்டிக் கொண்டு - மரங்கள் அடர்ந்திருந்த காரணத்தால் தன்னை யாரும் பார்க்காத வண்ணம் மறைத்துக் கொண்டு; ஒலிகள் வரும் திசைகள் நோக்கி விழிகளை அலைய விட்டாள். சந்தேகமில்லை; தலையூர் வீரர்கள்தான்! இரவு, அவர்களது மன்னனின் ஆணைப்

படி நாலாபுறமும் சென்று அவளைத் தேடப் புறப்பட்ட அதே வீரர்கள்தான் அந்தப் பாறையை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

''எந்தப் பக்கம் பறந்து போயிருப்பாள் அந்தப் பெண்? இவ்வளவு பேர் தேடியும் யார் கையிலும் கிடைக்கவில்லையே!''

''இந்தக் காட்டை விட்டு அவள் வெளியில் போயிருக்கவே முடியாது. பகலில் அவள் நம் கண்ணில் படாமலா போய் விடுவாள்!

உரையாடிக் கொண்டே பாறையோரமாக உட்கார்ந்த தலையூர் வீரர்கள், இருபதுக்கு மேற்பட்டோர் இருப்பார்கள். இந்த இருபது பேரையும் ஏமாற்றிவிட்டு எப்படித் தப்பிட முடியும்? குப்பாயி மீண்டும் பரபரப்புக்கு ஆளானாள். இருந்தாலும் உயிரைப் பற்றிக் கவலைப்படாத ஓர் உறுதி அழுத்தமாக இருந்த காரணத்தால் அவள் சோர்ந்து போய் விடவில்லை. தனது அசைவின் ஓசை கூட எழாத அளவுக்கு மெல்ல மெல்ல அந்தப் பாறையை முட்டினாற் போலவே நகர்ந்து சென்றவளின் கண்ணில் பாறை இடுக்கில் குகை போன்ற ஒரு வழி தெரிந்தது. குகைக்குள் எத்தகைய பயங்கரமான விஷப்பிராணிகள் இருந்தாலும் பயமில்லை - அவைகள் எதுவும் வெளியே உள்ள தலையூர் வீரர்களை விடக் கொடுமையானவைகள் அல்ல - என்ற திடமான முடிவுடன் குப்பாயி அந்தக் குகைக்குள் நுழைந்தாள்.

நுழையும் பொழுதே அவள் தலை கிறுகிறுப்பது போல் ஓர் உணர்வு! சிறுகச் சிறுக, தான் மயக்கமுறுவதை அவள் புரிந்து கொண்டாள். குகைக்குள் ஏதாவது விஷ மூலிகைகள் இருந்து அதனால் ஏற்படும் விளைவோ என்று எண்ணிப்பார்ப்பதற்குள் அவளை அந்தக் கடுமையான மயக்கம் வீழ்த்திவிட்டது. எங்கே படுக்கிறோம் என்று தெரியாமலேயே குகையின் வாயிற்புறத்தில் கரடுமுரடான அந்தப் பாறையில் படுத்து விட்டாள்.

தாங்கள் தேடி வந்த குப்பாயி, தங்களுக்கு அருகாமையிலேயே மயக்கமுற்றுக் கிடக்கிறாள் என்பதை அறியாத தலையூர் வீரர்கள், இரவெல்லாம் அலைந்து திரிந்த களைப்பில் தாக சாந்தி செய்து கொள்வதற்காக அந்த நீரோடையில் வேண்டிய மட்டும் தண்ணீர் பருகிக் களைப்பைப் போக்கிக் கொண்டனர்.

ஒரு வீரன் தனது கழுத்தை வளைத்தும் நிமிர்த்தியும் விட்டுக் கொண்டு மற்றவர்களைப் பார்த்து, ''என்னப்பா ஒரு மாதிரி மயக்கமாக இருக்கிறது; உங்களுக்கு எப்படியிருக்கிறது?'' என்று கேட்டான். அங்கிருந்த தலையூர் வீரர்கள் அனைவரும் இதே கேள்வியை ஒருவரைப் பார்த்து ஒருவர் கேட்டுக் கொண் டனர். பிறகு அவர்களால் பேச முடியவில்லை. எல்லோருமே மயக்கமுற்றனர். எழுந்திட முயன்றனர் - முடியவில்லை. ஆளுக்கொரு மரத்து நிழலை நாடி நகர்ந்தனர். அதற்குள் உணர்விழந்து ஆங்காங்கு வீழ்ந்து விட்டனர்.

அந்தப் பாறையின் நீரோடை ஒரு விஷ ஊற்று என்பதை குப்பாயியும் அறியவில்லை - தலையூர் வீரர்களும் அறிய வில்லை - பளிங்கு போல் தெளிந்த நீரோடையாகக் காட்சி யளிக்கும் அது; பயங்கரமான நச்சு கலந்தது என்பதை ஒரு சிலரே அறிவர். அந்த நீரை அருந்துவோர் ஒரு நாள் இரு நாள்கூட எழ முடியாத அளவுக்கு மயக்கமுற்று கிடப்பார்கள் - பலவீனமான உடலமைப்பு கொண்டவர்கள் அந்த விஷ நீரின் சக்தியைத் தாங்கமாட்டாமல் உயிரையும் விட்டிருக்கிறார் கள். அந்த பாறையைச் சுற்றிலும், குகைக்குள்ளும் வளர்ந் துள்ள விஷ மூலிகைகள் அந்தத் தண்ணீரில் கலந்து கரைந்து நீரோடையையே நச்சுப் பொய்கையாக மாற்றி விட்டிருந்தன.

கண் கவரும் இயற்கைக் காட்சியும் - காலை மாலை வெயி லின் ஒளியில் அந்தப் பாறையின் பளபளப்பான மஞ்சள் வண்ணமும் - அடர்ந்த மரஞ்செடிகளுக்கிடையே வெள்ளி உருக்கினாற் போன்ற நீரோடையும் - ஆகா; என்ன கவர்ச்சி! என்ன கவர்ச்சி! என்று எவரையும் அருகே இழுக்கும் தன்மை யும் கொண்டவைகள்தான் எனினும் - ஏமாந்தால் மயங்கி விழநேரிடும்; மயங்கி வீழ்ந்தோரில் சிலர் மாய்ந்திடவும் நேரி டும் - அதனால் தான் அதற்கு ''ஆள் மயக்கிப் பாறை'' என்று; வீரப்பூர் காட்டில் ராக்கியண்ணனின் மூதாதையர் பாசறை நடத்திக் கொண்டிருந்த போது, பெயர் எழுதி வைத்து - அதனருகே யாரும் செல்லக் கூடாது என்று எச்சரிக்கைப் பலகையும் நட்டு வைத்திருந்தனர்.

கால ஓட்டத்தில் தலையூர் ஆதிக்கத்தில் அந்தக் காடு வந்து விட்டதால் நல்லது எது? கெட்டது எது? என ஆய்ந்து பார்க்க வும் - ஆய்ந்து சொல்லவும் தகுதி படைத்த நிர்வாக அமைப்பு கள் எதுவுமின்றிப் போனதற்கு ஒரு எடுத்துக்காட்டாக அந்த ஆள் மயக்கிப் பாறை பற்றிய எச்சரிக்கைக் குறிப்புகள் அனைத் தும் அழிந்து போய் விட்டன.

குகையின் நுழைவு வாயிலில் குப்பாயி மயங்கி விழுந்தவள், விழுந்தவளேதான்!

அதைப் போலவே பாறையைச் சுற்றிலும் மயங்கி விழுந்த தலையூர் வீரர்கள் அனைவரும் அசைவற்றுக் கிடந்தனர்!

# 42

# களங்கமா? கற்பனையா?

பொழுது விடிந்து சிறிது நேரத்திற்கெல்லாம் மயங்கிவிழுந்த குப்பாயியும் - தலையூர் வீரர்களும் மறுநாள் மாலைப்பொழுது வரும் வரையில் மயக்கம் தெளிந்து எழுந்திடவில்லை. ஆள் மயக்கிப் பாறையின் நச்சுத் தண்ணீர், அந்த அளவுக்கு அவர் களை உணர்விழக்கச் செய்திருந்தது. மாலை நேரத்துக் கதிரவ னின் ஒளிக்கதிர்கள் மரக்கிளைகளினூடேயும் அடர்ந்த தழை களினூடேயும் எட்டிப் பார்த்து, இரண்டு பகல்கள் குப்பாயி யெனும் அந்த இளந்தளிரைக் கடுமையாக சுட்டெரித்து விட்ட தற்கு மன்னிப்புக் கோருவது போலக் காட்சியளித்தன.

முட்டைக்குள்ளிருந்து வெளிவரும் குஞ்சுகளைப் போல அவளது விழிகள் இமைகளைத் திறந்து கொண்டு வெளி யுலகைப் பார்க்கத் தொடங்கின. பதினாறு ஆண்டுகளுக்கு மேலாகப் பார்த்த உலகுதான் என்றாலும் - கொடிய மயக்கத் திலிருந்து மீண்ட காரணத்தினால் அவளுக்குத் தன்னைப் பற்றியே நம்பிக்கையில்லை! தான் யார்? என்று தனக்குத் தானே பலமுறை கேட்டுக்கொண்டபிறகே குப்பாயி என்ற முடிவுக்கு அவளால் வர முடிந்தது. தனக்கு உயிர் இருக்கிறதா என்பதையும் அவள் ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தது. அதற்காக ஒரு முறைக்கு இரு முறை தன்னுடலைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டாள். எல்லாம் சரியாக இருக்கிறது. உயி ரோடுதானிருக்கிறோம், என்ற நம்பிக்கையும் வந்தாகி விட்டது.

எதற்காக இந்த இடத்தில் படுத்துக் கிடக்கிறோம் - இல்லை! இல்லை! விழுந்து கிடக்கிறோம்? அதையும் சற்று நிதானமாக யோசித்துப் பார்த்தபிறகே அவளால் தெரிந்துகொள்ள முடிந்தது.

வழக்கமாகப் படுத்துறங்கும் இடத்தை விட்டு வேறு இடத் தில் படுத்துறங்கி, பாதித் தூக்கத்தில் கண் விழித்தாலே - இருக்குமிடத்தை நன்றாக நினைவுபடுத்திப்பார்த்துத்தான் புரிந்து

கொள்ள முடியும் என்கிறபோது இரண்டு பகல் - இடையிலே ஒரு இரவு; பிரக்ஞையற்ற மயக்கநிலையில் இருந்து எழுந்தால், மனதில் எவ்வளவு குழப்பம் முற்றுகையிட்டிருக்கும்! நினைவுகள் மெல்ல மெல்ல ஆனால் அடுக்கடுக்காக வந்தன. வள நாட்டு அரண்மனையில் அருக்காணி தங்கத்தைக் காப்பாற்ற எடுத்த முயற்சி - வகுத்த தந்திரம் - பராக்கிரமன் கையில் சிக்கிப் பறிகொடுக்க இருந்த கற்பு - தலையூர்க் காளியின் திடீர் வருகை - வீரப்பூர் காட்டில் தலையூர் வீரர்களிடமிருந்து தப்பிப் பிழைக்கப்பட்ட கஷ்டங்கள் - இறுதியாக ஆள் மயக்கிப் பாறையில் நீர் அருந்தியது வரையிலே எல்லாமே ஞாபகத்திற்கு வந்துவிடவே; குப்பாயி, மெதுவாக எழுந்து உட்கார்ந்தாள்.

உட்கார்ந்தவளுக்கு ஏதோ ஒரு உணர்வு! தன் கன்னத்தின் ஒரு பக்கம் ஈரமாக இருப்பது போல! கைவிரல்களைச் சேர்த்துக் கன்னத்தைத் தடவிப் பார்த்தாள். பிசுபிசுவென ஒட்டியது போன்ற ஈரம்! உடன், தனது கையைப் பார்த்தாள். ரத்தம்! மீண்டும் கன்னத்தில் கை வைத்துப் பார்த்தாள். சிறு காயத்திலிருந்து ரத்தம் கசிந்து காய்ந்து போன நிலையில் இருந்தாலும் - ஈரம் அறவே வற்றிப் போய்விடவில்லை. அதனால்தான் அவளது கைவிரல்களில் அந்த ரத்தம் ஒட்டிக் கொண்டிருந்தது.

மயங்கி விழுந்தபோது, பாறையின் கூரான கல் ஒன்றில் குத்திக் கன்னம் காயப்பட்டிருந்ததை அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. தன்னைத் துரத்திக் கொண்டு வந்த தலையூர் வீரர்களில் எவனோ ஒருவன் தனது கன்னத்தைக் கடித்திருக்கக் கூடும் என்ற சந்தேகம்! அந்த நேரம் மயங்கியிருந்ததால் அது அவனுக்குச் சாத்தியமாகியிருக்கலாம் என்ற நினைவு!

பதைத்தாள்! ஆனால் முழுவதுமாக அழிந்து விடவில்லை என்று தெளிந்தாள்! இருப்பினும் பெண்மையின் மாண்பு மூளியாகிவிட்டதே என்று துடித்தாள்! அவளது தவறான சந்தேகத்தை உறுதிப் படுத்துவதுபோல, அப்போதுதான் தலையூர் வீரர்கள் ஒருவர் பின் ஒருவராக மயக்கத்திலிருந்து விடுபட்டு எழுந்துகொண்டிருந்தனர். அவர்கள் பேசியது குப்பாயிக்குக் கேட்டது.

''நான் அப்பொழுதே நினைத்தேன்! என்னடா இது; தண்ணீர் இவ்வளவு ருசியாக இருக்கிறதே என்று! இப்போதுதான் உண்மை தெரிகிறது ஒருமாதிரியான விஷத்தண்ணீர் என்று''

''விஷத்தண்ணீர் என்று ஏன் சொல்லுகிறாய்? நாமும் எத்தனையோ மது வகைகளைக் குடித்திருக்கிறோம். எதிலும் இல்லாத போதை இதில் அல்லவா கிடைத்திருக்கிறது. அதனால் இதை உலகத்திலேயே சிறந்த மது என்று ஏன் சொல்லக் கூடாது?''

''ஆமாம்! ஆமாம்! குடங்கள் மட்டும் இருந்தால் ஆளுக்கொரு குடம் இதை மொண்டுகொண்டு தலையூருக்கே போகலாம்''

''அதைவிட எனக்கு ஒரு யோசனை உதிக்கிறது! இந்த நீரோடையை இப்படியே வாய்க்கால் வெட்டி நீட்டிக்கொண்டு போய் - நமது தலையூர்ப் படை முகாம் வரையில் தண்ணீர் பாய்ச்சினால், தினந்தோறும் இதிலேயே நாம் நீச்சல் அடிக்கலாம்!''

''ஏனப்பா பேசமாட்டீர்கள்? மயக்கம் தெளிந்து உயிரோடு எழுந்துவிட்டோம் அல்லவா; அதனால் பேசுகிறீர்கள்! நல்ல வேளை - இன்னும் இரண்டு வாய் தண்ணீர் அதிகம் குடித்திருந்தால் இந்நேரம் எல்லோரும் மேல் உலகத்தில் இருந்திருப்போம். அதை மறந்து விடாதீர்கள்!''

''ஏய் தெரியுமா சேதி! நான் இந்தத் தண்ணீரைக் குடித்ததும் ஒருமாதிரியான போதை! சொர்க்கலோகத்திலே இருக்கிற மாதிரி! ஒரு பெண்ணுடைய கன்னத்தைக் கடித்து அப்படியே தின்ன வேண்டும் போலிருந்தது!''

''நல்ல வேளை! நாம் தேடியலைந்த பெண் அகப்பட்டிருந்தால் அவள் கன்னத்தைக் கடித்திருப்பாய்!''

''உம்! அவள்தான் கிடைக்கவில்லையே! அதனால் என்ன செய்தேன் தெரியுமா? அதோ அந்த மாமரத்தில் ஏறினேன். ஒரு மாங்காயைப் பறித்துக் கடித்தேன். அதற்குள்ளே மயக்கம் தலை சுற்றியது. அப்படியே கீழே விழுந்தேன். அப்புறம் இப்போது தான் கண் விழிக்கிறேன்.''

தலையூர் வீரர்களின் உரையாடலைக் கேட்டு, குப்பாயி மீண்டும் மீண்டும் தனது கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டாள். பாறையின் அருகே ஒரு மாமரம் இருப்பதையும் அதில் மாங்காய்கள் கொத்துக் கொத்தாய்த் தொங்குவதையும் கண்டாள். ஆனாலும் அவள் சமாதானமடையவில்லை. அந்தச் சண்டாளன் பெண்ணின் கன்னமென எண்ணி, மாங்காயைக்

கடித்தானோ? அல்லது மாங்காய் என்று கருதித் தனது கன்னத்தைக் கடித்துவிட்டானோ? மயக்கத்தில் என்ன செய்து தொலைத்தானோ? குப்பாயிக்குப் பதற்றம் அதிகமாயிற்று?

மறுபடியும் தலையூர் வீரர்களின் பேச்சு, அவள் கவனத்தை ஈர்த்தது!

''என்னடா வாயெல்லாம் ரத்தம் உறைந்திருக்கிறது! மரத்திலிருந்து விழுந்ததில் பல் உடைந்துவிட்டதா? அல்லது மாங்காய் கடித்ததில் ஏற்பட்ட காயமா?''

குப்பாயி இப்போது தன்னையறியாமல் நடுங்கினாள். அவள் கன்னத்தில் காயம்! தலையூர் வீரர்களில் ஒருவனது வாயிலே ரத்தம்! இரண்டுக்கும் காரணங்கள் தனித்தனியான நிகழ்ச்சிகள் என்றாலும், அவள் அந்தக் குழப்பத்திலிருந்து மீளவே இல்லை!

புதரில் ஒளிந்திருந்தபோதும் பாம்பைக் கையில் பிடித்த போதும் அலறி அழாத அவள், இப்போது தனது உயிருக்கும் மேலான மானம் களங்கப்பட்டு விட்டது என்ற தவறான சந்தேகத்தில் தன்னை மறந்து ஒவென அலறி அழுது விட்டாள்! அந்த ஒலி, அந்தப் பகுதியையே ஒரு கலக்கு கலக்கி விட்டது! தலையூர் வீரர்கள் விசை முடுக்கிய பொம்மைகளைப் போல வீறிட்டுக் கிளம்பினர்: ''ஏ! விடாதே பிடி! அந்தப் பெண்தான்!'' என்று கூச்சல் போட்டுக்கொண்டு!

வீரர்கள் பாய்ந்தெழுந்து வருதல் கண்டு, குப்பாயி அந்தப் பாறையைச் சுற்றி வந்து - அவர்கள் கையில் சிக்காமல் ஓடத் தொடங்கினாள். தப்பித்துக் கொள்ள வேண்டும் என ஓடுகிற ஓட்டத்தில் உள்ள வேகத்தை விட, எப்படியும் பிடித்துவிட வேண்டுமென துரத்துகிறவர்களின் ஓட்டத்தில் வேகம் குறைவாகத்தானிருக்க முடியும். குப்பாயி மிக வேகமாக ஓடிக் கொண்டிருந்தாள். தலையூர் வீரர்களோ அவள் ஓடும் திசையில் தொடர்ந்து ஓடி; அவள் எந்தப்பக்கம் திரும்பி ஓட முயன்றாலும் வளைத்து விடக்கூடிய அளவுக்கு நெருங்கிக் கொண்டிருந்தனர். முட்செடிகளில் குப்பாயியின் பாதம் அழுந்தி, புல்லின் நுனியில் தொங்கும் பனித்துளிகளைப் போல இரத்தத்துளிகள் கொப்பளித்தன! இருபதுக்கு மேற்பட்ட ஓநாய்கள்! அவற்றுக்கு நடுவே ஒரு மான்குட்டி! எவ்வளவு வேகமாக ஓடினாலும், எவ்வளவு நேரம் ஓட முடியும்?

தான் ஓடும் திசையில் ஒரு பாழடைந்த கிணறு இருப்பது குப்பாயியின் கண்களில் பட்டது. அந்தக் கிணற்றை நோக்கி ஒரு ஒற்றையடிப்பாதை நேராகச் சென்றதையும் அவள் கவனித்தாள். அந்தப் பாதையில் சென்று பாழுங்கிணற்றில் விழுந்து விடுவது என்ற தீர்மானத்துடன் இறுதியாக ஒரு தடவை தனது ஓட்டத்தின் வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டாள். அந்தக் கிணற்றை அவள் சென்றடைவதற்குள் பிடித்துவிடுவதெனத் தலையூர் வீரர்கள் சுற்றி வளைத்தனர். ஆனால் அவர்கள் கையில் சிக்காமல் குப்பாயி, அந்தப் பாழுங்கிணற்றின் சுற்றுச் சுவரில் ஏறிக் குதித்து விட்டாள். ஆனால் அவள் எண்ணம் அப்போது ஈடேற முடியாமல் குதிரையொன்று நாலு கால் பாய்ச்சலில் அங்கே பாய்ந்தது. அந்தக் குதிரையிலிருந்த சங்கர், 'குப்பாயீ!' என்று உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டே அவளைத் தூக்கிக் குதிரையில் தனக்கு முன்பாகப் போட்டுக் கொண்டான்.

தலையூர் வீரர்கள் சங்கரின் குதிரையைச் சூழ்ந்து கொண்டனர். சங்கர், கையில் ஓங்கிய வாளுடன் குதிரையிலிருந்து குதித்துத் தலையூர் வீரர்களை எதிர்த்துத் தாக்கினான். இருபது பேரின் படைக்கலன்கள் சங்கரின் வாள்முனைப் பட்டு நொறுங்கிப் பொடிப்பொடியாகச் சிதறின. ஒரு பத்து பேரையாவது உயிருடன் அங்கிருந்த பாழுங் கிணற்றுக்குள் தள்ளி சங்கர் வேடிக்கைப் பார்த்தான். எஞ்சிய பத்து வீரர்கள் தப்பித்தோம் பிழைத்தோமென்று தலையூர்ப் பாதை நோக்கி ஓடத் தொடங்கினர். மிகவும் இலகுவாகத் தலையூர் வீரர்களை வெற்றி கண்ட சங்கரிடம் குப்பாயி ஓடி "அண்ணா!" என்று கால்களைப் பற்றிக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். சங்கர், அவளது கூந்தலைக் கோதிவிட்டு அமைதிப்படுத்திக்கொண்டே, கலனாகிக் கிடந்த ஒரு நாலுகால் மண்டபத்திற்கு அழைத்துச் சென்று அமர வைத்தான்.

'அவர்கள் உன்னை மிகவும் கொடுமையாக நடத்தினார்களா?' என்று அவன் கேட்ட கேள்விக்கு குப்பாயி பதில் எதுவும் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டாள். கண்ணீர் அருவியாகக் கொட்டியது. தனது கரங்கொண்டு அவளது கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சங்கர், தன்னிடமிருந்த சில பழங்களைக் கொடுத்துப் பசியாறுமாறு அவளை வற்புறுத்தினான். அவளும் வேண்டாவெறுப்பாக அவற்றை வாங்கிக் கொண்டு - சங்கரைப் பார்த்து ஆவலுடன் வள நாட்டில் எல்லோரும் சுகமாக இருக்கிறார்களா? என்று கேட்டாள். அவளது சோகத்தை அதிகப்படுத்த விரும்பாத சங்கர் -

'எல்லோரும் சுகந்தான்' என்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு பதிலளித்தான். 'அருக்காணி எப்படியிருக்கிறாள் அண்ணா?' என்று கேட்ட குப்பாயியின் முகத்தில் அந்தப் பாச உணர்வு பொழியும் காட்சியைக் கண்டு சங்கர் வியந்து போனான்.

'அருக்காணி; உன்னை மீட்டு வருவதாகச் சூளுரைத்து வாளேந்திப் புறப்பட்டு விட்டாள்! நான்தான் அவளைத் தடுத்து - அவள் ஏந்திய இந்த வாளையே வாங்கிக் கொண்டு உன்னைத் தேடிக் கிளம்பினேன்!'

சங்கர் இவ்வாறு கூறியதும், குப்பாயியின் மேனி சிலிர்த்துப் போயிற்று! அந்த வாளை வெடுக்கென வாங்கி, ''என் அருக்காணி, அருக்காணிதான்! அடுத்த பிறவியென ஒன்று இருந்தால் அப்போதும் அவளுக்கு நான் தோழியாகவே பிறக்க வேண்டும்!' என்றவாறு வாளுக்கு முத்தமீந்தாள்

'சரி! சரி! வாளை முத்தமிட்டு வாயைக் கிழித்துக் கொள்ளாதே! ஏற்கனவே கன்னத்தில் வேறு காயம்!' என்றான் பரிவுடன் சங்கர்!

ஆனால் குப்பாயி அதிர்ந்து போனாள்! அந்தக் காயம் ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது? என்பதில் ஏற்கனவே அவள் மனமொடிந்து நிலைகுலைந்து போயிருக்கிறாள்! அதனால் சங்கர், அந்தக் காயத்தைப் பற்றிக் குறிப்பிட்டதும் அவள் உள்ளத்தில் சூறாவளி வீசத் தொடங்கிவிட்டது. எங்கேயோ கல்லில் இடித்துக் கொண்டதால் ஏற்பட்ட காயம் என்றுதான் சங்கர் கருதியிருந்தான். ஆனால் அவளோ, அந்தக் காயம், தனது மானத்துக்குற்ற களங்கத்திற்கு நிரந்தரமான அடையாள வடுவாக் இருக்கப் போகிறது என எண்ணிக் குமுறினாள்.

'உம்! குப்பாயி! புறப்படு!' என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் சங்கர்! அவளைத் தூக்கி குதிரையின் மீது - அவன் உட்காருமிடத்திற்கு முன்னால் அமர வைத்து அவனும் குதிரையில் ஏறிக் கொண்டான். அந்தி சாய்ந்த அந்த நேரத்தில் காட்டு மரத்தழைகளையசைத்து வீசிய குளிர்ந்த காற்றில் சங்கரின் குதிரை பரபரப்பின்றி வளநாடு நோக்கி நடை போட்டுக் கொண்டிருந்தது.

தலைநகருக்குள் சங்கரும் குப்பாயியும் வந்து சேர்ந்தபோது, ஆங்காங்கு மிக மங்கலாகத் தெரு விளக்குகள் எரிந்து கொண

டிருந்தன. வீதிகளில் மக்கள் நடமாட்டமும் அதிகமில்லை. திரும்ப ஊருக்கு வந்து விட்டோம் என்ற மகிழ்ச்சியெதுவும் குப்பாயியின் உள்ளத்தில் அரும்பியதாகக் கூறமுடியாதபடி அவள் தலை குனிந்தவாறே காணப்பட்டாள்.

சங்கர், குதிரையை கோட்டை முகப்பின் பக்கமாகத் திருப்பினான். அப்போது குப்பாயி, அவனைப் பார்த்து, 'அண்ணா! முதலில் வீட்டுக்குப் போய் அப்பாவைப் பார்த்துவிட்டுப் பிறகு அரண்மனைக்குச் செல்லலாம் என்று கேட்டுக் கொண்டாள்.

''என்னம்மா திடீரென்று அப்பா ஆசை வந்துவிட்டது! அருக்காணியைத்தான் முதலில் பார்ப்பாய்! அவளும் ஓடிவந்து கட்டித் தழுவிக் கொள்வாள்! இரண்டு தோழிகளும் ஒருவர் கண்ணீரால் ஒருவரைக் குளிப்பாட்டுவீர்கள்; என்றல்லவா நினைத்தேன். நீ அதையெல்லாம் விடுத்து முதலில் அப்பாவைப் பார்க்க வீட்டுக்குப் போக வேண்டுமென்கிறாயே; எனக்கே ஆச்சரியமாக இருக்கிறதே!'' எனக் கேலி பேசினான் சங்கர்!

''இல்லையண்ணா! அப்பாவுக்கு உடல் நலமில்லையென்று தான் உங்களுக்குத் தெரியுமே! நான் கடத்தப்பட்ட செய்தி வேறு, அவருக்குத் தெரிந்திருக்கும்! அதை நினைத்து உடலை மிகவும் கெடுத்துக் கொண்டிருப்பார்! என்னைப் பார்த்து விட்டால் அவருக்கு நிம்மதியாக இருக்கும்!''

''என்னம்மா... உன் அப்பா படுத்த படுக்கையாகவா இருக்கிறார்- அப்படியொன்றுமில்லையே! இரண்டு நாளைக்கு முன்புகூட அரண்மனைக்கு வந்திருந்தாரே... என்று மேலும் சொல்ல வந்தவன், தனது தவறை உணர்ந்து கொண்டு அத்துடன் பேச்சை நிறுத்திக் கொண்டு மௌனமானான்.

'அப்பா அரண்மனைக்கு வந்திருந்தாரா? எதற்காக அண்ணா?''

சங்கர் அவளிடம் உண்மையைச் சொல்வதென்றால் - குன்றுடையான், தாமரைநாச்சியார் இருவரின் மரணத்தைப் பற்றியும் அதற்காகத்தான் அவளது தந்தை பச்சனா முதலியார் அரண்மனைக்குத் துக்கம் விசாரிக்க வந்திருந்தார் என்பதையும் சொல்லியாக வேண்டும். ஆனால் அவன் சமாளித்துக் கொண்டு, ''அதுதான்! நீ கடத்தப்பட்ட செய்தியறிந்து அதுகுறித்து விசாரிக்கத்தான் வந்திருந்தார். நான் அவருக்குத் தைரியம் கூறி

விட்டு உன்னைத் தேடிப் புறப்பட்டேன்'' என்று பதில் அளித்தான்.

குதிரையும் கோட்டை முகப்பின் பக்கம் திரும்பாமல் - சங்கரால் வேறு பக்கம் திருப்பிச் செலுத்தப்பட்டது.

வளநாட்டைப் பொன்னர் சங்கர் மீட்டவுடனேயே - குப்பாயியையும் அவள் தந்தை பச்சனா முதலியாரையும் அரண்மனைக்கே வந்து விடுமாறு அருக்காணி வற்புறுத்தினாள். பச்சனா முதலியார் அரண்மனைக்குள் குடியேற மறுத்து விட்டார். இருந்த போதிலும் அவருக்கு வள நாட்டில் ஒரு அழகிய வீடு ஏற்பாடு செய்து தரப்பட்டது. அவரை கவனித்துக் கொள்ள அரண்மனையிலிருந்து ஓரிரு ஆட்களும் அனுப்பி வைக்கப்பட்டனர். அருக்காணியிடம் கொண்டிருந்த அளவற்ற நேசத்தின் காரணமாகக் குப்பாயி அரண்மனையில் அவளுடன் தங்கியிருந்தாள். பச்சனா முதலியாருக்கு இரண்டொரு முறை நெஞ்சுவலி ஏற்பட்டு அதிக நடமாட்டமில்லாமல் வீட்டிலேயே ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். வள நாட்டுக்கு வந்து தனக்கு அருகாமையிலேயிருக்கவேண்டுமென்று அவரது மகள் குப்பாயியின் வேண்டுகோளை முழுதும் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் அறவே புறக்கணித்து விடாமல் - அரண்மனைக்கு வெளியே ஒரு வீட்டில் தங்கிக் கொள்ள மட்டும் சம்மதித்தார்.

அந்த வீட்டு வாசலில் சங்கரின் குதிரை போய் நின்றது. சங்கரும், குப்பாயியும் இறங்கி உள்ளே சென்றார்கள்.

தீப்பந்த வெளிச்சத்தில் முன் கூடப் பகுதியில் ஒரு கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்த பச்சனா முதலியாரின் காதுகளில் "அப்பா!'' என்ற குப்பாயியின் குரல் கேட்டவுடன் "அம்மா! அம்மா! வந்து விட்டாயா?" என்று கண் கலங்க எழுந்த அவரை அப்படியே தழுவிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள் குப்பாயி! இருவரும் உணர்ச்சி வயப்படுவது கண்ட சங்கர், அவளை அவரிடமிருந்து மெதுவாக விலக்கி -"வந்த துன்பம் நீங்கியபிறகு; போய்விட்ட துன்பத்திற்காக யாராவது வருத்தப்படுவார்களா?" என்றுகூறி இருவரையும் அமைதிப்படுத்திட முனைந்தான். அந்தக்கூடத்தின் மங்கலான ஒளியில்கூட, பச்சனா முதலியாருக்குக் குப்பாயியின் கன்னத்திலிருந்த காயம், அவர் கண்ணில் பட்டு விட்டது.

'என்னம்மா இது?' என்று அவர் கேட்டபோது அவரது குரல் மட்டுமல்ல; அவரது உடலே நடுங்கிற்று!

'அம்மா குப்பாயி! பரம்பரை பரம்பரையாக மானத்தோடு வாழ்ந்த குடும்பம் - ஒரு குறை எவனும் சொன்னது கிடையாது. இந்தக் குடும்பத்தைப் பற்றி-அப்படிப்பட்ட மரியாதையுள்ள குடும்பத்துக்கு இப்படியொரு மானக்கேடு வந்ததேயம்மா!,

தந்தை சந்தேகப்படுவது சரிதான் என்று அவளுக்குத் தோன்றியது. தன் கன்னத்தில் ஏற்பட்ட காயத்தைப் பற்றி அவள் என்ன கற்பனை செய்துகொண்டாளோ அதையேதான் அவளது தந்தையும் எண்ணுகிறார் என்கிறபோது அவள் இதயம்; கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் விழுந்து துடிப்பது போலாயிற்று. "அப்பா!" எனக் கதறி, அவரது கால்களைப் பிடித்துக் கொண்டு விழுந்தாள். சங்கர் அவளைத் தூக்கி நிறுத்தினான்.

உணர்ச்சிவயப்பட்ட பச்சனா முதலியாருக்கு சங்கர் ஆறுதல் கூறி அமைதியாக இருக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

"குப்பாயிக்கு நமது குடும்ப கௌரவம் கெடுவது போல எதுவும் நடந்து விடவில்லை, வீணாகக் குழப்பிக் கொள்ளாதீர்கள்" என்று அவரை சமாதானப்படுத்தினான். பச்சனா முதலியாரும் அவசரத்தில் தனது மகளின் மனதைப் புண்படுத்திவிட்டோமோ எனப் பயந்து - பேச்சின் போக்கை மாற்றுவதற்காக குன்றுடையான், தாமரை நாச்சியாரின் திடீர் மறைவு பற்றித் தன் மகளிடம் கூறிடலாமெனக் கருதினார். எனவே, அவளது தோள்பட்டையில் தனது கையை வைத்து, அவளை அரவணைத்தவாறு,"ஏனம்மா உனக்கு வளநாட்டில் நடந்ததெல்லாம் தெரியுமா?"என்று ஆரம்பித்தார்.

அதற்குள் அந்தத் துயர நிகழ்ச்சிகளை அவளிடம் சொல்லத் தேவையில்லையென்று நினைத்த சங்கர், "அதெல்லாம் பெரிய கதை! ஒரு வார்த்தையில் சொல்லக் கூடியதா? குப்பாயி! நீ முதலில் போய் உடைகளை மாற்றிக் கொண்டு வா! பிறகு சாவகாசமாகப் பேசலாம்!" என்று அவளை அவரிடமிருந்து பிரித்து உள்ளே அனுப்பி வைத்தான். அவள் உள்ளே போனதும் சங்கர் - பச்சனா முதலியாரைப் பார்த்து, 'அய்யா! இரண்டு நாட்களுக்கு மேலாக குப்பாயி பெரும் ஆபத்தில் சிக்கி விடுபட்டிருக்கிறாள். அவள் உள்ளம் ஏற்கனவே துன்பத்தின் சுமை தாங்காமல் தள்ளாடிக் கொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் அவளிடம் எங்கள் தாய் தந்தைக்கு ஏற்பட்ட முடி

வைச் சொன்னால், அவளால் தாங்கிக் கொள்ள முடியாது.! தயவுசெய்து இப்போது சொல்லவேண்டாம்! என்று கூறினான். முதலியாரும் சங்கர் சொல்வதை ஏற்றுக் கொள்வதைப் போலத் தலையசைத்தார் என்றாலும் அடக்க முடியாத வேதனையுடன் தனது கன்னங்களில் வழிந்து கொண்டிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

'உடை மாற்றிக் கொள்ளப் போன குப்பாயியை இன்னும் காணவில்லையே! என்னுடன் இப்போதே அரண்மனைக்கு வருகிறாளா? பிறகு வருகிறாளா? தெரியவில்லையே!' என்று சங்கர், முதலியாரைப் பார்த்துச் சொல்லிக் கொண்டே - வீட்டின் உட்புறமாகத் திரும்பிப் பார்த்தான். அப்போது வீட்டுக் குள்ளிருந்து ஒரு வேலைக்காரி தலைவிரிகோலமாக முன் கூடத்தை நோக்கி ஓடி வந்தாள் ! ''அய்யோ! அய்யோ!'' என்று ஒரே கூச்சல்!

''என்ன? என்ன நடந்தது?'' என்று கேட்டுக்கொண்டே பத றிப்போன சங்கர் வீட்டின் உட்புறம் ஓடினான். கூடத்தை யொட்டிய அறைக்குள் ஒரு உத்தரத்தில் குப்பாயி தொங்கிக் கொண்டிருந்தாள். சங்கர், ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கயி றைத் துண்டித்து அவளைத் தூக்கிக் கொண்டான். ஆனால் பயனில்லை! குப்பாயி, தன் கற்புக்குக் களங்கம் ஏற்படுத்தப் பட்டுவிட்டது என்ற கற்பனையை மாற்றிக்கொள்ளாமல் - அதற்குப் பரிகாரம் தேடிக் கொண்டு விட்டாள்!

43

# மாயவரை இழந்தது மாபெரும் குற்றம்!

தலையூர் உப்பரிகையின் உச்சியில் உள்ள கூடத்துக் கட்டிலில், காளி மன்னன் கவலைகளை முகத்தில் தேக்கிக்கொண்டு சாய்ந்திருந்தான். உறையூர்ச் சோழன் மாளிகையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் தனது மன்னனிடம் விவரித்த அதே ஒற்றன் இப்போதும் காளிமன்னனின் கால்பக்கமாக மரியாதையுடன் நின்று கொண்டிருந்தான். அந்த ஒற்றனிடம் தலையூர்க் காளிக்கு எப்போதுமே ஒரு நம்பிக்கையும் விசுவாசமுள்ள ராஜப் பிரதானியென்ற எண்ணமும் உண்டு என்பதால் அவன் சொல்வதை உன்னிப்பாகக் காது கொடுத்துக் கேட்டுக்கொண்டே இடையிடையே தனக்கேற்பட்ட சந்தேகங்களையும் போக்கிக் கொண்டான்.

''அரசே! குலப்பெருமை குடும்பப் பெருமை காத்திட குப்பாயி தன்னுயிரை மாய்த்துக் கொண்டாள் என்ற செய்தி கேட்டவுடன் அருக்காணி தங்கம் தனது தோழியின் பிரிவைத் தாங்காமல் மனமுடைந்து போனாள் என்றாலும் - உடனடியாகத் தலையூர் மீது படையெடுத்துப் பழிதீர்த்துக் கொள்ள வேண்டுமென்று துடித்தெழுந்த தனது அண்ணன் சங்கரை அமைதிப்படுத்தவே செய்தாள்!''

'ஏன்? என்ன காரணம்? உயிருக்கு நிகரான தோழி என்கிறாய்! அவள் கதி இப்படி ஆகிவிட்டது என்றதும் எந்தப் பெண்ணுக்கும் ஆத்திரம் வரத்தானே செய்யும். அதற்கு மாறாக அமைதி உபதேசம் செய்தது எதனால்?'

'அரசே! தலையூர் கோட்டையை முற்றுகையிட்டுப் பிடிப்பது என்பதும் நமது படைகளை நமது நாட்டில் வந்து வெல்வது என்பதும் அவ்வளவு சுலபமான காரியமல்ல என்பதை மாயவர் மூலம் அருக்காணி உணர்ந்திருக்கிறாள். நமது படை வலிமை பற்றி பொன்னருக்கும் சங்கருக்கும் தெரியப்படுத்தியுள்ளார் என்றாலும் சங்கர் எப்போதுமே மிகுந்த துடிப்பான

இளைஞன் அல்லவா, அதனால் சங்கர் வெகுண்டெழுந்த போது மாயவருடனும் பொன்னருடனும் சேர்ந்து அருக்காணி யும் அமைதிப்படுத்தியிருக்கிறாள்.

'நீ சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை! ஆரிச்சம் பட்டிக் கோட்டையிலே நமது தளபதியை இழந்தோம்! அங்கே பொன்னர் சங்கருக்குத்தான் வெற்றி! சங்கரமலைக்கோட்டை யில் பராக்கிரமன் தலைமையில் சென்ற படையே தோற்றோடி வந்தது! வளநாட்டைப் பொன்னரும் சங்கரும் வளைத்துக் கொண்டபோதும் நமது படைகளால் தாக்குப்பிடிக்க முடிய வில்லை. செல்லாத்தாக் கவுண்டர் ஆட்சியை நிலைநாட்ட முடியாமல் நிலைகுலைந்தோம்! இப்படி அடுக்கடுக்காகத் தோல்விகளைச் சந்தித்துள்ள தலையூரைப் பார்த்து அவர்கள் தயங்குகிறார்கள் என்றால் எப்படி நம்ப முடியும்!'

'அரசே! அந்தத் தோல்விகள் எல்லாம் நமது துணைப்படை களுக்கு ஏற்பட்டவை! எந்தவொரு எதிரியும் தலையூர் நாட் டின் தலை நகருக்குள் புகுந்து நமது படையை முறியடிப்பது என்பது எளிதான காரியமல்லவே! அது மட்டு மல்ல, நம்மைச் சார்ந்த பதினெட்டு நாட்டுப் படைகளும் நமக்குத் துணையாக வந்து விட்டால் பகைவர்களால் சமா ளிக்க முடியாதல்லவா?'

'நமக்குப் பதினெட்டு நாட்டுப் படைகள் வந்தால் பொன்னர் சங்கருக்குத் துணையாக சோழ நாட்டுப் படைகள் வரக்கூடு மல்லவா?'

'வளநாட்டுக்கு ஏதேனும் ஆபத்து - எதிரிகளின் படை யெடுப்பு என்றால்தான் சோழநாடு உதவிக்கு வரும்! அதை விடுத்து, வளநாடு பிற நாட்டின் மீது வலுவில் சென்று முற் றுகையிட்டால் சோழ நாட்டுப் படை உதவி, வளநாட்டுக்குக் கிடைப்பது சந்தேகமே! இதையெல்லாம் எண்ணித்தான் நம்மீது பாய்வதற்கு பொன்னர் சங்கர் அவசரப்படக்கூடாது என்று மாயவர் அறிவுரை கூறியுள்ளார். தாய் தந்தையை இழந்த துயரமும் தன் தோழியை இழந்த துயரமும் போதும், தமையன் மாரையும் இழந்துவிடத் தன்னால் முடியாது என்று அருக் காணி தங்கம் குறுக்கே நிற்கிறாள்.'

'அந்த அருக்காணிதான் இப்போது பெரிய காண்டியம்மன் ஆலயத்திலேயே இருப்பதாகச் சொன்னாயே. அவள் எப்படி அரண்மனை விவகாரங்களில் கலந்து கொள்ள முடிகிறது?'

'அவள் பெரிய காண்டியம்மன் கோயிலில் இருப்பதாக மட்டுமே சொன்னேன். மற்ற விபரங்களைச் சொல்லவில்லையே. இப்போது அதையும் சொல்லிவிடுகிறேன் அரசே! வையம்பெருமானுக்கும் அருக்காணிக்கும் திருமணம் செய்து வைப்பது என்ற ஒரு எண்ணம் அருக்காணியின் பெற்றோருக்கும் இருந்தது. - அண்ணன்மாருக்கும் இருந்தது! ஆனால் குப்பாயி மரணத்திற்குப் பிறகு தனக்குத் திருமணமே வேண்டாமென்று அருக்காணி உறுதியாகக் கூறிவிட்டாள். அவளது லட்சியம் திருமணம் அல்ல என்றும் - தலையூரைத் தரைமட்டமாக்கி நம்மைப் பழிவாங்குவது-செல்லாத்தாக்கவுண்டர் குடும்பத்தைப் பழிவாங்குவது - அதாவது ராக்கியண்ணன் சபதத்தை நிறைவேற்றுவது மட்டுமல்ல, அத்துடன் குன்றுடையான் தாமரை நாச்சியார் சாவுக்கும், குப்பாயி சாவுக்கும் நாமே காரணமென்பதால் நம்மைத் தீர்த்துக் கட்டுவது என்று பொன்னர் - சங்கர் பூண்டுள்ள விரதம் வெற்றி பெற அருக்காணியும் துணை நிற்கப் போகிறாள்.'

'அதற்காக பெரிய காண்டியம்மன் கோயிலில் என்ன செய்கிறாள்?'

'அவள் மட்டுமல்ல, அவளுடன் ஏழு கன்னிப் பெண்கள் - பெரிய காண்டி கோயிலில் அம்மனை வழிபட்டுக்கொண்டிருக்கிறார்கள். அம்மன் சந்நிதானத்தில் அந்த ஏழு கன்னிகளும் அருக்காணியும் சத்தியமே செய்திருக்கிறார்கள், தாங்கள் திருமணமே செய்து கொள்ளப் போவதில்லையென்று! அந்த ஆலயத்துக்குள் அவர்கள் வாள்வித்தை, வில்வித்தை, போன்ற போர்ப்பயிற்சிகளைச் செய்கிறார்கள்! எப்போதாவது ஒரு முறை அருக்காணி அரண்மனைக்கு வந்தால் உண்டு! மற்ற நேரமெல்லாம் பெரிய காண்டி கோயில்தான் கதியென்று கிடக்கிறாள். பொன்னர் - சங்கர் இருவர் தவிர, வேறு எவரும் ஆண்கள் அந்த ஆலயத்துக்குள் இப்போது அனுமதிக்கப் படுவதில்லை!'

'ஓ! என் நாட்டின் மீது கொங்கு நாட்டுக் கோதையரும் படையெடுக்கப் போகிறார்களா? அந்த அருக்காணியுடன் இருக்கும் ஏழு கன்னிப் பெண்கள் யார்?'

'பச்சனா முதலியார் மகள் குப்பாயியைப் போல பல வகுப்புக்களைச் சேர்ந்த பெண்கள் - அந்த ஏழு பெண்களும் அருக்காணியை உயிராக நேசிக்கிறார்கள்! பெரியகாண்டி ஆலயத்தில் அருக்காணி நிகழ்த்தும் வீர உரைகள் கேட்டு அந்தக்

கன்னிகள் வீராங்கனைகளாக விளங்குகிறார்கள். அவர்களது இடையில் அருக்காணியைப் போலவே உடைவாட்கள் காட்சி யளிக்கின்றன.'

'அப்படியானால் வளநாட்டுப் படைகள் விரைவில் நமது தலையூரை முற்றுகையிடும் என்று சொல்!'

'அதற்கான தயாரிப்புகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன! ஆனாலும் தலையூர் முற்றுகையைத் தள்ளித்தான் போடுவார்கள்! என் யூகம். என்றோ ஒருநாள் திடீரெனத் தலையூர் நோக்கிப் பொன்னர் - சங்கர் படை வரும்!'

'உன் பேச்சே ஒரே குழப்பமாக இருக்கிறது! தலையூர் பலம் கண்டு தயங்குகிறார்கள் என்கிறாய்! சோழர் உதவிக்குப் போக மாட்டார் என்கிறாய்! அருக்காணியும் மாயவரும் அமைதிப் படுத்தியிருக்கிறார்கள் என்கிறாய்! எப்படியும் பழிவாங்கும் முயற்சியில் ஈடுபடுவார்கள் என்கிறாய்! ஒற்றர் வேலை மிகத் திறமையாகத்தான் பார்த்திருக்கிறாய். உன்னையும் குழப்பிக் கொண்டு - என்னையும் குழப்பிவிட்டு!'

'மன்னிக்க வேண்டும் அரசே! அவர்களின் நிதானம் நமக் குக் குழப்பத்தை ஏற்படுத்துகிறது! வெற்றி தோல்விகளைப் பற்றி சிந்திக்காமலே நம்முடன் மோதுவதற்கு சங்கர் தயார்! ஆனால் மாயவர் தலைசிறந்த ராஜதந்திரியல்லவா?'

'அந்த ராஜதந்திரம் நமது குலத்துக்குப் பயன்படவில்லையே - யாருக்கோ அல்லவா பயன்படுகிறது?'

'நடந்துபோனதை எண்ணிப் பயனில்லை. நடப்பதையும் நடக்கப் போவதையும் எண்ணிப் பார்த்துச் செயல்படுவோம்!'

'உபதேசம் செய்ய உனக்கு ஒரு இடுக்கு கிடைத்தால் போதுமே. உம்! என்ன சொல்லப் போகிறாய்? சொல்!'

'தலையூரை முற்றுகையிட ஒரு புறம் படையைப் பலப்படுத்து கிற காரியம் கடந்த மூன்றாண்டுகளாக வளநாட்டில் நடை பெற்று வருகிறது! அதே சமயம் பொன்னரும் சங்கரும் போர் நினைவிலேயே இருக்கிறார்கள் என்றும் பொதுமக்களின் நல் வாழ்வில் அக்கறை காட்டவில்லையென்றும் பொல்லாத பெயர் வந்து விடக் கூடாது என்பதிலும் மிகுந்த கவனமாக இருக்கிறார்கள். கொங்குச் சீமையின் கோபுரக் கலசங்களாகப்

பொன்னரும் சங்கரும் வரலாறு படைப்பார்கள் என்று சோழ மன்னர் அக்களதேவன் கூறியதை நடைமுறைப்படுத்திக் காட்ட வேண்டுமென்று மாயவர் கூறியதை அந்த வீரர்கள் ஏற்றுக் கொண்டு கடந்த மூன்றாண்டுக் காலமாக வள நாட்டில் நல் லாட்சி நடத்துவதிலும் மெத்த ஆர்வமுடன் இருக்கிறார்கள்!'

'அப்படியென்ன நல்லாட்சி நடத்துகிறார்கள்? வானம் பொழிந்தால், பூமி விளைந்தால் எல்லோருந்தான் நல்லாட்சி நடத்தலாம்!'

'மன்னித்துக் கொள்ளுங்கள் அரசே! உண்மைகளைச் சொன் னால் ஒற்றன் வரம்பு மீறிப் போகிறானோ எனத் தவறாக எண்ணி விடாதீர்கள்! கடந்த மூன்றாண்டுகளில் வளநாட்டில் கூட தொடர்ந்த மழையில்லை! ஆனால் அதற்காக அங்கே வேளாண்மை பாழாகி விடவில்லை! ஆழமான கிணறுகள் ஆங்காங்கே தோண்டப்பட்டுக் கிணற்றுப் பாசனத்தைக் கொண்டு வேளாண்மையைப் பெருக்குகிறார்கள் - அரச குடும்பத்திலே உள்ளவர்களே உழவர் பெருங்குடி மக்களைப் போல உழைக்கிறார்கள். அருக்காணி தங்கத்திற்குத் தனியாக ஒரு பெரிய தோட்டமே இருக்கிறது. - பெரிய காண்டி கோயி லில் கவனிக்க வேண்டிய வேலைகளை கவனித்துவிட்டு, அருக் காணியும் ஏழு கன்னிகளும் அந்தத் தோட்டத்தில் உள்ள கிணற்றை இறைத்துத் தண்ணீர் பாய்ச்சி உணவுப் பொருள் களை உற்பத்தி செய்து கொடுக்கிறார்கள். அரண்மனையில் உள்ள பெண்களே வேளாண்மையில் நாட்டம் செலுத்துவதைக் கண்டு அந்த நாட்டில் உள்ள குடிமக்கள் அனைவருமே அர சின் உதவிகளை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டு உற்சாக மாக உழைக்கிறார்கள்.'

'உனக்கு இக்கரைக்கு அக்கரை பச்சையாகத் தெரிகிறது போலும்! நாமுந்தான் குடிமக்களுக்குத் தான தருமங்கள் செய் கிறோம். அந்தக் குடிமக்கள் நம்மை வாழ்த்தவில்லையா?'

'உண்மை நிலையை உரைக்க வேண்டியது ஒற்றன் கடமை! அரசரின் மனங்குளிர வேண்டுமென்பதற்காக முகஸ்துதி செய் வது ஒற்றனுக்கு அழகுமல்ல. இலக்கணமும் அல்ல! ஏதோ ஒரு நாள் அன்றைய பிரச்சினைகளை தீர்ப்பதற்காகச் செய்யப் படும் தானதர்மங்களை நான் தடுக்கவில்லையென்றாலும், அது நமது குடிமக்களுக்கு நீண்ட காலத்துக்குத் தேவையான நிலை யான நல்ல வளமான வாழ்க்கையை அளிக்காது என்பது என்னைப் போன்ற பலருடைய தாழ்மையான கருத்து! வள

நாட்டில் எல்லாமே திட்டமிட்டுச் செயல்படுத்தப்படுகிறது - குடிமக்களின் குறைகள் பொன்னர் சங்கரால் நேரடியாகவே கேட்கப்படுகின்றன. உடனுக்குடன் அந்தக் குறைகளைத் தீர்க்கும் நிர்வாக அமைப்புகள் நேர்த்தியாகப் பணியாற்றுகின்றன. சிற்றூர்களை இணைத்திடும் சாலைகள் - தூய்மையான குடி நீர் வழங்கும் நிலையங்கள் - அறிவு வளர்க்கும் பயிற்சிக் கூடங்கள் - நாடு காக்கக் குறைந்தபட்சம் வீட்டுக்கொருவர் போர்ப்பயிற்சி பெறவேண்டுமென்ற முனைப்போடு பாசனைகள் - இப்படிப் பலப்பல காரியங்களை மூன்றே ஆண்டுகளில் பொன்னர் சங்கர் ஆட்சி நிறைவேற்றி வருவதைக் கண்டு பூரிப்படையாதவர்கள் யாருமே இல்லை!'

''உனக்கே பூரிப்பு தாங்க முடியாமல் பொங்கி வழிகிறாயே! அதிசயமான நிர்வாக அமைப்பை அங்கேதான் கண்டுவிட்டாயா? நம்மிடம் அமைச்சராக இருந்த மாயவர் அங்கே போய் திட்டங்களை வகுத்துக் கொடுக்கிறார். அவற்றைப் பொன்னர் - சங்கர் நிறைவேற்றுகிறார்கள். இங்கேயும் செல்லாத்தாக் கவுண்டர் சிறப்பான திட்டங்களை நமக்கு வகுத்தளிக்கவில்லையா? அவருடைய யோசனைப்படிதானே, தலையூர் அரசில் பல துறைகள் பிரிக்கப்பட்டு, சாலைத்துறை, குடிநீர்த் துறை, வனத் துறை, பாசனத் துறை என்று பலருடைய பொறுப்பில் செயல்படுகின்றன என்பதை நீ அறியமாட்டாயா?''

"அரசே! நான் சொல்வது கேட்டு என் மீது எவ்வாறு சினந்து சீறுவீர்களோ, எனக்குத் தெரியாது. இருந்தாலும் உங்களிடம் எல்லையற்ற விசுவாசமுள்ள ஊழியன் என்ற முறையில் சில உண்மைகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வருவது என் கடமை! தாங்கள் கூறியது போல பல பணிகளுக்குப் பல துறைகள் இருப்பது உண்மைதான். அந்தப் பல துறைப் பொறுப்பிலே உள்ள பிரதானியர் அனைவரும் நமது செல்லாத்தாக் கவுண்டர் மேற்பார்வையில் இயங்குகிறார்கள் என்பதும் உண்மைதானே?"

"ஆமாம்! நீ என்ன சொல்ல விரும்புகிறாய்? சுற்றி வளைக்காமல் சுருக்கமாகச் சொல்!"

"சாலைத் துறையைப் பொறுப்பேற்றிருப்பவர் சாலைகள் போட்டு விட்டதாகக் கணக்கெழுதி, கஜானாவிலே பணம் பெற்று போடாத சாலைக்குப் பெருந்தொகையைச் சுருட்டிக் கொள்கிறார். குடிநீர்த் துறையோ, சொல்லத் தேவையில்லை - அந்தப் பொறுப்பாளர் வீட்டுக்குள்ளே அரசாங்கப் பணம், தண்ணீராக ஓடுகிறது. குடிமக்களுக்கு ஒரு துளி நீர் கிடைப்ப

தில்லை! வனத்துறை நிர்வாகமோ, தலையில் உள்ள ரோமத் தைச் சிரைத்து தலையை மொழுமொழுவென்று காட்டுவது போல - மலையில் உள்ள மரங்களை அழித்து மலையை மொழுமொழுவென்று காட்டுகிற முயற்சியில் ஈடுபட்டுள்ளது..."

"போதும் நிறுத்து!" என்று தலையூர்க்காளி, ஒற்றனைப் பார்த்து ஆத்திரத்தோடு அல்ல, அமைதியாக - ஆழ்ந்த வருத்தத்தோடு சொன்னான்.

"நாடு இவ்வளவு சீர்கெட்டுப் போனதை இத்தனை நாள் என்னிடம் நீ தெரிவிக்காமல் இருந்தது மாபெரும் குற்றமில் லையா?"

ஒற்றன் சிறது தயங்கி நின்றான். நாட்டை ஆள்பவனுக்காக அல்ல. நாட்டுக்காக, தான் ஆற்றவேண்டிய கடமையைத் தைரி யமாக ஆற்ற வேண்டியதுதான் என்ற உறுதியுடன் காளி மன்னனுக்கு பதில் அளித்தான்.

''அரசே! ஆற்று மணலைத் தோண்டினால் நீர் ஊற்றெடுக் கிறது! ஆனால் அதே ஆற்று மணல் மீது ஒரு குவளைத் தண் ணீரை ஊற்றினால் அந்த நீரை அப்படியே உறிஞ்சிக் கொண்டு உடனடியாகக் காய்ந்தும் போகிறது! ஆற்றின் ஊற்றுப் பெருக் கைப் போன்று உங்கள் உள்ளத்தில் நல்ல சிந்தனைகள் உண்டு என்பதை நானறிவேன்! ஆனால் அதே நேரத்தில் என்னைப் போன்றவர்கள் உங்கள் சிந்தனையைத் தூண்டும் கருத்துக் களைச் சொன்னால் - ஆற்று மணலில் ஊற்றப்பட்ட குவ ளைத் தண்ணீராக அவைகள் உறிஞ்சப்பட்டு உலர்ந்தும் போவ தையும் நானறிவேன்!''

''தண்ணீரை உட்கொள்வதால்தான் ஆற்று மணலைத் தோண்டும் போது ஊற்று நீரே கிடைக்கிறது என்பதை உண ராமல் பேசுகிறாய்! பரவாயில்லை. என்னைப் பொறுத்த வரையில் நான் ஒரு சூழ்நிலைக் கைதியாகிப் பல ஆண்டு களாகின்றன! தனக்கென்று சில நலன்கள் வேண்டுமெனக் கரு தும் சுயநல எண்ணங்கொண்டவராகச் செல்லாத்தாக் கவுண் டர் இருந்தாலுங்கூட, என்னுடைய புகழும் பெருமையும் கொடி கட்டிப் பறக்க வேண்டுமென்பதிலும் - எனது ஆரோக் கியத்திலும், மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கொண்டவர் என் பதை அடுத்த பிறவியிலும் என்னால் மறக்க முடியாது. அத னால்தான் தீமைகளேதான் விளைவுகளாக இருக்குமெனத்

தெரிந்தாலுங்கூட அவர் வார்த்தையை மீறி நடக்க நான் விரும்புவதில்லை!''

''அரசே! இனியும் தாங்கள் அப்படி நடக்க விரும்பினால், பொன்னர் - சங்கர் எனும் இரண்டு இளைஞர்களை எதிர் நிற்க முடியாமல் தலையூர் ஆட்சி தலை குப்புறக் கவிழ்ந்து விடும் என்பதே எனது எச்சரிக்கை!''

''இல்லை! நான் என்னை மாற்றிக்கொள்வதென்று முடி வெடுத்துவிட்டேன். இனி எனது வழியில் செல்லாத்தாக் கவுண்டரோ மாந்தியப்பனோ குறுக்கே நிற்க முடியாது!''

தலையூரான் திட்டவட்டமாகச் சொல்லிக்கொண்டு எழுந்து நின்றான். உப்பரிகைக் கூடத்திற்கு அவனைச் சந்திப்பதற்காக வந்து கொண்டிருந்த செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்ப னும் ஒற்றனிடம் மன்னன் பேசியது முழுவதையும் கதவோரத் தில் நின்று கேட்டனர். இனியும் ஒளிந்திருப்பது சரியல்ல எனக் கருதி இருவரும் கதவோரத்திலிருந்து விடுபட்டு அப் போதுதான் வருபவர்களைப் போல் அந்தக் கூடத்திற்குள் நுழைந்தனர்.

''என்ன, சந்தர்ப்பம் தெரியாமல் வந்துவிட்டோமோ?''

எனக் கேட்ட கவுண்டரை நோக்கி, தலையூர்க்காளி, "அப்படி யொன்றுமில்லை! நீங்களும் இருந்து பேசவேண்டிய விஷயந் தான்! நமது நாடு, நல்ல பரிபாலனமின்றிக் காடாகிக் கொண் டுள்ளது! வளநாட்டிலோ பொன்னர் - சங்கர் ஆட்சி போற் றத்தக்க வகையில் நடத்தப்படுகிறது! அவர்கள் பொதுமக்களின் பிரச்சினைகளையும் பிரதானமாகக் கருதி நல்லாட்சி நடத்து கிறார்கள் - அதே வேளையில் நம்நாட்டின் மீது தாக்குதல் நடத்தப் படைவரிசைகளையும் பலப்படுத்திக் கொண்டிருக்கி றார்கள்! நாட்டு மக்களின் வாழ்வு பற்றிக் கவலைப்படாமல், போர்! போர்! என்று அதை மட்டுமே கவனித்துக் கொண்டி ருந்தால் - மக்களின் ஆதரவு அந்த ஆட்சிக்கு இருக்க முடி யாது! அதை நாம் உணரவில்லை! ஆனால் பொன்னர் - சங் கர் அதை உணர்ந்து முதலில் மக்கள் - பிறகு போர் என்று நினைத்து ஆட்சி நடத்துகிறார்கள்! இனிமேல் நாம் யோசித்து என்ன செய்யப் போகிறோம்? பொன்னர் - சங்கர் இன்னும் சிறிது காலத்தில் போதுமான படைபலத்தோடு நம் மீது படை யெடுத்து வந்து நம்மை வென்றிடத்தான் போகிறார்கள்!'' என்றான் வேதனைக் குரலில்! உடனே செல்லாத்தாக் கவுண்

டர் அவனது கரங்களைப் பற்றிக் கொண்டு,"பயப்படத் தேவை யில்லை! நானும் என்னுடைய தவறுகளை எண்ணிப் பார்க் கிறேன். என்னுடைய அறிவுரைகள்தான் இவ்வளவு விபரீதங் களுக்கும் காரணம்! இப்போது இந்தப் போரை எப்படியும் தடுத்தாக வேண்டும் - அதற்கு ஒரே ஒரு வழிதான் எனக்குத் தெரிகிறது!" என்றார் மிகவும் பரிவுடன்!

'என்ன வழி?' என்று தலையூர்க்காளி பரபரப்புடன் கேட் டான். செல்லாத்தாக் கவுண்டர் தனது கட்டை விரலையும் ஆட் காட்டி விரலையும் கொண்டு நெற்றியை அழுத்தித் தடவிக் கொண்டு, அவனைப் பார்த்துச் சொன்னார்.

''மாயவரை நாம் இழந்தது மாபெருங்குற்றம்! அவரது அரிய மூளைத் திறனால்தான் வளநாடு வாழ்கிறது - தலையூர் தாழ்ந்து விட்டது! அந்தப் பேருண்மையை நானும் உணர்கிறேன். பொன்னர் - சங்கரின் எதிர்ப்பைத் தவிர்க்கவும் தலையூர் நாட்டை தழைக்கச் செய்யவும் மாயவர் ஒருவர் மனம் வைத் தால்தான் முடியும்! தலையூரைப் பொன்னர் - சங்கர் தாக்கா மல் தடுக்கவும் - தலையூர் மன்னன் தலை தப்பச் செய்யவும் - மாயவர் ஒருவரால்தான் இயலும்!''

செல்லாத்தாக் கவுண்டரின் இந்த வார்த்தைகளை எதிர் பார்க்காத தலையூர்க்காளி வியப்புற்று அவரையே கூர்மை யாகப் பார்த்தவாறு, 'மாயவரா? அவரை யார் அணுகுவது? எப்படி அணுகுவது?' எனக் கேட்டான். செல்லாத்தாக் கவுண் டர் சிறு கனைப்புக் கனைத்தவராக அங்குள்ள கட்டிலில் அமர்ந்தார். ஒற்றன் உட்பட அனைவரும் அவர் என்ன சொல் லப் போகிறார் என்பதையே ஆவலுடன் எதிர்பார்த்தார்கள்.

''தலையூரிலிருந்து ஒரு தூதனை வளநாட்டுக்கு அனுப்ப வேண்டும். இருநாடுகளுக்கிடையே வளர்ந்து வரும் பகையைத் தவிர்த்துக் கொள்ள தலையூர் விரும்புகிறது என அந்தத் தூதன் தெரிவித்து, மேற்கொண்டு சமாதான உடன்படிக்கை பற்றிப் பேசி விவாதித்து சமரச முடிவு காண மாயவருக்கு தலையூர் வருமாறு அழைப்பு அனுப்ப வேண்டும்.''

கவுண்டர் இதைச் சொன்னதும் தலையூர்க்காளி அவரை நோக்கி, 'மாயவரை நாம் அழைத்தால் வருவாரா? சமரசத் துக்கு உடன்படுவாரா?' என வினவினான்.

''சமரசமே மாயவரின் நோக்கம்! போர் புரிந்து மக்கள் மடி வதை அவர் விரும்பமாட்டார். நாம் மனந்திருந்தி விட்டோம் எனக் கேள்வியுற்றாலே அவர் மகிழ்ச்சி அடைவார்!''

அதற்குள் ஒற்றன் குறுக்கிட்டு, ''உண்மையிலேயே நாம் மனம் திருந்திவிட்டோமா?'' எனக் கேட்டான்.

''போரைத் தவிர்ப்பதே நல்லது! அதற்கு மாயவருடன் விவாதிப்பதே சிறந்தது! இந்த சுமுகமான முடிவுக்கு செல்லாத் தாக் கவுண்டரே வந்திருப்பது பாராட்டத்தக்கது! கவுண்டர் அவர்களின் ஆலோசனையின்படியே முதலில் வள நாட்டுக்குத் தூதரை அனுப்புவோம்! அதைத் தொடர்ந்து மாயவரை அழைத்துப் பேசுவோம்!''

என்று தீர்க்கமாகச் சொன்னான் தலையூர்க்காளி! அவன் சொல்லி முடிப்பதற்குள்ளாக செல்லாத்தாக் கவுண்டர், மாந்தி யப்பனைப் பார்த்து - யாருக்கும் தெரியாமல் விஷமத்தன மாகக் கண் சிமிட்டிக் காட்டிப் புன்னகை புரிந்தார்.

# வகுத்த திட்டம் வாகை சூடுமா?

## 44

தலையூர்த் தூதன் மூலம் அனுப்பப்பட்ட தலையூர்க் காளியின் நீண்ட கடிதத்தை வீரமலை உரக்கப் படித்திட - அதனை ஆலோசனை மண்டபத்தில் குழுமியிருந்த பொன்னர், சங்கர், மாயவர், சின்னமலைக்கொழுந்து, வையம்பெருமான் ஆகியோர் உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தனர். மண்டபத்தின் ஓரப் பகுதியில் திரைச்சீலைக்கருகில் அருக்காணித் தங்கம், அவளது தோழிகளான கன்னிப்பெண்கள், முத்தாயி, பவளாயி ஆகியோர் அமர்ந்து தலையூர்க் கடிதத்தில் தங்களின் முழுக் கவனத்தையும் செலுத்தியவாறு இருந்தனர். கடிதம், தலையூர்க் காளியின் கையொப்பமிட்டு - மாயவருக்கு எழுதப்பட்டிருந்தது.

"நடைமுறையில் தங்களுக்கும் எனக்குமிடையே கருத்து வேறுபாடுகள் பல நேரங்களில் ஏற்பட்டிருந்தாலுங்கூட, தலையூர் நாடு வளமாக இருக்க வேண்டும் - தலையூர் மக்கள் நிம்மதியாக வாழ வேண்டும் - என்ற பொதுவான நல்ல எண்ணத்திற்கு எப்போதுமே நம்மிடையே குந்தகம் வந்தது கிடையாது. வேட்டுவர்களாகிய நமது மக்களும் கொங்கு வேளாளர்களும் ஒருவரையொருவர் எதிர்த்து மோதிக்கொண்டு அழிவதற்காகவே ஆண்டவனால் படைக்கப்பட்டிருப்பதாக யாராவது கருதினால் அது மலையளவு தவறு என்பதை நான் உணர்ந்தே இந்த மடலைத் தங்களுக்கு எழுதுகிறேன். வளநாட்டின் மீதோ, அதனை ஆளுகின்ற பொன்னர் சங்கர் மீதோ காழ்ப்பு கொண்டு பழி தீர்க்கும் வரையில் ஓய்வதில்லையெனத் தலையூர் அரசு சபதம் செய்து கொண்டு செயல்படுவதாகத் தாங்கள் நினைக்கத் தேவையில்லை. பல்வேறு சூழல்கள் - பல்வேறு காரணங்கள் - இருநாடுகளுக்கிடையே பகையை அதிகமாக வளர்த்து விட்டன என்பதை நான் மறுப்பதற்கில்லை. குன்றுடையார் - செல்லாத்தாக்கவுண்டர் இருவரது குடும்பப் பகையால் ஏதேதோ நடந்து விட்டது! எனது நிலையோ எனது புரவலராக என் தந்தை பெரியகாளி மன்னரால் நியமிக்கப்பட்ட

செல்லாத்தாக் கவுண்டருக்குப் பரிவு காட்டுகிற கட்டாயத்துக்கு உட்படுத்தப்பட்டதாகும் என்பதைத் தாங்கள் மிக நன்றாகவே அறிவீர்கள். என்னிடம் பெரும் படையுண்டு என்பதை நான் சொல்லித் தாங்கள் புரிந்து கொள்ள வேண்டியதில்லை. ஆரிச் சம்பட்டிப் போரைத் தொடர்ந்தோ - சங்கரமலைக் கோட் டைப் போரைத் தொடர்ந்தோ - வீரப்பூர் காட்டில் எமது வீரர்கள் சங்கரால் விரட்டியடிக்கப்பட்டதையும் வீழ்த்தப்பட்ட தையும் தொடர்ந்தோ - அல்லது நான் துணை நின்றே தீர வேண்டிய செல்லாத்தாக்கவுண்டரின் மணிமுடி வளநாட்டில் பறிக்கப்பட்டதைத் தொடர்ந்தோ - தலையூர்ப் பெரும்படையை; சாவா? வாழ்வா? என்ற கேள்விக்குப் பதில் காணும் வகை யில் பயன்படுத்தியிருக்க முடியும்! அப்படியொரு ஆத்திரம் என் நெஞ்சில் அனலாகக் கிளம்பியபோது நீங்கள்தான் என் எதிரே அரூபமாக வந்து நின்று, "அவசரப்படாதே காளி மன்னா!" என்று அமைதிப்படுத்தியது போல் தெரிந்தது. இருநாட்டுப் படைகளும் முழுமையாக மோதிக் கொள்கிற இறுதிப் போர் நிகழுமேயானால் மிகப் பெரும் இழப்பு இருதரப்பிலும் ஏற் படும். இருநாட்டு மக்கள் மட்டுமின்றி இடையேயுள்ள பல நாட்டு மக்களும் அவதிக்கு ஆளாவார்கள். இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்துத்தான் தங்களிடம் தனித்துப் பேசி நல்ல முடிவு ஒன்றை எடுக்கலாமென்ற தீர்மானத்துக்கு வந்துள்ளேன். சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள்; இந்த என் முடிவுக்கு செல் லாத்தாக்கவுண்டர் அவர்களும் ஆர்வத்துடன் உடன் பட்டிருக் கிறார். தங்களையும் தங்களது தீர்க்கதரிசனமிக்க அறிவாற்ற லையும் நான் இழந்தது மட்டுமல்ல; தங்களை ஈன்றெடுத்த தலையூர் நாடு இழப்பதற்கும் நானே காரணமாக இருந்து விட்டேன்.

திருந்துவது - பின்னர் பிறிதொரு தவறு செய்வது; இது தானே தலையூர்க்காளியின் இயல்பு என எள்ளி நகையாடி என் கோரிக்கையையே அலட்சியப்படுத்தி விடாதீர்கள். அதே சமயம் இந்தக் கடிதம் போர் முனையில் சந்திக்கப் பயப்படுகிற ஒரு கோழையின் கூக்குரல் என்றும் எண்ணி விடாதீர்கள்! என்னையுணர்ந்த தாங்கள் அப்படி எண்ண மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். வீண்பகையை வளர்த்துக்கொண்டு இரு நாடுகளும் தத்தமது மக்களின் வாழ்வை நிலைகுலையச் செய் வதால் யாருக்குப் பலன் ஏற்படப் போகிறது என்ற கவலை யின் விளைவே இந்தக் கடிதம். எனவே என் வேண்டுகோளை யேற்றுத் தாங்கள் தலையூர் மாளிகைக்கு ஒரு முறை வருகைதர கேட்டுக்கொள்கிறேன். போரைத் தவிர்த்துக்கொண்டு எதிர் பார்ப்புப் பரபரப்புகள் எதுவுமின்றி அமைதியான சூழலில்

தலையூராயினும் வளநாடாயினும் மக்களின் நல்வாழ்வை மட்டும் முன்னிலைப்படுத்தி ஆட்சி நடத்துவதற்கேற்ப இனிய முடிவுகள் உருவாகிட பூர்வாங்கமாக நாமிருவரும் பேசுவதற்காகவே தங்களுக்கு இந்த அன்பழைப்பை விடுத்துள்ளேன். எனது தூதன் வாயிலாகத் தங்கள் வருகை குறித்த விபரம் தெரிவிப்பீர்களென நம்புகிறேன்."

வீரமலை முகஞ்சுளித்தவாறு கடிதத்தைப் படித்து முடித்தவுடன் -"முடியவே முடியாது! பழிவாங்கப்பட வேண்டிய பகையுடன் உறவா? தலையூர்க்காளி, செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பன் - இவர்களுக்காக நான் ஓங்கிய வாள்; அந்த அரும்பணியை முடிக்கும் வரையில் உறைக்குள் புகாது! கிழித்தெறியுங்கள் தலையூரான் கடிதத்தை! அடடா... எப்படி இதோபதேசம் செய்திருக்கிறான்! வேங்கை, ரத்தங்கசியும் நாக்குடன் வேதாந்தம் பேசுவது போல!" என ஆர்ப்பரித்தெழுந்தான் சங்கர்!

பொன்னர், அவனை அமைதிப்படுத்தி,"பொறுமையாக இரு சங்கர்! இந்தக் கடிதத்தின் உண்மையான நோக்கம் என்ன? திடீரென்று தலையூர்க்காளிக்கு அறிவோதயம் ஏற்பட்டது ஏன்? சூதுமதி கொண்டு தீட்டப்பட்ட மடலா? அல்லது நிலையுணர்ந்து எழுதப்பட்ட நேர்மை மிக்க வாசகங்களா? இதனை நம்மைவிடச் சரியாக உணர்ந்து சொல்லக்கூடியவர் மாயவர்; அவர் என்ன சொல்லுகிறார் என்று பார்ப்போம்!'' என்றான்.

''நான் குறுக்கிடுவதற்காக மன்னித்துக் கொள்ளுங்கள் அண்ணா!'' எனக் கூறியவாறு மெல்லிய திரைச்சீலையை சிறிதளவு விலக்கிக்கொண்டு எட்டிப் பார்த்தாள் அருக்காணித் தங்கம்!

அவள் என்ன சொல்லப் போகிறாள் என்று அண்ணன்மார்களும் மாயவரும் மற்றவர்களும் ஆவலுடன் எதிர் நோக்கினர்.

''மாயவருக்கு வந்துள்ள கடிதம் ஒரு மாயக்கடிதம்! இதில் ஏதோ சூழ்ச்சி, நிச்சயமாக இருக்க வேண்டும்! என்னையே அபகரிக்கத் திட்டமிட்டு என் தோழி குப்பாயி உயிருக்கே உலைவைத்த தலையூரான்தானே எவளோ ஒரு வேசியை சோழநாட்டு இளவரசி போல ஜோடித்து இங்கே அனுப்பியவன்! இன்று சமாதான விரும்பி போல நடிக்கும் அந்தச் சண்டாளன்தானே எனது அண்ணன்மார் இருவரையும் குழந்

தைப் பருவத்திலேயே கொல்லத் திட்டமிட்டவன்! குலகுருவாம் ராக்கியண்ணரின் தியாகத்தை மறந்துவிடப் போகிறோமா? அவர் செய்துள்ள சபதத்தைக் குப்பையில் போட்டுவிட போகிறோமா? இன்னும் பல ஆண்டு காலம் வாழவேண்டிய நமது தாய் தந்தையரை யாரால் இழந்தோம்? தலையூர்த் தளபதியினால் அல்லவா? இன்றைக்கு அவன் இச்சகம் பேசுகிறான் - நாடு என்கிறான் - நாட்டு மக்கள் என்கிறான் - அந்தச் சகுனி மனிதர் செல்லாத்தாக் கவுண்டரையும் மனிதப் பிறவியே அல்லாத மாந்தியப்பனையும் தன்னருகே வைத்துக்கொண்டு தலையூரான் பேசும் அமைதி வழியில் ஏமாந்தால் அது நம்மை ஆபத்தான வழியில் கொண்டுபோய்த் தள்ளி விடும்!''

அருக்காணித் தங்கம் படபடவெனப் பொறிந்து தள்ளினாள். தங்கையின் வீர உணர்வு கண்டு, பொன்னர் புன்னகை புரிந்தான். சங்கர் கண்களில் கனலும் புனலும் சேர்ந்து எழுந்தன!.

''தங்கம்!'' என அன்பு ததும்பத் தங்கையை அழைத்துக் கொண்டே அவளருகே சென்றான் பொன்னர்! அண்ணன் தன்னருகே வந்ததால் ஆத்திரம் தணிந்து விடவில்லை, அருக்காணிக்கு! தலையூரான் சூதாக கடிதம் எழுதியிருந்தால் - அதில் போய் சிக்கிக்கொள்வது தீது என்பதுதான் அவள் முடிவான கருத்து!.

''தங்கம்! நடந்தவைகள் எதையும் நான் மறந்துவிடவில்லை! தலையூர்க் காளி மன்னன் நேற்று வரையில் துரியோதனனாக இருந்தவன் இன்றைக்குத் திடுமெனத் தர்மராக மாறிவிட்டான் என்றும் நம்பவில்லை! ஆனால் ஒன்று; இப்போது எழுதப் பட்டுள்ள கடிதம் - தலையூர்க்காளி என்ற தனிப்பட்ட ஒருவன், மாயவருக்குத் தனிப்பட்ட முறையில் எழுதியதல்ல என்பதை மறந்துவிடக் கூடாது!''

''ஆம் அண்ணா! அவன் மாயவருக்குத்தான் எழுதியிருக் கிறான்!''

''உண்மைதான்! ஆனால் அதில் எழுதப்பட்டிருப்பது இரு நாடுகளுக்குரிய பிரச்சினை!''

''அதனால்?''

''அதனால் அமைதியாகச் சிந்திக்க வேண்டும் தங்கம்! நமது வளநாடு பொன்னர் - சங்கரின் ஆட்சியைப் பெற்றுள்ளது என்றாலும் இந்த ஆட்சியின் மூளையாகவே இருப்பவர் நமது

மாயவர்தானே! ஆகையால் அவருக்குத் தலையூரான் எழுதிய கடிதம் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகவே கருதப்பட வேண்டும்''

''முக்கியத்துவம் வாய்ந்ததாகத்தான் நானும் கருதுகிறேன் அண்ணா! அந்த முக்கியத்துவம்; ஒரு மூர்க்கனை அபாயத்திலிருந்து காப்பாற்றுவதாகவும் - அவனைப் பழிவாங்கச் சபதமேற்றுள்ள நம்மை நாசத்தில் வீழ்த்துவதாகவும் இருக்குமென்பதுதான் என்கணிப்பு!''

அருக்காணியின் கருத்தை எழுத்துக்கு எழுத்து ஆமோதிப்பவனைப் போல சங்கர், அவர்களிருவரின் அருகே விரைந்து நடந்து; ''தங்கம் சொல்வதுதான் சரி! பழிதீர்க்கப்படவேண்டிய பகைவனிடத்தில் என்ன பூர்வாங்கப்பேச்சு வேண்டிக் கிடக்கிறது? மாயவரை நாம் அனுப்பி வைப்பதாகவே எண்ணிப் பார்ப்போம்! என்ன நடக்கும்? அவருக்கு ஏதாவது விபரீதம் நடக்கும் - அல்லது செல்லாத்தாக் கவுண்டரிடம் வளநாட்டைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று சமாதானப் பேச்சு நடக்கும்! ஆரிச்சம்பட்டி, சங்கரன்மலைக் கோட்டை, குடையூர் ஆகிய இடங்களில் தலையூர் தலையிடாது என்று உறுதியளித்து, வளநாட்டை அவர்கள் பெற்றுக் கொள்வார்கள்! இப்படியொரு கேவலமான ஒப்பந்தப் பேச்சு தேவையா?'' என்று முழக்கமிட்டான்.

''நான் என்ன சொல்ல வருகிறேன் என்பதையே நீயும் நல்ல தங்கம் அருக்காணியும் யோசித்ததாகத் தெரியவில்லை! இரு நாடுகளுக்குமுள்ள பகையுணர்வினால் பாதிக்கப்படப் போகிறவர்கள் இருநாட்டுக் குடிமக்கள்! அவர்கள் நம்மைத் தவறாகக் கருதக்கூடாது என்பதே என் அக்கறை! சமாதானப் பேச்சுக்குத் தயார் என்று தலையூர் மன்னன் கடிதம் அனுப்பினானாம் - ஆனால் அந்தப் பொன்னர் - சங்கர் இருவரும் போரையே விரும்பினார்களாம்; என்ற பொல்லாத விமர்சனங்கள் நம்மைப் பற்றிப் புற்றீசல் போலப் புறப்படுவதற்கு எதற்காக நாம் வழி திறக்க வேண்டும்? மாயவரை அழைத்திருக்கிறான் - அதை மதித்து மாயவர் போகட்டும் - என்னதான் தலையூர் மன்னன் சொல்கிறான் என்பதைக் கேட்டு வந்து சொல்லட்டும் - அதற்குள் எதற்காக நாம் தேவையற்ற கற்பனைகளைச் செய்து கொள்ள வேண்டும்?''

''அழைக்கப்பட்ட மாயவருக்கு தலையூர் அரண்மனையில் ஏதாவது ஆபத்து விளைவிக்கப்பட்டால்?''

வீரமலை பொன்னரைப் பார்த்துக் கேட்டான். ''தலையூர்க் காளியை அவ்வளவு பண்பற்றவனாக நான் கருதவில்லை. தனக்காக இல்லாவிட்டாலும் தனது நாட்டு மக்களின் வெறுப்பை சம்பாதித்துக் கொள்ள அவன் ஒருக்காலும் விரும்பமாட்டான்! எதற்கும் இந்த சிக்கலான விஷயத்தில் மாயவர் அவர்களே இறுதி முடிவு எடுக்க வேண்டும்'' என்றான் பொன்னர்! அருக் காணித் தங்கம் மெல்லச் சிரித்தாள்; அந்தக் கோபத்திலும்!

''என்னம்மா சிரிக்கிறாய்?'' என்றான் பொன்னர்!

''ஒன்றுமில்லையண்ணா! தந்தை குன்றுடையாரைத்தான் எல்லோரும் அவரது வெகுளித்தனத்துக்காக மசச்சாமி என அழைப்பார்கள் - அப்படியே இல்லாவிட்டாலும் அதில் பாதி யளவு என் பெரியண்ணா இருக்கிறாரே என எண்ணினேன்! சிரிப்பு வந்தது!'' என்றாள் அருக்காணித் தங்கம்.

வீரமலையின் கையிலிருந்த கடிதத்தை மாயவர் வாங்கி, அதை ஒருமுறைக்கு இருமுறை தனது மனதிற்குள்ளாகவே படித்துப் பார்த்தார். அங்கு நடைபெற்ற சூடான விவாதத் தில் அவர் எந்தக் கருத்தும் சொல்லாமல் இருந்தார் எனினும் அவரது இதய அலைகள் ஓயவே இல்லை! கடிதம் எழுதப் பட்ட மர்மம் என்னவாக இருக்கும்? அவரால் அதற்கு விடை கண்டு பிடிக்கப்பட்டு விட்டது! தலையூரான் தனது தவறுகளை உணர்ந்திருக்கிறான் - தலையூர் மக்களிடம் நல்ல பெயர் எடுக்க விரும்புகிறான் - அவனால் ஒரு பெரிய போர்க்களத்தை சந்திக்க முடிகிறதோ இல்லையோ, இப்போது அதை அவன் விரும்பவில்லையென்று தெரிகிறது! சந்தர்ப்பம் அவனைத் திருந் தச் செய்திருக்கிறது என்றாலும் - அவன் செய்துள்ள பழைய பாபங்களுக்கு எளிதில் யார்தான் மன்னிப்பு வழங்கமுடியும்? ஒருவேளை அவன் நல்ல எண்ணத்துடன் செயல்பட முனைந்து - அதையும் தன் சூழ்ச்சிக்குச் சாதகமாகச் செல்லாத்தாக்கவுண் டர் பயன்படுத்திக் கொள்ளத் திட்டம் தீட்டியிருந்தால்? இப் படியெல்லாம் மாயவரின் சிந்தனையோட்டம் பெருகியது.

பொன்னர் சங்கரால் மக்களுக்கு நல்லாட்சி தரமுடியும் என்ற உண்மை; நிலைநாட்டப்பட்டு விட்டது. கொங்குக் குல மக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்கள் அவர்கள் என்ற நற் பெயரும் வளநாட்டுப் பகுதிகள் அனைத்திலும் பரவிவிட்டது. இனி அவர்கள், தாங்கள் எடுத்த சபதத்தை நிறைவேற்றக் களம் புகுவதால் மக்கள் சலிப்படைய மாட்டார்கள். தன்னை அழைத்துள்ள தலையூர்க்காளிக்கும் தெரியாமல் செல்லாத்தாக்

கவுண்டரால் ஏதாவது தனக்கு அபாயம் நேருமென்றால் அதுவே தலையூரின் மீது பொன்னர் சங்கர் படையெடுத்துப் பழி முடிக்கச் சரியான காரணமாக அமைந்துவிடும் என்றும் மாய வர் கருதினார்.

அவரது மௌனம் கலைந்தது! ஆனால் அவர் எண்ணியதை அப்படியே சொல்லவில்லை - தனக்குத் தலையூரில் ஆபத்து விளையக் கூடும்; அதுவே தலையூர் மீது படையெடுக்கக் கார ணமாக அமையும் என்பதை அவர் சொன்னால் - அவர் மீது அளவற்ற அன்பும் மரியாதையும் கொண்ட பொன் னரும் சங்கரும் மற்றவர்களும் அவர் தலையூர் போவதைத் தடுத்துவிடக்கூடும். எனவே அதைச் சொல்வதை அவர் தவிர்த் துக்கொண்டு ஒரு சிறு கனைப்புடன் பேச்சைத் தொடங்கினார்.

''தலையூர்க்காளியை அவ்வளவு மோசமான மனிதனாக முடிவு கட்டாதீர்கள்! பெருகியுள்ள வளநாட்டுப் படைபலம் கண்டும் கேட்டும் அவன் பயந்து போயிருக்கிறான் என்றே நான் நினைக்கிறேன். அதனால்தான் இப்போது இறங்கி வரு கிறான். என்னை அழைத்திருப்பதை ஒரு சதியென்று நான் கூறமாட்டேன். தலையூரின் பழைய அமைச்சர் என்ற மரி யாதையும் - அன்பும் என்றுமே அவனுக்கு என்பால் உண்டு! அழைப்பை ஏற்று அவனைச் சந்தித்துப் பேசித்தான் பார்ப் போமே! பேசுவதின் காரணமாக எல்லாமே முடிந்து விட்டது என்று ஏன் முதலிலேயே கணிக்க வேண்டும்?''

மாயவர் சொன்னதை ஏற்றுக் கொண்டவர்கள் போல ஆலோசனை மண்டபத்தில் இருந்தவர்கள் மௌனமாகக் காணப்பட்டனர். மாயவர், பொன்னரைப் பார்த்து - ''உம்! ஆகட்டும்! தலையூருக்கு ஒப்புதல் பதில் அனுப்புக!'' என்றார். உடனே பொன்னர், வீரமலையிடம் சொல்லி - தலையூர்த் தூதனை உள்ளே அழைத்து வருமாறு கூறினான். மாயவருடன் வீரமலையும் தலையூர் செல்வதென முடிவாயிற்று!

* * *

ஒப்புதல் கடிதத்துடன் வந்த தூதனைப் பாராட்டி, அவனுக்கு ஒரு முத்துமாலையைப் பரிசாக அளித்தான் தலையூர்க் காளி! மாயவர் வந்தால்; கடந்தகாலக் கசப்புகள் எல்லாம் மறைந்து மறுமலர்ச்சி தோன்றுமென அவன் மகிழ்ந்தான்! செல்லாத்தாக் கவுண்டரையும் மாந்தியப்பனையும் நோக்கி, "இனி எல்லாம் நல்லதாகவே நடக்கும்!" என்று கூறிப் பூரித்துப் போனான். அவர்களிருவரும், "ஆமாம்! ஆமாம்!" என்று தலையாட்டிக் கொண்டே மிக அற்புதமாக நடித்தபடி - பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டனர். அவர்கள் வகுத்த திட்டம் வாகைசூடப் போகிறது என்ற களிப்பு இருவர் முகத்திலும் பிரவாகமாகப் பொங்கியது.

# பன்றியுடன் பண்பாளர் நடத்திய போர்

45

செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் சேர்ந்தமர்ந்து சிந்தித்து வகுத்த திட்டம்தான் என்ன? ''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும்'' என்ற குறள் மொழிப்படி - குறை கண்ட இடத்து இடித்துச் சொல்லி குற்றம் நிகழாதவாறு தடுத்திடுகிற சான்றோர் அமையப் பெறாத ஒரு அரசனோ அல்லது அரசோ, அழிப்பதற்கு யாரும் இல்லாமலேகூடத் தானாகவே அழிந்து விடும் என்கிறபோது, குறையேற்படுமளவுக்கு நடந்து கொண்டோமே என்று கோலேந்திய மன்னன் உணர்ந்திடும்போது அந்தக் குறையை மலைகளாகக் குவித்துக் குற்றங்கள் மலிந்த ''கொற்றம்'' என்ற நிலையை ஏற்படுத்தித் தங்கள் தன்னலத்திற்காகக் குளிர் காய்வதற்குத் திட்டம் தீட்டுகிற தீயவர்கள் எந்தக் காலத்திலும் இருப்பாரன்றோ! குறைபாடுகளிலிருந்து மீள எண்ணுகிறவனைச் சுற்றிக் கொண்டு அவனை அதிலிருந்து எழவொட்டாமல் கனிவாகப் பேசியும் கசிந்துருகிப் பணிவிடை செய்தும் கழுத்தைப் பிடித்து அழுத்தி விடும் அந்தக் கயமைத்தனங்கொண்டோர் மனித குலத்தின் கரும்புள்ளிகளாகக் காட்சியளித்துக் கொண்டு தானேயிருக்கின்றனர்!

அந்த மனிதர்களுக்கு வேண்டியது தங்களின் சுகபோகம் - தமது சுற்றத்தார் இன்ப வாழ்வு - அதற்கு ஏணியாகப் பயன்படுகின்றவர் எவரோ, அவரை ஏற்றிப் போற்றித் துதித்துத் தொழுவது போல பாசாங்கு செய்துகொண்டே - எப்போது ஏறிய அந்த ஏணியினை எட்டி உதைத்துத் தள்ளலாம் என்ற சூதுமதியைக் கூர்மையாக்கிக் கொள்கிற சாதகச் சூழ்நிலைகளே தான்!

அத்தகைய ஒரு சாதகச் சூழ்நிலை இப்போது செல்லாத்தாக் கவுண்டருக்கும் அவர் மகன் மாந்தியப்பனுக்கும் வாய்த்துள்ள போது - அவர்களால் பேசாமல் இருக்க முடியுமா? தூசி எது

வும் படாமலே பூச்சி பொட்டு எதுவும் கடிக்காமலே தோல் பகுதியில் நமைச்சல் எடுப்பது போல - அவர்களின் நெஞ்சில் வஞ்சகம் வளைந்து நெளிந்தது! தீயோரின் இயல்பு அதுதானே!

மாயவர் தலையூருக்கு வந்து தன்னுடன் பேசுவதற்கு ஒப்புதல் அளித்துவிட்டார். அதனால் மகிழ்ச்சியுற்றிருந்த காளி மன்னன், அவரை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைக் கவனிப்பதில் கண்ணுங்கருத்துமாக இருந்தான். தனது ராஜப் பிரதானியரையெல்லாம் அழைத்து ஆலோசனை நடத்தினான். தலையூர் நாடும் அதன் துணைப் பகுதிகளாக விளங்கும் பதினெட்டு வேட்டுவர் குல நாடுகளும் பெரிதும் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டுள்ள இந்த நேரத்தில் - தலையூர் நாடு, போர் வெறியை அறவே விடுத்து அமைதி உருவாகச் செயல்படுவது தான் அறிவுடைமையாகும் எனத் தனது மனசாட்சி இடித்துரைத்ததாகவும் அதனால்தான் வளநாட்டுடன் சமரசம் செய்து கொள்ள மாயவரை அழைத்திருப்பதாகவும் ராஜப் பிரதானியிடம் விளக்கமளித்தான். மாயவர் வந்தவுடன் முதற்கட்டமாக அவருடன் காளி மன்னன் மட்டுமே தனித்து உரையாடுவதென்றும் - அடுத்த கட்டமாக ராஜப் பிரதானியர் கூட்டத்தில் விவாதிப்பதென்றும் முடிவாகியது. நாள் முழுவதும் போர் முரசத்தின் சப்தமே கேட்டுக் கொண்டிருக்கும் தலையூர் வீதிகளில் - இனிமேலாவது குடிமக்களின் வாழ்வுப் பிரச்சினையில் அக்கறை காட்டப்படுவதற்கான அறிகுறி தோன்றியுள்ளதே எனக் கூறி ராஜப் பிரதானியர் பெரும்பாலோர் களிப்படைந்தனர். காளி மன்னன், கோயில் பூசாரி செம்பகுலனை உடனே அழைத்து வரச் சொல்லி, மாயவர் வந்தவுடன் முதலில் காளி கோயில் பூஜைதான் நடைபெற வேண்டுமென்றும் - ஆலயத்தில் ஆயிரத்தெட்டு விளக்குகள் வைப்பதோடு, அம்மனுக்கும் வளநாடு, தலையூர் நாடு ஆகிய இருநாடுகளின் நன்மை கோரி லட்சார்ச்சனை தொடங்க வேண்டுமென்றும் ஆணை பிறப்பித்தான்.

அவன் மனத்திற்குள்ளேயே ஒரு கற்பனை - மாயவர் வந்து விட்டது போலவும் - அவருடன் மனம் விட்டுப் பேசியது போலவும் - அவரும் கடந்த காலத்து வேம்பனைய நிகழ்ச்சிகளையெல்லாம் மறந்துவிட்டு இனிய முடிவுகள் உதயமாக உதவியது போலவும்!

''என் அழைப்பு கண்டு ஒரு சிறிதும் சலனமடையாமல் தாங்கள் வந்தது எனக்கு மிக்க மகிழ்ச்சி!''

''தலையூர் மன்னனுக்கும் புதிய தெளிவு ஏற்பட்டுள்ளது கண்டு நானும் பேருவகை அடைகிறேன். படைக்கலன்கள் மூலம் மட்டுமே தீர்வு காணமுடியும் என்ற பிரச்சினைகளை இணக்கமாகக் கலந்துரையாடுவதின் மூலமும் தீர்த்துக்கொள்ள முடியும் என்ற எண்ணம் எழுந்துள்ளதே வரவேற்கத் தக்க தல்லவா?''

''தனிப்பட்ட முறையில் எனக்கும் பொன்னர் சங்கருக்கு மிடையே மூண்டுள்ள பகை பற்றி நான் கவலைப்படவுமில்லை. அதற்காக அஞ்சிடவுமில்லை. ஆனால் நான் பயப்படுவதெல் லாம், இந்தப் பகை வேட்டுவர், வேளாளர் எனும் இரு குலத் தாருக்கிடையே ஒரு நோய் போலப் பரவிடக்கூடுமோ என் பதற்காகத்தான்! அதை எப்படியும் தவிர்க்கவேண்டுமென்பதற் காகவே தங்களைச் சந்திக்க விரும்பினேன்!

''எனக்கும் அப்படி ஒரு பொதுவான கவலை உண்டு என்ப தால்தான் பொன்னர் சங்கருக்கு நிலைமையை எடுத்துக் கூறி, இங்கே வந்துள்ளேன். ஆனால் எனக்கொரு சந்தேகம்! இந்த சமரச ஏற்பாட்டுக்கு செல்லாத்தாக் கவுண்டர் குறுக்கே நிற்பா ரல்லவா?''

''அது தவறான சந்தேகம்! தங்களை அழைத்துப் பேசி இரு நாடுகளுக்கும் நட்பை ஏற்படுத்த வேண்டும் என்பதில் அவர் தணியாத ஆசை கொண்டவராக இருக்கிறார்.''

''அப்படி அவர் சொல்லக் கூடும். என்ன இருந்தாலும் வளநாட்டின் அதிபராக வாழ்ந்தவர் எத்தனை நாளைக்குத் தலையூரின் அரண்மனை விருந்தினராகத் தங்கியிருக்க, அவரது மனம் இடந்தரும்?

''அவரது ஒவ்வொரு அசைவுக்கும் அர்த்தம் கண்டு பிடிக் கும் ஆற்றலுடையவர் மாயவர் என்பது எனக்குத் தெரியாதா? சரியாகவோ தவறாகவோ நாடாண்டவர் அவர் என்பதை நாமும் எண்ணிப்பார்த்து, அவர் மூலம் சலசலப்பு எழாமல் ஒரு சமரசத்துக்கு வருவது நலம்.''

''இரண்டு சிங்கங்கள் இரையைப் பங்கிட்டுக் கொள்ளும் போது நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு தொலைவில் உட்கார்ந்திருக்கும் நரிக்கும் ஒரு எலும்புத் துண்டு தேவைப் படுகிறதோ?''

"அடடா! சரியாகச் சொன்னீர்கள்! அறிவுக் கருவூலமாயிற்றே தங்கள் மூளை! வள நாட்டுடன் தலையூர் இனி எந்த வம்புக் கும் வருவதில்லை. - அதேபோலத் தலையூர் மீது பழைய பகை பாராட்டி வள நாடும் செயல்படுதல் கூடாது! வள நாட்டை செல்லாத்தாக் கவுண்டரிடமிருந்து கைப்பற்றிக் கொண்டதற்கு ஈடாக சங்கர மலைக்கோட்டையையோ அல் லது குடையூரையோ அவருக்கு வழங்கி, அவரை வள நாட்டுக் கும் தலையூருக்கும் நண்பராக என்றென்றும் இருத்தல் வேண்டு மென நிபந்தனை விதிப்பது! இதுபோல ஒரு சமரச ஒப்பந்தம் செய்து கொள்ளலாமென்பதே என் கருத்து!"

"பங்காளிக் காய்ச்சலால் ஏற்பட்டதே இத்துணைப் பெரும் பகை என்பதை நானும் அறிவேன்! குன்றுடையானுடன் அப் போதே ஒத்துப் போயிருந்தால் செல்லாத்தாக் கவுண்டர் இப் போது தலையூர் வாசலில் தவம் கிடக்கத் தேவையில்லை! தற்காலிகமாகக் கிடைத்த வெற்றிகள் அவரைத் தலைகால் தெரியாத மனிதராக மாற்றி விட்டன! பரவாயில்லை - குடை யூர் மாளிகையா? அல்லது சங்கரமலைக்கோட்டையா? இரண் டில் எதை அவருக்குத் தருவதற்குப் பொன்னர் - சங்கர் சம்ம திப்பார்கள் என்பதை அவர்களுடன் பேசித்தான் தெரிந்து கொள்ள வேண்டும்!"

"இந்த ஒரு சந்திப்பில் எல்லாப் பிரச்சனைகளும் முடிந்து விட்டன என்று நான் கருதவில்லையெனினும் - நல்ல முடிவு களுக்கு இருநாடுகளையும் அழைத்துச் செல்ல ஒரு பாதை போடப்பட்டு விட்டதாகவே நம்புகிறேன்."

"நம்பிக்கை வீண் போகாது! அடுத்த சந்திப்பு தலையூர் வளநாடு ஒப்பந்தத்தில் இரு நாட்டு அரசுகளும் கையொப்ப மிடும் சந்திப்பாகவே இருக்குமென எதிர்பார்க்கிறேன்."

"எல்லாம் மாயவரின் கையில் தானிருக்கிறது.!"

தலையூர்க் காளி மன்னன், மாயவரைப் பரிவோடு தழுவிக் கொண்டு, அவரது கரங்களை எடுத்துக் கண்களில் ஒத்திக் கொள்கிறான்.

தனது கற்பனை, வெறும் கற்பனையாகவே போய்விடாமல் விரைவில் நடக்க வேண்டுமேயென்று கவலையுடன் எண்ணிய அவன், தலையூர் காளியம்மன் கோயில் இருக்கும் திசையை நோக்கிக் கை கூப்பித் தொழுது, "தேவீ! எல்லாம் நன்றாக

நடக்கக் கிருபை செய்யம்மா!'' என்று பிரார்த்தனை செய்து கொண்டான்.

செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பன் இருவரின் பிரார்த் தனை வேறாக இருந்தது! மாயவர் தலையூர்க் காளியை சந் திக்க முடியாமலே போய் விட வேண்டும்! வரும் வழியிலேயே மாயவருக்குப் பெரும் அபாயம் ஏற்பட வேண்டும்! அதன் காரணமாகப் பொன்னர் - சங்கருக்குத் தலையூர்க் காளியின் மீது கடுங்கோபம் விளைய வேண்டும்! அதனால்தான் தலை யூர் மீது அவர்கள் போர் தொடுக்க வேண்டும்! அந்த யுத்தத் தில் பொன்னர் - சங்கர் களத்திலேயே மாண்டுபோக வேண் டும்! வள நாட்டு ஆட்சியில் மீண்டும் செல்லாத்தாக் கவுண்டர் அமர வேண்டும். கொங்கு மக்களின் ஒரே அரசாக அவரது அரசு இருக்க வேண்டும்! இந்தப் பிரார்த்தனை நிறைவேற என்ன வழி? சதி முளைத்தாகி விட்டது - இனி அந்தத் திட் டம் செயல்படுவதற்கு முறைகளைச் சிந்தித்தாக வேண்டுமே!

தங்களின் துரோக மூளைகளுக்கு மற்றொரு துணை மூளை யாக உதவிடக் கூடிய அம்மன் கோயில் பூசாரி செம்பகுலனை அழைத்துப் பேசினார்கள்.

பேச்சு நடத்துவதற்காக மாயவரை அழைத்து, திட்டமிட்டு அவரை வழியிலேயே தலையூர்க்காளி தீர்த்துக் கட்டிவிட்டான் என்ற செய்தி பரவினால்தான் பொன்னர் - சங்கர் எரிமலை யெனப் பொங்கிக் கிளம்புவர் - போர் மூளும் - போன ராஜ்யம் திரும்பவும் கிடைக்கும்!

தலையூர்க் காளி ஒரு காட்டுப் பன்றியை வளர்த்து வரு வதும் அது செம்பகுலன் மேற்பார்வையில் வளர்வதும் அவர் களுக்கு ஞாபகம் வந்ததால்தான் அவன் உதவி முக்கியமாகத் தேவைப்பட்டது. செம்பகுலனுக்குப் பை நிறையப் பொன் கொடுத்தால் போதும், அம்மன் மீது பாரத்தைப் போட்டு விட்டு எந்த அநியாயமும் செய்வதற்குத் தயாராக இருப்பவன்! அவனுடைய உதவியினால்தான் குழந்தைகளாக இருக்கும் போதே பொன்னர் - சங்கரைத் தீர்த்துக் கட்டிவிட வேண்டு மென்று 'அம்மன் அருள் வாக்கு' என்று கதை கட்டி தலை யூர்க் காளியையே ஏமாற்றியவர்கள் அல்லவா - அதனால் இப்போதும் அந்த லஞ்சப் பேயைச் சுலபமாகத் தங்கள் பக்கம் இழுத்துக் கொண்டு விட்டார்கள். கொடுக்க வேண்டியதைக் கொடுத்து செம்பகுலனை வசப்படுத்திக்கொண்டு தங்களது சதித்திட்டத்திற்கு அவனிடமுள்ள தலையூர்க் காளியின் வளர்ப் புப் பன்றியைப் பயன்படுத்துவதெனத் தீர்மானித்தார்கள்.

அந்தக் காட்டுப் பன்றியுடன் நூறு பன்றிகள் எப்போதும் இருக்கும். எல்லாப் பன்றிகளுக்கும் காளி மன்னனின் வளர்ப்புப் பன்றிதான் ராஜா. அந்தப் பன்றி எங்கே சென்றாலும் மற்ற நூறு பன்றிகளும் பின்தொடரும். ராஜ விசுவாசமில்லாத விவசாயி என்று யாராவது குற்றம் சாட்டப்பட்டால் உடனே அந்தப் பன்றிகளைச் செம்பகுலன் அந்த விவசாயி வளர்க்கும் பயிர்களின் மீது ஏவி விடுவான் - ராஜா பன்றியின் தலைமையில் நூறு பன்றிகளும் அந்தப் பயிர் பச்சைகளை நொடியில் அழித்து நாசம் செய்து விட்டுத் திரும்புவது வாடிக்கை! இது அரசாங்க அதிகாரிகளுக்கு ஒரு வேடிக்கை!

செல்லாத்தாக் கவுண்டர் செம்பகுலனைத் தயார் செய்து அவனது மேற்பார்வையில் பன்றிகளை மாயவர் வரும் வழியில் தனது திட்டத்தை நிறைவேற்ற அனுப்பி வைத்தார். செம்பகுலன் இரவோடு இரவாக பன்றிப் படையை தலையூருக்கும் வளநாட்டுக்குமிடையே மதுக்கரை பகுதிக்குக்கொண்டு சென்றான்.

மறுநாள் காலையில் தலையூர் வந்து சேர்வதாக இருந்த மாயவரை வரவேற்று உபசரிக்கக் காளி மன்னன் விரைவாக எழுந்து, தயாராகிக் கொண்டிருந்தான். மாயவர் வந்ததும் காளி கோயில் பூஜைக்குப் போக வேண்டுமே என்பதற்காக - எல்லாம் தயாராக இருக்கிறதா எனக் கேட்டறிவதற்கு செம்பகுலனை அழைத்து வரச் சொன்னான். அழைக்கச் சென்ற வீரன், திரும்பி வந்து அரசனின் வளர்ப்புப் பன்றியும் அதனுடன் இருந்த பன்றிகளும் இரவு கொட்டடியிலிருந்து ஓடி விட்டதாகவும் அவைகளைத் தேடி செம்பகுலன் போயிருப்பதாகவும் செய்தி சொன்னான். வியப்புற்ற காளி மன்னனைப் பார்த்து, செல்லாத்தாக் கவுண்டர் - நமது நாட்டுப் பஞ்சம், பன்றிகளுக்குக் கூடச் சரியான தீனி இல்லை. - அதனால் அவைகள் கட்டுமீறிப் புறப்பட்டு எங்கேயாவது பயிர்ப்பச்சைகளை நாடிச் சென்றிருக்கும் என்று சமாளித்தார்.

அவர் சொன்னபடி அந்தப் பன்றிக் கூட்டம் மதுக்கரைக் கருகில் உள்ள பயிர்களை நாசம் செய்து கொண்டுதான் இருந்தது. அமராவதி நதியின் கிழக்குக் கரைக்கும் மதுக்கரைக்கும் இடையில் உள்ள பகுதிகளில் ஓரளவு வளர்ந்திருந்த பயிர் நிலங்களில் பன்றிகள் புகுந்து வெறியாட்டம் நடத்திக்கொண்டிருக்கும் பொழுதுதான் அந்த வழியாக மாயவர் இருந்த ரத வண்டியும் வந்தது. அதை வீரமலைதான் ஓட்டிக் கொண்டு வந்தான். ரத வண்டிக்கு இருபுறமும் இரு குதிரை வீரர்கள்

ஈட்டிகள் தாங்கிப் பாதுகாப்புக்காக வந்து கொண்டிருந்தனர். ஒரு புறத்தில் பஞ்சம் மிரட்டிக் கொண்டிருக்கும் போது - இன்னொரு புறத்தில் இருக்கின்ற விளைச்சலையும் பன்றிக் கூட்டம் பாழ்படுத்துவதைக் கண்டு மாயவர் துடித்துப் போனார்!

"அடப் பாவமே! என்ன அநியாயம்? தலையூர் நாட்டில் இந்தப் பயிர்களைப் பாதுகாக்கக் கூட ஆள் இல்லையா?''

மாயவர், அங்கலாய்த்தது கண்ட வீரமலை, அவரைப் பார்த்து,

"எதிரியின் நாடுதானே... எக்கேடு கெட்டால் என்ன? ''என்றான்.

"அப்படிச் சொல்லாதே வீரமலை! அரசு நமக்கு எதிரியாக இருக்கலாம் - எல்லா மக்களும் நம் மக்களே! அவர்களின் உயிர்வாழ்வுக்கான ஔடதமல்லவா இந்தப் பயிர் - இதனைப் பன்றிகள் அழிக்கின்றன. - இந்தக் கொடுமையை வேடிக்கை பார்ப்பதா? உடனே அந்தப் பன்றிகளை விரட்டுங்கள்!''

மாயவர் ஓங்கிச் சப்தம் போட்டார்! ரத வண்டியை நிறுத்தச் சொல்லி. அவரும் கீழே இறங்கி - பன்றிகளை விரட்டினார். பன்றிகள் ஓடாமல் அங்கேயே நின்று கொண்டிருக்கவே ஆத்திரப் பட்ட மாயவர் அவைகளை நெருங்கிச் சென்றார். அப்போதும் பன்றிகள் பயந்தோடவில்லை. அந்தச் சமயம் அங்குள்ள ஒரு பெரிய புதரிலிருந்து பயங்கரமான ஒரு ஒலி கேட்டது. பூசாரி செம்பகுலனின் ஒலிதான் அது. அந்தப் பன்றிகளை வெறி கொள்ளச் செய்வதற்கு அவன் வழக்கமாக எழுப்பும் ஒலி! அந்த ஒலி எங்கிருந்து வருகிறது என்று மாயவர் ஆச்சரியத் துடன் திரும்பிப் பார்ப்பதற்குள் பன்றிக் கூட்டம் அவர்மீது ஒருசேரப் பாய்ந்துவிட்டது. காளி மன்னனின் வளர்ப்புப் பன்றி மாயவரை ஒரு முட்டு முட்டிக் கீழே தள்ளியது. சற்றும் எதிர்பாராத நிலையில் மாயவரின் வாள் கீழே விழுந்து விடவே, அவர் தனது கரங்கள் கொண்டே அந்தப் பன்றி களோடு போரிட்டார். மாயவருக்கு ஏற்பட்ட ஆபத்து கண்ட வீரமலை பன்றிக் கூட்டத்தில் பாய்ந்து தனது வாளால் பல பன்றிகளின் குடலைக் கிழித்தும் - தலையைப் பிளந்தும் மாய வரைக் காப்பாற்றுவதற்காக அவர் அருகே சென்று விடத் துடித்தான். அவனைப் பின்பற்றி அவர்களுடன் வந்த இரண்டு வீரர்களும் குதிரை மீதமர்ந்தவாறே பன்றிகள் சிலவற்றின் மீது ஈட்டிகளைப் பாய்ச்சிக் கொன்றனர். ஆனால் தொடர்ந்து செம்பகுலன் புதர் மறைவில் இருந்து உசுப்பல் ஒலியை எழுப்

பிக் கொண்டேயிருந்ததால் நூறு பன்றிகளையும் வீழ்த்துவது என்பது வீரமலைக்கும் அந்த வீரர்களுக்கும் இயலாத ஒன்றா கவே இருந்தது. ஐம்பதுக்கு மேற்பட்ட பன்றிகள் பயிர்களுக்கு நடுவே உயிர்களை விடுத்துப் பாறைகளோடு பாறைகளாகக் கிடந்தன என்றாலும் அந்த பயங்கரமான ராஜாப் பன்றி மாயவரை விடுவதாக இல்லை. ஒரு கட்டத்தில் மாயவர் தரை யில் மல்லாந்து சாய்ந்துவிட, அந்த முரட்டுப் பன்றி அவர் மீது ஒரு சிறிய மலையைப் போல் உருண்டு கொண்டிருந்தது. அதைப்பார்த்து வெகுண்ட வீரமலை - ஒரு வீரன் கையி லிருந்த ஈட்டியைப் பிடுங்கி, அந்த ராஜாப் பன்றியின் விலா வுக்குக் குறி பார்த்து வீசினான். ஈட்டி பாய்ந்த பன்றி அந்தப் பகுதியே நடுங்கும்படி சப்தமிட்டது என்றாலும், ரத்தம் சொட் டச் சொட்ட - ஒரே பாய்ச்சலாக மாயவர் மீது பாய்ந்து அவரது நெஞ்சில் பலங்கொண்ட மட்டும் முட்டித் தானும் கீழே விழுந்தது.

வீரமலையும், வீரர்களும் மாயவரிடம் ஓடினர். ''அய்யா!'' என்று கதறினர். மாயவர், அவர்களைத் தனது அருள் சிந்தும் விழிகளால் நோக்கினார்! அவரது இதழ்கள் பொன்னர் - சங்கர் வாழ்க!'' என மெல்ல உச்சரித்தன! பின்னர் அந்த இதழ்களுக்குத் துணையாக அவரது இமைகளும் மூடிக்கொண்டன!

# 46

# மாயவருக்கு வரவேற்பு

மாயவரின் எதிர்பாராத முடிவு கண்டு அதிர்ந்து போன வீரமலை அந்தக் காட்டுப் பன்றிகளின் தாக்குதல் திட்டமிட்டு நடைபெற்ற ஒன்றாகவே இருக்க முடியும் என்ற தீர்மானத் துடன். அவைகளை உசுப்பி விடுவதற்காக எந்தப் புதரிலிருந்து ஒலியெழுந்ததோ அந்தப்புதரின் பக்கம் வாளை ஓங்கிக் கொண்டு ஓடினான். அவனையும் மீறிக் கொண்டு ஆவேசக் குரல் கிளப்பியவாறு பாய்ந்து வந்த அவனது பிடியில் சிக் குண்டால் சிதறிப் போய்விட வேண்டுமென நடுங்கிய செம்ப குலன் ஒரே பாய்ச்சலாகத் தன் குதிரையின் மீது பாய்ந்து அங்கிருந்து பறந்தான். வயல்கள், வரப்புகள், காடுமேடுகள், பள்ளங்கள் என்று பாராமல் குதிரை மிக வேகமாக அவனைச் சுமந்து கொண்டு ஓடியது.

எவனோ ஒரு கோழைத்தனம் கொண்ட கயவன் தன்னிட மிருந்து உயிர் தப்பிவிட்டான் என்ற ஏமாற்றத்துடன் வீரமலை மாயவரின் உடல் கிடக்கும் இடத்திற்கு வந்தான். துணைக்கு வந்த வீரர்களில் ஒருவன் விலாப்புறத்தில் காயமுற்று ரத்தம் வழிய ரத வண்டியில் சாய்ந்து கொண்டிருந்தான். மற்றொரு வீரனை வீரமலை உதவிக்கு அழைத்து மாயவரின் உடலைத் தூக்கி ரத வண்டியில் வைத்தான். அவனும் ரதத்தில் அமர்ந்து மாயவர் உடலைத் தன் மடி மீது படுக்க வைத்துக் கொண் டான். அப்போது அவன் கண்களில் தீப்பொறி பறந்து கொண்டிருந்தது! காயம்பட்ட வீரனை ரத வண்டியில் ஏறிக் கொள்ளச் சொல்லிவிட்டு மற்றொரு வீரனை ரத வண்டியை ஓட்டுமாறு பணித்தான். அந்த வீரன் ஏறி உட்கார்ந்து வீர மலையை சோகத்துடன் பார்த்தவாறு, ''வளநாட்டுக்குத்தானே?'' என்று கேட்டான்."

''இல்லை! வளநாட்டுக்கு இல்லை! தலையூருக்கு ஓட்டு! மாயவரின் முடிவுக்கு என்ன பதில் சொல்கிறான் தலையூர் மன்னன்? என்பதை நான் தெரிந்து கொண்டாக வேண்டும்!

"தன்னந்தனியாக இந்த நிலையில் அங்கே செல்வது உசிதமாகத் தெரியவில்லையே!''என்றான் அந்த வீரன்.

''திரும்பிவளநாடு சென்று பொன்னர் - சங்கர் முகத்தில் எப்படி விழிப்பது? மாயவரை அழைப்பது போல அழைத்து அவரது உயிரை அழிப்பதற்குத் திட்டம் போட்டிருக்கிறான் தலையூரான்! அந்தத் திட்டத்தில் வெற்றியும் பெற்றுவிட்டான். மாயவரின் உயிரைக் காப்பாற்ற முடியாதவனாகிவிட்ட நான், இனிமேல் அதற்கு மாற்றாகத் தலையூரான் தலையைக் கொண்டு செல்ல வேண்டும். இல்லையேல் என் பிணமும் தலையூரில் விழ வேண்டும். அஞ்சாதே! தலையூர் நோக்கி ரதத்தை ஓட்டு!''

வீரமலை உணர்ச்சி பொங்கக் கூவினான். அதற்கு மேல் எது பேசினாலும் எடுபடப் போவதில்லையென்று புரிந்து கொண்ட அந்த வீரன், ரத வண்டியைத் தலையூர்ப்பாதையிலேயே செலுத்தினான்.

''மன்னித்துக் கொள்ளுங்கள்! இப்படி ஆகி விட்டது என்ற செய்தியையாவது வளநாட்டுக்குச் சொல்லி அனுப்புவது நல்லதல்லவா?"

மெத்தப் பணிவுடன் அந்த வீரன், வீரமலையிடம் கேட்டான்.

'''செய்தி அனுப்பலாம்! ஆனால் யாரிடம் அனுப்புவது?'' என்று வீரமலை யோசித்தவாறு கூறிக் கொண்டே காயம்பட்டு ரதத்தில் சாய்ந்து கிடக்கும் இன்னொரு வீரனைப் பார்த்தான். அவன் பயணத்திற்குத் தகுதியுள்ளவனாக இல்லை என்பதை இருவரும் உணர்ந்து கொண்டனர்.

"இவன் நலமாக இருந்து இவன் மூலம் வளநாட்டுக்கு செய்தி அனுப்பினால் என்ன ஆகும்? உடனே சங்கர் தலையூர் மீது போர் தொடுக்கக் கூடும். போருக்கான ஆயத்தங்கள் எதுவுமே முடிவு பெறாமல் அவசரப்பட்டுப் படையெடுத்தால் அதன் விளைவு விபரீதமாகிவிடும். என்ன நடந்தாலும் சரி, மாயவர் மட்டுமல்ல — அவருக்காக நியாயம் கேட்டு வீரமலையும் அப்படிக் கேட்டதற்கான விலையை உயிராகவே கொடுத்தான் என்ற செய்தியும் சேர்ந்து போகட்டும் வளநாட்டுக்கு!"

உயிரை வெறுத்து சபதம் எடுத்துக்கொண்ட வீரமலையின் கண்கள் மாயவரின் உயிரற்ற உடலை ஆழ்ந்த வேதனையுடன் நோக்கின!

★ ★ ★

புதரிலிருந்து தப்பித்தோம் பிழைத்தோமென்று குதிரையேறிப் பறந்த செம்பகுலன் தலையூர் நாட்டுக்குள் நுழைந்து வடிவழகி யின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். குதிரையை வாயிற் புறத்தில் ஒரு மறைவான இடத்தில் கட்டிவிட்டு மளமளவென வடிவழகியின் அறைப் பக்கம் சென்றான். அறைக் கதவு திறந் தும் திறவாத நிலையில் இருந்தது. வடிவழகியின் ஆடையும் அப்படித்தான் இருந்தது. அவளது முழு உருவையும் அந்தக் கோலத்தில் செம்பகுலன் காண முடியாமல் அவளது மடி மீது மாந்தியப்பன் படுத்துக்கொண்டு, அவள் கையில் உள்ள கிண் ணத்து மதுவை உறிஞ்சிக் கொண்டிருந்தான். செம்பகுலனைக் கண்டு அவளொன்றும் நாணிக் கோணி எழுந்து விடவில்லை. நாணம் என்பது அவள் விருப்பங்கொண்டு காட்டக் கூடிய ஒரு நடிப்பே தவிர, இயற்கையான குணமாக அது, ஒரு வேளை சிறுமியாக இருந்தபோது இருந்திருக்கலாம்! மாந்தி யப்பனும் தடித்த தோலுடையவன் — செம்பகுலன் அதைவிட முரட்டுத் தோல் படைத்தவன்! எனவே அந்த மூவரிடையே வெட்கம் என ஒன்று எதிர் நிற்கவே வெட்கப்பட்டு விலகி விட்டது!

''செம்பகுலா! சென்ற காரியம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டுக் கொண்டே மாந்தியப்பன், வடிவழகியின் கன்னத்தைத் தன் கன்னத்தோடு சாய்த்துக் கொண்டான்.

''செம்பகுலன் எங்கு சென்றாலும் அது ஜெயம்தான்! பாவம், நமது ராஜா வளர்த்த காட்டுப் பன்றிகள் இரண்டும் செத்து விட்டன!''

''என்ன சொல்கிறாய்? காளி வளர்த்தது ஒரேயொரு பெரிய காட்டுப்பன்றிதானே! நீ இரண்டு பன்றிகள் என்கிறாயே?''

''நான் சரியாகத்தான் சொல்கிறேன். உண்மையிலேயே மன்னர் ஒரு காட்டுப் பன்றி வளர்த்தார் - மாயவர் என்ற ஒரு மதியூக அமைச்சரை வளர்த்தாரே, அதுவும் ஒரு காட்டுப் பன்றிதானே!''

''சபாஷ்! சபாஷ்! செம்பகுலா, சரியாகச் சொன்னாய்!'' என்று கலகலவென சிரித்துக்கொண்டே வடிவழகியின் ஆடை நழுவியிருந்த தோளை ஒரு கடி கடித்தான் மாந்தியப்பன்.

''அந்த இரண்டு காட்டுப் பன்றிகளும் செத்து விட்டனவா? நமது திட்டம் நிறைவேறி விட்டதா?''

வடிவழகியின் மடியை விட்டெழுந்து மாந்தியப்பன் அந்த அறைக்குள் நடனமாடத் தொடங்கிவிட்டான்.

''இதோ... நீ செய்த அபூர்வமான காரியத்துக்கு இவளையே இன்றிரவு பரிசாக ஏற்றுக் கொள்!'' என்று கத்தினான்!

செம்பகுலன் அந்தப் பரிசு கண்டு பல் இளிப்பவனாகத் தெரியவில்லை.

''பெண் தேவையில்லை எனக்கு! எனது ஆசையெல்லாம் பொன்! பொன்! அதைக் கொடுங்கள் போதும்!'' எனப் பல்லை இளித்தான்.

மாந்தியப்பன் ஒருக்கணம் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு யோசித்துவிட்டு, செம்பகுலனின் தோளைத் தட்டியவாறு, ''நமது திட்டத்தின் முதல் கட்டம் வெற்றிகரமாக முடிந்து விட்டது. இதன் தொடர்ச்சியாக அடுத்த கட்டம் ஆரம்பமாக வேண்டும்'' எனக் கூறியவன் வடிவழகியைப் பார்த்து ''நீ சற்று நேரம் வெளியில் இரு! நானும் செம்பகுலனும் தனித்துப் பேசவேண்டும்!'' என்றான். அவளும் இடையை நெளித்து அபிநயநடை போட்டுக் கொண்டு அடுத்த அறைக்குக் கிளம்பினாள். அப்போதும் மாந்தியப்பன் அவளை விடாமல் இறுக அணைத்து முத்தமழை பொழிந்து — பிறகு அவளை அந்த அறைப் பக்கம் இழுத்துக் கொண்டு போய் விட்டு வந்தான். செம்பகுலன், மாந்தியப்பனிடம், ''செல்லாத்தாக் கவுண்டரய்யா என்ன சொன்னார்? எனக்குச் சேர வேண்டிய பொன்னை என் வீட்டில் சேர்த்தாகி விட்டதா?'' எனக் கேட்டான்.

''அதெல்லாம் அப்போதே கொண்டு போய்க் கொடுத்தாகி விட்டது. இதோ அப்பாவின் யோசனைப்படி அடுத்த வேலை உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. அந்த வேலையைத் திறமையாக முடிப்பதற்காக அச்சாரமாக நூறு பொன்னை முடிந்து கொடுத்துப் போயிருக்கிறார்''.

மாந்தியப்பன் ஒரு சிறிய பொன் முடிச்சை செம்பகுலனிடம் கொடுத்தவுடன், அவன் நாக்கில் நீர் சொட்ட வேண்டியது தான் பாக்கி! கையூட்டுப் பெற்றுக்கொண்டு யார் கழுத்தையும் அறுப்பதற்கு மார்தட்டுகிற மனிதர்கள் எலும்புத்துண்டு கண்ட நாய்களை விடக் கேவலமாகத்தானே ஆகிவிடுகிறார்கள்.

''அடுத்த வேலை என்ன? அதைச் சொல்லுங்கள்!''

''செம்பகுலா! உன் ஆற்றல் முழுதும் காட்ட வேண்டிய வேலை அது! மாயவர் கொல்லப்பட்ட செய்தி கிடைத்தவுடன் பொன்னரும் சங்கரும் நாங்கள் எதிர்பார்க்கிறபடி தலையூர் மீது படையெடுப்பார்கள்! இருவரும் இணைந்து படை நடத்தி வந்தால் அவர்களை வீழ்த்துவது கடினம்.''

''அவர்களைப் போரில் பிரிக்க முடியாதே! அவர்களை எதிர்த்துத்தானே தீர வேண்டும்!''

''பொன்னரையும் சங்கரையும் பிரிப்பதற்குத்தான் உன் அறிவும் சாகசமும் பயன்பட்டாக வேண்டும். கொஞ்சம் பொறு! அதற்குத் தேவையான கருவி தயாராக இருக்கிறது!'' என்றவாறு மாந்தியப்பன் அந்த அறையிலிருந்த ஒரு பெட்டியைத் திறந்தான். அதற்குள்ளிருந்து இன்னொரு பேழையை வெளியே எடுத்தான். பளபளவென மின்னுகிற ஒரு கிளி ஒரு அழகான கூண்டுக்குள்!

''என்ன! இது? என்ன இது?'' கண்களை அகல விரித்துக் கொண்டு செம்பகுலன் ஆச்சரியத்தில் அமிழ்ந்து போனான்.

''இதுதான் மரகதப் பச்சை மாணிக்கக் கிளி! இதன் உடலைப் பார்த்தாயா? முழுவதும் மரகதம்? அலகு, விரல், நகம், கொண்டை அனைத்தும் மாணிக்கத்தால் ஆனது! இது சாதாரணக் கூண்டு அல்ல, வைரம் இழைத்த தங்கக் கூண்டு! பேழையோ வெள்ளி! இதைத்தான் அந்த ராக்கியண்ணன் பெரிய ரகசியமாக மூடிவைத்திருந்தான். என் தந்தை செல்லாத்தாக் கவுண்டரிடம் அவன் தந்திரம் செல்லுபடியாகுமா? எப்படியோ இதைக் கண்டுபிடித்துக் கொண்டு வந்துவிட்டார்! இந்தா, இதை எடுத்துக் கொள்!''

''என்ன? எனக்கா? உண்மையாகவா? என்ன சொல்லுவது என்றே எனக்குப் புரியவில்லையே!''

''புரியும்படி சொல்வதற்காக என் தந்தை தனது மாளி கையில் காத்துக் கொண்டிருக்கிறார். இதை எடுத்துக் கொண்டு அவரிடம் இப்போதே போ! அவர் எல்லாம் சொல்வார்!''

''மரகதம்! மாணிக்கம்! வைரம்! தங்கம்! இவ்வளவு விலை உயர்ந்த பொருளை என்னை நம்பிக் கொடுக்கிறீர்களே, எனக்கே என்னை நம்ப முடியவில்லையே!''

''ஆமாம் — மிக விலை உயர்ந்த பொருள்தான்! உன்னை நம்பித்தான் கொடுக்கிறோம் — அப்பாவிடம் போனால் அதற் கான விளக்கம் உனக்குக் கிடைக்கும்!''

இதைச் சொல்லிக்கொண்டே மாந்தியப்பன் மரகதப் பச்சை மாணிக்கக் கிளியை வைரமிழைத்த தங்கக் கூண்டுடன் வெள் ளிப் பேழையில் வைத்து — அந்தப் பேழையை ஒரு மரப் பேழையில் மூடி — அதைத் தூக்கி, செம்பகுலனிடம் கொடுத் தான். அவனும் அதை எடுத்துக்கொண்டு அங்கிருந்து கிளம்பி னான். அவன் போவதைப் பார்த்துக்கொண்டே மற்றொரு அறையிலிருந்த வடிவழகி, அவன் போய்விட்டான் என்பதை அவனது குதிரையின் குளம்படி ஓசையின் மூலம் தெரிந்து கொண்டு — மாந்தியப்பன் இருந்த அறைக்கு ஆடி அசைந்து வந்து சேர்ந்தாள். அவளை இழுத்துப் படுக்கையில் தள்ளி விட்டான். அவளோ அவனையும் இழுத்துக்கொண்டு படுக் கையில் வீழ்ந்தாள்.

* * *

மாலைப்பொழுது வானத்தில் செவ்வண்ணம் பூசிக் கொண் டிருந்தது. கருமை, வெண்மை, மஞ்சள், சிகப்பு எனப் பல நிறங்களில் தோய்த்தெடுத்த பஞ்சுப்பொதிகளை வாரி இறைத் தது போல மேகங்கள் விண்ணில் ஊர்ந்து கொண்டிருந்தன. அந்த வேளையில்தான் மாயவரின் உடலைச் சுமந்து கொண்டு வளநாட்டின் ரத வண்டி, தலையூர்க்கோட்டை வாயிலில் நுழைய முற்பட்டது! அந்த வண்டியை யார் பார்த்தாலும் உயிரற்ற ஒரு உடல் கிடத்தப் பட்டிருப்பதாக நினைக்க மாட் டார்கள். மாயவர் அசதிமிகுதியினால் ரதத்தில் தூங்கிக் கொண் டிருப்பது போலவே காணப்பட்டார். காயம் பட்டுச் சோர்ந்து போயிருந்த அந்த வீரனையும் ரதவண்டியில் காணவில்லை. ரதவண்டியை ஓட்டுகிறவன் — மற்றும் வீரமலை இருவர் மட்டுமே இருந்தனர்.

ரத வண்டியையும் — வளநாட்டுக்கொடி அதன் முகப்பில் பறப்பதையும் கண்ட தலையூர்க் கோட்டைக்காவலர்கள், அந்த வண்டியைத் தடுக்காவிடினும் அமைதியாக அருகில் சென்று மரியாதையாக விசாரணை செய்தார்கள்.

''வளநாட்டிலிருந்து வருகிறீர்களா?''

வீரமலை பொறுமையாகவும் நிதானமாகவும் பதில் சொன்னான். அவன் இதயம் கொதிக்கும் கொப்பரையாக இருந்தது. எனினும் அதை மறைத்துக் கொண்டு பேசினான்.

''தலையூர் மன்னர் அழைப்பின் பேரில் மாயவர் வந்திருக்கிறார். இதை உங்கள் மன்னருக்கு அறிவியுங்கள்.''

''மாயவரா? ஆமாம், மாயவரேதான்! எங்கள் மாயவரை எங்களுக்குத் தெரியாதா, என்ன? அது சரி, மாயவர் ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறார்! அவருக்குத் தூங்கி வழிகிற பழக்கமே கிடையாதே!''

கோட்டைக் காவலர்கள் விளக்கம் பெற ஆவல் காட்டினார்கள்.

''தூங்காதவர்தான்! என்னதான் இருந்தாலும் வயது என ஒன்றிருக்கிறதல்லவா? பயணக் களைப்பு — அதனால் சற்றுக் கண்ணயர்கிறேன். தலையூர் மன்னரிடம் சென்ற பிறகு எழுப்பினால் போதுமென்று உத்திரவிட்டுள்ளார்! அவர் விழித்துக் கொண்டிருந்தால்தான் அனுமதிப்பீர்கள் என்றால், அவரது உடல் நலிவையும் பொருட்படுத்தாமல் எழுப்பி விடுகிறேன்!''

''அய்யோ! வேண்டாம் — வேண்டாம்! ரதத்தைக் கொஞ்சம் மெதுவாகவே ஓட்டிக் கொண்டு வாருங்கள்! நாங்கள் மன்னரிடம் சென்று செய்தி தெரிவிக்கிறோம். — மன்னர், மாயவரை வரவேற்று உபசரிக்கக் காத்துக் கொண்டிருக்கிறார்'' என்று கூறிவிட்டு இரண்டு தலைமைக் கோட்டைக் காவலர்கள் குதிரைகளில் ஏறி கோட்டைக்குள் விரைந்தார்கள்! எஞ்சியிருந்த காவலர்களில் எட்டுக் காவலர்கள் மாயவரின் ரத வண்டியைச் சூழ்ந்த வண்ணம் குதிரைகளில் அமர்ந்து, ரதத்தின் வேகத்திற்கேற்ப மெல்லச் சென்று கொண்டிருந்தார்கள்.

விரைந்து சென்ற தலைமைக்காவலர்கள் காளி மன்னனின் ஆலோசனை மண்டபத்தில் நுழைந்து அவனுக்குத் தலை தாழ்த்தி வணக்கம் தெரிவித்தனர். நெடுநேரமாகக் காத்துக்

கொண்டிருந்த காளி மன்னன், அந்தக் காவலர்களை ஆவ லுடன் நோக்கி ''என்ன — மாயவர் வந்து விட்டாரா?'' எனக் கேட்டான்.

''ஆம்! வந்து விட்டார் — கோட்டை முகப்பு கடந்து, அரண்மனை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்!''

''அப்படியா? இதோ வந்து விட்டேன் — அவரை வர வேற்க நமது அரண்மனை வாத்தியக் குழுக்கள் தயாராகட்டும்! அவர் வரும் வழியில் இருபுறமும் அரண்மனைத் தாழ்வாரத் தில் பெண்கள் நின்று மலர் தூவிடச் சொல்லியிருந்தேனே, அவர்களையெல்லாம் தயாராக நிற்கச் சொல்லுங்கள்! அரண் மனையின் மங்கல முரசம் கொட்டப்படட்டும்! அவருக்கு அணிவிக்க முத்தாரம் எங்கே?''

முத்தாரம் இருந்த தட்டு ஒன்று தலையூர்க் காளிக்கு முன் னால் நீட்டப்பட்டது. அதைத் தனது கையில் எடுத்துக்கொண்டு மன்னன், மாயவரின் கழுத்தில் அணிவித்து வரவேற்க அரண் மனை வாசலுக்கு வந்துவிட்டான்.

மங்கல வாத்தியங்கள் — பேரிகைகள் முழங்கத் தொடங்கின!

மாயவரை வரவேற்பதற்காக முரசு அதிர்ந்தது!

மாயவர் இருந்த ரத வண்டி அரண்மனை வாசலுக்கு அருகே வந்து விட்டது.

# மீண்டும் ஒரு சமரசத் தூது!

47

வாசலில் தலையூர்க்காளியைப் பார்த்த வீரமலை, தனது நெஞ்சில் வெடித்துக் கொண்டிருக்கும் எரிமலையை மிகவும் சிரமப்பட்டு வெளிக்காட்டாமலே ரத வண்டியிலிருந்து கீழே இறங்கினான்.

''நான்தான் வீரமலை! வளநாட்டுத் தளபதி!'' எனத் தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டவன், ''மாயவர் வருகைக்காகக் காத்திருக்கிறீர்கள் போலும்!'' என்று கேட்டான். ''ஆம்!'' என்று தலையூர்க்காளி தலையசைத்துப் புன்னகை புரிந்தவாறே ரத வண்டியை நோக்கினான்.

''உங்கள் விருப்பப்படியே மாயவரைக் கொண்டு வந்திருக்கிறேன்!''என்று வீரமலை சொன்னதும் காளி மன்னனுக்குத் தூக்கி வாரிப்போட்டது!

''என்ன? கொண்டு வந்திருக்கிறாயா? உன் பேச்சுக்குப் பொருள் புரியவில்லையே!''

''புரியாது மன்னா; புரியாது! மாளிகைகள் பல சூழ்ச்சிக் கிடங்குகளாக மாறியுள்ள கதைகளை நான் கேட்டிருக்கிறேன்! அதிலும் தலையூர் மாளிகை, தர்மத்துக்குக் கல்லறை எழுப்பி விட்டு அந்தக் கல்லறை மீதமர்ந்து ராஜதந்திரங்களை வகுக்கக் கூடியது என்பதை அறிந்துமிருக்கிறேன். ஆனால் எவரிடம் அரசியலைக் கற்றுக்கொண்டாயோ - எவர் தந்த பயிற்சியினால் ஆட்சிக் கோலேந்தும் ஆற்றலைப் பெற்றாயோ - எவர்; நீயும் இந்த நாடும் வீண் ஆரவாரங்களாலும், விரோத உணர்வுகளாலும், பழிவாங்கும் போக்கினாலும் வீழ்ந்துபோய் விடக் கூடாது எனக் கவலைப் பட்டாரோ, அவரையே உனது சதிக்கு இலக்காக ஆக்கிடுவாய் - சவமாகச் சாய்த்து மகிழ்ந்திடுவாய் என நான் எதிர்பார்க்கவே இல்லை!''

வீரமலையின் ஆவேசச் சொற்களைக் கேட்டுக் காளி மன்னன் துடித்துப் போனான்! என்ன? என்ன? என்று கேட்டுக் கொண்டே ரதவண்டியில் ஏறி, மாயவர் உடலைப் பரபரப்புடன் தொட்டான். வீரமலையினால் சாய்த்து வைக்கப்பட்டிருந்த மாயவரின் உடல் ரதவண்டிக்குள் சரிந்தது. காளி மன்னனின் நெற்றிப்பொட்டில் ஆயிரம் சம்மட்டிஅடிகள்! நெஞ்சில் இடி, மின்னல், புயல்!

''வீரமலை! இது எப்படி நடந்தது? மாயவர் உண்மையிலேயே இறந்து விட்டாரா?

''பிறகென்ன? கூடு விட்டுக் கூடு பாய்ந்து விட்டாரா? திட்டமிட்டு வரும் வழியிலேயே அவரைத் தீர்த்துக்கட்டியதுமில்லாமல் மிகத்திறமையோடு நடித்து வேறு காட்டுகிறாய்!''

''இல்லையப்பா இல்லை! வீரமலை! என்னை நம்பு! அப்படி எந்தத் திட்டமும் இல்லை! மாயவருக்கும் எனக்குமிடையே மனக்கசப்பு வளர்ந்ததுண்டு - அதன் காரணமாக அவர் மாற்றார் முகாம் வந்தடைந்ததும் உண்டு - ஆனால் எந்தவொரு சமயத்திலும் அவரை நான் மதிக்கத் தவறியதுமில்லை. மரியாதைக் குறைவாக நினைத்ததுமில்லை! இப்போதும் அவரைக் கொண்டு இரு நாட்டுப் பகையைத் தீர்த்துக்கொள்ள எண்ணியது உண்டே தவிர, அவரையே தீர்த்துக்கட்ட வேண்டுமென்ற கொடுஞ் சிந்தை இல்லவே இல்லை!''

''தலையூர் மன்னா! மாயவரின் சாவுதான் உன் லட்சியமென்றால் அவர் இங்கே வந்து உன்னிடம் பேச்சுவார்த்தை நடத்தும்போது அவர் மார்பில் உன் வாளை நுழைத்துக் கொன்று குவித்திருக்கலாம் - அல்லது விருந்து வைப்பதாகச் சொல்லி விஷத்தைக் கலந்து அவரை மாய்த்திருக்கலாம். உன் கோட்டைக்குள்ளே அவரைக்கொல்வதற்கு எத்தனையோ வழியிருக்கக் கேவலம் காட்டுப் பன்றிகளை ஏவிவிட்டு அவர் வாழ்வை முடித்துவிட்டாயே, இதைவிடக் கோழைத்தனம் வேறு ஏதாவது இருக்க முடியுமா?''

''காட்டுப்பன்றிகளா? நான் ஏவிவிட்டேனா? இல்லை! நிச்சயமாக இல்லை! வீரமலை. நீ சொல்வது எனக்குப் புதிராக இருக்கிறது. என்ன நடந்தது? விளக்கமாகச் சொல்!''

''மன்னா! மலையை விழுங்கிவிட்டு எலியை விழுங்கியவனைப் போல ஏப்பம்விட உனக்குத் தெரியும் என்பது எனக்

குத் தெரியும்! உன் ஏமாற்று நாடகம் - எத்தனுக்கு மட்டுமே உரிய வித்தகப்பேச்சு - இவைகளால் என்னை முட்டாளாக்கி விட முடியாது! மாயவர் வரும் வழியில் மதுக்கரையோரமுள்ள காடு கழனிகளில் நீ காட்டுப்பன்றிகளைக் கொண்டு அவரை வளைக்கச் சொன்னது பொய்யா? பன்றிகளின்மீது பழியைப் போட்டு ஒரு நல்லவரை - வல்லவரை - தலைசிறந்த ராஜதந்திரியை ஒழித்துக்கட்ட வலைபின்னியதும் பொய்யா? சிறந்த மேதையொருவரை சிறு பூச்சிபோல சிக்கவைத்து இருந்த இடத்திலிருந்தே அவரை இரையாக்கிக்கொண்ட சிலந்தி நீ! இந்தக் கொடுமைக்கு நீ பதில் சொல்லியே ஆகவேண்டும்! மாயவரைப் பத்திரமாகத் திரும்பவும் வளநாட்டுக்கு அழைத்துச்செல்ல முடியாதவனாகிவிட்ட நான், பழிக்குப் பழி - ரத்தத்திற்கு ரத்தம் - தலையூர்க்காளியின் தலையோடுதான் பொன்னர் - சங்கரைப் போய்ப் பார்ப்பேன்! இல்லாவிட்டால் மாயவரைப் போல என் பிணம்தான் இந்த மண்ணில் விழும்!''

சிங்கமென கர்ச்சித்துக் கொண்டு வீரமலை தலையூர்காளியை நோக்கி ஓங்கிய வாளுடன் பாய்ந்தான். அதற்குள் தலையூர் வீரர்கள் அவனையும், காளி மன்னனையும் சூழ்ந்து கொண்டு வளையம் அமைத்து நின்றுவிட்டனர். தலையூர் வீரர்களின் வாட்கள் வீரமலையின் நெஞ்சை நோக்கி நிமிர்ந்து நின்றன!

காளி மன்னன் எவ்விதப் பரபரப்பும் அடையாதவனாகத் தனது மெய்க்காப்பாளர்களைப் பார்த்து, ''பொறுமையாக இருங்கள்! வீரமலையை ஒன்றும் செய்துவிடாதீர்கள்!'' எனக் கையமர்த்தினான். ஆனால் வீரமலையின் ஆவேசம் பன்மடங்கு அதிகமாயிற்றே தவிர குறையவில்லை! ''எத்தனை பேர் என்னை முற்றுகையிட்டாலும் கவலையில்லை! நான் இப்போது காட்டாற்று வெள்ளம் - கரையுடைத்துப் புறப்படுவேன்! காளி மன்னா! உன் தலையுடைத்த பிறகே அமைதி அடைவேன்!'' என்று கத்திக்கொண்டு, தன்னைச் சுற்றியிருந்த வீரர்களை உதைத்துத் தள்ளி முன்னேற முயன்றான்.

''வீரமலை! நான் சொல்வதைக் கேள்! என் விளக்கம் உனக்குத் திருப்தியளிக்காவிட்டால் பிறகு நமது வாட்கள் பிரச்சினையைத் தீர்க்கட்டும்!'' என்று உரத்த குரலில் காளி மன்னன் சொன்னதை காதில் போட்டுக் கொள்ளத் தயாராயில்லை.

''சமாதானம் பேச அழைத்து சதி வலை பின்னிய உனக்கு அறிவுரை ஒரு கேடா? ஆண்மையிருந்தால் எடுத்துக்கொள்

உன்வாளை!'' என்று முழங்கிக் கொண்டே, காளி மன்னனை நோக்கிப் போனான் அவன்! அதற்கு மேலும் அவனை அனுமதித்தால் நிலைமை விபரீதமாகிவிடுமென எண்ணிய தலையூர் மெய்க்காப்பாளர்கள் வீரமலையின் மீது திடீரெனப் பாய்ந்து அவனைப் பிடித்துக் கொண்டனர். அப்படியொரு தாக்குதலை எதிர் பார்த்தவனைப் போல வீரமலை, தனது வாளைச் சுழற்றி அந்த வீரர்களை எதிர்த்துப் போராடினான். அவர்களது பிடி தளர்ந்தது. வீரமலையை விடுத்துச் சிதறி விழுந்தனர். விழுந்தவர்களும், விழுந்தவர்கள் போக எஞ்சியிருந்தவர்களும் தேன்கூட்டிலிருந்து ஏக காலத்தில் கிளம்பிய தேனீக்களைப் போல வீரமலையைச் சுற்றிக்கொண்டனர். அவர்களது வாட்கள் ஒரே சமயத்தில் வீரமலையின் உடலைத் துளைத்துக் கீழே தள்ளிவிடும் என, காளி மன்னனே கூட அதிர்ச்சியடைந்த போது, வீரமலை தனது போர்த் திறம் காட்டி ஒரே வீச்சில் அத்தனை வாட்களையும் பறந்தோடச் செய்தான். வாட்களை இழந்தோர் வீரமலையை விட்டுவிடவில்லை. தங்கள் உடலில் ஏற்படும் மின்னல் வேகக் காயங்களைப் பொருட்படுத்தாமல் சிலர் உயிரிழந்தாலும் பரவாயில்லையென்று அவனை மிக நெருக்கமாகச் சூழ்ந்து கொண்டனர். அந்த இக்கட்டிலிருந்து தப்புவதற்கு வீரமலை, தரையில் காலை வேகமாக ஊன்றி அத்தனை பேருடைய தலைகளுக்கு மேலாக எழும்பிக் குதித்து மேலே கிளம்பியபோது காளி மன்னன் அவனைக் குறி பார்த்து வீசிய அழுத்தமான சுருக்குக் கயிற்றில் சிக்கிக் கொண்டான். கயிறு, வீரமலையின் உடலைப் பிணைத்ததுதான் தாமதம், தலையூர் வீரர்கள் மளமளவென அதனை இறுக்கி, வீரமலையை அசையவொட்டாமல் செய்துவிட்டனர்.

கட்டுண்டுவிட்ட வீரமலையை நோக்கி காளி மன்னன் நிதானமாக நடந்து வந்தான்.

''இப்போதுகூட வளநாட்டுத் தளபதியை என் வாளுக்கு இரையாக்க முடியும்! ஆனால் யுத்த தர்மத்தின் மீது நான் கொண்டுள்ள விசுவாசம் அதைத் தடுக்கிறது! சமாதானம் பேச அழைத்து, அதற்கிணங்க வந்தவர்களைக் கொல்லக் கூடாதல்லவா?''

காளி மன்னன் பேசியதை வீரமலை மிக அலட்சியமாகக் கேட்டான்! தனது வலது காலைத் தரையில் ஓங்கி உதைத்துக் கொண்டே மன்னனைப் பார்த்து அடிபட்ட புலி போல உறுமினான்!

''யுத்த தர்மம்! அதைக்கூடத் தலையூரில் படித்திருக்கிறீர்களா? அதைப் படித்துக் கிழித்த பலன் தான் பாதி வழியில் பன்றியை விட்டு எங்கள் பண்பாளர் மாயவரைக் கொலை செய்யத் தூண்டியதோ?''

''உண்மையை உணர முடியாமலும் - உணர்த்துவதற்கு முயன்றாலும் அதை ஏற்காமல் திரும்பத்திரும்பச் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பதும் நேரத்தை வீணாக்குவதில்தான் போய் முடியும்! இனிப் பேச்சில்லை! வீரமலையைக் கொண்டு போய் பாதுகாப்பாகவும் அதே நேரத்தில் வளநாட்டுத் தளபதி என்கிற மரியாதைக்கு இம்மியளவு குறைவும் வராமலும் சிறையில் வையுங்கள்!''

காளி மன்னன் கட்டளையை ஏற்று மெய்க்காப்பாளர்களும் தலையூர் வீரர்களும் வீரமலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து அழைத்துச் சென்றனர்.

''காளி மன்னா! இதுதான் உன் கடைசி ஆணையாக இருக்கும்! நான் அடைபடப்போகும் சிறையில் நீ அடைபடுவதற்கான நாள் அதிக தூரத்தில் இல்லை! என்று வீரமலை ஒலித்தது அந்த அரண்மனைச் சுவர்கள் அனைத்தையும் அதிரச் செய்தது.

தலையூர்க் காளியோ பதில் ஏதும் கூறாமல் - வீரமலையை வீரர்கள் அழைத்துக்கொண்டு போவதையும் அவன் ஏறு போல் மிடுக்குடன் நடந்து செல்வதையும் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். அவனது பார்வையிலிருந்து வீரமலையும் வீரர்களும் மறைந்த பிறகு அவன் மிகுந்த வேதனையுடன் சோகம் ததும்பிய முகத்தினனாக மாயவர் உடலிருக்கும் ரதவண்டியிடம் வந்தான். சற்றுத்தொலைவில் முத்துமாலையுடன் தட்டேந்தி நின்றவனை ஜாடைகாட்டி அருகழைத்தான். தட்டில் இருந்த முத்து மாலையை மீண்டும் கையில் எடுத்தான். மாயவரின் நிலை கண்டு அவன் கரத்திலிருந்த முத்தாரம் மீண்டும் தட்டுக்குச் சென்றபோது இருந்த வேகம் இப்போது இல்லை. சோக இழையோடும் பின்னணியில் அந்த முத்துமாலையை மாயவரின் கழுத்தில் அணிவித்தான். அவன் விழிகளில் கண்ணீர் துளிகள் எட்டிப் பார்த்தன.

தனக்குத் தெரியாமல் ஏதோ நடக்கக்கூடாதது நடந்துவிட்டது என்ற மனக்குழப்பத்தில் அவன் தள்ளாடித் தடுமாறினான். அடுத்து என்ன செய்வது என்று சிந்திக்கக்கூட முடியாமல் செயலற்றுப் போய்விட்டதாக அவன் உணர்ந்தான்.

அப்போது மிகவும் பதைத்துப் போனவர்களாக நடித்துக் கொண்டு செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் அங்கு வந்து சேர்ந்தனர். செல்லாத்தாக்கவுண்டர், காளி மன்னனிடம் எதுவும் பேசாமல் நேரே மாயவரின் உடலருகே சென்று சிறிது நேரம் தலைகுனிந்து நின்றார். தன்னுடலில் போர்த்தியிருந்த பட்டுப் பீதாம்பரத்தின் முனையை எடுத்து வாயைப் பொத்திக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுவது போல் பாசாங்கு செய்தார். மாந்தியப்பனோ தனது விஷக்கண்களை பூமியை நோக்கிச் செலுத்திக்கொண்டு சோகமே உருவமாக நிற்பது போல அசைவற்று நின்றான். அவர்களது நடிப்பைக் கவனிக் காதவனாகக் காளி மன்னன். மாயவரின் முகம் மரணத்திற்குப் பிறகும் அருள் மழைபொழிந்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். செல்லாத்தாக்கவுண்டர், காளி மன்ன னின் தோளில் கை வைத்து அவனை மெல்ல அசைத்தார். மன்னனும் அப்போதுதான் நினைவு வந்தவனாக அவரைப் பார்த்தான். செல்லாத்தாக் கவுண்டர் காளி மன்னனிடம் மிக நெருங்கி வந்து சோகத்தைப் பகிர்ந்து கொள்வது போல அவனைத் தழுவிக்கொண்டே பேசினார்.

''நாம் ஒன்று நினைக்கத்'தெய்வம் ஒன்று நினைத்து விட்டது!''

பெருமூச்சும் பேச்சும் கலந்து வந்தது - அப்போது மாந்தி யப்பன் மிகுந்த உருக்கமுடன் தனது தந்தையைப் பார்த்து, ''அப்பா! மாயவர் மரணம் எப்படி ஏற்பட்டது என்பதை நீங்களே விளக்குவது நல்லது!'' என்றான். செல்லாத்தாக் கவுண்டர், மாயவர் மரணம் குறித்து என்ன விபரம் கூறப் போகிறார் என்று காளி மன்னன் ஆவலுடன் எதிர்பார்த்து அவரது முகத்தையே உற்று நோக்கினான்.

''ஒன்றுமில்லை! விதி விளையாடிவிட்டது! வளநாட்டுடன் தலையூர் நாடு சமரசம் செய்து கொண்டு வேளாளர்களும் வேட்டுவர்களும் அமைதியான நல்வாழ்வு பெறவேண்டுமென்று தான் நல்லெண்ணத்துடன் அரிய முடிவு ஒன்றை எடுத்தோம். - மாயவர் மட்டும் உயிருடன் நமது தலையூர் மாளிகைக்கு வந்திருப்பாரேயானால் எல்லாம் நாம் நினைத்தது போல் நன்மையாகவே முடிந்திருக்கும். ஆனால் யாரும் எதிர்பாராமல் விதி விளையாடிவிட்டதே என் செய்வது?''

இதைக் கேட்ட காளி மன்னன், அவரைப் பார்த்து, ''எப் படி விதி விளையாடியது? என்னதான் நடந்தது? அதைச் சொல்லுங்களேன்!'' என்று பரபரப்புக் காட்டினான்!

''சொல்லுகிறேன் - சொல்வதற்குத்தானே அவசரமாக வந்தேன்! சொல்வதுதானே என் கடமை! மாயவரை காளியம்மன் கோயிலில் வரவேற்றுப் பூஜை நடத்தும் ஏற்பாடுகளை கவனிக்க செம்பகுலன் முழுமூச்சாக ஈடுபட்டிருந்தபோது அவனது பாதுகாப்பில் இருந்த நமது காட்டுப்பன்றிகள் கொட்டடிகளை உடைத்துக்கொண்டு வெளிக்கிளம்பி விட்டன. அவற்றைத்தேடிக் கொண்டுபோன செம்பகுலன் அவற்றைக் காணாமல் திரும்பிவந்து, மீண்டும் தேடுவதற்காக வேறு திசையில் ஓடியிருக்கிறான். அதற்குள், பன்றிகள், மதுக்கரையோரமுள்ள பயிர் பச்சைகளைத் தின்றும் நாசமாக்கியும் ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருந்திருக்கின்றன. அந்த வழியாக வந்து கொண்டிருந்த மாயவர் கண்களில் அந்தக் காட்சி பட்டு விடவே உடனே அவர் ரதத்தை விட்டிறங்கி பன்றிகளை விரட்டியிருக்கிறார். நமது அரண்மனை - பன்றியைத் தாக்கினால் அது சும்மாயிருக்குமா? காயம் பட்ட வேகத்தில் அது மாயவரின் உயிரைக் குடித்துவிட்டுத் தானும் அதே இடத்தில் மாண்டுவிட்டது! பாவம். பயிர்பச்சைகள் நாசமாகக் கூடாது என்று பரிவு காட்டப் போய் அந்தப் பரிவு மாயவரின் உயிருக்கே எமனின் பாசக்கயிறாக மாறி விட்டிருக்கிறது!''

காளி மன்னன் ஓரளவு ஆறுதல் பெற்றான்! மாயவர் சாவுக்கு எந்த சதித் திட்டமும் காரணமாக இருந்திருக்க முடியாது என்பதைச் செல்லாத்தாக் கவுண்டரின் விளக்கத்திலிருந்து அவன் தீர்மானித்துக் கொண்டதால் தனது மனச்சாட்சி அறிய மாயவரின் சாவுக்கு அவனோ அல்லது தலையூரோ பொறுப்பல்ல என்பதில் அவனுக்கு ஒரு நிம்மதி! செல்லாத்தாக் கவுண்டரிடம் மேலும் ஒரு விபரமறிய அவன் விரும்பினான்.

''இந்த உண்மை எப்படித் தெரிய வந்தது தங்களுக்கு?''

''இதே ரத வண்டியில் காயம் பட்டுக்கிடந்த ஒரு வீரன் - அதாவது வளநாட்டு வீரன் - அவனை நமது தலையூர் மருத்துவர் வீட்டில் வீரமலை சிகிச்சைக்காகச் சேர்த்துவிட்டுத்தான் இங்கே வந்திருக்கிறான். அந்த வீரனிடம் விசாரித்தேன். அவன்தான் வழியில் நடந்த விஷயங்களையும் - விதி எப்படி விளையாடி விட்டது என்பதையும் சொன்னான். பயிர்பச்சைகளை துவம்சம் செய்துகொண்டிருந்த பன்றிகளை விரட்ட மாயவர் மட்டும் முனையாமல் இருந்திருந்தால் இந்த விபரீதம் ஏற்பட்டேயிருக்காது!''

''நடந்தது ஒன்று - ஆனால் வீரமலை நினைப்பது ஒன்று! மாயவர் மரணம் - வீரமலையைச் சிறையிட்டிருப்பது - இந்தச் செய்திகளைக் கேட்டால் பொன்னர் - சங்கர் பொங்கியெழுந்து போருக்குத் தானே புறப்படுவார்கள்!''

''ஆமாம்! ஆனால் ஒன்று - அவர்களுக்குத் தவறான செய்தி போய்ச் சேருவதற்குள் சரியான தகவலை அவர்களுக்கு நாம் அனுப்பியாக வேண்டும். அது மட்டுமல்ல, இன்னமும் தலை யூர் நாடு வளநாட்டுடன் சமாதானம் செய்து கொள்ளவே விரும்புகிறது என்பதைப் பொன்னர் - சங்கருக்குத் திட்ட வட்டமாகத் தெரிவிக்கவேண்டும்.''

''ஓலையனுப்பி மாயவரை அழைத்தோம் - அது இப்படி யாகிவிட்டது! இனியொரு தூதுவரை அனுப்பி சமாதானப் பேச்சுக்குத் தயார் என்றால் அவர்கள் ஏற்றுக் கொள்வார்களா?''

''மாயவர் கொல்லப்பட்டது எதிர்பாராதது என்பதையும் - அவராலேயே அவருக்கு முடிவு ஏற்பட்டது என்பதையும் - அதைத் தவறாகக் கருதவேண்டாம் என்பதையும் - பழிக்குப் பழி என்று கர்ச்சிக்கும் வீரமலையை வேறு வழியின்றிதான் சிறையில் வைத்திருக்கிறோம் என்பதையும் - சமாதானப் பேச்சின் முதல் கட்டமாக வீரமலையை விடுதலை செய்யத் தயாராக இருக்கிறோம் என்பதையும் உடனடியாகப் பொன்னர் - சங்கருக்கு அறிவித்தாக வேண்டும்!''

''இதனை அவர்களுக்கு யாரை அனுப்பி அறிவிக்கலாம்? யாரை அனுப்பினால் நம்புவார்கள்? எனக்கு ஒன்றுமே புரிய வில்லையே! தலையூரான் யுத்த தர்மம் தவறி செயல்படுகிறான் என்ற களங்கம் ஏற்பட்டுவிட்டதாகவே நான் இன்னமும் கவலைப் படுகிறேன்!''

''அப்படியொரு கவலையே வேண்டாம்! போர் வேண்டாம் என்று பொன்னர் - சங்கரிடம் தெரிவிக்கவும் - சமாதானக் கொடியைப் பறக்கவிட அவர்களின் சம்மதத்தைப் பெறவும் - நம்மிடம் ஒரு சரியான ஆள் இருக்கிறான்!''

''யார் அது?''

''சொன்னால் ஆச்சரியமாக இருக்கும்! நண்பர்களை அனுப்பு வதைக் காட்டிலும் - யாரைப் பகையென்று கருதுகிறார்களோ அவர்களை அனுப்பினால் - அவர்களிடம் பொன்னர் - சங்கர் பவ்யமாக நடந்து கொள்வார்கள் என்பது நிச்சயமான உண்மை!''

''யாரை அனுப்பலாம் என்கிறீர்கள்?''

''என் மகன் மாந்தியப்பனையே அனுப்பலாம்!''

''என்ன? மாந்தியப்பனையா?''

''ஆமாம் - அவனே போய் தலையூர்த் தூதன் என்ற முறையில் பொன்னர் - சங்கரை நேரிலே சந்தித்து, எங்களுக்கு இனி வளநாட்டு ஆட்சி வேண்டாம் - நீங்களே வைத்துக் கொள்ளுங்கள் - என்று முடிவாகச் சொல்லி விட்டால், விட்ட தடா தொல்லையென்று அவர்கள் சமாதானப் பேச்சுக்குத் தயார் என சம்மதம் அளிப்பார்கள். அப்படி அவர்கள் உடன் படுவார்களேயானால் - சமாதானத்துக்குப் பிறகு அவர்கள் வரும்வரையில் மாயவரின் உடலை அடக்கம் செய்யாமல் இங்கேயே பதப்படுத்தி வைக்கப்படும் என்றும் மாந்தியப்ப னிடமே சொல்லி அனுப்பலாம். அவர்கள் மாயவரின் சவ அடக்கத்துக்கு வருவதற்குமுன்பே வீரமலையை விடுதலை செய்வதாக மாந்தியப்பனே அவர்களுக்கு உறுதி மொழியும் கொடுக்கலாம்!''

''எல்லாம் சரி, மாந்தியப்பனை அனுப்புவதுதான் எனக்குச் சரியாகப்படவில்லை - ஏதாவது மாந்தியப்பனுக்கு ஆபத்து நேர்ந்துவிட்டால்?''

உடனே மாந்தியப்பன் குறுக்கிட்டான்.

''எனக்காகக் கவலைப்படவேண்டாம். தலையூர்க் காளிக் காக என் உயிரே போவதாக இருந்தாலும் நான் தயங்க மாட் டேன். எங்களுக்கும் பொன்னர் - சங்கருக்கும் பங்காளிச் சண்டைதானே; அதனால் என்னை நேரில் பார்த்தால் பகை விலகும்! பங்காளி உறவுதான் மேலோங்கி நிற்கும்! நானே வளநாடு செல்கிறேன்- மாயவர் மரணத்தால் இரு நாடுகளுக்கு மிடையே புதிய பகை உருவாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டி யதும் - உறவு மலர்ந்திடப் பாடுபட வேண்டியதும் என் பொறுப்பு! அதற்காக உயிரைப் பரிசாக வழங்க வேண்டு மெனில், கடவுள் சித்தம்! அப்படியே ஆகட்டும்!''

இதைச் சொல்லிவிட்டு மாந்தியப்பன் தனது கண்களைத் துடைத்துக் கொண்டான்.

தர்மத்தைப் பற்றிய சிந்தனை - தந்திரக்காரர்களின் அணுகு

முறை - இரண்டுக்குமிடையே ஊசலாடிக் கொண்டிருந்த - தலையூர்க்காளி மன்னன், செல்லாத்தாக் கவுண்டரின் யோசனையை ஏற்றுக் கொண்டான்.

மாயவர் உடலைப் பத்திரப் படுத்த வேண்டிய பணிகளை செல்லாத்தாக் கவுண்டரை கவனிக்குமாறு கேட்டுக்கொண்டு - மாந்தியப்பனிடம் வளநாட்டுக்கு ஓலை கொடுத்து அனுப்புவதற்காக அவனை அழைத்துக்கொண்டு காளி மன்னன் அரண்மனைக்குள் வேகமாகச் சென்றான். மாந்தியப்பனை செல்லாத்தாக் கவுண்டர் கடைக்கண்ணால் நோக்கினார். அந்தப்பார்வை மாந்தியப்பனுக்குப் பல செய்திகளைக் கூறியது! தந்தையின் திட்டப்படி நடப்பேன் என்பது போல அவன் தலைநிமிர்ந்து வெற்றி நடை போட்டுக்கொண்டு காளி மன்னனைப் பின் தொடர்ந்தான்!



# முதல் முயற்சி வெற்றி! 48

மாந்தியப்பன், தலையூர்க்காளியிடம் ஓலையைப் பெற்றுக் கொண்டு வளநாடு நோக்கிப் புறப்படுவதற்குள்ளாகவே மர கதப் பச்சை மாணிக்கக் கிளியுடன் செம்பகுலன் வளநாட்டு எல்லையை மிதித்துவிட்டான். தலையூர்க் காளியம்மன் கோயில் பூசாரி செம்பகுலனாக அவன் தோற்றமளிக்கவில்லை. வேட்டை யாடுவதையே தொழிலாகக் கொண்ட வேடன் உருவில் அவன் தோற்றமளித்தான். தலையில் வேடர்கள் கட்டிக்கொள்ளும் உருமாலை! கழுத்தில் சங்குகள் கோக்கப்பட்ட மாலை! தோளில் தொங்கிய நிலையில் ஒரு வில்! மற்றொரு தோளில் அம்புக் கூடு! மரகதப்பச்சை மாணிக்கக்கிளியின் கூண்டு அடங்கிய வெள்ளிப் பேழையை மூடிக்கட்டப்பட்ட ஒரு துணி மூட்டை அவன் கையில் இருந்தது! தலையூரிலேயே அவனை யாராவது திடீரெனப் பார்த்தால் செம்பகுலன் என்று அடையாளம் காண இயலாது — அந்த அளவுக்குத் தன் தோற்றத்தை மாற் றிக்கொண்டு குதிரையை மிக வேகமாகத் தட்டி ஓட்டிச் சென்ற அவன், வளநாட்டு எல்லைப் பகுதி வந்ததும் குதிரையை விட் டிறங்கி, கானகத்திலிருந்து—நகர் நோக்கிச் செல்லும் ஒரு வேட னைப் போலவே கால்நடையாக வந்துகொண்டிருந்தான்.

அவனுடைய உள்ளம் — செல்லாத்தாக் கவுண்டர் சொல் லிக் கொடுத்திருந்த சூழ்ச்சித் திட்டங்களில் ஆழமாகப் பதிந் திருந்தது. முதல் கட்டமாக பொன்னரையும் சங்கரையும் பிரித்து வைப்பதற்கான சூழ்ச்சியில் வெற்றி பெற வேண்டும். அதற்குத் தனது திறமையை எப்படிக் காட்டுவது? பொன்னரும் சங்கரும் அரண்மனையில் இருந்தாலும் வெளியில் உலவச் சென்றாலும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவதில்லை — அப்படிப்பட்டவர்கள் தலையூர் மீது போர் தொடுத்துவிட்டால் நிச்சயம் பிரிந்திருக்க மாட்டார்கள். ஆனால் அப்படி ஒரு போருக்கு முன்பே அவர் களைப் பிரித்து வைக்கும் சூழ்ச்சியில்தானே தலையூரின் வெற் றியே இருக்கிறது. அந்த சூழ்ச்சி நிறைவேறுவதற்கு செல்லாத் தாக் கவுண்டர் வகுத்துக் கொடுத்துள்ள திட்டப்படியே முன்

முனை கூட முறிந்து விடாமல் நடக்கவேண்டுமெனத் தீர் மானித்துக்கொண்டு முதலில் பெரிய காண்டியம்மன் கோயி லுக்குப் போவதென்று முடிவு செய்தான்.

வளநாட்டு எல்லையையொட்டிய பகுதியில் பெரியகாண்டி யம்மன் கோயில் இருந்தாலும் வளநாட்டு அரண்மனைக்கு மேற்குத் திசையில் சற்று தொலைவில் அமைந்த இடம் அது என்பதை அறிந்திருந்த செம்பகுலன், வழியில் வந்த சிலரிடம் எதற்கும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக அவர்களைப் பார்த்து அந்தக் கோயி லுக்கு எந்தப் பாதையில் போக வேண்டுமென்று விசாரித் தான். அவர்களில் ஒருவன், செம்பகுலனை ஆச்சரியத்துடன் நோக்கி, ''உன்னைப் பார்த்தால் வேடனைப் போல் தெரி கிறது. உனக்கென்ன பெரியகாண்டி கோயிலில்வேலை?'' என்று கேட்டான்.

''ஏன்? அந்தக் கோயிலில் வேடர்களுக்கு அனுமதி கிடை யாதா அம்மனை வணங்க?'' என்று செம்பகுலன் திருப்பிக் கேட்டான்.

''வேடர்கள் என்ன, ஆண்களாகப் பிறந்தவர்கள் யாருமே இப்போதெல்லாம் அந்த ஆலயத்துக்குள் நுழையமுடியாது! பொன்னர் சங்கர் மட்டுமே போகலாம் — இது அரண்மனை உத்திரவு!'' என்று சொல்லிக் கொண்டே வழியில் வந்தவர்கள் போய் விட்டார்கள்.

ஒருக்கணம் நின்று செம்பகுலன்யோசித்தான். ஆயிரக்கணக் கான தேள் கொடுக்குகளால் ஆன அவனது மூளையில் விஷச் சிந்தனைக்குத் தடை ஏது? அவனையறியாமல் ஒரு சிரிப்பு! பெரியகாண்டியம்மன் கோயிலுக்குச் செல்லும் வழியில் வேக மாக நடந்தான்.

''ஏய்! யாரது? நில்!'' என்று ஒரு பெண்ணின் குரல் கோப மாக ஒலித்து அவனைத் தடுத்து நிறுத்தியது. ஆலயத்து வாச லில் காவலுக்கு நின்ற கன்னிப் பெண்ணின் குரல்தான் அது! செம்பகுலனுக்குப் புரியாமல் இல்லை — அருக்காணித் தங்க மும் அவளது தோழிகளும் இருக்கும் அந்த இடத்துக்குள் ஆண்கள் எவரும் நுழையக் கூடாது என்பதற்காக நிற்கின்ற காவல்கார வீராங்கனைதான் அவள் என்ற உண்மை! ஆனா லும் அவன் வேண்டுமென்றே அவளையும் மீறி ஆலயத்துக்குள் நுழையத் தொடங்கினான். அதைச் சற்றும் எதிர்பாராத அந்

தப் பெண், தன் கையிலிருந்த வாளை நீட்டி அவனைத் தடுத்துக் கொண்டே உள்ளேயிருப்பவர்களின் காதில் விழக்கூடிய அளவுக்கு உரக்கக் குரல் கொடுத்தாள். அவளது கூச்சலைக் கேட்டு அருக்காணித் தங்கமும், மற்ற பெண்களும் கையில் படைக்கலன்கள் ஏந்தியவாறு வாசற்புறத்துக்கு ஓடி வந்தனர்.

செம்பகுலனோ, கொஞ்சமும் அதிர்ச்சியடையாதவனாக நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு நின்றான். அருக்காணி அவனைப் பார்த்து "யார் நீ? அத்துமீறி ஆலயத்துக்குள் நுழையக் காரணம் என்ன?"என்று அதட்டினாள்.

"பெரியகாண்டியம்மன் எனக்கும் தாய்தான்! என் தாய்க்கு நான் செய்துகொண்ட பிரார்த்தனையை நிறைவேற்ற வந்திருக்கிறேன்."

"என்ன பிரார்த்தனை செய்து கொண்டாய்? பெண்கள் மட்டுமே இந்தக் கோயிலில் இருக்கிறார்கள் என்பது தெரிந்தும் வேண்டுமென்றே விஷமத்தனமாக பிரார்த்தனை என்ற பெயரால் ஏதோ பித்தலாட்டம் செய்ய வந்திருக்கிறாய்!"

"இல்லையம்மா இல்லை! சத்தியமாக இல்லை! இதோ இந்த மரகதப்பச்சை மாணிக்கக்கிளியை என்கண்ணில் கிடைக்குமாறு அம்பாள் அருள்பாலித்து விட்டால் — அவளுக்கு என் இரண்டு கண்களில் ஒரு கண்ணை காணிக்கையாகச் செலுத்துவது என்று பிரார்த்தனை செய்து கொண்டேன்! அந்தப் பிரார்த்தனை வெற்றியானது! அதை நிறைவேற்றி என் கண்ணில் ஒன்றை தேவிக்குக் காணிக்கையாக்க வந்துள்ளேன்!"

இந்த வார்த்தைகள் செம்பகுலனிடமிருந்து வெளிப்பட்டதும், அருக்காணிக்குத் தூக்கி வாரிப்போட்டது.

மரகதப் பச்சை மாணிக்கக் கிளி மறைத்து வைக்கப்பட்டுள்ள இடம் வீரப்பூர் காட்டுப் பகுதியில் எங்கேயிருக்கிறது என்ற ரகசியக் குறிப்பு — ராக்கியண்ணன் கொடுத்தது தன்னிடம் பத்திரமாக இருக்கும் போது, இந்தச் சாதாரண வேடன் அதை எப்படி எடுத்து வரமுடிந்தது? என்ற கேள்வி அருக்காணியின் உள்ளத்தைக் குடைந்தது.

அவள் வியப்பில் மூழ்கியிருப்பதைப் புரிந்துகொண்ட செம்பகுலன் இதுதான் தக்க தருணமென்று மூட்டையைப் பிரித்து வெள்ளிப் பேழையைப் முதலில் எடுத்தான். பிறகு பேழை

யைத் திறந்து மரகதப் பச்சை மாணிக்கக் கிளியைக் கையில் எடுத்துக் காட்டினான். பளபளக்கும் அந்தக் கற்களின் ஜோதி மழையில் அந்தக் கிளியும் கூண்டும் பேழையும் அந்தப் பெண் களின் கண்களைப் பறித்தன!

''இதை ஏன் நீ தேடிச் சென்றாய்? உன் கையில் இது கிடைக்க ஏன் பிரார்த்தனை செய்து கொண்டாய்? உன்னால் இதை எப்படிக் கண்டுபிடிக்க முடிந்தது?''

அருக்காணித் தங்கம் ஆவல் பொங்கிட வினாக்களை அடுக் கினாள்.

''ராக்கியண்ணரின் இறுதிச் சடங்கின்போது அவர் எழுதி வைத்திருந்த மரண சாசனம் படிக்கப்பட்டபோது அந்தப் பெருங் கூட்டத்தில் நானும் ஒருவனாக இருந்தேன்! எனக்கு ராக்கியண்ணர் மீது ஒரு மதிப்பு, மரியாதை, பக்தி எப்போதும் உண்டு! சிறு பிராயத்தில் அவரிடம் வில்வித்தை கற்றுக்கொண் டவன் நான்! இந்தக் கிளி, மாரிக்கவுண்டன் பாளையத்தில் அவரது பாசறையிலேயே அவரது நினைவுச் சின்னமாக வைக் கப்பட வேண்டுமென்பது என் ஆசை! இதை வளநாட்டின் இன்றைய மன்னர்களான பொன்னர் சங்கர் எடுத்துத் தங்கள் தங்கைக்குப் பரிசாக அளிப்பதற்கு முன்பே நான் கண்டு பிடித்து எடுத்து மாரிக்கவுண்டன்பாளையத்தில் ராக்கியண் ணன் பாசறையில் வைப்பதென்று முடிவு செய்தேன். வீரப்பூர் காட்டிலும் அதனையொட்டிய பகுதிகளிலும் வேட்டைக்குச் செல்லும்போதெல்லாம் இதைத் தேடி அலுத்தேன்! பிறகுதான் பெரிய காண்டியம்மனுக்குப் பிரார்த்தனை செய்து கொண் டேன். தேவி கருணை காட்டி என் வேண்டுதலை நிறைவேற்றி வைத்தாள். நான் தேவிக்கு அளித்த வாக்குறுதியை நிறை வேற்ற வேண்டும். தயவு செய்து வழிவிடுங்கள்!''

''இதற்காக போய் ஒரு கண்ணைப் பறிகொடுப்பார்களா?''

''தலையையே அறுத்துக் கொடுத்து ஆண்டவனை நினைத்து தவம் செய்தவர்கள் எல்லாம் உண்டு தாயே!''

''வேடனே! உன் மன உறுதியைப் பாராட்டுகிறேன் - உன் பெயர் என்னவோ?''

''வேலப்பன் என்பார்கள் - அதாவது நான் வேலைக் குறி பார்த்து வீசினால் அந்தக் குறி தப்பாது என்பதால் எனக்கு அப்படியொரு பெயர்!

''சரி வேலப்பா! முதலில் இந்தக் கிளியுடன் நாம் வள நாட்டு அரண்மனைக்குப் போய் என் அண்ணன்மார்களைச் சந்திப்போம்!''

''அய்யோ! வேண்டாம் - வேண்டாம் - அவர்கள் இதைப் பிடுங்கிக் கொண்டு என்னை அடித்து விரட்டி விடுவார்கள்!''

''அப்படியெல்லாம் என் அண்ணன்மார்களைப் பற்றித் தவறாக நினைக்காதே! ராக்கியண்ணர் பாசறையில் இந்தக் கிளியை நினைவுச் சின்னமாக வைப்பதென்றால் அவர்கள் எந்தத் தடையும் சொல்லமாட்டார்கள். மிகவும் மகிழ்ச்சியடைவார்கள்! வா எங்களோடு! அரண்மனைக்குப் போகலாம்!''

''பெரியகாண்டிக்கு நான் செலுத்த வேண்டிய காணிக்கையைச் செலுத்தாமல் இங்கிருந்து ஒரு அடி கூட நகர மாட்டேன்! தேவியின் கோபம் பொல்லாதது! பிறகு அவள் என் இரண்டு கண்களையும் அணைத்து விடுவாள்!''

''நீ காணிக்கை வழங்குவதை நாளைக்குப் பெரிய பூஜை நடத்தியே அம்மன் கோயிலில் நிறைவேற்றலாம்! முதலில் அண்ணன்மார் இந்தக் கிளியைக் காணட்டும்!''

செம்பகுலன் யோசித்தான். பிறகு கைகளைத் தலைக்கு மேலே தூக்கி அம்மன் சந்நிதியைப் பார்த்துக் கும்பிட்டுக் கொண்டே ''அம்பிகே! என்னை மன்னித்து விடு! அரண்மனை உத்திரவுக்கு அடங்கி நான் நடக்கவேண்டியிருக்கிறது! நாளைக்கு வந்து என் காணிக்கையை உன் காலடியில் செலுத்துகிறேன்!'' என்று பக்திரசம் சொட்டச் சொட்டக் கூவினான்.

  

வளநாட்டு அரண்மனைக் கூடத்தில் மரகதப்பச்சை மாணிக்கக் கிளி, பட்டு விரித்த ஒரு மேடையில் வைக்கப்பட்டிருந்தது. அதன் அழகான வேலைப்பாடுகளை பொன்னரும் சங்கரும் வெகுவாக ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். அருக்காணி தங்கம், முத்தாயி, பவளாயி, மற்றும் அருக்காணி தங்கத்தின் தோழிகள் அனைவரின் விழிகளும் அந்தக் கிளியின்மீதே மொய்த்திருந்தன! ஒரு தூணின் ஓரமாக வேலப்பன் வேடத்திலிருக்கும் செம்பகுலன் மெத்த மரியாதையுடன் அடங்கி ஒடுங்கி நின்று கொண்டிருந்தான். பொன்னர் வேலப்பனை நோக்கி,

"வேலப்பா!! உன்னுடைய அசாத்திய முயற்சியினால் இந்த அற்புதமான கிளியைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்திருக்கிறாய்! உன் விருப்பப்படியே இதை ராக்கியண்ணர் பாசறையில் நினைவுச்சின்னமாக வைப்பதில் எங்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி! காரணம் உன்னைப் போலவும் - சொல்லப்போனால் உன்னை விட அதிகமாகவும் நாங்கள் அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறோம்! எனவே உன் இஷ்டப்படி இந்தக் கிளி, ராக்கியண்ணர் பாசறையில் இருக்கட்டும்! ஆனால் ஒரு வேண்டுகோள்! உன் கண்ணைக் காணிக்கையாகத் தருவதாக பெரிய காண்டிக்கு பிரார்த்தனை செய்திருக்கிறாயே, அதை மட்டும் மாற்றிக்கொள்க!'' என்றான்!

உடனே வேலப்பன், துடித்துப் போனவனாக பதறிப்போனவனாக நடித்து -

''ஆகா! என்ன காரியம் செய்யச் சொல்கிறீர்கள்! பெரிய காண்டியம்மனுக்குத் துரோகம் செய்வதா? அந்தப் பாவம் ஏழேழு ஜன்மத்துக்கும் என்னை விடாது! என் கண்ணைத் தானே நான் காணிக்கை தரப் போகிறேன் - அதற்காகக் கவலைப்படாதீர்கள்!'' என்று பெருங்கூச்சலிட்டு விட்டான்.

''நீ உணர்ச்சி வேகத்தில் குதிக்கிறாய்! சொல்வதைக் கேள்! கண்ணையோ காலையோ கையையோ அம்பாள் காணிக்கையாகப் பெற்றுக்கொள்கிறாள் என்று கூறுவது அம்பாளையே இழிவுபடுத்துகிற விஷயமாகும்! தன்னிடம் பக்தி செலுத்துகிறவர்களின் உடலுக்குத் துன்பம் நேருவதை தாயின் ஸ்தானத்தில் இருக்கிற அம்மன் விரும்புவாளா? தயவு செய்து நான் சொல்வதைக் கேள்! இந்தக் கிளியின் பொருட்டு நீ செய்து கொண்ட பிரார்த்தனைக்காக - உனது கண்ணுக்கு ஈடாக எவ்வளவு பெரிய காணிக்கை வேண்டுமானாலும் செலுத்தலாம் - நீயே சொல்! அதைப் பெரிய காண்டியம்மனுக்கு நாளைக்கே வழங்க நாங்கள் தயாராக இருக்கிறோம்.''

பொன்னரின் வேண்டுகோளைக் கேட்டு மிகக் குழப்பமடைந்தவனைப் போலக் கைகளைப் பிசைந்து கொண்டு, வேலப்பன் அங்குமிங்கும் நடந்தான். ''தேவீ! தேவீ!'' என்று இரண்டொருமுறை கத்தினான்.

''அண்ணன் சொல்வதை அலட்சியப்படுத்தாதே வேலப்பா! அம்பாள் ஒன்றும் கோபித்துக் கொள்ள மாட்டாள்! சரியென்று ஒத்துக்கொள்!'' என்றான் சங்கர். வேலப்பனோ தீவிரமாக யோசிப்பது போலப் பெரும் பாசாங்கு செய்தான்.

''அம்பிகே! என்னை மன்னித்து விடு - உன்மீது பாரத்தைப் போட்டு என் கண் காணிக்கைக்குப் பதிலாக மாற்று யோசனை சொல்லப் போகிறேன்!''

என்று மீண்டும் கத்தினான். அவன் மாற்று யோசனை என்ன சொல்லப் போகிறான் என்பதை அனைவரும் ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்தனர்.

''வளநாட்டு மன்னர் இருவரும் கட்டளையிடுவதால் அதற்கு இணங்கித் தலை குனிகிறேன். என் கண்ணைப் பெரியகாண்டிக்குக் காணிக்கையாகத் தரக்கூடாது எனக் கூறிவிட்டீர்கள். அதற்குப் பதிலாக நான் வைக்கும் வேண்டுகோளை ஏற்றுக் கொள்வீர்களா?''

''என்ன வேண்டுகோள் வைத்தாலும் ஏற்றுக்கொள்வோம்! கண்ணைத் தோண்டுவது - காணிக்கையாகத் தருவது போன்ற காரியங்களை எங்கள் அரசாங்கமும் அனுமதிக்காது! அதைத் தவிர என்ன செய்ய விரும்புகிறாயோ, அதைச் சொல்!''

சங்கர், கண்டிப்பாகவே இதைச் சொன்னான்.

''அப்படியானால் - அதுதான் அம்பாளின் சித்தமென்றால் - இந்த மரகதப்பச்சை மாணிக்கக் கிளியின் விலை என்னவோ, அந்தப் பணத்தை என்னிடம் கொடுத்து விடுங்கள். நான் அதைக் கொண்டு அம்பாள் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்து வைக்கிறேன்!''

பொன்னர் முகத்திலும் சங்கர் முகத்திலும் மற்றும் அங்கிருந்த அனைவரது முகத்திலும் மகிழ்ச்சியொளி பிறந்தது! வேலப்பன் வீணாகக் கண்ணை இழக்கப் போவதில்லை என்பதில் அவர்களுக்கு ஒரு ஆறுதல்!

''என்ன விலையாகும் இந்தக் கிளி? கேள் - அந்தத் தொகையைத் தருகிறேன்!''

''அய்யோ! எனக்கா கேட்கிறேன்! பெரியகாண்டி கோயிலைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்யவல்லவா கேட்கிறேன்!''

''அது தெரிகிறது வேலப்பா! அதற்காகத்தான் கேட்கிறேன், எவ்வளவு விலை இந்தக் கிளியென்று!''

''அதை நீங்களும் நானும் எப்படி நிர்ணயிக்க முடியும் - அரண்மனையிலுள்ள பொற்கொல்லர்களை அழைத்து அவர் களைப் பார்க்கச் சொல்லி விலை நிர்ணயம் செய்யுங்கள்! இப்போது ஒன்றும் அவசரமில்லை - நாளைக்குக் காலையிலே கூட அதைப் பார்த்துக் கொள்ளலாம்!''

''அதுவும் சரிதான்! நாளைக்குக் காலையில் நமது பொற் கொல்லர்களைக் கொண்டு இந்தக் கிளியின் விலையை நிர்ண யிப்போம்! வேலப்பா! இன்றிரவு நீ இந்த அரண்மனையி லேயே தங்கிக் கொள்ளலாம் - கிளியைக் கூட நீ தங்கியி ருக்கும் அறையிலேயே உன் பொறுப்பில் வைத்துக் கொள்ள லாம்.''

''அடடே! என்ன இப்படி சொல்லி விட்டீர்கள் - கிளி தங்கள் வசமே இருக்கட்டும்! இத்தனை நாள் இந்தக் கிளிக்காக அலைந்த களைப்பில் இன்றிரவு நிம்மதியாகத் தூங்குகிறேன்!''

சரியென்று பொன்னர் தலையசைத்தான்!

அப்போது அருக்காணித் தங்கம், சங்கரைப் பார்த்து ''இந் நேரம் மாயவர் மட்டும் இங்கிருந்தால் இந்தக் கிளியின் விலையை நிர்ணயித்திருப்பார். பொற்கொல்லர்களே தேவைப்பட்டிருக் காது!'' என்றாள்.

''ஆமாம் - சங்கர்! மாயவரும் வீரமலையும் தலையூர் சென் றவர்களைப் பற்றி எந்தச் செய்தியும் இன்னமும் வரவில் லையே'' என்றான்.

பழம் நழுவிப் பாலிலே விழுகிறது என எண்ணியவனாக வேலப்பன் வேடத்திலிருக்கும் செம்பகுலன் அவர்களது பேச்சில் குறுக்கிட்டு -

''மன்னிக்க வேண்டும் - நான் சொல்வது தவறான தகவலா கக்கூட இருக்கலாம் - மாயவரும், வீரமலையும் வீரப்பூர் காட் டில் ஆள் மயக்கிப்பாறைக்கருகே விழுந்து கிடப்பதாக யாரோ வழியில் சொன்னார்கள்!'' என்று மிகுந்த உருக்கத்துடன் சொன்னான்.

''தம்பீ!'' என்றான் பொன்னர்.

''அண்ணா!'' எனத் துடித்தெழுந்தான் சங்கர்!

''வேலப்பன் சொல்வது உண்மைதானா? என்று உடனே சென்று பார்த்து வா!'' என்றான் பதட்டத்துடன்!

சங்கர், அந்த இடத்தை விட்டு எப்போது அகன்றான் என்று தெரியாமல் - அவ்வளவு வேகமாக வெளியேறி விட்டான்.

அண்ணன்மார்களைப் பிரித்து விடும் முதல்கட்ட சூழ்ச்சியில் வெற்றி பெற்றுவிட்ட களிப்பில் செம்பகுலன் சிரிப்பை வெளியில் காட்டாமல் - இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமோ என்ற நிலையில் அடக்கமாக நின்று கொண்டிருந்தான்.

•

# பொறியில் சிக்கிய புலி!

49

குதிரைமீது குதித்தோடி அமர்ந்து தட்டி விட்டதுதான் தாமதம். குளம்படிகளின் ஓசை, இடியோசையென முழங்கிட அந்தக் குதிரை, ஆள்மயக்கிப் பாறைக்குப் போகும் பாதையில் நாலு கால் பாய்ச்சலில் ஓடத் தொடங்கியது. தங்களின் இளைய மன்னன் எங்கே இவ்வளவு வேகமாகப் போகிறார் என்று வள நாட்டு வீதிகளிலும், சாலைகளிலும் சென்றுகொண்டிருந்த மக்கள் பரபரப்புடன் கவனித்து விஷயம் எதுவும் புரியாமல் ஒருவரையொருவர் வியப்புடன் பார்த்துக்கொண்டு திகைத்து நின்றனர். ஆள்மயக்கிப் பாறை - சங்கருக்குப் புதிய இடமல்ல! அந்தப் பாறைக்கு அருகாமையில் தான் குப்பாயியைத் தலையூர் வீரர்களிடமிருந்து மீட்ட நினைவு அவனுக்கு வராமல் போகவில்லை.

அந்த வேடன் வேலப்பன் கேள்விப்பட்டது உண்மையாக இருக்குமா? மாயவரும், வீரமலையும் தாகவிடாய் தீர்த்துக் கொள்வதற்காக ஆள்மயக்கிப் பாறைத் தண்ணீரை அருந்தியிருப்பார்களோ? அதனால் மயங்கி விழுந்திருப்பார்களோ? தலையூரின் அமைச்சர் பெருமகனாக இருந்து அந்த வட்டாரம் முழுவதையும் நன்கு அறிந்து வைத்துள்ள மாயவருக்கு ஆள் மயக்கிப் பாறையின் நீரினால் ஏற்படக்கூடிய ஆபத்து தெரியாமலா இருந்திருக்கும்!

குழப்பத்துடன் சங்கர் அந்தப் பாறைக்கு அருகே வந்த பொழுது காரிருளில் அந்தப் பகுதியே ஆழ்ந்திருந்ததை கவனித்தான். குதிரையை ஒரு இடத்தில் நிறுத்தி விட்டு, இறங்கிய சங்கர் அந்த இருட்டில் தனது கண்களைக் கூர்மையாக்கிக் கொண்டு பாறையைச் சுற்றியுள்ள இடத்தில் மாயவரையும், வீரமலையையும் தேடினான். அவர்கள் அங்கு மயங்கி விழுந்து கிடப்பதற்கான எந்த அறிகுறியும் தென்படவில்லை. பாறைக்கு அருகில் வேறு எங்காவது இருக்கக் கூடுமோ என்ற சந்தேகத்துடன்

குதிரையை ஒரு கையால் பிடித்துக் கொண்டே மெல்ல நடந்தான்.

அந்த இருளைக் கிழித்துக் கொண்டு ஒரு ஒளி - அந்த ஒளி வந்த திசையில் சங்கரின் கால்கள் முன்னோக்கிச் சென்று கொண்டிருந்தன. ஒரு தீப்பந்தத்தின் வெளிச்சம்தான் அது என்பதை அவன் புரிந்து கொண்டான். அந்த வெளிச்சத்தை நோக்கி நடந்தான். கரடுமுரடான ஒற்றையடிப் பாதையில் இருபுறங்களிலும் நீண்டுயர்ந்த செடிகளுக்கிடையில் அந்தத் தீப்பந்த வெளிச்சம் வேறு திசையில் போய்க்கொண்டிருந்தது.

''யாரது? கொஞ்சம் நில்லுங்கள்!'' என்ற சங்கரின் குரல் கேட்டதும் தீப்பந்த ஒளி அங்கிருந்து அதற்குமேல் நகரவில்லை. சங்கர், அந்த இடத்திற்கு விரைந்து சென்றான்.

சாம்பல் நிறப் போர்வையொன்று அந்த உருவத்தின் தலையில் முக்காடாக அமைந்து, உடலையும் மறைத்துக் கொண்டிருந்தது. விகாரமான முகம்! அதில் வெள்ளைத் தாடி வேறு! வயது முதிர்ந்த சன்னியாசி போன்ற தோற்றம்! வில்லைப் போல வளைந்திருந்த முதுகின் கூனல் அந்த உருவத்தை மேலும் அலங்கோலமாக்கிக் காட்டிக் கொண்டிருந்தது. சங்கரின் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்து அப்படியே நின்றுவிட்ட அந்த உருவம், தனது கையில் இருந்த தீப்பந்தத்தை, சற்றுத் தூக்கிப் பிடித்து முன்னால் நீட்டியவாறு - ''யார் அது?'' என்று திருப்பிக் கேட்டது. அந்தக் குரலில் இனிமையில்லை என்பது மட்டுமல்ல, கேட்பதற்கே கர்ணகடூரமாக இருந்தது.

இருண்ட சூழல் - இடையே தீப்பந்த வெளிச்சம் - அந்த வெளிச்சத்தில் பளபளக்கும் பயங்கரக் கிழவன் ஒருவனின் முகம் - அந்த முகத்தைக் கண்டு சங்கர் வெறுப்படைந்தான் எனினும் அதை வெளியில் காட்டிக்கொள்ளாமலே - ''அய்யா! பெரியவரே! தாங்கள் இந்தப் பகுதியில் வசிப்பவர்தானே! அப்படியானால் இந்த வட்டாரத்தில் இன்றோ நேற்றோ ஏதாவது முக்கியமான நிகழ்ச்சி உண்டா?'' என்று வினவினான்.

''இப்படிப் பொதுவாகக் கேட்டால் எப்படி? நான் இந்தப் பகுதியில் ஒரு குக்கிராமத்துக் கிழவன்! எங்கள் கிராமத்தில் மாரியம்மன் பண்டிகை நேற்றைக்கு - மிகவும் விமரிசையாக நடைபெற்றது - வேறு என்ன நிகழ்ச்சியை நீ கேட்கிறாய் என்று எனக்குத் தெரியவில்லையே தம்பி!''

தழுதழுத்த குரலில் திக்கித் திக்கி நடுங்கும் உடலுடன் - அந்தக் கிழவன் பதில் அளித்தது சங்கருக்குத் திருப்தி தர வில்லை.

பெரியவருக்கு எந்த ஊர் என்று நான் தெரிந்து கொள்ள லாமா?''

''அவசியம் தெரிய வேண்டுமோ? வெண்முடி என்ற ஊர்! அந்த ஊருக்குப் புறத்தேயுள்ள ஒரு குக்கிராமம்! அதையும் வெண்முடி என்றுதான் நாங்கள் அழைத்துக் கொள்வது வழக் கம் - எனக்கே தலையும் தாடியும் வெண்முடியல்லவா, அத னால் என் ஊரும் வெண்முடியென்பது மிகவும் பொருத்தமாக இருக்கிறதல்லவா?''

''நல்ல பொருத்தம்தான்! நான் தங்களிடம் கேட்கும் விபரம் முக்கியமானது! வளநாட்டிலிருந்து மாயவரும் வீரமலையும் தலையூருக்குச் செல்வது குறித்து தாங்கள் ஏதாவது கேள்விப் பட்டிருப்பீர்களே!''

''ஆமாம் கேள்விப்பட்டேன்! எந்தச் செய்தியையும் ஒரு காதில் வாங்கி இன்னொரு காது வழியாக வெளியே விட்டு விடுவேன். ஆனால் இந்தச் செய்தி கிடைத்தவுடன் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! இது என்னடா பெரிய கூத்தாக இருக்கிறது - தலையூர்க் காளியையும் அவனருகே இருந்து அவனை ஆட்டிப் படைக்கிற செல்லாத்தாக்கவுண்டர், அவரது மகன் மாந்தியப்பன் ஆகியோரையும் பழிவாங்க சபதம் செய்து கொண்டிருக்கிற பொன்னர் சங்கர் என்ற புலிகள் எப்போது - ஏன் - எப்படி புழுக்களாக மாறிவிட்டன? என்று ஆச்சரியப் பட்டேன்! ஆறாத்துயரமடைந்தேன்! பதவியென ஒன்று வந்து விட்டதால் - வளநாட்டைப் பரிபாலிக்கும் வாய்ப்பு பெற்று விட்டதால் - இனிமேல் அதை அனுபவித்தால் போதும், வீணாக வீரத்தைக் காட்டி துன்பத்தைச் சுமக்கத் தேவையில் லையென்ற முடிவுக்குப் பொன்னர் சங்கர் வந்து விட்டார்களே யென்று நினைத்து, அவர்கள்மீது நான் வைத்திருந்த மதிப்புக் காக எனக்கு நானே வெட்கப்பட்டுக் கொண்டேன்!''

''பெரியவரே! நீங்கள் அப்படி நினைத்தால் அது பெருந் தவறு! பொன்னரின் வீரமோ, சங்கரின் வீரமோ பதவிகளுக் காக விலை போய்விடக் கூடியவை அல்ல! அழைப்பு அனுப் பியதே தலையூர்க்காளிதான்! என்னதான் பேசுகிறான் என்

பதை அறிந்து கொள்வதற்காகவே மாயவர் அந்த அழைப்பை ஏற்றார். அவருக்குத் துணையாக வீரமலை சென்றான். இத னால் பொன்னரும் சங்கரும் கொண்டுள்ள குறிக்கோளுக்கு எள்முனையளவு சேதமும் என்றைக்கும் ஏற்படாது! ஏற்றுக் கொண்ட சபதம் எப்படியும் நிறைவேற்றப்பட்டே தீரும்!''

''இவ்வளவு திட்டவட்டமாகச் சொல்கிறாயே, அப்படியா னால் நீ யார் தம்பி?''

''நான்தான் சங்கர்!''

''ஆ! சங்கரா? பொன்னருக்குத் தம்பியாகப் புயலொன்று பிறந்திருக்கிறது எனக் கேள்விப்பட்டிருக்கிறேனே, அந்தச் சங்கரா?''

கிழவனின் சரீரம் கிடுகிடுவென ஆடியது - தள்ளாடித் தள்ளாடி சங்கரின் அருகே வந்து மகிழ்ச்சி தாங்க முடியாமல் - ஒரு கையில் தீப்பந்தத்தை ஏந்திக்கொண்டே, மற்றொரு கையால் சங்கரின் கன்னத்தை வருடவே, சங்கரும் உணர்ச்சி வயப்பட்டு அந்தக் கிழவனின் கையை மெல்லப் பிடித்துக் கொண்டான்.

''இங்கு நடந்த நிகழ்ச்சியை யாரிடத்தில் சொல்லி அனுப் புவது என்று தவித்துக் கொண்டிருந்தேன். நல்லவேளை கடவு ளாகப் பார்த்து உன்னையே அனுப்பி வைத்து விட்டார். தெய் வமே! தீமையிலும் ஒரு நன்மை! சங்கரே இங்கு வந்துவிட்டது - சர்வேஸ்வரா! நீயே இங்கு வந்துவிட்டதைப் போலத்தான்!''

''என்ன சொல்கிறீர்கள் பெரியவரே? சீக்கிரம் சொல்லுங் கள்!''

''சங்கர்! நீ மாயவரையும் வீரமலையையுந்தானே தேடிக் கொண்டு வந்திருக்கிறாய்?''

''ஆமாம் - அவர்களுக்கு ஆள்மயக்கிப் பாறைக்குப் பக்கத் தில் ஏதோ ஆபத்து என்று யாரோ சொன்னதாக ஒரு வேடன் சொன்னான்.''

''ஓ! ஒரு வேடன் சொன்னானா? அந்த வேடன், தனது பெயரைக்கூட வேலப்பன் என்று சொல்லியிருப்பானே?''

''ஆமாம்! வேலப்பன் என்றுதான் சொன்னான்! ஏன்? அதில் ஏதாவது மர்மம் இருக்கிறதா?''

''மர்மங்கள் நிறைந்ததுதானே இந்த மாயா உலகம்! வேலப் பன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டவன் உண்மை யிலேயே வேடன் அல்ல! அது ஒரு வேடம்! அந்த வேடந் தாங்கி யார் தெரியுமா? தலையூர்க்காளியம்மன் கோயில் பூசாரி செம்பகுலன் என்று கேள்விப்பட்டிருப்பாயே?''

''என்ன செம்பகுலனா?''

''அவனேதான்! அவனை வைத்துத்தான் செல்லாத்தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் குழந்தைப் பருவத்திலேயே உங்களிருவர் உயிரையும் போக்கிவிடுவதற்குத் தலையூர்க்காளி யிடம் சூழ்ச்சி செய்தனர்! இப்போதும் அவர்கள் அவனைத் தான் பயன்படுத்தி உங்களிடம் அனுப்பியுள்ளனர். அவன் தான் வேடனைப் போல வள நாட்டு அரண்மனைக்கு வந்திருக் கிறான்.

கிழவனின் சொல் கேட்டு சங்கர் அதிர்ச்சியுற்றான்.

''அப்படியா? இப்போதே போய் அவனுக்குரிய தண்ட னையை வழங்குகிறேன்'' எனக் கூறிக் கொண்டே குதிரையில் பாய்ந்து ஏறிடப் போனான்.

''பொறு சங்கர், பொறு! நீ வந்த வேலையை மறந்துவிட் டாயே! மாயவரும் வீரமலையும் என்ன ஆனார்கள் - எங்கே யிருக்கிறார்கள் என்பதை நீ அறிந்து கொள்ள வேண்டாமா? அதைத் தெரிந்து கொண்டு அதன்பிறகு செம்பகுலனிடம் போ!''

''பெரியவரே! உடனே சொல்லுங்கள், மாயவரும், வீர மலையும் எங்கேயிருக்கிறார்கள்?''

''சொல்லத்தானே போகிறேன்! சொல்வது மட்டுமல்ல, அவர்கள் இருக்குமிடத்தைக் காட்டவும் போகிறேன். அதற்குள் இன்னொரு சந்தேகத்தைப் போக்கிக்கொள்ள விரும்புகிறேன். வேடன் வேடத்தில் வந்திருக்கும் செம்பகுலன் மரகதப்பச்சை மாணிக்கக்கிளியுடன் வந்திருப்பானே?''

''ஆமாம் - அந்தக் கிளியைக் கூண்டுடன் கொண்டு வந் திருக்கிறான்.''

''அது மரகதமும் அல்ல - மாணிக்கமும் அல்ல! அது ஒரு போலிக் கிளி! பொன்னரையும் உன்னையும் பிரித்துவிட்டு தலையூர்க் காளியை வளநாட்டின் மீது படையெடுக்க வைப் பதற்காக அந்த செல்லாத்தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் பின்னுகிற வலை பெரிதாகிக் கொண்டே போகிறது! அதில் நீங்களும் ஏமாந்து விட்டீர்கள்!''

''பெரியவரே! அடுக்கடுக்காக அதிர்ச்சியூட்டும் செய்தி களையே தருகிறீர்களே, நான் இப்போதே வளநாடு சென்று என் அண்ணனிடம் எல்லா விபரங்களையும் சொல்லியாக வேண்டும்!''

''எல்லா விபரங்களும் என்றால், வீரமலை மாயவர் இரு வரையும் பற்றிய விபரங்களைத் தவிரவா? நீ உடனே வள நாட்டுக்குப் போக வேண்டியது முக்கியம் - அதற்குள் மாயவர் வீரமலையின் நிலையையும் அறிந்து கொள்ள வேண்டியது அதைவிட முக்கியம்!

''அவர்கள் என்ன ஆனார்கள்?''

''ஆள்மயக்கிப் பாறையில் இளைப்பாற எண்ணினார்கள். அந்தப் பாறையில் பெருகி வரும் நச்சுத் தண்ணீரை அளவுக்கு அதிகமாகவே அருந்திவிட்டார்கள். அதன் விளைவு - மாயவர், வீரமலை, அவர்களுடன் வந்த வளநாட்டு வீரர்கள் கடுமை யான மயக்கத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள்!''

''இப்போது அவர்கள் எங்கேயிருக்கிறார்கள்? அவர்களை நான் பார்த்தாக வேண்டும்!''

''பாறையோரத்தில் அவர்கள் மயங்கிக் கிடந்ததை நானும் எனது கிராமத்தினர் சிலரும் பார்த்துப் பதைத்துப் போனோம்! மயக்கநிலையில் பாறையருகே கிடந்தால் ஒருவேளை இரவு நேரத்தில் மிருகங்களினால் அவர்கள் உயிருக்கு ஆபத்து ஏற் படக் கூடுமென அஞ்சி, அவர்கள் அனைவரையும் பக்கத்தில் உள்ள ஒரு பாதுகாப்பான மண்டபத்தில் பத்திரமாகக் கொண்டு சேர்த்துள்ளோம்! அவர்களுக்குத் தேவையான மூலிகைகள் சிலவற்றைப் பறிப்பதற்கே இந்நேரத்தில் நான் இங்கு வந்தேன்'' என்று கூறிய கிழவன், தன் மடியிலிருந்து சில பச்சிலைகளை எடுத்துக் காட்டினான்.

''நான் இப்போதே அவர்களைப் பார்த்தாக வேண்டும்'' என்று சங்கர் துடித்தான்.

''என் தீப்பந்த வெளிச்சத்தை தொடர்ந்து வந்துகொண்டே யிரு, அந்த மண்டபத்தில் அவர்களைப் பார்க்கலாம் - ஒரு வேளை உன் அதிர்ஷ்டம், அவர்கள் இந்நேரம் மயக்கம் தெளிந்து கண் விழித்திருக்கவும் கூடும்!''

கிழவன், தீப்பந்த ஒளியில் அந்தக் காட்டுப் பாதையில் செடி கொடிகள் புதர்களை விலக்கி விட்டுக்கொண்டு முன்னே நடந்திட - தொடர்ந்து குதிரையை கையில் பிடித்தவாறு, சங்கரும் நடந்தான்.

கிழவன் குறிப்பிட்ட அந்த மண்டபத்தை அடைந்தனர்! ஏற்கனவே பராக்கிரமனால் குப்பாயி அடைத்து வைக்கப்பட்ட அதே மண்டபந்தான்! ஆனால் சங்கருக்கு அது தெரியாது!

குதிரையை வாசலில் நிறுத்திவிட்டு சங்கர், சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே கிழவனைத் தொடர்ந்து மண்டபத்திற்குள் நுழைந்தான். மண்டபத்தைச் சுற்றியிருந்த தழை மண்டிய புதர்களில் யாரோ சிலர் மறைந்துகொள்ள யத்தனிக்கும் ஓசை மட்டும் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்தது. சங்கர் உள்ளத்தில் ஏதோ ஓர் உணர்வு தோன்றவே ஓங்கிய வாளுடன் எச்சரிக்கையாகவே மண்டபத்திற்குள் போனான். இருண்டு கிடந்த அந்த இடத்துக்குள் தீப்பந்த வெளிச்சம் வரவே, சில மூலை முடுக்குளில் இருந்த வௌவால்கள் படபடவென இறக்கையை அடித்துக்கொண்டு அங்குமிங்கும் பறந்தன.

''பெரியவரே! எங்கே இருக்கிறார்கள் மாயவரும் வீரமலையும்? இந்த இருட்டு மண்டபத்தில் அவர்களால் மூச்சுக்கூட விட முடியாதே!''

இதைக் கேட்டு, சங்கர் வாய் மூடுவதற்குள் அந்தக் கிழவன் பயங்கரமாக சிரிக்கத் தொடங்கினான். அதற்குள் மண்டபத்தின் வாசற்கதவு வெளிப்புறமிருந்து மூடப்பட்டது. சங்கர், ஏதோ ஒரு சதியில் சிக்கிவிட்டதாக முடிவு செய்து கொண்டு ஓங்கிய வாளுடன் வாசற்பக்கம் பாய்ந்தோடி அந்தக் கதவைக் காலால் உதைப்பதற்குள், ஒரு இரும்புச் சங்கிலி அவன் உடலை அழுத்திப் பின்னுக்குத் தள்ளியது. அந்தச் சங்கிலிப் பிணைப்பை அறுத்தெறிந்திட வாளைக் கீழே வீசிவிட்டு இரு கரங்களையும் சங்கர் பயன்படுத்திட முனைந்தபோது மற்

றொரு இரும்புச் சங்கிலி! இப்படி ஒன்றின்மீது ஒன்றாக இரும்புச் சங்கிலிகள் சங்கரைப் பிணைத்திடவே அவன் அத்தனை சங்கிலிகளையும் தனது கைகளால் அழுத்திப்பிடித்து, தன்னை விடுவித்துக் கொள்ள முழு வேகத்தையும் காட்டியபோதுதான் அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக் கொண்டு, ஐம்பது வீரர்கள் தன்னை அங்குள்ள தூணோடு தூணாக இறுக்குவது தெரிந்தது. மண்டபத்தின் பின்புற வாசல் வழியாகவும் ஏராளமான வீரர்கள் உள்ளே நுழைந்து வாள், வேல், ஈட்டி போன்ற ஆயுதங்களுடன் சங்கரைச் சூழ்ந்து கொண்டனர். ஏராளமான இரும்புச் சங்கிலிகளால் தூணில் கட்டுண்டுவிட்ட சங்கரை நோக்கி இடியொலியெனச் சிரித்துக்கொண்டே வந்தான் அந்தக் கிழவன்!

''சங்கர்! என்னைத் தெரியவில்லையா உனக்கு?''

''ஏன் தெரியாது? நேருக்கு நேர் எங்களை எதிர்க்க முடியாமல் யாரோ ஒரு கோழை, வஞ்சக வயோதிகனாக வந்து ஏமாற்றியிருக்கிறான் என்பது தெளிவாகத் தெரிகிறது!''

''இதோ பார்! இன்னும் உனக்குத் தெளிவாகவே தெரியும்! பிரியமாக அழைத்தாயே, பெரியவர் என்று - அந்தப் பெரியவர் யார் தெரிகிறதா? நான்தானடா மாந்தியப்பன்!''

கிழவன், தனது தாடியை அகற்றி, முகத்தில் பூசியிருந்த வண்ணத்தை அழித்து, நிமிர்ந்து நின்று மாந்தியப்பனாகத் தோன்றி மீண்டும் பயங்கரமாகச் சிரித்தான்.

''முட்டாளே! என்னை நம்பிவிட்டாய் அல்லவா? செம்பகுலன், வேடன் உருவத்தில் வந்திருக்கிற செய்தியையும் - மரகதப்பச்சை மாணிக்கக்கிளி, ஒரு மாயை என்பதையும் - உன்னிடத்தில் எப்படிச் சொன்னேன் என்று ஆச்சரியப்படுவாய் இப்போது? அந்த உண்மையைச் சொன்னதால்தான் நீ என்னை நம்பினாய! நீ என்னிடம் சிக்கிவிட்டால் மீண்டும் போய் செம்பகுலன் சூழ்ச்சியை அம்பலப்படுத்த முடியாது என்பது எனக்குத் தெரியும்! அதனால்தான் அந்த ஒரு உண்மையைத் தூண்டில் முள் தீனியாக வைத்து உன்னை வசமாகச் சிக்க வைத்து விட்டேன்.''

இனி எதுவும் பேசிப் பயனில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்ட சங்கர், மாந்தியப்பனைப் பார்த்து ஏளனமாகப் புன்னகை புரிந்தவாறு ''ஆகா! உன் அதி அற்புதமான வீரத்தை நான் பாராட்டுகிறேன்'' என்றான்.

வெற்றி மிதப்பில் எல்லையற்ற இறுமாப்புடன், தலையூர் வீரர்களைப் பார்த்த மாந்தியப்பன், "உம்! ஜாக்கிரதை! இவன் தப்பி விடக்கூடாது! தப்பிவிட முயற்சித்தால் இவன் தலை இவன் கழுத்தில் இருக்கக்கூடாது!'' என்று உரக்கக் கத்திக் கூச்சலிட்டுவிட்டு அந்த இடத்தை விட்டகன்றான்.

அந்த மண்டபத்தின் வாசலில் கட்டப்பட்டிருந்த குதிரை, சங்கருக்கு உள்ளே ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டது என்பதை உணர்ந்து கொண்டது போலும்! தன்னைக் கட்டியுள்ள இடத்தி லிருந்து எப்படியாவது அறுத்துக்கொண்டு வளநாடு போய்விட வேண்டுமென அது கருதியது! சங்கர் இல்லாமல் தனியாக தான் சென்றாலே, சங்கருக்கு ஏதோ ஆபத்து என்பதை வள நாட்டில் அனைவரும் புரிந்து கொள்வார்கள்! அதற்காக, அது கட்டவிழ்த்துக்கொண்டு ஓட பெருமுயற்சி செய்தது!

இரவு முழுவதும் முயற்சித்தும் கூட அதனால் முடியவில்லை.



# 50

# வெள்ளாங் குளத்தில் விஷப் பரீட்சை!

பொழுது விடிந்தது. ஆனால் தயங்கித் தயங்கி விடிந்தது. காரிருள் அகற்றிக் கதிர் கிளம்பிற்று என்றாலும் கிழக்குத் திசையை முற்றுகையிட்டிருந்த கன்னங்கருத்த முகில்களை விலக்கிக் கொண்டு வெளிவரவும் ஒளி தரவும் ஏனோ தயக்கம் காட்டிற்று!

வளநாட்டு அரண்மனையின் அலங்காரக் கூடத்தில் பொற்கொல்லர்கள் எழுவர் அமர்ந்திருந்தனர், அடக்கமே உருவெடுத்தவர்களாக! ஒரு மூலையில் வேடன் வேலப்பன் மிகுந்த பவ்யமாக ஒடுங்கி நின்று கொண்டிருந்தான். பொன்னர், அருக்காணித் தங்கத்துடன் கூடத்தில் பிரவேசித்தான். முத்தாயி, பவளாயி இருவரும் அந்தக் கூடத்தின் ஒரு பகுதியில் திரையிடப்பட்ட மாடத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்தனர். பொன்னர் வந்தமர்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம் மரகதப் பச்சை மாணிக்கக் கிளி இருந்த பேழை பொன்னரின் அந்தப்புரத்திலிருந்து அந்த அலங்காரக் கூடத்திற்குக் கொண்டுவரப்பட்டது. பொன்னர் பொற்கொல்லர்களிடம் சொன்னான் —

''இந்தப் பேழைக்குள்ளிருக்கும் கிளி மரகதத்தினாலும், மாணிக்கத்தினாலும் தங்கத்தினாலும் செய்யப்பட்டது. அதன் விலையை மதிப்பிட்டு நீங்கள் சொல்வீர்களேயானால் - அதற்குரிய பொன் நாணயங்களை இதோ இந்த வேடன் வேலப்பனுக்கு நான் கொடுத்து விடுவேன். அந்தப் பணத்தைக் கொண்டு நமது பெரிய காண்டியம்மன் கோயிலுக்கு இவன் கும்பாபிஷேகம் செய்யப்போகிறான்.''

பொற்கொல்லர்கள் எழுந்து வணங்கிப் பொன்னரைத் தொழுது விட்டு, அந்தப் பேழையைத் திறந்தனர். ஒளிமழை கொட்டும் மரகதப் பச்சை மாணிக்கக் கிளியைக் கண்டதும் ஆச்சரியத்தால் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். பொன்னர், மேலும் தொடர்ந்து பேசினான்.

''அரண்மனையில் நாம் விலைக்கு வாங்கப் போகிறோம் என்பதற்காக மதிப்பைக் குறைத்துக் கூறிவிடாதீர்கள்! உரிய விலை எதுவோ அதனை மறைக்காமல் சொல்லுங்கள்!''

''அப்படியே ஆகட்டும் அரசே!'' எனப் பொற்கொல்லர்கள் ஏழு பேரும் ஒரே நேரத்தில் கூறிவிட்டு அந்தக் கிளியை நோட்டம் விட்டனர். ஒரு பொற்கொல்லர், தன் கையில் வைத்திருந்த நாய்த் தோல் துண்டு ஒன்றினால் கிளியின் கால் நகங்களாக அமைக்கப்பட்டிருந்த மாணிக்கக் கற்களைத் தேய்த்துப் பார்த்தார். இன்னொருவர் பூதக்கண்ணாடி போன்ற ஒரு கருவிகொண்டு கிளி உருவத்தில் பதித்துள்ள எல்லா கற்களையும் மிக கூர்மையாக ஆராய்ச்சி செய்தார். ஒருவர், கிளி இருந்த அந்த தங்கக் கூண்டினைத் தரையிலிருந்து ஒரு முழ உயரம் தூக்கிக் கொத்து மதிப்பாக அதன் எடையை உன்னிப்பாகக் கணக்கிட்டார். இவ்வாறாக ஒவ்வொரு பொற்கொல்லரும் தங்களின் ஆய்வுகளைச் செய்து கொண்டே ஒருவருக்கொருவர் வியப்பு மேலிட விழிகளால் ஏதோ சாடை செய்து கொண்டனர். அந்த ஏழு பேருடைய பார்வையும் அந்தக் கூடத்து மூலையில் புன்னகையுடன் நின்றுகொண்டிருந்த வேடன் வேலப்பன் மீது ஒருசேரப் பாய்ந்ததைப் பொன்னர் கண்டு விட்டு, ''என்ன? இவ்வளவு விலை உயர்ந்த பொருள் இந்த வேடனுக்கு எப்படிக் கிடைத்தது என்று பார்க்கிறீர்களா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

பொற்கொல்லர்கள் மீண்டும் ஒருவரையொருவர் நோக்கியவாறு, ''நீர் சொல்லும்!'' ''நீர் சொல்லும்!'' என்று முடுக்கி விட்டுக் கொண்டிருந்தனர் சைகைகள் மூலமாக!

''ஏன் தயக்கம்? எவ்வளவு தொகையானாலும் பரவாயில்லை. தருவதற்கு நான் தயார்! சொல்லுங்கள் விலையை!'' என்று வலியுறுத்தினான் பொன்னர். அதற்கு மேலும் பேசாமலிருப்பது சரியல்ல என்ற துணிவுடன் - அவர்களில் மூத்தவரான ஒரு பொற்கொல்லர் முன்வந்து பொன்னருக்குப் பதில் அளித்தார்:

''அரசே! இந்தக் கிளி மரகதப் பச்சையுமல்ல, மாணிக்கமும் அல்ல! எல்லாமே போலி! மட்டமான கற்களுக்குப் பட்டை தீட்டி - வெள்ளியால் செய்து தங்க முலாம் பூசிக் கொண்டு வரப்பட்டிருக்கிறது!''

பொன்னர், ஆத்திரத்துடன் ''என்ன?'' என்று கர்ச்சித்துக் கொண்டே எழுந்துவிட்டான். ''நீங்கள் என்ன சொல்லுகிறீர் கள்?'' என்பது போல மற்ற பொற்கொல்லர்களை நோக்கி னான். அவர்களும் ''ஆமாம் அரசே! அவர் சொல்வதே சரி! வெள்ளிக்கு வேண்டுமானால் விலை மதிப்பிடலாம் - மற்ற படி மரகதம், மாணிக்கம், தங்கம் என்பதெல்லாம் பொய்! முழுப் பொய்!'' என்று ஒன்று போலக் கூறினர்.

பொன்னர், தனது பாதங்களை அந்தக் கூடத்துத் தரை அதிர ஊன்றி வேலப்பனை நோக்கி நடந்து வந்து ''என்னப்பா இது சூழ்ச்சி?'' என்று உறுமினான்.

''சூழ்ச்சியா? சூதுவாது கள்ளம் கபடம் அறியாத இந்த வேடனுக்கு சூழ்ச்சி என்பது சுட்டுப் போட்டாலும் வராத குணம் அய்யா! நேற்று சாயங்காலம் நான் உங்களிடம் கொடுத்த கிளியும் கூண்டும் அசல் மரகதம்! அசல் மாணிக்கம்! அசல் தங்கம்! அய்யா பொற்கொல்லர்களே - மறுபடியும் ஒருமுறை நன்றாகச் சோதனை செய்யுங்கள்! அவசரப்பட்டு எதுவும் முடிவு செய்து விடாதீர்கள்! நான் கொடுத்ததும் அரசர் வாங் கிப் பத்திரமாக வைப்பதாகச் சொன்னதும் விலை மதிப்பே யில்லாத மரகதப்பச்சை மாணிக்கக்கிளியேதான்! அதுவும் தங் கக் கூண்டில்! வெள்ளிப் பேழையில்! தயவுசெய்து மீண்டும் பாருங்களய்யா, உங்களுக்குப் புண்ணியம் உண்டு!'' என்று வேலப்பன் அந்தக் கூடத்தில் கூத்தாடி தீர்த்துவிட்டான்.

மூத்த பொற்கொல்லர், தனது பொக்கைவாய் தெரியச் சிரித்துக்கொண்டே - ''பத்து முறை உரைத்துப் பார்ப்பதால் பித்தளை, தங்கமாகிவிடுமா? எத்தனை முறை பார்த்தாலும் எங்கள் முடிவு ஒரே முடிவுதான் - இது போலி! போலி! போலி!'' என்று சப்தம் போட்டுச் சொன்னார்.

''அப்படியானால் நான் அரசரிடம் ஒப்படைத்த அசல் கிளி எங்கே?''

வேடனின் வினாவுக்குப் பொன்னர் அளித்த விடை, ''இதுதான் நேற்று மாலை நீ என்னிடம் ஒப்படைத்த கிளியும் கூண்டும்!'' என்பதுதான்.

''இல்லையரசே இல்லை! அய்யா பொற்கொல்லர்களே! நீங் களே சொல்லுங்கள் - இது நான் கொடுத்த கிளியா? அந்தக் கிளி அழகான கிளி! அம்சமான கிளி! அத்தனையும் மரகதப்

பச்சை! கண்ணைப் பறிக்கும் மாணிக்கக் கல்! தகதகக்கும் தங்கம்!''

வேலப்பன் அலறி அழுதுவிட்டான் - அந்த அபாரமான நடிப்பை உணர்ந்துகொள்ள இயலாத மூத்த பொற்கொல்லர், ''அது என்னவோ நீ அரசரிடம் கொடுத்த கிளியைப் பற்றி எமக்குத் தெரியாது! ஆனால் இந்தக் கிளி மரகதமுமல்ல - மாணிக்கமுமல்ல - வெறும் மண்ணாங்கட்டிக் கிளி!'' என்று சிடுசிடுத்தார்.

வேலப்பன் அந்த அலங்காரக் கூடத்தின் உச்சியில் தலை முட்டிக் கொள்ளுமோ என்று அஞ்சுகிற அளவுக்கு எழும்பிக் குதித்தான்.

''அரசே! ஒரு ராத்திரிக்குள் எப்படி என் கிளியை அபகரித்துக் கொண்டு, அதேமாதிரி ஒரு போலிக் கிளியைத் தயாரித்து என்னை ஏமாற்றப் பார்த்தீர்கள்?''

''என்ன சொல்கிறாய் நீ? என்னைத் திருடன் என்றா சொல்கிறாய்? மோசக்காரன் என்றா மொழிகிறாய்?''

''சொல்லவில்லை அரசே! ஆனால் அப்படி நினைக்கும் படிச் செய்துவிட்டீர்களே! குன்றுடையார் குடும்பம் என்றால் பண்பாளர் குடும்பம் என்று கொடிகட்டிப் பறந்த காலம் போய் - இந்தப் பரிதாபத்துக்குரிய வேடனின் பாபத்தைக் கொட்டிக் கொள்ளலாமா அரசே?''

''என் கோபத்தைக் கிளறாதே! நீ கொடுத்த கிளி இதுவே தான்!''

''இல்லை அரசே இல்லை! என்னுடைய அசல் கிளியை மறைத்து விட்டுப் போலிக் கிளியைச் செய்து ஏமாற்றுகிறீர்கள்! அரசே! என்னை ஏமாற்றினாலும் பரவாயில்லை - பெரிய காண்டியம்மனுக்கு நான் செய்து கொண்ட பிரார்த்தனையை நிறைவேற்ற முடியாமல் வீணாகப் பெரும் பழியைத் தேடிக் கொள்கிறீர்கள்!''

''வேடனே! அந்தப் பெரிய காண்டியம்மன் மீது சத்தியமாகச் சொல்லுகிறேன் - இதுதான் நேற்று மாலை நீ என்னிடம் கொடுத்த கிளி!''

''நானும் பெரிய காண்டியம்மன் சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் கொடுத்த கிளி வேறு - இது வேறு!''

''என்னுடைய நேர்மையையும் நாணயத்தையும் கேள்விக் குறியாக்கி - இதோ என் ராஜ்யத்துப் பொற்கொல்லர்கள் முன்னிலையில் என்னைக் கேடுகெட்டவனாகவும் ஆக்க முயற் சிக்கிறாயா?''

அப்போது மூத்த பொற்கொல்லர் குறுக்கிட்டார்:

''அரசே! ஒரு சாதாரண வேடனுக்குச் சமமாகத் தாங்களும் சத்தியம் செய்து என்ன பலன்? தாங்கள் சொல்வதுதான் உண்மையென்றால் இவனை அடித்து விரட்ட வேண்டியது தானே? அல்லது நமது கோட்டைச் சிறையில் இந்தப் பொய்ய னைத் தள்ள வேண்டியதுதானே!''

பொன்னர், சிறிது சினம் தணிந்தவனாக அந்தப் பொற் கொல்லர்களைப் பார்த்து விளக்கமளித்தான்:

''நீங்கள் சொல்வதை ஒரு நொடியில் செய்துவிடலாம்! ஆனால் இவனால் என் நாணயத்தின் மீது எழுப்பப்பட்டுள்ள சந்தேகத்திலிருந்து நீங்களேகூட விடுபட மாட்டீர்களே - அத னால்தான் யோசிக்கிறேன்!''

அப்போது வேலப்பன் தனது கை ஓங்கிவிட்டது என்ற தைரியத்தில் மனதுக்குள் மகிழ்ச்சியுற்று - ஆனால் பெரும் இழப்புக்கும் மோசத்துக்கும் ஆளானவனைப் போல முகத்தை வைத்துக் கொண்டு,

''அய்யா பொற்கொல்லர்களே! பெரிய காண்டியம்மன்மீது நானும் சத்தியம் செய்திருக்கிறேன். அரசரும் சத்தியம் செய்தி ருக்கிறார். உண்மை என்னவென்றால் பொருளை இழந்து நிற் பவன் நான். அதை அபகரித்தவர் என்ற குற்றச்சாட்டுக்கு ஆளாகி நிற்பவர் அரசர்! அதனால் அரசர்தான், தன்னைக் குற்றமற்றவர் என்று நிரூபிக்க வேண்டும்!'' என்று உரக்கக் கூவினான்.

''நான் குற்றமற்றவன் என்று நிரூபிக்க எந்த சோதனைக்கும் உட்படத் தயாராக இருக்கிறேன்'' என்று பொன்னர், அந்தக் கூடத்திலிருந்த பெரிய தூணில் ஓங்கி அறைந்தான். அப்போது அருக்காணித் தங்கம் துள்ளிக் குதித்து அவன் முன்னால் வந்து நின்று ''என்ன அண்ணா, நீங்களே இப்படி ஆலோசிக்காமல் அவசரப்படுகிறீர்கள்? எவனோ ஒரு எத்தன் - யாராலேயோ தூண்டிவிடப்பட்டு களங்கமற்ற உங்கள் மீது ஒரு கற்பனையான

குற்றச்சாட்டை சுமத்துகிறான் - அதிலிருந்து விடுபட அந்தக் கயவனிடமே வழி கேட்பது நியாயமா அண்ணா? வேண்டாம்! வேண்டாம்!'' என்று கதறினாள். அவளை அணைத்துக் கொண்டு அமைதியாகப் பொன்னர், ''அருக்காணி! கவலைப் படாதே! கற்பனையாகவோ எப்படியோ என்மீது ஒரு பழி சுமத்தப்பட்டு விட்டது! இதை இந்தப் பொற்கொல்லர்கள் நம்பமாட்டார்கள் என்றாலும் ஏதோ ஒரு உறுத்தல் இவர் களில் ஒருவரது உள்ளத்திலாவது இருந்தே தீரும்! அதையும் போக்கிக்கொள்ள வேண்டியது என் கடமை! தயவுசெய்து குறுக்கே நிற்காதே!'' என்றவன், வேலப்பனைப் பார்த்து - ''நீ என்னப்பா சொல்லுகிறாய்?'' என்று கேட்டான்.

''நான் கொடுத்த கிளி இதுவல்ல - அது அசல்! இது போலி! இதை எத்தனை கோயில்களில் வேண்டுமானாலும் சத்தியம் செய்ய நான் தயாராயிருக்கிறேன். ஆனால் அரசர் என் பொருளை அபகரிக்கவில்லையென்பது உண்மையானால் அதற்கு ஒரே ஒரு சோதனை!''

''என்ன சோதனை? அதைச் சொல்!''

வேலப்பன் சிந்திப்பதுபோல பாவனை செய்துவிட்டுச் சொன்னான்:

''வெள்ளாங்குளம் ஏரிக்குப் போய் அங்கே ஏரியின் வெண் கல மதகில் உட்குமுழியில் புகுந்து வெளிக்குமுழியில் எழுந்து வரவேண்டும். பெரிய காண்டியம்மன்மீது சத்தியம் செய்து விட்டு உட்குமுழியில் மூழ்க வேண்டும். பிறகு வெளிக் குமுழி யில் வரவேண்டும். பொய் சத்தியம் செய்தால், அந்த உட் குமுழியே தங்கள் உயிரை வாங்கி விடும்'' என்ற வேடன் வேலப்பனின் வார்த்தையைக் கேட்டு, பொன்னர் தனது நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு, ''இதோ! நான் இப்போதே புறப்படுகிறேன்!'' என்று கிளம்பிவிட்டான்.

''அண்ணா!'' என்று திகைப்புற்ற அருக்காணித் தங்கம் மீண் டும் அவனைத் தடுத்திட முனைந்தாள்.

''பெரிய காண்டியம்மன் என் நேர்மையை நிலைநாட்ட வைத்துள்ள பரிட்சையில் நான் வெற்றி பெற்று வருவேன்'' என்று அவளை சமாதானப்படுத்திவிட்டு, கூடத்து மாடத்தில் சோக உருவங்களாகக் காட்சியளித்த முத்தாயி பவளாயி இரு வரையும் பார்த்தான். ''அஞ்சாதீர்கள்'' என்பதுபோல அவர்

களை நோக்கிக் கையசைத்துவிட்டு கூடத்தை விட்டு அகன் றான் அரிமா நடை போட்டபடி!

அவனைத் தொடர்ந்து வேடன் வேலப்பனும் பொற்கொல் லர்களும் சென்றனர்.

அண்ணன் போவதையே கண்கள் கலங்கிடப் பார்த்துக் கொண்டு நின்ற அருக்காணியிடம் முத்தாயி பவளாயி இரு வரும் பரபரப்புடன் ஓடி வந்தனர். அவர்களது கண்களிலும் குளங்கள், இமைக்கரைகளை உடைத்துக்கொண்டு காட்சி தந்தன.

''எங்களுக்கென்னமோ மிகவும் பயமாக இருக்கிறது. உன் அண்ணன் சிறிதுகூட யோசித்துப் பார்க்காமல் அந்த வேடன் விரித்த வலையில் விழுந்து விட்டாரே!''

தேம்பியழத் தொடங்கிய முத்தாயியை அருக்காணி சமா தானப்படுத்த முயற்சி செய்தாள் எனினும் அவளையும் ஒரு இனந்தெரியாத அச்சம் ஆட்டிப்படைத்துக் கொண்டுதானிருந் தது. வெள்ளாங்குளம் ஏரியின் வெண்கல மதகின் உட்குமுழி என்பது படுபாதாளத்திற்கு ஆட்களை சுழற்றி இழுக்கக் கூடி யது. அத்தகைய பயங்கரமான சக்திவாய்ந்த உட்குமுழியை எதிர்கொள்ளப் பொன்னரை அந்த வேடன் சம்மதிக்க வைத்த தில் பெரியதோர் சதித் திட்டம் இருப்பதாகவே அவள் கருதி னாள். இருந்தாலும் அதில் உள்ள ஆபத்தைத் தனது அண்ணி யார்களிடம் தெரிவித்தால் அவர்கள் மிகவும் துடித்துப் போவார் கள் என நினைத்துத் தன்னை சமாளித்துக்கொண்டு அவர் களுக்கு ஆறுதல் கூறினாள்.

''நீங்கள் கவலைப்படாமல் இருங்கள்! பெரிய காண்டியம்மன் நமக்கு ஒரு குறைவும் வைக்கமாட்டாள். மாயவரைத் தேடிப் போன சின்ன அண்ணாவும் சீக்கிரம் வந்துவிடுவார். அவர் வந்ததும் அவரிடம் விபரத்தைச் சொல்லி வெள்ளாங்குளம் ஏரிக்கு அனுப்பி வையுங்கள். நான் பெரிய காண்டியம்மாளின் பாதங்களில் விழுந்து அண்ணனுக்காக பிரார்த்தனை செய்து கொள்ளப் போகிறேன்.''

அருக்காணி இதைச் சொன்னதும் முத்தாயி பவளாயி இரு வரும் கண்களை மூடிக்கொண்டு கரங்கள் குவித்து ''அம்மா தாயே - பெரியகாண்டி தேவி! அவரைக் காப்பாற்று!'' எனத் தொழுதனர். அவர்களின் விழிகளில் இருந்து பொல பொல

வென நீர் கொட்டியது. தனது கண்களைத் துடைத்துக் கொண்டு, அருக்காணித் தங்கம் அப்போதே பெரிய காண்டியம்மன் கோயிலைத் தேடி விரைந்தாள்.

கோயிலுக்குள் நுழைந்ததும், அவளையுமறியாமல் ''அம்மா!'' என்று ஓலமிட்டு அழுது கொண்டு பெரிய காண்டியின் சிலை முன்னர் விழுந்தாள்.

# 51 நன்றியுள்ள ஜீவன்

தங்கள் சூழ்ச்சித் திறனுக்கு ஒவ்வொரு கட்டமாக வெற்றி கிடைத்து வருகிறது என்பதை எண்ணி எல்லையிலா மகிழ்ச்சியில் திளைத்துவிட்ட செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் அந்த மகிழ்ச்சியை நிலத்தடி நீர் போல மறைத்துக் கொண்டு வெளியே வெடித்துக் கிடக்கும் பூமியைப் போல வேதனையை முகத்தில் தேக்கிக் கொண்டு தலையூர்க் காளியிடம் இந்தப் பூனைகளும் பாலைக் குடிக்குமா என்பதுபோல வஞ்சக வலையை மிகச் சாதுர்யமாகப் பின்னத் தொடங்கினர்.

''அரசே! தங்கள் மடலில் தாங்கள் தந்துள்ள விளக்கத்திற்கு மேலாக நானும் எவ்வளவோ விளக்கங்களை பொன்னரிடமும் சங்கரிடமும் அளித்தேன். போர் புரிந்து தலையூர்க் காளியை வீழ்த்தி விட்டுத் தலையூர் நாட்டைத் தரைமட்டமாக்குவதைத் தவிர தங்களுக்கு வேறு குறிக்கோளே இல்லையென்று அந்த சங்கர் வாளையோங்கிக்கொண்டு என் மீது பாய்ந்தேவிட்டான். பொன்னர் பொல்லாதவனாக இருந்தாலும் பொறுமையைக் கடைப்பிடிப்பவனைப்போல நடிப்பதில் கெட்டிக் காரனல்லவா, அதனால் அவன் சங்கரைத் தடுத்துவிட்டான். தூது வந்தவரைக் கொல்வது தர்மமல்ல என்று பாரதத்துத் தர்மனைப் போலத் தம்பிக்கு உபதேசம் செய்த அவன், தனக்கேயுரிய ராஜதந்திரத்தோடு என்னிடம் என்ன பேசினான் தெரியுமா?''

மாந்தியப்பனின் வார்த்தைகளில் - சிலந்தி வலை எனத் தெரியாது சிக்கிக்கொள்ளும் பூச்சியைப் போல - தலையூர்க் காளி மயங்கிவிட்ட காரணத்தால், ''என்ன பேசினான் அந்தப் பொன்னர்?'' என்ன பேசினான்? என்று ஆவலுடன் கேட்டான்.

''என்ன பேசினானா? அதைச் சொல்லவே எனக்கு நெஞ்சு பதைக்கிறது! என்னைப் பற்றியும் அப்படி ஒருவனுக்கு நினைக்கத் தோன்றியதேயென்று பதறிப்போய் விட்டேன்! சொர்க்க

லோகத்தையே உன் வாசஸ்தலமாக அமைத்துத் தருகிறேன் சுந் தரி - நீ எனக்கு ஒரே ஒரு தடவை சுகம் கொடு போதும் என்று பத்தினிப் பெண் ஒருத்தியிடம் பல் இளிக்கும் பேய் மனி தனைப் போல அந்தப் பொன்னர், தலையூர் மன்னன் மீது நானும் என் தந்தையும் கொண்டிருக்கும் ராஜ விசுவாசத்துக்கே அறைகூவல் விடுத்தான்!''

''ஏனப்பா சுற்றி வளைக்கிறாய்? எனக்கு உடம்பெல்லாம் சூடேறுகிறது! நமது ராஜபக்தியை சோதிக்கிற அளவுக்கு அப்படி என்னதான் அறைகூவல் விடுத்தான்? சீக்கிரம் சொல்!'' என்று சீறினார் செல்லாத்தாக் கவுண்டர்.

ஒழுங்காக ஒத்திகை பார்க்கப் பட்டுத் தன் முன்னிலையில் நடை பெறுகிற நாடகம் என்பதை உணர முடியாத காளி மன்னன், மாந்தியப்பனிடமிருந்து என்ன விபரம் வரப்போ கிறது என்பதை உணர்ச்சி பொங்கிடக் கூர்ந்து நோக்கினான்.

''மாந்தியப்பா, நீயும் உன் தந்தை செல்லாத்தாக் கவுண்டரும் யார்? நாமெல்லாம் பங்காளிகள்தானே! நமது பங்காளிக் காய்ச்சலால் ஒன்றாக இருந்து ஓங்கிச் செழித்த கோளாத்தாக் கவுண்டர் குடும்பம் எங்கள் தந்தை குன்றுடையார் காலத்தில் வளர்ந்த பகையால் எப்படியெல்லாமோ சிதறிப் போய் விட் டது! இனிமேலாவது நடந்ததை மறந்து செயல்படுவோம்! நீயும் உன் தந்தையும் எங்களோடு சேர்ந்து விடுங்கள்! வளநாட்டை யும் அதன் ஆதிக்கத்தில் உள்ள பகுதிகளையும் நாம் பிரித்துக் கொண்டு ராஜ பரிபாலனம் செய்வோம் - நாம் ஒன்றாக இணைந்துவிட்டால் அந்தக் தலையூர்க் காளியையும் அவனது குலத்தையும் சாம்பல் மேடாக ஆக்கிவிடலாம் - என்ன சொல்லு கிறாய்?''என்று அந்தப் பொன்னர் என்னைப் பார்த்துக் கேட் டான் மன்னா, கேட்டான்!

மகன் இதைச் சொன்னதும் அக்கினி குண்டத்தில் தூக்கி வீசப்பட்டவர்போல செல்லாத்தாக் கவுண்டர் துடிதுடித்து, தவிதவித்து,''அடப்பாவி! நம்மை நன்றி கெட்ட ஜென்மங்கள் என்றா அந்தப் பொன்னன் நினைத்துக் கொண்டான்? நீ ஒரு கோழை, எதுவும் செய்யாமல் திரும்பி விட்டாய்! நானாக மட்டும் இருந்திருந்தால் அந்தப் பொன்னரின் நாக்கை அந்த இடத்திலேயே அறுத்து நாய்க்கு விருந்தாக்கியிருப்பேன்!'' என்று கர்ச்சனை செய்தார்.

இருவரும் சேர்ந்து தலையூர்க் காளியை யோசிப்பதற்கே விடவில்லை.

''சரி! என்னதான் அவர்கள் முடிவாகச் சொன்னார்கள்?'' எனக் காளி மன்னன் மீசையைத் திருகிக்கொண்டே கேட்டான்.

''அவர்கள் கூறிய சொற்களை அப்படியே கொட்டி விடுகிறேன் இங்கே! அந்தக் கர்ணகடூரமான சொற்களுக்கு சொந்தக்காரர்கள் பொன்னரும் சங்கரும் என்றாலுங்கூட, அவற்றை இங்கேயொரு முறை சொல்வதற்கே என் மனம் இடம் தரவில்லை. இருந்தாலும் அவர்களின் வெறி உணர்வு எந்த அளவு இருக்கிறது என்பதை புரிந்து கொள்ள வேண்டுமல்லவா? அதற்காகக் கூறுகிறேன்! தலையூர்க்காளிக்கு எவ்வளவு தடித்தனம் இருந்தால் எங்கள் தளபதி வீரமலையைச் சிறையில் போடுவான்? எவ்வளவு திமிர் இருந்தால் மாயவரைக் கொன்றது மல்லாமல் அவர் சவ அடக்கத்திற்கு வா என்று அழைப்பு விடுவான்? எங்கள் வீரத்தை கேலி செய்கிறானா காளி மன்னன்? அவனுடன் இனி சமரசப் பேச்சுக்கே இடமில்லை! அவன் ஒரு கோழை என்பது எங்களுக்குத் தெரியும்! யுத்த களத்தில் எங்களை எதிர்கொள்ளும் ஆற்றலோ துணிச்சலோ இல்லாத மண்டூக மன்னன்தான் தலையூரான் என்பதும் எங்களுக்குப் புரியும்! எங்கள் வாள் முனையின் முன்னால் ஆமையைப் போல அடங்கி ஒடுங்கி உயிர்ப் பிச்சை கேட்கப் போகும் அந்த உலுத்தனிடம் சொல் - போருக்குக் கிளம்பும் போதே மறந்துவிடாமல் வாய்க்கரிசி வாங்கிப் போட்டுக் கொண்டு கிளம்பச்சொல்! களத்தில் அவனை ஒரு கணத்தில் முறியடிப்போம் - சிறை பிடிப்போம் - தலைமுடியை''பச் சிரைக்கச் செய்து, கரும்புள்ளி செம்புள்ளி குத்துவோம் - கழுதை மீது ஊர்வலம் விடுவோம் - அதைப் பார்த்து ஊரார் கெக்கலி கொட்டிச் சிரித்தபிறகு அவன் உடலைக் கூறாக்கி வளநாட்டுத் தெருக்களில் வற்றலாகக் காய வைப்போம் - என்றெல்லாம் அந்தப் பொன்னரும் சங்கரும் இடிஇடியெனச் சிரித்து என்னிடம் சொன்னபோது என் நரம்பு மண்டலமே உலைக்களமாகக் கொதித்தது! இருந்தாலும் தூதனாகச் சென்ற நான் தலையூர் மன்னனின் அனுமதியில்லாமல் எதுவும் விபரீதமாகச் செய்துவிடக் கூடாதேயென்றுதான் அமைதியாக வந்து விட்டேன். இல்லையேல் என்னுயிரை ஒரு பொருட்டாக மதிக்காமல் அந்தப் பொன்னர் - சங்கர் இருவரில் ஒருவர் தலையையாவது உருட்டி விட்டுத்தான் நான் பிணமாகியிருப்பேன்.''

மாந்தியப்பனின் தத்ரூபமான நடிப்பைக் கண்டு தந்தையே வியந்து போனார்! நயவஞ்சகம் கக்கிடும் வித்தையில் தன்னையும் மிஞ்சிவிட்டானே பிள்ளையென்று அகங்குளிர்ந்தார் கவுண்டர்! ஆனாலும் கொதிப்படைந்திருப்பதாகக் காளி

மன்னனிடம் காட்டிக் கொண்டார்! காளி மன்னன் கால்கள் இப்போது நிலத்தில் பதிய வில்லை - நெருஞ்சில் முள் காட்டில் அடி வைத்தது போல அங்குமிங்கும் உலாவினான்! நெஞ்சமோ மூங்கில் காட்டுத்தீப்போல வெடித்துச் சிதறிக் கொண்டிருந்தது!

''கோழையென்றனர் என்னை! கோட்டைகள் பலவற்றைத் தவிடு பொடியாக்கிய இந்தத் தலையூரானைப் பார்த்துக் கோழை யென்றனர். மாளிகைகளை மண்மேடாக்கி பல சிற்றரசுகளை மண்டியிடச் செய்த என்னை மண்டூகமென இகழ்ந்தனர். அரண் மனைகளைப் பந்தாடி அற்புத வெற்றிகளை ஈட்டிய நான் ஆமையாம் - ஓங்கிய வாளைக் கீழே போடாமல் ஓராயிரம் வீரர்களை உயிரற்ற சடலங்களாக்கிப் பல போர்க்களங்களில் ரத்த வெள்ளத்தில் தெப்பங்களாக மிதக்கவிட்ட நான் உலுத்தனாம்! என்னை முறி யடிப்பர் - சிறை பிடிப்பர் - கழுதையில் ஏற்றுவர் - கண்ட துண்டமாகச் சிதைப்பர் - தலையூர்க் காளியின் தடந்தோள் வலிமை புரியாத அந்தத் தருக்கர்களுக்குத் தக்க பாடம் புகட் டியே தீர வேண்டும்! தர்ம நியாயப்படி நடந்து கொள்ள நினைத்தது என் தவறு! இனி யோசனைக்கே இடமில்லை! போர்! போர்! போர் நடந்தே தீரும்!

அப்போதும் செல்லாத்தாக் கவுண்டர், முதிர்ந்த அனுபவத் தின், முத்திரையைப் பொறிப்பவர் போல, தலையூர்க் காளி யைப் பார்த்து, ''போர் தவிர்க்க முடியாதது என்றாலும் - அதற்கு சற்று அவகாசம் எடுத்துக் கொண்டு ஆயத்தமாவது நல்லதல்லவா? எதற்கும் இந்த 'விபரங்களைச் சோழமன்ன னுக்குச் சொல்லியனுப்பி அவனைத் தலையிடச் செய்தால் நல மெனக் கருதுகிறேன். ஒருவேளை சோழ மன்னன் அக்கள தேவனின் படைத்துணையைக்கூட நாம் பெறக்கூடிய வாய்ப் பும் கிட்டுமல்லவா?'' என்றார் சகுனித்தனத்துடன்!

அதை உடனே மறுத்து மாந்தியப்பன், காளி மன்னனின் முன்னால் வந்து நின்று இந்த விஷயத்தில் என் தந்தையின் நிதானத்தை ஏற்றுக் கொள்ளவே கூடாது! என்னதான் இருந் தாலும் சோழ மன்னன், பொன்னர் - சங்கரின் பக்கம்தான் இருப்பான். இன்னமும் அவனுக்கு இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் தெரிந்திருக்காது. ஒரு வேளை பொன்னர் - சங்கர், சோழனுக் குச் செய்தி அனுப்பி அவனது படைகளையும் இணைத்துக் கொண்டு தலையூரைத் தாக்கிட முந்திக்கொள்ளவும் கூடும். எனவே நாம் ஒருக்கணம் கூடத் தாமதிக்காமல் இப்போதே நமது படைகளுடன் வளநாட்டை நோக்கிச் செல்லவேண்டும்.

''பொன்னரும் சங்கரும் வளநாட்டுக் கோட்டைக்குள்ளிருக் கும் போதே அவர்களை வளைத்துவிட வேண்டும். அவர்கள் கோட்டையிலிருந்து போர்க்கோலம் பூண்டு படைத்தலைமை யேற்றுப் புறப்படுவதற்குள்ளாக நமது படைகள் அவர்களது கோட்டையை முற்றுகையிட்டாக வேண்டும்'' என்று, எரிந்து கொண்டிருக்கிற பஞ்சுக் கிடங்கில் கடுகு மூட்டையை அவிழ்த் துக் கொட்டுவது போலத் தன் பணியை செய்து முடித்தான்.

''முழங்கட்டும் போர் முரசம்! விற்படை வீரர் படைக்கு நான் தலைமையேற்கிறேன்! தேர்ப்படைக்கு செல்லாத்தாக் கவுண்டர் தலைமையேற்கட்டும்! வாட்படைக்கு மாந்தியப்பன் தலைமை! இப்போதே நமது படைகள் தயாராகட்டும் - வளநாட்டுக் கோட்டையை இன்றைக்கே வளைத்து அழிப்போம்!'' எனச் சிம்ம கர்ச்சனை செய்துகொண்டே, அந்தக் கூடத்திலிருந்த போர் முரசத்தைத் தலையூர்க் காளி அடித்து முழக்கினான்.

முரச ஒலி கேட்ட விற்படை, வாட்படை, தேர்ப்படை வீரர் கள் தலையூர்க் கோட்டை முகப்பில் புற்றீசல் என மொய்த்து விட்டனர். தலையூர்க் காளிக்குத் தக்க தருணத்தில் 'உண்மை நிலை உணர்த்தக் கூடிய அந்த ஒற்றன் ஒரு குதிரையை அதிவேகமாக ஓட்டிக் கொண்டு, தனது அரசனைக் காணவும் - செல்லாத்தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் செய்துள்ள சூழ்ச்சிகளை விளக்கவும் அப்போதுதான் அரண்மனை வாயிற் புறத்தில் வந்து இறங்கினான்.

வாயிற்படிகளேறி காளி மன்னன் இருக்கும் கூடத்தை நோக்கி அவன் அவசரமாகச் சென்று கொண்டிருப்பதை, அப்போதுதான் போருக்கான ஆயத்தங்களைச் செய்வதற்காக அரசனிடம் விடைபெற்றுத் திரும்பிக் கொண்டிருந்த செல்லாத் தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் கவனித்து விட்டனர்.

செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பனிடம் ஜாடை காட்டி னார். உடனே இருவரும் அந்த வழியில் உள்ள பெருந்தூண் ஒன்றில் மறைந்து கொண்டனர்.

''மாந்தியப்பா! இவன் காளி மன்னனைச் சந்தித்துவிட்டால் எல்லாமே தலைகீழாக மாறினாலும் மாறிவிடும்! நமது சதித் திட்டங்களை இந்தப் படுபாவி ஒற்றன் அறிந்திருக்கக்கூடும்! அவற்றை காளியிடம் சொல்லிவிட்டால் காரியம் கெட்டுவிடும். நமக்கும் ஏதாவது விபரீதம் ஏற்படலாம். அதனால் இவனை

அரசனிடம் போகாமல் இங்கேயே தடுக்க வேண்டும்'' என்று செல்லாத்தாக்கவுண்டர் சொல்லி, வாய் மூடுவதற்குள், மாந் தியப்பன் தனது வாளை உருவி ஒற்றனின் நெஞ்சில் ஆழ மாகப் பாய்ச்சிவிட்டான். அவன் அலறக்கூட முடியாமல் வாயைப் பொத்தி, உயிரையும் முழுமையாகப் போக்கிட கழுத் தையும் நெரித்து - தூண்களின் மறைவுகளில் ஒரு மூலையில் கிடத்திவிட்டு, எதுவும் தெரியாதவர்கள் போல அங்கிருந்து சென்றுவிட்டனர்.

காளி மன்னனும் போர்க்கோலம் பூணப் புறப்பட்டுவிட் டான். புதையல் ஒன்று தானாகப் பூமி வெடித்து வெளியே வரும் பொழுது - திடீரென மற்றொரு பூகம்பம் ஏற்பட்டு அந்தப் புதையல் பாதாளத்திற்குப் போய்விட்டது போல, காளி மன்னனுக்கு அவனது நம்பிக்கைக்குரிய ஒற்றன் மூலமாகக் கிடைக்கவேண்டிய உண்மைத் தகவல் ஊமை யாகவே ஆகிவிட்டது! தலையூர்க் காளி முரசுகொட்டி அறி வித்ததுபோல, விற்படை, வாட்படை, தேர்ப்படைகளுக்கு மூவரும் தலைமை தாங்கினர். கூர்மையான கணைகளை, அம்புக் கூட்டில் நிரப்பிக் கொண்டு வில்லேந்திய வீரர்கள் - குதிரைகளில் அமர்ந்து புறப்பட்டனர். வாள் வீரர்களும் தூக்கிப் பிடித்த வாட்களுடன் குதிரைகளில் அணி வகுத்தனர், ஆவேசக் கூச்சலிட்டுக் கொண்டு! இரு படைகளுக்குமிடையே செல்லாத்தாக் கவுண்டர் தலைமையில் தேர்ப்படை சென்றது!

வளநாட்டுத் தளபதி வீர மலையோ தலையூர்ச் சிறையில்! மாயவர் உடலோ தலையூர்க் கோட்டையில் ஒரு பிண அறை யில்! செம்பகுலன் சூழ்ச்சியில் சிக்கிய பொன்னரோ, வெள் ளாங்குளக் கரையில்! அவன் தம்பி சங்கரோ சங்கிலியால் பிணைக்கப்பட்டு ஒரு இருட்குகையில் ! தங்கை அருக்காணித் தங்கமோ பெரிய காண்டியம்மன் பாதங்களில்! வளநாட்டுக் கோட்டையைச் சூழ்வதற்குத் தலையூர்ப் படைகளோ வழியில்!

இந்தப் பயங்கரமும் - பரிதாபமும் நிறைந்த சூழ்நிலையில் ஒரு குதிரை மட்டும், காடு கரம்பு - வயல் வரப்பு - கல் முள் - என்று பாராமல் ஓடிக்கொண்டிருக்கிறது. அதன் மீது ஆள் யாரும் இல்லை. அதுவே ஓடிக்கொண்டிருக்கிறது. சங்கரின் குதிரைதான் அது. தனது தலைவன் சிறைப்பட்டிருக்கும் செய்தியைத் தனது வருகையினால் உணர்த்த முடியும் என்ற நம்பிக்கையோடு அது வளநாடு நோக்கி ஓடி வந்து கொண்

டிருக்கிறது. பாறைகள் அடர்ந்த ஒரு இடத்தில் சிறியதோர் கால்வாயைத் தாண்டிச் செல்ல முனையும்போது, அந்தக் குதிரை கீழே விழுந்து முன்னங்கால்களில் இரத்தம் கசிகிறது! அதை அந்தக் குதிரை பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. ஓடிக்கொண்டேயிருக்கிறது. மனிதர்களுக்கு ஆறாவது அறிவு ஒன்று இருக்கிறது. அந்த ஆறாவது அறிவுக்குப் பதிலாக வாயில்லாப் பிராணிகள் சில நன்றி செலுத்தும் ஓர் உன்னதப் பண்பைப் பெற்றிருக்கின்றன அல்லவா; அதற்கு எடுத்துக் காட்டாகத்தான் அந்தக் குதிரை தனது கடமையைச் செய்திடத் துடித்தது. சில குறுகிய வழிகளில் அதனால் ஓட முடிய வில்லை. அடிபட்ட கால்களில் வலி வேறு குடைந்தெடுத்தது. இருந்தாலும் அந்த நன்றியுள்ள மிருகம் சோர்ந்து போய்விட வில்லை. ஓடிற்று, ஓடிற்று, ஓடிக் கொண்டேயிருந்தது.

வளநாட்டுக் கோட்டை முகப்பின் கொடி அசைவது குதிரை யின் கண்களுக்கு வெகு தொலைவிலேயே தெரிந்து விட்ட தால் - வந்து சேர வேண்டிய இடத்துக்கு வெகு விரைவிலேயே வந்துவிட முடியும் என்ற நம்பிக்கை அதற்குண்டாயிற்று. ஆனால் அதன் உடல்நிலை அதற்கு இடங்கொடுப்பதாக இல்லை. மூச்சைப் பிடித்துக்கொண்டு - வலியைப் பொறுத்துக் கொண்டு - தனது பணியை முடித்த பிறகே கீழே விழ வேண் டும் என்று அது எண்ணிச் செயல்பட்டது.

பெரியகாண்டியம்மன் கோயிலைத் தாண்டி இரண்டொரு கல்தொலைவு சென்றால் வளநாட்டுத் தலைநகரின் எல்லையைத் தொட்டுவிடலாம். ஆனால் அம்மன் கோயில் அருகே வரும் பொழுதே குதிரையின் கால்கள் ஒன்றோடொன்று பின்னத் தொடங்கி விட்டன.

சற்று நின்று பார்த்தது! பெரிய காண்டியம்மன் ஆலயத்தைக் கண்டதும் அதற்கு ஒரு புது யோசனை வந்தது போலும்! அந்தக் கோயிலை நோக்கி மெதுவாகத்தான் அதனால் நடக்க முடிந்தது. கோயிலருகே, அதுவும் கோயில் வாசற்படியருகே வந்துவிட்ட அந்தக் குதிரையை அருக்காணியுடன் அம்மன் கோயில் தொண்டு செய்யும் அவளது தோழிகள் சிலர் பார்த்து விட்டனர். திடுக்கிட்டுப் போய்க் குதிரையிடம் ஓடி வந்தனர். குதிரை அவர்களை நோக்கித் தலையைக் குலுக்கிற்று! கால் களைப் பூமியில் ஓங்கி ஓங்கி உதைத்தது! தோழிகளில் ஒருத்தி கோயிலுக்குள் ஓடினாள். அடுத்துச் சில நொடிகளில் அருக் காணித் தங்கம் அலறியடித்துக்கொண்டு வெளியே ஓடிவந் தாள். அதற்குள் குதிரை கீழே விழுந்துவிட்டது! ''அண்ணா!''

எனக் கதறிக்கொண்டு, குதிரையின் கழுத்தைக் கட்டிப் பிடித் தாள். குதிரையின் கண்களிலிருந்து பொல பொலவென நீர் கொட்டியது.

அருக்காணிக்குப் புரிந்துவிட்டது, அண்ணன் சங்கருக்கு ஏதோ ஆபத்தென்று! குதிரையினால் பேச முடியாது என் பதைக் கூட மறந்து விட்டு - ''அண்ணா எங்கே? சங்கர் அண்ணா எங்கே?'' என்று அழுது கொண்டே கேட்டாள்! குதிரை அவளை நிமிர்ந்து பார்த்தது! கண்ணீர் நிற்கவில்லை அந்த நன்றியுள்ள ஜீவனுக்கு!

''சங்கர் அண்ணா என்ன ஆனார்? அவர் இருக்குமிடத்தைத் தயவு செய்து காட்டிவிடு!'' என்று குதிரையைத் தழுவிக் கொண்டு அருக்காணி, தேம்பித் தேம்பி அழுதாள். அவளின் வேதனையைச் சகிக்க முடியாத ஒரு உணர்வு அந்தக் குதி ரைக்குப் புதிய வலிவை அளித்தது போலும் - தட்டுத் தடு மாறிக் கால்களை ஊன்றி எழுந்து நின்றது! அருக்காணிக்குத் தெம்பு பிறந்து விட்டது - ஆலயத்துக்குள் மீண்டும் ஓடினாள், தனது தோழிகளை அழைத்துக்கொண்டு!

ஆயுதங்களை ஏந்திக்கொண்டு அவளும் அவளது தோழிகள் சிலரும் அவர்களுக்குரிய குதிரைகளுடன் வெளியே வந்தனர். அருக்காணியும் வெள்ளை நிறக் குதிரையொன்றில் ஏறிக் கொண்டு சங்கரின் குதிரை அருகே வந்தாள். தன்னுடன் அழைத்துக் கொள்ளாமல் ஆலய வாசலில் விடப்பட்ட ஒரு தோழியிடம், ''நீ உடனே போய் என் அண்ணியார்களிடம் விஷயத்தைச் சொல்! பயப்பட வேண்டாம் என ஆறுதல் கூறு! பெரியண்ணன் வெள்ளாங்குளத்திலிருந்து திரும்பாவிட்டால், அவருக்கு உடனே செய்தி அனுப்ப ஏற்பாடு செய்! நான் சின்ன அண்ணா என்ன ஆனார் என்பதைத் தெரிந்து கொண்டு வருகிறேன். எனக்காக யாரும் அஞ்சத் தேவையில்லை. துணைக்குத் தோழிகளும் என்னுடன் இருப்பதையும் பெரியண்ணனிடமும் அண்ணியார்களிடமும் சொல். ஏதோ விபரீதம் நேரப் போவ தாக உணர்கிறேன். அண்ணனையும் அண்ணியார்களையும் எச்சரிக்கையாக இருக்கும்படி நான் கேட்டுக் கொண்டதாகக் கூறிடு!'' என மொழிந்திட்ட அருக்காணித் தங்கம், சங்கரின் குதிரையைக் கெஞ்சுகிற பாவனையில் பார்த்து, முன்னே நடந்து வழி காட்டுமாறு விழியால் கேட்டுக் கொண்டாள்.

தளர்ந்து, துவண்டு, நலிந்து போயிருந்த அந்தக் குதிரை, முதலில் அது வந்த பாதையில் உயிரைப் பிடித்துக்கொண்டு நடக்கத் தொடங்கிற்று. அதைப் பின் தொடர்ந்து அருக்காணி யின் குதிரையும் தோழிகளின் குதிரைகளும் சென்றன.

# தலையைக் 52
# குனிபார்த்த கல்!

அருக்காணித் தங்கத்தினால் அவசரமாக அனுப்பி வைக்கப் பட்ட தோழி மிக வேகமாக வளநாட்டு அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள். அப்போது முத்தாயி பவளாயி இருவரும் இருக்கும் மாளிகையின் வாயிற்புறத்தில் ரதவண்டியொன்று நின்று கொண்டிருந்ததைக் கண்டாள். ஆரிச்சம்பட்டி மணியங்குரிச் சியைச் சேர்ந்த ரதவண்டியென்பதை அவள் புரிந்துகொண் டாள். சாரதியைக் கேட்டு, சின்னமலைக்கொழுந்துக் கவுண் டரும் - வையம்பெருமானும் வந்திருப்பதை அறிந்துகொண் டாள். தயக்கம் ஏதுமின்றி உள்ளே நுழைந்தாள். மாளிகைக் கூடத்தில் வேதனை உருவங்களாக முத்தாயி பவளாயி நின்று கொண்டிருந்தனர். இருக்கைகளில் சின்னமலைக்கொழுந்தும், வையம்பெருமானும் அவர்களுக்கு ஆறுதல் கூறும் நிலையில் வீற்றிருந்தனர்.

''அவர்கள் இருவருக்கும் ஏதாவது ஆபத்து நேரிடுமோ என்று எங்களுக்குப் பயமாயிருக்கிறது அப்பா! தயவுசெய்து நீங்களும் அண்ணனும் அவர்கள் எங்கே இருக்கிறார்கள், எப்படி இருக்கிறார்கள் என்பதை உடனடியாகத் தெரிந்து கொண்டு வந்து சொன்னால்தான் எங்கள் உயிரே இருக்கும்'' என்று முத்தாயி அழுது கொண்டே சொன்னபோது பவளா யியும் தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டாள்.

அந்தச் சமயத்தில் அருக்காணியின் தோழி பதைபதைப்புடன் உள்ளே நுழைந்தது அவர்கள் நால்வரையும் அதிர்ச்சிக்குள் ளாக்கியது.

''நிச்சயமாக ஏதோ ஆபத்துதான்! சின்ன அண்ணா ஏறிச் சென்ற குதிரை மட்டும் காயங்களுடன் வந்து சேர்ந்திருக்கிறது. அவரைக் காணவில்லை. அந்தக் குதிரையை அழைத்துக் கொண்டு, - சின்ன அண்ணாவைத் தேடி - அருக்காணித் தங்கம் போயிருக்கிறாள்'' என்று அந்தத் தோழி சொல்லி

வாய் மூடுவதற்குள்ளாக பவளாயி ''அக்கா!'' என அலறிக் கொண்டு முத்தாயியைக் கட்டிப்பிடித்துக்கொண்டு விம்மி னாள்.

''பயப்படாதேயம்மா, இதோ நான் வெள்ளாங்குளம் ஏரிக் குப் போய் பொன்னரைப் பார்க்கிறேன். வையம்பெருமான் இப்போதே சங்கரைத் தேடிப் புறப்படுவான்'' என்று கூறிய சின்னமலைக்கொழுந்து, மகனைப்பார்த்து - ''நீ இங்கிருந்து ஒரு படையுடன் புறப்பட்டு அருக்காணித் தங்கம் சென்றுள்ள இடத் தைத் தொடர்ந்து சென்றிடு! நானும் இங்குள்ள இன்னொரு படைப் பிரிவுடன் வெள்ளாங்குளத்துக்குக் கிளம்புகிறேன்'' என்றார்.

பொன்னர் இல்லை - சங்கர் இல்லை - தளபதி வீரமலையோ தலையூர்சிறையில் - இந்த நிலையில் முத்தாயி, பவளாயி இரு வரின் ஒப்புதலுடன் சின்னமலைக்கொழுந்து வளநாட்டுப் போர் முரசை வையம்பெருமானை விட்டு ஒலித்திடச் செய் தார். முரசின் முழக்கம் கேட்டமாத்திரத்தில் வளநாட்டுப் படைகளின் துணைத் தளபதிகளின் தலைமையில் வீரர்கள் குழுமினர் படைக்கலன்களுடனும், குதிரைகள், தேர்களுடனும் கோட்டை முகப்பில்! வளநாட்டு மக்களும் ஏதோ திடீர் ஆபத்து ஏற்பட்டுள்ளது என்பதை உணர்ந்து அவரவர்களுக் குக் கிடைத்த ஆயுதங்களை ஏந்தி நூற்றுக்கணக்கில் கூடி விட்ட னர். சின்னமலைக்கொழுந்து வழிநடத்திட ஒரு படைப்பிரிவும் - வையம்பெருமான் வழிநடத்திட மற்றொரு படைப்பிரிவும் வளநாட்டுக் கோட்டை முகப்பிலிருந்து வீர முழக்கத்துடன் ஆர்த்தெழுந்து புறப்பட்டு விட்டன.

பதற்றத்திலும் பரபரப்பிலும் பொன்னர் சங்கருக்கு சூழ்ச்சி யின் விளைவாக எந்த விபத்து ஏற்பட்டிருந்தாலும் அவற்றி லிருந்து அவர்களிருவரையும் மீட்டுக் கொணர வேண்டுமென்ற ஒரே குறிக்கோள் மட்டுமே கொடிகட்டிப் பறந்த காரணத்தால் வளநாட்டுக் கோட்டைக்குப் போதுமான பாதுகாப்புக்குத் தேவையான வீரர்கள் இருக்கிறார்களா என்பதைக்கூட-யாரும் நினைத்துப் பார்க்கவில்லை. நூறுக்கும் குறைவான வீரர்கள் மட்டுமே கோட்டையைக் காத்து நின்றனர்.

சின்னமலைக்கொழுந்தின் தலைமையில் புறப்பட்ட படைப் பிரிவு வெள்ளாங்குளம் நோக்கி விரைந்து கொண்டிருந்தது.

வையம்பெருமானின் பெரும்படையோ, சங்கர் இருக்குமிடத்தைச் சரியாகத் தெரிந்துகொள்ளாதநிலையில் அருக்காணித் தங்கமும் அவளது தோழிகளும் ஏறிச்சென்ற குதிரைகளின் குளம்படிச் சுவடுகளைப் பார்த்துக்கொண்டு முன்னேறியது.

இதற்கிடையே வேறொரு திசையில் தலையூர்க் காளியின் படை வளநாட்டை நோக்கிக் கடல் பொங்கி வருவதுபோல வந்து கொண்டிருந்தது.

அருக்காணித் தங்கத்துக்கு வழிகாட்டியவாறு அழைத்துச் சென்ற சங்கரின் குதிரையோ சாவுடன் போராடிக்கொண்டே தனது கடமையை எப்படியும் நிறைவேற்றித் தீரவேண்டுமெனச் சங்கற்பம் செய்துகொண்டதைப்போல நடக்க முடியாமல் தள்ளாடிக் கொண்டிருந்தது. சங்கர் அடைபட்டுக் கட்டுண்டு கிடக்கும் மண்டபம் இன்னும் ஒரிரு கல் தொலைவுதான் என்பதை உணர்ந்ததாலோ என்னவோ அந்த நன்றியுள்ள ஜீவனின் தள்ளாட்ட நடையிலும் ஒரு நம்பிக்கை கலந்த ஊக்கம் இருந்தது. குதிரை படும் கொடுந்துன்பத்தைக் கண்ட அருக்காணித்தங்கத்தின் கண்களின் ஒரத்தில் நீர்த்துளிகள் புல் நுனியின் பனி முத்துக்களைப்போலத் தொங்கின!

ஒரு வழியாக சங்கரின் குதிரை அந்த மண்டபத்துக்கருகே வந்து விட்டது. பக்கத்தில்தான் மண்டபம் இருக்கிறது - அங்குதான் சங்கர் இருக்கிறான் என்பதை உணர்த்தும் வகையில் அது பெருங்கனைப்பொன்றைக் கனைத்தது. புதர்களின் மறைவிலிருந்து குதிரையின் பயங்கரக் கனைப்புச் சப்தமும் அதைத் தொடர்ந்து குதிரைகள் நடக்கும் குளம்படிகளின் ஓசையும் மண்டபத்தைச் சுற்றிக் காவல்புரிந்த மாந்தியப்பனின் வீரர்களது செவிகளைக் குடைந்த காரணத்தால் அவர்கள் அங்கிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஆயுதங்களை ஓங்கியவாறு புதர்களைச் சூழ்ந்தனர்.

அருக்காணித் தங்கம், தனது வாளைச் சுழற்றிக்கொண்டு வீராவேசமாக அவர்களை எதிர்கொண்டவுடன், அவளது தோழிகளும் பெண் புலிகளெனப் படைக்கலன்களைப் பயன்படுத்தி அந்த மண்டபத்துக் காவலர்களை வீழ்த்த ஆரம்பித்தனர்.

வில்லில் இருந்து மிக வேகமாக விடுபட்ட கணையைப் போல வீராங்கனை அருக்காணித் தங்கம், மண்டபத்துக்குள் நுழைந்தாள் தனது குதிரையை விட்டிறங்கி!

அவள் நுழைந்த வேகத்தில் மண்டபத்துக் கதவு ஓரத்தில் இரு புறமும் ஒளிந்து கொண்டிருந்த மாந்தியப்பனின் ஆட்களைக் கவனிக்கவில்லை. அவளது கண்கள் அவளுக்கெதிரே ஒரு தூணில் சங்கிலியால் கட்டப்பட்டிருந்த சங்கரை மட்டுமே கண்டு கனல் வீசிக்கொண்டிருந்தன. அதனால் அவளுக்குக் கதவோரத்துக் கயவர்களைக் கவனிக்க முடியாமற் போயிற்று. வேகமாக நுழைந்தவளின் இருகரங்களையும் அந்த வீரர்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். அவளால் அசைய முடியாதபடி இன்னும் இரு வீரர்கள் ஓடிவந்து அவளது கால்களை இறுக்கிப் பிணைத்துவிட்டனர்.

முதலையைப் போன்ற வாயும் - காட்டெருமை போன்ற தலையுங்கொண்ட - காண்டாமிருக உருவத்தினன் ஒருவன், அருக்காணித் தங்கத்தின் கூந்தலைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே, தூணில் கட்டுண்டிருக்கும் சங்கரைப் பார்த்துப் பேய்ச் சிரிப்பு சிரித்தான்.

"அடேய், முட்டாள். சங்கர்! சிங்கக்குட்டியே! நீ இப்போது மேலும் அசிங்கப்படப் போகிறாய்! ஆமாம் - உன் முன்னாலேயே உன் தங்கையாம் இந்த மான்குட்டியின் மானத்தை நான் பறிக்கப் போகிறேன்!" என்று அந்த மனித மிருகம் கர்ச்சித்தது! அது மட்டுமல்ல, அவளது ஆடையை உருவிடவும் எத்தனித்தது!

அருக்காணித் தங்கமோ தனது வலிமை முழுவதையும் ஒன்று திரட்டித் தன்னை விடுவித்துக் கொண்டதுமல்லாமல் தனது கரங்களைப் பிடித்திருந்த இரண்டு வீரர்களை வாளால் வெட்டியும் சாய்த்தாள்! இருந்தாலும் அவள் முற்றிலும் மீண்டு விட்டாள் என்று சொல்ல முடியவில்லை - அந்தப் பயங்கர முரட்டு மனிதன் மலைகள் இடிந்து விழுவது போல சிரித்துக் கொண்டு அவள் கையிலிருந்த வாளைத் தனது வாளினால் தட்டி விட்டான். கீழே விழுந்த வாளை எடுப்பதற்கு அருக்காணித் தங்கம் சற்று உடலை வளைத்துத் திரும்பியபோது அந்தத் திமிங்கலம் அவள்மீது விழுந்து அவளைத் தரையில் புரட்டியது!

இனி தப்ப முடியாது - மானத்திற்கு மரணம் வந்துவிட்டது என்ற துடிதுடிப்பில் அவள் "அய்யோ! அண்ணா!" என்று உரக்கக் கூச்சலிட்டு விட்டாள்!

தங்கை அருக்காணியின் அந்தக் கூச்சல் கேட்டது மட்டுமல்ல - தன் கண்களுக்கு நேராகவே அவளது மானம் இன்னுமொரு

நொடியில் பறிக்கப்படப் போகிறது என்றவுடன் - சங்கர் எழுப்பிய ஒலி, அந்த மண்டபத்தையே பிளந்து சுக்கல் சுக்க லாக நெடுந்தொலைவு வீசி எறிந்து விட்டது போல் இருந்தது! ''அருக்காணி!'' என்று அவன் எக்காளக் குரல் கிளப்பிய அதே வேகத்தில் தன்னைத் தூணோடு பிணைத்திருந்த சங்கிலி யையும் தூள் தூளாக அறுத்தெறிந்து விட்டு அந்த முரட்டு மனிதன் மீது உருண்டு வரும் பாறையைப் போல் விழுந்தான். துள்ளிவரும் வேலாக-ஆவேசத்தை அள்ளி வரும் வாளாக - சங்கர் நடத்திய அந்தப் போரில் எதிரிகள் யாருமே மிஞ்ச வில்லை. அடுக்கடுக்காக அந்த மண்டபத்தில் பிணங்கள் விழுந் தன. சங்கரைச் சுற்றிச் சூழ்ந்த பகை வீரர்கள் பந்தாடப்பட் டனர். அவனுக்குக் கையிலே வேலோ அல்லது வாளோ தேவைப்படவில்லை. அவனைப் பிணைத்திருந்த அந்த இரும் புச் சங்கிலிகளின் துண்டங்களைக் கொண்டே எதிரிகளைத் தலைகள் வேறு முண்டங்கள் வேறு என ஆக்கிக் கொண்டிருந் தான். முதலை முரடன் சங்கரை எப்படியும் வீழ்த்திவிடத் தனது வித்தைகள் அத்தனையும் காட்டிப் பார்த்தான். இரு வரும் கட்டிப் புரண்டனர். அந்த வேளையில் அருக்காணியும் அவளது தோழிகளும் மிச்சமிருந்த மண்டபத்து வீரர்களைச் சாவூருக்கு அனுப்பிக் கொண்டிருந்தனர். இறுதியாகச் சங்கர், அவனோடு போரிட்ட மாமிச மலையை ஒரேயடியாகச் சாய்த்து அதன் இறுதி மூச்சை அந்தக் கானகத்துக் காற்றுடன் கலக்கவிட்டான்.

அருக்காணி, ''சின்னண்ணா'' என ஓடிப்போய் அவனைத் தழுவிக் கொண்டு - பெரியண்ணா வெள்ளாங்குளத்துக்குப் போயிருக்கிற விபரத்தைச் சொன்னாள். அதைக் கேட்டு சங்கர் திகைப்புற்ற அதே சமயம் அவனது குதிரை அவனை நோக்கி வருவது கண்டான். நெருப்பை மிதித்தவன் போல் அந்தக் குதி ரையிடம் ஓடினான். அது, தனது தலையால் அவனது உட லைத் தடவியது. பின்னர் நிற்க முடியாமல் தரையில் படுத்து விட்டது.

''அண்ணா! இதுதான் பெரிய காண்டி அம்மன் கோயிலுக்கு வந்து எங்களை அழைத்து வந்தது'' என்று விழிகளில் நீரைத் தேக்கியவாறு அருக்காணி சொன்னாள். சங்கர் குதிரையின் முகத்தைத் தன் முகத்தோடு வைத்துக்கொண்டான். குதிரையின் கண்களில் பெருகிய நீர் அவன் முகத்தை நனைத்தது. குதிரையின் உடல் வேகமாக நடுங்கிற்று. அனைவரும் துணுக் குற்றனர். அத்துடன் அந்த நன்றியுள்ள ஜீவனின் உயிர் ஒடுங் கிப் போயிற்று. சங்கர் முகத்தில் சோகத்தின் ஆழம் எவ்வளவு என்பதை உணர்த்துகிற ஒரு அமைதி! தன்னைப் பிரிந்துவிட்ட

அந்தப் பாசப் பிராணியைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந் திருந்தான்! பிறகு மெல்ல எழுந்தான். குதிரையின் முன்னால் குனிந்து நின்று தொழுதான். அவனைப் போலவே அருக் காணியும் அவளது தோழிகளும் கடமையாற்றிய அந்த ஜீவ னைக் கடவுளாகக் கருதி வணங்கி நின்றனர்.

பெரும்படையொன்று அந்த மண்டபத்தை நோக்கி வரும் பேரொலி எழுந்தது.

சங்கரும், அருக்காணியும் அவளது தோழிகளும் வாட்களை ஓங்கியவாறு ஒலி வரும் திக்கை நோக்கினர். ஒரு படையை எதிர்க்குமளவுக்கு சிலராக இருக்கிற நம்மால் முடியுமா என் பது போல அருக்காணி, அண்ணனைப் பார்த்தாள்.

''மரணம் மாவீரர்களுக்குத் தரப்படும் மலர்ச்செண்டு, போர்க் களத்தில்! எனவே அஞ்சத் தேவையில்லை!'' என்று ரைத்து சங்கர் மட்டும் முன்னேறிச் சென்றான்.

புதர்க்காடுகளைத் தாண்டி அப்படை வந்தபோது அதன் முகப்பில் குதிரையில் அமர்ந்து வையம்பெருமான் வருவதை அவர்கள் பார்த்து வியப்புற்றனர்.

சங்கரைக் கண்டவுடன், சற்று தொலைவிலேயே குதிரையை விட்டிறங்கி வையம்பெருமான் ஓடோடி வந்து அவனைக் கட் டித் தழுவிக் கொண்டான்.

அங்கே ஒரு சிறு போராட்டம் நடைபெற்று சங்கர் மீண் டிருக்கிறான் என்பதை அவனால் புரிந்துகொள்ள முடிந்தது. சங்கர், வையம்பெருமானையும் அருக்காணித் தங்கத்தையும் பார்த்துப் பேசினான்.

''வையம்பெருமான்! நீ தக்க தருணத்தில்தான் வந்திருக்கி றாய்! அதுவும் பெரும்படையுடன் வந்திருப்பது மிகவும் நன்று! நாமிருவரும் இப்போதே தலையூர் நோக்கிச் செல்ல வேண்டும். மாயவர், வீரமலை இருவரும் என்ன ஆனார்கள் என்ற உண்மை தெரிந்தாக வேண்டும்! ஏதோ பெரிய சதி உருவாகி யிருக்கிறது! இனி தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் தலையூ ரானுக்குத்தான் ஆதாயமாக முடிந்துவிடும்!'' எனக் கூறிவிட்டு, அருக்காணியிடம், ''தங்கம், நீ உடனே வளநாட்டு அரண் மனைக்குத் திரும்பிச் செல்! அங்கே உன் அண்ணியார் இரு வருக்கும் நீதான் பாதுகாப்பு! வெள்ளாங்குளத்திலிருந்து

அண்ணா பொன்னர் வந்தவுடன் நானும் வையம்பெருமானும் தலையூர் மீது படையெடுத்துச் செல்வதையும், இது தவிர்க்க முடியாதது என்பதையும் விளக்கிடு!'' என்றான்.

அருக்காணித் தங்கம் அவனை நோக்கி, ''சின்னண்ணா! முதலில் வெள்ளாங்குளம் போய் பெரியண்ணாவைப் பார்க்க லாமே!'' என்று கெஞ்சும் குரலில் கேட்டாள். அதற்குள் வையம்பெருமான் குறுக்கிட்டு,

''வெள்ளாங்குளத்துக்குத்தான் இதேபோல் ஒரு படையுடன் என் தந்தை சென்றிருக்கிறாரே; அதனால் நாம் போகத் தேவையில்லை! எனக்குத் தெரிந்தவரையில் இப்போது நாம் தலையூர் மீது படை கொண்டு செல்வதே முக்கியம்!'' என்றான்.

''அதுவே சரி! அருக்காணி! நீயும் உன் தோழிகளும் வள நாடு திரும்புங்கள் - நாங்கள் வெற்றியுடன் திரும்புகிறோம்!'' என்றான் அனல் வீசும் விழிகளுடன் சங்கர்!

மண்டபத்தில் நிகழ்த்திய போரில் எதிர்த்தரப்பு வீரன் ஒரு வனது வாள் முனை பட்டு அவளது விரலில் வழிந்து கொண் டிருந்த ரத்தத்தை அருக்காணி அப்போதுதான் பார்த்தாள். அந்த விரலையே சங்கரின் நெற்றியில் அழுத்தி அவனுக்கு ரத்தத் திலகமிட்டு வழியனுப்பினாள்.

அருக்காணியும் அவளது தோழிகளும் வளநாட்டுக்கு வரும் வழியில் வந்து கொண்டிருக்கும்போதே - சின்னமலைக் கொழுந்தும் அவர் வழிநடத்திச் சென்ற படைகளும் வெள் ளாங்குளம் ஏரியை நெருங்கி விட்டன.

ஆனால் ஏரிக்கரையில் சில நூறு வீரர்களுடனும், வளநாட்டுப் பொற்கொல்லர்களுடனும் நின்றுகொண்டிருந்த வளநாட்டுப் துணைத்தளபதியொருவன், சின்னமலைக்கொழுந்து கவுண் டருக்கு முன்னால் வந்து நின்று, அதற்குமேல் போக வேண் டாம் என்பது போல மிக்க மரியாதையுடன் சைகை காட்டி னான்.

''ஏன் எங்களைத் தடுக்கிறாய்? பொன்னர் எங்கே? இதெல் லாம் என்ன கூத்து?'' என்று சற்று ஆத்திரத்தோடு வினவி னார் சின்னமலைக்கொழுந்து!

''மன்னித்துக் கொள்ளுங்கள்! அவரும் வேடன் வேலப்பனும் வெள்ளாங்குளத்தில்தான் இருக்கிறார்கள். அவர், தனது சத்தியத்தை நிலைநாட்ட வெள்ளாங்குள ஏரியின் உட்குமுழியில் மூழ்கி வெளிக்குமுழியில் எழப் போகிறார். அதனால் அவர் உட்குமுழிப்பக்கம் இருக்கிறார். அந்த வேடனோ அவர் வெளிக்குமுழியில் கரையேறுகிறாரா என்பதைப் பார்ப்பதற்காக - வெளிக்குமுழியருகே நிற்கிறான். அதனால் யாரும் அருகே வரக்கூடாது என்று வேடன் விதித்த நிபந்தனையையும் அவர் ஏற்றுக்கொண்டு யாரையும் உள்ளே வரவிட வேண்டாமென எனக்கு ஆணை பிறப்பித்துள்ளார்'' என்று துணைத் தளபதி விபரம் கூறவே, சின்னமலைக்கொழுந்துக் கவுண்டரும் அதைக் கேட்டு ஓரளவு மனநிறைவு கொண்டவராகத் தன்னுடன் வந்த வளநாட்டுப் படைகளுடன் வெள்ளாங்குளம் ஏரிக்கரைக்கருகே நின்றுகொண்டு என்ன நடக்கிறது என உன்னிப்பாகக் கவனிக்கலானார்.

ஏரியின் எதிர்முனையில் வெளிக்குமுழியின் பக்கம் வேடன் அமைதியாக நின்றுகொண்டு, பொன்னர் என்ன செய்கிறான் என்பதையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

பொன்னர், தனது வாளை மட்டும் இடையில் கட்டிக் கொண்டு கைகளைக் கூப்பி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து, ''தாயே! பெரியகாண்டி! என் வாய்மைக்கு நீயே சாட்சி!'' எனக் கூறியவாறு அந்தப் பெரிய ஏரியின் உட்குமுழிக்குள் குதித்தான்.

உட்குமுழியிலிருக்கும் கரையில் நின்ற சின்னமலைக்கொழுந்தும் மற்றும் படைவீரர்களும், ஊர்மக்களும், பொற்கொல்லர்களும் ஏரியையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஏரி நீருக்கடியில் பொன்னர் நீந்திக்கொண்டு அடுத்த கரையில் உள்ள வெளிக்குமுழியை நோக்கிப் போகிறான் என்பது அந்த நீர்ப்பரப்பில் ஏற்பட்ட அலைகளின் சுழல்களைக் கொண்டு தெரிந்தது.

வெளிக்குமுழியின் பக்கம் எதிர்க்கரையில் நின்றுகொண்டிருந்த வேடன் வடிவத்து செம்பகுலன், பொன்னர் வெளிக்குமுழியில் தலை தூக்கும்போது அவன் தலையில் போட்டு அங்கேயே அவன் உயிரை முடித்துவிட ஒரு பாராங்கல்லைத் தயார் செய்து அதைக் கையில் தூக்கிட நேரம் பார்த்துக் கொண்டிருந்தான்.

பொன்னர் ஏரித் தண்ணீருக்கடியிலேயே நீந்திச்சென்று - இறுதியாக வெளிக்குமுழிக்கு வந்து விட்டான். அந்தக் குமுழி வழியாக அவன் வெளியே வருவதற்கும் - மின்னல் வேகத்தில் செம்பகுலன் அந்தப் பாராங்கல்லைத் தன் கையில் தூக்குவதற் கும் சரியாக இருந்தது.

# தலை தப்பியது ஆனால்...?

## 53

**வேடன்** வடிவில் செம்பகுலன் பாராங்கல்லைப் பொன்னர் தலையில் போடப் போவதை ஏரியின் எதிர்க்கரையில் நின்று பார்த்த சின்னமலைக் கொழுந்துக் கவுண்டரும் படைவீரரும் மற்றவர்களும் தங்களையறியாமல் ''அய்யோ'' எனக் கூச்ச லிட்டு விட்டனர். தனது தலை நோக்கி வந்துவிட்ட பாராங்கல் லைக் கண்டுவிட்ட பொன்னர், தலையைச் சற்று வளைத்து சாய்த்துக் கொள்வதற்குள் அவனது வலதுகரமானது ஒரு அனிச்சச் செயல் போல இயங்கி வாளை ஓங்கி அந்தக் கல் லைத் தடுத்து வெட்டிய வேகத்தில் அந்தக்கல், துண்டு துண்டா கச் சிதறிக் கீழே விழுந்தது. கல்லில் மோதிய வேகத்தில் வாளும் வளைந்து போயிற்று. வளைந்த வாளைப் பொன்னர் தரையில் வீசியெறிந்துவிட்டு, ''அடேய்! யார் நீ? உண்மையைச் சொல்!'' என்று கத்திக்கொண்டே செம்பகுலனின் கையைப் பிடித்து முறுக்கினான். உடனே செம்பகுலன் ''அரசே! என்னை மன் னித்துவிடுங்கள்! நான் தங்களைக் கொல்வதற்காக ஏவி விடப் பட்டவன். மூச்சு விட்டுக்கொள்ள அவகாசம் கொடுங்கள். எல்லா உண்மைகளையும் சொல்லி விடுகிறேன்'' என்று மன் றாடியவாறு மண்டியிட்டுப் பின்னர் காலிலேயே விழுந்து கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

''என்ன உண்மைகளைச் சொல்லப் போகிறாய்? சொல்!'' என்று பொன்னர் அதட்டினாலுங்கூட இப்போது அமைதி யாகிவிட்டிருந்தான். எதிர்க்கரையிலிருந்த சின்னமலைக்கொழுந் தும் படை வீரர்களும் பொற்கொல்லர்களும் பொன்னர் இருந்த இடம் நோக்கி விரைந்து வந்துகொண்டிருந்தனர்.

''அரசே! நான் சொல்வதைத் தங்களால் நம்ப முடியாது! ஆனாலும் நடந்திருக்கிறது!'' என்றான் செம்பகுலன்.

''இன்னும் என்னை எப்படி ஏமாற்ற முனைகிறாய் என்று பார்க்கிறேன்! சீக்கிரம் சொல்! என்ன நடந்தது? யார் உன்னைத் தூண்டி விட்டு என்னைக் கொல்ல அனுப்பியது?''

''யார் தூண்டிவிடுவார்கள்? இந்த ராஜ்யத்தை அபகரிக்க வேண்டும் தானொருவனே ஏகச் சக்ராதிபதியாக வேண்டு மென்று யார் துடிக்கிறாரோ? - அவர்தான் என்னை இந்தக் காரியத்துக்கு அனுப்பினார்!''

''இன்னும் ஏன் அந்த ரகசியத்தை இருட்டில் போட்டுப் பூட்டி வைக்கிறாய்? திறந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வா!''

''சொல்லுகிறேன் மன்னா! ஆனால் எப்படிச் சொல்வ தென்று புரியவில்லை - இதோ பாருங்கள் என் திரேகமெல் லாம் நடுங்குகிறது!''

''இப்போது சொல்லப் போகிறாயா? இல்லையா?''

''சொல்லுகிறேன்! சொல்லுகிறேன்!'' என்று நடுங்கிக் கொண்டே கூறிய செம்பகுலன் பொன்னரால் கீழே வீசப் பட்ட வளைந்து போன வாளைக் கையிலெடுத்து வைத்துக் கொண்டு ''அரசே! அந்த ரகசியத்தைக் கூறிய பிறகு நான் ஒரு நொடிப் பொழுதும் உயிரோடு இருக்க முடியாது! அப்படி இருந்தால் என்னைச் செங்கல் சூளையிலே போட்டு தங்களின் தம்பி சங்கர் வேகவைத்துவிடுவார்!'' என்று கதறிக் கதறியழு தான்.

''என் தம்பி எதற்காக உன்னைச் சூளையில் வேகவைக்க வேண்டும்?'' என்று பொன்னர் கேட்கவே, செம்பகுலன், வளைந்த வாளைக் கையில் பிடித்தபடியே - ''அரசே! ஏனடா அந்த ரகசியத்தை வெளியிட்டாய் என்று என்னைச் சங்கர் உடனே தண்டித்தே தீருவார்!'' என்று உரக்கக் கூவினான்.

''அவன் தண்டிக்கிறானோ இல்லையோ, இப்போது நான் உன்னைத் தண்டித்து விடுவேன்! உண்மையை உடனே சொல்! என்ன ரகசியம் அது? யார் உன்னைத் தூண்டியது?''

''அண்ணன் பொன்னருக்கும் தனக்கும் வளநாடு ராஜ்யம் ஆளுக்குப் பாதி பாதியாக இருக்கிறது! அண்ணனைத் தீர்த்துக் கட்டிவிட்டால் ராஜ்யம் முழுதும் தனக்கே வரும் - என்று திட்டமிட்டுத் தங்கள் தம்பி சங்கர் என் மூலம் இந்தச் சதியை வகுத்தார்!''

செம்பகுலன் சங்கர் பெயரைச் சொன்னவுடன் ''ஆ! என் தம்பியா இப்படி?'' என்று பொன்னர் அதிர்ச்சி அடைய வில்லை. தம்பியின் இதயத்தில் தனக்கெதிரான துரோகச் சிந்தனையைத் திணிப்பதற்குக் கடவுளால் கூட முடியாது

என்பதில் அழுத்தமான நம்பிக்கையுடைய அண்ணன் பொன்னருக்கு ஏற்பட்ட துடிப்பெல்லாம் ''அடப்பாவி! என் தம்பியையா சொன்னாய்?'' என்றெழுந்த உணர்ச்சி பூர்வமான கேள்வியினால் ஏற்பட்ட விளைவேயாகும். அந்த உணர்ச்சியில் ''ஆ!'' என உறுமிக்கொண்டு அவன், செம்பகுலனையே உற்று நோக்கினான். அவன் ஸ்தம்பித்து நிற்கும் அந்தக்கணம் தான் சரியான தருணம் எனக் கணக்கிட்ட செம்பகுலன், தனது கையிலிருந்த வளைந்த வாளை பொன்னரின் நெஞ்சில் குத்திடப் பலங்கொண்டமட்டும் ஓங்கி விட்டான். அதைச் சற்றும் எதிர்பாராத பொன்னர், தனது கையை மடக்கி அந்த வாளைத் தடுப்பதற்குள் ''ஆ! அம்மா!'' என்று பிளிறிக்கொண்டு, அப்படியே மல்லாந்து சாய்ந்தான் செம்பகுலன்!

பூமியில் சாய்ந்துவிட்ட செம்பகுலனின் மார்பில் ஒரு அம்பு குத்தி ரத்தம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. செம்பகுலன் அந்த அம்பைக் கைகளால் பிடித்துக் கொண்டு ரத்த வெள்ளத்தில் புரண்டு நெளிந்தான்.

யார் விட்ட அம்பு? எங்கிருந்து வந்த அம்பு? பொன்னரை நோக்கி வந்துகொண்டிருந்த சின்னமலைக்கொழுந்து எய்திட்ட அம்பாக இருக்குமா? அல்லது வளநாட்டுத் துணைத் தளபதியின் வில்லிலிருந்து கிளம்பிய அம்பாக இருக்குமா?

யார் செய்த வேலை இது? என்னால் இவனை வீழ்த்த முடியாதென எண்ணி - என் ஆற்றலைக் குறைத்து எடை போட்டது யார்? என்று பொன்னர் வினா எழுப்பி விழிகளைத் தீப்பிழம்புகளாக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து, சின்னமலைக்கொழுந்து உட்பட அனைவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு எதுவும் புரியாமல் விழித்தனர்.

''நான் தான் இந்த நாசகாரனை வீழ்த்தினேன்'' என்று ஒரு பாறை மறைவிலிருந்து ஒரு குரல் கேட்டது! குரல் வந்த திக்கை அனைவரும் நோக்கினர்! பெண்ணின் குரல்!

பக்கத்திலேயே அந்தப் பாறையிருந்ததால் பொன்னர் அந்த இடத்தை நெருங்கினான் வேகமாக! ''யாரது? யார்? யார்?'' என்று பொன்னரின் கேள்வி, வேகமாக எழவே - மீண்டும் ''நானேதான்!'' என்று அந்தப் பெண் குரல் ஒலித்தது. வயதான ஒருத்தியின் குரலாக அது இருந்ததால் பொன்னர், மிக்க ஆவலுடன் அவள் பாறை மறைவிலிருந்து வெளியே வருவதைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான்.

இலவங்காய் மரத்திலேயே முற்றி வெடித்துச் சிலிர்த்துக் கொண்டு நிற்கும் வெண்பஞ்சுப் பத்தை போல தலை முழுதும் நரைத்துப்போன கிழவியொருத்தி - நரம்புகள் மட்டுமே கொடிகளாகி எலும்புகளென்னும் கொழுகொம்புகளில் பின்னிப் படர்ந்திருப்பது போன்ற உருவத்துக்குச் சொந்தக்காரி - அந்த முதியோளின் ஒரு கையில் வில் - மற்றொரு கையில் இரண்டொரு அம்புகள் - அவள், பொன்னருக்கு முன்னே வந்து நின்றாள்.

''யாரம்மா தாங்கள்?'' என்று அந்தக் கிழவியை மிக்க மரியாதையுடன் கேட்டான் பொன்னர். கிழவியின் கண்களிலோ கனலும் புனலும்! ஆம், தீயும் நீரும்-ஒன்றையொன்று அணைக்காமல் - ஒன்றையொன்று தீய்க்காமல் - இரண்டும் சமநிலையில்!

கிழவியைக் கண்ட மாத்திரத்தில் செம்பகுலன் தனது நெஞ்சில் கிழித்த அம்பினால் ஏற்பட்ட மரணவேதனையைவிட அதிக வேதனையடைந்து, ''அம்மா! நீங்களா? அய்யோ நீங்களா என்னைக் கொன்றுவிட்டீர்கள்?'' என்றலறி அழுதான்.

''ஆமாம்! நானேதானடா! குன்றுடையார் வீட்டுக்குக் கோள் நினைக்க வேண்டாம் மகனே! என்று தடுத்திட்ட உன் தாய் தானடா! நாட்டுக்குப் பால் வார்த்த வீட்டுக்குப் பாதகம் நினைக்க வேண்டாம் என்று உன்னைத் தடுத்த உன் தாய் தானடா! பிள்ளையென்று என் வயிற்றில் பெரும்பாவி ஏன் பிறந்தாய்? என்று கேட்டேனே, அந்தத் தாய்தான்! மைந்தன் என்று என் வயிற்றில் மாபாவி ஏன் பிறந்தாய்? என்று கேட்டேனே, அந்தத் தாய்தான்! நீ போன தடம் மீளாமல் போவாய் மகனேயென்று சாபமிட்டேனே, அந்தத் தாய்தான்! உன்னை அழித்த தாய்தான்!''

கிழவியின் வீராவேசத்தையும், அவள் வாயிலிருந்து உதிர்ந்த வார்த்தைகளின் புயல் வீச்சையும் கண்ட அனைவரும் அப்படியே அசைவற்று நின்றனர். செம்பகுலன் உடலோ நிரந்தரமாக அசைவற்றுப் போயிற்று!

அவன் வாழ்வு முடிந்து விட்டது கண்ட அந்தக் கிழவி, ''அய்யோ மகனே!'' என புலம்பிக்கொண்டு அவன் உடல் மீது விழுந்து புரண்டாள். மகனின் ரத்தம் அந்த மாதாவின் முகம், மேனியெங்கும் ஒட்டிக்கொண்டு, அவளை ஒரு பயங்கர உருவமாகக் காட்டியது. பொன்னர், அந்தக் கிழவியின் தோளைத் தொட்டு,

''அம்மா! ஒன்றுமே புரியவில்லையே, என்னம்மா இது? மகனேயென அழுகிறீர்கள் - ஆனால் அந்த மகனை நீங்களே மரணத்தின் தொட்டிலில் போட்டுத் தாலாட்டுகிறீர்கள் - என்ன இது விபரீதமான விந்தை?'' என்று கேட்கவே - அந்தக் கிழவி, செம்பகுலனின் சவத்தை விட்டெழுந்து பொன்னரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழத் தொடங்கி விட்டாள்.

சின்னமலைக்கொழுந்தும் மற்றவர்களும் அந்தக் கிழவியின் மூலம் ஏதாவது சதித்திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறதோ எனச் சந்தேகப்பட்டபடி மிகுந்த எச்சரிக்கையுடன் இருந்தனர்.

''நான் இவன் தாய்தான்! இவன் வேடனுமல்ல வேலப்பனுமல்ல! என் மகன் செம்பகுலன் - தலையூர்க்காளி கோயில் பூசாரியும் இவனே, அரண்மனைப் பொற்கொல்லனும் இவனே! நாங்கள் வேட்டுவர்களாயினும் பரம்பரை பரம்பரையாகக் குன்றுடையார் குடும்பத்துக்கு விசுவாசமானவர்கள். என் கணவர் - இவனுடைய தந்தை, குன்றுடையாரிடம் அளவற்ற அன்பு கொண்டவர். ஆனால் இவனோ செல்லாத்தாக் கவுண்டருக்கும் மாந்தியப்பனுக்கும் கையாளாகிப் பொன்னுக்கும் பொருளுக்கும் அடிமைப்பட்டு உங்கள் குடும்பத்துக்குப் பகையாளியாகவே மாறிவிட்டான். எத்தனையோ முறை தடுத்தேன். இவன் கேட்கவில்லை. குழந்தைகளாக இருக்கும்போதே உங்களிருவரையும் கொன்றுவிட வேண்டுமென்றும் இல்லாவிட்டால் தலையூர் மன்னருக்கு ஆபத்து என்றும் என் மகனை விட்டுத்தான் காளிகா தேவி அருள் வாக்கு சொல்லச் செய்து செல்லாத்தாக் கவுண்டர் சூழ்ச்சி செய்தார். குன்றுடையாரின் தந்தை கோளாத்தாக் கவுண்டர் கருணையினால் கிடைத்த பத்துக் காணி நிலத்திலேயிருந்து வந்துகொண்டிருக்கிற தானியத்தைச் சாப்பிட்டுத்தான் நமது குடும்பத்தினர் உடம்பும், குறிப்பாக உன் உடம்பும் வளர்ந்ததடா மகனே, அதனால் அந்தக் குடும்பத்துக்குத் தீங்கு நினைக்காதேயென்று குறுக்கே நின்றேன்! தான் வாழவும் தன் குடும்பம் வாழவும், தன் வயிற்றுக்கு உணவு கிட்டவும் யார் உதவி செய்தார்களோ, அவர்களுக்குக் கைமாறாக நன்மை செய்யாவிட்டாலும் ஏதாவது தீமை செய்து கொண்டேயிருக்க வேண்டுமென்று கருதுகிற நன்றி கெட்ட பிறவிகளில் ஒன்றாகவே செம்பகுலன் ஆகிவிட்டான். என் கருவில்தான் உதித்தானா? படமெடுத்துத் தீண்ட வரும் பாம்பைக்கூட பதிலுக்கு அடிக்க வேண்டுமென நினைக்காத என் கணவரது ரத்தம் தானா இந்தப் பாவியின் உடலில் ஓடுகிற ரத்தம்? இப்படிக் கூட ஒரு அசிங்கமான சந்தேகம் எனக்கு ஏற்பட்டு விட்டது அரசே! எங்கள் தலையூர்க்காளி மன்னரின் நல்லெண்ணத்தில்

*எப்படியெல்லாம் நஞ்சு கலக்கவேண்டுமோ - அதற்குத்தக்க விஷத்தைத் தயாரிப்பவர்கள் செல்லாத்தாக்கவுண்டரும் மாந்தியப்பனும் என்றால், அந்த விஷத்தைப் பாலில் கலந்து தருவதற்குப் பயன்படுகிற பாவிதான் என் மகன் செம்பகுலன்! இவனைப் பயன்படுத்தித்தான் மாயவரைக் காட்டுப் பன்றி களுடன் மோதவிட்டு கொலை செய்தார்கள்!''*

*இதைச்சொல்லி அந்தக் கிழவி முடிப்பதற்குள், ''என்ன? மாயவரைக் கொன்றுவிட்டார்களா?'' என வானை நோக்கி நிமிர்ந்தான் பொன்னர்!*

*''மாயவரைக் கொன்றது மட்டுமல்ல, வளநாட்டுத் தளபதி வீரமலையையும் தலையூர்ச் சிறையில் அடைத்து வைத்திருக்கி றார்கள். இணைபிரியாமல் இருக்கிற அண்ணன் தம்பிகளாகிய உங்களிருவரையும் பிரித்துவிட்டால் வளநாட்டை அபகரித்து உங்களை ஜெயிப்பது சுலபம் என்று திட்டமிட்டுத்தான் செம்ப குலனை வேடன் வேடத்தில் அனுப்பினார்கள். போகாதே மகனே என்று இவன் காலில் கூட விழுந்து கெஞ்சினேன். பொன்னாசை இவன் கண்ணை மறைத்ததால் என்னையே அடித்து வீழ்த்திவிட்டு இந்தச் சதி வேலைக்கு உடந்தையாகப் புறப்பட்டு விட்டான். சூழ்ச்சிக்கு மேல் சூழ்ச்சி - கொடு மைக்கு மேல் கொடுமை - என்மகனைத் திருத்தவே முடியாது என்று தெரிந்தவுடன் வேறு வழியில்லாமல் அவனைப் பின் தொடர்ந்தேன். கொங்கு வேளிர் குலத்தின் விளக்குகளையும் அணைத்துவிடப் போகிறானேயென்ற ஆத்திரமும் பதைப்பும் என்னை ஆட்டிப் படைத்தன. - கோடிக்கணக்கான குழந்தை களைப் பெற்று வளர்த்து வாழவைக்கும்பூமாதேவியே சில நேரங்களில் வெடித்துக் குலுங்கி நல்ல பிள்ளைகள் கெட்ட பிள்ளைகள் என்று பாராமல் அழித்துவிடும்போது, இந்தத் தாய் ஒரு கெட்ட பிள்ளையை அழித்தால் என்னவென்று துணிந்துவிட்டேன். இன்னொரு அதிர்ச்சியான செய்தியும் சொல்லப் போகிறேன். தங்களின் தம்பி சங்கரையும் தந்திர மாக மடக்கி வீரப்பூர் காட்டில் உள்ள தலையூரான் ரகசிய மாளிகையில் சிறை வைத்து விட்டார்கள்.''*

*தம்பி சங்கர் சிக்கிக்கொண்டிருக்கிறான் சிறைப்பட்டான்- என்பது கேட்டதும் பொன்னருக்கு ரத்த நாளங்கள் சூடேறிக் கொதித்தன.*

*''சங்கர்!''என்ற ஒலி அவனது அடிவயிற்றின் ஆழத்திலிருந்தா - அல்லது இருதயத்தை இருகூறாகக் கிழித்துக்கொண்டா - எப் படி வெளிக்கிளம்பி அந்த வெள்ளாங்குளம் ஏரிக்கரையை*

நடுங்க வைத்தது மட்டுமல்ல, ஏரியில் கரைபுரண்ட தண்ணீரையும் சூறாவளி வீசும்போது கொந்தளிக்கும் கடல்நீரைப் போலாக்கியது!

''புறப்படட்டும் நமது படை! போர் முரசம் வள நாடு முழுமையும் கேட்கட்டும்! தலையூர் நாட்டைத் தரைமட்டமாக்கி விட்டே இனி திரும்புவது எனச் சபதமேற்றுக் கிளம்பிடுக!''

பொன்னரின் வீர உரைக்கிடையே சின்னமலைக்கொழுந்து மெல்லக் குறுக்கிட்டு.

''சங்கரை மீட்டு வரப் பெரும் படையுடன் வையம்பெருமான் சென்றிருக்கிறான். அதற்குமுன்பே அருக்காணித் தங்கமும் சங்கரைத் தேடிப் போயிருக்கிறாள்'' என்றார்.

அவரது பேச்சுக்குப் பொன்னர் காது கொடுத்தது போல் தெரியவில்லை.

மாயவரைக் கொன்று விட்டனர்! வீரமலையைச் சிறையிட்டு விட்டனர். சங்கரையும் சதியில் வீழ்த்திவிட்டனர்! என்னையும் சாய்க்கப் பார்த்தனர்! இனிப் பொறுமையாக சிந்திப்பதற்கு எதுவுமில்லை. எதை இழப்பது பற்றியும் சிறிது சிந்திக்கலாம் - ஆனால் மானத்தை இழக்கும் நிலை ஏற்படும்போது அதைக் காத்திட எதையும் இழந்திட முற்பட வேண்டுமேயல்லாமல் அப்போது சிந்தனைக்கே இடமில்லை!''

பொன்னர், அந்த அணிவகுப்பில் நின்ற ஒரு குதிரையின் மீது தாவி ஏறி அமர்ந்தான்! போர் முரசு அதிர்ந்தது!

ஏரிக்கரையில் புழுதி மண்டிலத்தை உருவாக்கிக்கொண்டு கிளம்பிய அந்தப் படைக்கு முன்னே - மிக வேகமாகக் குதிரையொன்றில் வளநாட்டு வீரன் ஒருவன் வந்துகொண்டிருந்தான். படை முகப்பில் பொன்னர் இருப்பதைப் பார்த்ததும் அந்த வீரன், குதிரையிலிருந்து கீழே குதித்து பொன்னரின் குதிரையருகே ஓடி வந்தான்.

''என்ன?'' என்று புலி போல உறுமினான் பொன்னர்!

''அரசே! வளநாட்டு எல்லைக்குள் தலையூர்க் காளியின் பெரும் படைகள் மூன்று கடல்களும் பொங்கி வருவது போல வந்து விட்டன!''

பொன்னரின் மீசைகள் கையில் தூக்கிப் பிடித்த வாட்கள் போல் நிமிர்ந்து கொண்டன!

''என்னைப் பின் தொடருங்கள்!'' எனக் கூவியபடி குதிரையைத் தட்டி விட்டான்.

தலையூர் நோக்கி சின்ன அண்ணன் சங்கரையும் படை வீரர்களையும் அனுப்பிவிட்டு வளநாட்டு அரண்மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்த அருக்காணித் தங்கமும் அவளது தோழிகளும் வள நாட்டுக் கோட்டைக்குள் பெரும் போர் நடப்பதைக் கண்டார்கள். இன்னும் வெள்ளாங்குளத்திலிருந்து பொன்னர் திரும்பி வரவில்லையென்பதைத் தெரிந்து கொண்டு திகைத்தாள் அருக்காணி!

திடீரெனப் பெரும் வெளிச்சம்! தன்னைச் சுற்றி எல்லாமே தீக்காடாக இருப்பது போன்ற தோற்றம்! அவள் கண் எதிரே வள நாடு கோட்டையும் கோட்டைக்குள்ளிருந்த அரண்மனை மாளிகைகளும் எரிந்து கொண்டிருந்தன! ''அய்யோ! என் அண்ணியார்கள் என்ன ஆனார்களோ?'' என்று தவித்தாள் அருக்காணித் தங்கம்.

# நடந்தாள்! நடந்துகொண்டேயிருந்தாள்!

## 54

வளநாட்டுக் கோட்டைக்குள்ளிருந்த வீரர்களின் எண்ணிக் கையையும் தலையூர்ப் படைவீரர்களின் எண்ணிக்கையையும் ஒப்பிட்டால் அவ்வளவு நேரம் அந்தக் கோட்டைக்குள்ளிருந்து தாக்குப் பிடிக்க வளநாட்டு வீரர்களால் எப்படி முடிந்தது என்ற வியப்பே மேலிடும். கோட்டையின் எல்லாத் திசைகளிலும் உடைப்பெடுத்த பெரு வெள்ளம்போலப் பாய்ந்து நுழையும் தலையூர் வீரர்களைத் தங்கள் உயிரைக் கொடுத்து, உடல் களைத் தடைகளாக்கிச் சில நூறு பேர்களால் எத்தனை நாழிகை சமாளிக்க முடியும்! அந்த நிலைமையிலும் தலையூர் வீரர்கள் ஏராளமானவர்கள் வளநாட்டுக் கோட்டைக்குள்ளே பிணங் களாக வீழ்த்தப்பட்டனர். இருப்பினும் வெற்றி தலையூர்ப் படையின் பக்கமே இருந்தது!

இன்னும் சில நொடிகளில் கோட்டை முழுவதும் தலையூர்ப் படையின் வசமாகி, அந்த எதிரிகள் முத்தாயி பவளாயி இருக் கும் அரண்மனைக்குள் நுழையக்கூடும் என்பதை அந்தச் சகோ தரிகள் உணர்ந்துகொண்டனர். அவர்களது அரண்மனைக் காவலர்கள் எதிரிகளை உள்ளே அனுமதிக்காமல் தடுத்திடத் தங்கள் கைகால்களை இழந்தனர். சிலர் தலைகளையே இழந் தனர். அத்துணை தியாகப் போர்புரிந்தும் பயனில்லை. தலையூர்ப் படை வீரர்கள் அந்த அரண்மனையையும் சூழ்ந்து கொண்டனர். கற்கோட்டை தகர்ந்தது மட்டுமல்ல, தங்களின் கற்புக் கோட்டையும் தகர்க்கப்பட்டுவிடுமோ என்ற அச்சத்தில் நடு நடுங்கி, முத்தாயி பவளாயி இருவரும் தங்கள் அரண் மனையின் மேல் மாடத்திற்கு ஓடினர். அங்கிருந்து அவர்கள் வளநாட்டுக் கோட்டையின் முகப்பைப் பார்த்தபோதுதான் வளநாட்டுக் கொடி மரத்தை மாந்தியப்பன் தனது வாள் கொண்டு வெட்டி வீழ்த்தியதோடு அதைத் தீ வைத்துக் கொளுத் தவும் ஆணை பிறப்பித்தான். மானமறவர்களாம் பொன்னரும் சங்கரும் உயர்த்திப் பிடித்த அந்த வீர வெற்றிக் கொடி, பற்றி

எரிவது கண்டு முத்தாயியும் பவளாயியும் பதைத்தனர். என்ன செய்வதென்று தெரியாது திகைத்தனர்.

வளநாட்டுக் கோட்டைக் கொடியின்மீது படர்ந்த தீயின் ஜுவாலை - அப்படியே முழுமையாக முத்தாயியின் விழி களிலே பரவியது போல அவளது கண்கள் செவ்வானத் தோற்றம் கொண்டன. ''பவளாயி! நாம் செய்யக்கூடிய காரியம் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது! எதிரிகளின் சதியினால் என் னுடையவரும் உன்னுடையவரும் எப்படியோ ஏமாற்றப்பட்டு விட்டார்கள்! ஆனால் ஒன்று - அவர்கள் எப்படியும் திரும்பி வருவார்கள்! தங்களின் வீரத்தை நிலைநாட்டுவார்கள்! அதில் சந்தேகமே இல்லை! ஆனால் அவர்கள் வரும்போது அவர்கள் முகத்தில் விழிப்பதற்குத் தகுதியுடையவர்களாக நாம் இருப் போமா என்பதுதான் சந்தேகத்திற்குரியது! பகைவர்கள் நமது அரண்மனைக்குள் நுழைந்துவிட்டாலே - நம்மிருவரின் மான மும் பறிக்கப்பட்டுவிட்டதாகத்தான் அர்த்தம்! அதனால்... அதனால்...'' என்று - ஏதோ சொல்ல வந்த முத்தாயி, பேச நா எழாமல் திக்குமுக்காடி நின்றாள்.

''அதனால் என்ன செய்யலாம்? எதற்கும் நான் தயார் அக்காள்!'' என்று பவளாயி, தனது சகோதரியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு கதறினாள்.

தங்கையின் தலையைக் கோதிவிட்டுக்கொண்டே முத்தாயி - ''கவலைப்படாதே! இதோ நான் கண்டு பிடித்துவிட்டேன் வழி! நமது வளநாட்டுக் கோட்டையும் பகைவர்கள் கையில் சிக்கக் கூடாது - நமது மானமும் அவர்களுக்கு முன்னால் சோத னைப் பொருளாக ஆகிவிடக்கூடாது. அதற்கு ஒரே வழி, இதுதான்!'' என்று சொன்னவள் திடீரெனப் பாய்ந்து தூணில் சொருகப்பட்டிருந்த தீப்பந்தத்தை எடுத்தாள். இமைகொட்டித் திறக்கும் வேகத்தில் அங்கு தொங்கிக்கொண்டிருந்த திரைச் சீலைகளுக்குத் தீயிட்டாள். ஒன்றா? இரண்டா? அரண்மனை முழுதும் அழகுறத் தொங்கித் தென்றலில் தவழ்ந்தாடிய நூற் றுக்கணக்கான திரைச் சீலைகளில் தீயின் தாண்டவம்! அவை அனைத்துக்கும் அவளே தீயிட்டாள்! அரண்மனையின் எல் லாப் பகுதிகளிலும் பரவிய தீ கோட்டையிலும் பரவியது!

அரண்மனையைச் சூழ்ந்து கொண்டிருந்த தலையூர் வீரர் களால் அனல் தாங்க முடியவில்லை! பின்னோக்கி நகரத் தொடங்கினர். அரண்மனை மட்டுமன்றி கோட்டைக்குள்ளும் புயல் வேகத்தில் சென்ற தலையூர்ப் படை, வான்முட்ட எழுந்த

நெருப்பை எதிர் கொள்ள இயலாமல் கோட்டையை விடுத்து வெளியேறியது.

கோட்டைக்கு வெளியே சிறிது தொலைவில் தலையூர்க் காளியும், செல்லாத்தாக் கவுண்டரும் தேர்ப்படையை நிறுத்தி வைத்துக் கொண்டு இருவருமே ஒரு தேரில் அமர்ந்து வள நாட்டுக் கோட்டை எரிந்து கொண்டிருப்பதைக் கண்கொட்டா மல் பார்த்துக்கொண்டிருந்தனர். தலையூர்ப் பெரும் படை பின்தொடர குதிரையொன்றில் அமர்ந்து மாந்தியப்பன் எரி யும் கோட்டைக்குள்ளிருந்து வெளிப்பட்டு அவர்களிருவரும் அமர்ந்திருந்த தேருக்கருகே வந்து சேர்ந்தான்.

''தோல்வியைத் தாங்கிக்கொள்ள முடியாத வளநாட்டுக் கோட்டை கொத்தளங்கள் தீக்குளித்து செத்துக்கொண்டிருக் கின்றன!'' எனப் பெருஞ்சிரிப்போடு மாந்தியப்பன் மார்தட் டிக் கொண்டான்.

''நமக்குப் பயன்படாதது இப்படி அழிந்து போகட்டும் என்று ஆண்டவன் எண்ணினான் போலும். எப்போதும் ஆண்டவன் நம் பக்கம்தான் இருக்கிறான். பரவாயில்லை. எல்லாமே எரிந்து தணியட்டும். அதன்பிறது வளநாடு நமது வசமானது என்பதை அறிவிக்க இங்கே கொடி நாட்டிவிட்டுத் திரும்பு வோம்!'' என்றார் எக்காளக் குரலில் செல்லாத்தாக் கவுண்டர்!

வளநாட்டுக் கோட்டையில் சூறாவளியின் சுழற்சியோடு தீ எரியும் காட்சி - கோட்டைக்குள்ளிருக்கும் கட்டுமானங்கள் உடைந்து சிதறுவதால் ஏற்படும் பயங்கர ஒலி- தீயில் சிக்கி மீளமுடியாமல் அங்குமிங்கும் ஓடி அலறிடுவோரின் குரல் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கி ஒடுங்கிடும் பரிதாபம் - இவற்றுக்கிடையே காளி மன்னனும் செல்லாத்தாக் கவுண்ட ரும் அமர்ந்திருந்த தேரினை நோக்கி இரண்டு குதிரைகளில் மிக வேகமாகத் தலையூர் வீரர்கள் இருவர் வந்துகொண்டிருந் தனர்.

வளநாட்டுக் கோட்டையை வீழ்த்திய பெருமிதத்தில் சிங்கத் தைப் போலத் தலையை உயர்த்திக் கொண்டே காளி மன்னன் அந்த வீரர்களைப் பார்த்து, ''என்ன அவசரச் செய்தி? ஏனிந்த பரபரப்பு?' எனக் கேட்டான் மிக அலட்சியமாக.

''அரசே! சங்கர் பெரும் படையுடன் தலையூர்க் கோட்டைக் குள் நுழைந்து நமது வீரர்கள் பலரைக் கொன்றது மட்டு

மில்லாமல் வளநாட்டுத் தளபதி வீரமலையையும் சிறையிலிருந்து மீட்டுவிட்டான்.''

அந்த வீரர்கள் இந்தத் தகவலைச் சொல்லி முடிப்பதற்குள் தலையூர்க்காளி தனது ஆத்திரத்தைக் காட்டிக் கொள்ள அவர்களின் கன்னத்தில் ஓங்கி அறைந்து ''என்ன? என்ன சொன்னீர்கள்?'' என்று கத்தினான்.

வலியைப் பொருட்படுத்தாத அந்த வீரர்கள் ''ஆமாம் அரசே! உண்மையைத்தான் சொல்லுகிறோம். சங்கரும் வையம்பெருமானும் தலைமையேற்றுத் தலையூரைத் திடீரெனத் தாக்கினார்கள். அதிர்ச்சியால் நமது கோட்டைக் காவலர்கள் நிலை குலைந்து சிதறினார்கள். சங்கர் தனது காலால் ஓங்கி உதைத்து சிறைக்கதவை உடைத்து வீரமலையை விடுவித்தான். சங்கர், வீரமலை, வையம் பெருமான் மூவருமாகச் சேர்ந்து நமது வீரர்கள் பலரைக் கொன்று குவித்தார்கள். மீதமிருந்த காவல் வீரர்கள் நொண்டிகளாக, முண்டங்களாகப் பலத்த காயமுற்று வீழ்ந்து கிடக்கின்றனர். பிண அறையில் வைக்கப்பட்டிருந்த மாயவர் உடலையும் ஒரு தேரில் ஏற்றிக்கொண்டு மூவரும் வளநாடு நோக்கி வந்துகொண்டிருக்கிறார்கள். அரசே! எங்களுக்குப் பேசவே நாக்கூசுகிறது. தலையூர்க் கோட்டை முகப்பில் இப்போது பொன்னர் சங்கரின் வளநாட்டுக் கொடி பறக்கிறது!'' என்று பதறிக்கொண்டே கூறினர்.

தனது பலமிக்க கோட்டையின் முகப்பில் பகை நாட்டுக் கொடி பறக்கிறது என்ற செய்தியைத் தலையூர்க்காளியினால் சகித்துக்கொள்ள முடியவில்லை. தேரிலிருந்து கீழே குதித்தான். செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் ஒருவரையொருவர் திகைப்புடன் பார்த்துக் கொண்டனர்.

''சங்கரை நான் சங்கிலியால் பிணைத்துக் கட்டிப்போட்டுத் தப்பியோட முடியாதபடி வலுவான காவலுமல்லவா வைத்திருந்தேன். அவன் எப்படித் தலையூருக்கு வந்தான்?'' என்று மாந்தியப்பன் கேட்டான்.

''அதற்கெல்லாம் விளக்கம் தேட இப்போது நேரமில்லை. நமது படை புறப்படட்டும்! தலையூரைப் பிடித்துவிட்டதாகக் கனவு கண்டு வளநாட்டுக்குத் திரும்பி வரும் சங்கரை வழியிலேயே வளைத்துக் கொள்வோம்! அவன் தலையூர்க் கோட்டையில் கொடி ஏற்றிய குற்றத்துக்குத் தக்க தண்டனை அளிப்போம். வளநாடு இனிமேல் சாம்பல் மேடு! அடுத்த குறி - சங்கரின் தலை! புறப்படுங்கள் எல்லோரும்!''

தலையூர்க் காளியின் இந்த வீர கர்ச்சனையைத் தொடர்ந்து முரசுகள் அதிர்ந்தன! காளி மன்னன் படைக்கு முன்வரிசை யில் தலைமை வகித்துச் சென்றான். அடுத்த வரிசையில் செல் லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் சங்கரின் வாழ்வை எப்படியும் முடித்து விடுவது என்றும் - அந்தக் காரியத்தைத் தலையூர் மன்னனைக் கொண்டே நிறைவேற்றும் வாய்ப்பு கிடைத்து விட்டது என்றும் - தங்களுக்குள்ளே மகிழ்ந்தவாறு படை நடத்திச் சென்றனர்.

வளநாட்டுக் கோட்டையைச் சுற்றியிருந்த தலையூர்ப் படை, சங்கரின் படையை வழியில் சந்தித்துத் தாக்குவதற்காக மிக வேகமாகப் புறப்பட்டுச் சென்ற சற்று நேரத்திற்கெல்லாம் அங்கு வந்த அருக்காணித் தங்கம், 'அய்யோ! என் அண்ணி யார்கள் என்ன ஆனார்களோ?' எனக் கதறிக்கொண்டே கொழுந்து விட்டெரியும் நெருப்பையும் பொருட்படுத்தாமல் கோட்டைக்குள் நுழைந்தபோது அருக்காணியின் தோழி யொருத்தி உடலெங்கும் தீக்காயங்களுடன் எதிரே ஓடி வந்து, "அருக்காணீ! போகாதே! உள்ளே போகாதே!'' எனக் கூச்ச லிட்டுக்கொண்டே அருக்காணித் தங்கத்தின் காலடியில் விழுந் தாள்.

தீக்காயங்களுடன் இருந்த அவளை, அருக்காணி மெல்லத் தூக்கித் தனது மடி மீது அவள் தலையை வைத்துக்கொண்டு, ''என்னம்மா - என்ன நடந்தது? என் அண்ணியார் இருவரும் எங்கே? தப்பித்து விட்டார்களா?'' என்று கண்களில் கனலும் புனலும் பொங்கிடக் கேட்டாள்!

''முத்தாயி பவளாயி இருவரும் தங்களின் கற்பைக் காத்துக் கொள்ளவும் - பகைவர்களை அவர்களது அந்தப்புரத்து அரண் மனையில் நுழைய விடாமல் தடுக்கவும் - அவர்களே அரண் மனைக்குத் தீ வைத்து விட்டார்கள்! நமது கற்கோட்டை அழிந்து விட்டது - அவர்களது கற்புக் கோட்டை காப்பாற்றப்பட்டு விட்டது!''இதை நாக் குழறக் கூறிய அருக்காணியின் தோழி, அதற்குமேல் பேசமுடியாமல் தேம்பித் தேம்பி அழுதாள்!

''அழாதே! இப்போது என் அண்ணியார்கள் எங்கே? நீ இரு; நான் போய்ப்பார்த்து வருகிறேன்!'' என்றுரைத்தவாறு அருக்காணித்தங்கம், அந்தத் தோழியை மடியிலிருந்து மெல்லத் தரையில் படுக்க வைத்துவிட்டு அவசர அவசரமாக எழுந்தாள்!

எழுந்தவளின் கையை அந்தத் தோழி கெட்டியாகப் பிடித் துக் கொண்டு,''அருக்காணித் தங்கம்! நீ போய் எந்தப் பயனு மில்லை! போகாதே!'' என்று கூச்சலிட்டாள்.

''ஏன்? ஏன்?'' என்று பதில் கூச்சல் போட்டாள் அருக் காணித் தங்கம்!

''அந்தப்புர அரண்மனைக்குத் தீ வைத்துவிட்டு உன் அண்ணி யார்கள் இருவரும் அந்த அரண்மனைக்குள்ளேயே கண்களை மூடிக்கொண்டு தபசிகளைப் போல அமர்ந்து விட்டனர். நான் அவர்களிடம் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தேன். என்னோடு வாருங்கள், தப்பித்து ஓடி விடலாம் என்று மன்றாடினேன். ஆனால் அவர்கள் அரண்மனையை விட்டு வெளியே வந்தால் பகைவர்களின் கையில் அகப்பட்டுவிடுவோம் என்று அஞ்சி னார்கள். அதனால் என் வார்த்தைக்கு அவர்கள் செவி சாய்க் கவே இல்லை. வேறு வழியில்லை எனக்கு! வெளியில் யாரா வது நமது வளநாட்டு வீரர்கள் இருக்கிறார்களா என்று பார்ப் பதற்கு ஓடி வந்தேன். யாருமே இல்லை. எல்லோரும் பிணங்க ளாகத்தான் இருந்தார்கள். திரும்பவும் அரண்மனைக்குள் ஓட முயன்றேன். முடியவில்லை. அரண்மனை வாசல்கள் அனைத் தையும் அடைத்துக்கொண்டு தீ எரியத் தொடங்கி விட்டது! அருக்காணீ, அந்தக் கண்ராவியை நான் எப்படிச் சொல்வேன்! முத்தாயி, பவளாயி இருவரும் கும்பிட்டகைகளை எடுக்காமல் அப்படியே ஆடாமல் அசையாமல் அந்த நெருப்பில் வெந்து சாம்பலானதை இந்தப் பாழும் கண்களால் பார்த்தேனடி!'' என்று அலறிக்கொண்டே தனது முகத்தில் மாறி மாறி அறைந்து கொண்டாள் அந்தத் தோழி!

அண்ணியார் இருவரையும் இழந்துவிட்ட துயரம் - அவர்கள் முடிவுக்குக் காரணமாகிவிட்ட பகைமையைப் பழி வாங்க வேண்டுமென்ற உணர்ச்சி - ஒன்றோடொன்று போட்டியிடும் நிலையில் அருக்காணித் தங்கம், தனது தோழி தன் முகத்தில் அறைந்து கொள்வதை தடுத்திட அவளது கைகளிரண்டையும் அழுத்தமாகப் பற்றினாள். அருக்காணியின் கைகளோடு சேர்ந்து அவள் தோழி வதங்கிப்போன கீரைத் தண்டு போலக் கீழே சாய்ந்தாள்.

உள்ளே தீயோடு தீயாகக் கலந்து கரைந்துவிட்ட அண்ணி யார்கள்- அய்யோ!- அவர்கள் மணமானவர்கள்! ஆனால் வாழ்வின் மணம் இன்னதென்றே உணர்ந்தறியாதவர்கள் - அந்த மலர்கள் தணலில் கருகிவிட்ட செய்தி அறியாமல் தனது அண்ணன்மார்கள் - சபதம் நிறைவேறும் வரையில் சதிபதி களாக வாழ்வதில்லையென்று உறுதி எடுத்தவர்கள் - இனி அந்தச் சாம்பல் மேடுகளைத்தான் தழுவிட வேண்டும் - அருக் காணித் தங்கமே இப்போது நெருப்பானாள்! அவள் காலடி யிலே அவளது ஆருயிர்த் தோழிகளில் ஒருத்தியின் பிணம்!

ஏன் இப்படியெல்லாம் நடக்கிறது? இதற்கு ஒரு முடிவே கிடையாதா? எங்க குடும்பத்தைச் சீரழிப்பது என்ற கெடு நினைப்பால் இந்த நாட்டையும் தங்களின் சொந்த மக்களையும் சீரழித்திடும் சிறுமதியாளர்களுக்கு ஒரு முடிவு ஏற்பட்டால் தான் எல்லாவற்றுக்கும் நல்ல முடிவு ஏற்படும்!

கொதித்துக் குழம்பை வாரி இறைக்கும் எரிமலைகள் கூட்டம் கூட்டமாக ஒன்றோடொன்று மோதிக்கொள்வது போல அருக்காணித் தங்கத்தின் உள்ளத்திலே குமுறல்! கொந்தளிப்பு!

தோழியின் பிணத்தை உற்று நோக்கினாள்! அவளருகே குனிந்து நெற்றியில் ஒரு முத்தம் பதித்தாள்! அவள் கண்களில் இருந்து உருண்ட நீர்த்துளிகள் அந்தத் தோழியின் முகத்தில் பூவரும்புகளாக உதிர்ந்தன!

அண்ணியார் இருவரும் இருந்த அரண்மனை நோக்கி ஓடினாள்! அந்தத் திருவிளக்குகளை அணைத்துவிட்ட நெருப்பு கூட தனது வேதனையைக் காட்டிக் கொள்வதுபோலத் தணிந்து எரிந்து கொண்டிருந்தது! வெளியில் நின்றவாறே அண்ணியார்கள் இருந்த அந்த அரண்மனையின் பாழடைந்த பகுதிகளை நோக்கித் தொழுது - தரையில் விழுந்து தண்டனிட்டாள்!

பிறகு கம்பீரமாக எழுந்து நின்றாள் - இப்போது அவள் முகத்தில் சோகமில்லை - விழிகளில் நீர் இல்லை - உறை விட்டு வாளை உருவிக் கொண்டாள் - பெண்மைக்கேயுரிய மென்மை விடைபெற்றுக்கொண்டு அந்த அனிச்சமலர் முகத்தில் ஆண்மை குடியேறிக் கொண்டது!

வாளை ஓங்கியவாறு வளநாட்டுக் கோட்டையை விட்டு நடந்தாள்! அவளைத் தொடர்ந்து அவளது தோழிகளும் வாட்களைக் கைகளில் ஏந்தி நடந்தனர்!

பிரளயம் ஒன்று பெண்ணுருக் கொண்டது போல நடந்தாள்!

பூவையரும் பூகம்பமாவாரோ என அதிசயிக்கத்தக்கவாறு நடந்தாள்!

ஊழித் தீயாக மாறவும் ஒரு தென்றலால் முடியும் என்பதற்கு உதாரணமாக நடந்தாள்!

நடந்தாள் - நடந்தாள் - நடந்து கொண்டேயிருந்தாள்!

# சதிவலைக்குள் சங்கர்

கோட்டையும் அரண்களும் முற்றாக எரிந்து அடங்கிக் கொண்டிருந்தன. குலவிளக்குகளாகக் குடியேறிய முத்தாயி, பவளாயி இருவரும் முடிவிலொரு பிடி சாம்பல் எனும் வாழ்க்கை நிலையாமைத் தத்துவத்திற்கு எடுத்துக்காட்டாகி விட்டனர். சூடப்படாத மலர்கள்! சுவைக்கப்படாத கனிகள்! காதல் தேன் பருகிட - வாழ்க்கை அமுதம் அருந்திட - வசந்த காலத்துப் பறவைகளாக இல்லறவானில் மிதந்திட - எத்தனை காலம் எனினும் காத்திருப்போம் எங்கள் அத்தான்களுக்காக என்று பொறுத்திருந்த பூங்கொத்துக்களை, பாழும் காலம் அக்கினிக் கரங்களால் கசக்கியல்லவோ எறிந்து விட்டது!

கலனாகிவிட்ட கோட்டைக்காக கண்ணீர் விடவும், தனது ஆருயிர்த் துணைவியும் - தம்பியின் துணைவியும் தணல் வாய் வீழ்ந்ததற்காகத் தவித்துப் புலம்பவும் பொன்னருக்கு நேரமுமில்லை! நினைப்புமில்லை!

பழிக்குப் பழி வாங்கவேண்டும்- பகைப்புலத்தைப் பாதாள மூலியை வெட்டித் தகர்ப்பது போல் தகர்த்திட வேண்டும்- வளநாட்டுக் கோட்டையை அழித்துவிட்டு - பொன்னர் சங்கரின் வீரத்துக்கும் மானத்துக்கும் அறைகூவல் விட்டுத் திரும்பியிருக்கும் பகைவர்கள் தலையூர் போய்ச் சேருவதற்குள் அவர்களின் மரண ஓலையை மதுக்கரைக்கு இப்பாலேயே எழுதி முடிக்க வேண்டும்!

உலைக்களத்தில் சம்மட்டியடி பட்டுப் பழுக்கக் காய்ச்சிய இரும்பிலிருந்து பறக்கும் - தீப்பொறிகள் போலப் பொன்னரின் விழிகளில் கனல் பறந்தது! அவன் நாவில் ருத்ரதாண்டவமாடிய சொற்களோ ஆமைகளையும் அரிமாக்களாக்கக்கூடியதாக - புழுக்களையும் புலிகளாக்கிடக்கூடியதாக வெளிப்பட்டன!

''வாளோங்கி நிற்கும் வீரர்களே! வளநாட்டு மண்ணின் பெருமை காத்திட நமது உயிரைத் தூசாக மதிக்கும் இனிய வேளை வந்து விட்டது! என் தம்பி சங்கர், ''போர்! போர்!'' எனத் துடித்தபோதெல்லாம், ''பொறு! பொறு!'' என் அமைதிப்படுத்திய நான்தான் அழைக்கிறேன் உங்களை! குன்றுடையார் குடும்பத்தை அழித்தே தீருவது எனக் கங்கணம் கட்டிக் கொண்டு எதிரிக்கு நம்மைக் காட்டிக்கொடுத்த நம்மவர்கள் இருக்கிறார்களே, அந்தத் துரோகிகள்தான் நமது எதிரிகள் வீழ்வதற்கு முன்னால் வீழ்த்தப்பட வேண்டியவர்கள். அந்தக் கயவர்களின் சூதும், சூழ்ச்சியும், சதியும், சண்டாளச் செயலும், சுக்கல் சுக்கலாக உடைத்தெறியப்படுவதற்கு உகந்த நேரம் வந்துவிட்டதாகவே நம்புகிறேன்! முதியவர் - அறிவில் முதிர்ந்தவர்- ஆற்றலில் சிறந்தவர் - அனுபவக் களஞ்சியம் - அமைதிக் கருவூலம் - அந்த மாயவர் பிணமாக்கப்பட்டுள்ளார் மாற்றான் கோட்டையிலே! விசுவாசத்தின் மொத்த உருவம் நமது தளபதி வீரமலை தலையூர் சிறைச்சாலையில்! தம்பி சங்கரின் கதி என்னவோ தெரியவில்லை! நாம் தாமதிக்கும் ஒவ்வொரு நொடியும் எதிரிகள் நம் கையிலிருந்து தப்பித்து விடுவதற்கு வாய்ப்பு வழங்கும் நேரமாகிவிடும்! புறப்படுவோம்! அந்தப் புல்லர்களை எங்கே சந்திக்கிறோமோ அந்த இடததை போர்க்களமாக்குவோம்!''

பொன்னர் அமர்ந்திருந்த அந்த கம்பீரமான குதிரை, கால்கள் இரண்டையும் உயரத் தூக்கிப் பெருமிதமுடன் பெருங் கனைப்புக் கனைத்துக்கொண்டே பாய்ச்சலைத் தொடங்கி விட்டது! அதே வேகத்தில் பொன்னரைத் தொடர்ந்து படைகள் கரையுடைத்துக் கிளம்பிய வெள்ளமெனக் காட்சியளித்தன! போர்முரசின் ஒலி முழக்கம், எரிந்து சாம்பல் மேடாகக் கிடக்கும் வளநாட்டுக் கோட்டையே திரும்ப எழுந்து தலையூரைப் பழிவாங்கப் புறப்பட்டுவிட்டதற்குப் பின்னணி போலத் தோன்றியது!

அண்ணன் பொன்னர் இவ்வாறு தலையூர்ப் படையைத் துரத்திக் கொண்டு வரும்போது - தலையூர்க் கோட்டையில் வளநாட்டுக் கொடியைப் பறக்க விட்டு விட்டுத் தம்பி சங்கரும் வையம் பெருமானும் வீரமலையும் திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

தலையூர் நோக்கி விரைந்து கொண்டிருந்த காளி மன்னனுக்கு எதிரே சங்கரின் படை வருகிற தகவல் முதலில் தெரிவிக்கப்பட்டிருந்தாலும், அப்படை மிக அருகாமையில் வந்து கொண்டிருக்கிறது என்ற இரண்டாவது தகவலும் கிடைத்து

விட்டது! வேகமாகச் சென்று கொண்டிருந்த காளி மன்னன், திடீரெனத் தனது கையை உயர்த்தித் தன் பின்னால் வந்து கொண்டிருந்த வீரர்களையும் தளபதிகளையும் நிறுத்தினான். காளி மன்னனின் எண்ணம் என்னவென்று அறிந்து கொள்ள செல்லாத்தாக்கவுண்டரும் மாந்தியப்பனும் அவனருகே சென்று ''என்ன? என்ன? என்ன திடீர் யோசனை?'' என்று கேட்டனர்.

''ஒன்றுமில்லை! சங்கரை நேருக்கு நேர் எதிர்த்து வெற்றி காண்பதென்பது ஒருவேளை இயலாமற் போய்விட்டால் என்ன செய்வது என்று யோசிக்கிறேன்!''

காளி மன்னனே கலங்குகிறான் எனக் கண்ட மாந்தியப்பன், சிறிது கூடத் தயங்காமல் பரபரப்புடன், ''அப்படியானால் வேறு வழியாக நாம் போய்விடலாமா?'' என்று கேட்டுவிட் டான். அவனது குரலின் நடுக்கத்தைக் கண்ட தலையூர்க்காளி ஏளனப் புன்னகை புரிந்தான் என்றாலும் - மாந்தியப்பனின் கோழைத்தனத்தை வெளிப்படையாக இகழ்ந்துரைப்பது அந்தச் சமயத்திற்கு ஏற்றதல்ல எனக்கருதி பேச்சை வேறு திசைக்கு மாற்றினான்.

கோழையுள்ளம் படைத்தவர்களுக்குத்தானே சூதும் சூழ்ச்சி யும் கைவந்த கலையாக இருக்கும் என்பதைத் தலையூரான் அறியாதவனல்லன்! தர்மம், நியாயம், நேர்மை, இவற்றுக்குத் தன் இதயத்தில் முக்கிய இடம் அளிக்க வேண்டுமென்று அவன் உறுதியாக இருந்தபோதெல்லாம் அந்த உறுதியைக் குலைத்துத் தங்களின் சுயநலத்திற்காக அவனைத் தமது கைப்பாவையாக் கிக் கொண்டவர்கள் செல்லாத்தாக்கவுண்டரும் மாந்தியப்ப னும் என்பதை அவன் உணர்வதும், சூழ்நிலைகளின் காரண மாக, உணர்ந்ததை உடனடியாக மறந்து விடுவதும் - நினைத்த தைச் செயல்படுத்த முடியாமல் நிலைகுலைவதும் அவனது வாடிக்கை! அதுவே அவனது அரசியல் வாழ்க்கையுங்கூட! ஆனால் இப்போது தலைக்கு மேல் வெள்ளம் வந்து விட்டது. இனி சாண் போனால் என்ன? முழம் போனால் என்ன? இரண்டில் ஒன்று பார்த்துவிட வேண்டியதுதான் என்ற முடி வுக்கு வந்து விட்டான் தலையூர்க்காளி! எனவே, அவன் செல் லாத்தாக் கவுண்டரைப் பார்த்து,''இந்தத் தருணத்தில் சங்கரை நேரடியாக எதிர்கொள்ளாமல் அவனையும் அவன் படை வீரர்களையும் வீழ்த்தி, வெற்றி காண வழி என்ன?'' என்று கேட்டான்.

தனது திறமையிலும் போர்த்தந்திரத்திலும் தலையூர்க் காளி அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருக்கிறான் என்பதறிந்த செல்லாத்தாக் கவுண்டர், தன் மனதிற்குள்ளாகவே ஒரு மமதை நிறைந்த மகிழ்ச்சிப் பெருக்கில் திளைத்தார். அவர் சொல்லப் போகும் யுத்த முறை என்ன என்பதைத் தலையூர்க்காளி மிக மிக உன்னிப்பாக எதிர்பார்த்துக் கொண்டு அவரையே இமை கொட்டாமல் நோக்கினான்.

''காளி மன்னா! சங்கரின் புஜபல பராக்கிரமத்தைக் குறைத்து எடை போடாமல், அவனைத் தந்திரத்தால் வெல்லவேண்டு மென்று திட்டமிட்ட உனது அறிவுக்கு என் வாழ்த்துக்கள்! இராமாயணத்தில் வாலியை நேருக்கு நேராக நின்று வதைக்க முடியாது என்பதைப் புரிந்துகொண்ட இராமன் என்ன செய்தான்? தனது வீரத்துக்கும் யுத்த தர்மத்துக்கும் இழுக்கு ஏற்படுமேயென்று கவலைப்படாமலே மறைந்திருந்து வாலியைத் தாக்கி அவனைக் கொன்றான்! மகாவிஷ்ணுவின் அவதாரமெனப்படும் இராமச்சந்திர மூர்த்தியாகிய நீயே மறைந்திருந்து என்மீது அம்பு எய்தி என்னை மாய்த்தது நியாயமா என்று வாலி கேட்டபோது, இராமன், தனது செயலுக்கு ஏதோ ஒரு காரணம் கூறவில்லையா? யுத்த தர்மம் தவறவில்லையென்று வாதிடவில்லையா? தெய்வத்தின் திருஅவதாரமான இராமனே யுத்த களத்தில் சூழ்ச்சி முறையைக் கடைப்பிடித்திருக்கிறபோது - சாதாரண மானுடர்களாகிய நாம், சூழ்ச்சித் திறனால் பகையை முறியடிப்பது பாபகாரியமல்ல! தர்மம் - நியாயம் என்றெல்லாம் அடிக்கடி உன் நெஞ்சத்தில் உருவாகும் குழப்ப அலைகளுக்கு இப்போதாவது ஒரு முடிவு கட்டித்தான் ஆக வேண்டும்!''

செல்லாத்தாக் கவுண்டர், உபதேச காண்டத்தில் தன்னை மறந்து ஈடுபட்டு விட்டதை உணர்ந்த காளி மன்னன், இடைமறித்து, ''இப்போது உடனடியாக என்ன செய்யலாம்? அதைச் சொல்லுங்கள்!'' என்றான் சற்று சலிப்புடன்!

''வாள் வீச்சிலும், ஈட்டி எறிவதிலும், நேர் நின்று போர் புரிவதிலும் வள நாட்டு வீரர்கள் வல்லவர்கள்! ஆனால் தொலைவிலிருந்து வில்லில் கணை பூட்டி எதிரிகளை வீழ்த்தும் போர் முறையில் நமது தலையூர் வீரர்களே சிறந்தவர்கள்!'' என்று தனது சூழ்ச்சிப் புலமைக்கான முன்னுரையை ஆரம்பித்தார் கவுண்டர்!

''தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மை! ஆனால் ஆயிரம் கணைகளானாலும் அவற்றைத் தன் கையில் உள்ள கேடயத்தால் தடுத்து நிறுத்தி - வான்மழை போலப் பொழிகின்ற கணைகளையும் வாள் வீசி முறித்தெறிகிற சக்தி படைத்தவன் சங்கர் எனக் கேள்விப்பட்டிருக்கிறோமே!'' என்று எதிர்க் கேள்வி போட்டான் தலையூர் மன்னன்!

''மன்னா! அதையெல்லாம் நான் யோசிக்காமல் இல்லை! அதையும் யோசித்தபிறகு எனது மூளையில் உதித்த திட்டத்தைத்தான் இப்போது விளக்குகிறேன்!''

''விரைவாக விளக்குங்கள்!''

''நாம் இப்போது வீரப்பூர் காட்டின் நடுப்பகுதிக்கு வந்து விட்டோம். இன்னும் சிறிது நேரத்தில் சங்கரின் படையும் இந்த இடத்துக்கு வந்துவிடும். அந்தப் படை வருவதற்கு முன்பு நாமும் நமது படையினரும் புதர்களோடு புதர்களாக - பாறைகளோடு பாறைகளாக - ஒளிந்து கொள்ள வேண்டும்! சிறு சந்தடியும் இல்லாமல் மிகத் தந்திரமாக இதைச் செய்ய வேண்டும். முன்னேற்பாடாக நமது குதிரைப் படைகளும் தேர்ப் படையும் வேறு வழியில் போக்குக் காட்டி தலையூர் நோக்கிச் செல்ல வேண்டும். தலையூர் படை வேறு வழியாகத் தலையூர் நோக்கிச் செல்கிறது என்ற செய்தி எப்படியும் சங்கருக்கு அவனது ஒற்றர்கள் மூலம் கிடைக்கும். அதை நம்பி அவன் வீரப்பூர் காட்டில் நாம் வலைவிரிக்கப் போகும் பகுதிக்குப் படைகளுடன் வந்து சிக்கிக் கொள்வான். நான்கு பக்கமிருந்தும் புதர்களிலே பதுங்கியுள்ள நமது வில் வீரர்கள் அம்புகளைப் பொழிந்தால் எதிரிகளின் கைகளில் எத்தனை கேடயங்கள் இருந்தாலும் என்ன செய்து விட முடியும்? குழிக்குள் விழுந்து விட்ட யானையைப் போல் சங்கரின் படை இந்த வீரப்பூர் காட்டுக்குள்ளே திக்குமுக்காடத்தான் போகிறது! குழிக்குள் கிடக்கும் யானையையாவது சிலநாள் பட்டினி போட்டு அடக்கிப் பிறகு வெளியே தூக்கிப் பழக்குவார்கள்! ஆனால் நாம் தூக்கப்போவது சங்கரின் பிணத்தை! வீரமலையின் பிணத்தை! வளநாட்டு வீரர்களின் உயிரற்ற சடலங்களை!''

செல்லாத்தாக் கவுண்டர் வெறிச் சிரிப்பு சிரித்துக்கொண்டே இப்படி விளக்கமாக ஒரு வியூகம் வகுத்துக் கொடுத்தார்.

தலையூர்க்காளிக்கு மீண்டும் குழப்பம் - மறைந்திருந்து தாக்கி வளநாட்டுப் படையை விரட்டியடிக்கலாம் என்பது சரி

தன்னந்தனியாகச் சங்கரைச் சூழ்ந்து கொண்டு கொல்வது என்பது தர்மமாகப் படவில்லையே - என்று முணுமுணுத்தான். தர்ம நியாயங்களைப் பற்றி அவன் அதிக நேரம் சிந்தித்துவிடக் கூடாது என்று அவசரப்பட்ட செல்லாத்தாக் கவுண்டர், ''காளி மன்னா! தலையூர்க் கோட்டையில் நமது கொடி மரம் விழுந்து விட்டது என்பதை மறந்துவிடாதே! அந்தக் கொடியை யார் வீழ்த்தியது என்பதையும் மறந்து விடாதே! நீயும் உனது நாட்டு மக்களும் உனக்காகவே எல்லா வித சோதனைகளையும் தாங்கிக்கொண்டு உன் பக்கத்திலேயே இருக்கும் நானும் மாந்தியப்பனும் பொன்னர் - சங்கருக்கு அடிமைகளாக இருப்பது என்று நீ முடிவுசெய்து விட்டால் - அதற்கு மேல் நான் எதுவும் சொல்வதற்கில்லை!'' என வார்த்தைகளில் சூடேற்றினார். உருக்கப்பட்ட ஈயம் வார்க்கப்பட்ட இடத்துக்குத் தகுந்தாற் போல உருமாற்றம் பெறுவதைப் போல தலையூர்க் காளியின் மூளையும் செல்லாத்தாக் கவுண்டரின் திறமைக்கேற்பத் திரும்பிக் கொண்டது!

அவர் வகுத்த வியூகப்படியே வில்லேந்திய வீரர் படையை புதர்களின் மறைவுகளில் ஒளியச் செய்தான். விற்படை தவிர மற்ற படைகள் வேறு வழியாகத் தலையூர் நோக்கி முரசறைந்த வண்ணம் அணிவகுத்துக் கிளம்பின. தலையூர்க்காளி மலைக் கூடு ஒன்றில் எதிரிப்படையின் எந்தவொரு வீரனின் கண்ணிலும் படாதவாறு ஒளிந்து கொண்டான். செல்லாத்தாக் கவுண்டர், மாந்தியப்பன் இருவரும் நூற்றுக்கணக்கான வில் வீரர்களைத் தங்களைச் சுற்றிலும் நிறுத்திக்கொண்டு பெரும் பாறைகளுக்குப் பின்னால் ஒளிந்திருந்தனர். செல்லாத்தாக் கவுண்டரின் வில்லில் இருந்து ஆகாயத்தை நோக்கி ஒரு அம்பு எப்போது பறந்து போகிறதோ அப்போது தலையூர் வீரர்கள் வளநாட்டுப் படைமீது அம்புகளைப் புதர் மறைவுகளிலிருந்து பொழிய வேண்டுமென்று ஏற்பாடு! வில்லில் இருந்து அம்பின் நுனிகள் குறி பார்த்து நீண்டிருப்பது போலவே புதர்களுக்கு மறைவிலிருந்த தலையூர் வீரர்களின் விழிகளில் இருந்து கூரிய பார்வைகள் வீரப்பூர் காட்டின் அந்த பயங்கரப் பள்ளத் தாக்குப் பகுதியை ஆக்ரமித்துக் கொண்டிருந்தன.

தலையூரில் பெற்ற வெற்றிக் களிப்பு ஒரு புறம் - வீரமலையை விடுவித்த பெருமிதம் ஒருபுறம் -,மாயவரை இழந்து விட்ட மனக் கவலை ஒரு புறம் - வளநாட்டு நிலை என்னவோ என்றறியும் ஆதங்கம் ஒருபுறம் - இப்படியொரு கலப்படமான உணர்வுடனே சங்கர், தனது படையை வீரப்பூர் காடு நோக்கி நடத்திக்கொண்டு வந்தான். அப்போது வாய்க்

கால் வரப்புகளைத் தாண்டிக்கொண்டும் ஒற்றையடிப் பாதையில் ஓடி வருவதும் தடுமாறி வயல்களில் இறங்குவதுமாகக் குதிரையொன்றில் வளநாட்டு வீரன் ஒருவன், தன்னை வளநாட்டுக்காரன் என அடையாளம் காட்டிக்கொள்ளும் கொடியொன்றைக் கையில் தூக்கிப் பிடித்து அசைத்தவாறு அங்கு வந்து சேர்ந்தான்.

''ஒற்றனே! என்ன விசேஷம்?'' என்று சங்கர் கேட்டான். படையொன்று முன்னேறும்போது எதிரே என்னென்ன தடைகள் இருக்கின்றன என்பதை அறிந்து வர வழக்கமாக அனுப்பப்படுபவர்களில் ஒருவனே அந்த ஒற்றன். ஒற்றர்களும் மனிதர்கள்தான். அந்த வேலையின் நிமித்தம் அதற்குரிய பயிற்சிகளைப் பெறுகிறார்கள். சில நேரங்களில் அவர்களும் தப்புக் கணக்கு போட்டு விடுவது உண்டு! அதற்கு உதாரணம்தான் இந்த ஒற்றன்! செல்லாத்தாக் கவுண்டரின் யோசனையின்படி தலையூருக்கு வேறு வழியாகப் போக்குக் காட்டி அனுப்பப் பட்ட படைகளைப் பார்த்துவிட்டு ஏமாந்துபோன அவன், சங்கரை நோக்கி, ''அரசே! தலையூர்ப் படைகள் அனைத்தும் வீரப்பூர் காட்டுப் பாதையில் வராமல் மயிலம்பட்டியைச் சுற்றிக் கொண்டு தலையூருக்குப் போய்க்கொண்டிருக்கின்றனர்'' என்றான்.

அதற்குள் வீரமலை அவனைப் பார்த்து, ''ஏன்? எதற்காக? சுருக்கமான வீரப்பூர் பாதையை விட்டுவிட்டு சுற்று வழியில் செல்ல வேண்டிய அவசியம் என்ன?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

''எதிரே வரும் நமது படையை எதிர்ப்பதற்கு பயந்துகொண்டு தலையூர் மன்னன் அந்த வழியைத் தேர்ந்தெடுத்திருக்கலாம்'' என்று அந்த ஒற்றன், தனது யூகத்தை வெளியிட்டான். சங்கர் அதனை முழுமையாக ஏற்றுக்கொள்ள முடியாமல், ''இருக்காது! இதில் ஏதோ சதி இருக்கிறது! மயிலம்பட்டி வழியாக ஒரு பகுதி படையும் மாயனூர் வழியாக மற்றொரு பகுதிப் படையும் போவது போல நமக்குப் போக்குக் காட்டிவிட்டு, திடீரென இருபுறமிருந்தும் வந்து நம்மீது இடுக்கித் தாக்குதல் நடத்துவார்கள்!'' என்று திட்டவட்டமாகத் தெரிவித்தான்.

அந்த ஒற்றனை விடச் சங்கர் பரவாயில்லை என்றாலும் - தலையூர்ச் சதியைச் சரியாகப் புரிந்து கொண்டு பேசவில்லை என்பதே உண்மை! ''சங்கர் சொல்வது போலவும் நடக்கலாம்! எதிரிகளின் இடுக்கித் தாக்குதலைச் சமாளிப்பதுபோல நமது

படையினர் வியூகம் அமைத்துக்கொண்டு அணி வகுக்கட்டும்!'' என்று தளபதி வீரமலை ஆணை பிறப்பித்தான். அப்போது சங்கருக்குத் திடீர் என ஒரு சிந்தனை!

''இடுக்கித் தாக்குதலை நாம் சமாளிப்போம்! எதிரிகளை வீழ்த்துவோம்! அல்லது அவர்களை விரட்டியடிப்போம்! அதில் எந்தச் சந்தேகமுமில்லை! ஆனால் ஒன்று - அவர்கள் எறியும் ஈட்டிகள், வீசும் வாட்கள், பொழியும் அம்புகள், மாய வரின் பூத உடலில் பட்டு அந்தப் பொன்னுடலைச் சிதைக்க நேரிட்டால் என்ன செய்வது?''

சங்கரின் சஞ்சலத்தைப் போக்கத் தளபதி வீரமலை, உடனே பதில் அளித்தான்.

''மாயவரின் உடலை வளநாட்டுக்குக் கொண்டுபோய்த்தான் சமாதி வைத்து அடக்கம் செய்ய வேண்டும் என்ற எண்ணத் தைக் கைவிட்டுவிட வேண்டும்.''

''என்ன தளபதியாரே சொல்கிறீர்? அந்த உத்தமரை பாதி வழியிலேயே போட்டுவிட்டுப் போய் விடுவதா?''

''நான் அப்படிச் சொல்லவில்லை! வழியிலேயே தக்க இட மாகப் பார்த்து மாயவரின் உடலை அடக்கம் செய்துவிட்டுப் போகலாம் என்பதுதான் என் யோசனை!''

''அதுவும் நல்ல யோசனைதான்! வீரப்பூர் காட்டுக்குள்ளே பெரிய ஆலமரம் எங்கிருக்கிறதோ அப்படிப் பார்த்து அதனடி யில் மாயவருக்கு சமாதி அமைப்போம்! காரணம், அவர் ஆல் போல் தழைத்த அறிவுச் சுடர்! அதுமட்டுமல்ல, ஆலமரத்து நிழல்தான் பல்லாண்டுகாலம் அவரது கல்லறையின்மீது வெப் பம் படாமல் காத்திருக்கும்.''

சங்கரின் முடிவு அறிவிக்கப்பட்டவுடன் அவனது படைகள் வீரப்பூர் காட்டுக்குள் விரைந்தன. சங்கரின் விருப்பம்போலவே விழுதுகள் விட்டுத் தழைத்துப் படர்ந்து விரிந்து நின்ற ஆல மரத்தடியொன்றும் கிடைத்து விட்டது.

''இதுதான் பொருத்தமான இடம்! இந்த மரத்து நிழலிலேயே ஆழமாகக் குழி தோண்டுங்கள்'' என்று கட்டளையிட்டான் சங்கர்! வீரமலையும் வையம்பெருமானும் மாயவரின் உடலைத் தேரில் இருந்து இறக்குகிற முயற்சியில் ஈடுபட்டனர். குழி

தோண்டப்படும் இடத்தில் சங்கர் நின்று கொண்டிருந்தான். அவன் உள்ளம் புலம்பியது. அண்ணன் பொன்னர் இல்லாமல் மாயவரின் சவ அடக்கம் நடைபெறப்போகிறதே என்பதால் ஏற்பட்ட கலக்கம். எனினும் தன்னைத் தேற்றிக் கொண்டான். மாயவரின் கல்லறைக்கு பொன்னரை அழைத்து வந்து வீர மரியாதை செய்யச் சொல்லலாம் என்பதே அந்த ஆறுதல்!

குழியை வீரர்கள் ஆழமாக வெட்டிக் கொண்டிருந்தனர். அப்போது ''டங்'' என்று ஒரு ஓசை கேட்டது குழிக்குள்ளிருந்து!

''நிறுத்துங்கள்! வேகமாகவோ முரட்டுத்தனமாகவோ வெட்டாதீர்கள்! மெதுவாகக் கைகளால் தோண்டிப் பாருங்கள், அது என்ன சப்தமென்று!''

இவ்வாறு பரபரப்படைந்தான் சங்கர்! அவனது உத்திரவுப்படி வீரர்கள், ஓசை வந்த இடத்தில் மெதுவாகத் தோண்டினர். ஏதோ அந்த மண்ணில் வெள்ளையாக ஒரு பொருள் பளபளத்தது.

''வையம்பெருமான்! தளபதி! இங்கே வாருங்கள்! வாருங்கள்!'' என்று உரத்த குரலில் அழைத்தான் சங்கர்! அவர்களிருவரும் மாயவரைத் தேரில் இருந்து கீழே இறக்காமலே அந்தக் குழியருகே ஓடிவந்தனர். அதற்குள் அந்தப் பொருள் குழிக்குள்ளிருந்து வளநாட்டு வீரர்களால் வெளியே எடுக்கப்பட்டு விட்டது.

வெள்ளிப் பேழை - அதனைச் சங்கரின் கையில் வீரர்கள் கொடுத்தார்கள். வீரமலையும் வையம்பெருமானும் வைத்த விழி வாங்காமல் அந்தப் பேழையைப் பார்த்தார்கள். சங்கர், அந்தப் பேழையைத் திறந்தான், திறந்தால்? திறந்தால்?

ராக்கியண்ணன் தனது மரண சாசனத்தில் குறிப்பிட்டிருந்த அதே மரகதப் பச்சை மாணிக்கக் கிளி!

சங்கர் உட்பட யாருக்குமே பேசுவதற்குச் சிறிது நேரம் நா எழவில்லை!

ஆனால் ஒன்று, அவர்களைச் சுற்றியுள்ள பாறைகளின் புதர்களில் தலையூர்ப் படை சூழ்ந்திருப்பதும் அவர்களுக்கு இன்னமும் தெரியவில்லை!




## 56

இதுதான் சங்கரின் படையைத் தாக்கிச் சாய்த்திடச் சரியான நேரம் என்று கருதிய செல்லாத்தாக் கவுண்டர் ஆகாயத்தை நோக்கித் தனது வில்லை வளைத்து அதில் நாணேற்றிச் செலுத்த ஒரு அம்பையும் கையில் எடுத்துவிட்டார். அந்த அம்பு ஆகாயத்தில் கிளம்புவதை அடையாளமாகக் கொண்டு உடனே தலையூர்ப்படை, தனது தாக்குதலைத் தொடங்கவேண்டுமென்பது முன்னரே வகுக்கப்பட்ட ஏற்பாடல்லவா - அந்த ஆணை பிறப்பிக்க செல்லாத்தாக் கவுண்டர் தயாராகிவிட்டது கண்ட தலையூர்க்காளி மன்னன், அவரை நோக்கிக் கையமர்த்தி சற்றுப் பொறுமையாக இருக்குமாறு பணித்துவிட்டான். எரிந்து கொண்டிருக்கும் ஒரு காட்டுக்குள் மரக்கிளையில் அமர்ந்து ஒரு குயில் எந்தச் சஞ்சலமுமின்றி பாடிக்கொண்டிருப்பது போல விரோத நெருப்பு மூண்டெழுந்து பற்றி எரிந்து கொண்டிருந்த அவனது நெஞ்சத்தில் மாயவரைப் பற்றிய மதிப்பும் மரியாதையும் அந்தக் குயிலின் பாட்டாக இசைத்துக் கொண்டிருந்தன. மாயவருக்காக ஒரு சமாதி தயாரிக்கிறார்கள் வளநாட்டு வீரர்கள். அந்தப் பெருங்குழியில் அவரது உடலைக் கிடத்தி அடக்கம் செய்து முடிப்பதற்குள்ளாக சங்கரின் மீது தாக்குதலைத் தொடர்ந்து விட்டால் இரு படைகளின் மோதுதலுக்கிடையே மாயவரின் உடல் அனாதைப் பிணமாக அலைக்கழிய நேரிடும். என்னதான் எதிர்முகாமுக்கென மாயவர் வாதாடிக் கொண்டிருந்தாலும் - அந்த நாட்டுக்காரராகவே ஆகிவிட்டாலும் — அவரால் தலையூர் அரசு பெற்றிருந்த நன்மைகளை மறந்துவிட இயலவில்லை காளி மன்னனால்! அவர்பால் அவன் கொண்டிருந்த ஆழமான நட்பு, இடையில் இருந்து கலகம் விளைத்தவர்களால் முழுமையாக அழிந்து போய்விடவில்லை! என்ன இருந்தாலும் தலையூருக்கு எதிராக அவர், பொன்னர் சங்கர் பக்கம் போயிருக்கக்கூடாது என்ற கருத்து, காளி 'மன்னனிடம் சிலரால் நயமாக உரைக்கப்பட்டபோதும் - நச்சு எண்ணத்துடன் உரைக்கப்பட்டபோதும் - மாயவர் மீது அவனுக்குக் கோபம் ஏற்பட்டது உண்மையெனினும் அவரை இழந்துவிட்டோமே என்ற

ஆதங்கம் அவன் உள்ளத்தை எத்தனையோ சமயங்களில் ஆக்ர மித்ததுண்டு.

இவ்வாறு அமைந்த அவன் இதயத்தின் அடித்தளத்திலிருந்து மாயவரின், உடலுக்கு எந்தச் சேதமோ அல்லது களங்கமோ ஏற்பட்டுவிடக்கூடாது என்ற எண்ணமே மேலோங்கி உயர்ந்தது. அதனால்தான் அந்த அனுபவக்களஞ்சியமும் அறிவு மேதையு மான மாயவரின் உடல் அடக்கத்தைச் சங்கரும் அவனது படையினரும் செய்து முடிக்கும்வரையில் பொறுத்திருக்க வேண்டுமென்று அவன் முடிவு செய்தான். அவன் அந்த முடி வில் உறுதியாக இருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட செல்லாத்தாக் கவுண்டர், ஆகாயம் நோக்கித் திருப்பிய வில் லையும் அம்பையும் தாழ்த்திக் கையிலே வைத்துக்கொண்டார்.

தொடர்ந்து என்ன நடக்கிறது என்பதைக் காளி மன்னனும் - மற்றும் புதர் மறைவுகளிலும் பாறை மறைவுகளிலும் ஒளிந் திருந்த தலையூர் வீரர்களும், ஆவலுடனும் பரபரப்புடனும் கவனித்துக்கொண்டிருந்தனர்.

மரகதப்பச்சை மாணிக்கக்கிளியை அந்தக் குழிக்கு வெளியே ஒரு மண்மேட்டில் வைத்துவிட்டு சங்கர், வீரமலை, வையம் பெருமான் முதலியோர் மாயவரின் உடலைக் குழிக்கு அருகே கொண்டு வந்து வைத்தனர். சில வீரர்கள் அவசர அவசரமாக காட்டுப் பூக்களைத் தங்கள் கைகளில் நிறைத்துக்கொண்டு வந்தனர். அந்தப் பூக்களின் ஒரு பகுதியை மாயவரின் உடலின் மீது தூவினான் சங்கர்! அவனைத் தொடர்ந்து வீரமலை, வையம்பெருமான் மற்றும் துணைத்தளபதிகள் தூவினர்!

மாயவரின் உடல் குழிக்குள் மெதுவாக இறக்கி வைக்கப் பட்டது. மண்மேட்டில் அவரது உடலுக்கருகே கிடத்தப்பட் டிருந்த வாளை எடுத்து சங்கர் முத்தம் கொடுத்துவிட்டு, அந்த வாளை மாயவர் உடலின் இடப்புறத்தில் வைத்து வணங்கி நின்றான். அப்போது அவன் கண்களில் இருந்து பொலபொல வென நீர்பொழிந்தது. வீரமலையினாலும் வையம்பெருமானா லும் துக்கத்தைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. தலையூர்க் காளியின் நிலையும் அதுவேதான்.

பகையொழிக்கவும் - பங்காளிக்காய்ச்சலின் விளைவுகளால் ஏற்படும் வேதனைகளைத் தடுக்கவும்- பண்பு நலன்கள் பாழ் படாமல் பாதுகாக்கவும் - வேட்டுவர் வேளாளர் என்ற பேத விரோதங்களை அகற்றவும்- கடைசி மூச்சுள்ள வரையிலே

பாடுபட்ட பெருந்தகையாம் மாயவரின் பூத உடலை சங்கர் அள்ளிப் போட்ட கண்ணீரில் நனைந்த அந்த மண் மறைக்கத் தொடங்கி, சற்று நேரத்திற்கெல்லாம் குழியில் சரிக்கப்பட்ட மண்ணில் அந்த உடல் மறைந்தே போயிற்று. தற்காலிகமாக ஒரு சமாதி அங்கே உருவாக்கப்பட்டுவிட்டது. அப்போது சங்கர் நினைத்துக்கொண்டான், போரில் வெற்றி நமக்கென்று ஆகுமாயின் மாயவரின் சமாதியைப் பளிங்குக்கற்கள் கொண்டு அழகுற அமைக்க வேண்டும் என்று! தலையூர்க்காளியும் கூடத் தனக்கு வெற்றி கிட்டுமேயானால் மாயவரின் சமாதியை ஒரு சிறு மாளிகை போலவே கட்ட வேண்டுமென்று எண்ணிக் கொண்டு களத்தில் நின்றிருந்தான்.

மாயவரின் கல்லறையைச் சூழ நின்றுகொண்டு சங்கரும் அவனது படையினரும் கண்களை மூடியவாறு மெய்மறந்து வீர வணக்கம் செலுத்தினர். தொலைவிலிருந்து தலையூர்க்காளியும் கண் மூடியபடி வீர வணக்கம் செலுத்தினான்.

இதைவிடச் சரியான நேரம் அமையாது என்று செல்லாத் தாக் கவுண்டர் இமைப்பொழுதில் தீர்மானித்துக்கொண்டார். கையில் படைக்கலன்கள் இருப்பினும் கண்மூடி மௌன அஞ் சலி செலுத்துகிற எதிரிகளைத் தாக்கித் தோற்கடிக்கக் கடவுளே பார்த்துத் தலையூருக்கு நிர்ணயித்துக் கொடுத்த நேரம் இது தான் என்று அவரது உதடுகள் முணுமுணுத்தன. ஒரு வேளை இன்னும் சிறிது பொறுத்திருக்கலாம் என்று காளி மன்னன் கருதலாம்! அவனது கருத்தை அறியத் தேவையில்லை! அதனால் லாபமில்லை! தானே ஆணையிட்டுவிட்டு அதன் காரணமாக வெற்றியும் ஈட்டித் தந்துவிட்டால் அந்த மகிழ்ச்சியில் தலை யூர்க்காளி மிதப்பானே தவிர, இதையொரு பொருட்டாக எண்ணி கேள்வி கேட்டுக்கொண்டிருக்க மாட்டான்.

எனவே அடுத்த நொடியில் செல்லாத்தாக் கவுண்டர் விடுத்த அம்பு ஆகாயம் நோக்கிக் கிளம்பியவுடனே, திடீரெனக் கடல் கொந்தளித்த பெரு முழக்கத்துடன் தலையூர் வீரர்கள் சங்கரின் படை மீது அம்புகளையும் ஈட்டிகளையும் பறக்கவிட்டனர்.

இந்தத் தாக்குதலைச் சிறிதும் எதிர்பாராத சங்கர், வீரமலை, வையம்பெருமான் ஆகியோர், மெத்தப் பரபரப்படைந்து எதிர்த் தாக்குதலுக்குத் தங்கள் வீரர்களை அவசர அவசரமாக அணிவகுத்தனர். அந்த நேரத்திலும் சங்கருக்கு அருக்காணித் தங்கத்தின் ஞாபகம் மாறவில்லை. அங்கு கிடந்த மரகதப் பச்சை மாணிக்கக்கிளியை எடுத்து வையம்பெருமானிடம் கொடுத்து,

"இந்தப் போரில் நம் மூவரில் யார் மிச்சமிருக்கிறோமோ அவர்கள் கொண்டு போய் இந்தக் கிளியை என் தங்கையிடம் சேர்க்கலாம். ரதத்தில் வை! என்று கூறிக்கொண்டே வானத் தில் வட்டமிடும் கழுகு, தரையில் கண்ட இரையின்மீது சடா ரென்று தாவிடுவதுபோல தலையூர்ப் படைகளை நோக்கித் தாவினான்.

தங்களை நோக்கி வரும் அம்புகளும் ஈட்டிகளும் எந்தப் பக்கமிருந்து வருகின்றன என்பதைக் கண்டறிய இயலாமை யினால் சிறிது நேரம் வரையில் வளநாட்டுப் படை வீரர்கள், தங்களைச் சூழ்ந்துள்ள புதர்கள் மீதும், பாறைகள் மீதுமே தாக்குதலை நடத்தவேண்டியிருந்தது. இந்த நிலை நீண்ட நேரம் நீடிக்கவில்லை. தலையூர்க் காளியும் செல்லாத்தாக் கவுண்டரும், மாந்தியப்பனும் ஒளிந்திருந்து தங்களை வீழ்த்திடப் படை குவித்துப் போரிடுகின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ள சங்கருக்கு அதிக நேரமும் பிடிக்கவில்லை. தனது குதிரை யின்மீது தாவி ஏறிக் கொண்டான். வலிமை வாய்ந்த கேட யத்தை இடக்கரத்தில் பிடித்துக்கொண்டு, வாளைச் சுழற்றிக் கொண்டே ஒரு பாறையின் மீது குதிரையை நிறுத்திக்கொண்டு, அதிலிருந்தவாறே அவனிட்ட முழக்கம் வீரப்பூர் காட்டையே குலுங்கி அதிரச் செய்தது!

"நேராக நின்று இந்தச் சங்கரை எதிர்க்க முடியாமல் கோழை களைப்போல ஒளிந்திருந்து போரிடுகிற உங்களை வீர தேவதை காரி உமிழ்கிறாள் என்பதை வெட்கமில்லாமல் ஒப்புக்கொள்ளுங்கள்! துரோகம் செய்து பழக்கப்பட்டவர் செல்லாத்தாக் கவுண்டர்! காட்டிக் கொடுப்பதில் கைகாரர் மாந்தியப்பன்! இந்தப் போர் முறையை அவர்கள்தான் வகுத் துத் தந்திருக்கக்கூடும்! அதை நானறிவேன்! அஞ்சா நெஞ்சன் - அடலேறு - ஆனை பலம், வேங்கை பலம் உண்டென்று ஆர்ப்பரிப்பவன் - தலையூர்க்காளி மன்னன் கூடவா இந்தத் தலைகுனியும் போருக்கு உடன்பட்டான்! சே! மானக்கேடு! வரப்போரத்தில் சிங்கம் நடந்தால் அந்த வரப்பின் வளைகளுக் குள் பதுங்கிக் கொண்டு எட்டிப் பார்த்துக் கிடக்கும் நண்டு களின் கதியல்லவா தலையூர்ப் படைகளுக்கு ஏற்பட்டிருக்கிறது! வில்வித்தையிலும் அம்பு எய்வதிலும் எங்களைவிடப் பெரும் பயிற்சி பெற்றவர்கள் தலையூர்க்காரர்கள் என்ற தைரியத்தில் இப்படியொரு சூழ்ச்சிப் போராட்டவியூகம் வகுத்துள்ளீர்கள்! இதையும் முறியடிக்கும் ஆற்றல், என் வாளுக்கும் வளநாட்டு வீரர்களுக்கும் உண்டு என்பதை இப்போதே - இக்கணமே நிரூபித்துக் காட்டுகிறேன்."

சங்கர் வீர உரை ஆற்றிக்கொண்டிருக்கும்போதே, தலையூர்க் காளி மலைக்கூடொன்றிலிருந்து வெளிப்பட்டு முதலில் சங்கரை வீழ்த்திட வில்லின் துணையை நாடினான். காளியின் வில்லில் இருந்து கடுங்கணைகள் புறப்பட்டு சங்கரை இலக்கு வைத்து தாக்க ஆரம்பித்தன.

''விட்ட சரம் அம்பாகி விரைந்து கடல் குமுறி
மின்னல்ஒளி போல வெளிச்சமிட்டுக் கண்பறித்து
ஆவி தணல் வீசி அறுபது வேங்கை மரம் கருகி
வீரமரம் தட்டுருவி விரைந்தும் அது போகையிலே
ஆவி தணல் வீசியப்போ வேங்கை மரம் பட்டதப்போ!
வாரதொரு அம்பைச் சங்கர் வகையாகத் தான் பார்த்து,
வந்ததொரு அம்பைச் சங்கர் வலது கையில் தான் பிடித்து,
அம்பு வந்த திசை பார்த்து குதிரையை அப்போ
திருப்புகிறார்''

நெருப்புமிழும் வேகத்தில் தன்னை நோக்கி வந்த அம்பு களைக் கேடயத்தால் தடுத்து நிறுத்தியது மட்டுமல்ல, பல கணைகளைத் தனது வாளைச் சுழற்றியே முறியடித்துப் பொடிப் பொடியாக்கி தலையூர்ப் பகை நோக்கிப் புயல் வேகத்தில் குதிரையைச் செலுத்தினான்.

திடீர்த் தாக்குதல் நடத்தி வளநாட்டு வீரர்களை ஒருக்கணம் திகைக்க வைத்திட முடிந்ததேயல்லாமல் தலையூர் வீரர்களால் பாறைகள் மறைவிலும் புதர்களின் மறைவிலும் நெடுநேரம் இருந்திட முடியவில்லை. அவற்றைவிட்டு வெளிக் கிளம்பி வளநாட்டுக்காரர்களை அந்த வனப் பகுதியில் சந்திப்பது தவிர வேறு வழியில்லாமல் போய்விட்டது.

சிலர் பகைவர் மேல் அம்பைச் செலுத்தினர். அதற்கு எதி ராக விடுத்திட கையில் அம்பு இல்லாத காரணத்தினால் வேறு சிலர் தங்களிடமுள்ள வில்லை மட்டுமே சுழற்றினர். அப்போது எதிரி எய்த அம்பு தமது மார்பில் ஊடுருவிடவே அந்த அம்பு களை எடுத்துத் தம்மிடம் உள்ள வில்லில் பூட்டி எதிரி மீது தொடுத்தனர் என்பதை

''நேர்முனையில் தொடுத்த பகழிகள்
நேர் வளைவில் சுழற்றும் அளவினில்
மார்பிடையில் குளித்த பகழியை
வார்சிலையில் தொடுத்து விடுவரே''

என்று கலிங்கத்துப் பரணி கூறும் போரின் சிறப்பை ஒத்ததாக அமைந்தது வீரப்பூர் காட்டினிடையே நடந்த போர்!

தளபதி வீரமலையை ஒரு பகுதியிலும் வையம்பெருமானை மற்றொரு பகுதியிலும் வளைத்துக் கொண்டு, சங்கருக்குப் பக்கபலமாக அவர்களிருவரும் இல்லாத அளவுக்குப் பிரித்து விட்டால் சங்கரைத் தலையூர்க்காளி எளிதில் வீழ்த்திவிட முடியும் எனக் கருதிய செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் தமது படைவீரருடன் அவர்கள் இருவரையும் சூழ்ந்து கொண்டு தாக்கினர். செல்லாத்தாக் கவுண்டரின் சூழ்ச்சிக்கு ஏற்ப தலையூர்க் காளியும் சங்கரும் வேறொரு முனையில் கடும் போர் புரிந்தனர். சங்கர் சுழற்றும் வாளின் வேகத்தில் தலையூரான் விடுத்திட்ட சுடு சரங்கள் அனைத்தும் பொடிபட்டுப் புழுதித் துகள்களாக அந்தக் களத்தில் விழுந்து சிதறிக்கொண்டேயிருந்தன.

வீரமலையையும் வையம்பெருமானையும் மிகச் சுலபமாகத் தோற்கடித்துவிடலாமென வியூகம் வகுத்த செல்லாத்தாக் கவுண்டர் திணறிப் போனார். அந்த இருவரின் மின்னல் வேகத் தாக்குதல் கண்டு மாந்தியப்பன் திகைத்தான். தன் தந்தையை நோக்கி ''அப்பா! ஆபத்தில் சிக்கிக்கொண்டோம் போலிருக்கிறதே!'' என வாய்விட்டு அலறிவிட்டான். வீரமலை, வையம்பெருமான் இருவரையும் வெகுவேகமாக எதிர்த்து வளநாட்டு வீரர்கள் பலரைக் கொன்று குவித்து, அதற்கு ஈடாகத் தன் பக்கமும் பல வீரர்களைப் பலி கொடுத்துவிட்ட செல்லாத்தாக் கவுண்டர் ஒரு கட்டத்தில் வீரமலையை நேருக்கு நேர் எதிர்கொள்ள வேண்டிய தருணத்தில் அவனோடு மோதாமல் தனது குதிரையில் அப்படியே அசைவற்று அமர்ந்து, தன் கையிலிருந்த வாளைத் தாழ இறக்கிக் காட்டினார். செல்லாத்தாக் கவுண்டர் சமரசத்துக்கு வருகிறார் - அதனால்தான் வாளைத் தாழ இறக்கிக்காட்டுகிறார் எனக் கருதிய வீரமலை, உடனே போரை நிறுத்தி விட்டு ''என்ன?'' என்று அவரைப் பார்த்துக் கேட்டான். செல்லாத்தாக் கவுண்டரையொட்டியே வந்த மாந்தியப்பனும் அங்கு வந்துவிட்டான் உடலில் பல காயங்களுடன்!

''சரணாகதிப் படலமா?'' என்று வையம்பெருமான், அவர்களிருவரையும் அலட்சியமாகப் பார்த்துக்கொண்டே கேட்டான்.

''இல்லை! நமக்குள்ளே ஒரு சமாதானம்!'' என்று பல்லை இளித்தார் செல்லாத்தாக் கவுண்டர். அதற்குப் பொருள் புரியாமல் வீரமலையும் வையம்பெருமானும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

''நமக்குள் ஒரு சமாதானம் செய்துகொள்ளலாம்'' என்று செல்லாத்தாக் கவுண்டர் மேலும் புதிர் போட்டார்.

''போர் நடப்பது சங்கருக்கும் தலையூர்க்காளிக்கும்! அவர்களிருவரும் ஒப்புதல் தராமல் நமக்குள்ளே எப்படி ஒரு தனி சமாதான ஒப்பந்தம் ஏற்பட முடியும்?'' என்று வீரமலை கேட்டான்.

''சங்கருக்கும் தலையூர்க்காளிக்கும் தமது வீரர்கள் அழிவதைப் பற்றிக் கவலையில்லை. அவர்களது கௌரவம், குலப்பெருமை இவைகளைக் காப்பாற்றிக்கொண்டால் போதும். நமக்கேன் இந்தத் தேவையில்லாத சிக்கல்? நானும் என்மகன் மாந்தியப்பனும் எங்கள் பின்னால் உள்ள வீரர்களுடன் உங்கள் படையுடன் இணைந்துவிடுகிறோம். சங்கருக்கும் காளிக்கும் நடைபெறும் போரில் யார் ஜெயிக்கிறார்களோ, அவர்கள் பக்கம் நாம் சேர்ந்துவிட்டால் பிறகு எந்தக் கவலையுமில்லை! என்ன சொல்லுகிறாய் வீரமலை?'' என்று பழம் நழுவிப் பாலில் விழுவது போல பசப்பினார் செல்லாத்தாக் கவுண்டர்!

''அய்யா! தாங்கள் யாருக்குமே விசுவாசமாக இருக்க மாட்டீர்களா? குறைந்தபட்சம் இந்த உலகத்தில் ஒரே ஒரு மனிதன் நீங்கள் இதயசுத்தியோடு விசுவாசம் காட்ட வேண்டியவன் தலையூர்க்காளி! அவன் எவ்வளவோ பரவாயில்லை. தங்களின் தர்மவிரோதமான காரியங்களையெல்லாம்கூட அவன் தாங்கிக்கொண்டு, தங்களிடம் நன்றி விசுவாசம் காட்டி இப்போது அழிந்துகொண்டிருக்கிறான். அவனையும் ஆபத்தில் கைவிடுகிறேன் என்றும் ஜெயிப்பவர் பக்கம் சேருவோம் என்று எங்களையும் துணைக்கு அழைக்கிறீர்களே, உங்கள் பாதம் பட்ட இடத்தில் இருக்கும் பசும்புல்கூட கருகிப் போய் விடுமய்யா!'' என்றான் வீரமலை ஆத்திரம் கொப்பளிக்க! உணர்ச்சி கொந்தளிக்க!

சமாதானப் பேச்சிலும் ஒரு சதி மறைந்திருந்த காரணத்தினால் வீரமலையும், வையம்பெருமானும் செல்லாத்தாக் கவுண்டருக்குப் பதில் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, மாந்தியப்பன் - கீழே தாழ்த்தி வைத்திருந்த தனது வாளை ஓங்கி வீரமலையை ஒரே வெட்டில் வெட்டி வீழ்த்திட வீரமலையை நோக்கிப் பாய்ந்தான். இதுபோன்ற ஒரு விபரீதத்தை எதிர்பார்த்திருந்த வையம்பெருமான் வீரமலைக்கு முன்னால் திடீரெனப் பாய்ந்தோடி தனது வாளால் மாந்தியப்பனின் வாளைத் தட்டிவிடும் நோக்கத்தோடு சீறிப்பாய்ந்தான். அந்த வேகத்தில் மாந்தியப்பனின் வாள் மட்டுமல்ல, அந்த வாளைப் பிடித்திருந்த

அவனது கை விரல்களும் துண்டிக்கப்பட்டுத் தரையில் சித றின. அதற்கு மேல் அங்கு நின்றால் தன்னுயிருக்கே ஆபத்து என உணர்ந்து நடுங்கிய மாந்தியப்பன் ஒரே தாவாகத் தன் குதிரையில் தாவி, போர்க்களத்தை விட்டே ஓடிவிட்டான். மகனின் வலது கை விரல்கள் தன்காலுக்கருகே சிதறிக்கிடப் பது கண்ட செல்லாத்தாக் கவுண்டர், அடிபட்ட புலியைப் போலச் சீறிக் கிளம்பி, தனது கைவாளை வையம்பெருமானின் நெஞ்சில் நுழைத்துவிட்டார். அதனைத் தடுத்து நிறுத்துவதற்கு இடிமுழக்கம் செய்துகொண்டு கிளம்பிய வீரமலையைத் தலை யூர் வீரர்கள் சூழ்ந்து கொண்டனர். ''வாழ்க வளநாடு! வாழ்க பொன்னர் - சங்கர்!'' என்று ஒலியெழுப்பியவாறு வையம் பெருமான் கீழே சாய்ந்தான். அந்த வீர இளைஞனின் உடலை மிதித்துக்கொண்டு தலையூர் வீரர்களும் வளநாட்டு வீரர்களும் மீண்டும் மிக உக்கிரமாக மோதத் தொடங்கினர். தலையூர் வீரர் களை உற்சாகப்படுத்திக் கொண்டே செல்லாத்தாக் கவுண்டர் வீரமலையை எப்படியும் வீழ்த்திட வேண்டுமென்று வெகு ஆவேசமாகப் போர் புரிந்தார். பொன்னர் சங்கர் எனும் ஈடு இணையற்ற மாவீரர்களின் தளபதியான வீரமலை செல்லாத் தாக் கவுண்டரின் வெறித்தனமான போர் கண்டு அஞ்சவில்லை.

மற்றொரு பகுதியில் தலையூர்க் காளியும் சங்கரும் போர்க் களத்தில்! இருதரப்பு வீரர்களின் உடல்கள் கைகால்கள் அறு பட்டும் - தலைகள் துண்டிக்கப்பட்டும் ரத்தத் தடாகத்தில் மிதந் தன. பாறைகளில் மோதும் ஈட்டிகள் எழுப்பிடும் பெருஞ் சப்தம்! வாட்கள் ஒன்றோடொன்று மோதிக் கிளம்பும் ஒலி! வில்லில் இருந்து விருட்டென்று பறக்கும் கணைகளின் ஆர வாரம்! இருபுறமும் வீரர்களை உற்சாகப்படுத்த அதிரும் முர சங்கள்! இவை குறித்துக் கவலைப்படாமல் கழுகுகளும், காகங் களும், நரிகளும், பருந்துகளும், பிண விருந்துண்டு மகிழ் வதிலும், விழுந்த பிணங்களின் அவயங்களை வாயில் கௌவிக் கொண்டு ஓடுவதிலும் பறப்பதிலும் கண்ணுங்கருத்துமாயிருந்தன!

''எடும், எடும், எடும் என எடுத்தது ஓர்
இகல் ஒலி கடல் ஒலி இகக்கவே.
விடு விடு, விடு பரி கரிக் குழாம்
விடும் விடும் எனும் ஒலி மிகைக்கவே

வெருவர வரிசிலை தெரித்த நாண்
விசைபடு திசைமுகம் வெடிக்கவே...
செருவிடை அவரவர் தெரித்தது ஓர்
தெழி உலகுகள் செவிடு எடுக்கவே...''

என்பதாகக் கலிங்கத்துப் பரணியில் - வில்லில் இருந்து புறப் படும் கணைகளால் அந்த நாண் ஓசையால் திக்குகள் பிளந் தன என்றும், குதிரைகளை ஏவுக! யானைகளை ஏவுக! என்ற போர்க்களத்து ஆணைகளால் உலகம் செவிடுபடுகின்றன என்றும், ஜெயங்கொண்டார் குறிப்பிட்டது போல வீரப்பூர் பகுதியே படுகளமாயிற்று! தங்களின் வாய்களில் புகுந்துவிட்ட வேல்களைக் கைகளால் இழுத்தெடுப்பதற்காக முயற்சித்துக் கொண்டே களத்தில் விழுந்து கிடக்கும் வீரர்களைப் பார்த் தால் அவர்கள் ஊது கொம்பு ஊதுவது போலத் தெரிகிறது என்று வர்ணிக்குமே, கலிங்கத்துப் பரணி - அதுபோன்ற காட்சிதான் வீரப்பூர் படுகளத்தில்!

இதன் முடிவுதான் என்ன? சங்கரின் துடிப்பும் வீரமும் மிகுந்த தாக்குதலைத் தலையூர்க் காளியினால் நேருக்கு நேராக நின்று சமாளிக்க முடியவில்லை. வேறு வழியில்லாமல் பின் னோக்கிச் செல்வதுபோலப் பாவனை செய்து மீண்டும் ஒரு மலைப்பாறையில் மறைந்து கொண்டான். அப்போது வீர மலையும் செல்லாத்தாக் கவுண்டரும் போர் நிகழ்த்தும் இடத் தில் ஒரு பெரும் ஒலி! போரில் செல்லாத்தாக் கவுண்டர் வீரமரணம் அடைந்ததையொட்டி, தலையூர் வீரர்கள் களத்தை விட்டு ஓடத்தொடங்கினர். அந்த ஒலி முழக்கம் தலையூர்க் காளியைக் கிறு கிறுக்கச் செய்துவிட்டது. வீரமலையின் கையில் வெற்றிக்கொடி ஓங்கி உயர்ந்துவிட்டது கண்ட சங்கர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை; தன்னை மன்னன் என்பதையும் வீரமலை அவனது தளபதி என்பதையும் மறந்து; சங்கர் - ''தளபதி வீரமல்லை வாழ்க!'' என்று இதயம் திறந்து வாழ்த்து முழக்கமிட்டான். வளநாட்டுப் படைவீரர்கள் அனைவரும் வாழ்த்தினர்! அந்த மகிழ்ச்சிப் பெருவெள்ளத்திடையே ஒரு பெரும் அதிர்ச்சி! பாறைச்சரிவில் மறைந்திருந்த தலையூர்க் காளி நாணேற்றி விடுத்த அம்பு, சங்கரின் நெற்றியில் தாக்கி யது! சங்கர் நெற்றிப் பொட்டில் தாக்குண்டதால் குதிரையி லிருந்து தலைகுப்புற வீழ்ந்தான் - வீரமலை ஓடோடி வந்து சங்கரைத் தூக்கிக் கொண்டான்.

பகழி = அம்பு
*வார்சிலை = வளைந்த வில்

"தொடருதே பருகளம்

57

சங்கரின் நெற்றியில் பொட்டு வைத்தது போல் காளி எய்த கணை தைத்துக் கொண்டிருந்தது. சங்கரை வீரமலை தூக்கிக் கொண்டபோது, இதுதான் தக்க தருணமென்று உணர்ந்த தலையூர்க் காளி மன்னன் மளமளவென பல கணைகளை வில்லில் வைத்து நாணேற்றி வீரமலையின் உடல் முழுதும் பொழிந்து தள்ளிவிட்டான். அத்தனை அம்புகள் வீரமலையைத் தாக்கி அவனுடலைச் சல்லடைக் கண்களாகத் துளைத்த போதிலும் அவற்றில் ஒரு அம்பு கூட சங்கரின் மேனியில் படாமல் பாதுகாத்த அவனது பற்று பாசத்தைக் கண்டு தலையூர்க் காளி அயர்ந்து போனான். தலையூர்க்காளி, எந்தப் பாறை மறைவிலிருந்து கணைகளைப் பொழிகிறான் என்பதைக் கண்டு கொண்ட வளநாட்டு வீரர்கள் அந்தப் பாறையை நோக்கி ஆவேசமாகக் கிளம்பினர்.

ஊழிக் காலத்தில் எப்படிக் கடல் பொங்கிடும் என்பதை யாரோ சொல்லி இளமைக் காலத்தில் கேட்டவனே தவிர - நேரில் பார்த்தவனல்ல! ஆனால் இப்போது வளநாட்டுப் படை வீரர்கள் தன்னை நோக்கி வருவதைக் கண்ட போது ஊழிக்காலத்துக் கடல் கொந்தளிப்பை ஒப்பிட்டுக் கற்பனை செய்துகொண்டான். தலையூர்ப் படை பாதிக்கு மேல் அழிந்து சிதைந்துவிட்ட நிலையில், உணர்ச்சிப் பிழம்புகளாகத் தன்னை அழிக்க விரைந்து வரும் வளநாட்டு வீரர்களிடம் சிக்கினால் உயிருக்கு ஆபத்து என்பதைப் புரிந்துகொண்டு, உடனடியாகக் குதிரையில் தாவி - போர்க்களத்தை விட்டுத் தலையூர் நோக்கி ஓடத் தொடங்கினான்.

தலையூர் திரும்பி அங்குள்ள படைகளையும் - தனது ஆதிக்கத்தில் உள்ள பதினெட்டுச் சிறுநாடுகளின் படைகளையும் ஒன்று திரட்டி முதலில் தலையூர் கோட்டையை மீட்க வேண்டும் - அதனைத் தொடர்ந்து வளநாட்டுப் படையை எதிர் கொண்டு வெற்றிவாகை சூடி, வளநாட்டையும் தன்னகப்

படுத்த வேண்டும் - இந்தத் திட்டத்துடன் காளி மன்னன் காற்றி னும் கடிய வேகத்துடன் தலையூர்ப் பாதையில் போய்க்கொண் டிருந்தான். சங்கர் காயமுற்றானே தவிர, கொல்லப்படவில்லை பொன்னரும் இன்னும் போர்க்களத்துக்கு வந்து சேரவில்லை! எனவே அவர்களை எதிர்த்து வீழ்த்திட தலையூர்க் கோட்டைக் குச் செல்வதே சரியென்று காளி மன்னன் கருதினான். அவன் கருத்தறிந்தது போல குதிரையும் - நாணில் அழுந்திக் கிளம் பும் அம்பு போல வேகங்காட்டிச் சென்றது!

சங்கரை மெய் சேர அணைத்தபடி வீரமலை, தரையில் சாய்ந்தான். கண் கட்டி விளையாடும் சூதாட்டப் பலகையில் வீசப்பட்ட கூரிய முட்களைப்போல, காளி மன்னன் விடுத்த அம்புகள், சூதறியாத சூரன் வீரமலையின் உடல் முழுதும் குத்தித் தொத்திக்கொண்டிருந்தன. நெற்றியில் தைத்த அம்பின் வழியாக ரத்தம் குபுகுபுவெனப் பெருகிக் கொண்டிருந்த நிலையிலும் சங்கர், வீரமலையின் உயிர் அமைதியாகவும் - அஞ்சாத் தன்மையுடனும் பிரிந்திடும் காட்சி கண்டு பதறிப் போனான்.

பாட்டன் பூட்டன் காலத்திலிருந்து தங்கள் குடும்பத்தில் ஒன்றிக் கலந்து வாழ்வின் உயர்வு தாழ்வுகளில் சமபங்கு ஏற்று உண்மையாகப் பழகிய சோழன் தோட்டி குடும்பத்தின் வழித் தோன்றலாம் வீரமலை, தனது மடியில் சவமாகப் படுத்திருக் கிற காட்சியை சங்கரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பொன்னர் சங்கர் என இரண்டு சகோதரர்களில்லை, வீர மலையையும் சேர்த்து மூன்று சகோதரர்கள் என எண்ணிப் பெருமைப்பட்டவர்கள் அல்லவா? அந்த மூவருக்கும் தங்கை யாகத்தானே அருக்காணி விளங்கினாள் - அவர்களில் ஒரு சகோதரன் இதோ சவமாக! போர்க்களத்தில் உயிர் துறந்து புகழின் உச்சியில் ஏறிவிட்ட புலிப் போத்தாக!

''வளநாட்டுத் தளபதியே! எங்கள் வாழ்வில் இணைபிரி யாத உடன் பிறப்பே! என்னைக் காத்திட உன்னைத் தந்துவிட் டாயா? களத்தில் காயம்பட்டுவிட்ட நான் எதற்காக உயிர் வாழவேண்டுமென நீ நினைத்தாய்? போரில் புண் பெற்ற பின் னர் வாழ்வது வீரர்களுக்கு அழகோ? முதுகில் காயம்பட்டால் தானே மானப்பிரச்சினை - நெற்றியில்தானே காயம் என்று என்னால் மனநிறைவு கொள்ள முடியவில்லையே! எனக்கு உயிருக்கு உயிராய் - எங்கள் குடும்பத்துக்கு அரணாய் - பாதுகாப்பதில் பத்து மாதம் சுமந்த தாயாகவும் - பண்பு போதிப்பதில் பற்றுக் குறையாத் தந்தையாகவும் - பயிற்சி

யளிப்பதில் குருநாதனாகவும் விளங்கி, நண்பனுக்கு நண்ப னாய், சகோதரனுக்குச் சகோதரனாய்த் திகழ்ந்த வீரமலையே போய்விட்ட பிறகு எதற்காக நான் வாழ வேண்டும்? அதுவும் நெற்றியில் பட்ட காயத்துடன்? எங்கள் எதிரி காளி மன்னன் எங்கோ ஓடித் தொலைந்துவிட்டான் போர்க்களம் விட்டு புறமுதுகு காட்டி! களத்தில் பெற்ற வெற்றியினைக் கொண் டாட இந்தப் பெரும் வெற்றிக்குக் காரணமான வீரமலை இல் லையே. என் செய்வேன்! எப்படி இந்த இழப்பைத் தாங்கிக் கொள்வேன்!'' என்று கதறினான் சங்கர்! போர்க்களத்தில் மாண்டு கிடக்கும் வீரமலையின் மீது விழுந்து அழுவதற்கு அவனுக்கு ஒரு மனைவியில்லாத குறையைப் போக்குவது போல அவனது உடலைத் தழுவிக் கொண்டு புலம்பினான் சங்கர்!

ஒரு வீரவேங்கையின் களச்சாவுக்காக கண்ணீரை அபி ஷேகித்துக் கொண்டிருந்த சங்கர், திடீரெனத் தனது சோகத்தை உதறிவிட்டு எழுந்து நின்றான். நெற்றியில் தைத்திருந்த பகை யாளியின் கணையைத் தானே இழுத்துக் கீழே எறிந்தான். வீர மலையின் உடலைச் சுற்றி வளநாட்டு வீரர்கள் சோக உருவங் களாக நின்று கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்து சங்கர் சொன்னான் —

''எங்களில் ஒருவராக இருந்த - இல்லை! இல்லை! நம்மில் ஒருவராக இருந்த வீரமலை வீர மரணமடைந்த இந்த இடத் துக்கு ''வீரமலை'' என்று பெயர் சூட்டுகிறேன். வீரப்பூர் காட்டையொட்டிய இந்தப் பகுதி இனிமேல் வீரமலையென்றே அழைக்கப்படட்டும்!''

இதைச் சங்கர் கூறி முடிப்பதற்குள்ளாக,''வீரமலை வாழ்க!'' என்ற முழக்கத்தை வளநாட்டு வீரர்கள் உணர்ச்சி பொங்கிட எழுப்பினர்.

''வீரர்களே! நீங்கள் அனைவரும் வளநாடு திரும்புங்கள்! அண்ணன் பொன்னரிடம் போர்க்களச் செய்தி சொல்லுங்கள்! தலையூர்க் காளி தப்பியோடித் தலைநகருக்குப் போய்விட்டான் எனபதையும் கூறுங்கள்! இப்போது நாம் பெற்றிருப்பது தற் காலிக வெற்றிதான்! நிலையான வெற்றிபெறத் தலையூர்க் காளியை வீழ்த்த வேண்டும்! இனியும் அவனை உயிருடன் விடு வதற்கு காரணமே இல்லை! அண்ணன் பொன்னர், என்ன திட்டங்கள் வகுத்துக்கொண்டிருக்கிறாரோ தெரியவில்லை! ஒரு வேளை அவர் வகுக்கும் போர் முறைக்கு மேலும் வீரர்

கள் தேவைப்படக்கூடும்! ஆகையால் நீங்கள் அனைவரும் வள நாடு நோக்கித் திரும்புவதுதான் நல்லது. என்னுடன் நாலைந்து வீரர்கள் இருந்தால் போதுமானது! தலையூர்க் காளியைத் தொடர்ந்து தலைவனில்லாத களத்தில் நிற்க அஞ்சிய தலையூர் வீரர்களும் ஓடிப் போய்விட்டனர்! அதனால் என்னுடன் நாலைந்து பேர் இருப்பதே போதுமானது! நானும் அவர்களும் வீரமலைக்கு இறுதிச் சடங்குகளை இங்கேயே நடத்தி விடு கிறோம்!''

தங்கள் அரசனின் ஆணை கேட்டுத் துணைத் தளபதிகளும், வீரர்களும் வளநாட்டுக்குத் திரும்பி பெரிய மன்னன் பொன்ன ரிடம் போய்ச் சேர சம்மதித்துப் புறப்படத் தயாராயினர். அப் போது இரண்டு வீரர்கள் வேறொரு பகுதியில் விழுப்புண் பட்டு வீழ்ந்து பிணமாகிச் சிதறுண்டுபோன வையம்பெரு மானின் உடலைத் தூக்கிக் கொண்டு அங்கே வந்தனர்!

''வையம்பெருமான்! நீயும் வீர மரணமடைந்து விட்டாயா?'' என்று தனது நெஞ்சில் ஓங்கி அறைந்து கொண்டான் சங்கர்! சிறிது நேர அமைதிக்குப் பிறகு அங்கு அணி வகுத்து நின்ற படையினைச் சங்கர் பார்த்தான். ''இன்னும் புறப்படவில் லையா?'' என்ற கேள்விக்குறியாக இருந்தது அந்தப் பார்வை! வளநாடு நோக்கிப் படை புறப்பட்டுவிட்டது.

சங்கர் தனக்குத்தானே பேசிக் கொண்டான்! ''நானும் வீர மலையும் வையம்பெருமானும் படைத் தலைமையேற்றுப் புறப் பட்டோம்! என்னைத் தவிர இருவரும் போர்க்களத்தில் சாவை நட்டுப் புகழ் மலையின் உச்சியிலே கொடி ஏற்றி விட்டார்கள்! களச்சாவு, யாசித்துப் பெறவேண்டிய ஒன்று என்பார்கள்! ஆனால் அந்த பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை! மாறாக, நெற்றியிலே புண்பட்டுக் கிடக்கிறேன் - அது மட்டுமா? என்னுடன் வந்த வீரமலையும் வையம்பெருமானும் மாண்ட பிறகு கூட நான் உயிர் வாழ்கிறேன் அதுவும்-எப்படி? மாற் றானின் கணையினால் தாக்குண்டபிறகும் உயிர் வாழ்கிறேன்! இது எனது மான மரபுக்கு ஏற்றதல்ல! வீரமலை எங்கே? என்று அண்ணன் பொன்னர் என்னைக் கேட்பதற்கு முன்பு - வையம்பெருமான் என்ன ஆனான்? என்று மாமா சின்ன மலைக்கொழுந்தார் என்னைக் கேட்பதற்கு முன்பு - இருவர் உயிரைப் பாதுகாக்கமுடியாத நீ அவர்களுக்கும் சேர்த்து படைத்தலைமை வகித்து என்ன பயன் கண்டாய்? என என்மீது பழிசுமத்துவதற்கு முன்பு, நான் என் வாழ்வை முடித்துக் கொண்டாக வேண்டும்!''

சங்கரின் சிந்தனை ஆழமாக மட்டுமல்ல, அகண்ட கடல் பரப்பாகவும் விரிவடைந்துகொண்டே போனது.

''அந்த இரு தளபதிகளுக்கும், இரு தரப்பினைச் சேர்ந்த கணக்கற்ற வீரர்களுக்கும் கிடைத்த வீரமரணப் புகழ் எனக்கும் கிடைத்தாக வேண்டும்! அது தானாக என்னை வந்தடையா விட்டாலும் - நானாக அதைத் தேடிப் போக வேண்டும்.''

சங்கரின் வார்த்தைகள் வச்சிரத்தில் வார்த்தெடுக்கப்பட்ட வலிமையோடும் உறுதியோடும் வெளிப்பட்டன. தன்னைச் சுற்றி நின்ற வீரர்களைப் பார்த்தான். அவர்கள், சங்கரின் சொற்களைக் கேட்டு எதுவும் புரியாத நிலையில் திகைத்துப் போயிருந்தனர்.

''வீரர்காள்! வெற்றி அல்லது வீரமரணம் எனச் சூளுரைத் துப் போருக்குப் புறப்பட்ட நான், உங்கள் போன்றவர்களின் உறுதுணையால் வெற்றி பெற்றேன்! விரட்டி விட்டேன் தலை யூர்க் காளியை! ஆனால் அவன் அடிபட்ட நாகம்! அதை மறக்கவில்லை நான்! அவனை அறவே ஒழிக்கும் கடமையில் எனக்கும் பொறுப்பு உண்டு. ஆனால் களத்தில் காயமுற்றுக் கீழே சாய்ந்த நான் மறவர் குடிப்பெருமைக்கு ஒரு மாசாக வந்து விட்டேன் என்பதை உணருகிறேன்! எனவே வீரமர ணத்தை வலிய ஏற்றுக் கொள்ளத் தயாராகி விட்டேன்!''

சங்கரின் இந்த கர்ச்சனை கேட்டுக் கதிகலங்கிய அந்த வீரர் கள், அவன் காலில் விழுந்து கெஞ்சியவாறு, ''அரசே! அண்ணன்மார் இருவரும் செய்துள்ள சபதத்தை மறந்துவிட்டீர் களா? உங்கள் குருநாதர் ராக்கியண்ணர் கட்டளையை நிறை வேற்றத் தலையூர்க்காளியையும் அவனுக்குத் துணை நின்ற துரோகிகளையும் பழி வாங்குவதாக அன்றைக்குச் செய்த சப தம், நீர் மேல் எழுதிய எழுத்தாக ஆகலாமா? மாயவர் முன் னிலையில் உரைத்த சூளுரையாயிற்றே அது! நினைவில் லையா? அதையெல்லாம் தட்டிக் கழித்து விட்டு தாங்கள் வீரசொர்க்கம் புக வேண்டுமென விரும்புவது சுயநலமாகப்பட வில்லையா?'' எனக் கேட்டு அழுது புலம்பினர்.

''களத்தில் காயம்பட்ட நான், அந்தக் காயத்தை உருவாக்கிய எதிரியை அதே இடத்தில் தீர்த்துக் கட்டியிருந்தால் நான் பெற்ற விழுப்புண்ணுக்குப் பெருமையுண்டு! ஆனால் அவனை நான் தப்பவிட்டு விட்டேனே! ஒரு வகையில் பார்த்தால் அது எனக்குற்ற பெருந்தோல்விதானே! அதனால்தான் எனக்கேற்

பட்ட களங்கத்தைக் கழுவிக்கொள்ள வீர மரணத்தை நான் விரும்புகிறேன்.''

அழுத்தம் திருத்தமாகப் பேசினான் சங்கர்!

''அரசே! எங்களை மன்னித்துக் கொள்ளுங்கள்! ஒரு போர் நடக்கும் போது இடையிலே சில களங்களில் வெற்றி கிட்டாமற் போகலாம்! தோல்வியும் கிடைக்கலாம்! களங்களில் ஏற்படும் தொய்வு மொத்தமாகப் போராட்டத்தில் ஏற்பட்ட தோல்வியென்று கணக்கிடுவது சரியாகுமா? இதைவிட முக்கியமாக அன்றெடுத்த சபதத்தை நிறைவேற்றுவதென்பதில் தங்களுக்கு அக்கறையில்லாமற் போகலாமா? எவ்வகையிலும் தாங்கள் வீரமரணத்தை இப்போதே வலுவில் தழுவுவது என்பதை எங்களால் ஏற்றுக்கொள்ளவே இயலாத ஒன்று அரசே!'' என்று துணைத் தளபதியொருவனும் அவனுடனிருந்த சில வீரர்களும் மன்றாடும் தோரணையில் சங்கருக்கு வேண்டுகோள் விடுத்து, அவன் எடுத்த முடிவை மாற்றிக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டனர். சங்கரோ, அவர்களின் வேண்டுகோளைப் பிடிவாதமாக மறுத்துப் பேசினான்.

''சபதத்தை நிறைவேற்ற என் அண்ணனால் இயலாது என்று என்னை நம்பச் சொல்கிறீர்களா? நிச்சயம் அவர் சபதத்தை நிறை வேற்றி முடிப்பார்! ''இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண்விடல்'' என்ற குறளுக்கேற்ப அந்த நாள் சபதத்தை முடிக்கக் கூடிய ஆற்றலும், அறிவும், வீரமும் தீரமும் யாருக்கு உண்டென்பதும் - அவரிடமே அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட வேண்டுமென்பதும் - எனக்கு நன்றாகவே தெரியும்! அந்த வெற்றி வீரர் அண்ணன் பொன்னராகத்தான் இருக்கமுடியும்! இருக்க வேண்டும்! துணைக்கு வந்த தளபதி வீரமலையை இழந்தேன்! வையம்பெருமானை இழந்தேன்! எதிரியைத் தப்பி ஓடுமளவுக்கு விட்டு விட்டு என் நெற்றியிலும் காயத்தை தாங்கியவனாக ஆகிவிட்ட எனக்கு இனி ஒருக்கணமும் உயிர் வாழ விருப்பமில்லை!''

சங்கர் முடிவாகச் சொன்ன பதிலைக் கேட்டு அவனைச் சுற்றி நின்றவர்கள் ''அரசே!'' என அதிர்ந்து போய்க் கூவி விட்டனர்!

''ஆளுக்கு ஆள் அறிவுரைகளைப் பரிமாறிக் கொள்ளவோ - தர்க்கவாதம் செய்துகொள்ளவோ நேரமில்லை! சின்னஞ்சிறு பிள்ளைப் பருவத்தில் காலில் கிண்கிணி அணிந்து ஐந்து பகை

நாடுகளை எதிர்த்து வென்ற தலையாலங்கானத்துச் செறு வென்ற நெடுஞ்செழிய பாண்டியனின் வீரத்தை எண்ணிப் பார்க்கிறேன்! இலங்கையைப் படை கொண்டு வென்ற இராஜ ராஜ சோழனையும், கடாரம் வரை கப்பற்படை நடத்தி வெற்றிக் கொடிநாட்டிய இராஜேந்திரசோழனேயும் நினைத் துப் பார்க்கிறேன்! இமயமலைப் பகுதியில் குயிலாலுவம் வரை சென்று கனக விசயரை வென்று கண்ணகி தேவிக்குச் சிலை வடிக்கக் கல்கொண்டு வந்த சேரன் செங்குட்டுவனின் வரலாற் றையும் மறந்தேனில்லை! அந்த வீரர்கள் பிறந்து வாழ்ந்து புகழ் செதுக்கிய இந்தத் தமிழ் மண்ணில் முதுகிலே காயம் பட்டல்ல, நெற்றியிலே பட்ட விழுப்புண்ணுக்காக நாணிய ஒருவன், போர்க்களத்தில் தன்னுயிரை மாய்த்துக்கொண்டு வீரமரணம் அடைந்தான் - அவன் பெயர் சங்கர்! பொன்னரின் தம்பி - குன்றுடையாரின் மகன் - கோளாத்தாக் கவுண்டரின் பேரன் - கொங்கு மண்டிலத்து மைந்தன்! - என்று எதிர்கால வரலாற்று வரிகள் ஒளிவிடுமல்லவா? அது போதும் எனக்கு!'' என்றவன் போர்வாளைத் தன் கையில் ஏந்திக் கொண்டான்.

துணைத் தளபதியும் மற்றவர்களும் துடித்துப்போய்,''வேண் டாம் அரசே! வேண்டாம்!'' என்றலறினர்.

''இதுவரையில் பேச்சு! இனி என் ஆணைக்கு அடங்கி நடப் பதே உங்கள் கடமை!'' என்று கடுங்கோபமாகக் கூறினான் சங்கர்! அவர்கள் அச்சடித்த பதுமைகளாகி விட்டனர்.

> அப்போ குதிரைமேல் போட்டிருந்த குங்குமப் பட்டெடுத்து
> பட்டை விரித்தெடுத்து சங்கர் பாங்காய் மடித்து வைத்து,
> பூமியிலே நாமிறந்தால் பொன்மேனி புழுதி படியுமென்று,
> பாறை மேல் பட்டு அதைப் பாங்காய் விரித்து வைத்து,
> அதன்மேல் வலது காலை ஊன்றி வைத்து இடது கால் மண்டியிட்டு.........

பாறையொன்றின் மீது பட்டினை விரித்து அதிலேறி அமர்ந்து கொண்ட சங்கர் ''வாழ்க வளநாடு!'' என மூன்று முறை முழங்கினான். ''வளநாட்டு மண்ணின் பெருமை காத்திடவும் உரிமை நிலைநாட்டிடவும் இன்னுயிர் ஈந்த எனது மக்களுக்கும் வீரர்களுக்கும் தலைதாழ்ந்து வணக்கம் செலுத்துகிறேன்'' என்று கம்பீரக் குரலெடுத்து உரைத்திட்டான். பின்னர் ஓங்கிப் பிடித்தான் போர்வாளை! வானத்தை நோக்கி நிமிர்ந்தான்! தலையைப் பின்னோக்கிச் சாய்த்தவாறு மார்பகத்தில் அணிந்தி ருந்த கவசத்தைத் அவிழ்த்துக் கீழே எறிந்தான்! கையிலிருந்த

போர் வாளைத் தனக்கு மேல் விண்ணோக்கி எப்படியோ ஒருவகைத் திறனோடு சுழற்றி வீசினான்!

அவன் வீசிய முறை விசித்திரமாக இருந்தது! மேலே சென்ற அந்த வாள் கார்காலத்து மின்னல் இறங்குவது போலக் கீழே இறங்கியது! சற்றும் அதன் குறி தவறிப் போய்விடாதவாறு சங்கர், தனது நெஞ்சை நிமிர்த்தி அந்த வாளை ஏந்திக் கொண்டான்! நெஞ்சுக்குள் நுழைந்த வாளை அவன் புன்னகை தவழப் பார்த்த அந்தப் பார்வையிருக்கிறதே, அதைத்தான் வீரப் பார்வைக்கு இலக்கணமாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்னர் பேச்சில்லை - மூச்சில்லை! சங்கர் அந்தப் பாறையில் சவமாகச் சாய்ந்தான்! அந்தக் காட்சியைக் கண்ட வீரர்களோ நிற்கும் பிணங்களாகத் தோற்றமளித்தனர்.!

சண்டமாருதமெனச் சுழன்ற சகோதரர் இருவரில் ஒருவனின் வாழ்வு முடிந்துவிட்டது! வீரத்தின் நிலைக்களமாய் விளங்கியவன், அந்த வீரத்துக்குக் கடுகிலோர் பாதியளவு களங்கமும் விளைவதைப் பொறுத்துக்கொள்ள முடியாமல் அந்த படுகளத்தில் என்றும் அழியாத சரித்திரத்தைத் தீட்டிவிட்டான்! அதுவரையில் காற்றின் அசைவில் சலசலத்துக் கொண்டிருந்த அந்தக்காட்டு மரங்கள் கிளைகளையோ இலைகளையோ கூட அசைக்காமல் அமைதி காட்டி நின்றன! களத்தில் இறையுண்டு களித்திட வந்த காகம், கழுகு, பருந்து, நாய், நரிகள் அனைத்தும் ஏதோ ஒரு திகைப்பில் அவை அவைகள் இருந்த இடத்திலேயே குந்திக் கொண்டன!

கொங்குச் சரித்திரப் புத்தகத்தின் ஒரு வீரதீரப் பொன்னேடு படிக்கப்பட்டு முடிக்கப்பட்டு விட்டது!

அரண்மனை எரிந்து தணிந்து - அதற்குள்ளேயிருந்த அண்ணியார்களும் வெந்து மடிந்து - அந்த நெருப்பை விடக் கடும் நெருப்பாக உருமாறி வந்துகொண்டிருக்கிறாள் தலையூரை நோக்கி வீரப்பூர் காட்டு மார்க்கத்தில் அருக்காணித் தங்கம்!

"பட்டு நிலம் தூர்ந்து வர அம்மா
பாடகங்கால் சிலம்பு கொஞ்ச
முத்து நிலம் தூர்ந்து வர அம்மா
முன் நெற்றி வேர்த்துதிர
பவழத்திருமேனியிலே 'கண்ணீரைப்
பக்கமெலாம் சோரவிட்டு"......................

அருக்காணித் தங்கத்தின் கன்னங்களில் உருண்டு வழியும் கண்ணீர்த்துளிகள் உலைக்களத்தில் காய்ச்சப்பட்ட இரும்புப் பிழம்பின் துண்டங்களைப் போலவே தரையில் விழுந்து தெறித்தன!

அவளும் அவளது தோழிகளும் போர்க்கோலம் பூண்டு நடந்து வரும் அந்தக் காட்டு வழியில் கல்லும் முள்ளும் நிறைந்த ஓர் ஒற்றையடிப்பாதை! அந்தக் குறுக்கு வழிப்பாதையில் கோதையர் பட்டாளம் கோபாக்கினி பொழிந்தவாறு வந்து கொண்டிருந்தபோது - விரல்களில் ரத்தம் சொட்டச் சொட்ட ஒரு குதிரையிலமர்ந்து மாந்தியப்பன் எதிரே விரைந்து வந்தான். அந்தக் குதிரையில் அவனுக்கு முன்னால் மரகதப் பச்சை மாணிக்கக்கிளியுள்ள வெள்ளிப்பேழை வைத்துக் கட்டப்பட்டிருந்தது! மாந்தியப்பனின் கண்களில் அருக்காணித் தங்கம் பட்டு விட்டாள்!

வேட்டாம்பட்டி அ. பழனிசாமி தொகுத்த "பொன்னர்-சங்கர் வரலாற்றில் காணப்படும் புலவர் பிச்சையின் பாடல் இது!



# படுகளம் நோக்கி - பாவை!

## 58

போர்க்களமாம் படுகளத்தைவிட்டு உயிர்பிழைக்க ஓடிய போதே, மரகதப்பச்சை மாணிக்கக்கிளியை மாந்தியப்பன் அங்கிருந்து எடுத்துக்கொண்டு விட்டான். உயிரைத் துச்ச மெனக் கருதி இருதரப்பு வீரர்களும் மோதிக் கொண்டிருக்கும் அந்தக் களத்தில் மாந்தியப்பனைப் போன்ற ஒரு வஞ்சக நெஞ்சக் கோழை மனிதன் நடத்துகிற திருட்டைப்பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள். அதனால் அவனது வேலை அவனுக்கு எவ்வித இடையூறுமின்றி எளிதாக இருந்தது.

வளநாட்டு வீரர்களிடமிருந்து உயிர் தப்பி ஓடிவந்தான் எனினும் - எதிரே வளநாட்டு வீராங்கனைகள் அருக்காணித் தங்கத்தின் தலைமையில் படைக்கலன்களுடன் அவனைச் சூழ்ந் திடுவார்கள் என அவன் எதிர் பார்க்கத்தானில்லை!

அவர்களுக்கு முன்னால் தன்னை எதிரியாகக் காட்டிக் கொள்ள அவன் விரும்பவில்லை. எதிர்ப்பு உணர்வுகளை அறவே தனது உள்ளத்திலிருந்து அகற்றி விட்டு, அருக்காணி யின்மீதும், அவளது அண்ணன்மார்கள்மீதும் அன்பைப் பொழி பவனாக நடித்தால்தான் அந்த நேரத்திற்குத் தப்ப முடியும் என்பது அவன் திடீர்த் திட்டம்!

அருக்காணியும் அவளது தோழிகளும் அவன்மீது இரக்கம் காட்டுகிறவர்களாகத் தோன்றவில்லை. கம்பீர நடை போட்ட வாறு அவன் அமர்ந்திருந்த குதிரையைச் சூழ்ந்து கொண்டு எரிக்கும் விழிகளால் அவனையே உற்று நோக்கினர்.

‘‘ஏன் என்னை இப்படிப் பார்க்கிறீர்கள்? நெருப்புக் கண் களால் நீங்கள் என்னைச் சுட்டெரித்துப் புடம் போட்ட தங்க மாக்குவதற்கு முன்பே - பங்காளிப் பகையினால் கொங்கு வேளிர் குலத்துக்கு எவ்வளவு பெரிய வேதனை ஏற்பட்டு

விட்டது என்ற கவலையே என்னைச் சுட்டெரித்துப் பத்தரை மாற்றுத் தங்கமாக்கிவிட்டது. அதனால்தான் படுகளத்திலிருந்து பொன்னரைத் தேடிக் கொண்டு வேகமாக ஓடி வருகிறேன். பொன்னரைப் போர்க்களத்துக்கு அனுப்பிவிட்டு, அவருக்குத் துணையாக நானும் கிளம்புவதற்கு முன்பு - உனக்குரிய இந்தக் கிளியை உன்னிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென்பதும் எனது ஆசை! நல்லவேளையாக நீயே எதிரில் வந்துவிட்டாய்! இதோ ஏற்றுக்கொள், மரகதப்பச்சை மாணிக்கக் கிளியை!'' என்று பல்லை இளித்துக்கொண்டு கூறியவாறு அந்த வெள்ளிப் பேழையைக் குதிரையிலிருந்தவாறு அருக்காணித்தங்கத்தை நோக்கி நீட்டினான்.

ஆனால் அவளோ அதனைப் பரபரப்புடன் வாங்கிப் பரிவுடன் அவனுக்கு நன்றி கூறுவாள் என அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக - தனது கையிலிருந்த வாளினால் அவன் நீட்டிய அந்தக் கிளிப் பேழையை ஓங்கி அடித்தாள். அடித்த வேகத்தில் பேழை தூளாயிற்று! தங்கக்கூண்டு சிதறிப்போய் தரையில் இறைந்து நிறைந்தது! மரகதப்பச்சைக் கிளி மட்டும் முழு உருவத்துடன் தனியே போய் விழுந்தது! அந்தக் கிளியை எடுத்து அருக்காணித்தங்கம் தன் கையில் வைத்துக்கொண்டாள்!

செம்பகுலன் கொண்டுவந்தது போலிக் கிளியல்ல, ராக்கியண்ணர் தனது மரண சாசனத்தில் குறிப்பிட்டிருந்த அதே அசல் கிளிதான் என்ற நம்பிக்கை அருக்காணிக்கு ஏற்பட்டது! அதற்காக அவள் மாந்தியப்பனை நம்பத் தயாராக இல்லை!

''எல்லாம் தனக்கேயிருக்க வேண்டும், எதிரிக்கு இடம் கொடுத்தாலும் பரவாயில்லை - தனக்குப் பிடிக்காதவன் தம்பியாகவோ அண்ணனாகவோ இருந்தாலும் கவலையில்லை - அவனுக்குத் துரோகம் செய்யத் தயங்கமாட்டேன் என்று கங்கணம் கட்டிக்கொண்டு காட்டிக் கொடுப்பதில் உமக்கும் உமது தந்தைக்கும் என்னதான் தனி ருசியோ? தலையூர்க்காளி வள நாட்டுக்கு எதிரிதான் என்றாலும் - சொந்த நாட்டுக்காரர்களாகிய உங்களுக்கிருக்கும் தீய எண்ணம், ஒரு குலத்தில் பிறந்த உங்களுக்கிருக்கும் சூது மதி, ஏன் - ஒரு குடும்பத்தில் உதித்த பங்காளிகளாகிய உங்களுக்கிருக்கும் பழிவாங்கும் மனப்பான்மை - அவனுக்கு இல்லை என்றுதான் சொல்லவேண்டும்! அப்படியே இருந்தாலும், அது உங்களால் அவன் உடலில் சிறுகச் சிறுக ஏற்றப்பட்டிருக்கும் விஷமேயாகும்!'' எனச் சீறினாள் அருக்காணித்தங்கம்.

''இன்னுமா என்னை நம்ப மறுக்கிறாய்? இந்த உலகமே இப்படித்தான்! திருந்தியவனை ஏற்றுக் கொள்ளாது!'' எனக் குழைந்தான் மாந்தியப்பன். அவனது அப்போதைய தேவை, அந்த ஆத்திரம் நிறைந்த பெண்களிடமிருந்து எப்படியாவது தப்பித்துக்கொள்ள வேண்டுமென்பதுதான்!

''இதோ பார், வீரப்போரில் என் விரல்களைக்கூட இழந்து விட்டேன்! இனியும் தலையூரான் பக்கம் இருப்பது நமது குலத் துக்குச் செய்யும் துரோகம் என்றுதான் ஓடோடி வந்திருக் கிறேன்!''

''முட்களை இழந்துவிட்ட ஊமத்தங்காய், விஷத்தையுமா இழந்துவிடுகிறது? அதுபோலத்தான் விரல்களை இழந்துவிட்ட நீ, விரோத உணர்வையும் இழந்துவிட்டிருப்பாய் என நாங்கள் நம்புவதும் ஆகிவிடும்!''

''அய்யோ!, அருக்காணித்தங்கம் - நமது கொங்கு வேளா ளர் குலதெய்வத்தின்மீது ஆணை! என்னை நம்பு! நான் இப் போது திருந்திய மாந்தியப்பன்!''

''சே! குலத்தைப் பற்றிப் பேசவும், குலதெய்வத்தின்மீது ஆணையிடவும் உனக்கென்ன தகுதியிருக்கிறது? உனக்கும் எனக்கும் என்ன உறவு முறையென்று தெரிந்திருந்தும் - சுட் டெரித்த காமத்தீயில் கருகிப்போன பிண்டமாக வரைமுறை கடந்து என்னிடம் நடந்து கொள்ளத் துணிந்தாயே, செல்லாண்டி யம்மன் கோயில் திருவிழாவில் — நினைவிருக்கிறதா? அல்லது எத்தனையோ விகாரமான நித்திய நிகழ்ச்சிகளில் அதுவும் ஒன்றாக மறந்துபோய்விட்டதா? சுயநலத்துக்காக - சுகபோக வாழ்வுக்காக - குடும்பத்தைக் குலைத்த கோடரிக் காம்புகளாக மாறிவிட்டதுமன்னியில், பங்காளிப் புகைச்சல் முற்றிப் போய் பழிவாங்கும் பாம்புகளாகப் படமெடுத்தாடும் உனக்கும் உன் தந்தைக்கும் மன்னிப்பு வழங்குவதைவிட முட்டாள்தனம் உல கத்தில் எதுவுமே இருக்க முடியாது!''

அருக்காணியின் கரத்திலிருந்த வாள் அவள் தலைக்கு மேலே உயர்ந்து பளபளத்தது! அவள் கண்களோ தீ ஜுவாலை யைக் கொட்டிக் கொண்டிருந்தன!

''அருக்காணியம்மா, நான் சொல்வதைக் கேள்! நான் இப் படியொரு முடிவுக்கு வந்ததற்கே காரணம் என்ன தெரியுமா? அதைச் சொன்னால் நீ மிகவும் கலங்கிப் போய்விடுவாய்

என்பதினால்தான் சொல்லத் தயங்கினேன். இப்போது அதையும் சொல்லிவிடுகிறேன். நமக்குள்ளே ஒருவரையொருவர் வெட்டி வீழ்த்திக்கொண்டு என்னடா பெரிய வெற்றியென்று விரக்தியடைந்த நான் களத்தை விட்டு வெளியேறிவிட்டாலுங் கூட ஓரிடத்தில் நின்று நடப்பதைக் கவனித்தேன். வையம் பெருமான் வெட்டுண்டு பிணமாக வீழ்ந்ததைக் கண்டேன். அந்த அதிர்ச்சி அடங்குவதற்குள் வீரமலையின் பிணம் விழுந்தது. இறுதி வெற்றி உன் அண்ணன் சங்கருக்குத்தான் என்றாலும் - களத்தில் தோற்றோடிய தலையூர்க்காளி மன்னன், சங்கரின் நெற்றியை அம்பால் துளைத்துவிட்டான். அதனால் சங்கரும் உயிரோடு இருப்பது சந்தேகமே! இந்தப் போரில் என் தந்தை செல்லாத்தாக் கவுண்டரையும் இழந்துவிட்டேன். இத்தனை கொடூர விளைவுகளைக் கண்டபிறகு இந்தக் குலப் பெருமை காத்திட - உறவாடுவதற்கு ஓடோடி வருகிற என்னை வரவேற்பதற்குப் பதிலாக வசைபாடுவது நியாயமா?''

என்னதான் மாந்தியப்பன் பாராங்கல்லொன்று பசுவெண்ணெய் போல உருகுவதாகப் பேசினாலும் அவனையும் அவன் பேச்சையும் அருக்காணி நம்புவதற்குத் தயாராக இல்லை.

''படுகளம் நோக்கிப் போகின்ற இந்தப் பாவையிடம் உன் பசப்பு மொழிகள் எவையும் எடுபடமாட்டா என்பதை அறிந்துகொள்! எனக்குற்றார் உறவினர், அருமை அண்ணன் சங்கர், அஞ்சாநெஞ்சத் தளபதி வீரமலை அனைவரும் காலமாகினர் அல்லது காயமுற்றனர் என்பதை நான் நம்ப வேண்டுமென்பதற்காக உன் தந்தையும் மாண்டுவிட்டதாகக் கதை கட்டுகிறாய்! களம் சென்றார் வீழ்ந்தார் எனும் சோகச் செய்தி கேட்டுச் சோர்ந்து விடுபவள் அல்ல தமிழச்சி என்பதறிந்தும் - எஞ்சியுள்ளோரையும் ஏன், இளம் மழலையையுங்கூட போருக்கு அனுப்பிவைக்கும் புலிக்குணம் கொண்டவள் என்றறிந்தும் - எதற்காக இங்கு நடித்துக்கொண்டிருக்கிறாய்? நடுங்குகிறது உனது தேகம்! ஒடுங்கப் போகிறது உனது உயிர்! காட்டிக் கொடுக்கும் கயவர்கள் வாழ்ந்ததுமில்லை, அவர்களை நாங்கள் வாழவிடப்போவதுமில்லை!''

அருக்காணி போர்வாளை உயர்த்திக்கொண்டு மாந்தியப்பனை நோக்கிப் பாய்ந்தாள். ஆனால் அவன் தனது குதிரையைத் தட்டிவிடவே, அது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவன் உயிரைப் பாதுகாத்துக் கொடுத்தது. தன் வாள்முனையிலிருந்து அவன் தப்பிவிட்டதைக் கண்ட அருக்காணி, தனது தோழிகளுக்கு உடனடியாக ஆணை பிறப்பித்தாள் அவனை வளைத்து வீழ்த்துமாறு!

தோழிகள் ஈட்டிகளையும், வாட்களையும் மாந்தியப்பனை நோக்கி வீசியும், குறி பார்த்தும் ஆவேசமாகப் போர் புரிந்த போது - அவனைச் சுமந்துகொண்டிருந்த குதிரை, வெறித்துக் கொண்டு ஓட ஆரம்பித்தது! அருக்காணியின் தோழிகள் விட வில்லை! துரத்திக் கொண்டே சென்றார்கள். அருக்காணி, மரகதக்கிளியை ஒரு கரத்திலும், வாளை ஒரு கரத்திலும் ஏந்தியவாறு மாந்தியப்பனைத் தனது தோழிகள் வளைத்துத் தாக்குவதைச் சினம் கொப்பளிக்கப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

மாந்தியப்பனின் குதிரை அவனது கட்டுப்பாட்டுக்கு அடங் காமல் திசைமாறி ஓடிற்று! எழும்பி எழும்பிக் குதித்தது! அவனைக் கீழே தள்ளிவிட்டுத் தான் மட்டும் எப்படியாவது தப்பிவிட வேண்டுமென்று தவியாய்த் தவித்துத் தடுமாறியது! களத்திலிருந்து தான் மட்டும் தப்பி வந்தால் போதுமென்று நினைத்து ஓடி வந்தவனின் குதிரைக்கும் அதே நினைப்புத்தான்!

அருக்காணியின் தோழிகளோ அந்தப் பகுதியின் பாறைகள், புதர்கள், கற்கள், முட்கள், எவை பற்றியும் கலங்கிடாமல் மாந்தியப்பனை வளைத்து வீழ்த்த வேண்டுமென்பதிலேயே குறியாக இருந்தனர். ஒன்றிரண்டு ஈட்டிகள் குதிரையின் விலாப்புறத்திலும், தொடைப்பகுதியிலும் குத்தித் தாக்கவே குதிரை, முற்றிலுமாக மாந்தியப்பனின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டு ஒரு பாறையின் உச்சிக்கு ஓடி, அங்கு காலூன்ற இடமின்றி அவனோடு சேர்ந்து கீழே உருண்டது!

குதிரையின் பிணம் — அதைக் கட்டிப் பிடித்துக்கொண்டு மாந்தியப்பனின் பிணம்!

பாறையின் கீழே குருதி வெள்ளத்தில் மிதக்கும் மாந்தி யப்பனின் கண்கள் இறுதியாக மூடிக்கொண்டதைப் பார்த்துக் கலகலவென சிரித்தாள் அருக்காணித்தங்கம்! அந்தச் சிரிப்பின் ஒலி அங்குள்ள பாறைகளில் - மரங்களில் எதிரொலித்தது.

அந்தச் சிரிப்பினூடே, ஒரு கேள்வி! மாந்தியப்பன் சொன் னது ஒருவேளை உண்மையாக இருக்குமா? தளபதி வீரமலை வீர மரணம் அடைந்திருக்கக் கூடுமா? வையம்பெருமானும் இந்த வையம் விட்டுச் சென்றாரோ? அய்யகோ, எனது சின்ன அண்ணன் சங்கருக்கு நெற்றிலே அம்பு துளைத்துவிட்டதா? இவையனைத்தும் உண்மையாக இருந்தால் நான் என்ன செய் வேன்? பெரியண்ணா பொன்னரையும் காணவில்லையே? அருக்காணி, தனது தோழிகளுடன் படுகளம் நோக்கி நடக்க லானாள்!

*வாள் வீரனைத் தேடி உத்தமி வீரமலை வனத்தில்*
*வாரபோது*
*ஆனை நெருஞ்சி முள்ளு அண்ணா அதிலே அடிவைத்து*
*வாராளிப்போ!*
*கோரிரண்டம் முள்ளு அந்த வனத்தில் குறுக்கே*
*கணவாயாம் —*
*சில்லென்ற காடும் செடியும் வனாந்திரமும்*
*கல்லும் மலையும் அண்ணா அதைக் கடக்கவென்றால்*
*வெகுதூரம்!*
*எண்ணாது எண்ணியேதான் உத்தமி புண்ணாய் மனது*
*நொந்து,*
*நான் ஒருத்தி வழிநடப்பதற்கு நீங்கள் உற்ற துணை வர*
*வேண்டும்*
*நான் பெண் பிறந்த பேதையெனக்கு பெரிய துணை*
*வரவேணும்!*
*நான் வனத்தில் நடப்பதற்கு நீங்கள் வாய்த்த துணை*
*வரவேணும்!*
*நான் காட்டில் நடப்பதற்கு நீங்கள் கடிய துணை*
*வரவேணும்.''*

அருக்காணியுடன் அவள் தோழிகளும் அயர்வறியாது தொடர்ந்து நடந்தனர் படுகளம் நோக்கி!

அண்ணியார்களைப் பறிகொடுத்த தங்கை அருக்காணி, வீரப்பூர் படுகளம் நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறாள் - வீரப்பூர் களத்திலோ அன்புத் தம்பி - ஆருயிர்த் தம்பி - அணுப்பொழுதும் தன்னை விட்டு அகலாத அருமைத் தம்பி - மானமொன்றே நல்வாழ்வெனக் கொண்டு வாழ்ந்த மறவேந்தர், அவர் வழி வந்தோர் பூனைகள் அல்லர் - புலிநிகர் தமிழ் மாந்தர் எனும் இலக்கணத்திற்கொப்ப வீரமரணத்தை வலுவில் அழைத்து வாரித் தழுவிக்கொண்டான் என்ற செய்தி, இவையனைத்தும் வழியிலே கிடைக்கிறது; போர்ப்படையுடன் வந்துகொண்டிருக்கும் பொன்னருக்கு!

''தம்பி, தங்கை யாராயினும் பிறகு வந்து பார்த்துகொள்ளலாம் - முதலில் தலையூர் நோக்கிச் செல்லட்டும் படைகள்!'' என ஆணை பிறப்பித்தான் பொன்னர்!

அதற்கிடையே தலையூரில் காளி மன்னரின் ஆதிக்கத்திற்குட்பட்ட பதினெட்டு நாட்டுப் படைகளும் தலையூர் நகருக்கு வந்து குவிந்தன.

முதலில் தலையூர் தலைநகரைக் காப்பது! பொன்னர் கொண்டு வரும் படைகளின் முற்றுகையைத் தகர்ப்பது! அதைத் தொடர்ந்து பொன்னரையும் அவனது படையையும் புறங்காட்டி ஓடச் செய்வது! ஓடும் பொன்னரை விடாமல் துரத்துவது! அவனை யும் வீழ்த்துவது! வளநாட்டு நிலப்பரப்பு முழுவதையும் தலை யூர் கொடிக்குக் கீழே கொண்டுவருவது!

பதினெட்டு நாட்டின் தலைவர்களும் கூடிப் பேசி, பொன்ன ரைப் பொறியில் மாட்டவைக்கும் போர்த்திட்டத்தை வகுத்தனர்.

''பழிக்குப் பழி!'' என்ற ஒரே வெறியுடன் பொன்னரின் படை தலையூர் நோக்கி!

தணலில் தங்கமெனப் பாவையாள் ஆருக்காணி, படுகளம் நோக்கி!

புலவர் பிச்சையின் - அண்ணன்மார் சுவாமி பாட்டி லிருந்து.



# தலையூர்ப் படுகளம்!

## 59

*''பூத்தமரம் அத்தனையும் உத்தமியின் கண்ணீரைப் பார்த்து பூ உதிர்ந்து போய்விடுமாம்! காய்த்த மரம் அத்தனையும் கன்னிகையின் கனல் விழியைப் பார்த்து காய் உதிர்ந்தே போய்விடுமாம்!*

*பழுத்த மரம் அத்தனையும் தங்கை அருக்காணி துயர்பார்த்து பழம் உதிர்ந்தே போய்விடுமாம்!*
*(அங்கே) கூகை குளறுதம்மா கொடும்பாம்பு சீறுதம்மா!*
*கூகையென்றும் பாராமல் குறிஞ்சி வனம்தான் பார்த்து*
*மூங்கில் வனம் பார்க்க உத்தமி மிதித்தேறி வாராளே!*
*(அதிலே) மூங்கில் நெறுநெறுங்க முதுகரடி அபயமிட*
*எண்ணாது எண்ணியே என்ன் செய்வாள் நல்லதங்கம்?''*

படுகளம் நோக்கித் தோழியருடன் அருக்காணித்தங்கம் ஆவேசமாக நடந்துகொண்டிருக்கும்போது, பொன்னரின் படையை எதிர்க்கத் தலையூர் தயாராகிக் கொண்டிருந்தது. காளி மன்னன் விடுத்த தாக்கீதையடுத்து அவனுக்குக் கட்டுப்பட்ட பதினெட்டு நாட்டுப் படைகளும் தலையூரில் வெள்ளம் புகுந்தது போல் புகுந்துவிட்டன. பொன்னரின் முற்றுகையை எவ்வாறு தகர்க்க வேண்டும். எவ்வாறு பொன்னர் படையைத் துரத்தியழிக்க வேண்டும், என்ற திட்டங்களை வகுத்துக்கொண்ட பதினெட்டு நாட்டுத் தலைவர்களும் தங்கள் தங்களின் அணி வகுப்புகளுக்குத் தலைமை வகித்து அமராவதி நதிக்கரையின் நெடுகலும் படைகளை நிறுத்தி, தென்பகுதிக் கரையில் பொன்னர் படை வரும் பொழுதே அதனை அடியோடு அழித்துப் பிணங்களை அமராவதி ஆற்றில் தெப்பங்களாக மிதக்க விட வேண்டுமெனச் சூழ்ச்சி வகுக்கப்பட்டது. தலையூர்க்காளி வகுத்துள்ள போர் வியூகத்தைப் புரிந்துகொண்ட பொன்னர், தனது படை முழுவதையும் அமராவதிக் கரையில் கொண்டுபோய்க் குவிக்காமல் ஒரு பகுதியை மட்டும் ஆற்றங்கரை முற்றுகைக்கு அனுப்பி வைத்தான்.

அமராவதி ஆற்றில் தண்ணீர், கரை மோதிக்கொண்டு ஓடியது. கடந்து வருவதற்கென இருந்த நீண்ட நெடிய மரப் பாலங்களைத் தலையூர்க்காரர்கள் திட்டமிட்டுத் தகர்த்தெறிந்து விட்டனர். ஆற்றில் இறங்கி நீச்சலடித்துத்தான் அடுத்த கரையை அடைந்து, தலையூருக்குள் நுழைய முடியும். அதற்குள் கரை மேலிருந்து தலையூர்ப் படை வீசும் கணைகளையும், ஈட்டி களையும் சமாளிக்க வேண்டும். அவற்றையும் சமாளித்து ஆற்றையும் கடந்திட வேண்டும். அது மிகக் கடினமான காரியம் என்பதைப் பொன்னர் உணராமல் இல்லை.

இருந்தாலும் சூழ்ச்சியைச் சூழ்ச்சியால்தான் முறியடிக்க வேண்டுமென்று - தலையூர்ப் படைகளின் கவனத்தைத் திருப்பு கிற வகையில், தனது படையின் ஒரு பகுதி வீரர்களை அமரா வதி ஆற்றில் இறங்கி தலையூர் நோக்கி நீந்திச் செல்லுமாறு ஆணையிட்டான். அப்படி நீந்தத் தொடங்கியவர்களை ஆற் றின் வடபகுதிக் கரையிலிருந்த பதினெட்டு நாட்டுப்படைகளும் சுற்றி வளைத்து ஈட்டிகளையும் அம்புகளையும் வீசித் தாக்கி னர். நீச்சலடித்துக் கொண்டே பொன்னரின் படைவீரர்கள் வீசிய ஈட்டிகள் கரையிலிருந்த எதிரிகளைத் தாக்கின. மொத் தத்தில் அமராவதி ஆற்றின் தண்ணீர் செந்நீராக மாறி ஓடிக் கொண்டிருந்தது. பொன்னரின் படைகள் முன்னேறிக் கரை யேறித் தலையூரை நெருங்கி விடக் கூடாது என்பதிலே துடிப் புடன் செயல்பட்ட தலையூர்ப்படைத் தளபதிகளும் தலையூர் மன்னனும் - ஆற்றில் ஒரு போர் நடந்து கொண்டிருக்கும் போதே பொன்னர் வேறு வழியாக தனது மற்றொரு பகுதிப் படையுடன் புயல் வேகத்தில் வருவதைக் கவனிக்கத் தவறி விட்டனர். புரவியிலேறிப் பறக்கும் பொன்னரைத் தொடர்ந்து அவன் வேகத்துக்குச் செல்ல முடியாமல் அவனது படையே கூடத் திணறியது!

பொன்னரின் குறிக்கோள் ஒன்றே ஒன்றுதான்! வளநாட்டை முற்றாக அழித்துத் தனது குலத்தை நாசம் செய்த தலையூர்க் காளியைப் பழி தீர்ப்பது! தலையூரைத் தரைமட்டமாக்குவது! இதனை எதிர்த்துக் குறுக்கிடுவோர் யாராயினும் அவனது வாளின் முன்னே சிதறுண்டு தூளாகிப் போவார்! அமராவதி ஆற்றில் படைகளுடன் இறங்கித் தலையூர்ப் பகுதிக்கு பொன்னர் வருவான் - சுலபமாக வளைத்துப் போட்டு ஆற்று நீரில் அவன் பிணத்தை மிதக்க விட்டு விடலாமென தோள்தட்டிக் கொண்டி ருந்தவர்களை ஏமாற்றி விட்டு பொன்னரின் புரவி வேறு வழி யாகத் தலையூர் நோக்கி அக்கினியாஸ்திரம் போல வந்து கொண்டிருந்தது.

*வட்டமிட்டுத்தான் திரும்பி வருகுதே அப்புரவி
வெட்டுவாத்துறை வழியாய் மதுக்கரையும் தான் கடந்து,
விண்பறந்து - மண்பறந்து - புரவி, மேகமெல்லாம்
தாண்டி வரும்.

தட்டைய நாடும் தாராபுர நாடும்
பள்ளிப் பொதிநாடு பருத்திப் பொதிநாடு
வெத்திநாடு வேங்கலநாடு இவையெல்லாம் வெட்டியே
சங்கரித்து

ஆத்தூரு பின்னம் அடுத்த பவுத்திரமும்
காங்கய நாடும் கருவூர்ப் பதிநாடும்
பூந்துறை நாடும் புகழ் பெரிய நன்னாடும்
ஓமல நாடு ஓங்கு புகழ் அறையநாடு
கிழக்கு வளநாடு கீர்த்தியுள்ள மேனாடு
பெரிய மலையாளம் பெருந்துறையும் நன்னாடு
வேடுதளம் உள்ளதெல்லாம்
பொன்னர் வெட்டித் தகர்த்தெறிந்து :

பொன்னர், வெற்றிமேல் வெற்றி குவித்திட்டான். தலையூர்ப் பகுதியில் மட்டும் வெகு தொலைவுக்கு அமராவதி ஆற்றின் கரையில் வேலிபோல் நிறுத்தப்பட்டிருந்த படையை ஏமாற்றி விட்டு, பலதிசைகளிலும் பொன்னர் படை நுழைந்து, அமராவதி நதியின் அக்கரைக்கு வந்துவிட்டது. ஆனால் அதற்காக வளநாட்டு வீரர்கள் பலரை அமராவதி ஆற்றுக்குப் பலி கொடுக்க வேண்டியிருந்தது. வேடுதளங்களில் இருந்து அம்புகளை மழை போலப் பொழிந்து எதிரியைத் திணற அடிக்கக் கூடிய ஆற்றல் பெற்ற தலையூர்ப் படை வீரர்கள், பொன்னரின் பலமுனைத் தாக்குதலைச் சந்திக்க முடியாமல் திக்குமுக்காடிப் போயினர்.

எரிமலை குமுறிக் கொண்டிருக்கிறவரையில் பரவாயில்லை, ஆனால் அது வெடித்துக் கிளம்பி வானோக்கி நெருப்புக் குழம்பை வாரி வீச ஆரம்பித்தபிறகு - அது, தானாக அடங்குகிற வரையில், யார் போய் அதனை அணைத்து நிறுத்த முடியும்! அப்படித்தான் பொன்னர் நடத்திய போர் இருந்தது! குதிரைகளோடு வீரர்கள் அவன்மீது பாய்ந்தனர் - எனினும் பாய்ந்த வேகத்தில் குதிரைகளும் அவர்களும் இருகூறுகளாக வீழ்ந்து மாய்ந்தனர்! அடுக்கடுக்காக பத்து, ஐம்பது, நூறு எனக் கணைகள் பொன்னரைச் சூழ்ந்து பறந்து வந்தன எனினும், அவை வந்த மாத்திரத்திலேயே பொன்னரின் வாள் பட்டுப் பொடிப் பொடியாகப் புழுதியில் மறைந்தன! வந்து வந்து தாக்கும்

*(புலவர் பிச்சையின் ''அண்ணன்மார் சுவாமி'' பாடலில் - சிறு திருத்தங்களுடன்)*

வாட்களையும் ஈட்டிகளையும், ஏதோ வரவேற்பு விழாவில் தன்மீது பெய்திடும் மலர்களைப்போல அலட்சியப்படுத்தியவாறு சுழன்று கொண்டிருந்தான் அந்த மாவீரன் பொன்னர்!

குன்றுடையார் குடும்பத்துக்கு இழைக்கப்பட்ட கொடுமை - தந்தையின் வேதனை — தாயாரின் துயரம் - மாயவருக்கு நேராக ராக்கியண்ணருக்குத் தந்த வாக்குறுதி - ஏற்றுக் கொண்ட சூளுரை - தம்பி சங்கரின் அன்பு முகம் - வீரமலையின் திரு வுருவம் - வையம்பெருமானின் வீழ்ச்சி - குப்பாயி மறைவு - அருக்காணியின் கண்ணீர் - இத்தனையும் பளீர் பளீர் எனப் பொன்னரின் இதயத்தில் தோன்றித் தோன்றி மறைந்தன! மறைந்து மறைந்து தோன்றின! பின்னர் மறையவே இல்லை! தோன்றியவை தோன்றியவைகளாகவே நிலைத்தன!

அமராவதி ஆற்றங்கரையில் தலையூர்ப் படைகளும் வள நாட்டுப் படைகளும் தலைகளைப் பந்தாடி - கால்கைகளை வெட்டி உருட்டி - உயிரற்ற முண்டங்களை மிதக்க விட்டுக் கொண்டிருந்தபோது, பொன்னர், தனக்குத் துணையாக குறைந்த எண்ணிக்கையே உள்ள குதிரை·வீரர்கள் சிலருடன் தலையூர்க் கோட்டை முகப்புக்கு வந்து விட்டான். ஊழிக் காலத்து அழிவு என்பார்களே, அதுவே ஓர் உரு எடுத்து வந்ததுபோல புரவியேறி வந்த பொன்னரின் வாள் வீச்சின் சுழற்சியை எதிர்கொள்ள எவராலும் இயலவில்லை. கோட் டைக்குள்ளும் நுழையப் போகிறான் பொன்னர் எனக்கேள்வி யுற்ற தலையூர்க்காளி தனது பதினெட்டு நாட்டுப் படைத் தலைவர்களையும் அமராவதி ஆற்றங்கரையிலிருந்து போர் முனையை மாற்றச் சொல்லி ஆணை பிறப்பித்தான். அனைத் துப்படைகளும் தலையூர்க் கோட்டையை நோக்கித் திரும்பின.

அதற்குள்ளாக, பாய்ந்ததோ அல்லது, பறந்து சென்றதோ தெரியவில்லை - பொன்னரின் புரவி எப்படித்தான் தலையூர்க் கோட்டையின் முகப்புக் கொத்தளத்தில் ஏறி நின்றது என்று யாராலும் கணிக்க முடியவில்லை. அந்தப் புரவியின் மீது பொன்னர், வாளை ஓங்கிப் பிடித்த கையுடன் அமர்ந்து வெற் றிச் சிரிப்பு சிரித்தான்! ஆனால் அது, இதயத்தின் அடித்தளத் திலிருந்து பீறிட்டுக் கிளம்பிய மகிழ்ச்சியின் எதிரொலி அல்ல! ஆத்திரத்தின் முழக்கம்! ஆவேசத்தின் பேரொலி!

என்னே ஆச்சரியம்! தலையூர்க் காவலன் காளி மன்னனும் அவன் பரிபாலனத்திற்குட்பட்ட பதினெட்டு நாட்டுத் தலைவர் களும் கோட்டையைச் சுற்றி நிற்கிறார்கள்! அந்தக் கோட்டை

யின் முகப்பின் மீதோ குதிரையிலமர்ந்து பொன்னர் கொக்கரிக்கிறான்!

காளி மன்னனும் பதினெட்டு நாட்டுத் தலைவர்களும் தமது படைவீரர்களை நோக்கி, 'உம்! வளைத்துக் கொள்ளுங்கள் பொன்னரை! அவன் வாளும் உடலும் துண்டு துண்டாகிற வரையில் விடாதீர்கள்!' என வீர கர்ச்சனை செய்தார்கள்!

ஆனால் பொன்னரோ, தன்னை நோக்கிச் சூழ்ந்து வரும் படை வீரர்களை நோக்கிப் பேசத் தொடங்கினான்!

''உங்களை எதிர்க்க நான் அஞ்சவில்லை! உங்கள் அனைவரையும் அழித்தொழித்து விட்டுத்தான் இந்தத் தலையூரை விட்டு நான் திரும்புவேன்! என் கையிலிருக்கும் வாளைவிட வலிமை வாய்ந்தது என்னுள்ளம் என்பதை மறந்து விடாதீர்கள்! நான் அமர்ந்திருக்கும் புரவியின் வேகத்தைக் காட்டிலும் கோடிக்கணக்கான மடங்கு வேகத்துடனே உங்கள் படைகளின் மீது பாய்ந்து தாக்கும் பலம் எனக்குண்டு! இந்த சக்தி எனக்கு எப்படி வந்தது என்று கேட்கிறீர்களா? மாயத்தால் அல்ல- மந்திரத்தால் அல்ல- மனிதன்தான் நான்! இந்த மனிதனுக்கு மட்டும் இவ்வளவு சக்தி எப்படி ஏற்பட்டது? பல நாள் பொறுமையின் விளைவு இது! சகித்துச் சகித்துப் பார்த்து இனி சகிப்பதற்கே இடமில்லை என்ற நிலையில் வெடித்துக் கிளம்பிய சக்தி இது! என் தந்தை தலையெடுக்கத் தொடங்கியது முதல் பங்காளிக் காய்ச்சலுக்கு ஈடு கொடுக்க எத்தனை கஷ்டப்பட்டார் என்பதை நீங்கள் எல்லாம் அறியமாட்டீர்களா? கொங்குச் சீமையில் வேளாளர்களும் வேட்டுவர்களும் ஒரு கொடியில் இரு மலர்களாய் - ஒரு கிளையில் இரு கனிகளாய் குலுங்கிட வேண்டுமென்ற குறிக்கோளுக்கெதிராக - எங்கள் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்புகள், தமது சுய நலம் - சுக போகம் - பதவி - பவிசு - அதிகாரம் - அந்தஸ்து - இவற்றையே கொள்கைகளென வகுத்துக்கொண்டு, தமக்குச் சரியான துணையென எதற்கும் தலையாட்டுகிற தலையூர்க்காளியைப் பயன் படுத்திக் கொண்டார்கள்! தனக்கொரு கண் போனாலும் எதிரிக்கு இரு கண் போகவேண்டுமெனக் கருதுகிற கயவர்களின் சேட்டை, காலா காலத்திற்கும் தொடர்ந்து கொண்டுதானே இருக்கிறது! அந்தக் கயமையின் உருவங்கள், ஆம், எமது பங்காளிக் கூட்டத்தார் - குழந்தைப் பருவத்திலேயே என்னையும் என் தம்பி சங்கரையும் தீர்த்துக்கட்டிவிடத் தலையூர்க்காளியிடம் தூபம் போட்டார்கள்! எங்களைக் காத்திடத் தன் குழந்தைகளைத் தியாகம் செய்தார் எங்கள் குருநாதர் ராக்கியண்ணன்!

இரு குலத்தாரின் மோதுதலைத் தவிர்க்க - கேட்பார்புத்தி கேட்டுக் கருத்தழியும் காளி மன்னனின் செங்கோலை நிமிர்க்கப் பெரும்பாடுபட்ட பெரியவர் மாயவரோ இரு குலத்தார்க்கும் என்றென்றும் மறையாத மாணிக்க ஜோதியாகி விட்டார்! ஆனால் அவர் ஆசை நிறைவேறவில்லை! இப்பொழுது நான் பேசுவது, உங்களிடம் நியாயம் கேட்டு யுத்தத்தை முடித்துக் கொள்வதற்காக அல்ல! இனிமேல் என்னால் இந்த யுத்தத்தை நிறுத்த முடியாது! அதற்கென ஏற்பட்ட வாய்ப்புகளின் கதவுகளையெல்லாம் எங்கள் குலத்தின் குணக்கேடர்கள் செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் அடைத்து மூடிவிட்டு, அவர்களும் அழிவை அணைத்துக்கொண்டு விட்டார்கள்! வேட்டையைத் தொழிலாகக் கொண்ட வேட்டுவர் குலம் - வேளாண்மையைத் தொழிலாகக் கொண்ட வேளிர் குலம் - இப்படிப் பல தொழிலில் ஈடுபட்டுப் பற்பலக் குலங்கள் இருப்பினும் எல்லாமே தமிழ்க் குலம்தான்! எம் குலம் மட்டுமல்ல, எல்லாக் குலத்தினருமே ராக்கியண்ணன் பாசறையில் பயின்றவர்கள்தான்! வள நாட்டுப் படை - தலையூர்ப்படை என எதிரெதிரே நிற்கின்ற இரு படையின் தலைவர்களுமே ராக்கியண்ணனைக் குருநாதராக ஏற்றவர்கள்தான்! ஆனால் அந்தக் குருநாதருக்கே - அவரது கோட்பாடுகளுக்கே - எதிராக குறுக்குச்சால் ஓட்டியவர்கள் யார்? செல்லாத்தாக் கவுண்டரும் மாந்தியப்பனும் அல்லவா? அவர்கள் சொல்லுக்குச் செவி மடுத்துச் சிந்திக்க மறந்துவிட்ட இந்தக் காளிமன்னன் அல்லவா? என் கேள்விகள், அனுதாபம் பெறத் துடிக்கும் அற்பத்தனமான கெஞ்சல் அல்ல! இறுதியாக நான் நடத்தப் போகும் யுத்தத்திற்கு முன்பு, பதினெட்டு நாட்டுத் தலைவர்களுக்கும் ஓர் எச்சரிக்கை! காளி மன்னனுடன் சேர்ந்து நீங்கள் அழிந்து போவதற்குத் தயார் என்றால், உங்கள் படைகளும் - உங்கள் நாடும் - உங்கள் மக்களும் ஒழிந்து மறைந்து போவதற்குத் தயார் என்றால், என்னோடு போர் நடத்துங்கள்! காளி மன்னன், கடைசி நேரத்தில் யோசித்திருந்தால் கூட, அவனது பதினெட்டு நாட்டு மக்களை அழியாமல் பாதுகாத்திருக்க முடியும் - அதையும் தவறவிட்டு அவனது வேட்டுவர் குலத்தின் பேரழிவுக்கே காரணமாகிவிட்டான்' என்ற அவப் பெயருக்கு ஆளாகிவிட்டான் - என்ற வருங்காலத்தின் கோபத்தை அவனது வரலாற்றில் இப்போதே செதுக்கி வைத்துக் கொள்ளத் தயாராகிவிட்டால் - எனக்கு அக்கறையில்லை! நான் தயார்! தாக்குங்கள் என்னை! பதினெட்டுப் படைகளையும் பார்க்கிறேன் ஒரு கை! படு சூரணமாக்குகிறேன்!''

பிரளயத்தின் பிரகடனமாகப் பொன்னர் பேசி முடித்ததும்-பதினெட்டு நாட்டுத் தலைவர்களும் அவனை வளைத்து எதிர்த்து

அழிக்கப் போர் வெறி கொண்டு கிளம்பினார்களே தவிர, தலை குனிந்து தமது தவறுணர்ந்து அடங்கிப் போக விரும்ப வில்லை!

ஆனால் அவர்களுக்கு முன்னால் அதிவிரைவாகக் குதிரையி லமர்ந்தவாறு வந்து நின்றான் தலையூர்க் காளி மன்னன்!

''பதினெட்டு நாட்டுத் தலைவர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள்! பொன்னர் சொன்னது அனைத்தும் நான் ஏற்றுக் கொள்ளக் கூடியவையே! எதையும் மறுத்திடும் துணிவு எனக் கில்லை- என் மனச்சாட்சியை நான் மதிக்கிறேன்! வேட்டுவரும், வேளாளரும் அடியோடு அழியக் காரணமாக இந்த யுத்தம் அமைந்திட வேண்டாம்! சிறு பகையுண்டு இரு பிரிவார்க்கு மிடையே! அதனைப் பெரும் பகையாக வளர்த்த பெருமை யாருக்கு உண்டு என்பதைப் பொன்னர் சொல்ல எல்லோரும் கேட்டீர்கள்! எனவே, பதினெட்டு நாட்டுத் தலைவர்களும் படை வீரர்களும் படைக் கலன்களைக் கீழே போடுங்கள்! ஒன்று மட்டும் உறுதி! நான் ஏதோ பொன்னரிடம் உயிர்ப் பிச்சை கேட்டு மண்டியிடப் போவதாக மட்டும் நினைத்து விடாதீர்கள்! பொன்னரின் சக்திக்கும் ஆற்றலுக்கும் நானொன் றும் சளைத்தவனல்ல! ஆனால் இந்த யுத்தம் நானும் பொன் னரும் மட்டும் தனித்து மோதி அத்துடன் முடிய வேண்டும்! இருவர் மட்டுமே போரிடுகிறோம் - இந்தப் போரில் நான் வீழ்ந்தால் தலையூரில் வளநாட்டுக் கொடி பறக்கட்டும்! பொன்னர் வீழ்ந்தால் வளநாட்டில் தலையூர்க் கொடி பறக்கட்டும்! எப்படி யிருந்தாலும் எங்கள் யுத்தம் தவிர்க்க முடியாதது! இந்தக் கீட்டத்தில் சமாதானம் என்பது என் மானத்திற்கு விடப்படும் அறைகூவலாகி விடும்! பொன்னரும் தனது சபதத்தை நிறை வேற்ற - என்னை எதிர்ப்பது என்பது கட்டாயமாகிவிட்ட ஒன்று! எனவே இருவரும் எங்கள் முடிவை இங்கே நிர்ணயித் துக் கொள்கிறோம்! இருதரப்பிலும் உள்ள மற்றவர்கள் ஒதுங் கிக்கொள்ளுங்கள்! எங்கள் கைகளில் உள்ள படைக்கலன் களுக்கு மட்டுமே இனி வேலை!''

இப்படி உரக்கக் கூறிக் கொண்டு, தனது குதிரையைப் பொன்னர் மீது தட்டிவிட்டான் காளி மன்னன்! இரு வீரர் களும் புரவிகளில் இருந்தவாறே வாட்போர் புரிந்தனர்! பின் னர் அவற்றிலிருந்து இறங்கி - கோட்டை முகப்புக் கொத்தளத் தில் பல்வேறு ஆயுதங்களை ஏந்திப் போரிட்டனர்! பின்னர் ஆயுதங்களின்றி ஒருவரைத் தூக்கியொருவர் பந்தாடிப் போரிட் டனர்! பொன்னரின் குரல்வளையைப் பிடித்து நெறித்துக்

கோட்டை முகப்பிலிருந்து கீழே உருட்டிவிடப் போகிறான் காளி மன்னன் என்ற ஒரு கட்டத்தில் வளநாட்டு வீரர்கள் வாய்விட்டலறிவிட்டனர். ஆனால் முடிவு நேர்மாறாக அமைந்தது! பொன்னர், காளி மன்னனை ஒரு உதை கொடுத்துக் கொத்த ளத்திலேயே கீழே தள்ளி விட்டான். விழுந்த காளி மன்னன் மீண்டும் ஒரு வாளை எடுத்துக்கொண்டு பொன்னர் மீது பாய்ந்தான்! அதற்குள் பொன்னரின் கையில் ஒரு வாள்! அந்த வாள் தலையூர் மன்னனின் நெஞ்சைத் துளைத்துக் கொண்டு மிக ஆழத்தில் இறங்கிவிட்டது! தலையூரானின் தலை சாய்ந்தது! நிலை தடுமாறினான்! இமைகள் மூடத் தொடங்கின! அவன் கை வாள் கீழே விழுந்தது! கடைசி மூச்சு விடுவதற்கு முன்பாக, தனது கையை மெதுவாக நீட்டி, பொன்னரின் கையைக் குலுக்கினான் காளி மன்னன்! பொன் னரும் கண்கலங்கிட, காளி மன்னனின் கையைக் குலுக்கி னான்! இருவரும் தழுவிக் கொண்டனர்! சவமாகி விட்ட தலையூர்க் காளி மன்னனை அந்தக் கொத்தளத்துப் பீடத்தி லேயே மெல்லப் படுக்க வைத்தான் பொன்னர்!



# படுகளம் முடிவு!

## 60

படுகளம் வந்தடைந்த அருக்காணியின் கண்கள் அண்ணன் சங்கர் எங்கே எங்கேயென்று சுழன்றன. வையம்பெருமான் வீழ்ந்து கிடக்கும் கோரக் காட்சியைக் கண்டாள். தனக்குத் திருமணம் செய்துகொள்ள விருப்பமில்லாவிடினும் தன்னை மணந்துகொள்ள விரும்பியவன் மணக்கோலத்திற்குப் பதிலாகப் பிணக்கோலம் பூண்டிருப்பது காண அவள் நெஞ்சை ஏதோ ஒரு உணர்வு அடைத்ததால் திகைத்து நின்றாள். மேலும் நடந்தபோது செல்லாத்தாக் கவுண்டரின் உடல் உயிரற்றுக் கிடந் ததைக் கண்ணுற்றாள். எல்லாமே இவரது இதயத்தில் கொழுந்து விட்டெரிந்த துரோகத்தீயின் விளைவன்றோ என எண்ணிய போது அருக்காணியின் சுவாச கோசங்களிலேயிருந்து நெருப் புப் பெருமூச்சுதான் வெளிப்பட்டது. அங்கிருந்து தொலைதூரத் தில் வீரமலை, தனது உடலெங்கும் அம்புகளும் ஈட்டிகளும் தைத்திருக்கக் களச்சாவென்னும் புகழ்ப் படுக்கையில் சயனித் திருப்பதைப் பார்த்தவுடன் அவளையறியாமல் அலறிவிட்டாள். அண்ணன்மார்? இருவர்மீதும் அவள் கொண்டுள்ள பாசத்திற்கு சிறிதும் குறைந்ததல்ல, அவள் வீரமலையின் மீது வைத்திருந்த பாசம்.

சோழன் தோட்டியென்னும் வீரமலயின் தந்தையும் - அவ னது பாட்டனாரும் குன்றுடையார் பரம்பரையின் பற்றுக் குறை யாத ஆதி திராவிடப் பெருமகன்கள் அல்லவா? அவர்கள் வழி வந்த வீரமலை வேறு, பொன்னர் சங்கர் வேறு, என்ற வித்தியா சமே பாராட்டாத நிலையில் அந்தக் குடும்பபாச உணர்வு கொடி கட்டிப் பறந்ததல்லவா?

குன்றுடையார் குடும்பத்துக்காகத் தான் ஆற்றிட வேண்டிய கடைசிக் கடமையையும் ஆற்றி முடித்தாயிற்று என்ற நிம்மதி யுடன் வீரமலை நீள் துயில் கொண்டிருப்பது போலவே இருந் தது!

வீரமலைக்குச் சற்று அருகாமையில் பீடம் போன்ற ஒரு பாறைச் சரிவில் நெஞ்சில் பாய்ந்த வாளுடன் சிரித்த முகத்துடன் சாவை அணைத்துக்கொண்டு படுத்திருந்தான் சங்கர்!

''சின்ன அண்ணா!'' என்று கதறினாள் அருக்காணி - அவளுடன் வந்த தோழிகளும் கதறியழுதுவிட்டனர்! அந்த ஒலி வீரப்பூர் படுகளம் முழுவதும் எதிரொலித்தது!

சங்கரின் உடல் மீது விழுந்து புலம்பினாள். அந்தப் புலம்பல் - இன்னமும் வீரமலைப் பகுதியில் - வீரப்பூர் படுகளப் பகுதியில் - ஒலித்துக்கொண்டுதானிருக்கிறது.

''ஆனை போல் நீ இருந்து அண்ணா அரசாளும் அரண்மனையில்
பூனை போல் நானிருந்து புலம்புகிறேன் பாரண்ணா!
தென்னை நிறைந்திருக்கும் அண்ணா தெரு வீதி பூத்திருக்கும்!
தென்னை தலை சாய்த்தே என் பிறவி சோர்ந்து விழப் போனீரே!
மஞ்சள் வளர்ந்திருக்கும் சின்னண்ணா மருதாணி பூத்திருக்கும்
வயல் எல்லாம் நெல் வளரும் சின்னண்ணா வாடுகிறேன் நான் தனியாய்!
இஞ்சி வளர்ந்திருக்கும் சின்னண்ணா எலுமிச்சைக் குலுங்கி நிற்கும்
இளங்கொடியாள் நான் தனியே இங்கிருந்து புலம்புகிறேன்!
ஊரெங்கும் பட்டாளம் சின்னண்ணா ஓடி வந்த வேடுதளம்
ஓடி வந்த வேடுதளம் அண்ணா நீ ஒரு நொடியில் சாய்த்தாயே!
நாடெல்லாம் பட்டாளம் சின்னண்ணா,
நடுங்கி வந்த வேடுதளம்!
நடுங்க வந்த பகைவரையே அண்ணா, நலிவடையச் செய்தாயே!
குப்பாயி சிறை பிடித்துக் கொள்ளையிட்ட கொடியவரை
தப்பாமல் சங்கரித்து சின்னண்ணா
தவிடு பொடி செய்தாயே!
பச்சனா முதலி மகள் சின்னண்ணா, பருவமுள்ள குப்பாயி பக்கம் அழுத குரல்
உன்னைப் பதைபதைக்க வைத்ததுவே!
ஒக்கப் பிறக்கணுமா? சின்னண்ணா, ஒருதாய்
முலைப் பால் பருகணுமா?
பக்கம் ஒரு பெண்ணழுதால் உன் பட்டாளம் சீறுமண்ணா!

தனித்துப் பிறந்த அண்ணா தனியொருத்தி வேறுபட்டேன்!
தண்ணீர்த் துறையிலேதான் அண்ணா தனிப்பிரிந்த
மானது போல்
உங்களைப் பிரிந்து அண்ணா உயிர் துடித்து வாழ
மாட்டேன்!
தங்கம் நல்ல தங்கம் இனித் தவிதவித்து வாழ மாட்டேன்!''

அருக்காணித் தங்கத்தின் உள்ளத்தில் ஏதோ ஒரு உறுதி - ஆம் - இனி வாழத் தேவையில்லை என்ற உறுதி - சின்ன அண்ணன் சங்கரை இழந்துவிட்டதற்கு யார் வந்து என்னதான் ஆறுதல் கூறினாலும் - அந்த இனிய சகோதரனின் பிரிவைத் தாங்கிக் கொள்ளக் கூடிய அளவுக்கு அவளது இதயம் வலிமை வாய்ந்ததாக இல்லை! அதைவிடத் தனது உயிரைப் போக்கிக் கொள்வதில் அவள் தைரியமாக இருந்தாள். எனவே அந்த உறுதிதான் அவளது மனத்தில் எந்த சக்தியாலும் அசைக்க முடியாத பலம் பெற்றுப் பேருருக் கொண்டது.

பாறையில் பட்டு விரித்து அமர்ந்து மானமறவன் என்பதை விளக்க மார்பை நிமிர்த்தித் தனது போர்வாளுக்குத் தன்னுயிரைப் பரிசாக அளித்துவிட்ட சங்கர் சவமாகப் படுத்திருக்கும் அந்தக் காட்சி அருக்காணித் தங்கத்தை அளவுக்கு மீறி உருக்கி விட்டது.

அஞ்சடுக்குப் பஞ்சு மெத்தை சின்னண்ணா, உனக்கு அது
மேல் தூளி மெத்தை!
பஞ்சு மெத்தை மேலிருக்க அண்ணா நீ மெத்தை
அழுந்துதென்பாய்!
மெத்தை அழுந்துதென்பாய், உன்மேனியெல்லாம்
நோகுதென்பாய்!
நித்திரையும் வல்லை யென்று அண்ணா நீ நிட்டூரம்
சொல்லுவாயே!
பூமியிலே சவமிருந்தால் மேனியிலே புழுதி
அணையுமென்று -
பாறைமேல் பட்டு வைத்து அண்ணா - அதன்மேல்
பாங்காக மண்டியிட்டு,
கல்லின் மேல் பள்ளி கொண்டு அண்ணா நீ கண்ணுறக்கம்
ஆனாயோ?

நல்லதங்கம் அருக்காணியின் புலம்பலினூடே குதிரைகள் பல விரைந்து வரும் குளம்படி ஓசை வீரப்பூர் படுகளத்தை மேலும் அதிரச் செய்தது. தொலைவில் வரும் குதிரைகளின்

முழு உருவங்கள் தெளிவாகத் தெரியாத நிலையில் - அந்தக் குதிரைகள் கிளப்பும் புழுதி மண்ணில் படுகளம் நோக்கி வரு வோர் யார் எனச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் அருக்காணித் தங்கம், தனது வாளைக் கையில் எடுத்துக் கொண்டு எதிர்ப்புக்குத் தயாரானாள். அவளது தோழிகளும் போர் புரியத் தயாராகிவிட்டனர்.

சோகத்தின் சுமை தாங்கமுடியாமல் தத்தளித்த போதிலும் - வீரக்குலம் விளங்க வந்தவர்கள் 'அந்த வீராங்கனைகள் என் பதை மெய்ப்பிப்பது போல எதிர்வரும் அணிகளின் வரவு நோக்கி ஓங்கிய வாட்களுடனும், வேல்களுடனும் நின்றனர். குதிரைகளின் குளம்படி ஓசையோ ஆயிரம் முறை இடை விடாது உறுமும் பேரிடிகளின் தொகுப்பு ஓசையாகச் செவி களைப் பிளந்து கொண்டிருந்தது! எனவே வருவது மிகப் பெரும்படைதான். அதனை எதிர்கொண்டு வெற்றி பெறுவது என்பது இயலாத ஒன்று எனினும் அண்ணன் சங்கருக்குப் பக் கத்தில் வீர மரணமடைந்து விழலாம் என்ற பெரும் திருப்தி அருக்காணிக்கு!

தொலைவில் கேட்ட அந்த ஒலி, படுகளத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. அருக்காணி, தனது தோழிகளைப் பார்த்து ''உம்! தயாராகிக் கொள்ளுங்கள்! வெற்றி அல்லது சாவு! இரண்டுமின்றி எதிரிகளிடம் சிக்கிக் கொண்டால், ஒரு பெண் ணின் கதி என்ன ஆகும் என்பதை மனதில் வைத்துக் கொண்டு போரிடுங்கள்!'' என முழக்கமிட்டாள். அவளும் அவள் தோழி களும் அந்தக் குதிரைப் படை வருகிற ஓசையைக் கவனித்துக் கொண்டிருந்தபோது - தன்னந்தனியாக ஒரு குதிரை அந்தப் படுகளத்தை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்ததைப் பார்க்கத் தவறிவிட்டார்கள். அவர்கள் பார்க்கவில்லையே என் பதற்காக அந்தக் குதிரை, படுகளத்திற்குள் நுழையாமல் வேறு பாதையாகச் சென்று விடவில்லை.

தனியாக வந்து கொண்டிருந்த அந்தக் குதிரையில் பொன் னர் அமர்ந்திருந்தான்! குதிரை படுகளத்திற்குள் வந்துவிட்டது! இப்போதுதான் அருக்காணி தனது பெரிய அண்ணனைப் பார்த்தாள்! சிறிது தொலைவில் நெருங்கிக்கேட்டுக்கொண் டிருந்த குதிரைகளின் ஓசையில் இப்போது அவள் மனம் செல்லவில்லை!

பொன்னரைக் கண்டவுடன் ''அண்ணா!'' எனத் தாவிப் பாய்ந்து அவன் கால்களைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள்.

பொன்னர், தன் அன்புத் தங்கையை ஆரத் தழுவி மெல்லத் தூக்கித் தனது நெஞ்சோடு அணைத்துக்கொண்டு படுகளத்தை அங்கிருந்தவாறே பார்த்தான். சங்கர், வீரமலை, வையம்பெருமான், இருதரப்பிலும் ஏராளமான வீரர்கள் மடிந்து கிடக்கும் அந்தக் கொடுமையான காட்சியைக்கண்டு அவன் கண்ணீர் வடிக்கவில்லை. தனது துக்கத்தை வெளிப்படுத்தினால் தனது தங்கை அருக்காணியின் நெஞ்சம் வெடிக்கும் - எனவே அவளையும் இழந்துவிட அவன் தயாராக இல்லை! அருக்காணியின் உச்சந்தலையில் தனது முகத்தைப் பதிய வைத்துக் கொண்டு அவளுக்கு ஆறுதல்மொழி கூறினான்.

''அருக்காணீ! அரச பரம்பரைகள் என்றால் போர் செய்துதான் தீரவேண்டுமென்று கட்டாயமில்லை! அந்தத் தேவையில்லாமலே அரசுகள் நடக்கலாம்! ஆனால், தேவையில்லாதது என்று நாம் எண்ணுகிற யுத்தம், சில சமயங்களில் தவிர்க்க முடியாததாகிவிடுமேயானால் வீரர்கள் அதனைப் புறக்கணித்து ஒதுங்கிவிட முடியாது! வீரர்கள் என்பவர்கள் ஏதோ படைப் பிரிவுகளில் வேலை பார்க்கும் பணியாளர்கள் அல்ல! மான உணர்வுக்குத் தங்கள் வாழ்க்கையில் முதலிடம் கொடுப்பவர்கள்! அப்படிப்பட்டவர்கள் வலியவரும் யுத்தத்தைக் கண்டு மிரளமாட்டார்கள்! மிரளக் கூடாது! அத்தகைய யுத்தங்களில் வெற்றி தோல்வியென்பதுகூட முக்கியமில்லை! களத்தில் காட்டப்பட்ட மான உணர்வுமிக்க வீரம்தான் முக்கியம்! அப்படியொரு வீரமரணத்தைத் தலையூர்க்காளி தழுவிக் கொண்டுவிட்டான்! நான் நடத்திய சமருக்கு வெற்றி! செய்த சபதத்திற்கு வெற்றி! இருந்தபோதிலும் தோற்றுப்போய்க் களத்தில் வீழ்ந்துவிட்ட தலையூர்க் காளியின் வீரத்தை மதிக்காமல் - போற்றாமல் இருக்க முடியாது! ஒரு போரின் வெற்றிக்கோ - தோல்விக்கோ - பல உயிர்களை விலையாகக் கொடுக்கத்தான் வேண்டியிருக்கிறது! இதோ வீழ்ந்து கிடக்கிற இருதரப்பு வீரர்களையும் பார்க்கும்பொழுது - அவர்களில் ஒருவனாகத்தான் தம்பி சங்கரை நான் கருதவேண்டும்! வீரமலையை - வையம்பெருமானை - நான் அப்படித்தான் கருத வேண்டும்! நமது வளநாட்டுக்காக உயிர் கொடுத்த வீரர்களின் பெயர்கள் - ஆம், பலரது பெயர்கள் பிரபலமானவைகளாக இல்லாமல் இருக்கலாம்! ஆனால் - சொந்த மண்ணின் மானங்காக்க உயிர் கொடுத்த எல்லா வீரர்களையும் நான் என் தம்பி சங்கராகத்தான் கருதுகிறேன்! அருக்காணி! நீயும் என்னைப்போலத்தான் கருத வேண்டும் - இந்தப் படுகளத்தில் உயிரற்றுக் கிடக்கும் எண்ணிறந்த உடல்களில் சங்கரின் உடலுக்கு மட்டும் தனித்தன்மை காட்டி அழுது புலம்புவது சரியல்ல! இப்படி

நான் சொல்வதால் சங்கராகட்டும், வீரமலையாகட்டும், வையம் பெருமானாகட்டும், எல்லாருடனும் சேர்த்து எண்ணக்கூடிய சராசரியான வீரர்கள் என்று அர்த்தமல்ல! பேராற்றல் பெற்ற போர்வீரன் என் தம்பி சங்கர் - அதனால்தான் தலையூர்க் காளியை யுத்த களத்தை விட்டே அவனால் ஓடச் செய்ய முடிந்தது! இருப்பினும் நமது நாட்டுக்காக உயிர்த்தியாகம் செய்தவர்களில் அவனும் ஒருவன் என்ற பட்டியலில் தானே இடம் பெறுகிறான்! அவனுக்கு நானோ, அல்லது நீயோ தனி முக்கியத்துவம் அளித்துத் துக்கப்பட்டால் - இந்தப் படுகளத்தில் சிதறிக் கிடக்கும் இத்தனை வீரர்களுக்காகத் துயரப்பட யார் இருக்கிறார்கள்? அதனால் மனதைத் தேற்றிக் கொள்! எந்தச் சபதத்தை நிறைவேற்றச் சங்கர் என்னுடன் இணைந்து தோள் தட்டினானோ, அந்தச் சபதம் நிறைவேறிவிட்டது! ஆறுதல் பெறு அருக்காணி!''

இவ்வாறு பேசிக்கொண்டிருந்த பொன்னரின் முகத்தைத் திடீரெனத் திகில் கப்பிக் கொண்டது. தன் தங்கையின் தலை மீது பதித்திருந்த தனது முகத்தைத் தூக்கி அவளைக் கூர்ந்து பார்த்தான். அவளை அணைத்திருந்த தனது கரங்களை முழுமையாக அல்ல, மெல்லத் தளர்த்திப் பார்த்தான். அருக்காணி, அவனது அணைப்பிலிருந்து கீழே சரிந்து கொண்டிருந்தாள். மீண்டும் அவளைப் பொன்னர் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ''அருக்காணி!'' என்று நிதானமாகக் கூப்பிட்டுப் பார்த்தான். அவள் எப்போது ''அண்ணா'' என்று அலறி அவனைக் கட்டிப் பிடித்தாளோ - அப்போதே அவள் உயிர் அவளது உடலை விட்டு நீங்கியதை, இப்போதுதான் பொன்னரால் உணரமுடிந்தது!

அருக்காணிக்கு அவ்வளவு ஆறுதல் சொன்னவனுக்கு இந்த நிலையில் யார் ஆறுதல் சொல்வது?

அவன் கண்களில் நீர் இல்லை — முகம் மட்டும் கறுத்துப் போயிற்று! தரையில் கிடக்கும் தங்கத் தங்கையின் முகத்தையும், தம்பியின் முகத்தையும், வீரமலை முகத்தையும், வையம்பெருமான் முகத்தையும் படுகளத்தில் சிதறிக் கிடந்த வீரர்களின் முகத்தையும் பார்த்தான். தன்னருகே நின்ற தனது குதிரையைத் தட்டிக் கொடுத்தான். தனது வாளை எடுத்து சிறிது தொலைவில் பூமியில் நட்டான். கைப்பிடி தரையிலும் வாளின் முனை வான்நோக்கியும் இருக்குமாறு நட்டான்.

சிறிது தூரம் நடந்து வந்தான் — ''எல்லாம் போய்விட்டது! பங்காளிக்காய்ச்சல் — பதவிக்காக நடத்தப்பட்ட துரோக நாட

கம் — இவைகளால் எல்லாமே போய்விட்டது!'' என்று சொல்லிக் கொண்டே பொன்னர், அந்த வாளின் முனை மீது பாய்ந்தான் — ஆனால், அவன் அப்படிப் பாய்வதற்குள், அந்த வாளைக் கையில் எடுத்துக் கொண்டு அக்களதேவச் சோழர் அவன் எதிரே நின்றார்!

குதிரைகளின் குளம்படி 'ஓசை பெரிதாகக் கேட்டதே — உறையூர்ச் சோழரின் படை வரிசை கிளப்பிய ஓசைதான் அது என்பது — அங்கிருந்தோருக்குப் புரிந்தது!

''சோழ மன்னரா? என்ன இது? என்னை ஏன் தடுக்கவேண்டும்? இவ்வளவுக்கும் பிறகு நான் ஏன் வாழ வேண்டும்?''

பொன்னரின் இந்தக் கேள்விக்குப் பதிலாக ஒரு சோக இழையோடும் புன்னகையை மட்டும் வெளிப்படுத்திக் கொண்டு அக்களதேவச் சோழர், பொன்னரைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்.

''வீரத்தம்பி! நிலைமையை விளக்கி சோழ நாட்டு உதவியைக் கேட்டிருந்தால் எளிதில் தலையூரைப் பணிய வைத்திருக்கலாமே! இவ்வளவு இழப்பு ஏற்பட்டிருக்காதே! பரவாயில்லை, நடந்தது நடந்து விட்டது! மேலும் விபரீதம் நடக்கக் கூடாது என்றுதான் நானே படையுடன் நேரில் வந்தேன்! உன் உற்றார் உறவினர் தம்பி தங்கை வீரர்கள் மாண்டுள்ளனர் இந்தப் போரில்! உன்னை நம்பி மக்கள் இருக்கிறார்கள் என்பதை மறந்து விடாதே! வேட்டுவ குலத் தலைவர்கள் பதினெட்டு நாட்டுக்காரர்களையும் நண்பர்களாகப் பெற்று கொங்கு வேளிர் ஆட்சியை வளநாட்டு மண்ணில் மீண்டும் தொடர என்றைக்கும் சோழ அரசு உனக்குத் துணை நிற்கும்! உன் வெற்றியைப் பிரகடனப்படுத்தும் இடம் தலையூர்! உன் தம்பியின் மானமிகு வீரத்தையும் - உன் படை வீரரின் ஆற்றலையும் — உன் தங்கையின் பாசத்தையும் பிரகடனப்படுத்தும் இடம், இந்தப் படுகளம்! இந்த நினைவுகள் என்றும் அழியாமல் பசுமையாகக் காக்கப்பட, உன் ஆட்சி தொடரட்டும்! இது என் வேண்டுகோள்! உன்னை நானும் இந்த நாடும் பொன்னர் எனத் தனித்துப் பெயர் கூறி அழைக்கமாட்டோம், ''பொன்னர் சங்கர்'' என்றுதான் அழைப்போம்!

பொன்னர் பதில் ஏதும் கூறாமல் சிலை போல நின்றான்!

சோழர் படையினர் ''பொன்னர் சங்கர் வாழ்க!'' என பேரொலி எழுப்பினர்.

# பழைய கதையும் புதிய வரலாறும்!

## 61

அன்புள்ள
வாசகப் பெருமக்களுக்கு!
வணக்கம்.

ஓராண்டு காலத்திற்கு மேலாக ''குங்குமம்'' இதழில் நான் எழுதி வந்த ''பொன்னர் - சங்கர்'' (அண்ணன்மார் வரலாறு) தொடர்கதை கடந்த வாரத்துடன் முற்றுப்பெற்றுள்ளது. கவிஞர் சக்திக்கனல் அவர்கள் தொகுத்து வெளியிட்டதும், புலவர் பிச்சை அவர்கள் எழுதியதுமான ''அண்ணன்மார் சுவாமி கதை'' என்ற நூலிலும் வேட்டாம்பாடி திரு. அ. பழனிசாமி அவர்கள் எழுதிய ''வரகுண்ணாப் பெருங்குடிக் கூட்டம் - பொன்னர் சங்கர் வரலாறு'' என்ற நூலிலும் உள்ள கதைக் குறிப்புக்களை இப்போது உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். இந்தத் தொடர்கதையின் தொடக்கத்தில் நுழை வாயில் என்ற தலைப்பில் இந்த வரலாற்றுக்கான பின்னணி குறிப்புகளையும் கருத்துக்களையும் விளக்கமாக வழங்கியிருக்கிறேன். அறுபது வாரங்களுக்கு மேலாக ஒரு வரலாற்றுப் புதினமாக நான் எழுதியுள்ள இந்தத் தொடர்கதைக்கு முன்னதாக தமிழகத்தில் புழக்கத்தில் இருந்துவரும் பழைய கதையின் சுருக்கம் என்ன என்பதை உங்கள் முன்வைக்கிறேன். வேட்டாம்பாடி பழனிசாமி அவர்களும், புலவர் பிச்சை அவர்களின் அண்ணன்மார் சுவாமி பாடல்களைத் தொகுத்து வெளியிட்ட கவிஞர் சக்திக்கனல் அவர்களும் தந்துள்ள இணைந்த கதை அம்சம் பின்வருமாறு —

* * *

வாங்கலைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவர் கோளாத்தாக் கவுண்டர். இவர் ஒரு சிற்றரசனைப் போல வாழ்ந்தவர். இவரது மனைவி பெயர் பவளாத்தா. மதுக்கரை

என்னுமிடத்தில் செல்லியம்மனுக்கு கோயில் எடுத்தவரும், வெள்ளாங்குளம் ஏரியைக் கட்டியவரும் இவரே. அப்பொழுது சேர, சோழ, பாண்டிய அரசர்களுக்குள் எல்லைத்தகராறு இருந்தது. இந்தத் தகராறைத் தீர்த்துக் கொள்ள மூன்று அரசர்களும் மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயிலில் கூடிப் பேசினார்கள். இவர்கள் மூவருக்கும் இடையே அமர்ந்து சமரசம் பேசி, சிக்கலைத் தீர்த்து வைத்தவரும் கோளாத்தர்தான். இதனால் மகிழ்வுற்ற சோழ அரசன் கோளாத்தருக்கு திருக்காம் புலியூருக்கு அருகில் 70 வள்ளம் பூமி கொடுத்து மணியம், கணக்கு அதிகாரமும் கொடுக்கிறான்.

கோளாத்தாக் கவுண்டர் மகன் நெல்லியங்கோடன், வரத்தால் பெற்றெடுக்கப்பட்டவன். சாந்த குணம் கொண்டவன். சுயநலம் இல்லாதவன். பரம சாதுவான இவன் மசச்சாமி என்றும் அழைக்கப்பட்டான்.

இவனது வெகுளித்தனத்தைக் கண்டு பெற்றோர் பெரும் துயர் அடைகின்றனர். இதனால் கோளாத்தாக் கவுண்டர் தனது தம்பி செல்லாத்தாக்கவுண்டரையும், குடும்ப வேலைகளைச் செய்து வந்த சோழன் தோட்டியையும் அழைத்து தனது மகனை வளர்த்து ஆளாக்கி, பவளாத்தாவின் பிறந்தகமான மணியங்குரிச்சி. (ஆரிச்சம்பட்டி) மலைக்கொழுந்தார் வீட்டிலுள்ள உரிமைப் பெண் தாமரைநாச்சியை, நெல்லியங்கோடனுக்கு கட்டி வைக்குமாறு உறுதிமொழி வாங்குகிறார்! பிறகு உறையூர் சோழ அரசன் மணியமாக அளித்த பொறுப்பை அந்த அரசனிடமே ஒப்படைத்துவிட்டு காலமாகிறார்.

இதன்பிறகு பங்காளிகள் அனைவரும் சேர்ந்து நெல்லியங்கோடனுக்கு பலவித தொல்லைகள் கொடுக்கின்றனர். தொல்லை பொறுக்கமுடியாத நெல்லியங்கோடன், அங்கிருந்து தப்பி, மணியங்குரிச்சிக்கு ஓடுகிறான். அங்கு நெல்லியங்கோடனை அன்புடன் உபசரிக்கின்றனர். ஆடுகளை மேய்த்து பட்டியில் அடைப்பது அவன் வேலை. ஒரு நாள் பட்டியில் ஆட்டுக்குட்டி ஒன்று குறையவே பண்ணை காரியஸ்தன் அவனை சவுக்கால் அடிக்கிறான். நெல்லியங்கோடன் திரும்பவும் தனது பங்காளிகளிடம் ஓட அவர்களும் அவனை அங்கே தங்க விடாது அடித்து விரட்டுகின்றனர். கடைசியில் அவன் ஆதிச் செட்டிப்பாளையம் செட்டியார் ஒருவரது வீட்டினை அடைகிறான்.

பங்காளிகள் நெல்லியங்கோடன் தொலைந்து போனது போல்தான் என்று அவனது சொத்துக்களையும் தனதாக்கிக் கொள்கிறார்கள். நெல்லியங்கோடனின் சிற்றப்பனான செல் லாத்தாக்கவுண்டர் தனது மகனுக்கு தாமரை நாச்சியை மண முடிப்பது என்று முடிவெடுக்கிறார். மலைக்கொழுந்தாரும் தனது மகளை செல்லாத்தாக்கவுண்டர் மகனுக்கு கொடுப்பது என்று முடிவெடுக்கிறார்.

இது விஷயம் சோழன் தோட்டிக்கு தெரிய வர, அவன் நேரே நெல்லியங்கோடனிடம் சென்று செய்தியைத் தெரிவிக் கிறான். உடனே இருவருமாக மணியங்குரிச்சிக்குச் செல்கிறார் கள். மணப்பெண் இருக்கும் வீட்டினருகில் வந்து பிச்சை கேட்கிறான் நெல்லியங்கோடன். அவன் அத்தை ஒருபடி கம்பு போடும்படி சொல்கிறாள். அப்பொழுது நெல்லியங்கோடன் தான் பிச்சை வாங்க வரவில்லை என்றும், தாமரை நாச்சி யைப் பரிசம் போட வந்தேன் என்றும் கூற, அங்கே வந்த மலைக்கொழுந்தார் நெல்லியங்கோடனை நையப்புடைத்து செல்லரிக்கும் கொட்டகையில் போட்டு பூட்டச் சொல்கிறார். இது கேட்ட தாமரை நாச்சி கொதித்து எழுகிறாள். தனது முறை மாப்பிள்ளையான நெல்லியங்கோடனையே மணப் பேன் என்று கூறி, தனக்குப் பூட்டியிருந்த மணப்பெண்ணுக் குரிய நகை நட்டுக்களை வீசியெறிகிறாள்.

மலைக்கொழுந்தார், தாமரை நாச்சியை கடைசியில் நெல்லி யங்கோடனுக்கு மணமுடித்து வைக்கிறார். இது அறிந்த செல் லாத்தாக்கவுண்டர் பொங்கியெழுகிறார். கை கலப்பு நேரும் நிலையில் அங்கிருந்து அவர்களை ஊருக்கு அனுப்பி வைக் கிறார் மலைக்கொழுந்தார்.

இருப்பினும் தனது மகளின் பிடிவாதத்தில் மலைக்கொழுந் தார் கொண்ட கோபம் தணியவில்லை. தகப்பன் போக்கில் வெறுப்புற்ற தாமரையாள், ''என் வயிற்றில் சிங்கம் போல இரு மகன்கள் பிறப்பார்கள். உன் வீட்டில் உமக்கு பேத்திகள் இருவர் பிறப்பர். அவர்கள் இருவரையும் என் மக்கள் மணந்து கொண்டு சிறையில் போடுவார்கள்'' என்று சபதமிடுகிறாள். நெல்லியங்கோடன் தனது நிலையை சோழ அரசனிடம் சொல்லி முறையிடுகிறான். அவர் நெல்லியங்கோடனுக்கு முற்றிலும் மோசமான, கரடு முரடான முட்களும் கள்ளியும் நிறைந்த ஒரு பகுதியைக் கொடுத்து பிழைத்துக் கொள்ளச் சொல்கிறார். தாமரையாள் அந்தக் கரடு முரடான பகுதியை தனது கணவனுடனும், சோழன் தோட்டியுடனும் சேர்ந்து பண்படுத்துகிறாள்.

நல்ல மழை பெய்தபடியால் சோளப் பயிர் முளைத்தெழு கிறது. பாழாய்ப்போய்க் கிடந்த காடு சோளப் பயிர்க் காடாக மாறி விடுகிறது.

நெல்லியங்கோடன் மிகப் பெரிய செல்வந்தன் ஆகிறான். பல குன்றுகளுக்கு அதிபதியாகும் அவன் ''குன்றுடையான்'' என அழைக்கப்படுகிறான். எல்லாவளமும் பெற்றும் அவர் களுக்கு மகப்பேறுதான் கிட்டவில்லை. இதனால் குன்றுடை யானும் தாமரையும் வேண்டாத தெய்வம் இல்லை. மதுக்கரை செல்லாண்டிஅம்மன் கோவிலுக்கு தேர் செய்து, தேரோட்டம் நடத்துகிறார்கள், அப்போதும் பிள்ளை பிறக்கவில்லை. சிதம் பரம் சென்று நடராஜரை தரிசித்தால் பிள்ளை வரம் கிட்டும் என்று சொல்கிறார்கள். மேனாட்டு அரசனிடம் நிலபுலன் ஆபரணங்களைக் கொடுத்துவிட்டு சிதம்பரத்துக்கு செல்ல நினைத்து அவனை அணுகவே, மேனாட்டு வேட்டுவ அரசன் தாமரையைக் கைப்பற்ற திட்டமிட்டு நகையையும் பறித்துக் கொள்வது என்றும் குன்றுடையானை கொலை செய்வது என்றும் சதி செய்கிறான். இதை அறிந்து தங்களது திரவியங் களைத் தரும்படி வேட்டுவ அரசனிடம் கேட்க, அவன் கொடுக்க மறுத்து அடித்துத் துன்புறுத்துகிறான். அப்போது தாமரையாள் நம்பிக்கை மோசடிக்காக பிண மலையைக் குவிப்பேன் என்று சபதம் செய்கிறாள். தாமரை, குன்றுடையான் இருவரும் சிதம் பரம் போகிறார்கள்.

இறைவன் தாமரைக்கு அருள் பாலிக்க அவள் கருவுற்று விடுகிறாள். இதை அறிந்த பங்காளிகள் மருத்துவச்சி ஒருத் தியை அனுப்பி ஆண்குழந்தை பிறந்தால் கழுத்தை ஒடித்துக் கொன்றுவிடும்படியும், பெண் குழந்தை பிறந்தால் எண்ணை தேய்த்துக் குளிப்பாட்டி வளர்க்கும்படியும் சொல்கிறார்கள். அப்பொழுது பொன்னர் தாமரை நாச்சியின் வலது விலாவி லிருந்தும், சங்கர் இடது விலாவிலிருந்தும் பிறக்கிறார்கள். இவர்கள் இருவரையும் கொல்வதற்குக் காத்திருந்த மருத்துவச் சியை அந்த குழந்தைகள் எட்டி உதைக்கிறார்கள். பிறகு பொன்னர் சங்கர் காணாமல் போய் விடுகிறார்கள். அதே சமயம் குன்றுடையான் மைத்துனர் சின்னமலைக்கொழுந்தார் மனைவிக்கு இரண்டு பெண்கள், மூன்று ஆண்குழந்தைகள் பிறக்கின்றன. சோழன் தோட்டிக்கு வீரமலை சாம்புவன் பிறக்கிறான்.

பின்பு தாமரையாள் அருக்காணி நல்ல தங்கம் என்ற பெண் குழந்தையை பெற்றெடுக்கிறாள். ஒரு நாள் மடியில் பெண்

குழந்தையைப் போட்டுக் கொண்டு அண்ணன்மார் இருவருக்கும் நேர்ந்த கதையைச் சொல்லி, அவர்கள் என்ன ஆனார்களோ என்று தாமரை புலம்புகிறாள். அப்போது இதுதான் சமயம் என்று அதுவரையில் நிலவரையில் ஒளிந்திருந்த பொன்னரும் சங்கரும் வெளியே வந்து தாயார் முன் நிற்கிறார்கள்.

பங்காளிகளால் தனது குடும்பத்துக்கு ஆபத்து நேரிடும் என்று உணர்ந்த தாமரையாள் கணவனுடனும் பிள்ளைகளுடனும் ஆதிச்செட்டிப்பாளையம் போகிறாள். அங்கே குழந்தைகள் வளர்ந்து ஆளாகிறார்கள். மாரிக்கவுண்டன் பாளையத்தில் பொன்னர் சங்கர் இருவரும் ராக்கியண்ணனிடம் கல்வியுடன் வாட்பயிற்சி, சிலம்பம் முதலியவற்றை பயிலுகிறார்கள். அருக்காணியோ தன் தாயாரிடம் கல்வி பயில்கிறாள். பயிற்சி முடிந்ததும் குடையூருக்கு வந்து பெற்றோருடன் சேர்ந்துகொள்கின்றனர். ஒருநாள் தாமரையாள் பங்காளிகளால் தான் பட்ட கஷ்டத்தை தன் மகன்களிடம் சொல்லி அழுகிறாள். இதனால் வெகுண்டெழுந்த பொன்னர்- சங்கர் இருவரும் பங்காளிகளை அஞ்சு மணிக்கயிறு என்னும் சவுக்கால் அடிக்கிறார்கள். பங்காளிகளின் மனைவிமார்களையும் தண்டிக்கிறார்கள். இதன் பிறகு பங்காளிகள் தங்களால் பொன்னர் - சங்கர் இருவரையும் வெற்றி கொள்ள முடியாது என்று முடிவு செய்கின்றனர். தனது பாதுகாப்புக்கருதி செல்லாத்தாக்கவுண்டர் வேட்டுவகுல தலைவனான தலையூர்க் காயிடம் சரண் அடைகிறார். தலையூர்க் காளியுடன் சேர்ந்துகொண்டு தொடர்ந்து தொந்தரவு கொடுக்கிறார்.

பொன்னர் சங்கருக்கும் வேட்டுவ இனப் பிள்ளைகளுக்கும் கடும் போட்டி ஏற்படுவதுண்டு. ஒவ்வொரு போட்டியிலும் வேட்டுவ இன பிள்ளைகள் தோல்வி அடைகின்றனர். இதனால் பொன்னர் - சங்கருக்கும் தலையூர்க் காளிக்கும் கடும் பகை ஏற்பட்டு தலையூர்க்காளி பொன்னர் சங்கரைத் தீராத பகையாளியாகக் கொள்கிறான். சேவல் கட்டு சண்டைக்கு பொன்னர் - சங்கரை அழைக்கிறான் காளி. பின்னால் நடக்க இருப்பதை முன்கூட்டியே கனவு மூலம் அறிபவள் அருக்காணி. அவள் இந்த சேவல் போட்டியைப் பற்றி எச்சரிக்கை செய்கிறாள். அத்துடன் அவள் ஆசீர்வதித்துக் கொடுத்த சேவல், சண்டையில் வெற்றி பெறுகிறது.

பொன்னர் - சங்கர் பெற்றோருடன் வளநாட்டுக்கு மீண்டும் திரும்புகிறார்கள். அங்கு மணியம் வசூலித்து உறையூர்ச் சோழனுக்கு அனுப்பி வைக்கின்றனர். தங்களுக்குகென்று அரண் மனை ஒன்றைக் கட்டி முடிக்கிறார்கள். குன்றுடையானும்

தாமரையாளும் ஒரே சமயத்தில் உயிர் துறக்கின்றனர். பெற்றோர்களின் இழப்பால் அருக்காணி மிகுந்த துயருறுகிறாள். அவள் விருப்பத்திற்கேற்ப, அவள் மகிழ்ச்சியாய் இருக்க வேண்டி பஞ்ச வர்ணக்கிளியும் மற்றும் சில பறவைகளும் சங்கர் கொண்டு வந்து கொடுக்கிறான். அருக்காணி தேறுதல் அடைந்து, தபசில் நேரத்தைச் செலவிடுகிறாள். இதன் மூலம் முக்காலமும் உணரும் சக்தி பெறுகிறாள். சங்கர் வேட்டையாடப் போகும் போது வேங்கை ஒன்றைக் கொல்கிறான். இதையறிந்த தலையூர்க் காளி கோபமுறுகிறான். சங்கர், வேங்கையை வேட்டையாடிய பகுதி தலையூர்க் காளியின் எல்லைக்குட்பட்ட இடமாகும். காளி தனது படை பலத்துடன் வந்து வளநாட்டு எல்லையோரப் பகுதிகளில் அட்டூழியம் புரிகிறான். அருக்காணி என எண்ணி பச்சன முதலி மகள் குப்பாயியை காளியின் ஆட்கள் கடத்திச் செல்கிறார்கள். சங்கர் தனது படையுடன் சென்று குப்பாயியை மீட்டு வருகிறான். குப்பாயி யாரும் அறியாதபோது மான உணர்வுடன் தற்கொலை செய்து கொள்கிறாள்.

தலையூர்க் காளி மீண்டும் வளநாட்டுக் குடிகளுக்கு தொந்தரவு செய்கிறான். குடிமக்கள் உறையூர்ச் சோழனிடம் சென்று செய்தி தெரிவிக்கிறார்கள். அரசனோ பொன்னர் சங்கரின் சாதனைகளைக் கேள்விப்பட்டு அவர்களை அரண்மனைக்கு அழைக்கிறான். இவர்களும் செல்கிறார்கள். பொன்னர் சங்கரை சிற்றரசர்களாக அங்கீகரிக்கிறான். தனது தாயார் சபதம் நிறைவேற அருக்காணி, அண்ணன்மார் திருமணம் முடிக்கப்பட வேண்டுமென்று எடுத்துரைக்கிறாள். அதன்படி சின்ன மலைக்கொழுந்தார் மகள் இருவரையும் பொன்னரும் சங்கரும் மணந்து கொள்கின்றனர். (முத்தாயியை பொன்னரும், பவளாயியை சங்கரும் மணக்கின்றனர்).

நாளடைவில் அண்ணன்மார் புகழ் வேட்டுவ குடி மக்களிடம் பரவுகிறது. இதனால் காளி வெறுப்புற்று பொன்னர் சங்கரை பழி முடிக்க எண்ணுகிறான். செம்பகுலன் என்ற பொற்கொல்லன் மூலம் பொன்னர் மீது பொன் வள்ளம் திருடியதாக அபாண்டம் சுமத்துகிறான். அதனை பஞ்சாயத்தார் நம்புகிறார்கள். பொன்னர் தனது நேர்மையை நிலைநாட்ட எந்தப் பரீட்சைக்கும் தயார் என்று சொல்ல, செம்பகுலன் பொன்னரை வெள்ளாங்குளத்து ஏரியில் உட்குமிழி வழியாக நுழைந்து புறக்குமிழி வழியாக வெளியே வரவேண்டும் என்று சொல்கிறான். பொன்னர் புறப்படும் முன் காளி எந்தச் சமயமும் .படையெடுத்து வரலாம் என்று தனது மைத்துனரையும்

வீரமலை சாம்புவனையும் சங்கரையும் கோட்டையை விட்டு வெளியேற வேண்டாம் என்று சொல்கிறான். ஏனென்றால் பொன்னர் வெள்ளாங்குளம் ஏரி செல்லும் சமயம் பார்த்து காளி படையெடுத்து வருகிறான். அத்தைப்பிள்ளைகள், வீர மலை சாம்புவன் ஆகிய .நால்வரும் போருக்குக் கிளம்புகிறார் கள். தலையூர்க் காளியின் படைகளை புறமுதுகு காட்டி ஓடும்படி செய்து வெற்றிக்களிப்பில் திரும்புகிறார்கள். வழியில் தாகம் எடுக்க ஆற்றில் (தடாகத்தில்) இறங்கி நீர் அருந்து கிறார்கள். தண்ணீரில் தலையூர்க்காளியின் ஆட்கள் நச்சு கலந் திருந்ததனால் அத்தைப் பிள்ளைகள் உயிர்விட நேருகிறது. வீரமலை சாம்புவன் மட்டுமே உயிர்தப்புகிறான். இதை அறிந்த சங்கர் கொதித்தெழுந்து அங்கிருந்து கிளம்புகிறான். அப் போது விஷ்ணு அவதாரமான மாயவர் தலையூர்க் காளி போல் வேடமிட்டு மறைந்திருந்து சங்கரைத் தாக்குகிறார். காயம்பட்ட சங்கர் இனிவாழப் பொறுக்காமல் வடக்கிருந்து தன் மீது அம்பு பாய்ச்சிக் கொண்டு இறக்கிறான். அது கண்டு வீரமலை சாம்புவன் மனம் துடித்து வாள் மீது விழுந்து தானும் உயிர் துறக்கிறான்.

இதே நேரம் வெள்ளாங்குளம் ஏரியில் பொன்னர் உட் குமிழிபுகுந்து வெளியே வருகிறான். அப்போது செம்பகுலன் புறகுமிழ்புகுந்து வெளியே வந்தால்தான் சத்தியம் நிறைவேறும் என்று அழிச்சாட்டியம் செய்கிறான். அவ்வாறு புகுந்து வெளியே வரும் போது வீரமலை சாம்புவன் முழக்கிய முரசின் ஒலி பற்றி கேள்விப் பட்டு அதே சிந்தனையில் மதகை விட்டு வெளி யேற முயன்ற பொன்னர் தலைமீது பிள்ளையார் சிலையைத் தூக்கிப் போடுகிறான் செம்பகுலன். அதைக் கண நேரத்தில் உணர்ந்த பொன்னர் தனது மந்திர வாளை எடுத்து அவன் மீது வீசிக் கொல்கிறான்.

பொன்னர், படுகளத்தில் சங்கர், அத்தை பிள்ளைகள், வீரமலை சாம்புவன் முதலானோர் இறந்த செய்தி அறிந்து, தனது படைகளுடன் சென்று காளியைக் கொன்று வெற்றி காணுகிறான். சங்கரின் பிரிவைத் தாங்க முடியாத பொன்னர் தானும் மார்பில் அம்பு பாய்ச்சி இறக்கிறான். இது கேட்ட அருக்காணி தனது அண்ணியார்களை அழைக்கிறாள். அவர் களோ தாங்கள் தாலி கட்டிக் கொண்டோமே தவிர இல்லற வாழ்வைத் துவக்கவில்லை என்று சொல்கிறார்கள். இது கேட்ட அருக்காணி மனம் நொந்து தனது கண்ணீரை நெருப் பாக்கி அரண்மனையையே எரிக்கிறாள். அதில் அண்ணியார்

இருவரும் கருகி விடுகின்றனர். இது புலவர் பிச்சை அவர்களது நூலில் உள்ள பாடலில் வருகிறது.

ஆனால் அவர்கள் தலையூர்க்காளியின் கையில் சிக்கிக் கொள்ளக் கூடாது என்று கற்பைக் காக்க அரண்மனைக்குத் தீயிட்டுக் கொண்டு அதில் சிக்கி இறந்தார்கள் என்று வேட்டாம்பாடி அ. பழனிசாமி அவர்கள் எழுதிய நூலில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

பின்னர் அருக்காணி படுகளம் நோக்கி செல்கிறாள். அழுது புலம்புகிறாள். அப்போது பெரியகாண்டி அம்மன் அவள் முன் மாறுவேடத்தில் தோன்றி தேறுதல் சொல்கிறாள். சங்கர் வாளேந்தி மரணமுற்ற இடம் நோக்கி வருகிறாள். சங்கரது உடலில் ஏற்பட்ட காயங்களை ஊசி நூல் கொண்டு தைக்கிறாள். மந்திரம் சொல்லி தண்ணீர் தெளித்ததும் சங்கர் உயிர் பெறுகிறான். அதுபோலவே பொன்னரையும், வீரமலை முதலியோரையும் எழுப்புகிறாள்.

ஆனால் அதன்பிறகு பொன்னர் குதிரை மீது வருவதாக வேட்டாம்பாடி அ. பழனிசாமி தனது நூலில் தெரிவிக்கிறார். இவரது கருத்துப்படி பொன்னர் சாகாமல் உயிரோடிருப்பதாகவே ஆகிறது. பிறகு பொன்னர் தாங்கள் மானிடப் பிறவி எடுத்து பூலோகத்துக்கு வந்த பணி முடிந்து விட்டதாகவும், அதனால் ஓமகுண்டம் வளர்த்து அதில் இறங்கி பரமபதம் அடைவோம் என்றும் கூறி அதுபோலவே செய்ய முற்படுகையில், பெரியகாண்டி அம்மன் தனது சுயரூபத்தைக் காட்டி அருள் புரிகிறாள்.

உறையூர் சோழ மன்னன், பொன்னரும் சங்கரும் சத்தியப் போர் செய்து வென்று, தெய்வாம்சம் பெற்றதை அறிகிறான். அவர்களுக்கு கோயில் எழுப்ப வேண்டுமென்கிறான். அங்கு தவம் செய்துகொண்டிருந்த எழுவகாரியான் என்ற தவசியிடம் பொன்னும் பொருளும் கொடுத்து கோயில் கட்டி பூஜை செய்யச் சொல்கிறான்.

தொடர்ந்து

எனக்கு ஆதரவு வழங்கி வரவேற்பு நல்கிய வாசகப் பெருமக்கள் அனைவருக்கும் வணக்கமும், நன்றியும்.

அன்புள்ள,

மு. கருணாநிதி